திருச்சிற்றம்பலம்

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை

கயிலை மாமுனிவர் காசிவாசி திருவளர்திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளியிடப் பெற்றது



தஞ்சைப் பெருவுடையார்

பதிப்பாசிரியர்

வர் கோ.ப. நல்லசிவம்



ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாடு

வாரணாசி 2007

உ

திருச்சிற்றம்பலம்

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை

## தொகுதி இரண்டு

கயிலைமாமுனிவர் காசிவாசி திருவளர்திரு
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்
அருளாணையின்வண்ணம் வெளியிடப் பெற்றது.



பதிப்பாசிரியர்

முனைவர் கோ.ப. நல்லசிவம்

ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாடு
குமாரசாமித் திருமடம் - வாரணாசி
2007

- ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை
  தொகுதி இரண்டு

- திருப்பனந்தாள் காசித்திருமடமும்,
  பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளையும் இணைந்து
  நடத்திய ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாட்டின் வெளியீடு

- திருவள்ளுவராண்டு 2038, ஐப்பசி 12, 13, 14
  (29, 30, 31.10.2007)

- முதற்பதிப்பு : 2007 அக்டோபர்

- பக்கங்கள் : 8 + 608 = 616

- பதிப்பாசிரியர்
  **முனைவர் கோ.ப. நல்லசிவம்,**
  926, மணிகர்ணீசர் கோயில் தெரு,
  கீழராச வீதி,
  தஞ்சாவூர் - 613 001.

- விலை : உரூபாய் 350/-

- நூல் கிடைக்குமிடம் : மேலாளர் அவர்கள்,
  காசித்திருமடம்,
  திருப்பனந்தாள் - 612 504,
  தஞ்சை மாவட்டம்.

- Laser Typeset & Printing at : Sabanayagam Printers, 176, East Car Street,
  Chidambaram - 608 001. ✆ : 223040, 223020

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை

## ஆய்வு மலர்கள்

### (தொகுதி இரண்டு)

# 1. திருமந்திரம் - அமைப்பு முறைகள்

பேராசிரியர் எல்.கே. அக்னிபுத்திரன், பழனி.

1. பெயர் - திருமூல நாயனார்
2. நூல் - திருமந்திர மாலை/தமிழாகமம்
3. பாடல் - மூவாயிரம்
4. மூவாயிரந்தமிழ்
முந்நூறு மந்திரம்
முப்பது உபதேசம் - இவை மூன்றும் தனித்தனி நூல்கள் என்பர். இம்மூன்றும் திருமந்திரத்தில் அடங்கும் என்பர்.

4.1 மூவாயிரந்தமிழ் - விசுவநாதபிள்ளை பதிப்பில் 4ம் தந்திரத்தில் 3000 பாடல்கள்.

4.2 முந்நூறு மந்திரம் -

| | | |
|---|---|---|
| அ. திருவம்பச்சக்கரம் | - | 89 |
| ஆ. வயிர மந்திரம் | - | 50 |
| இ. ஏரொளிச்சக்கரம் | - | 36 |
| ஈ. வயிரச்சக்கரம் | - | 6 |
| உ.. சும்பவி மண்டலச்சக்கரம் | - | 10 |
| ஊ. புவனாபதிச் சக்கரம் | - | 12 |
| எ. நவாசக்கிரி சக்கரம் | - | 100 |
| ஆக | - | 303 இது 300 மந்திரம் |

4.3 உபதேசம்.
முதல் தந்திரத்தில் தொடக்கத்தில் உபதேசம் என்ற தலைப்பில் உள்ள 30 பாடல்கள்.

5. திருமந்திர பாயிரப் பகுதியில் உள்ள 112 பாடல்களில் 67 பாடல்கள் திருமூலரது ஏனைய 45 இடைச்செருக்கல்.
6. நூலின் பெரும் பிரிவு - தந்திரம்
இவற்றிலுள்ள திருப்பாடல்கள் திருமந்திரம் எனப்படும்.
7. 3048 திருப்பாடல்கள்
8. பிறநூல் மேற்கோள் - 11 பாடல்கள்

9. சைவ சித்தாந்த சமாசப்பதிப்பில் காட்ட பெற்ற பாடல் - 17
வெள்ளியம்பல தம்பிரான் சுவாமிகளால் ஞானாவரண பாடித்திலும் முத்திரிச்சைய பேருரையிலும் காட்டப்பட்ட இதுவரை வெளிவராத பாடல்கள் - 30

10. வேதம் - உலகியல் ஒழுக்கத்தை உயர்த்தும் பொது நூல்.

11. ஆகமம் - சிவநெறியை உணர்த்தும் சிறப்புநூல்

12. திருமந்திரமாலை - பசு - பதி - பாசம் - ஆகிய முப்பொருமையும் உணர்த்தும் சரியை - கிரியை - யோகம் - ஞானம் - நால்வகை நெறிகள்.

## திருமந்திர பகுப்பு

9. திருமந்திர நூல்கள்

முதல் நான்கு தந்திரங்கள் - சிவஞானத்தை பெறுவதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறமும் தாய்மையுடையவர். இக்கொள்கைக் குரிய சாதனங்களை உணர்த்துவன.

ஐந்தாம் தந்திரம் - சமயங்களில் முடிந்த முடிவாகிய சைவ சித்தாந்த உண்மைகளை விரிந் துரைப்பது

6 முதல் 9 வரையுள்ள தந்திரம் - ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கனவாயுள்ள நற்பயன்களை விரித்துக் கூறுவன.

## திருமந்திரம் 1 முதல் 9 தந்திரங்களின் அதிகார அகர வரிசை

| | | |
|---|---|---|
| 1. பொதுப்பாயிரம் | கல்லாமை | கரு உற்பத்தி |
| அந்தணரொழுக்கம் | கல்வி | காப்பு |
| அரசாட்சி முறை | கள்ளுண்ணாமை | குருநிந்தை |
| அவையடக்கம் | கேள்வி கேட்டமைதல் | சக்கரப்பேறு |
| அறஞ்செயான் திறம் | கொல்லாமை | சிவநிந்தை |
| அறஞ்செய்வான் திறம் | செல்வம் நிலையாமை | தக்கன் வேள்வி |
| ஆகமச் சிறப்பு | நடுவு நிலைமை | திருக்கோயில் |
| ஆகுதி வேட்டல் | நல்குறவு | தீர்த்தம் |
| கடவுள் வாழ்த்து | பிறன்மனை நயவாமை | படைப்பு |
| மும்மூர்த்திகளின் முறைமை | புலால் மறுத்தல் | பதிவலியில் வீரட்டம் எட்டு |

பரியங்கயோகம்
பிரத்தியாகாரம்
பிராணாயாமம்
வாரசரம்
வாரசூலம்

4. நான்காம் தந்திரம்

அசபை
ஞானவேலம்
தவநிந்தை
தவம்
தவவேடம்
திருநீரு
திருவடிப்பேறு
துறவு
பக்குவன்

7. ஏழாம் தந்திரம் (காலோத்தராகமம்)

அசற்குருநெறி
அடியார் பெருமை
அண்டலிங்கம்
அருளொளி
ஆதித்த நிலை
ஆத்துமலிங்கம்

அசுத்த சைவம்
உட்சமயம்
கடுஞ்சுத்த சைவம்
கிரியை
சகமார்க்கம்
சக்தி நி பாதம்
சரியை
குருபூஜை
கூடாவொழுக்கம்
கேடுகண்டிரங்கல்
சதாசிவலிங்கம்
சம்பிரதாயம்
சமாதிக்கிரியை
சற்குருநெறி
சிவபூசை
சிவலிங்கம்
ஞானலிங்கம்
திருவருள் வைப்பு
பசு இலக்கணம்
பிட்சா விதி
பிண்டலிங்கம்
பூரண குகைநெறிச் சமாதி

6. ஆறாம் தந்திரம் (வியாமளாகமம்)

அபக்குவன்
அருளுடைமையின் ஞானம் பெறுதல்
அவ வேடம்
சிவகுரு தரிசனம்
சிவவேடம்
ஞா துரு ஞான ஞேயம்
அடிநிலையரியும்
திறங்கூறல்
அவத்தை பேதம்
அவாவறுத்தல்
அறிவுதயம்
ஆறந்தம்
இலக்கணுத்திரயம்
உடல்விடல்
உடலிற் பஞ்சபேதம்
உபசாந்தம்
எட்டி தழ்க் கமல முக்குண அவத்தை
ஒன்பான் அவத்தை
ஒன்பான் அபிமானி
காரிகாரண உபாதி

| | | |
|---|---|---|
| ஆறுதாரம் | போசனவிதி | சுத்தா சுத்தம் |
| இதோபதேசம் | மகேசுவர பூசை | சோதனை |
| ஐந்திந்திரியம் | முத்திரை பேதம் | ஞானி செயல் |
| அடக்கும் அருமை | விந்துற்பணம் | தத்துவமசி வாக்கியம் |
| ஐந்திந்திரியம் | விந்துசமய போக சரவு ஒட்டம் | பத்தியுடையை |
| அடக்கும் முறைமை | 8. எட்டாம் தந்திரம் (சுப்பிராகமம்) | பதிபசுபாசம் வேறண்மை |
| ப்ரலட்ணம் | ஒளி | |
| புறங்கூறாமை | குருமட தரிசனம் | |
| முக்கரணம் | சத்திய ஞானுனந்தம் | |
| முக்குற்றம் | சர்வ வியாபி | |
| முச்சூனிய தொந்தத்தசி | சிவசொரூப தரிசனம் | |
| முச்சொரூபம் | சிவதரிசனம் | |
| முத்தி நிந்தை | சூக்கும பஞ்சாக்கரம் | |
| முக்தியுடைமை | சொரூப உதயம் | |
| முத்துரியம் | ஞானகுரு தரிசனம் | |
| முப்பதம் | ஞானனோதயம் | |
| முப்பரம் | திருக்கூத்துத் தரிசனம் | |
| முப்பாழ் | துலா பஞ்சாக்கரம் | |
| மும்முத்தி | தோத்திரம் | |
| வாய்மை | பிரணவ சமாதி | |
| விசுவக்கிராசம் | மறைபொருட் கூற்று | |
| 9. ஒன்பதாம் தந்திரம் | முத்திபேதம், கரும | |
| அணைந்தோர் தன்மை | நிருவாணம் | |
| அதிசூக்கும பஞ்சாக்கரம் | மோன சமாதி | |
| ஆகாசப்பேறு | வரையுரை மாட்சி | |
| ஊழ் | | |

## இயல் நிரல் முறை - I

1. கடவுள் வாழ்த்து
2. வரலாறு
3. அவையடக்கம்
4. வேதச்சிறப்பு
5. ஆகமச் சிறப்பு
6. திரிமூர்த்தி
7. அகத்தியம்
8. பதிவலி விரட்டம்

# 2. பல்லாண்டு பாடும் மரபு

திருமதி இரா. அகிலா, புதுவை.

சங்கம் மருவிய காலத்தில் களப்பிரர் என்ற அயலவர் தமிழகத்தை ஆட்சி செய்தனர். கி.பி. 6-ம் நூற்றாண்டின் இறுதியில் களப்பிரரின் ஆட்சி செல்வாக்கு இழக்கவே கி.பி. 7-ம் நூற்றாண்டில் மாபெரும் சமயப் புரட்சி தோன்றியது. இப்பெரும் புரட்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் சைவக்குரவர்களும், வைணவ ஆழ்வார்களும் ஆவர். இவர்களின் தோன்றலால் சைவமும், வைணவமும் தழைத்து ஓங்கின. பிற சமயங்கள் ஒடுக்கப்பட்டன. சைவ, வைணவ அடியார்கள் இறைவனை பாமாலை யாகிய பண்ணிசைபாடி வழிப்பட்டனர். கோயில்களில் எல்லாம் தமிழ்ப் பாடல்களையும், பாசுரங்களையும் பாடுவதோடு மட்டும் அல்லாமல் தமிழ் உணர்ச்சியையும், சமயப்பற்றையும் உருவாக்கினர்.

சைவக்குரவர்கள் நால்வரும் பாடியவையே பன்னிரு திருமுறைகள். இதில் 1-3 திருமுறையை சம்பந்தரும், 4-6-ஆம் திருமுறையை நாவுக்கரசரும், 7-ம் திருமுறையை சுந்தரரும், 8-ம் திருமுறையை மாணிக்கவாசகரும், 9-ம் திருமுறையை திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துரத்திநம்பி, காடநம்பி, கணடாரதித்தழர்வேணாட்டிகள், திருவாலி அமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆவர். இவர்கள் ஒன்பதின்மரும் பாடியவையே ஒன்பதாம் திருமுறை. இவர்கள் பாடியவை திருவிசைப்பா. இதில் சேந்தனார் என்பவர் 34 திருவிசைப்பா பாடலையும், 13 - திருப் பல்லாண்டு பாடலையும் பாடியுள்ளார். இவற்றில் திருப் பல்லாண்டு பதிகத்தை ஆய்வுக்கட்டுரைக்கு எடுத்துள்ளேன்.

**பல்லாண்டு பாடும் மரபு**

நாயகர் ஆட்சிக் காலத்தில் பல சிற்றிலக்கியங்கள் தோன்றின. சிற்றிலக் கியங்கள் 96 வகை அவற்றில் பல்லாண்டு என்பது ஒன்றாகும். பல்லாண்டு என்பது பல வருடம் 'நீடு வாழ்க' என்ற சிறந்த பொருளைத் தரக்கூடிய சொல்லாகும். இறைவனுக்குப் பாடப்படும் இத்தகுப் பல்லாண்டு 'திருப் பல்லாண்டு' என்று சைவ, வைணவ அடியார்களால் அழைக்கப்படுகின்றன.

**இலக்கணங்களில் வாழ்த்து**

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்கிறார் தொல்காப்பியர்.

இதில் கொடிநிலை என்பது கீழ்திசைக்கண் தோன்றும் ஞாயிற்றைக் குறிக்கும். கந்தழி என்பது பற்று அழித்தாராகிய நீத்தார் தன்மையைக் குறிக்கும். வள்ளி என்பது வண்மை பற்றிய அறத்தைக் குறிக்கும். மேற்சொல்லப்பட்ட இம்மூன்றும் கடவுள் வாழ்த்தோடு பொருந்தி வருகின்றன. எனவே, திருவள்ளுவர் தமது குறளில்

**'மலர் மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார்**
**நில மிசை நீடுவாழ்வார்'** (3)

என்ற கடவுள் வாழ்த்தை முதலாகவும்

**'வான்நின்று உலகம் வழங்கி வருதலால்**
**தான் அமிழ்தம் என்று உணரல்பாற்று'** (11)

என்று வான் சிறப்பை இரண்டாவதாகவும்

**'சுவை ஒளி ஊறு ஓசைநாற்றம் என்ற ஐந்தின்**
**வகை தெரிவான் கட்டே உலகு'** (27)

என்ற நீத்ததா பெருமையை மூன்றாவதாகவும்

**'அன்று அறிவாம் என்னாது அறம்செய்கமற்றுஅது**
**பொன்றுங்கால் பொன்றாத்துணை'** (36)

என்ற அறன் வலியுறுத்தல் அதிகாரத்தை நான்காவதாகவும் வைத்துள்ளார்.

மேலும் வாழ்த்து என்பது பலவகைப்படும். அவை இயன்மொழி, வாழ்த்து, இயன்மொழி வாழ்த்து, வாயுறை வாழ்த்து, களவழி வாழ்த்து, நாடு வாழ்த்து என்பதாகும். இவற்றைப் புறப்பொருள் வெண்பாமாலையில் பாடாண் திணையில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு,

**'இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும்**
**அன்னோர் போல அவை எமக்கீகென**
**என்னோரும் அறிய எடுத்துரைத்தன்று'**

என்பது இயன்மொழி வாழ்த்து.

இன்ன வள்ளல் இத்தகையப் பொருளைக் கொடுத்தார், நீயும் அவர் போன்று எமக்குப் பொருளை வழங்குவாயாக என்று கூறுவதும், வேந்தனது தன்மையைக் கூறிப் புகழ்வதும், கடவுள் நின்னைப் பாதுகாக்க வேண்டும் என வாழ்த்துவது இதன் பொருள்.

பாட்டியல் நூல்களில் பன்னிரு பாட்டியலில் மட்டுமே 'யாண்டு நிலை' என்னும் பெயரில் இவ்விலக்கிய வகை கூறப்படுகின்றது. அரசன் பல்லாண்டு வாழவேண்டும் என்ற இதன் பொருண்மை பெரும்பாலும் நேரிசை வெண்பாவாலும், சிறுபான்மை எல்லாபாவலும் பாடப்படுகின்றன.

**சங்க இலக்கியங்களில் வாழ்த்து**

சங்க இலக்கியங்களில் வாழ்த்துகின்ற தன்மையை அப்பாடல்களின் கருத்துக்களைக் கொண்டே காணலாம். எட்டுத் தொகை நூல்களில்

ஒன்றான குறுந்தொகைப் பாடலில் பொருளீட்டி மீண்டு வந்த தலைவன் தன் தலைவியோடு மகிழ்ச்சியாக இருக்கும்போது இயற்கையை வாழ்த்திப் பாடுகின்றான். அப்பாடல்,

'தாழிருடுமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி யூழிற்
கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் யாமே'

## புறநானூற்றில் வாழ்த்து

சங்க இலக்கியங்களில் புறநானூற்றில் வாழ்த்துப் பற்றிய பாடல்கள் பெரும்பாலும் காணப்படுகின்றன. இவ் வாழ்த்து அரசனின் வாழ்வைச் சார்ந்தே அமைந்திருக்க வேண்டும். அரசனின் ஆயுட்காலம், எண்ணுதற் கரிய மழைத்துளி போன்றும், மணல்போன்றும் கருதி வாழ்த்தப்படும் செய்தியை

'இமயத்து ஈண்டி இன்ரேல் பயிற்றி
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல்துளியினும் வாழிய பலவே' (புறம் - 34)

என்ற பாடல் இயம்புகிறது.

அதுபோல பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் (புறம்-3)-ல்

'எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர் பசும்பொன் வயிரியர்க்கீத்த
முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர் பஃறுளி மணலினும் பலவே'

என்கிறார்.

எனவே, மன்னரை வாழ்த்திப்பாடும் மரபு பிற்காலத்தில் இறைவனை வாழ்த்திப் பாடுகின்ற முறை ஏற்பட்டது. இறைவனை வாழ்த்திப் பாடுகின்ற போது 'பல்லாண்டு' என்று கூறாது 'திரு' என்ற அடைமொழியை வைத்து திருப்பல்லாண்டு என்ற சொற்களால் வழங்கி பாசுரங்களையும் பாடல் களையும் பாடினர்.

திரு என்ற சொல் மங்கலத்தன்மையை அடிப்படைகளாகக் கொண்டு அமைக்கப்பட்டது. வேறு எப்பொருளுக்கும் இல்லாத சிறப்புத் தன்மையை இச்சொல் சுட்டிக் காட்டுவதால் ''திருப்பல்லாண்டு' என்று அமைத்தனர்; சைவ, வைணவ பெரியார்கள்.

இறைவனுக்குப் பல்லாண்டு பாடும் மரபு இருந்ததனை அப்பரின் திருவாரூர் பதிகம்

'தழலாய நம் பானைப்
பாடுவார் பணிவார் பல்லாண்டிசைத்து'

என்று கூறுகிறது. அதுபோல இறைவனைப் பெரியாழ்வார்

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்'

என்று வாழ்த்திப் பாடுகின்றார். அதாவது உலா வந்த திருமாலின் மீது உலகத்தோரின் கண்ணேறுபடக் கூடாது என்பதற்காக ஆழ்வார் திருப்பல்லாண்டு பாசுரத்தை அமைத்தார். இவர் பாடிய பாசுரம் சேந்தனாரின் பல்லாண்டினை போல ஒரே முடிவுகள் அமையாது பல முடிவுகளைப் பெற்றுக் காணப்படுகிறது.

**சேந்தனாரின் பல்லாண்டு**

ஒன்பதின்மருள் ஒருவரான சேந்தனார் திருவிசைப் பாடல் 34-ஐயும், 13 பல்லாண்டு பாசுரத்தின் பாடலையும் பாடியுள்ளார். இவர் பாடிய பல்லாண்டு பாசுரத்தின் அமைப்பினை பின்வருமாறு காணலாம்.

இவர் பாடிய திருப்பல்லாண்டு அறுசீர் அடிகளால் ஆனது. ஆயினும் சீர் நிலைமை வரையறை இன்றியும், சில அடி சீர் மிக்கும் குறைந்தும் வரப்பெற்றுள்ளது. அவர் தில்லையில் வீற்றிருக்கும் இறைவனான நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையையும் வாழ்த்திப் பாடுகின்றார். சேந்தனார் தில்லையில் இருக்கும் பொழுது மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் ஓடாது தடைபட்டு நின்ற தேரைத் ''திருப்பல்லாண்டு'' பாடி தானே ஓடும் நிலையினை அடையுமாறுச் செய்தார்.

**தில்லை நகரின் பெருமை**

'மன்னுக தில்லை வளர்க நம்
பக்தர்கள்' (1)

என்று பாடலைத் தொடங்குகிறார் சேர்ந்தனார். இறைவன் திருச்சிற்றம்பலத்திலே வீற்றிருக்கின்றான், அவனைக் காண மெய்யடியார்கள் தில்லையை அடைவார்கள் அவர்கள் இறைவனின் அருளால் மேலும் மேலும் புகழ் பெருகிறார்கள். பொற்சபையில் வீற்றிருக்கும் ஆடலரசரான இறைவன் உலகமெல்லாம் இருள் நீங்கி விளக்கம் பெரும் பொருட்டு அடியார்களுக்கு அருள் பாலிக்கின்றான். இனி மறுபிறவி வராமல் நீங்கும் பொருட்டு நல்வழியையும், திருவருள் நெறியையும், தருகின்றான். அத்தகைய இறைவனுக்கு பல்லாண்டு கூறி வாழ்த்துவோம் என்கிறார்.

**பராபரப் பொருள்**

சிவபெருமானின் மீது பற்று இல்லாமல் செருக்கு கொண்டு மாறுபடப் பேசும் மனதையுடையவர்களே நீங்கள் விலகிச் செல்லுங்கள். இறைவனிடத்தில் அன்பு கொண்டு இறைவனின் அருளைப் பெற தலைமுறை தலை

முறையாய் அடியார் கூட்டத்தில் கலந்து தொண்டு செய்யுங்கள். இறைவனோ அண்ட சராசரங்கள் எல்லாவற்றையும் அடக்கியவன். இன்பப் பெருவெள்ளமாகிய பொருள் எக்காலத்திலும் நிலைத்து நிற்கும் பராபரம்பொருளாகிய இறைவனுக்கு பல்லாண்டு கூறி வாழ்த்துவோம் என்று அடியார்களை அழைக்கின்றார். இதை,

**'மெய்யடியார்கள் விரைந்து வம்மின்'** (2)

என்கிறார்.

### அட்ட மூர்த்தி

தியானம் செய்யாத உடலின் தன்மையை நீக்கி எனக்கு அருள் புரிந்தவனே, மெய்யடியார்களின் பெருமையான செயல்களை நினைக்கும் போது மண், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், உயிர் ஆகிய எட்டு உருவம் கொண்ட உன்னை நினைக்கும்போதும் உண்டாகும் ஊற்றாகிய பேரானந்தத்திற்கு அளவே இல்லை! நீயோ கல்லாய மர நிழலின் கீழ் எழுந்தருளிய ஞானாசிரியன். என்னைப்போன்ற அடியவனைத் தன்வய மாக்கிக் கொண்ட உனக்கு நாங்கள் பல்லாண்டு கூறி வாழ்த்துவோம் என்கிறார்.

### மேருவிடங்கன் விடைபாகன்

புகழ்ந்து சொல்லப்படும் வேதஆகமங்களின் பொருளை உணர்ந்த தொண்டர்களே! நீங்கள் சில காலங்களில் அழிந்துவிடுகின்ற திருமால் பிரம்மன் முதலிய தேவர்களுடைய மதங்களில் ஈடுபடாமல் பொற் குவியல் போலத் திகழும் மேருமலையை வில்லாகக் கொண்டவனும், இடபத்தை வாகனமாக உடையவனுமாகிய சிவபெருமானைப் புகழ்ந்து பல்லாண்டு கூறுங்கள்; இதை,

**'சில்லாண்டிற்சிதையும் சில**
**தேவர் சிறுநெறி சேராமே'** (4)

என்கிறார்.

### கருணைக் கடல்

இறைவனே நீ வஞ்சக்ர்களுக்கு தான் வெளிப்படாமல் இருந்து என்றும் அன்புடன் இருக்கும் அடியார்களுக்கு வேண்டியவற்றை ஒளிக்காமல் கொடுத்தருளும் கற்பாகத்தருவைப் போன்று இருப்பவனாகிய கருணைக்கடல், நீக்கமற நிறைந்து காணப்படும் பக்தர்களிடம் தோழமைப் பாராட்டும் இயல்புடைய உனக்கு நாங்கள் பல்லாண்டு கூறுகிறோம். இதை,

**'கரந்துங் கரவாத கற்பக**
**னாகி கரையில் கருணைக்கடல்'** (5)

என்கிறார்.

### சிவலோக நாயகன்

பற்பல அண்டங்களில் உள்ள திருமால் பிரம்மன் இந்திரன் ஆகியோர் சிவபெருமானை தரிசிக்க வருகையில் அவர்களுக்கு ஆனந்த நடனம்

புரிந்து அருள்பாலித்த செல்வன் நீ. மேலும், ஊரில் உள்ளவர்கள் புகழ்ந்து பேசும் உமாதேவியின் கணவன் நீ.

'சேலுங் கயலுங் திளைக்கும்
கண்ணார்'

என்பதால் சேலுங், மீனும், கயல்மீனும் மகிழ்ந்து பிறழ்ந்து திரியும் கண் களைக் கொண்டவன். உடல் முழுவதும் திரு வெண்ணீறு அணிந்தவன் உன்னை சிவனடியார்கள் புகழ்ந்து துதித்துக் கொண்டிருக்கக் கூடியவன், அயனும் மாலும் அறிய முடியாத திருவடியைக் கொண்டவன். இனிமைத் தரும் பாலைப் போன்ற உனக்கு நாங்கள் பல்லாண்டு கூறி வாழ்த்துகிறோம். திருப்பல்லாண்டில் இறைவன் பெருமையையும், அழகையும் அருளையும், அவன் அடியார்களிடம் காட்டும் அன்பையும், பாடலாகப் பாடிய சேந்தனார். இறைவனை பற்றிய புராணச் செய்திகளைப் பல்லாண்டில் பாடியுள்ளார்.

**உபமன்யு முனிவர் பாற்கடல் உண்டது**

வசிஷ்ட முனிவரின் உடன் பிறந்தவளை மணந்தவர் புகைக்கால் முனிவர். அவருக்குப் பிறந்த குழந்தை உபமன்யு. அக் குழந்தையை வசிஷ்ட முனிவரும், அருந்ததியும் எடுத்துச் சென்று வளர்த்து வந்தனர். ஒருநாள் புலிக்கால் முனிவரும் அவரின் துணைவியாரும் அன்பினால் அக் குழந்தையைத் தன் ஆசிரமத்திற்கு எடுத்து வந்தனர். குழந்தை பசியால் அழவே, பால் இல்லாமையால் மாவை நீரில் கரைத்து ஊட்டினர். குழந்தை சுவையான காமதேனுவின் பாலை உண்டதால், அப்பாலே தனக்கு வேண்டும் என்று எண்ணி இவர்கள் கொடுத்த உணவை ஏற்க வில்லை. அது தன் அழுகையையும் நிறுத்தவில்லை. குழந்தையின் அழுகையைப் பொருக்கமாட்டாத முனிவர் சிவபெருமானின் திருவடி யில் குழந்தையைக் கிடத்தினர். சிவபெருமான் குழந்தைக்கு உணவாக திருப்பாற்கடலை முன்நிறுத்த அதை உண்டு வளர்ந்தது. இதை,

'பாலுக்குப் பாலகன் வேண்டி
அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்' (9)

என்கிறார் சேந்தனார்.

**மாலுக்கு சக்கரப்படை அளித்தல்**

சிவபெருமான் தன்னை எதிர்த்த சலந்தா சூரனிடம் நிலத்தை வட்டமாகக் கோடிட்டு தூக்கும்படிச் செய்தார். அவன் நிலத்தை தூக்கும் போது கழுத்தளவு வந்ததும் நிலம் சக்கரமாக மாறி அவன் தலையைக் கொய்த்தது. அச் சக்கரப்படை சிவனிடம் இருப்பதை அறிந்த திருமால் திருவீழிமிழலை சென்று சிவனை வழிபட்டார். ஒருநாள் ஒரு மலர் குறைய ஒரு மந்திரம் எஞ்சி நின்றது. உடனே திருமால் தன் தாமரைப் போன்ற ஒரு கண்ணை தோண்டி இறைவனுக்கு அர்ச்சனை செய்தார். இறைவன்

மகிழ்ந்து சக்கராயுதத்தை கொடுத்தார். அத்தகைய இறைவனுக்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துவோம் என்கிறார். இதை,

'மாலுக்கு சக்கரம் அன்றருள்
செய்தவன'

**சண்டேசர நாயனார் வரலாறு**

சோழ நாட்டில் சேய் நல்லூரில் எச்சந்தன் பவித்திரை என்பவருக்கு மகனாக விசாரசர்மா பிறந்தார். இவர் இளம் வயதிலேயே சிவபக்தி உள்ளவர். ஒருநாள் கன்று ஈன்ற பசு இடையனை முட்ட; இடையன் அப்பசுவை கோலால் அடித்தான். இதைக் கண்ட நாயனார் கோபம் கொண்டு தானே பசுவை மேய்ப்பதாக கூறினார். ஒருநாள் மணியாற்றங்கரையில் வெண் மணலில் சிவலிங்கத்தைச் செய்தார். பூவால் அர்ச்சனை செய்து, பசுவின் பாலைக் கறந்து வழிபாடு செய்தார். இந்த செய்தி இவருடைய தந்தைக்குத் தெரிந்தது. ஒருநாள் சர்மா மாடு மேய்க்கையில் எச்சந்தன் (தந்தை) மறைவாக இவர் பின்னால் சென்றார். இவர் சிவனுக்கு வழிபாடு நடத்துவதைக் கண்டார்.

வழிபாடு நடத்துவதைக் கண்ட எச்சந்தன் கோபம் கொண்டு பாற் குடத்தை உதைத்து விட்டார். உடனே விசார சர்மா அருகில் இருந்த கோலை எடுக்க, அது கோடாலியாக மாறியது. கோடாலியை தந்தையின் மீது வீசி எறிய; தந்தையின் கால் துண்டித்துவிட்டது. உடனே சிவபெருமான் உமையம்மையோடு தோன்றி, என்பால் அன்பு கொண்டு நீ உன் தந்தை யின் காலை வெட்டினாய், இனி உனக்கு யானே தந்தை என்று கூறியதோடு மட்டும் அல்லாது சண்டேஸ்வரன் என்ற பெயரையும் இட்டு, தான் உண்ணும் உணவு, உடை, உனக்கே உரியது என்று கூறினார். அவ்வாறு 'சண்டேஸ்வரன்' என்ற பதவி அளித்த இறைவனுக்கு நாம் பல்லாண்டு கூறுவோம். இதை,

'தாதையைத் தாளற வீசிய
சண்டிக்(கு) இவ் அண்டத்தொடும் உடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்
கோயிலும் போனகமும் அருளி' (10)

என்கிறார்.

எனவே, இறைவனே எனக்கு நீயே தாயும், தந்தையும், உறவினனும், ஆனவன் இதை விடாமல் வழிபடுகின்ற சிவனடியார்களுக்கு தொண்டு செய்யும் "செப்புறை" என்ற ஊரில் குடி கொண்டுள்ள என்னை ஆட்கொண்டவன், என்னுள் புகுந்தவன், ஆணவத்தை அழித்து அருள் பாலிப்பவன், அத்தகைய உன்னை நான் பல்லாண்டு வாழ்க என புகழ்ந்து வாழ்த்துகிறேன் என்கிறார்.

இவ்வாறு மேற்குறிப்பிட்ட சான்றுகளால் பல்லாண்டு பாடும் மரபு இருப்பதை நாம் அறியலாம்.

# 3. திருமந்திரம் - தந்திரங்களின் அமைப்பும் சிறப்பும்

பேராசிரியர் இரா. அசோக்குமார், காரைக்கால்.

மனிதப் பிறவியின் பயனே ஆன்மாவை பக்குவப்படுத்தி இறை நாட்டத்திற் செலுத்தி, மீண்டும் பிறவாநிலை எய்துவதாகும். பிறவா நிலையை அடைவதற்குரிய வழியைக் கூறுவதே பக்தி இலக்கியத்தின் தோற்றமாகும். அன்பு வேறு, அருள்வேறு என்பதை அடியார்கள் தங்கள் வாழ்க்கை அனுபவத்தின் மூலம் உலகர்க்கு எடுத்துக் கூறுகின்றனர்.

அன்பு என்பது தொடர்புடையவர்களிடத்து நிகழ்வது. அதாவது தாய், தந்தை, மகன், தம்பி, தங்கை, நண்பன் போன்றவர்களிடம் நிகழ் வதாகும். அருள் என்பது தொடர்பில்லாதவர்களிடத்தும் நிகழ்வது. அதாவது செடி, கொடி, விலங்குகளிடத்தும் நிகழ்வதாகும். மனிதர்கள் அன்புவயப்பட்டவர்கள். இறைவன் அருள்வயப்பட்டவன். அதனாலேயே சிவன்பால் அன்பு வைத்தவர்களை அருளாளர்கள் என்று அழைக் கிறோம். அத்தகைய அருள்நிலையில் பாடிய பாடல்களே திருமூலரின் திருமந்திரமாகும். இத்திருமந்திரத்தில் ஒன்பது மந்திரங்களின் அமைப்பும் சிறப்பும் ஆராயப்படுகின்றன.

**தோத்திரமும் சாத்திரமும்**

சைவத்தில் தோத்திரமும் சாத்திரமும் இரு கண்களாக அமைந் துள்ளன. தோத்திரமும் 12. அவை திருமுறைகள் சாத்திரங்கள் 14. அவை திருமுறைகளின் நுண் பொருள்கள். உண்மைப் பொருளை புகழ் பொருளோடு சேர்த்துக் கருத்துரைப்பது முன்னது. உண்மைப் பொருளை மட்டுமே எடுத்துரைப்பது பின்னது. திருமந்திரம் தோத்திரத்தில் பத்தாம் திருமுறையாக அமைந்துள்ளது. மூவாயிரம் பாடல்களைக் கொண்டது. ஒன்பது தந்திரங்களில் இருநூற்று முப்பத்திரண்டு அதிகாரங்களாக அமைந் துள்ளது. இது சைவ சமயக் கருத்துக்களை விளக்க முதலில் எழுந்த நூலாகும்.

ஒரு சமயத்திற்கு தோத்திரம், சாத்திரம், பிரபந்தம், புராணம் ஆகிய நான்கும் இன்றியமையாததாகும். இம்முறையில்தான் திருமுறைகள் அமைந்துள்ளன. தோத்திரம் ஒன்று முதல் ஒன்பது திருமுறைகள் வரை. சாத்திரம் திருமந்திரம், பிரபந்தம் பதினோராம் திருமுறை, புராணம் பெரியபுராணம். ஆகையால் திருமந்திரம் தோத்திர நூலாகிய சாத்திர மாகும்.

**அன்பும் அருளும்**

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று தான் பெற்ற இன்பநிலையாகிய சிவநிலையை, இறைத்திருவடியை அனைவரும் பெற வேண்டும் என்ற திருமூலரின் கொள்கையே 'அன்பே சிவம்' என்பதாகும். 'சிவம்' என்ற சொல்லுக்கு 'அருள்' எனப் பொருள் கொண்டால் 'அன்பே அருள்' என்பதும், 'உண்மை' என பொருள் கொண்டால் 'அன்பே உண்மை' எனப்பொருள் கொண்டால் அன்பே உண்மை என்பதும் பெறப்படுகிறது. ஆகையால் உண்மையான அன்பிருந்தால் அருள் நிலைக்கிட்டும் என்பதே திருமூலரின் உள்ளக் கிடக்கையாகும்.

**தந்திரங்களின் அமைப்பு**

ஆலய வழிபாட்டில் தொடங்கி சிவநிலையாகிய ஞான நிலையை அடைவது குறித்து வரிசைமுறையில் தந்திரங்களை அமைத்துள்ளார் திருமூலர். அதாவது சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவை வரிசைபட ஒன்பது தந்திரங்களாக அமைந்துள்ளன. மூவாயிரம் பாடல் களில் கடவுள் வாழ்த்து, வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, குருபாரம்பரியம், திருமூலரின் வரலாறு, அவையடக்கம், திருமந்திரத் தொகையின் சிறப்பு, குருமட வரலாறு ஆகியவற்றை 112 பாடல்களின் வழி கூறிய பின்னரே முதல் தந்திரம் அமைகிறது.

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரமென்ப'

எனும் தொல்காப்பிய நூற்பா, மந்திரம் என்பது மிக்க படித்த சான்றோர் களின் கட்டளைச் சொற்களில் மறைந்திருக்கும் உண்மையைப் பொருள் என விளக்கம் தருகிறது. எனவே மந்திரம் என்பது உண்மைக் கூறுவதாகும். இத்தகைய மந்திரத்தை மதிநுட்பத்தால் சுருக்கிக் கூறுதலே தந்திரமாகும். இவ்வகையில் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களில் உண்மையைப் பேசுகிறது.

**முதல் தந்திரம்**

யாக்கை நிலையாமை, யாக்கையினால் கிடைக்கும் செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, காமத்தை அடக்குதல், சான்றோர்களிடத்து ஒழுக்கமாக நடந்து கொள்ளுதல், அரசனின் கடமை, அறஞ்செய்தலின் சிறப்பு, அன்பை வளர்த்தல், உதவி செய்தல், கற்றோரிடமிருந்தும் நூல்களிலிருந்தும் அறிவைப் பெருக்குதல், மனதை இன்ப துன்பங்களில் செல்லவிடாமை, என முதல்தந்திரம் 224 பாடல்களில் அறிவுரைக் கூறுவதாக அமைந்துள்ளது.

**இரண்டாம் தந்திரம்**

இரண்டாம் தந்திரம் 324 பாடல்களாக அமைந்துள்ளது. அவற்றில் அகத்தியரின் தென்னாட்டு வருகை, சிவபெருமானின் எட்டு வீரச் செயல்கள்,

சிவலிங்கத்தின் தோற்றம்-இயல்பு-அமைப்பு ஆகியவை கூறப்பெறுகின்றன. அண்டத்தின் இயல்பு, பிண்டத்தின் இயல்பு ஆகியவை ஒன்றுபடுதலை விளக்குகிறது. அதாவது உலக அமைப்போடு உடல் அமைப்பு ஒன்றுபடும் நிலையைக் கூறுகிறது.

மேலும் இறைவன் செய்யும் ஐந்தொழில்கள் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்), உயிர்களின் தோற்றம், ஆலயம் காப்பது, பெரியோர்களைத் துணைக்கொள்வது போன்றவற்றை குறிப்பதாக இரண்டாம் தந்திரம் அமைந்துள்ளது.

**மூன்றாம் தந்திரம்**

மூன்றாம் தந்திரம் நால்வகை மார்க்கத்தில் யோகத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. எட்டுவகை யோக முறைகளும் அவற்றால் விளையும் பயன்கள் ஆகியவை 335 பாடல்களாக மூன்றாம் தந்திரத்தில் அமைந்துள்ளன.

**நான்காம் தந்திரம்**

மந்திரத்தின் நுண்பொருள் அதாவது மந்திர சாத்திரம். உடலில் இயங்கும் ஏழு சக்கரத்தின் அமைப்பு பற்றிய விளக்கங்கள் ஒவ்வொன்றும் செயல்படுகின்ற விதம், செயல்படுத்துகின்ற முறை, அவற்றின் தன்மைக் கேற்ப அமையக்கூடிய இறைவனின் இயல்புகள் 535 பாடல்களில் நான்காம் தந்திரமாக அமைந்துள்ளது.

**ஐந்தாம் தந்திரம்**

சைவத்தில் இடம்பெறும் சமயங்களின் வகைகள், நால்வகை மார்க்கமாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம், பிற சமயங்களின் கருத்துக்கள், சிலர் கருத்துக்கள் ஏற்கப்படுதல் சிலர் கருத்துக்கள் மறுக்கப் படுதல் போன்ற செய்திகள் ஐந்தாம் தந்திரமாக அமைந்துள்ளது. இத் தந்திரத்தில் 154 பாடல்கள் உள்ளன.

**ஆறாம் தந்திரம்**

உயிர் நாடியாக உள்ள சிவ தரிசனம், இறைவனின் திருவடிப் பேற்றினை அடையும் வழி, ஞானத்தின் உண்மையைத் தெரிதல், துறவறம், தவம், அருளிலிருந்து தோன்றக் கூடிய ஞானம், நல்லவர்களின் செயல், தகாதவர்களின் இயல்பு, திருநீற்றின் பெருமை போன்றவற்றை உள்ளடக்கி ஆறாம் தந்திரம் படிப்படியாக விளக்கிக் கூறுகிறது. இது 131 பாடல் களை கொண்டது.

**ஏழாம் தந்திரம்**

நம் உடலிலே அமைந்துள்ள ஆறு ஆதாரங்கள், ஆறு லிங்கங்கள், சமய போதனை, ஐம்புலன்களை அடக்கும் யோக முறை, குருவின்

இயல்பு, வருணன, வேண்டாத ஒழுக்கங்கள் முதலியவற்றை விளக்குவதாக ஏழாம் தந்திரம் அமைந்துள்ளது. இத்தந்திரம் 418 பாடல்களைக் கொண்டுள்ளது.

### எட்டாம் தந்திரம்

எட்டாம் தந்திரத்தில் ஆன்மா உண்மைநிலையை அடைதல் அதாவது சித்தாந்தத்தின் விளக்கம், காரண காரியங்கள், சிவத்தின் இயல்பு, உண்மை பேசுதல், ஆசையை ஒழித்தல் பற்றியக் கருத்துகள் அமைந்துள்ளன. இது 529 பாடல்களைக் கொண்டுள்ளது.

### ஒன்பதாம் தந்திரம்

இறைவனே குரு, இறைதரிசனம், பஞ்சாக்கரம் உச்சரிக்கும் முறை அதாவது நமசிவாய எனும் ஐந்தெழுத்தை உச்சரிக்கும் முறை, பஞ்சாக்கர விளக்கம், இறைவனின் திருகூத்து தரிசனம், உடல் அமைப்பில் இறைவனின் இயல்பு மற்றும் நிலை, இறைவன் ஆடும் நடன வகைகள், ஆன்மா ஞானம் பெறுதல், ஞானத்தின் சிறப்பு ஆகியவை ஒன்பதாம் தந்திரமாக அமைகிறது. இவற்றில் 499 பாடல்கள் இடம்பெறுகின்றன.

அதாவது ஆன்மா வீடுபேறு அடைதலைக் குறிக்கும் பாடல்கள் இடம்பெறுகின்றன. வீடுபேறு என்பது ஆன்மா உடலை வீடாக வைத்து தன்னால் நுகரப்படுகின்ற அனைத்து இன்பதுன்பங்களிலும் திளைத்து இறுதியில் இறைவனோடு இறைவனாக இரண்டறக் கலக்கும் நிலையே ஆன்மா இறைவனோடு ஒன்றுதல் அதாவது மனித ஆற்றல் இறை ஆற்றலோடு ஒன்றாகக் கலந்து மீண்டும் பிறவாநிலை எய்தல்.

### தந்திரங்களின் சிறப்பு

முதல் தந்திரத்திற்கு முன், முறையாகத் தொடங்கியதே சிறப்பான ஒன்றாகும். திருமந்திரத்தில் உள்ள ஒவ்வொரு பகுதியும் ஒரு தந்திரமாகும். அவைதான் ஒன்பது தந்திரங்களாகிய பாகுபாடு. தான் அறிந்தவற்றை உலகிற்கு கூறும் திருமூலர் உடல்வேறு, உயிர்வேறு, இவையிரண்டும் சேர்ந்து இருந்தால்தான் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு உறுதிப் பொருளையும் அடைய முடியும் என்று தந்திரங்களின் வழி குறிப்பிடுவது சிறப்புடையது.

இறைவனை அடையும் வழி, அதற்கான வழிபாடு, அதற்கான மந்திரமாகிய நமசிவாய எனும் ஐந்தெழுத்து அதன் வழி கிட்டும் இறையருள், போன்ற அடுத்தடுத்து தந்திரங்களை அமைத்திருப்பது தனிச் சிறப்பம்சமாகும்.

உருவ வழிபாட்டின் மூலம் நம்மை செம்மைப் படுத்தி ஆன்மாவை உண்மையான ஞானத்தைப் பெறவைப்பது திருமந்திரமாகும். திருக்கோயில்

வழிப்பாட்டையும், திருவுருவச் சிறப்புகளையும், மந்திரமாண்பையும், சக்கர அமைப்பையும், அடியார் பெருமையையும் அழகுடன் எடுத்தியம்புகிறது.

சித்தாந்தம் என்ற சொல் முதலன் முதலில் இதில்தான் இடம் பெறுகிறது. தந்திரம், மந்திரம், உபதேசம் என்ற மூவகையில் அமைந்த ஒரே நூல். செய்யுள் வகையிலும் நான்கு அடி கொண்ட கலிப்பாவால் வெண்பாவை பிழையாமல் அடிதோறும் 11 அல்லது 12 எழுத்துக்கள் இடம்பெறுகிறது. இவற்றில் வானசாஸ்திரம், உடல்கூற்றியல், கோள்களின் அமைப்பு, மருத்துவம் போன்ற அனைத்தும் இடம்பெறுவது குறிப்பிடத் தக்கது.

பிறப்பு தொடங்கி இறக்கும் காலம் வரை ஆன்மாவின் இயல்பு உயிரையும் உடலையும் துணையாகக் கொண்டு இன்பம் துய்ப்பதே ஆகும். உயிர் ஆணவ மலம் காரணமாக உடலைத் துணைக் கொண்டு இருவினைகளாக நுகரும். இந்நிலையில் மனம் ஒன்பது தந்திரங்களில் கூறப்பட்டக் கருத்துக்களின் உண்மையை உணர்ந்தால் சிவநிலையை அடையும். அதாவது ஆன்மா இறைத் திருவடியை அடையும் மீண்டும் பிறவா நிலையை எய்தும். அன்பு நிலையாகிய உயிரும் அதாவது ஆன்மாவும், அருள்நிலையாகிய இறைவனும் ஒன்றாக அழுந்தும் என்பது திருமந்திரத்தில் அமைந்த தந்திரங்களின் சிறப்பாகும்.

சமயம் என்பது இந்து, கிறித்துவம், இஸ்லாம் கிடையாது. ஒவ்வொரு வரின் கருத்திற்கேற்ப அவர் இக்கருத்துடையவர் எனக் கூறுவது அதாவது ஒரு சமயத்தில் (காலத்தில்) இவர் இக்கருத்துடையவராக இருந்தார் என்று கூறுவதைப் பாடல்களாக அமைத்திருப்பது சிறப்புடையதாகும்.

இறைவனை அடையும் வழி, அதற்கான வழிபாடு, அதற்கான மந்திரமாகிய நமசிவாய எனும் ஐந்தெழுத்து அதன் வழி கிட்டும் இறையருள், போன்ற அடுத்தடுத்து தந்திரங்களை அமைத்திருப்பது தனிச் சிறப்பம்சமாகும்.

சைவ சமயத்தின் முப்பொருளை அனுபவ வாயிலாக மிகத் தெளிவாகத் திருமந்திரம் கூறுகிறது. பதியாகிய இறைவன், பசுவாகிய உயிர்களிடத்து அம்மந்திரத்தின்பாற் உட்பட்டுக்கிடக்கும் ஒன்பது தந்திரங்களாக அமைந் திருப்பது இறைத்திருவருளால் நிகழ்ந்தது என்பது இதன் அமைப்பையும் அறிஞர்களால் புகழ்ந்து கூறப்பெறும் சிறப்புகளாலும் உய்த்துணர முடிகிறது.

# 4. கருவூரார் பாடல்களில் இலக்கிய நயங்கள்

முனைவர் சு. அழகியநம்பி, சிவகாசி.

பன்னிரு திருமுறைகளுள் ஒன்றான ஒன்பதாம் திருமுறை ஒன்பதின்மரால் பாடப் பெற்றதாகும். இத்திருமுறையுள் காணலாகும் 29 பதிகங்களுள் 10 பதிகங்களைப் பாடியருளிய கருவூர்த்தேவரின் பாடல்களில் காணப்படும் இலக்கிய நயங்களை ஆய்வதாக இவ் ஆய்வுக் கட்டுரை அமைகின்றது.

**கருவூர்த்தேவர்**

கொங்கு நாட்டில் உள்ள கருவூரில் பிறந்த இவர், அந்தணர் குலத்தில் தோன்றியவர். வேதாகமங்கள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்த யோக சித்தரான இவர், போக முனிவரிடம் உபதேசம் பெற்று, ஞான நூல்கள் பலவற்றையும் ஆராய்ந்து சிவயோக முதிர்வு பெற்று காயகல்பம் உண்டவர். சித்திகள் பலவும் கைவரப் பெற்ற இவர், உலக வாழ்வில் பற்றற்று விளங்கியதுடன் பல வியத்தகு செயல்களைச் செய்தவர்.

தமிழ்நாட்டிலுள்ள பல கோயில்களை வழிபட்ட இவர், தென்பாண்டி நாட்டிலுள்ள திருவிடைமருதூரில் இறைவனிடம் திருவடி தீட்சை பெற்றவர். இவர் கி.பி. 10 ஆண்டின் இறுதியிலும் 11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர் என்பர்.

**இயற்கைப்புனைவு**

தில்லையம்பதியைப் பாடுகின்ற கருவூரார் அங்குள்ள சோலை வளத்தை,

"மணம்விரி தருதே மாம்பொழில் மொழுப்பில்
மழைதவள் வளரிளம் கமுகம்
திணர்நிரை அரும்பும் பெரும் பற்றப் புலியூர்"

(திருவிசைப்பா 80:3-4)

எனப்பாடுவதன் வழி அறிய முடிகின்றது. அத்தில்லையப்பதியில் உள்ள வயல்களில் களையாக முளைத்துள்ள நீலோற்பல மலர்களை உழத்தியர் பிடுங்கி எறிவதைக்,

"கைவரும் பழனம் குழைத்த செஞ் சாலிக்
கடைசியர் களைதரு நீலம்
செய் வரம் பரும்பும் பெரும்பற்றப் புலியூர்" (மேலது, 81:3-4)

எனப் பாடுவதன் வழி அறிய முடிகின்றது.

தேன் சொரியும் புன்னை மலர்களில் வண்டுகள் செய்யும் செயலைக் கருவூரார்,

"புன்னைதேன் சொரியும் பொழிலகம் குடைந்து
பொறிவரி வண்டினம் பாடும்
தென்னதேன் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்" (மேலது, 88:34)

எனப் பாடுவதன் வழி அறிய முடிகின்றது.

திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம் என்னும் திருத்தலம் அமைந் துள்ள அவ்வூரின் வயல்வளத்தைக் கருவூரார்,

."கெண்டையும் கயலும் உகளுநீர்ப் பழனம்
கெழுவுகம் பலைசெய் கீழ்க் கோட்டூர்
வண்டறை மணியம் பலம்" (மேலது, 102:3-4)

எனவும்,

"தெளிபுனல் அலங்கல்
கெந்தியா வுகளும் கொண்டைபுண் டரீகம்
கிழிக்கும்தண் பணைசெய்க்கீழ்க் கோட்டூர்" (மேலது, 110:3-4)

எனவும் பாடுவதன் வழி அறிய முடிகின்றது.

திருமுகத்தலையின் நீர்வளத்தையும் மீன் வளத்தையும் அவர்,

"முழங்குதீம் புனல் பாய்ந்து இளவரால் உகளும்
முகத்தலை அகத் தமர்ந்து" (மேலது, 113:3)

எனவும், அவ்வூரின் நெல் வளத்தை,

"மேடெலாம் செந்நெல் பசுங்கதிர் விளைந்து
மிகத் திகழ் முகத்தலை மூதூர்" (மேலது, 115:3)

எனவும் பாடியுள்ளதன் வழி அறிய முடிகின்றது.

திருப்பூவணம் என்னும் திருத்தலம் அமைந்துள்ள அவ்வூரில் பாய்கின்ற வையையாற்றின் வளத்தைக் கருவூரார்,

"மருதர சிருங்கோங்கு அகில் மரம் சாடி
வரைவளங் கவர்ந்திழி வைகைப்
பொருதிரை மருங்கோங்கு ஆவண வீதி" (மேலது, 144:3-4)

எனவும் குளங்கள், சோலைகளின் வளத்தை,

"தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத்
தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்,
பூம்பணைச் சோலை ஆவண வீதி" (மேலது, 145:33-4)

எனவும் பாடுவதன் வழி அறிய முடிகின்றது.

**வடிவப் புனைவு**

சிவபெருமானின் வடிவழகைக் கருவூரார் பல பாடல்களில் புனைந்துரைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

சிவபிரானின் முடிமேல் உள்ள பிறை நிலா, சடைமுடி, கழுத்தின் வண்ணம், சூலாயுதம், காதணி, உதடு, வாய் ஆகியவற்றைக் கருவூரார்,

"துண்டவெண் பிறையும் படர்சடை மொழுப்பும்
சுழியமும் சூலமும் நீல
கண்டமும் குழையும் பவளவாய் இதழும்
கண்ணுதல் திலகமும்" (மேலது, 102:1-2)

எனவும், நெற்றிக்கண், உதடுகள் போன்றவற்றைத்,

"திருநுதல் விழியும் பவளவாய் இதழும்
திலகமும் உடையவன்" (மேலது, 103:1)

எனவும், திருமுடி, திருநீறு, திருச்செவிகள் போன்றவற்றைத்,

"தழைதவழ் மொழுப்பும் தவளநீற் றொளியும்
சங்கமும் சகடையின் முழக்கும்
குழைதவழ் செவியும் குளிர்சடைத் தெண்டும்
குண்டையும்" (மேலது, 103:1-2)

எனவும், திருவுரு, சடை, திருநீறு ஆகிவற்றை,

"அந்திபோல் உருவும் அந்தியிற் பிறைசேர்
அழகிய சடையும் வெண் ணீரும்" (மேலது, 110:1)

எனவும் சிவபிரானின் திருவடிவைப் புனைந்துரைப்பதைக் காணமுடிகின்றது. இவற்றுள் பாடல் 110-இல் அந்திக் காலத்துச் செவ்வானம் போன்ற திருவுருவம் என்றது அவனுடைய செக்கர்மேனியையும் செவ்வானம் போன்ற சடை என்றது அவனுடைய சிவந்த சடையையும் குறித்த சிறந்த உவமைகளாக விளங்குமாற்றைக் காணமுடிகின்றது.

மேலும் சிவபிரானுடைய திலகம் இட்ட நெற்றி, கண்கள், திருநீறு, சடை, கங்கை, அணிகலன்களான சதங்கை, சிலம்பு போன்றவற்றைக் கருவூரார்,

"ஐயபொட் டிட்ட அழகுவாள் நுதலும்
அழகிய விழியும்வெண் ணீரும்

சைவம்விட் டிட்ட சடைகளும் சடைமேல்
தரங்கமும் சதங்கையும் சிலம்பும்'' (மேலது, 136:1-2)

எனவும், பாடியிருப்பதன் வழி அறிய முடிகின்றது. இப்பாடலில் 'சைவம் விட்டிட்ட சடைகளும்' என்ற சொல் சிவத்தின் தன்மையை வெளிப்படுத்துகின்ற சடைகள் என்ற பொருளைத் தந்து நிற்பது நினைத்தின்புறுதற்குரியதாகும் எனலாம்.

**உவமை நயங்கள்**

உவமை தோன்றுமிடங்களாகத் தொல்காப்பியம்,

''வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்'' (தொல். உவமையியல் 1)

எனக் குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது. மேலும் உவமிக்கப் படும் பொருள் உயர்ந்த பொருளாக இருத்தல் வேண்டும் என்பதை,

''உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை'' (மேலது, 3)

எனவும் தொல்காப்பியம் குறிப்பிடுவதைக் காண முடிகின்றது.

தண்டியலங்காரம் உவமையின் இலக்கணத்தை,

''பண்பும் தொழிலும் பயனும் என்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை'' (தண்டியலங்காரம்)

எனக் குறிப்பிடுவதைக் காண முடிகின்றது.

**உருவுவமைகள்**

தில்லையில் வாழ்கின்ற பெண்களின் உதடுகளைப் போன்று முருக்கம் பூக்கள் காணப்படுகின்றன என்றும், மாந்தளிர்கள் சிவந்த தீயைப் போலக் காணப்படுகின்றன என்றும் உருவுவமைகளை அமைத்துக் கருவூரார்,

''வாயில்நேர் அரும்பு மணிமுருக்கு அலர
வளரிளம் சோலைமாந் தளிர்செந்
தீயின்நேர் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்''
(திருவிசைப்பா, 82:3-4)

எனவும், சிவபெருமானின் செஞ்சடையைக் கதிரவனின் சிவந்த ஒளிக் கற்றைகளுக்கு உவமைப்படுத்தி,

''நெஞ்சிடர் அகல அகம் புகுந்த தொடுங்கும்
நிலைமையோடு இருள்கிழித் தெழுந்த
வெஞ்சுடர்வ போன்று ஒளி துளும்பும்
விரிசடை அடிகள்'' (மேலது, 85:1-2)

எனவும் பாடியுள்ளதன் வழி அறிய முடிகின்றது.






**பயனுவமைகள்**

தாய் மனமுவந்து உணவை ஊட்டியதைப் போன்ற அருள் செய்பவன் சிவபெருமான் என்பதை அவர்,

''பின்னுசெஞ் சடையும் பிறைதவழ் மொழுப்பும்
பெரியதங் கருணையும் காட்டி
அன்னைதேன் கலந்தின் னமுதுகந்து அளித்தாங்
கருள்புரி பரமர்தம் கோயில்'' (மேலது, 88:1-2)

எனவும், தீயினால் பாலைக் காய்ச்சுகின்ற பொழுது பாலிலிருந்து நீர் பிரிவதைப் போலப் பாவம் பிரிந்து செல்லும் என்பதை அவர்,

''பண்ணிய தழல்காய் பாலளா நீர்போல்
பாவமுன் மறைந்துபா வனைய
புண்ணியம் பின்சென் றறிவினுக்கு அறியப்
புகுந்த'' (மேலது, 141:1-2)

எனவும், பிறப்பையும் இறப்பையும் இலையின் பருவங்களுடன் ஒப்பிட்டு அவர்,

''தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின்
தளிரிறப் பிலை உதிர் வென்றால்'' (மேலது, 168:1)

எனவும் பாடியுள்ளதன் வழி அறிய முடிகின்றது.

**வடிவுமைகள்**

இறைவன் குடிகொண்டுள்ள திருக்களந்தை ஆதித்தேச்சரத்தில் உள்ள மாடங்கள் மலையைக் குடைந்து செய்யப்பட்டதைப் போன்று விளங்குகின்றன என்பதைக் கருவூரார்,

''மலைகுடைந் தனைய நெடுநிலை மாட
மருங்கெலாம்'' (மேலது, 91:3)

எனப்பாடுவதன் வழி அறிய முடிகின்றது. இதனை நெடுநல்வாடையில் இடம் பெறும்,

''குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்''

(நெடுநல்வாடை, அடி 88)

என்ற பகுதியுடன் ஒப்பிட்டுக் கூறலாம்.

மேலும் பளிங்குக்கல் ஒளியைத் தன்வழியே செலுத்துவதைப் போல அறியாமையை நீக்கி தன்னுள் இறைவன் எழுந்தருளினான் என்பதை அவர்,

''.........அடுத்தவான் பளிங்கின்
பொருள்வழி இருள்கிழித் தெழுந்த'' (மேலது, 98:3)

எனவும், இறைவன் தன்னிடம் தாமரை இலையில் ஒட்டாத நீரைப் போல உள்ளான் என்பதை அவர்,

"நீரோங்கி வளர்கமல
நீர்பொருந்தாத் தன்மையன்றே" (மேலது, 122:1)

எனவும், கோங்கு மலர்க் கொத்தினைப் போன்றது வெண் கொற்றக் குடைகள் என உவமைப்படுத்துவதை

"...........கோங்கிணர் அனைய
குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந்து"
(மேலது, 164:2-3)

எனவும், பச்சை மட்கலம் மழை நீரால் அழியும், ஆனால் சுட்டமட்கலம் நீரில் கிடந்தாலும் அழியாது. அதைப்போல பெண் வயப்பட்டுக் கிடந்த தன்னை அழியாமல் அருளால் இறைவன் காத்தான் என்பதை அவர்,

"எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்
இன்துளி படநனைந் துருகி
அழலையாழ் புருவம் புனலொடும் கிடந்தாங்கு
ஆதனேன் மாதரார் கலவித்
தொழிலையாழ் நெஞ்சம் இடர்படா வண்ணம்
தூங்கிருள் நடுநல்யா மத்தோர்
மழலையாழ் சிலம்ப வந்தகம் புகுந்தோன்
மருவிடம் திருவிடை மருதே" (மேலது, 179)

எனவும் பாடியுள்ளதன் வழி அறிய முடிகின்றது.

**தொடைநயம்**

கரவூர்த்தேவரின் பாடல்கள் அமைத்திலுமே எதுகைத் தொடை நயங்கள் காணப்படுமாற்றை அறிய முடிகின்றது. சொல்லாலோ பொருளாலோ முரண்படத் தொடுக்கப்படும் முரண்தொடை நயத்தை,

"கரியரே இடந்தான் செய்யரே ஒருபால்" (மேலது, 93:1)

எனப் பாடியுள்ளதன் வழி அறிய முடிகின்றது.

**சொல் நயங்கள்**

இறைவனுடைய திருவடிவப் புனைவைப் பாடுகின்ற கருவூராரின்,

"பவளமே மகுடம் பவளமே திருவாய்
பவளமே திருவுடம் பதனில்
தவளமே களபம் தவளமே புரிநூல்
தவளமே முறுவல்ஆ டரவம்

துவளுமே கலையும் துகிலுமே ஒருபால்
துடியிடை இடமருங்கு ஒருத்தி
அவளுமே ஆகில் அவரிடம் களந்தை'' (மேலது, 95)

என்னும் பாடலில் பவளம், தவளம் ஆகிய இரு சொற்களின் நயம் நினைந்தின் புறத்தக்கதாக அமைந்துள்ளன.

மேலும் அவருடைய,

''குமுதமே திருவாய் குவளையே களமும்
குழையதே இருசெவி ஒருபால்
விமலமே கலையும் உடையரே சடைமேல்
மிளிருமே பொறிவரி நாகம்
கமலமே வதனம் கமலமே நயனம்
கனகமே திருவடி நிலை நீர்
அமலமே ஆகில் அவரிடம் களந்தை'' (மேலது, 99)

என்னும் பாடலிலும் சொல் நயங்கள் காணப்படுகின்றன என்பதை அறிய முடிகின்றது.

**சுவை நயம்**

இறைவனைக் காண முன்னமே பலர் பலகாலம் சிவத்தொண்டில் ஈடுபட்டுக் காத்திருக்கத் தன்மணமாகிய கோயிலில் தாமே வந்து அவன் வீற்றிருந்ததை அவர் பாடும்,

''பன்நெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பலர் ஏம்பலித் திருக்க
என்நெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்'' (மேலது, 169:1-2)

என்ற பாடலில் பெருமிதச் சுவை அமைந்திருக்குமாற்றைக் காண முடிகின்றது.

கருவூர்த்தேவரின் திருவிசைப் பாக்களில் இயற்கைப் புனைவு, வடிவப் புனைவு, உவமைநயங்கள், தொடைநயம், சொல்நயங்கள், சுவைநயம் ஆகியன காணப்படுகின்றன என்பதை இவ்ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

# 5. ஒன்பதாம் திருமுறை அமைப்பும் சிறப்பும்

செல்வி க. அனுராதா, சென்னை.

ஒளிவளர் விளக்கே! உலப்பிலா வொன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உளத் தானந்தக் கனியே!.
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே!

**திருப்பல்லாண்டு**

மண்ணுக தில்லை! வளர்க, நம்பக்கத்தர்கள்! வஞ்சகர் போய் அகல, பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனி எல்லாம் விளங்க அன்ன நடை மடவாள் உமைகோன் அடியோமுக்கு அருள் புரிந்து பின்னைப் பிறவி அறுக்க நெறி தந்த பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே!

**ஒன்பதாம் திருமுறை பாடியோர்**

1. திருமாளிகைத் தேவர், 2. சேந்தனார், 3. சேதிராயர், 4. கண்டராதித்தர், 5. பூந்துருத்தி நம்பிகாடவ நம்பி, 6. திருவாலி அமுதனார், 7. புருடோத்தம நம்பி, 8. கருவூர்த் தேவர், 9. வேணாட்டடிகள்,

ஆகிய ஒன்பது பேர் பாடிய பாடல்களைத் "திருவிசைப்பா" என வழங்கப்படுகிறது. இதுவே ஒன்பதாம் திருமுறையாகத் திகழ்கிறது.

இதில் 29 பதிகங்களும் 301 பாடல்களும் கிடைக்கின்றன. சிதம்பரத்தைப் பற்றிய பதிகம் 16 உள்ளன.

**1. திருமாளிகைத் தேவர்**

திருவாடுதுறையைச் சேர்ந்தவர் போக முனிவரின் மாணாக்கராக இருந்தவர் கருவூர்த்தேவரோடு இணைந்து வாழ்ந்தவர். சேந்தனாரும் இவரது காலத்தைச் சார்ந்தவர்.

தில்லையில் ஓடாது இருந்த தேரை, தன் பாடல் வலிமையால் ஓடச் செய்தவர், மதில் நந்திகளை உயிரூட்டினார். வேகவைத்த விதை

களை முளைக்கச் செய்தார். பிணத்திற்கு உயிரூட்டி நடக்கச் செய்தார். இவர் பாடியது 4 பதிகம், 45 பாடல்கள் கிடைக்கின்றன. இவற்றுள் 3 பதிகங்கள் சிவபெருமானைப் பற்றிச் சிறப்பித்துக் கூறுகின்றன.

**மகேந்திர மாலையைப்** பற்றிய சிறப்பு இவர் பாடலில் கூறப்படு கிறது. 4-வது பதிகம் பிற சமயங்களைப் பழிக்கிறது. திருவாடுதுறையில் இவர் கோயில் அமைந்துள்ளது.

**2. கருவூர்த்தேவர்**

கருவூர் என்பது இவருடைய ஊர், இவர் சோழ நாட்டைச் சேர்ந்தவரா என்பது, இவரது ஊர் பெயரிலிருந்து மாறுபாடாக இருக்கின்றது. தஞ்சை பெருவுடையார் கோவிலில் லிங்கம் நிறுவப்பட வேண்டும் என்று கூறினார். பலர் அதை எதிர்த்தனர். தன் சித்து வேலைகளினால் அவர்களை இசைய வைத்தார். இக்கோவிலில் கருவூர்த் தேவருக்குச் சிலை உள்ளது. 10 பதிகம் பாடியுள்ளார். 105 பாடல்கள் கிடைக்கின்றன. மு. அருணாசலம் கருவூர்த் தேவரும், கருவூர்ச் சித்தரும் வேறு வேறு காலத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுகின்றார்.

**3. சேர்ந்தனார்**

திருவெண்காட்டிற்கு அருகிலுள்ள நாங்கூரில் பிறந்தவர். **திருவீழி மிழலை** என்ற இடத்தில் வாழ்ந்தார். பட்டினத்தாருக்கு உதவியாளராக இருந்தவர். சிறையிலிருந்த இவர் தன்னுடைய பக்தியின் காரணமாக விடுதலை அடைந்தார். தில்லையில் சிவனடியாருக்கு விறகுவெட்டி விற்றார். இறைவன் இவர் வீட்டில் கூழ் உண்டு சென்றார். இத்தகைய செய்திகள் இவரது பாடலின் வாயிலாக அறிய முடிகின்றன. இவர் 4 பதிகம் பாடியுள்ளார். 47 பாடல்கள் உள்ளன. முதல் பதிகம் முருகன் பற்றியும் மூன்று பதிகம் சிவபெருமானைப் பற்றியும் கூறுகின்றன.

**4. பூண்துருத்தி காடவ நம்பி**

திருப்பூண்துருத்தி என்ற ஊரைச் சேர்ந்த வீரசைவர் 2 பதிகம் பாடியுள்ளார். அவற்றில் ஒன்று தில்லையைப் பற்றியது. மற்றொன்று திருவாரூர் பற்றியது. 12 பாடல்கள் கிடைக்கின்றன. **சாயிரபாணி இசையை** வகுத்தவர்.

**5. கண்டராதித்தர்**

சோழநாட்டைச் சேர்ந்தவர், காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு. இவர் முதல் **பராந்தகச் சோழனின் மகன்** இவர் ஒரு பதிகம் பாடி யுள்ளார். அதில் 10 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் தில்லைநகர் சிறப்பிக்கப்படுகிறது. இவரது மனைவி செம்பியன் மாதேவி ஆவார்.

### 6. வேணாட்டடிகள்

தென் திருவிதாங்கூரைச் சேர்ந்தவர். இவர் 1 பதிகம் பாடியுள்ளார். 10 பாடல்கள் இதில் உள்ளன. இப்பாடல்களும் தில்லையைப் பற்றியதாக உள்ளன.

### 7. திருவாளியமுதனார்

சோழநாட்டிலுள்ள திருவாளி இவரது ஊர் ஆகும். மயிலாப்பூரிலும் வாழ்ந்திருக்கின்றார். **"மயிலை மறைவளர் திருவாளி"** என்ற பாடல் வரியின் மூலம் இது அறியப்படுகிறது. 4 பதிகம் பாடியுள்ளார். சுந்தரரை இவர் புகழ்கிறார். இவர் பாடல்களில் கடவுளின் பாதாதி கேசவருணனை காணப்படுகிறது. காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு. இவருக்கு 'அமுதனரர்' என்ற பெயரும் உண்டு.

### 8. புருடோத்தம நம்பி

வேதியர் குலத்தைச் சார்ந்தவர். இவர் தில்லையைப் பற்றி 2 பதிகம் பாடியுள்ளார். 22 பாடல்கள் இதில் உள்ளன. இவர் நம்பியாண்டார் நம்பி வாழ்ந்த காலத்திற்கு முற்பட்டவர். அகச் செய்திகள் இவருடைய பாடல்களில் காணப்படுகின்றன.

### 9. சேதிரரயர்

திருக்கோவிலூருக்கு அருகிலுள்ள சேரநாட்டில் பிறந்தவர், மன்னர் மரபைச் சேர்ந்தவர். இருவரும் நம்பியாண்டார் நம்பி காலத்திற்கு முற்பட்டவர். ஒரு பதிகம் பாடியுள்ளார். 10 பாடல்கள் கிடைக்கின்றன. இவரது பாடல்களிலும் அகம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பதிகம் என்பது இறைவனை குறித்த சொல், எனவே இறைவனைப் பற்றி பாடுவதே பதிகம் என்பர்.

### முடிவுரை

ஒன்பது அருளாளர்கள் பாடிய பாசுரங்களின் தொகுப்பே ஒன்பதாம் திருமுறையாகும். இதில் **திருவிசைப்பா, திருப்பல்லாண்டு** எனும் இரண்டு நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. திருப்பல்லாண்டு சேர்ந்தனார் மட்டுமே அருளியுள்ளார். சிதம்பரத்தில் நகராத தேரை சேர்ந்தனார் திருப்பல்லாண்டு பாடி ஓடச் செய்தார் என்பது வரலாறு, சைவசமயக் குரவர் நால்வருக்கும் பின் எழுப்பப்பட்ட கோயில்களான **தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில், கங்கை கொண்ட சோழபுரம் திருக்கோயில்,** திரைலோக்கிய சுந்தரர் திருக்கோயில் முதலியன இத்திருமுறையில் இடம் பெறுகின்றன. தேவாரத் தலங்கள், தேவார வைப்புத்தளங்கள், திருவாசகத் தலங்களை அடுத்து இவை திருவிசைப்பா தலங்கள் என அழைக்கப்படுகின்றன.

# 6. திருமந்திரத்தில் இயமம் நியமம்

முனைவர் ஆர். அனுராதா, சென்னை.

"தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்றுரை"

என்ற ஔவையாரின் கூற்றுப்படி பெருமை பெற்றது திருமந்திரம். சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாம் திருமுறையாக விளங்குவது திருமந்திரம். மந்திரம் என்பது ஆகமப் பொருள், அடங்கியதைக் குறிப்பிடும். திரு என்பது அடைமொழியாகும். இத்தகைய ஆகமநூலை எழுதிய ஆசிரியர் திருமூலர் என்பார். இவர் நந்திதேவராகிய ஆசிரியரிடம் பாடம் கேட்டு இந்நூலை எழுதினார் என்பர்.

**திருமூலர் பெயர்க்காரணம்**

சங்க கண்ணர் என்ற சித்தர் தன் குரு அகத்திய முனிவரைக் காணச் சென்ற வழியில் "சித்திரமூலன்" என்ற இடையன் மாய்ந்துவிட அவனுடைய பசுக்களைக் காப்பாற்றினான். பின்னர் மூலன் மனைவி யிடம் உண்மையைக் கூறிவிட்டு திரும்பி வந்தபோது அங்கு கண்ணன் உடலை எரித்து விடவே, அவன் செய்வதறியாது அம்மூலவனின் உடலில் இருந்தபடியே யோக நிலையிலிருந்து வருடத்திற்கு ஒன்றாக 3000 பாக்களை அருளிச் செய்தார். மூலனின் சீரத்துள் புகுந்து விளங்கியமையால் இச்சித்தர் "திருமூலர்" என்ற பெயருடன் விளங்கினார்.

**நூலமைப்பு**

இந்நூல் 9 பாகங்களாக அமைந்து 9 தந்திரங்களை விளக்குகிறது. 232 அதிகாரங்களையும் 3047 பாடல்களையும் உடையதாக அமைந்து உள்ளது. இந்நூல் பொது அறம். மந்திரம், சோதிடம், மருத்துவம், சித்தாந்தம் ஆகியன குறித்த செய்திகளை விளக்குவதாக அமைந்துள்ளது. சைவ சித்தாந்தம் ஆகியன குறித்த செய்திகளை விளக்குவதாக அமைந்துள்ளது. சைவசித்தாந்தம் என்ற தொடரை இந்நூலில் காணமுடிகிறது.

**திருமந்திரத்தில் காணலாகும் செய்திகள்**

ஒழுக்கமும், ஒழுகும் முறையும், கல்வியியல் கோட்பாடுகள், பிறர் மனை நயவாமை, புலால் மறுத்தல், புராண வரலாறுகள், கரு உண்டாதல்

வளர்தல் பற்றிய மருத்துவச் செய்திகள், இறைவனின் ஐ-வகைத் தொழில்கள். அஷ்டமாசித்தி, அஷ்டாங்க யோகம், பிராணாயாமம், நோயற்ற வாழ்வு, பலசக்கர அமைப்புகள், வயிரவி மந்திரம், வாழ்வியல் தத்துவம், சரியை, கிரியை, யோகம், ஞானம் - பற்றிய செய்திகள், சத்புத்திர மார்க்கம், தாச மார்க்கம், சக மார்க்கம், ஞான மார்க்கம் பற்றிய ஆய்வு முறைகள், சாலோக, சாமீப, சரூப, சாயுஜ்ய நிலைகள் பற்றிய விளக்கம், சைவ சமயத்தில் உட்கரு, துறவு, அருள்நெறி, முதிர்ச்சி போன்ற சமயக் கருத்துக்கள், அடியார்களின் பெருமை, லிங்க வடிவத் தத்துவங்கள், அறிவுப்பசி, குருபூஜை விதிமுறைகள், சமயத் தொண்டின் பெருமைகள், பதி-பசு பாசம் விளக்கம். முக்குற்றம், முக்கரணம், முப்பரம், முப்பாழ் பற்றிய விளக்கம், பஞ்சாட்சரம், ஞானோதயம், போன்ற பல செய்திகளை விளக்க மாகக் கூறியுள்ளதைக் காணலாம்.

இந்நூலில் மூன்றாம் தந்திரத்தில் உள்ள இயமம், நியமம் பற்றிய செய்திகளை இனிக்காண்போம்.

திருவாவடுதுறைப் பதிப்பிலும், தருமபுர ஆதீனப் பதிப்பிலும் இயமத் தலைப்பின்கீழ் இரு பாடல்களும், நியமம் தலைப்பின் கீழ் மூன்று பாடல்களும் உள்ளன.

மூன்றாம் தந்திரத்தில் சாத்திரப் பொருள்கள் கூறப்படுகின்றன. சாத்திரப் பொருள்கள் தவமும், ஞானமும் என இருவகைப்படும். அவ் விரண்டனுள் முன் நிகழ்வது தவமே ஆதலால் தவத்தினுள் ஒரு பகுதியான யோகத்தினை மூன்றாந் தந்திரத்தில் கூறுகிறார். யோக உறுப்புகள் எட்டினுள் இயமம், நியமம் என்பன முதல் இரண்டு உறுப்பாம்.

**யோக உறுப்புகள்**

இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டாகும்.

இயமம் என்பது விலக்குவதை ஒழிப்பதாகும். அதாவது சான்றோரால் எவை எவை விலக்கப் பெற்றனவோ அந்த தீய ஒழுக்கங்களை ஒழிப்பதே இயமம் ஆகும். இத்தலைப்பின் கீழ் இரண்டு பாடல்கள் அமைந்துள்ளன.

இயமத்தை எப்போது இடைவிடாது செய்தல் வேண்டும்.

**"எழுந்துநீர் பெய்யினும் எட்டுத்திசையுஞ்**
**செழுந்தணியமங்கள் செய்மினென்றண்ணல்**
**கொழுந்தன் பவளக்குளிர் சடை யோடே**
**அழுத்திய நால்வர்க் கருள் புரிந்தானே"**

ஏழு மேகங்களும் ஊழிக்காலத்து உலகை அழிக்கின்ற நிலையில் மழைப் பெய்தாலும், எட்டுத்திக்கிலும் இயமங்களை இடை விடாது

செய்வீர்களாக என்று தன்னை விட்டுப் பிரிய விரும்பாத சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமார் என்ற நால்வருக்கும் எதிரில் தோன்றிச் சிவபெருமான் அருள் புரிந்தான். அஷ்டாங்க யோகத்தில் இயமத்தை இடைவிடாது செய்தல் வேண்டும் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

இயம நெறியில் நிற்பவர் நீக்க வேண்டிய குற்றங்களை,

**"கொல்லான் பொய் கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்கமுடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்டான் மாசிலான் கட்காமம்**
**இல்லான் இயமத்திடையில் நின்றானே"**

கொல்லாமை, பொய்யாமை, களவு இல்லாமை, ஊண், உண்ணாமை, பொறுமை உடைமை, அடக்கமுடைமை, விருப்பு வெறுப்பு இல்லாமை, கொடையுடைமை, மாசின்மை, கள், காமம் இன்மை எனப் பத்து குற்றங்களை பட்டியலிடுகிறது. இவற்றை கடைபிடிப்பவன் இயம யோகம் கைவரப் பெற்றவனாவான்.

**நியமம்**

நியமம் என்பது ஒழியாது மேற்கொள்ளல் ஆகும். இப்பகுதியில் மூன்று பாடல்கள் உள்ளன.

**"ஆதியை வேதத்தின் அப்பொருளானைச்**
**சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்**
**பாதியுள் மன்னும் பராசக்தியோடுடன்**
**நீதியுணர்ந்த நியமத் தனாமே"**

ஆதியாய் உள்ளவனை, வேதப் பொருளாக உள்ளவனை, சோதியாய் விளங்குபவனை, அக்கினியாய் நிற்பவனை, பராசக்தியுடன் விளங்கு கின்றவனை உணரவேண்டும். அவ்வாறு உணருபவனே நீதியுணர்ந்து நியமத்தில் நிற்க வல்லவன் ஆவான்.

**"தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெம்மை**
**வாய்மை நிலைமை வரைதலே மற்றவை**
**காமங்களவு கொலையெனக் காண்பவை**
**நேமியீரைந்து நியமத் தனாமே"**

தூய்மை, அருளுள்ளம், யாக்கை சுருக்கம், பொறையுடைமை, வாய்மை யுடைமை, நடுநிலைமை, செம்மையுடைமை ஆகியவற்றோடு காமத்தையும் களவையும் கொலையையும் நீக்குதல் ஆகிய ஐந்தையும் கொண்டு விளங்குகின்றவன் நியமத்துக்குரியவன்.

இப்பாடலை இடைச்செருகலாகச் சில பதிப்புக்கள் கூறுகின்றன. காரணம் இது முன்பகுதியான இயமத்தினைக் கூறுவதனாலும், மூன்றாமடி பொருத்தமற்றதாக இருப்பதனாலும் ஆகும்.

**"தவஞ் செபஞ் சந்தோடம் ஆத்திகந்தானஞ்**
**சிவன்றன் விரதமே சித்தாந்த கேள்வி**
**மகஞ்சிவ பூசையொண்மதி சொல்லீர் ஐந்து**
**நிலம்பல செய்யின் நியமத்தன் ஆமே"**

தவம், மந்திரங்களை மிகுதியாகச் சொல்லல், உள்ளதே போதும் என்ற நினைவு, (சந்தோடம்) இறைவனின் உண்மை நிலை உணரல் (ஆத்திரம்) கொடையுள்ளம், சிவனுக்குரிய சிறப்பு நாட்களில் விரதமிருத்தல், சிவாகமங்களில் ஞானபாதப் பொருளைக் கேட்டல், இயன்றபொழுது தீயினை வளர்த்து வேள்வி செய்தல், சிவலிங்க வழிபாட்டினைச் செய்தல், நற்பண்பினைக் கொண்டு விளங்குதல் ஆகிய இப்பத்தையும் மேற்கொள்பவன் நியமத்தான் ஆவான்.

இயமம், நியமம் என்ற இருபகுதியிலுள்ள பாடல்கள் இறைவனைப் போற்றுவதோடு ஒழுக்கநெறிகளைப் பின்பற்ற வேண்டும் என்பதையும் காட்டுகிறது.

# 7. திருமந்திரம் அமைப்பும் சிறப்பும்

திருமதி ஏ.பி. இராசேசுவரி, சென்னை.

சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாந்திருமுறையெனப் போற்றப்பெறுவது திருமந்திரமாகும். இந்த அருள் நூலை அருளிச் செய்தவர் திருமூலராவர். திருமந்திரம் 10-ஆம் திருமுறையாகப் பண்டுள்ளோர் தொகுத்தமைக்குக் காரணம் சிவபோதச் செழுந்தமிழின் பத்தாம் நூற்பாக்குறிப்பாகும்.

**திருமூலரின் சிறப்பு**

தெய்வப்புலவர் சேக்கிழாரால் புகழ்ந்து பேசப்பட்ட அறுபத்து மூன்று நாயன்மார்களில் திருமூலர் ஒருவர். இவர் சித்தர் மரபிலே முதன்மையானவர். இவர் சிறந்த ஞானி. ஞானம் முதலிய நான்கு நெறியினைத் தெள்ளுத்தீந்தமிழால் அருளிச் செய்த சான்றோர்களில் தலையாவர்.

சமயகுரவர் நால்வரில் சுந்தரமூர்த்தி நாயனார், "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று வாயாரப் புகழ்ந்து பாராட்டுகிறார்.

**"குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன்**
**குரம்பைபுக்கு ....**

என்ற பாடலில் திருமூலர் வரலாற்றை நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் சுருக்கமாகக் கூறுகிறார். பலகாலம் சாவா மூவா நிலையில் இருந்திருக்கிறார் என்பது மட்டும் புலனாகிறது.

**"தப்பிலா மன்றில் தனித்கூத்துக் கண்டபின்**
**ஒப்பில் எழுகோடி யுகம் இருந் தேனே"**

என்பது அப்பகுதியாகும்.

செந்தமிழ்ச் சிவமூலமந்திரம் திருவைந்தெழுத்தென்பர். அது "சிவயசிவ" என்பதாம். அதுபோல் சிநெறிக்குரவரும் ஐவராவர். இதுகாறும் நால்வரெனவே வழங்கி வந்த நம்மனோர்க்கு இது வியப்பினைத் தருமாயினும் உண்மையதுவாகும். ஐந்தாமவர் நம்பிரான் மூலராவர்.

இறைநூல்கள், புகழ்நூல்கள் என்வும், பொருள் நூல் எனவும் இருவகைப்படும். புகழ்நூற்களைத் தோத்திரங்கள் என்பர். பொருள்

நூற்களைச் சாத்திரங்கள் என்பர். இவற்றை ஆளுடை அரசர் "சொல்லும் பொருளெலாமானார் தாமே, தோத்திரமும், சாத்திரமுமானார் தாமே" என அருளும் திருமொழியாள் உணரலாம்.

திருவருட்கொடையால் தமக்குக் கிடைத்துள்ள புகழ்நூற்களைத் திருமுறை எனவும், பொருள் நூற்களை மெய்கண்டமறை எனவும் கூறுவர். மூலம் ஈண்டு ஆகமம். திருமுறைகள் பன்னிரண்டு, மெய்கண்ட மறைகள் பதினான்கு, இவை முறையே தமிழ் வேதமெனவும், தமிழ் ஆகமம் எனவும் கூறுவர். இவையே தமிழகத்துத்திருக்கோயில் வழிபாட்டுகளில் தலை சிறந்தவை. ஆகமம் ஆவியின் நிறைவு.

**நூலமைப்பு**

திருமூலநாயனார் அருளிய திருமந்திரம் தமிழாகமமாக விளங்கு தலை யாவரும் அறிவர். சிவ ஆகமங்கள் தந்திரம், மந்திரம், உபதேசம் என்ற உறுப்புகளைக் கொண்டன. அவற்றுள் தந்திரகலையாவது, வேத ஆகமங்களின் வகையாகிய கரும காண்டம், ஞானகாண்டம், உபாசனா காண்டம் என்னும் மூவகைகளுள் கருமகாண்டம் பற்றிப் பின்னொடு முன்மாறுகோளின்றி அனுட்டித்தலை அறிவுறுத்துவது. மந்திரகலை என்பது உபாசனா காண்டம் பற்றி மனம் முதலியன அடக்கித் தெய்வத்தை வழிபடும் முறையினை விரித்துரைப்பது. உபதேசகலை என்பது, ஞான காண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறல்லாத எண்குணமுடையனாதல், தன்னின் வேறாகிய பசு, பாசங் களையுடையனாதல் முதலிய தன்மைகளைத் தான் உணருமாறும், பிறர்க்கு உணர்த்துமாறும் விளங்க அறிவுறுத்துவதாகும். தந்திரம், மந்திரம், உபதேசம் எனப்படும் மூவகை உரைத்திறங்களும் ஒருங்கமைந்த செந்தமிழ்ச் சிவாகாமமாகத் திகழ்வது, திருமூலரின் திருமந்திரமாகும். இவற்றின் நடுவிலுள்ள மந்திரம் என்பது முன்னுள்ள தந்திரத்தோடும் பின்னுள்ள உபதேசத்தோடும் பிரிவின்றியைந்த தொடர்பினதாகிய தலைமை பற்றித் திருமூலர் இறைவன் திருவருளாற் சிந்தை செய்து அருளிய இத்தமிழாகமத்தை "மந்திரமாலை" எனக்குறித்துள்ளார். இம் மூன்றும் ஒருங்கமைந்து திகழ்வது திருமூலரின் திருமந்திரமாகும்.

**"மூலன் உரைசெய்தமூவா யிரந்தமிழ்**
**ஞாலம் அறியவே நந்தி அருளது"**

என்ற திருமூலர் வாக்காலேயே இது 3000 பாடல்களைக் கொண்டது என்பது புலனாகும்.

மூவாயிரந் தமிழ்ப்பாடல்கள் உடைமைப் பற்றித் "தமிழ் மூவாயிரம்" என வழங்குதலுமுண்டு. **"முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவயிரஞ்சாத்தி"** என்பது பெரியபுராணம்.

இந்நூல், தொல்காப்பியனார் கூறிய எழுநிலத்து எழுந்த செய்யுள் களுள் மறைமொழிகிளந்த மந்திரத்தான செய்யுளின் பாற்படுதலின், ''திருமந்திரம்'' என வழங்கப் பெறுகிறது.

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டது நாற்சீர் அடி நான்கு கொண்ட கலிப்பா யாப்பினால் அமைந்தது. செப்பலோசையுடையது. இதனைத் ''திருமந்திரயாப்பு'' என வழங்குதல் தகும் என்று ''யாழ்நூல்'' (பக்கம் 231-இல்) விபுலானந்தர் கூறுகிறார்.

**முதல் மந்திரம்**

ஞானம் பெற முயல்வோர் அதற்குத் தகுதியுடையவராகத் தம்மைத் தூயநல்லொழுக்க நெறியில் நிலைக்கச் செய்து கொள்ளுதல் வேண்டும் என வற்புறுத்தி, அதற்குரிய சாதனங்களையும் உபதேசிப்பது ஆகும். இதில் 30 பாடல்களடங்கிய உபதேசப்பகுதி ஒன்று உள்ளது. பதி, பாசம் என்னும் முப்பொருள் உண்மையை இப்பகுதியில் குறிப்பிடுகின்றனர். யாக்கை நிலையாமை செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை பற்றிக் கூறுகிறார். இதில்வரும் கொல்லாமை, புலான் மறத்தல், அன்புடைமை, கல்வி ஆகிய தலைப்புகள் திருக்குறள் அதிகாரத்தலைப்புகள் போல் அமைந்துள்ளன.

**இரண்டாம் தந்திரம்**

''சிவனே பரம்பொருள்'' என்பதை சிறப்பு முறையில் தத்துவ நுட்பங்களுடன் தெளிவுறுத்துகிறார். சிவபெருமானின் ஐந்தொழிலின் இன்றியமையாமைப் பற்றியும், மூவகை உயிர்களின் இயல்பு குறித்தும் திருக்கோயில் பராமரிப்பு பற்றியும் ஆறுமுகக்கடவுளாக காட்சி அறித்தது குறித்தும், சிவநிந்தை, குரு நிந்தைகளின் பயன்களும் இந்த தந்திரத்தில் விளக்கியுள்ளார்.

**மூன்றாம் தந்திரம்**

அட்டாங்கயோகம் முதல் சந்திரயோகம் ஈறாக இருபத்தியொரு தலைப்புகளையுடையது தவநிலைக்குச் சிவனிறைவு மறவாமை வேண்டும். இவற்றில் பயிற்சியுடையார் இறைநிறைவில் அழுந்தியிருக்கும் ''நொசிப்பு'' நிலையினை எய்துவர் ''நொசிப்பு'' எனினும் ''சமாதி'' எனினும் ஒன்று. அதன்மேல் எண்பெரும் சித்தியினையும் எய்துவர். உயிப்புப் பயிற்சியால் உடையான் மாட்டுக் காதலுண்டாகும். சுக்கர வழிபாட்டுப் பயிற்சி வாழ்நாள் தங்கலும் மங்கலும் ஆகிய முற்குறி. ஆய்வுகள் அதன்மேல் உயிர்ப்புச் செல்லும் ஓட்டமுறையாலுண்மை கண்டுணரல், செல்லும் வழிக்குச் செல்லாச் சூலத்துணை கொள்ளல், உயிர்ப்புப் பயிற்சியால் பெறுதற்கரிய செயிர்தீர் நலங்களுண்டாதல்,

உள்நீரை மாற்றி அமிழ்தாக்குதல், திங்கட் கலையில் மங்காது திளைத்துச் சிவமாதல் இதுவே மெய்யின்பமாகும்.

**நான்காம் மந்திரம்**

அசபை முதலாக நவாக்கரி சக்கரம் ஈறாகப் பதின்மூன்று பிரிவு களையுடையது வீடாவது பொருளிழப்பன்று, தன்னிழப்பாகும். திருவைந்தெழுத்து மந்திரம் மிக மிக அருமையாகப் பேசப்படுகிறது. திருவம்பலச் சக்கரத்துத் திருமந்திரம் உயிர்மந்திரமாகிய "சிவயநம" (903) என்னும் திருவைந்தெழுத்தாகும். அதுவே அனைத்திற்கும் ஆதி மந்திரமாகும். இதனை வழிபடும் முறை, இதன்பயன்கள் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

**ஐந்தாம் மந்திரம்**

சுத்தசைவம் முதலாக உட்சமயம் ஈறாக இருபது உட்பிரிவுகளை யுடையதாகும். சைவ நெறிகளின் இயல்பும், அந்நெறிகளில் நின்றோர் பெறுதற்குரிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியும் ஆகிய நால்வகைப்பேறுகளும், சத்தி நிபாதத்தின் நால்வகை முறைகளும் இந்த தந்திரத்தில் விளக்கப்படுகின்றன.

**ஆறாம் மந்திரம்**

ஞானம் பெறும் சாதனங்களை உணர்த்துகிறது, சிவகுரு தரிசனம் முதல் பக்குவன் வரை கூறுகிறது குருவருளும், திருவருளும் எவ்வாறு நமக்கு உதவுகின்றன என்றும், தவம், சிவ வேடம், திருநீறு முதலியன பற்றியும் பக்குவம் எப்படி ஏற்படுகிறது என்பது குறித்தும் இத் தந்திரத்தில் பேசப்படுகின்றன.

**ஏழாம் மந்திரம்**

ஆறாதாரம் முதல் இதோபதேசம் (இன்குருமொழி) வரை உடையது. இது பேற்றுவழிபாடு (சிவலிங்கவழிபாடு) ஆகும். சிவலிங்கத்தின் பல்வேறு நிலைகளும், சிவபூஜை, குருபூஜை, மகேசுரபூஜை முதலிய வற்றின் முறைகளும், அவற்றால் அடையப்பெறும் பயன்களும் இதிலுள்ளன. பஞ்சேந்திரியங்களை அடக்கும் முறைகள், பல்வேறு உவமைகளில் வைத்து விளக்கப்படுகின்றன.

**எட்டாம் மந்திரம்**

உடலிற்/பஞ்சபேதம் முதல் சோதனை வரை உடையது, ஐந்து அவத்தைகளின் நிலைவேறுபாடுகள் "தத்துவமஸி" என்னும் மகா வாக்கியத்தின் உண்மைப்பொருள், முத்திகளின் வகைகள், ஞானிகளுக் குள்ள (பல்வேறு உடல்கள் முதலிய செய்திகள் இதிலுள்ளன).

**ஒன்பதாம் மந்திரம்**

தசகாரியத்துள் ஒன்றாகிய சிவபோகம் என்னும் பேரின்ப நிலையை விளக்கும் முறையில் அமைந்துள்ளது.

தூலபஞ்சாக்கரம், சூக்குமபஞ்சாக்கரம், அதிசூக்கும் பஞ்சாக்கரம் பற்றிய விளக்கமும், சிவபெருமானின் பல்வேறு கூத்துகளின் சிறப்பும் இதில் பேசப்படுகின்றன. ''சூனிய சம்பாஷனை'' என்ற தலைப்பின் கீழ் நுட்பமான மறைபொருள்கள் (இரகசியங்கள்) கூறப்பட்டுள்ளன. பாடல் பார்ப்பதற்கு எளிமையாகத் தோன்றும், அதனுள் பொதிந்துள்ள ஞானப்பொருள் எளிதில் விளங்காது. இதுகாறும் திருமந்திர நூலின் அமைப்புக்குறித்து ஒருவாறு சிந்தித்தோம்.

**திருமந்திர சிறப்புகள்**

திருமுறைகளுள் சிறப்பாகத் ''திருமந்திரம்'' எனத் திருப்பெயர் பெற்றுத் திகழ்வது பத்தாம் திருமுறையாகும். இதற்கு ''மந்திர மாலை'' என்ற பெயருமுண்டு. இவ்விரு திருப்பெயர்களும் ஐந்தெழுத்தாலமைந் துள்ளன. இதுவும் திருவருட் சிறப்பேயாகும். இந்நூல் ஒன்றே தமிழ் வேதாகம முழுமுதற் கருவூல நூலாகும். ''ஞான முதல் நான்கு மலர் நற்றிரு மந்திர மாலை'' என்ற சேக்கிழார் திருவாக்கால் நூலின் பெயர் நன்கு விளங்குகிறது.

திருமந்திரம் சிறந்த வாழ்வியல் நூலாகும். உடல்-மனம்-ஆன்மா பற்றி இதைவிடத் தெளிவாகவும், விரிவாகவும் உரைக்கக்கூடிய நூல் தமிழில் இல்லை என்றே சொல்ல வேண்டும். இது ஒரு முனிவரின் ஞானத்தெளிவு.

இதனை முதனூலாக்கொண்டு இதன் விளக்கமே ஏனைப் பதினொரு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த நூல்களும் என நடு நின்றாய்வார்க்கு உண்மை அங்கை நெல்லிப் பொங்கிப் புலனாகும்.

சிவகாமங்கள், உண்மைப் பொருளைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்களாக வகுத்துரைப்பன. இந்நூலில் வேதச் சிறப்பும், ஆகமச் சிறப்பும் ஒருங்கே உணர்த்தப் பெற்றன. இத் திருமந்திரம் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மையினையும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் அறிவுறுத்தும் நிலையில் அமைந்துள்ளது. இதனுள் நெஞ்சை உருக்கும் பாடல்கள் உள. (உ.ம்.)

''முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை ----

எனத் தொடங்கும் பாடலை உருகிய பாடுகிறார் திருமூலர். இதைத் தோத்திர நூலாக, சாத்திர நூலாக, வாழ்க்கை நூலாகவும் கொள்ளலாம்.

10-ஆம் திருமுறையாகத் திகழும் மூலர் மூவாயிரமானது நேத்திர மந்திரத்தின் சொரூபமாகும். திருமுறையானது இறையியல் நெறியையும், உலகியல் நெறியையும் இணைத்து நடத்தும் எளிய வாழ்க்கை நெறியையும் அமைத்து உணர்த்துவது.

காலம், தேயம், மொழி, சாதி, சமயம், உயர்வு தாழ்வு, இன்பம், துன்பம், செல்வம், வறுமை முதலியவற்றின் பன்மை வேறுபாடுகளுள் அதிநுட்பமாய் அமைந்துள்ள ஒருமை நெறியை உணர்த்தி பூசலை நீக்கி, ஒற்றுமை வாழ்வினை உரைப்பது. அறம், பொருள், இன்பம், வீடுபேறு, தவம், யோகம், ஞானம், சித்தி, புத்தி, முத்தி, கோள்கள், நாள்கள், சரம், மந்திரம், தந்திரம், இயந்திரம், சக்கரம், மணி, மருத்துவம் முதலாகிய பலவகைக் கலை, ஞானங்களுக்கெல்லாம் கருவூலமாய் விளங்குவது செந்தமிழிற் சிறந்து விளங்கும் சாத்திரங்கட்கெல்லாம் மூல முதலாயிருப்பது.

சுருங்கச் சொல்லின், எல்லாப் பொருளும் இதன் பால் உள; இதனில் இல்லாத எப்பொருளும் இல்லை எனலாம். இதனாலே சாத்திர நூலாசிரியர் பலரும் சொற்பொருட் சோதனைக்கு இத்திருமுறைச் சிறந்த மேற்கோளாகக் கொண்டு எடுத்துக்காட்டுவராயினர்.

**பயன்**

திருமந்திர நூலைத் திருக்கோவில்களில் நாளும் விடாது ஓதி வருவாராயின் சமயவுண்மைகளும், உலகியல் ஒழுக்கங்களும், அருளிய லாகிய திருக்கோவில் வழிபாடுகளும், திருவுருவச் சிறப்புகளும், சக்கர அமைப்பும், மந்திரமாண்பும், அடியார் பெருமையும், சிவகுருவின் முதன்மையும், சிவபூசை முட்டின்றி நிகழ வேண்டிய இன்றியமை யாமையும், சிவப்பேறும், பிறவும் திருக்கோவிலாரும். செந்நெறிச் செல்வார்களும், வழிபாட்டுப் பெருமக்களும், செந்தமிழன்பர்களும் நன்குணர்ந்து ஒற்றுமையுற்று வாழ்ந்து நாடு வளமுற்றுப் பொலியு மென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆன்றோரும், அன்பரும் முன்னின்று முயல்வாராக. சிவனருள் முன்னிற்பதாக.

நாயனார் அருளிய தமிழகமாகிய திருமந்திரம் தமிழகத்தார் கற்று நாட்டிலும், வீட்டிலும், திருக்கோவில் வழிபாட்டிலும் நாள்தோறும் தடையின்றி நடைபெற வேண்டும் என்பதே சிவபெருமான் திருவுள்ளக் குறிப்பாகும்.

திருச்சிற்றம்பலம்

# 8. திருமந்திரம் காட்டும் மானுட வாழ்க்கை

திருமதி தே. இராணிஎலிசபெத், சென்னை.

திருமந்திரம் ஆன்றோர்களாலும் சான்றோர்களாலும் தமிழ் வேதம் என்று போற்றப்படுகிறது. இதனைப் பாடியவர் திருமூலர். இது ஒன்பது தந்திரங்களை கொண்டது. அதில் பதி பசு பாசம் இறை உயிர் தளை ஒழுக்கம் ஒழுக்கலாறு, உடலின் மேன்மை வழிபாட்டு முறைக்ள், சக்கர வழிபாடுகள் என்பன மிகச் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூலின் சிறப்பு கருதி இதனைச் சைவ சமயச் சான்றோர்கள் பத்தாம் திருமுறை யாகப் பகுத்துள்ளனர். இது சமயம் சார்ந்த நூல் அல்ல. மானுட வாழ்க்கையை வடிவமைத்துத் தருகின்ற ஓர் அற்புதமான ஞான நூலாகும். மனிதன் நீண்ட நாள் நல்ல உடல் வளத்தோடும் உயிர் வளத்தோடும் மன வளத்தோடும் வாழ்வதற்கு தேவையான அனைத்து வழிவகைகளையும் சொல்லுவதையே நோக்கமாகக் கொண்டுள்ள நூலாகும்.

**மனித வாழ்க்கையும் விதியும்**

உயிரோடு வாழ்ந்து கொண்டிருந்த போது எது விதைக்கப்படு கிறதோ அதுவே விளையும். தீமை விதையானால் தீமைதான் விளையும். அன்பு விதையானால் ஆதரவும் இன்பமும் விளையும். மனிதன் தான் செய்த வினைகளை ஒரு பிறவியில் இருந்து மற்றொரு பிறவிக்கு எடுத்துச் செல்லுகிறான் என்ற கருத்தை திருமூலர்,

"நாதன் ஒருவனும் நல்ல இருவரும்
கோது குணத்தொடும் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்கு
ஆதி இவனே அருளுகின் றானே" - (395)

என்பதின் மூலம் தீமையானதை மனிதன் எந்த பிறவியிலும் செய்யக் கூடாது என்று அறிவுறுத்துகின்றார்.

**நிலையாமை**

உடம்பும் உடம்பின் இளமையும் உயிரும் ஒருபோதும் நிலையாக இருக்கப் போவது இல்லை.

"மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
திண்ணென்று இருந்தது தீவினை சேர்ந்தது

விண்ணின்று நீர்விழின் மீண்டும்மண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே'' - (187)

என்கிறார். செல்வமும் நிலையற்றது என்பதை தேனீக்கள் தேனை சேகரித்து வைத்த தேனடையை கவர்ந்த மனிதருக்கும் தண்ணீரில் மூழ்கும் கப்பலுக்கும் உவமையாக்கியுள்ளார்.

''ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே'' - (215)

''மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசை செல்லும் கலம்போல்'' - (217)

உடம்பு உயிர் இளமை செல்வம் இவையாயும் நிலையானது அன்று என்கிறார் திருமூலர்.

**ஈதல்**

ஆணவமாக பேசி மற்றவரை வார்த்தைகளால் துன்புறுத்துவதும், பேராசைக் கொண்டு பிறர் பொருளை கவருவதும் கூடாது. வாழ்வில் நன்றாக இருக்கும் போதே ஒரு சிறு அளவேனும் பிறருக்கு உதவ வேண்டும். என்பதை,

''அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக் கொடுமின் தலைப்பட்ட போதே'' - (238)

குடும்பச் சொத்து பழமையானது என்று போற்றி பாதுகாத்துக் கொண்டு வராமல் தேவைப்பட்ட போது பிறருக்கு கொடுத்துதவ வேண்டுமென்கிறார்.

''ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந்து உண்மின் பழம் பொருள் போற்றன்மின்'' - (107)

என்கிறார் திருமூலர்.

**உடல் உறுப்புகள்**

மனித உடலில் உள்ள உள்ளுறுப்புகளையும் அவை செயல்படும் விதத்தினையும் எடுத்துக் கூறியுள்ளார்.

''காயப்பை யொன்று சரக்குப் பலவுள
மாயப்பை ஒன்றுண்டு மற்றுமோர் பையுண்டு'' - (2083)

என்ற பாடல் உடலிலுள்ள எலும்பு நரம்பு தசை சதை நுரையீரல் இதயம் போன்ற உறுப்புக்களைக் குறித்து பாடப்பெற்றது.

"பத்தும் இரண்டும் பகலோன் உயர்கலை
பத்தினோடு ஆறும் உயர்கலை பால்மதி
ஒத்தநல் அங்கியது எட்டெட்டு உயர்கலை
இத்திறன் நின்றமை ஆய்ந்துகொள் வீரே" - (834)

என்று மூளையோடு சேரும் நாடி நரம்புகள் விளக்கப்பட்டுள்ளது.

"ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே" - (452)

என்ற பாடலில் ஒன்பது நீர்ச்சால் என்பது வாய், நுரையீரல் இரண்டு, இரைப்பை, இதயம், சிறுநீரகம் இரண்டு, சிறுநீர்ப்பை, மலக்குடல் ஆகும். கலசம் பதினெட்டு என்பது சிகாமணி, ஞானமணி, அமுதகலசம், கண்டாமணி, இரண்டு, நாவு மணி இரண்டு, பிள்ளைச்சிட்டான், கல்லீரல், மண்ணீரல், பித்தப்பை, கணையம், தலைப்பட்டி இரண்டு, நீரேத்தம், பீசங்கள் இரண்டு, விந்தேத்தம் ஆகியவையாகும். உடல் உறுப்புகள் அனைத்தும் இப்பாடலில் அடங்கியுள்ளது.

**உடல் உறுப்புகளின் இயக்கம்**

மனித மூளை 96 இலாகாக்களாகப் பிரிந்து மனித உடம்பை ஆள்கிறது.

"முப்பதும்முப்பதும் முப்பத் தறுவரும்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்" - (198)

என்று உடல் உறுப்புகளின் இயக்கத்தினை மிகவும் தெளிவாகப் பாடியுள்ளார்.

**மருத்துவம்**

சிறுநீரைப் பயன்படுத்தி மருத்துவம் செய்யும் முறையை திருமூலர் விளக்கியுள்ளார்.

"நூறு மிளகளவு நுகரும் சிவத்திநீர்
மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறில் இதனைத் தெளியுச்சி கட்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராமே" - (827)

நூறு மிளகளவு சிறுநீரைத் தொடர்ந்து உபயோகித்து வந்தால் முதுமை மாறும். சிறுநீரை உச்சியில் தேய்த்து வந்தால் நரை முடி கருக்கும் என்கிறார். இதைப்பருகும் முறையையும்

"கரையரு கேகின்ற கானல்உவரி
வரைவரை என்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறும் நமனுமங் கில்லையே"

சிறுநீரைக் கலத்தில் பிடித்து நுரையும் சூடும் தணிந்த பின் பருகி வந்தால் நரை திரை மாறுவதோடு ஆயுளும் கூடும் என்கிறார்.

**இல்லறம்**

இல்லறம் அன்பும் அமைதியும் தியாகமும் கருணையும் நிறைந்ததாக இருக்க வேண்டுமானால் இல்லறவாழ்வில் இணையும் ஆணுக்கும் பெண்ணுக்கும் வயது பொருத்தம் வேண்டும் என்பதனை,

"ஏய்ந்த பிராயம் இருபது முப்பதும்
வாய்ந்த குழலிக்கும் மன்னர்க்கும் ஆனந்தம்" - (813)

ஆக கணவன் மனைவி இருவரிடையேயும் ஐந்துவகைப் பொருத்தங்கள் இருந்தால் இல்லறம் நல்லறமாகும் என்கிறார்.

**மனத்தூய்மை**

இல்லற நெறியை மேற்கொண்டவனும் துறவற நெறியை மேற் கொண்டவனும் மனம் சொல் செயல் இவற்றில் தூய்மை வேண்டும் என்பதனை,

"நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்ல விளையாடும் விமலன் அகத்திலே
அல்ல செவிசத்த சாதி மனத்தையும்
மெல்லத் தரித்தார் முகத்தார் பசித்தே" - (2099)

தூய நினைவும் மொழியும் செயலும் உடையவர் உள்ளம் திருவுள்ள மாகும் என்கிறார் திருமூலர்.

**புலனடக்கம்**

மனிதனின் செயல்கள் தூய்மையாக இருக்க மனத்தூய்மை வேண்டும். புலனடக்கமே மனத்தூய்மைக்கு மூலதனம். இதனை திருமூலர்.

"அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்ததும் அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயினும் அறுத்திட்டால்
எஞ்சா திறைநிலை எய்தலு மாமே" - (1988)

புலன்களை அடக்கினால் தெய்வத் தன்மை பெறலாம் என்கிறார்.

**ஞானத்தின் மேன்மை**

ஞானத்தில் சிறந்த மனிதர்களே மனிதரில் உயர்ந்தோராவர் என்கிறார் திருமூலர்.

"ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று

ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே - (1440)

ஞானத்தைக் காட்டிலும் சிறந்த அறவழி நாட்டில் இல்லை. ஞானத்தைக் கற்பிக்காத சமயம் சரியான சமயம் இல்லை. ஞானத்துக்கு புறம்பான எந்தவழியும் மனிதனுக்கு முக்தியைத்தராது என்கிறார்.

**உடலை ஓம்புதல்**

மனிதன் மற்ற எல்லாத் தேவைகளைக் காட்டிலும் உடம்பு உயிர் மனம் இம்மூன்றையும் ஓம்புதலே தலையாய தேவையாகும்.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவார்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே" - (704)

நல்ல மனக் கட்டுப்பாட்டைக் கொடுத்து மனோபலத்தை அதிகரிக்கச் செய்வது யோகாசனம். திருமூலர் பத்மாசனம், பத்திராசனம், குக்குடாசனம், சிம்மாசனம் ஆகிய நான்கு ஆசனங்களின் செய்முறையை பாடியிருக்கின்றார்.

"பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி
சொத்திகம் வீரம் சுகாதனம் ஓரேழும்
உத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலவா சனமே" - (545)

ஆசனங்கள் நிறைந்த எண்ணிக்கையுடையன என்கிறார்.

**மரணத்தை வெல்லுதல்**

சுவாசங்கள் குறையக் குறைய ஆயுள் அதிகரிக்கும் என்பது தெளிவானதாகும்.

"ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே" - (553)

காற்றை ஏற்றி இறக்கும் கணக்கை அறிந்து கொண்டால் மரணத்தை வென்று விடலாம் என்கிறார்.

"மூன்று மடக்குடைப் பாம்பிரண்டு எட்டுள
ஏன்ற இயந்திரப் பன்னிரண் டங்குலம்
நான்றவிம் முட்டை இரண்டையும் கட்டியிட்டு
ஊன்றி இருக்க உடம்பழி யாதே" - (708)

கவனமாக முறையோடு செய்யப்படும் மூச்சுப் பயிற்சிகளினால் உடம்பு அழியாது என்கிறார்.

**குரு**

குருவின் மேன்மையைக் குறித்து பாடும் பொழுது,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருமேனி தீண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே" - (183)

என்று குருவின் உயர்வைப் பாடுகிறார்.

"தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந்தானே" - (2315)

தன்னைத் தான் அறிந்து கொள்கின்ற அறிவைச் சீடனுக்கு கொடுத்து தன்னைத் தன்னாலே உயர்த்திக்கொள்ள ஒரு முறையான கல்வியைக் கற்பிக்கிறார் குருவானவர்.

"அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி" - (2317)

தனியறிவின் வடிவாக தன்னை மாற்றியவர் குருவே என்று குருவின் உயர்வை எடுத்துக் கூறுகின்றார்.

**முக்தி**

தனக்குள் இருக்கும் பேரின்பத்தை மனிதன் அறியத் தொடங்கி விட்டால் இப்பூமியில் அவன் தெரிந்து கொள்வதற்கு எதுவுமில்லை. இவ்வுலகப் பொருட்களின் மீதும் அவனுக்கு பற்று அறுந்து போகும், என்பதனை

"தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந்தானே" - (2315)

என்னும் பற்றற்ற மனிதன் இறைநிலையை அடைவான் என்பதை,

"மலமில்லை மாசில்லை மானாபி மானம்
குலமில்லை கொள்ளும் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி அன்பிற் பதித்துவைப் போர்க்கே" - (2917)

மனிதர்கள் தன்னலமற்ற பற்றற்ற வாழ்வை மேற்க்கொண்டு தெய்வ மாகலாம் என்கிறார் திருமூலர்.

**முடிவுரை**

திருமூலர் விதியைப் பற்றிய நம்பிக்கையை ஏற்படுத்துவதின் மூலம் மனிதனை தீமை செய்வதிலிருந்து தடுக்கிறார். உடம்பு உயிர் இளமை செல்வம் அனைத்தும் நிலையற்றது. ஆதலால் தம்மிடம் உள்ளவற்றைப் பிறருக்கு கொடுத்துதவ வேண்டும் என்கிறார். உடல் உறுப்புகளையும் அவற்றின் செயல்பாட்டையும் சில மருத்துவ முறை களையும் கூறியுள்ளார். இல்லற வாழ்வில் இணைபவர்கள் அனைத்து பொருத்தங்களையும் பெற்று மனத் தூய்மையுடன் புலனை அடக்கி ஆள வேண்டுமென்கிறார். யோகாசனம் மூலம் உடலைப் பாதுகாத்து. மூச்சுப் பயிற்சி மூலம் மரணத்தை வெல்லலாம் என்கிறார். குருவே உயர்ந்தவர். தனக்குள்ளிருக்கும் பேரின்பத்தை அறிந்து கொண்டால் இறை நிலையை அடையலாம் என்று வாழ்க்கைக்கு தேவையான அனைத்தையும் அறிவுறுத்திச் சென்றுள்ளார்.

# 9. திருமந்திரத்தில் சைவ சித்தாந்தம்

அருட்கவி கு. இராமு, சென்னை.

திருமந்திரம் என்பது திருமூலரால் எழுதப்பட்டது. இவர் ஆண்டுக்கு ஒரு பாடல் வீதம் 3000 பாடல்களைப் பாடியுள்ளார் என்பது வரலாறு ஆகும். இவர் திருவாவடுதுறை ஆதினத்தில் உள்ள சிவாலயத்தின் மேற்கு மதிற்பகுதியில் அமர்ந்து சிவயோகம் செய்துள்ளார். இதை நாம் உணர்ந்திடும் வகையில் அமைந்துள்ள சேக்கிழாரின் பாடல்வரிகளைக் காணலாம்.

"மான் உடம்பில் பிறவிவிடம் தீர்ந்து உலகுத்தோர் உய்ய
ஞானம்முதல் நான்குமலர் நல்திருமந்திர மாலை
பான்மைமுறை ஒர்ஆண்டுக்கு ஒன்றாகப் பரம் பொருளாம்
ஏனஞுயிறு அணிந்தாரை ஒன்று அவன்தான்னெ எடுத்து
முன்னிய அப்பொருள்மாலைத் தமிழ் மூவாயிரம்சாத்தி (26)

மன்னியமூவாயிரத்து ஆண்டு இப்புவியில்
மகிழ்ந்து இருந்து" (27)

எனவே மேலும்

"சிவன் ஆவடுதண்துறை சேர்ந்தேன்
சிவபோதியின் நிழல்" (79)

என்றும்

"ஒப்பில் ஏழுகோடியுகம் இருந்தேன்" (74)

என்றும் திருமூலர் அருளிச் செய்தமைக்கும் இவ்வுண்மைக்கும் அகச் சான்றாக அமைந்துள்ளது.

இதனை இவர் கயிலையில் இருந்து புவிக்கு வருகையில் "மந்திர மாலிகா" என்னும் வடமொழிநூலைக் கொண்டுவந்து தமிழ்படுத்தினார் என்றும் கூறுகின்றனர். அது சரியல்ல என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

"நந்தியருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாலேதென் செய்யும் நாட்டினில்
நந்தி விழிகாட்ட நான் இருந்தேனே" (68)

தாம் நந்தி மரபில் வந்தவர் என்பதையும் சுட்டியுள்ளது வெள்ளிடை மலையே.

இதனை அவர் ஒன்பது தந்திரங்களாகச் செய்துள்ளார். சைவ ஆகமப் படியாய் சிவனிடம் நந்தியம் பெருமான் பெற்ற ஆகமங்கள் ஒன்பதாகும். இது ஒரு சிறந்தசான்று.

"ஆகமம் ஒன்பான் அதிலான நூல்ஏழு" (1429)

திருமந்திரப்பாடல் மூலம் தெளிவாக்கப்பட்டுள்ளது. அவை, "கரணம், காமியம், வீரம், சிந்தம், வாதுமை, வியாமளம், உத்தரம், சுப்பிரம் மற்றும் மகுடம் என்ற ஒன்பது ஆகும். (தி.ம.பா. 63)

ரிக், யஜிர், சாம, அதர்வணம் என்ற வடமொழி வேதங்கள் தோன்று வதற்கு முன்னரே திருமந்திரம் தோன்றியுள்ளது. வடமொழி எழுத்தேது மில்லை இதில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு மறை களையே குறிப்பிடுகிறது என்பதற்கு ஒரு சான்று.

"வேதத்தின் ஓதத்தகும் அறம் எல்லாம்உள"

அதுபோலவே திருக்குறளும் சைவாகமத்தில் உள்ள சித்தாந்தக் கருத்துக் களையே பிரதிபலிக்கின்றன என்பதும் உள்ளங்கை நெல்லிக்கினியே.

திருமந்திரத்தைப்போன்றே திருக்குறளிலும் அறம், பொருள், இன்பம் உள்ளது. அதனை உணர்ந்திட்டால் வீடுபேறு அடையலாம் என்ற சைவசித்தாந்தக் கூறுகளை எடுத்தியம்புகின்றன.

திருமந்திரம் நாற்சீர் அடி நான்கு கொண்டு விளங்கும் கலிவகை யாப்பினால் ஆனவையே. இதனை "யாப்பு" எனவும் "யாழ் நூல்" எனவும் செப்புகின்றனர். இதற்கு மூலர் வழங்கிய பெயர் "திருமந்திரமாலை" என்பதாகும். இது சேக்கிழார் கூறியுள்ள பாடல்மூலம் தெளிவாகிறது.

"ஞானம்முதல் நான்கு மலர் நன்றிருமந்திர மாலை" என்று குறிப்பிடப்பட்டுள்ளது சிறப்பு அம்சம் அன்றோ. "தமிழ்மூவாயிரம் என்பர் முன்னிய அப்பொருள்மாலை தமிழ்மூவாயிரம் சாந்துனெகிறது பெரிய புராணம்.

"திருமந்திரம்" என்ற சொல்லுக்குத் தொல்காப்பியர் தரும் விளக்கம்.

"நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்று விளக்கியுள்ளதிலிருந்து தெளிவாகிறது. இக்கருத்தினை வெளிப் படுத்தும் விதமாகவே திருக்குறளிலும் ஒரு செய்தியாக வந்துள்ளது.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" (குறள்)

இதில் இவர் அகப்பற்று, புறப்பற்று என்பதை நீக்கி ஐம்புலன்களையும் அடக்கி எவ்வுயிர்க்கும் அருளுடையவராய் திகழ்த்தோங்கும் பெரியவர் ஆவார்.

திருமூலர் திருமந்திரத்தின் 18 வது பாடலில் கூறிய செய்தி

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறே"

என்று அருளிச் செய்ததன்மூலம் தெளிவாகிறது. இது ஒரு சைவ சித்தாந்தக் கருத்துக்களை உள்ளடக்கியது என்பது புலனாகிறதன்றோ.

பல்வேறு அறிஞர்கள் பலகருத்துக்களைப் பகர்ந்தாலும் அதனைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. இதிலுள்ள பொருத்தமான பாடல்கள் யாவும் சைவசித்தாந்தக் கருத்துக்களை வலியுறுத்துவதாகவே அமைந் துள்ளது தெளிவாகிறது. முதல்பகுதி 112 பாடல்கள் அதில் சில உபதேசப் பகுதியாய் வந்துள்ளன. இரண்டாம் தந்திரத்தில் புராணங்களின் வரலாறுகள் அதன் தத்துவங்களும் விளக்கப்பட்டுள்ளன. மூன்றாவது தந்திரத்தில் மனதை ஒருமுகப்படுத்தி இறைவனோடு உயிரை ஒன்றாக்கி ஒடுக்குவிக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளன. அதனை யோகத்தின் வாயிலாக செய்யப்பணிக்கப்பட்டுள்ளன. நான்காம்தந்திரம் திருவைந் தெழுத்தைப் பற்றிய செய்திகளைப் பெருமைபடுத்தும் வகையில் மிக அருமையாகப் பேசப்பட்டுள்ளது. வழிபடவேண்டிய பல்வேறு கோணங் களையும் அதில் விவரிக்கப்பட்டுள்ளது.

ஐந்தாம்தந்திரத்தில் சரியை, கிரியை, யோகம் மற்றும் ஞானம் என்னும் நால்வகை சைவவாகமக் கருத்துக்களை இது வெளிப்படையாக எடுத்துரைத்துள்ளது. கடைபிடிக்க வேண்டிய முறையும் போதிக்கப் பட்டுள்ளன.

ஆறாம்தந்திரத்தில் ஒருவருக்கு குருவருளும் திருவருளும் உதவி யாகும் என்ற கருத்தினை கூறியுள்ளார். தவம், சிவவேடம், திருநீறு ஆகியவற்றைப்பற்றி விளக்கப்பட்டுள்ளது.

ஏழாந்தந்திரத்தில் சிவலிங்கங்களின் பல்வகையான நிலைகள் சிவபூசை, குருபூசை, மகேஅவரபூசை, ஆகியவனபற்றி விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

எட்டாம்தந்திரம் இதில் மனிதர்களுக்கு ஏற்படும் ஐந்து அவத்தை களைப்பற்றியும். முக்திகளின் வகைகளைப்பற்றியும் மகாவாக்கியத்தின் உண்மைப்பொருளும் இதில் காணப்படுகின்றன.

ஒன்பதாம் தந்திரத்தில் தூலசீரம், பஞ்சாக்கரம், சூக்குமபஞ்சாக்கரம், அதிசூக்கமபஞ்சாக்கரம் பற்றிய விளக்கங்களை விரிவாக வகைப்படுத்தி யுள்ளார். கூத்தின் சிறப்பும் இதில் அடங்கும். இதில் பல உண்மைகளை ஆக்குமமாகவும் மிகவும் ரகசியமாகவும் வெளியிடப்பட்டுள்ளன. மேலெழுந்தவாரியாக நோக்கினால் புலனாகாது. ஆயினும் ஆழ்ந்த கன்று சிந்தித்தால் தெளிவாகும்.

### திருமந்திரங்களும் ஏனைய திருமுறைகளும்

திருமந்திரம் காலத்தால் ஏனைய திருமுறைகள் அனைத்திற்கும் அப்பால் கடந்து பலநூறு ஆண்டுகள் முன்னதாகத் தோன்றியது ஆயினும் திருமந்திரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள, கருத்துக்கள்யாவும் சைவ சித்தாந்தத்தின் அடிப்படையிலானவையே என்பது தெளிவாகிறது.

மேலும் இதில்வரும் விவரங்கள்யாவும் சைவநாயன்மார்களின் திருமுறைகளிலும் இடம்பெற்றுள்ளன என்பது வெள்ளிடைமலையே.

திருமந்திரம் ஒன்றில் உள்ள பாடல்வரியை காணலாம்

**"ஒன்றானவன் தானே! இரண்டு அவன் இன்னருள்**

**-----------------------------------**

எனத்தொடங்கி

**" சென்றான் தான் இருந்தான்.**
**உணர்ந்து ஈட்டே"**

இதுபோன்ற வரிகள் திருஞானசம்பந்தப் பெருமானின் பாடலில் காணப் படுகிறது. திருமந்திரக் கருத்துள்ளவாறே திருமுறைப்பாடல்களிலும் வருவதால் இது சைவசித்தாந்த கருத்துடன் சேர்ந்ததே எனலாம்

அப்பர் தேவாரத்திலும் வென்றான் புலன் ஐந்தும் என்று வந்துள்ளது அது திருமந்திரத்தில் "ஐந்து வென்றான்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. திருமந்திரப்பாடல் 61 உள்ள "சிவன்தன்மம்தானே சொல்கலத்து அரனாய்" என்று வரப்பெற்ற கருத்திற்கேற்றவாறு சம்பந்தருடையப் பாடல்வரியிலும் காணலாம் "அறம் கொண்டு சிவதன்பம் உரைத்த பிரான்" என்று தேவாரத்தில் வரப்பெற்றுள்ளது. இதிலிருந்து திருமந்திரம் சைவசித்தாந்ததுடன் ஒட்டியதென்பதை எவராலும் மறுக்கவோ மறைக்கவோ முடியாதபடியுள்ளன.

### திருமுருகாற்றுப்படையில் திருமந்திரம்

திருமந்திரம் 123 வது பாடலில் உள்ள கருத்துருகள் "அளித்தான் உலகு எங்கும் தானான உண்மை" என்ற கருத்தின் அடிப்படையிலான திருமுருகாற்றுப்படையின்கண் உள்ளவரியிலும் அதேகருத்து பிரதிபலிப்

பதை காணலாம். " உலகத்து ஒரு நியாகித் தோன்ற விழுமிய பெறலாம் பரிசில் நல்குமதி" (293-295)-ல் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதே.

நீலகண்ட புராணத்தில் திருமந்திரம் (130) மன்றுள் உமைகாண ஆடிடும் செவ்வானில் செய்ய செஞ்சுடர் மாணிக்கமே" என்ற கருத்துருவில் பெரியபுராணத்திலும் வரும் நீலகண்ட நாயனார் புராணத்திலும் வருகின்ற "மாதொருபாகம் நோக்கிமன்னு சிற்றம் பலத்தே ஆதியும் முடிவும் இல்லா அற்புதனிக் கூத்தாடும் நாதனார்" என இடம் பெற்றுள்ள கருத்து தெளிவாக்கப்படுகிறது.

"மாணிக்கரும்" "திருவருட்பாவில் திருமந்திரம்" என்ற கருத்தினைக் கொண்டு வள்ளலாரும் வடிவுடையம்மன் பதிகத்தில் "வடிவுடைய மாணிக்கமே" என்றும் கூறியுள்ளதும் குறிப்பிடத்தக்கது. மாணிக்கவாசகரின் சிவபுராணத்தில் திருமந்திரக் கருத்தினைக் கொண்ட வரியைக் காண முடிகிறது. "புரையற்ற பாலினுள் நெய்கலந்தாற்போல" என்ற கருத்தின் அடிப்படையிலேயே திருவாசகத்தில் "சிவபுராணம்" 46ல் கறந்த பால்கன்னலொடு நெய்கலந்தாற்போல" என்று இடம் பெற்றுள்ளதும் வெள்ளிடைமலையே.

திருமந்திரத்தில் வரும் (151) கருத்தைப்போல் அப்பர் தேவாரத்தில் "ஒன்பது வாசலும் அடைந்தன" என்ற கருத்தினையே பிரதிபலிக்கின்றது.

**சுந்தரர்தேவாரத்தில் திருமந்திரம்**

திருமந்திரம் 297ல் உள்ளபாடலில்வரும் "வழித்துணையாம் பெருந் தன்மை வல்லானே" என்னும் கருத்தின் அடிப்படையில் தேவாரப்பாடலின் வரியில் "வழித்துணையாம் மழபாடி வயிரத்தூணே" இது (6-10-10) என்றும் சுந்தரர் தேவாரத்தில் வானநாடனே வழித்துணை மருந்தே" என்று இடம் பெற்றது வெள்ளிடைமலையே.

கரூர்தேவர் அருளிச் செய்த திருமுகத்தலைப் பதிகத்தில் உள்ள 6-வது பாடலில் திருமந்திரம் 143ல் உள்ள கருத்தினைப் பிரதிபலிக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

**"மண்ணொன்று கண்டீர் இருவகைப்பாத்திரம்"**

என்பதுபோலவே வரும் கருத்துருபாடல்

**"புனல்பட உருகிமண்தழல் வெதும்பிப்
பூம்புனல் பொதிந்துயிர் அளிக்கும்
வினைபடு நிறைபோல் நிறைந்த
வேதகத்து என்மனம் நெகமகிழ்ந்த
பேரொளியே"**

என இடம்பெற்றுள்ள வரியிலிருந்து அறியமுடிகிறது.

மாணிக்கவாசகரின் பாடல் ஆசைப்பத்தில் 5ல் இடம்பெற்றுள்ள "புளியம்பழம் ஒத்திருந்தேன்" என்னும் கருத்தினை உள்ளடக்கிய திருமந்திரம் "புளியுறு புன்பழம்போல் உள்நோக்கி" என்று கூறப்பட்டுள்ளது காணலாம் திருஞானசம்பந்தர் அருளிய "வேயுறு தோளிபங்கன்" என்ற கருத்தின் அடிப்படையிலான திருமந்திரப்பாடல் "வேயனதோளி விரையறு மென்மலர் ஒயகுழலி" என்னும் 1104ல் காணலாம் திருமந்திரம் 1486ல் உள்ள "பசுபாசம் நீக்கிப் பதியுடனே கூட்டி" என்னும் கருத்து திருவாசகத்தில் "பசு, பாசம், அறுத்தருளி" என்றுள்ளது காணலாம்.

திருமந்திரம் 1604 என்ற பாடலில் வரும் பதிகம்

"மந்திரம் ஆவதும் மாமருந்து ஆவதும்
தந்திரம் ஆவதும் தானங்கள் ஆவதும்
அந்தரம் ஆவதும் தூய்நெறி ஆவதும்
எந்தை பிரான் இணையடி தானே"

இக்கருத்தினைக் கொண்டே புனையப்பட்ட திருஞானசம்பந்தருடைய தேவாரம்

"மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு
அந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில்உள்ளது நீறு
செற்றுவர் வாயுமைபங்கன் திருஆலவாயன திருநீறே"

திருமந்திரம் 2175ன் படியே "அவனஆவ அழிவன" என்ற கருத்துருவில் பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் சரிதை 736 லும் உள்ளது.

இவைபோன்று இன்னும் எத்தனையோ திருமுறைக் கருத்துக்களைத் திருமந்திர நூலில் காணமுடிகிறது என்பது வெள்ளிடைமலையே.

இரண்டிலும் சாத்திரம் மற்றும் தோத்திரக் கருத்துக்களும் ஒன்றை ஒன்றுப் பின்னிப் பிணைந்து உயிரும் உடலாக இணைந்திருக்கும் திருமந்திரமும் சைவசித்தாந்தப்பாடல்களும் அவ்வாறே உய்வுபெற்றுள்ளன.

திருமுறைகள்யாவும் சிவாகமக் கருத்தின் அடிப்படையில் வெளிப் பட்டுள்ளன. இதில் சைவசித்தாந்த கொள்கைக்கு பொருந்தியவாறே திருமந்திரமும் அமைந்துள்ளது தெரியும்.

திருமந்திரம் சிவாகமங்களையும் - திருமுறைகளையும் இணைக்கும் பாலமாகத் திகழ்ந்தோங்கியுள்ளது. மேலும் இது பொன்னால் ஆன கயிற்றில் வைரங்களைப் பதித்து ஒரு கயிறாக்கி உள்ளதுபோல் திகழ்கிறது. சாத்திர தோத்திர கருத்துக்களும் ஒளிர்வதை காணலாம்.

திருமந்திரத்தில் சிவாகமக் கருத்துக்கள் யாவும் திருமூலரால் ஒன்பது தந்திரமாய் தலைப்பிட்டு வழங்கப்பட்டுள்ளது. இதையே சைவசித்தாந்த

வித்தகர்களான சமயக் குறவர்களும் சந்தானக் குறவர்களும் உருவாக்கிய அனைத்துப் பாக்களிலும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா போன்ற வற்றிலும் ஔவை அருளிய பாக்களிலும்; திருவள்ளுவர் வழங்கிய திருக்குறளிலும் இவை திருமந்திரத்தின் ஒலியைப் பிரதிபலிப்பதாகவே அமைந்துள்ளது. அதை தொடர்ந்து திருவருட்பா, திருப்புகழ் போன்ற வற்றிலும் திருமந்திரக் கருத்துரு அடிப்படையிலேயே தோன்றியுள்ளது அறியலாம்.

திருமந்திரத்தில் ஒன்பது தந்திர இயல்கள் உள்ளன. (பாயிரம் 112 ஆகும்)

1. முதல்தந்திரம் 224 பாடல்கள்
2. இரண்டாம் தந்திரம் 212 பாடல்கள்
3. மூன்றாம் தந்திரம் 335 பாடல்கள்
4. நான்காம் தந்திரம் 535 பாடல்கள்
5. ஐந்தாம் தந்திரம் 154 பாடல்கள்
6. ஆறாந்தந்திரம் 131 பாடல்கள்
7. ஏழாந்தந்திரம் 418 பாடல்கள்
8. எட்டாந்தந்திரம் 527 பாடல்கள்
9. ஒன்பதாந்தந்திரம் 399 பாடல்கள்

சைவசித்தாந்ததில் பதினோரு இயல்கள் காணப்படுகின்றன.

கடவுள் வாழ்த்துக்கள்

1. இறை இயல்
2. உயிர் இயல்
3. தளை இயல்
4. சாதன இயல்
5. குருஉபதேச இயல்
6. ஐந்தெழுத்தின் சிறப்பியல்
7. முக்த்தியில் கூறுகள்
8. அணைந்தோர் இயல்
9. அட்டாங்கயோக இயல்
10. திருவம்பச் சக்கரம்
11. இதர செய்திகள்

மேற்குறிப்பிட்டவை போக இன்னும் ஏராளமான ஒப்பியல்கள் இரண்டிலும் காணப்படுகின்றன. இதனைத் தனியாக சிந்திக்கலாம் இதனை இவ்வாறு நினைவு செய்ய விழைகிறேன். நன்றி! வணக்கம்!

# 10. ஒன்பதாம் திருமுறையில் சில சிந்தனைகள்

திருமதி அ. இராமேசுவரி, புதுச்சேரி.

திருமுறைகள் என்றால் அவை சைவசமய இலக்கியங்களாகிய பன்னிரு நூல்களைக் குறிக்கும். சங்க இலக்கியப் பாடல்கள் தனித்தனியே பல காலங்களில் பாடப்பட்டு, பிற்காலத்தோரால் எட்டுத்தொகை, பத்துப் பாட்டு என்று பதினெட்டு நூல்களுடைய இருதொகுதிகளாகப் பாதுகாக்கப் பட்டன. அதைப்போன்று நாயன்மார்களும், பிற அடியார்களும் காலந் தோறும் பாடிய இறைநெறிப்பாடல்களை நம்பியாண்டார் நம்பி என்பவர் 11-ஆம் நூற்றாண்டில் திருமுறைகளாகத் தொகுத்தார். இவற்றை அழிவிலிருந்து மீட்டது ஒரு சுவையான வரலாறு ஆகும்.

அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகிய அடியவர்களைத் தொடர்ந்து ஒன்பதின்மர் பாடிய பாடல்கள் ஒன்பதாம் திருமுறையாக வைக்கப் பெற்றுள்ளன. அவை குறித்த சிந்தனைகளை இக்கட்டுரையில் காணலாம்.

**ஒன்பதாம் திருமுறை**

ஒன்பது அடியவர்கள் பாடிய 28 பதிகங்கள் ஒன்பதாம் திருமுறை யாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவர்கள் கி.பி. 10-11-ஆம் நூற்றாண்டு களில் வாழ்ந்தவர்கள் ஆவர்.

**1. திருமாளிகைத் தேவர்**

இவர் திருவாவடுதுறையைச் சார்ந்தவர். 11-ஆம் நூற்றாண்டினர். இவர் நான்கு திருவிசைப்பாப் பதிகங்களைத் தில்லையில் பாடினார். இவர் போகர் என்ற முனிவருக்கு மாணவராய் அமர்ந்த பெருமை உடையவர். இவரும் சேந்தனாரும் சமகாலத்தவராவர். பிற சமயங்களை இழித்துரைக் கின்றார். பிணத்தை நடக்கச்செய்ததாகவும், வெந்த பயிறைச் முளைக்கச் செய்ததாகவும் கூறுவர்.

**2. சேந்தனார்**

இவர் திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய தலங்களுக்குச் சென்று திருவிசைப்பாக்கள் பாடியுள்ளார். இவரது திருவிசைப் பாக்கள் புகழ்பெற்றவை. பட்டினத்தடிகளிடம் பணிபுரிந்தவர். தில்லையில் விறகு விற்றுக் கிடைக்கும் பணத்தில் அடியாருக்கு உணவளித்தவர். சிவன் இவரிடம் அன்பால் கூழினை உண்டு மகிழ்ந்ததாகக் கூறுவர்.

**3. சேதிராயர்**

இவர் திருக்கோவிலூர்ப் பகுதியில் சேதிநாட்டைச் சேர்ந்தவர். மன்னர் மரபைச் சார்ந்தவர். அகப்பொருள் கொண்ட தில்லைப் பதிகம் பாடியவர். மெய்ப்பொருள் நாயனார் மரபினர். தில்லை நடராசர் மீது திருவிசைப்பாப்பாடியுள்ளார்.

**4. கண்டராதித்தர்**

10-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த பராந்தகச் சோழனின் மகனாக இவர் கருதப்படுகிறார். இவர் திருவிசைப்பாக்கள் பல பாடியுள்ளார். சோழ வரலாற்றில் புகழ்பெற்ற செம்பியன் மாதேவி இவரது மனைவியார். முதலாம் ராசராசனின் தாத்தாவும் உத்தமசோழனின் தந்தையுமாவார்.

**5. பூந்துருத்திநம்பி காடவநம்பி**

இவர் முதலாம் இராசராசன் காலத்தவர். திருப்பூந்துருத்தியில் வாழ்ந்தவர். ஆதிசைவர் மரபினர். திருவிசைப்பாக்கள் பாடியுள்ளார். வேறு நாயன்மார் யாரும் பாடாத சாளரப்பாணிப் பண்ணைப் பாடியவர்.

**6. திருவாலி அமுதனார்**

ஆலியென்னும் ஊரில் பிறந்தவர். அமுதனார் எனும் இயற்பெயரைக் கொண்டவர். தில்லை நடராசர் மீது நான்கு திருவிசைப்பாப்பதிகங்கள் பாடியுள்ளார். ஆற்றுப்படை இலக்கியத்தைப் போன்று இறைவனைப் பாடியுள்ளார். பாதாதிகேச வருணனையில் பாடியுள்ளார்.

**7. புருடோத்தமநம்பி**

அந்தணர் மரபினர். இவர் தில்லை நடராசர் மீது இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். அகத்துறைக்கருத்துக்கள் மிகுதியாகக் கூறியுள்ளார்.

**8. கருவூர்த்தேவர்**

கொங்குநாட்டில் உள்ள கருவூரைச் சார்ந்தவர். சித்த மரபினைச் சார்ந்தவராகக் கருதப்படுகிறார். பல தலங்களுக்குத் திருவிசைப்பாப் பதிகங்கள் பாடிய சிறப்பு இவருக்கு உண்டு.

**9. வேணாட்டடிகள்**

வேணாடு என்று அழைக்கப்படும் தென்திருவாதங்கூருக்கு அரசராக இருந்தவர். தில்லை நடராசர் மீது ஒரு திருவிசைப்பாப்பதிகம் பாடியுள்ளார். வேணாடு என்பது நாஞ்சில் நாட்டையொட்டிய பகுதியாகும்.

சைவத் திருமுறைகள் யாவும் பிற்காலத்தார்க்குக் கிடைப்பதற்கு அரும்பாடுபட்டுத் தொகுத்துக் காத்துத் தந்தவர் நம்பியாண்டார் நம்பியாவார். மேலும், பாக்கள் இயற்றும் புலமை பெற்றிருந்தார். இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களையும் அடையாளம் கண்டு, திருத்தொண்டத் திருவந்தாதி என்ற அடிப்படை நூலொன்றைச் செய்தார். இதுவே பின்னர் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் எனப்படும். பெரிய புராணம் பாடக் காரண

மாயிற்று. மேலும், கோயில் திருப்பணிவிருத்தம், திருச்சண்பை விருத்தம், திருக்கலம்பகம், திருவுலாமாலை, திருத்தொகை, திருமும்மணிக்கோவை ஆகியனவும் இவர் பாடியுள்ளார்.

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற இருநூல்களும் ஒன்பதாம் திருமுறை. ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்று வகைப்படுத்தியுள்ளனர். பதிகங்களில் பெரிதும் தில்லையைப் பற்றியே உள்ளன. தென்னாடுடைய சிவனை எந்நாட்டவர்க்கும் உரியவராகக் கண்டனர். மக்கள் தாமே கற்று நன்னெறியிலொழுகிக் கடவுளை வழிபட்டுப் பேரின்பம் எய்துதற்குரியவராவர். அவ்வுண்மை கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின் திருக்குறள் எனத் திருவள்ளுவரும், மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே என மெய்கண்ட தேவரும் அருளிச் செய்தவற்றாள் உணரலாம்.

## திருவிசைப்பா

பஞ்சமம், காந்தாரம், புறநீர்மை, சாளரபாணி, இந்தளம் போன்ற பண்கள் பாடல்களுக்கு அணி செய்கின்றன. விளக்கின் ஒளியால் உயிர்கள் உழைக்கின்றதைப் போன்று உலப்பில்லாதவனும் உணர்வு கடந்தோருணர்வாய்த் திகழ்பவனும் பளிங்குமணிக்குன்றெனவும் சித்தத்துள் தித்திக்கும் தேன்போன்றவனும் அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனிபோன்றவனும் தெய்வக் கூத்து தந்தவனுமாகிய இறைவன் துணையால் மக்கள் உழைத்து இன்புறுகின்றனர். திருவிசைப்பாவில் ஏழு பாடல்களும், திருப்பல்லாண்டில் ஏழு பாடல்களும் அமைந்துள்ளன. அழகன், அமரசேகரன், சூலபாணியன், கனகநற்றூண், கற்பகக்கொழுந்து ஒளிவளர் விளக்கு என்று தில்லையம் பலவாணனைத் திருமாளிகைத் தேவர் போற்றுகின்றார். சேந்தனார் திருவீழிமிழலையில் எழுந்தருளியுள்ள பெருமானை, கொற்றவனை, கரையில்லாக் கருணைமாகடல் எனவும், மற்றவரியா மாணிக்கமலையெனவும், மதிப்பவர் மனமணிவிளக்கு எனவும், போற்றி உள்ளங்குளிர்கின்றார். பலகோடி சேவடி முடிகள் போற்றியும், பலகோடி திண்தோள்கள் வணங்கவும், பலகோடி நாமங்களைப் பெற்றும், அழகுடைய முக்கணான் முகமியல்பும் பலகோடி எல்லைக்கப்பால் நின்றவனும் ஆகிய திருவீழிமிழலைச் சிவனை ஐந்நூறு அந்தணர் ஏத்திவழிபட்டுப் பலகோடி குணத்தவராய் விளங்குகின்றார்.

கருவூர்த்தேவர் பெரும்பற்றப்புலியூர்ப் பெருமானைப் பிறவிப் பெருங்கடல் நீந்தும் ஒப்பற்ற துணையெனவும், அஞ்சல் என்று அருள் செய்பவனும் செஞ்சாலிக்கதிர்கள் நிறைந்த வயலும், கடைசியர் களைந்த நீலமலர்கள் செய்த வரம்பும் உடைய பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் சிவன் எனவும் அத்திருச்சிற்றம்பலமே உலகின் ஒப்பற்ற துணையெனவும் போற்றி வழிபடுகின்றார்.

மேலும், திருக்களந்தையாதித்தேச்சுரம் எனும் தலத்தில் எழுந்தருளி யுள்ள பெருமானை மகுடம், திருவாய், திருவுடம்பு ஆகியவை பவளமே யெனவும், முப்புரிநூல் தவளம் எனவும் போற்றுகின்றார். கங்கை கொண்ட சோளேச்சுரப் பெருமானை, முப்புரம் எரித்தவனும், நெருப்பில் காய்கின்ற பால் கலவாத நீர்போல், பாவமறைந்து பாலனைய புண்ணியம் பின் சென்றறிவினுக்கு அறியப்புகுத்த, யோகத்தில் பொலிந்த நுண்மையை யுடையவனே, தானே வந்து கண்மணியில் கலந்தவனே என்றும் போற்றுகின்றார்.

திருப்பூந்துருத்தி நம்பி காடவநம்பி தில்லைவாணனை சத்தியாய், சிவமாய் விளங்குபவன் எனவும், உலகெலாம் படைத்த தனிமுழுமுதலு மாவான், அதற்கோர் வித்துமாவான், திருவாரூரில் ஆதிவிடங்கராய், நடராசப் பெருமானாய் விளங்கும் சிவபெருமான் எனப்போற்றுகின்றார்.

கண்டராதித்தர், வெங்கோல் வேந்தன் தென்னனும், செங்கோற் சோழனும் போற்றும் தில்லையம்பல ஈசனை என்றுகொல் எய்துவது எனப்போற்றுகின்றார். திருவாலியமுதனார் இறைவனை நீர்கொண்டு, மலர்கொண்டு தொழுது ஏத்துபவர்கள் மனத்தில் அன்புகொண்டு வணங்கு பவர்கள். இறைவனடியைப் பொருந்துவர் எனக்கூறுகின்றார். தென்னன் தமிழும் இசையும் கலந்து சிற்றம்பலத்து ஆடும் பெருமானைப் போற்றுவர். சமணர்களாலும் சாக்கியர்களாலும், குற்றமுடைய தவத்தோர்களாலும் அடைய முடியாத தில்லைச் சிற்றம்பலத்தானை இசையால் பாடிப் பெருமானைக் காணலாம்.

சேதிராயர் என்பார் தில்லை நாயனாரை உள்ளன்போடு வழிபடுவார் எல்லையில்லா இன்பமடைவர்.

"ஏயுமாறெழிற்சேதியர் கோன்தில்லை
நாயனாரை நயந்துரை செய்தன
தூயவாறுரைப்பார் துறக்கத்திடை
ஆய இன்பமெய்தியிருப்பரே"

எனக்கூறுகிறார் திருமாளிகைத் தேவர்.

"ஒளிவளர் விளக்கே உலப்பிலாமணியே
உணர்வுசூழ்கடந்தோருணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக்குன்றே
சித்தத்துள் தித்திக்குந்தேனே
அளிவளர்உள்ளத் தானந்தக் கனியே
அம்பலம் ஆடரங்காக
வெளிவளர் தெய்வக்கூத்துகந்தாயைத்
தொண்டனேன் விளம்புமாவிளம்பே"

என்று பாடுகிறார்.

**திருப்பல்லாண்டு**

இதில் பயிலப்பெறும் ஏழு பாடல்களும் பல்லாண்டு கூறுதுமே என்ற வரியுடன் முடிகின்றன. தில்லையம்பதியைப் போற்றி, அப்பதியுள் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானைப் போற்றுகின்றார். வஞ்சனை செய்பவர்கள் நீங்க, அன்பர்கள் அனைவரும் பொன்மண்டபத்தில் புகுந்து உமையிடைப் பாகரின் அருளைப் பெற்று பிறவியெனும் தளைநீக்க வழி தந்த பித்தனைப் பல்லாண்டு பாடுவோம் எனக் கூறுகின்றார். மெய்யடியார்கள் விரைந்து

"அண்டங்கடந்த பொருள் அளவில்லாதோர்
ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ள
பொருளென்றே பல்லாண்டு கூறுதுமே"

எனக் கூறுகிறார்.

சொற்களெல்லாம் ஆட்சிபுரியும் வேதப் பொருளைப் பெற்ற மெய்யடி யார் அற்பமான தேவர்நெறிசாராது, வில்லாண்ட விடைப்பாகர், பல்லாண் டென்னும் பதம் கடந்தானுக்குப் பல்லாண்டு பாடுவோம் எனப் போற்றுகிறார். சிவலோக நாயகன் தன்னடிக்கீழ்ப் பணிவார் இம்மை யுலகமும், மறுமை யுலகமும் பரிசாய்ப் பெறுவர். திருஞானசம்பந்தருக்குப் பாற்கடல் ஈந்தபிரான், திருமாலுக்குச் சக்கரம் அருளியவன், தில்லை நகரில் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்பலமேயிடமாகக் கொண்டு நடனம் பயிலுபவன் என்றெல்லாம் போற்றுகின்றார்.

அப்பதியிலேயே கேட்கப்படும் ஒலிகளைப் பின்வருமாறு கூறுகிறார்.

"குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மி மிகு திருவாரூரின்
மழவிடையாற்கு வழிவழி யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடியாரொடும் கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே"

தந்தையும் தாயும் சுற்றமும் அமுதமும் தலைவனும் ஆன சிவபெருமான் சிந்தையினுள் விளங்கும் சிவன், அடியவர் நன்றியுணர்வுடன் போற்றும் எல்லையில்லா ஆனந்தச் சேந்தன் என்று சிவனுக்குப் பல்லாண்டு கூறுகின்றார்.

இங்ஙனம் எளிமையான பதங்களும் இனிமையான பண்களும் பொருந்தித் திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் அருட்செல்வத்தை வாரிவழங்குகின்றன. இன்னும் கோயில்களில் வழிபாட்டுக்குரியனவாகத் திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் இசையோடு பாடப்படுகின்றன. நாயன்மார்களின் தேவாரத்திற்கு அடுத்தபடியாக உருக்கமான பக்திச் சுவை நிரம்பிய பாடல்களாக அவை போற்றப்படுகின்றன. திருமுறைகள் காக்கப்பட்டு வளர்வதற்குச் சோழமன்னர்களின் ஆதரவே பெருங்காரண மாகும். கோயில்களில் முறையாகப் பாடல்களைப் பாடுவதற்காக இசை தேர்ந்த பக்தர்களை ஏற்படுத்தி அவர்களுக்குத் தக்க மானியங்களைச் சோழ மன்னர்கள் வழங்கினார்கள். இன்றும் பல கோயில் கல்வெட்டுக் களில் அந்த மானியங்களைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

# 11. திருமந்திரத்தில் சக்கரங்கள்

முனைவர் கே. ஏ. இராஜு, திருவொற்றியூர்.

"உலகெலாம்" எனத் தொடங்கும் பெரிய புராணத்தின் ஆசிரியராம் தெய்வச் சேக்கிழார்,

ஊனுடம்பிற் பிறவிடந் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயி றணித்தாரை" ஒன்றவன்தான்" எனஎடுத்துத்

தமிழ் மூவாயிரஞ் சாத்தி மன்னிய மூவாயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்தார் எனத் திருமூல நாயனாரைப் போற்றுவார்.

அவ்வாறு, திருமூலர் அருளிய தமிழ் மூவாயிரமாந் திருமந்திரம் பத்தாம் திருமுறையாய் ஒளிர்கிறது. "மந்திரமாலை" என மற்றொரு காரணப் பெயரும் இதற்கு உண்டு.

திருமந்திர நூல் 'மந்திரமாலை' என அழைக்கப்பெறுவதற்குக் காரணம் அதில் காணப்பெறும் மறை மொழிகளேயாம்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்று தொல்காப்பியம் பேசும்.

"நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

என்னும் குறளையும் நாம் அறிவோம்.

**மறைமொழி என்பது மந்திரச் சொற்களாம்**

இறைவனைப் பற்றிய நூல்களைப் புகழ் நூல், பொருள் நூல் என இருவகையாகக் கொள்ளலாம். தோத்திர நூல்கள் யாவும் புகழ் நூல்களாகவும், சாத்திர நூல்கள் யாவும் பொருள் நூல்களாகவும் வழங்கப் பெற்று வருகின்றவையாம். திருமந்திர நூல் சிறந்த சாத்திரக் கருத்துகள் நிறைந்த பொருள் நூலாக விளங்குவதுடன் தோத்திரமுமாகிப் புகழ் நூலாகவும் கருதுவதற்கு இடமளிப்பதாய் உள்ளது. இதனை,

"திருக்கோவில் செல்வார் திருமந் திரநூல்
உருக்கமுடன் கொண்டு சென் றோதின் - பெருக்க

**உறமுதலாம் நான்கும் அருள் முதலாம் ஐந்தும்**
**உறவருள்வன் முக்கணிறை ஓது"**

என்னும் பாடல் வழி உணரலாம்.

திருமந்திரத்தில் உள்ள ஒன்பது தந்திரங்களில் நான்காம் தந்திரமாவது அசபை முதலாக நவாக்கரிச் சக்கரம் ஈறாகப் பதின்மூன்று பிரிவுகளுடன் விளங்குவதாகும். ஆன்மாக்கள் யாவும் இறைவனையுணர்ந்து அவனிடம் தம்மையிழப்பதாகிய வீடுபேற்றைச் சொல்லுவதாய் அமைந்ததாகும்.

காலச் சக்கரம் முதலா நவாக்கரிச் சக்கரம் ஈறாக உள்ள எண்வகைச் சக்கரங்கள் திருமந்திரத்தில் பேசப் பெறுகின்றன. அனைத்துச் சக்கரங்களும் மானிடர்களின் நலன் கருதியே அமைக்கப் பெற்றவையாகும். சக்கரங்கள், ஆசனங்கள், மந்திர அமைப்புகள் அடங்கிய உட்தலைப்புகளின் சிறப்பு திருமந்திரநூலின் பெருமையை மேலும் எடுத்துக் காட்டுவனவாம். இவைகளில் அடங்கிய மறைமொழிகள் யாவும் கருத்துத் தேடலுக்குக் காரணமாகி நம் சிற்றறிவின் எல்லையை உணர்த்துவதாய் உள்ளதெனில் மிகையன்று. பொருளுணர்ந்த சான்றோர் வழிகாட்டலால் உலகிற்குப் பெரும் பயன் அளிப்பது எண்வகைச் சக்கரங்கள் மற்றும் ஆசனங்களின் சிறப்பாகும்.

**இறைநிலைக்குரிய படிநிலைகள்**

ஒவ்வொரு ஆன்மாவும் இறைநிலை அடைவதற்கான படிநிலைகளாகச் சீலம் (சரியை) நோன்பு (கிரியை) செறிவு (யோகம்) அறிவு (ஞானம்) ஆகியவை குறிப்பிடப் பெற்றுள்ளன. அவற்றுள் உடம்பிற்குரிய கருவிகளின் துணை கொண்டு செயல்படும் யோக நெறியைக் குறிப்பிடுகையில்,

**யோகச் சமயமே யோகம் பலவுன்னல்**
**யோக விசேடமே அட்டாங்க யோகமாம்**
**யோக நிர்வாணமே யுற்ற பரோதயம் (சிவத்தோற்றம்)**
**யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே-**

என்று, யோக முறைகள் பலவானவற்றை நினைத்தல்; யோகத்தில் உள்ள எட்டு உறுப்புகள்; முழுமுதல் சிவம் தோன்றல்; சித்தி பெறுதல்; ஆகியவற்றை எடுத்துச் சொல்கிறது.

அதே போன்று ஞான நெறியில் உள்ள சமய, விசேட, நிர்வாண, அபிடேக நிலைகளாக ஆன்மாக்கள் தன்னைக் காண்பது; சிவனைக் காண்பது; திருவருள் வீழ்ச்சி; திருவடிமறவாமை, ஆகியனவும் அடங்கியுள்ளன.

சமையம் மலசுத்தித் தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி
சமைய நிருவாணங் கலா சுத்தி யாகும்
அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே

என்னும் மந்திரம் சைவத்திலுள்ள தீக்கைகளை விவரித்துப் பேசுகிறது. சரியை நெறியில் செல்பவர் பத்தர் ஆகவும், கிரியை நெறியில் செல்பவர் தொண்டராகவும் கருதப்பெறுவர். ஆன்மாக்கள் தம்மை இறைவனுக்கு அடிமையாக்கிக் கொண்டு வழிபாட்டினைச் செய்யும் நிலையில் சரியை யாளருக்கும் கிரியையாளருக்கும் திருஉருவ அமைப்பு இன்றியமையாத தாகும். இங்கு பயன் அளிப்பன ஐந்தெழுத்து மந்திரமாகிய நமசிவய, சிவயநம எனப்பெறும் வழிபாட்டுத் திருவுருவங்களாகிய சொல்லுருவ மந்திரங்களாம். இவைகளடங்கிய பொருள் உருவ அமைப்பாய் அமைவது சக்கரங்களாகும். சிவபத்தன் இதனைத் திருமுறையில் கூறியபடிச் சீலம், நோன்பினைச், சிறப்பாய்ச் செய்யவும்-திருவருள் துணை செய்ய யோகம், பின்னர் குருவருளால் சிவத்தன்மையும் அடைபவனாவான்.

**திருமந்திரம் பேசும் சக்கரங்கள்**

உடம்பைப் பயன்படுத்திச் செய்யும் யோக நிலையில் ஆறு சக்கரங்கள் குறிப்பிடப்பெறுகின்றன. உடம்பின் மத்தியப் பகுதியில், மூலாதாரச் சக்கரத்தில் உள்ள பாம்பு வடிவக்குண்டலினியை எழுப்பிப் பிற சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை வழியாகத் தலையில் உள்ள மிகவும் இன்றியமையாததாகிய சஹஸ்ராரத்தை அடையச் செய்யும் நிகழ்வு நடைபெறுகிறது.

திருமூலரால் கூறப்பெறும் திருமந்திரச் சக்கரங்களோ, ஓர் ஆன்மா இறைத்தன்மையை அடைவதற்காகவே புறவெளியில் அகண்ட ஆகாய வெளியில் அவை அமைந்திருப்பதை வெளிப்படுத்துவதாகும். அதன் உருவ வடிவஅமைப்பையே திருமந்திரத்தில் நாம் அறியலாகிறோம்.

**அசபை மந்திரமும் சக்கரங்களும்**

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன் அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன் நம் பிரான்ஓர் எழுத்தே

என்னும் மந்திரம், பேசா எழுத்தாகிய 'சி' கரம்; அதனை உணர்வால் உணர்ந்து ஓதுதல்; ஆன்மா இறைவன் திருவடியைக் கூடுதலாகிய சிவயோகத்திற்கு வேண்டத்தக்க சக்கரம்; ஓங்காரமாம் ஒண்மறை ஆகியவற்றைக் கூறுவதாகத் திருமூலரால் அமைக்கப் பெற்றதாம்.

அசபை மந்திரமாவது ஓரெழுத்து மந்திரமாகக் கூறப் பெறுவதாகும். அதற்கு ஒப்பான மந்திரம் வேறு ஏதுமில்லை என்பது அறியத்தக்கதாகும். சக்கரங்களில் உள்ள மந்திர எழுத்துகளுக்கு அடிப்படையாவது அசபை மந்திரம்.

'சிவ' என்னும் மந்திரம் இரண்டனுள் எல்லாம் அடங்குவனவாம் என்னும் அனைத்து மந்திரங்களும் சிவனின் திருமேனியேயாம் என்பதை,

**"இருக்கின்ற மந்திரஞ் சிவன்திரு மேனி"**

என்னும் மந்திர அடிகளால் உணரலாம்.

இணைந்திருக்கும் அம்ச மந்திரமாகிய 'சிவ' என்பதின் விரிவே ஓங்கார பஞ்சாக்கரங்கள்.

## திருமந்திரத்தில் சக்கரங்கள்

திருமந்திரத்தில், காலச் சக்கரம் முதலாக எட்டுச் சக்கரங்கள் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன. அவற்றில் முதன்மையானதும், மேன்மையானதுமாய் விளங்கும் சக்கரம் திருவம்பலச்சக்கரம் ஆகும். இதனைச் சிதம்பரச் சக்கரம் எனவும் கூறலாம். அசபை என்னும் பேசா எழுத்து மந்திரத்தைக் கூறப் புகுந்த திருமூலநாயனார் அஞ்செழுத்து அருட்கூத்தையும் திருவம்பலச்சக்கர அடிப்படையையும் இணைத்து விளக்குவதன் மூலம் திருவம்பலச் சக்கரத்தின் முன்மைத் தன்மை உணரப் பெறும்.

பிற சக்கரங்களானவை, திரிபுரைச் சக்கரம், ஏரொளிச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதிச் சக்கரம், நவாக்கரி சக்கரம், காலச் சக்கரம் வயிரவச் சக்கரம் என்பவையாம்.

இவற்றில் மிகவும் இன்றியமையாத திருவம்பலச் சக்கரம், சாம்பவி, நவாக்கரி, திரிபுரை, வயிரவச் சக்கரங்களைப் பற்றிச் சிறிதே உணர முயற்சிப்போமாக.

## திருவம்பலச் சக்கரம்

இறைவனின் திருநடனத்திற்குரியயிடமாகச் சிற்றம்பலம் விளங்குகிறது. அதுவே சிதம்பரம், திருவம்பலம் எனவும் பெறும். இங்கு பொன்னம்பலத்தில் இடையறாது திருவைந்தெழுத்தின் அருள்கூந்து விளங்கும். இத்தகைய சிதம்பர நடனத்திற்குச் சிவபெருமானுக்கென்று திருமூலர் அமைத்த சக்கரமே திருவம்பலச் சக்கரமாகும். சிவபெருமானின் ஐந்து வகைத் தாண்டவத்திற்கும் அடிப்படையாய் இஃது விளங்கும். சிவபெருமான் ஐந்தெழுத்தாகவே விளங்குவதால் திருவம்பலச் சக்கரமும் திருவைந்தெழுத்தால் அமையப் பெறும்.

பஞ்சாக்கரத்தால் அமைக்கப்பெற்று நிலைபேறு பெற்ற இத் திருவம்பலச் சக்கரத்தால் எல்லா உலகும் நிலைபேறுடையனவாகும். திருவம்பலச் சக்கரத்துடன் ஐந்தெழுத்தாய் அமைந்துள்ள சிவபெருமானைச் சக்கர வழிபாட்டில் வழிபட்டதால் நந்திதேவர் கயிலையின் காவலைப் பெற்றார். இதனை,

"கன்றதுவாக் கறந்தனன் நந்தியுங்
குன்றிடை நின்றிடுங் கொள்கைய னாமே"

என்னும் பாடல் மூலம் அறிகிறோம்.

**அமைப்பு முறையும் அதில் திருவருள் திகழ்ந்து விளங்கும் சிறப்பும்**

திருவம்பலச் சக்கரத்தின் அமைப்பையும் சிறப்பையும்,

திருவம்பலமாகச் சீர்ச் சக்கரத்தை
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமாக இருபத்தைஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே

என்னும் மந்திரம் எடுத்தியம்புகிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |

என இருபத்தைந்து அறைகளில் திருவைந்தெழுத்தை முறையாக அமைத்துக் காதல் மிக மனதில் நினைந்திருத்தல் வேண்டும். அதன் பயனாகப் பிறப்பு நீங்கும்; திருவம்பலக் கூத்தை உணரலாம்; திருவடிப் பேறு கிடைக்கும்.

இதனுடன் இணைந்து மேலும் பதினொரு அறைகள் உண்டாக மேலும் கோடுகள் வரைந்து முப்பத்தாறு அறைகளை உண்டாக்கி நடுவில் ஓர் அறையில் 'சி' கரமாகிய இறைவன் வீற்றிருக்க அமைக்கவும் பெறும். 36 தத்துவங்களையும் நினைவுப்படுத்தும் சக்கரமாயும் இஃது அமையும்.

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மலமாய் வருமுப் பூதத்திற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்
யகாரம் உயிரென் றறையலு மாமே.

என்னும் மந்திரப் பாடலில்,

'அ' காரம் உயிர் - ஆன்ம தத்துவம் 24
'உ' காரம் பரம் - சிவ தத்துவம் -5
'ம' காரம் மலம் - வித்தியா தத்துவம் -7

விளக்கம் பெறுகின்றன.

மேற்குறிப்பிடப் பெற்றுள்ள இருபத்தைந்து அறைகளில் நடுவாகத் தோன்றும் எழுத்து, சிறப்பென்னும் செம்பொருளாம் சிவமாகும். பிற வ, ய, ந, ம என்பவை சேர்ந்து இறைவனின் திருப்பெயராய் அமையும். இந்நான்கெழுத்திலும் 'சி' கரம் உடன் நிற்கும்.

சிதம்பரச் சக்கர நடுவில் விளங்கும் 'சி' கரமாகிய ஈசனை மனித வடிவில் காட்டும் வடிவமாகத் தோன்றும் எழுத்து முறையும் திருவம்பலச் சக்கர அமைப்பில் உள்ளதாகும்.

அஃது,

**மகார நடுவே வளைத்திடுஞ்சத்தியை**
**ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி**
**அகாரந் தலையாய் இருகண் சிகாரமாய்**
**நகார வகார நற் காலது நாடுமே.**

என்னும் திருமந்திரப் பாடல் மூலம் அறிவுறுத்தப் பெறும்.

மகாரம் - நாதம், ஒகாரம் - சத்தி, 'அ'கரம் - தலை, சிகரம் - கண்கள் 'ந' காரமும், 'வ' காரமும் கால்கள் எனக் கொள்ளப்பெறும்

இதுபோன்ற திருவைந்தெழுத்தில் நுண்மையான 'சிவயநம' மந்திரத்தை நான்குமுறை எழுத்துக்களை மாற்றி அமைத்துத் திருவம்பலச் சக்கர அறைகள் இருபத்தைந்திலும் திருவைந்தெழுத்து அமைந்திருக்கும் முறை; 'ஷ'கர எழுத்து நீங்கிய 50 எழுத்துக்கள் அறைக்கு இரண்டாக அமைக்கும் முறை; ஆகிய பிறவும் திருமந்திரப் பாடல்களில் அமைந் துள்ளன. திருவம்பலச் சக்கரத்தால் பெறப்படும் நன்மைகள் பல. அனைத்திலும் மேலானது, ஐந்தொழிலாகிய படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் ஆகிய அருளாற்றல்களேயாகும்.

**காலச்சக்கரம்**

திருமந்திரம் பேசும் யோகமுறைக்குக் காலச் சக்கரத்தில் உள்ள மந்திரங்கள் உதவுவதாக உள்ளன

**மதிவட்ட மாக வரையைந்து நாடி**
**இதுவிட்டிங் கீரா றமர்ந்த அதனாற்**
**பதி வட்டத் துள்நின்று பாலிக்குமாறு**
**மதுவிட்டுப் போமாறு மாயலுற்றேனே**

என்பது மந்திரம். இஃது.

சந்திரமண்டலத்தின் கலைகள் அறிந்து அவற்றை நீங்கிச், சிரசின் மேல் (தலைக்கு மேல்) சிவன் எழுந்தருளியுள்ள பெருவெளியில் கலந்து இன்பத்தேன் பருகவும் அதனால் உலகியல் தொடர்பு நீங்கிச் சிவனடி சேரும் அருளைப் பெற்றதாகப் பேசுகின்றது.

மேலும் உயிர்க்குரிய கண்டங்களின் வகையாக நான்கினைக் காலச் சக்கரம் கூறும். அவை 28, 33, 62, 100 ஆகிய வயது என்பதும், யோகப்பயிற்சிக்கும் பிறவற்றுக்கும் ஏற்புடைய நாள்கள் அல்லனவாகப் பிறந்த கிழமை, பிறந்த நட்சத்திரத்துடன் இரண்டாம், மூன்றாம், எட்டாம் நாள் நட்சத்திரங்கள் என்றும் கூறப்பெறுகின்றன.

**"திருந்து தினமத் தினத்தி னொடு நின்று**
**இருந்தறி நாளொன் றிரண்டெட்டு மூன்று**
**பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்கி**
**வருந்துத லின்றி மனை புகலாமே"**

என்பது மந்திரம்.

**சிவச்சக்கரம்**

**எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி**
**இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்**
**வட்டதி லேயறை நாற்பத்தெட் டுமிட்டுச்**
**சிட்டஞ் செழுத்துஞ் செபி சீக்கிரமே.**

என்பது சிவசக்கரம் அமைக்கும் முறையை விளக்கும் மந்திரமாகும்.

இதன்படி சிவசக்கரம் வரைந்து,

**"தானவர் சட்டர் சதீரர் இருவர்கள்**
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
**சேனையுஞ் செய்சிவ சக்கரந்தானே.**

என்னும் மந்திரத்தின்படி சிவசக்கரத்தினுள் ஊர்க்காவலர், நகர்க்காவலர், திருக்கோயில் காவலர், திருவாயிற்காவலர், நாதம், விந்து இவர்களுக் குரிய எழுத்துக்களை எழுதிச் சிவ சக்கரம் அமைக்கப்பெறுவதாகும். நடுவில் சிவபெருமான் எழுந்து அமைவுறுவதாகும்,

இச்சிவ சக்கரத்திலுள்ளே, சிவபெருமான் திருவடிக்குத் தம்மை ஒப்படைத்தவர்கள் என்றும் சிவன் திறமே பேசுவர்; அவன் திருவடியே உணர்வர்; இவையன்றி வேறொன்றும் அறியார் என்பதாம்.

**திரிபுரைச் சக்கரம்**

திரிபுரை என்பவள் மும்மண்டல நாயகி. பரமசிவனுடன் பிரிப்பின்றி நின்று ஐந்தொழில் ஆற்றும் சத்தியாவாள். கலைமகள், அலைமகள்,

மலைமகளாய் வேறுபட்டு நிற்பவளுமாவாள், இவளுக்குரிய சக்கரம் திரிபுரைச் சக்கரம்.

"ஆதிவிதமிகத் தண்டந்த மால்தங்கை

..................................................

..................................................

சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே!"

என்னும் மந்திரம், முறையாக எட்டிதழ் தாமரை வரைந்து அதன் நடுவில் திரிபுரையின் பெயராகிய நமசிவய என்னும் ஐந்தெழுத்துத் தமிழ் மந்திரம் வரைந்து பலமுறை மனதுள் உருவேற்றல் வேண்டுவதைக் கூறும். அதனால் திருவருள் பெருக, யோகக் காட்சியாம் முக்காலவுணர்ச்சி கைகூடும் என்க.

**ஏரொளிச் சக்கரம்**

முதுகெலும்பாகிய வீணாத்தண்டின் இருபக்கமிருந்தும் மேல் நோக்கிய ஒளி வடிவான சக்கரம் ஏரொளிச் சக்கரம் ஆகும். இதன் ஒளித்துணையால் விந்துவின் ஒளி தோன்றி நாத ஒலியும் உண்டாகும். இச்சுடர்ச் சக்கரம் அனற்பிழம்பாய் நிற்பதாகும். அச்சுடர்ச் சக்கர எழுத்துகளே சக்கரத்துள் அமைந்தன. அஃது வன்னி எழுத்து ஆம்.

"சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்

..................................................

..................................................

சொல்லிக்கு சக்கர மாய்வரு மேலதே

என்னும் மந்திரம் ஏரொளிச் சக்கரம் தோன்றும் முறையைக் கூறும். கூறப் படும் விந்து 12 பிராணனை உடையது. அதற்குத் தலைமையாவது எழுத்து வடிவமான நாதம். இந்நாத விந்துகளே (எழுத்துக்கள்) உலகமாய் விரிவதாகும். அதன் முறைமைக்கு 144 அறைகள் உடைய சக்கரம் தோன்றுவதாகும் (12x12=144) விந்து நாதத்திற்குரிய எழுத்துக்கள் சக்கரமாகவும் அவற்றின் சுழற்சியால் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என ஐம்பூதங்களாய் விரியும். அதற்குரிய எழுத்துக்கள் லவராயஅ என்பன. திதி, நாள், நட்சத்திரங்கள், இராசிகளின் தோற்றத்திற்குரிய அடிப்படைச் செய்திகள் ஏரொளிச் சக்கரம் பற்றிக்கூறும் உப தலைப்பில் ஆங்காங்கே விரவிக் கிடைக்கப் பெறுகின்றன.

**சாம்பவிச் சக்கரம்**

சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்

..................................................

..................................................

..................................................

நாம் பதங் கண்டபின் நாடறிந்தோமே.

என்னும் மந்திரம் சாம்பவிச் சக்கரம் அமைக்கும் முறையைக் கூறும். எட்டுவரை கீறுதல் அல்லது எட்டிதழ்த் தாமரையை அமைத்தல் வேண்டும். அதில் நான்கு பகுதிகளில் விந்து, நாதம், சக்தி, சிவம் என்றும் நான்கும் உள்ளதாகும். அதில் கண்ணாக கருத வேண்டுவது விந்துவையேயாகும்.

சாம்பவி மந்திரம் திருவைந்தெழுத்தேயாம், இதனை யாவரும் ஓதலாம்.

**நவாக்கரிச் சக்கரம்**

வியத்தகு தன்மை வாய்ந்த 'வ' கரமென்னம் ஓர் எழுத்துக்கு உரியவள் திருவருளம்மை. அவளுக்குரியது நவாக்கரிச் சக்கரம். இஃது ஒன்பது எழுத்துக்களை மூலமாகக் கொண்ட தேவி மந்திரம் உடைய சக்கரமாகும். ஓரெழுத்தே ஒன்பதாக மாறி அமையும் வகையில் எண்பத்தொரு வகையாய் விரியும். ஒன்பது எழுத்துக்களாவன, சௌ, ஔ. ஹௌ, கிரீம், கௌ, ஐ, கிரீம், சிரீம, கிலீம். எனினும் ஆதிமந்திரம் ஐந்தெழுத்தே என்று கருதி அதனை உயிராகவும் பிறவற்றை உடலுறுப்பு களாகவும் கொள்க. நவாக்கரி மந்திரம் வாய் திறவாமல் கணிக்கக் கூடியதாகும். 'கிலீம்' என்பதாகத் தொடங்கிச் 'சௌ' என முடியும்.

**தானது கம்இரீம் கௌவது ஈறாம்**
**நானது சக்கர நன்றறி வார்க்கெலாம்**
**கானது கன்னி கலந்த பராசக்தி**
**கேளது வையங் கிளரொளி யானதே**

என்பதன் மூலம் சக்கரம் வரைபவர் எழுத்துக்கள் மாற்றி வரைவது மரபேயாம். சக்கரமானது வெள்ளி, பொன், செம்பு ஆகிய உலோகங் களால் அமைக்க. நினைக்கும் போதே நன்மை உண்டாக்கும். ஏறுவினை; எஞ்சுவினை; ஒழியும். எழுத்துக்களை மாற்றியமைத்து உருவாக்கும் சக்கரத்திற்கு ஏற்ப நன்மை உண்டாவதாம். குறுக்கும் நெடுக்குமாய் பத்துக் கோடுகளை அமைத்து உண்டாகும் எண்பத்தொரு அறைகளை உடைய சக்கரமாகும்.

**புவனாபதிச் சக்கரம்**

திருமூலநாயனார் வட்டெழுத்துக் காலத்தவர். செப்பு தகட்டில் அறுகோணம் வரைந்து அதில் சிரீம், கிரீம் வரைந்து உச்சியில் இரீம் எழுத வேண்டும். பதினாறு இதழ்கள் வரைந்து வட்டெழுத்துக் காலத்திய 16 உயிர் எழுத்துகளையும் வரைதல் வேண்டும். எல்லாக் கோணங்களையும் சூழும்படி அழகிய வட்டம் அமைத்து 'அ' கரமுதலாக எழுத வேண்டும். இயந்திர ராசனாகிய புவனாபதிச் சக்கரத்தை வழிப்பட்டால் உள்ளம் கருதியது நிறைவேறும் என்க.

**வயிரவச் சக்கரம்**

ஆருயிர்கள் விரும்புமாறு திருவருள் புரிபவர் வயிரவக்கடவுள், இவருக்குரிய சக்கரத்தை,

அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு
அறிந்தவச் சத்தமி மேலிவை குற்றம்
அறிந்தவை யொன்றுவிட் டொன்று பத்தாக
அறிந்து வலமது வாக நடவே

என்னும் மந்திரம் கூறிச் செல்லும்.

பிரதமை திதி முதல் சட்டித்திதிவரை உள்ள ஆறும், மூலாதாரம முதலான ஆறு ஆதாரங்களில் காணப்பெறும் திதியாகும். மேலும் ஏழாம் திதிமுதல் ஒன்றைவிட்டு ஒன்றாகக் கணித்து 8,10,12,14 என்னும் நான்குடன் கூடிய 10 இடங்களில் வியிரவரை வலப்பக்கமாகத் தியானிப்பது பகை முதலிய இடையூறுகளை நீக்கும் என்த் திருமூலர் வழி காட்டுவார்.

'ஆதி மந்திரம் ஐந்தெழுத்து' என்பார் ஞானசம்பந்தர்.

அதனை அடிப்படையாகக் கொண்டு சக்கரங்களின் வழிபாடு அமையப் பெற்றது. இச்சக்கரங்களின் பயன் ஆன்மாக்களுக்கு நன்மையைக் கொண்டு வருவதேயாகும். மந்திர எழுத்துகளைக் கொண்டு வடிவமைக்கப் பெறும் சக்கரங்களின் வகைகளையும், அமைப்பு முறை, பயன் அனைத்தையும் முழுமையாகப் பொருள் மாறுபாடின்றித் தக்கவர் உதவி யுடன் உணர்ந்து, நெகிழ்ந்து, சிவசக்தி வழிபாடு செய்ய மேலான சாயுச்சியம் அன்னவருக்கும் உறுதியாகும்.

# 12. திருமந்திரத்தின் அமைப்பும், சிறப்பும்

திருமதி ஸ்ரீ. உமா, மேட்டூர்.

தமிழ்நாட்டு வரலாறும் சைவ சமய வரலாறும் காலம் கடந்தவை. சங்க காலம் என்பது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும். அக்காலத்தில் சங்க இலக்கியங்கள் தோன்றின. அதன் பின்னர் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களும் எழுதப்பட்டன. அக்காவியங்களிலேயே சைவ சமய வரலாற்றைக் காணலாம். ''சிவன்'' சைவ சமயத்தின் கடவுளாகப் போற்றப்படுகின்றார். ''சிவம்'' என்ற சொல்லுக்கு பல பொருள்கள் உள்ளன. அவற்றுள் நன்மை என்பது ஒரு பொருள். முத்தி என்ற பொருளும் உண்டு. செம்மை என்றும் சொல்லுவர். சிவம் என்பது அனைத்தையும் ஆக்குவது. எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது எனப்படும்.

சிவபெருமான் உருவமாகவும், அருவமாகவும், அருவ உருவமாகவும் இருந்து ஐந்தொழில் புரிந்து உயிர்களின் வாழ்வை வளம் பெறச் செய்கிறான். சிவனை நீலகண்டன், ஆலமர் செல்வன், பிறைசூடி, நீறணிந்தோன், மழுவேந்தி என்ற பல நாமங்களில் போற்றுகின்றனர். சங்க இலக்கியங்களில் சிவபெருமானைக் குறித்த பெயர்கள் காணப் படுகின்றன. முக்கட் செல்வன், கறைமிடற்றண்ணல், நீலமணிமிடற்றண்ணல், நீலமேனி வாலிழை பாகத்தொருவன், ஆலமர் செல்வன் என்பவை அவற்றுள் சில. "தென்னாடுடைய சிவனை, எந்நாட்டவர்க்கும் உரியவராக'' நாயன்மார்கள் கண்டனர். 27 பெரியார்கள் பாடிய பன்னிரு திருமுறையே சைவ சமயத்தின் அடிப்படை நூலாக அமைந்தது. அவர்கள் அருளிய பாடல்கள் 4286. இப்பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாகப் போற்றப்படும் நூல் ''திருமந்திரம்'' ஆகும். இந்நூல் ''திருமூலதேவ நாயனார்'' அருளிச் செய்தது. இந்நூலுக்கு ''திருமந்திரமாலை'' ''தமிழ் மூவாயிரம்'' என்னும் வேறு பெயர்களும் உள்ளன.

**திருமூலர்**

திருமூலர் அட்டமா சித்திகள் பெற்ற தவயோகி ஆவார். இவர் நந்திகேஸ்வரரின் அருள் பெற்ற யோகிகளுள் ஒருவர். அவர் திருக்கயிலாய மலையில் இருந்து புறப்பட்டுத் தென்னாடு வந்து, திரு ஆ அடுதுறைத் திருத்தலம் அடைந்து அங்கு காவிரிக் கரையில் உள்ள

சாத்தனூர் வந்தார், என்பதற்கு ஆதாரமாக தெய்வச் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்தில், திருமூலரின் வரலாற்றை,

**"கயிலாயத்து ஒரு சித்தர் பொதியில் சேர்வார்
காவிரி சூழ் சாத்தனூர் கருதும் மூலன்"**

என்று குறிப்பிடுவதே இதற்கான சான்றாகும்.

காவிரியில் நீராடி திருவாடுதுறை எம்பெருமானைத் தரிசித்தார். பின்பு தென்திசை நோக்கிச் சென்றார். அங்கு ஓரிடத்தில் பசுக்கள் கூட்டமாக நின்று கதறிக் கொண்டிருப்பதைக் கண்டார். அருகே சென்று பார்த்த போது பசுக்களை, மேய்த்து கொண்டிருந்த "மூலன்" என்னும் இடையன் இறந்து கிடப்பதையும், அதன் காரணமாக பசுக்கள் துன்புற்றுத் துடிக்கின்றன என்பதையும் உணர்ந்து, அவற்றின் துயர் துடைக்க நினைத்தார். ஒரு புதர் மறைவில் தம் உடலைப் பத்திரப்படுத்தி வைத்து விட்டு, யோக சக்தியால் "பரகாயப் பிரவேசம்" (கூடுவிட்டு கூடு பாய்தல்) புகுந்தார். உடனே மூலன் தூங்கி எழுவது போல உயிர் பெற்று எழுந்தான். மாடுகள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. பிறகு பசுக்கள் வீடு நோக்கிப் புறப்பட்டுப் போகத் தலைப்பட்டன. யோகியும் அவற்றுடனே போனார். பசுக்கள் எல்லாம் அதன் அதன் வீடுகளில் புகுந்தபின், ஒரு பசு மூலன் வீட்டு வாசலில் வந்து நின்றது. நின்ற பசுவின் குரல் கேட்டு மூலன் மனைவி வீட்டினுள் இருந்து வெளிவந்து மூலனை வரவேற்றாள். தம்மை நெருங்கும் இடைச்சியைக் கண்டதும் ஒதுங்கினார். மூலனுடைய மனைவிக்கு ஆச்சிரியமாக இருந்தது. "நீ யாரோ நான் யாரோ" என்னைத் தொடாதே, என்று சொல்லிவிட்டு அங்கிருந்த மடம் நோக்கி சென்று யோகத்தில் அமர்ந்து விட்டார் யோகியார். கணவனது மன மாற்றத்தைக் கண்ட இடையன் மனைவி இரவெல்லாம் புலம்பினாள். யாரோ அவன் மனத்தை மாற்றிவிட்டனர் என்று தூற்றினாள். தன் கணவனுக்குச் சித்தம் கலங்கிப் பித்தம் பிடித்துவிட்டது என்று எண்ணிச் சாத்தனூர் பெருமக்களைக் கூவி அழைத்துச் சேதியைக் கூறினாள். அவ்வூர்ப் பெரியவர்கள் வந்து பார்த்தனர். யோகியின் செயல்கள் பேச்சு எதுவும் மூலனுடையதாக இல்லை. இவர் மூலன் அல்ல வேறு என்று துணிந்தனர். என்றாலும் அவர்களாலும் உண்மையை முழுமையாக உணர முடியவில்லை. எனவே மூலன் மனைவியிடம், இவர் உன் கணவரல்ல, அவர் வழியே செல்ல விட்டு விடு எனக்கூறி விட மூலன் மனைவி வருந்தி அழுதாள். யோகியும் வந்த வேலை முடிந்தது என்று நினைத்து முன்பு மறைத்து வைத்திருந்த உடலைத் தேடி அங்கு சென்றார். மறைத்து வைத்திருந்த உடல் காணப்படவில்லை. செய்வது அறியாமல் தவித்தார். ஈசன் செயல் என்று அவர் சிந்தை தெளிந்து "மூலன்" உடலிலேயே இருந்து "திருமூலராக" வாழ்ந்து

வந்தார். திருவாடுதுறை சென்று அங்கே எம்பெருமான் ஆலயத்துள் ஒரு பக்கம் இருந்த அரச மரத்தின் கீழ் யோகத்தில் அமர்ந்தார். பின் ஆண்டுக்கு ஒரு மந்திரமாக 3000 மந்திரங்கள் பாடி மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து பின்னர் கைலாயம் சேர்ந்தார்.

திருமூலர் திருமந்திரத்தில் தாம் வாழ்ந்த காலத்தை அவரே காட்டி யுள்ளார்.

"இருந்தேன் காயத்தில் எண்ணிலிகோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே"

என்று கூறியுள்ளார்.

### திருமந்திர அமைப்பு

திருமூலரின் திருமந்திரம், பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாகக் கொள்ளப்படுகிறது. தமிழரின் தலையாய கொள்கை நூலாகவும், மெய்ப்பொருள் இலக்கியங்களின் முதல் தமிழ்நூல் எனவும், சைவ சமய முதல் நூல் எனும் பெருமையைக் கொண்ட இந்நூலில் இப்போதுள்ள பாடல்கள் 3071. இவற்றுள் 71 பாடல்கள் இடைச் செருகல்கள் என்பர். திருமந்திரத்தின் 3000 பாடல்களும் 9 தந்திரங் களாகப் பகுக்கப்பட்டுள்ளன. 232 அதிகாரங்களைப் பெற்றுள்ளது. திருமந்திரத்தின் 9 தந்திரங்களிலும் ஒவ்வொரு தந்திரத்திலும் கூறப்பட்டுள்ள செய்திகளை ஒருவாறு காணலாம்.

### முதல் தந்திரம்

திருமூலரின் முதல் தந்திரம் யாக்கை நிலையாமை, செல்வ நிலை யாமை, இளமை நிலையாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, காம அடக்கம், அந்தணர் ஒழுக்கம், அரசன் கடமை, அறஞ்செய்தலின் சிறப்பு, அன்பை வளர்த்தல், பிறர்க்கு உதவி செய்தல், கற்றோரிட மிருந்தும் நூல்களில் இருந்தும் அறிவை வளர்த்தல். மனத்தை விருப்பு வெறுப்புகளில் செல்ல விடாமை போன்ற அறிவுரைகள் தரப்பட்டுள்ளன.

### இரண்டாம் தந்திரம்

அகத்தியர் தென்னாடு சென்றமை, சிவனுடைய எட்டு வீரச் செயல்கள், லிங்கத்தின் தோற்றம், தக்கயாகம், பிரளயம் பற்றிய புராணக் கதைகள் குறிக்கப் பெற்றுள்ளன. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களும், சக்தி, சிவன் விளையாட்டால் உண்டான ஜீவர்கள், விஞ்ஞான கலர், சகலர், பிரளயாகலர் என்னும் மூவகையினர் என்பதும், அவருள் மதிக்கத் தக்கவர் யாவர் என்பதும் விளக்கப்பட்டுள்ளன. கோயில்களை அழிப்பது தீது, சிவநிந்தை

தீது, அடியார் நிந்தை தீது, பொறையுடைமை, பெரியாரைத் துணைக் கோடல் என்பன குறிக்கப்பட்டுள்ளன.

**மூன்றாம் தந்திரம்**

முழுவதும் யோகத்தைப்பற்றியது. ஆனால் பதஞ்சலி கூறும் யோகமுறையன்று. இயமம் முதலிய எண்வகை யோக முறைகளும் அவற்றால் அடையும் பயன்களும் பிறவும் கூறப்பட்டுள்ளன.

**நான்காம் தந்திரம்**

மந்திர கருத்துக்கள், அஜபா மந்திரம், கபாலி மந்திரம் கூறப் பட்டுள்ளன. திருஅம்பலச் சக்கரம், திரிபுரைச் சக்கரம், ஏரொளிச் சக்கரம், பைரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம் என்பவை பற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன.

**ஐந்தாம் தந்திரம்**

சைவத்தின் வகைகளும், சரியை, கிரியை, யோகம், ஞானம் இவை களும் கூறப்பட்டுள்ளன. புறச் சமயங்கள் கண்டிக்கப்படுகின்றன. உட் சமயங்கள் ஏற்கப்படுகின்றன.

**ஆறாம் மந்திரம்**

உயிர் நாடியாக உள்ளவை, சிவகுரு தரிசனம், அவனது திருவடிப் பேறு, ஞானத்தின் பொருள் தெரிபவன், தெரியப்பட்ட பொருள், துறவு, தவம், அருளில் இருந்து தோன்றும் ஞானம், தக்கவர் இலக்கணம், தகாதவர் இலக்கணம், திருநீற்றின் பெருமை என்பவையாகும்.

**ஏழாம் மந்திரம்**

ஆறு அவதாரங்கள், ஆறு லிங்கங்கள், சமயச் சிறப்புப் போதனை, ஐம்புலன்களை அடக்கும் முறை, குருவின் வருணனை, கூடா ஒழுக்கம் முதலியன பேசப்பட்டுள்ளன.

**எட்டாம் மந்திரம்**

சித்தாந்தத்தின் விளக்கம், காரிய காரண உபாதிகள், புறங் கூறாமை, சிவநிந்தை ஒழிப்பு, உண்மை பேசல், ஆசையை ஒழித்தல் முதலியவை கூறப்பட்டுள்ளன.

**ஒன்பதாம் மந்திரம்**

குரு, குருமடம், குருதரிசனம், பிரணவ சமாதி, சூக்குமம், பஞ்சாட்சரங்கள் பேசப்பட்டுள்ளன. இறைவனது நடன வகைகள் முதலியனவும், ஞானம் மலர்தல், ஞானத்தின் சிறப்பும் கூறப்பட்டுள்ளன.

## திருமந்திரத்தின் சிறப்பு

"சிறப்பு" என்பது முடிவான ஒன்று. அதற்கு மேல் நாம் பெறுவதற்கு ஒன்றும் இல்லை என்கின்ற வகையில் அமைந்த பேற்றினைப் பெற்றால் அதற்குச் "சிறப்பு" என்று பெயர்.

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்றும்
செம் பொருள் காண்பது அறிவு

என்பது பொதுமறை, "செம்பொருள்" காண்பதே சிறப்பு. அச்சிறப்பு சைவ சமயத்தின் முதல் நூலான திருமந்திரத்திற்கு உண்டு எனலாம்.

திருமந்திரம் என்ற பெயருக்கு ஏற்றபடி மந்திரம் போல் சுருங்கிய சொற்களில் ஆழ்ந்த பொருள் திட்பமாக அமைந்த பாடல்களும், மறைந்த நுட்பமான பொருள் உடைய பாடல்களும் திருமந்திரத்தில் உள்ளன. தத்துவக் கருத்துக்கள் முதல், யோக நெறி சித்த வைத்தியக் கருத்துக்கள் வரையில் பலவும் செறிந்த நூல் அது. திருமந்திரப் பாடல்கள் எளிமை யானவை, இனிமையானவை, படிக்கச் சுவையானவை, பயன் தருபவை. "உலகமே மாயம், காயமே பொய்" என்ற வாதம் வலுப்பட்டிருந்த சித்தர்கள் மரபில் வந்த திருமூலர் இயற்றிய திருமந்திரம் தெய்வ அனுபவத்தைப் பாடினாலும், ஏனையோர் பாடல்களிலிருந்து இவர் பாடல்கள் வேறு பட்டனவாகவே உள்ளன.

## திருமந்திரத்தில் "உடம்பு"

உடம்பைக் கோயில் என்று பாடிய முதல் தமிழ்க் கவிஞர் "திருமூலரே" ஆவார்.

"உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்
உடம்பினுக்கு உள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்புள்ளே யானிருந்து லும்புகின் றேனே"

என்று பாடி மானுட உடம்பின் மகத்துவத்தை மனித மனத்தில் பதிய வைத்த மாமேதை திருமூலர். இதோடு நின்று விடாது.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம்
வள்ளற் பிரானுக்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே

என்று பாடிய இறை அடியார் திருமூலரே ஆவார்.

"உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின்றாடார் வினை கெடப்

பள்ளமும், மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வி இலோரோ''

என்று உள்ளத்துள்ளே இறைவனைக் காணாது வேறு எங்கோ தேடி அலையும் வீணரை மூடர் என்றே ஏசுகிறார். இவ்வாறு உடம்பைப் பற்றிப்பல பாடல்களில் அதிகமாக பேசக்கூடிய சிறப்பும், உடம்பின் முக்கியத்துவத்தைப் பற்றி எடுத்தோம்பும் சிறப்பும் திருமந்திரத்தின் சிறப்பாக அமைகிறது.

## திருமந்திரம் ஒரு "நீதி நூல்"

திருமந்திரப் பாடல்கள் தேவாரப் பாடல்களைப் போல திருக்கோவிலை மையமாகக் கொண்டெழுந்தனவல்ல உணர்ச்சி நிலையில் நின்று உள்ளம் உருகப் பாடியனவுமல்ல. இவர் பெற்ற அனுபவம் அட்டாங்க யோகத்தால் கைவரப் பெற்றிருப்பினும் ஞான அனுபவமே. ஆயின் அதனை வெளிப் படுத்தும் பாங்கு, நீதி இலக்கியங்கள் போன்று அறிவுரை கூறும் பாங்கில் தான் உள்ளது. தாம் பெற்ற தெய்வ அனுபவத்தை தெய்வ நீதியாகவே உணர்த்துகின்றார். திருமூலரைப் பொறுத்த அளவில் நீதி கடவுள் இயல் அடிப்படையில் அமைந்த ஒன்றே. சைவ நீதியே நீதி. அது உலகமெல்லாம் விளங்கவே திருமந்திரம் பாடியுள்ளார்.

அறம் செய்வான் திறம் கூறும் பாடலாக அமைந்த பாடல்,

யாவர்க்குமாம் இறைவற் கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே

என்று, இல்லையென்னாமல் ஈவாராது தன்மை குறித்து முதலில் இறைவனுக்குப் பூசை, அடுத்து, பசு ஓம்புதலை வற்புறுத்தும் வைதிக நெறிக்கு ஏற்ப, பசுவிற்குச் சிறிது புல், உண்பதற்கு இல்லாத மனிதனுக்கு ஒரு சிறு பகுதி உணவு என்று வற்புறுத்தும் போது உலகியல் அறமும், தெய்வ இயல் அறமும் ஒன்றாக் கலந்து நிற்றலைக் காணலாம்.

திருமூலர் சிலர் பாடல்களை நீதிநூற்பாடலா, திருமந்திரப் பாடலா என்ற வேறுபாடுதானும் தோன்றாத அளவுக்குப் பாடியுள்ளார்.

கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே -

இங்கு கல்வி என்ற பொதுச் சொல்லால் குறிப்பினும் "இறையன்புக்குத் துணையாகும் கல்வியினையே" திருமூலர் குறிப்பிடுகிறார்.

**திருமந்திரத்தில் பல்சுவை**

இந்நீதி இலக்கியப் பாங்கில் திருமந்திரப் பாடல்களைக் கண்டாலும், அவற்றினும் திருமந்திரப் பாடல்கள் பலசுவைமிக்கனவாக உள்ளன எனலாம். இதனை விளக்க ''நிலையாமை'' பற்றிய பாடல்கள் பல உள்ளன. அவற்றில் மரணம் உணர்த்தும் நிலையாமை பற்றிய உண்மையை திருமூலர் சொல்லும் முறையோ மிக எளியது! ஊரார் எல்லோரும் கூடுகிறார்கள், ஒலி எழுப்பி அழுகிறார்கள், பழைய பெயரை விட்டுப் பிணம் என்று பெயர் சொல்கிறார்கள். சுடுகாட்டுக்குக் கொண்டுபோய்ச் சுட்டுவிடுகிறார்கள். பிறகு நீரில் மூழ்கிக் குளித்துவிட்டு அந்த நினைப்பும் இல்லாமல் மறந்து விடுகிறார்கள்.

ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணம் என்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டு போய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே

என்றும்,

''அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடியாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்து ஒழிந்தாரே

என்று இதுதான் வாழ்க்கை. இது தான் உடல் அழியக் கூடியதற்கு அடையாளம் என்று அக்காட்சியினை மிகச் சிறப்பாக கேலி உணர்வே பாடல் முழுவதும் விரவி நிற்கப் பாடியிருக்கிறார்.

முடிவாக இந்நூல் தெய்வத்தை மறந்த நீதி இலக்கியங்களுக்கு எதிராக உண்மையாக நீதி, தெய்வ நீதியே என்பதை உணர்த்த எழுந்தது போன்று தோன்றுகிறது. தெய்வ உணர்வோடு கூடாத நீதியால் உயர்வடைய முடியாது என்ற கருத்தைப் பெற வைக்கிறார் திருமூலர். நீதி நூல் பாங்கில் அமைந்த காரணம் பற்றியே இதனை ஒரு ''சாத்திரம்'' என்று கருத லாயினர். பாடல்கள் மூவாயிரம் ஒரே வகையான செய்யுளில் ஒரே வகை யான நடையில் அமைந்தவை. ஆனால் பக்தி, யோகம், தவம், ஞானம், மருத்துவம், தத்துவம் முதலான பலவகைப் பொருள்களும் அவற்றில் உணர்த்தப்படுகின்றன. திருமூலரின் ஆன்மநேயம், ஆருயிர்கள் அனைத் தினிடத்திலும் வைத்த பேரன்பு, மெய்ப்பக்தி, திருமூலரை அருட்கவியாக, ஞானியாகக் கொள்வதைவிட, அன்பே சிவமாக, அறிவே தவமாகக் கொண்டு வாழ்ந்த ஞானத் தவயோகம் ''திருமூலர்'' வாழ்க்கை என்றும், அவர் வாக்கான திருமந்திரம் தமிழ் செய்த ''தவம்'' என்றும் கருதலாம். திருமந்திரம் அறிவு நிலையில் நின்று அறிவுக்கு விருந்தளிக்கும் சாத்திரமன்று, உணர்வு நிலையில் நின்று உணர்வுக்கு விருந்தளிக்கும் சிறந்த கவிதைகளே ஆகும் என்பதில் ஐயமில்லை.

# 13. திருமந்திரத்தின் காலம்

செல்வி உஷாஜெகதீசன், புதுதில்லி.

எல்லா உலகங்களுக்கும் அப்பாற்பட்ட சிவலோகத்தில் சிவமுனி சித்தசன் என்ற கணநாதராக இருந்த திருமூலர் அசுரர்கள். வாழ்ந்த காலத்தில் பூமிக்கு வந்தார் என்பது

இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே (80)

சிவமுனி சித்தசன் வெல்கின்ற
ஞானத்து மிக்கு ஓர் முனிவராய்
பல்கின்ற தேவர் அசுரர் நரர் தம்பால்
ஒல்கின்ற வான்வழி ஊடு வந்தேனே (83)

என்ற திருமந்திரத் தொடர்களால் தெரிகின்றது. மகாபாரதப் போருக்கு முன்பே அசுர குலம் முழுவதும் பூமியிலிருந்து அழிந்து போய்விட்டது. எனவே திருமூலர் பூமிக்கு வந்த காலம் மகாபாரத காலத்திற்கு முற்பட்ட காலம் என்பது விளங்கும் மிகக் கடுமையாகத் தவம் செய்யும் பதஞ்சலி வியாக்கிர பாதர் போன்ற பழம்பெரும் முனிவர்கள் வாழ்ந்த பண்டைக் காலத்தில் திருமூலர் அவர்களோடு சேர்ந்து வாழ்ந்தவர் என்பது

மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்
என்று இவர் என்னோடு எண்மருமாமே (67)

என்ற தொடரால் விளங்குகின்றது. திருமூலர் அகத்திய முனிவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர் என்பது

அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன் (338)

என்று அகத்தியர் நாள்தோறும் தீ வளர்த்து வேள்வி புரிந்து சோதி வழிபாடு செய்வதை நிகழ்காலத்தில் போற்றியுள்ளதால் தெளிவாகும்.

தென்திசையில் தமிழ் வேதங்களும் ஆகமங்களும் தோன்றிய திருத்தலம் சிறந்து விளங்கிய மிகப் பழைய காலத்தில் திருமூலர் வாழ்ந்தவர் என்பது,

ஈறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்தம் மிக்கு உள்ள வெற்பு ஏழுள்
பேறான வேத ஆகமமே பிறத்தலால்
மாறாத தென்திசை வையகம் சுத்தமே (2755)

என்ற திருமந்திரப் பாடலால் தெளிவாகின்றது. கன்னியாறு குமரியாறு காவிரியாறு போன்ற ஒன்பது நதிகளையும் ஏழு மலைகளையும் கொண்டு அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு தமிழ் வேதங்களையும் எண்ணற்ற ஆகமங்களையும் தோற்றுவித்த திருத்தலம் மகேந்திரமலை என்று வழங்கப்பட்டதை

அருந்தவருக்கு ஆலின் கீழ் அறம் முதலா நான்கனையும்
இருந்தவருக்கு அருளும் (12:20)

மன்னு மாமலை மகேந்திரம் அதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளியும் (2:9-10)

என்ற திருவாசகத் தொடர்கள் தெரிவிக்கின்றன. சூரபதுமனின் ஊரான மகேந்திர மலை நான்கு புறமும் கடலால் சூழப்பட்ட தீவு என்பதைக் கல்லாடம் தெரிவிக்கின்றது. (கல்லாடம் 61) மலைத் தலங்களுள் ஒன்றான மகேந்திரமலை என்ற இத்தலம் இலங்கைக்கு அப்பாற்பட்ட ஊர் என்பதைக் கந்த புராணம் கூறுகின்றது.

அறம் புரி நூல் அன்று உரைத்த (சம்பந்தர் 3: வேட்டக்குடி 1:3)

இன்பம் பொருள் அறம் வீடு என்னும் இந்நான்கும்
முன்பு அறியச் சொன்ன முது மொழி நூல் (திருவள்ளுவமாலை)

என பழம்பெரும் தமிழ் நூல்களான இந்த நான்கு வேதங்களுக்கு இணையாக வடமொழியிலும் ரிக், யசுர், சாம, அதர்வணம் என்ற நான்கு வேதங்கள் இருந்தன. ஆனால் ஆகமங்கள் வடமொழியில் இல்லை. தமிழ் ஆகமங்களே வடமொழியில் ஆக்கம் பெற்றன. இவ்வாறு வடநாட்டில் வேதம் மட்டுமே இருந்தபோது தென்னாடு வேதம் ஆகமம் என்ற இரண்டு வகையான புனித நூல்களையும் தோற்றுவித்த காரணத் தாலேயே தென்திசையை உலகிலேயே மிகப் புனிதமான திசை என்று திருமூலர் கூறியுள்ளார். ஆகமங்கள் மூன்று பகுதிகளைக் கொண்டவை. உலகில் மக்கள் ஒழுக்கப் பண்புகளுடன் வாழவேண்டிய அறநெறியைக் கூறுவது கர்மகாண்டம் எனப்படும் பூஜை முறை, கோயில், திருவுருவம், திருவிழா மற்றும் இறை வழிபாடு தொடர்பான அனைத்தையும் விளக்குவது உபாசனா காண்டம் எனப்படும். மூன்றாம் பகுதி ஞான காண்டம் ஆகும். இது கடவுள், உயிர், உலகம் ஆகியவற்றுக்கு இடையே யுள்ள உறவை விளக்கும் சித்தாந்தப் பகுதியாகும். இந்த ஞானகாண்டமே சைவ சித்தாந்தம் எனப்படுகின்றது. ஆகமங்கள் வட மொழியில் ஆக்கம் பெற்றபோது சைவ சித்தாந்தப் பகுதியாகிய ஞானகாண்டத்தைத் தனியே விளக்கும் நூல்களும் தோன்றின. இவற்றுக்கு உபநிஷதங்கள் என்று பெயர். இவ்வாறு ஆகமங்கள் வடமொழியில் மொழி பெயர்க்கப் பெற்றதை,

செந்தமிழோடு ஆரியனை (அப்பர் 6: ஆவடுதுறை 4:10)

ஆரியமும் தமிழும் உடனே சொல்லிக்
காரிகையார்க்கும் கருணை செய்தானே (திருமந்திரம் 65)

பாண்டி நன்னாடர் (திருவாசகம் 17:5)

பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே (திருவாசகம் 1:54)

தமிழ்ச் சொலும் வடசொலும் தாள் நிழல் சேர
(1: அச்சிறுப்பாக்கம் 1:4)

என்று திருமுறைகள் கூறுகின்றன. தமிழ் வேதங்களையும் ஆகமங்களையும் உண்டாக்கிய மகேந்திர மலை என்ற திருத்தலம் போன்று பலப்பல நாடுகள் கடலில் மூழ்கிப் போய் விட்டதைக் கலித்தொகையும் சிலப்பதிகாரமும் கூறுகின்றன. ஆனால் திருமூலர் காலத்தில் ஒன்பது நதிகளையும் ஏழு மலைகளையும் கொண்ட மகேந்திரமலைத் தலம் சிறப்புற்று இருந்ததை நவதீர்த்தம் மிக்கு உள்ள வெற்பு ஏழு என்று திருமந்திரம் கூறுகின்றது. எனவே திருமூலர் தென்னாட்டில் பல நாடுகள் கடலில் மூழ்கிப் போவதற்கு முன்பு வாழ்ந்த பழங்காலத்தவர் என்பது வலியுறுத்தப்படுகின்றது.

தற்போது நடக்கும் கலியுகத்திற்கு முந்தைய துவாபர யுகத்திற்கும் முன்பே, அகத்தியர் பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்களின் காலத்திலே பூமிக்கு வந்த திருமூலர் லட்சக்கணக்கான ஆண்டுகள் இளமையோடு வாழ்ந்தவர் என்பது

சாவதும் இல்லை சததோடி ஆண்டிலும் (1953)

ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே (74)

நரை திரை நாசமே (727)

உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே (724)

என்ற திருமந்திரத் தொடர்களால் தெளிவாகின்றது. துவாபர யுகத்தில் மகாபாரதப் போர் நடந்தது. அக்காலத்திய சேர மன்னன் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் உணவுப் பொருட்கள் அளித்துச் சோறிட்டதைப் புறநானூற்றுப் பாடல் (2) போற்றுகின்றது. மகாபாரதப் போர் முடிந்த பின்னர் கண்ணன் தன் இறுதி நாட்களில் உபமன்னியு முனிவரிடம் சிவதீட்சை பெற்று நியமத்துடன் சிவபூஜை செய்து சிவபக்தனாக வாழ்ந்தான். காட்டில் கண்ணன் வேடனால் கொல்லப்பட்ட போது அவ் வேடன் கண்ணனது உடலைத் தகனம் செய்துவிட்டுச் சென்றான். அன்று பெருத்த மழை பொழிந்ததால் பாதி எரிந்தும் பாதி எரியாமலும் இருந்த கண்ணனது உடல் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டது. கரை ஒதுங்கிய

உடலைக் கண்ட மக்கள் கண்ணனது உடல் பாதி கருகியும் பாதி வேகாமலும் இருப்பதைப் பார்த்து வேதியர்களிடம் கூறினர். வேதியர்கள் குறையாகக் கருகியிருந்த கண்ணனது உடலை ரிக்வேத மந்திரங்கள் ஓதி அடக்கம் செய்து விட்டு அங்கு சமாதி எழுப்பினர். (இதுவே பின்னர் பூரிஜகந்நாதர் கோயிலானது) இந்தக் காட்சியைத் திருமூலர்,

**இருக்கு உருவாம் எழில் வேதத்தின் உள்ளே**
**உருக்கு உணர்வாய் உணர் வேதத்துள் ஓங்கி**
**வெருக்குருவாகிய வேதியர் சொல்லும்**
**கருக்கு உருவாய் நின்ற கண்ணனுமாமே** (53)

என்று கூறியுள்ளார்.

துவாபர யுகத்தின் இறுதியான கண்ணன் காலம் வரையிலும் விஷ்ணுவும், மகா விஷ்ணுவின் அவதாரங்களும் சிவ பக்தராகவே போற்றப் பட்டுள்ளனர். மகா விஷ்ணுவும் விஷ்ணுவின் அவதாரங்களும் சிவபூஜை செய்யும் சைவராகவே விளங்கியதை இராமாயணம், மகாபாரதம் மற்றும் புராணங்கள் எல்லாம் எடுத்துக் கூறுகின்றன. பல தலங்களில் சிவபூஜை செய்து நலம் பெற்ற இராமனும் கண்ணனும் மட்டுமன்று இராமாயண மகாபாரத மாந்தர்கள் எல்லோரும் சைவர்களாகவே விளங்கியுள்ளனர். இராமன், ஜனகர், வசிஷ்டர், விசுவாமித்திரர், குகன், வாலி, சுக்ரீவன், இராவணன் என எல்லோரும் சிவபக்தர்களே. மகாபாரதத்திலும் கண்ணன், பாண்டவர்கள், கர்ணன், கௌரவர் என அனைவரும் சிவபூஜை செய்யும் சைவர்களே இராமனுக்கு முற்பட்ட பரசுராமன், ஜமதக்கினி ஆகிய எல்லோரும் சிவபூஜை செய்யும் சிறந்த பக்தர்களே. அசுரர்கள், முனிவர்கள், நாகம், மிருகம் என எந்த இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சிவபூஜை செய்யும் சைவர்களாகவே விளங்கியுள்ளனர். வாமனனும் மகாபலியை ஏமாற்றிய பாவமும் பழியும் நீங்குவதற்காக சிவபூஜை செய்த சைவனே. நரசிம்மரை ஒடுக்கி விஷ்ணுவிற்கு அருள் புரிவதற்காக சிவபரம்பொருள் கொண்ட வடிவமே சரபமூர்த்தி. நரசிம்மர் சிவபூஜை செய்த தலமே சிங்கப்பூர் எனப்படும் சிங்கபுரி. சென்னையிலுள்ள மயிலாபுரி ஆங்கிலத்தில் மைலாப்பூர் என்று வழங்கப் படுவது போன்றே சிங்கபுரி என்பது சிங்கப்பூர் ஆயிற்று. ஆமை மற்றும் பன்றியாகப் பிறந்த திருமாலுக்கு மறக்கருணை புரிந்து ஆமை ஓட்டினையும் பன்றிப் பல்லையும் சிவ பரம்பொருள் அணிந்து கொண்டதைப் புராணங் களும் கடவுளை நேரில் கண்டு பாடிய அருளாளர்களின் தெய்வீகத் திருமுறைகளும் கூறுகின்றன.

**ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்**
**ஆறு சமயப் பொருளும் அவன் அலன்** (1533)

என மதங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்ட கடவுளை வழிபடும் செம்மையான நெறியாதலால் சைவம் எனப்பட்ட இயற்கையான திருநெறி மட்டுமே துவாபர யுகம் வரையிலும் உலகில் இருந்த ஒரே நெறியாகத் திகழ்ந் துள்ளது. பிள்ளையார் முருகன் பராசக்தி போன்று மகாவிஷ்ணு மகாலட்சுமிக்கு சிவாலயங்களில் தான் சந்நிதிகள் அமைந்திருந்தன. பெரும்பாலான சிவாலயங்களில் விஷ்ணுவிற்கும் லட்சுமிக்கும் சந்நிதி இருப்பதைக்காணலாம். இவ்வாறு சிவபக்தராகவே வணங்கப்பட்ட விஷ்ணு வழிபாடு கலியுகத்தில் பிரிந்து சென்று வைணவம் என்ற ஒன்று தோன்றியது. இதனால் விஷ்ணுவிற்குத் தனியே கோயில்கள் உண்டாகத் தொடங்கின. இதனால் சிவாகமங்களைப் பின்பற்றி வைணவ ஆகமங்கள் உண்டாயின. சிவாகமங்கள் மண் முதல் நாதம் வரை முப்பத்தாறு பொருட்களைக் கூறும்போது வைணவம் மண் முதல் ஆங்காரம் வரையுள்ள 24 பொருட்களை மட்டுமே கொண்டது. எல்லாம் கடந்த கடவுள் வழிபாட்டை மறுத்துவிட்டு அக்கடவுள் அருளிய வேதங் களையும் ஆகமங்களையும் மட்டும் எற்றுக் கொண்ட வைணவம் சிவபக்தனான விஷ்ணு தேவனையே கடவுள் என்று கூறியது. இதற்குப் பிறகு கடவுளையும் மறுத்து வேத ஆகமங்களையும் பழித்து தேவர் களையும் தூற்றி மனிதனையே கடவுள் என்று கூறும் புத்தம் சமணம் போன்ற போலி மதங்கள் வடநாட்டில் உண்டாயின.

பாலகனார்க்கு அன்று பாற்கடல் ஈந்திட்ட (திருவாசகம் 14:17)

பாலனுக்காய் அன்று பாற்கடல் ஈந்து

(அப்பர் 4:கடவூர் வீரட்டம் 2:6)

எனப் பிள்ளைப் பருவத்தில் பரமனிடமிருந்து பாற்கடலையே பெற்ற உபமன்னியு முனிவரிடம் சிவதீட்சை பெற்று நாள்தோறும் நியமத்துடன் சிவபூஜை செய்து வாழ்ந்த கண்ணனது காலத்திற்குப் பின்னர் கலி யுகத்திலே விஷ்ணு வழிபாடு வைணவம் என்ற தனிச்சமயமாகப் பிரிந்து சென்றது.

சக்கரம் பெற்ற நல் தாமோதரன் தானும் (368)

என சிவபூஜை செய்து சக்கரம் பெற்ற சிவபக்தராக விஷ்ணு போற்றப் பட்டதைக் கூறும் திருமந்திரம் விஷ்ணு வழிபாடு கலியுகத்தில் வைணவம் என்னும் தனிச் சமயமாகப் பிரிந்து சென்றதையும் கூறுகின்றது.

நாலாறு வயிணவர்க்கு (2179) என்று இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களை மட்டும் ஏற்றுக்கொண்ட வைணவத்தைத் திருமூலர் கூறியுள்ளார். ஆதலால் திருமூலர் கலியுகத்திலும் வாழ்ந்தவர் ஆகின்றார்.

பிறப்பிற்கு அப்பாற்பட்ட கடவுளை மறுத்துவிட்டு பிறவிப் பெருங் கடலில் நீந்தும் தெய்வம், மனிதர் போன்றவர்களைக் கொண்டாடுகின்ற

வர்கள் உண்டாக்கிய வைணவம், புத்தம், சமணம் போன்ற மதங்கள் எல்லாம் சைவத்தைத் தாக்கிப் பழித்து வளர்ந்தவையே என்பதையும் இவற்றால் எல்லாம் பாதிக்கப்படாத சைவத்தின் முழுமையான கடவுள் தன்மையையும்

விரிவிலா அறிவினோர்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்
(4: பெருவேளூர் 1:9)

என்று திருநாவுக்கரசர் தேவாரம் தெரிவிக்கின்றது.

தூர தரிசனம் சொல்லுவன் காணலாம் (823)

சொல்லுமாம் தூர தரிசனம் தானே (822).

என தொலை தூரத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளையெல்லாம் கண்டு அறியும் தெய்வீக ஆற்றல் பெற்றிருந்த திருமூலர் மாணிக்க வாசகரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அருமையாக விளக்கியுள்ளார். பதஞ்சலி, புலிக்கால் முனிவர், திருமூலர் போன்று பல காலங்கள் மிகக் கடுமை யாகத் தவம் செய்யும் பலப்பல மகா முனிவர்கள் வாழ்ந்த பழங் காலத்திலேதான் மாணிக்க வாசகரும் வாழ்ந்தார் என்பது

உலவாக்காலம் தவம் எய்தி உறுப்பும் வெறுத்து
இங்கு உனைக்காண்பான் பல மாமுனிவர் நனி வாடப்
பாவியேனைப் பணி கொண்டாய் (5:54)

என்ற திருவாசகத் தொடர்களால் தெளிவாகின்றது.

பரம்பொருள் அப்பொருள் பாராதே (26:9)

உலோகாயதன் என்னும் ஒண்திறல் பாம்பின்
கலாபேதத்த கடுவிடம் எய்தி (4:56-57)

ஆத்தமானார் அயலவர் கூடி நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர்
(4:46-47)

பூதல்ரால் உன் அடியான் என்று ஏசப்பட்டேன் (5:82)

என்று கூறும் மாணிக்க வாசகர் வாழ்ந்த மிதமிஞ்சிய நாத்திக நச்சுக் காலத்திலே திருமூலரும் இருந்தார் என்பது

நச்சியே அண்ணலை நாடுகிலாரே (278)

பத்தியைப் பாழில் உகுத்த அப் பாவிகள்
கத்திய நாய் போல் கதறுகின்றாரே (1199)

எண்ணிலி பாவிகள் எம் ஈசனை நண்ணறியாமல் நழுவுகின்றாரே
(1828)

இல்லை எனினும் பெரிதும் உளன் எம் இறை (2103)

என்ற திருமந்திரத் தொடர்களால் தெளிவாகின்றது.

சிவபரம்பொருள் பரமகுருவான தட்சிணா மூர்த்தித் திருக்கோலத்தைக் காட்டியும் ஓங்காரம் உபதேசித்தும் திருநோக்கம் அருளியும் திருவடி பதித்தும் மாணிக்கவாசகரை ஆட்கொண்டதை

அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரனாகி அருளிய பெருமை (4:75-76)

திகழா நின்ற திருமேனி காட்டி என்னைப் பணி கொண்டாய் (33:10)

கண்ணால் யானும் கண்டேன் (3:58)

நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து (26:8)

நாயேனை ஆனந்த வெள்ளத்து அழுத்துவித்தான் (12:10)

ஓங்காரத்து உட்பொருளை ஐயன் எனக்கு அருளியவாறு (51:7)

என்னை ஓர் வார்த்தையுட்படுத்துப் பற்றினாய் (23:2)

பூவார் அடிச்சுவடு என் தலை மேல் பொறித்தலுமே (11:7)

உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா (1:33-34)

என்னையும் பூதலத்தே வலித்து ஆண்டுகொண்டான் (11:7)

என்று திருவாசகம் கூறுகின்றது. இந்த அற்புதத்தை

நந்தி தன்னைக் குருவடிவில் கண்ட கோனை என் கோவை (1597)

குருபரன் சேர்த்த சேவடி சென்னியில் வைத்து
ஒரு வார்த்தை சொல்லி வழக்கு அறுத்து ஆண்டவன்
பார்த்த பார்வை (3080)

ஆனந்தத்து உய்த்துப் பிரணவமாம் உபதேசத்தை
மெய்த்த இதயத்துள் விட்டிடும் மெய்யுணர்ந்து
அத்தற்கு அடிமை அடைந்து நின்றானே (2491)

என்று திருமூலர் மிக அருமையாக விளக்கியுள்ளார்.

கன்றை நினைந்து எழு தாயென வந்த கணக்கு (49:2)

தேடி நீ ஆண்டாய் சிவபுரத்தரசே (திருவாசகம் 28:3)

என்று மாணிக்கவாசகரை ஆட்கொள்வதற்கு அவரிடம் வந்த பரமேஸ்வரன் அடியார் வடிவில் இருந்த சிவகணங்களை அவருடன் விடுத்து மறைந்தார். மாணிக்கவாசகரின் வேண்டுகோளுக்கு ஏற்ப மீண்டும் தோன்றி தழல்

நடுவே லிங்கோற்பவ மூர்த்தியாய் உமையொடும் காட்சி தந்த நந்தி வாகனன் அடியார்களையெல்லாம் சிவஜோதியில் புகுந்து கயிலை அடையுமாறு கூறி மாணிக்க வாசகரை மட்டும் மண்ணுலகிலேயே இருந்து வாழுமாறு பணித்துவிட்டு மறைந்தருளினார். அடியார்கள் எல்லாம் அருட்பெரும் சோதியில் புகுந்து சிவலோகம் சென்றுசேர, ஈசனைப் பிரிந்து இவ்வுலகில் வாழ முடியாமல் தவித்த மாணிக்கவாசகர் தன்னையும் அழைத்துக் கொண்டருளுமாறு வேண்டித் தொழுது முறையிட்டு அழுதார். இதனை

வெளிப்படாய் என்ன வியன் தழல் வெளிப்பட்ட எந்தாய் (29:3)

போரேறே நின் பொன்னகர் வாய் நீ போந்தருளி இருள் நீக்கி
வாரேறிள மென் முலையாளொடும் வந்து அருள அருள் பெற்ற
சீரேறடியார் நின் பாதம் சேரக் கண்டும் கண்கெட்ட ஊர் ஏறாய்
இங்கு உழல்வேனோ கொடியேன் உயிர்தான் உலவாதே (5:53)

சிவமாநகர் குறுகப் போனார் அடியார் (5:85)

புழுக்கூடு இது காத்து இங்கு இருப்பதாக முடித்தாயே (5:56)

எனை வைப்பதோ சொலாய் நைய வையகத்து (5:98)

நான் உண்டு உடுத்து இங்கு இருப்பது ஆனேன் (5:52)

என்னை நீ கூவிக் கொண்டருளே (28:2)

மண்ணின் மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருக என்ற அருள் புரியாயே (28:5)

ஒழித்திடு இவ்வாழ்வு (5:66)

எனைச் செத்திடப் பணியாய் (23:3)

இறப்பதனுக்கு என் கடவேன் (5:12)

என் செய்கேன் இது செய்க என்று அருளாயே (23:6)

என்ற திருவாசகத் தொடர்கள் தெரிவிக்கின்றன. இச்சம்பவம் நிகழ்ந்த போது திருவாவடுதுறையில் தலமரமான போதிமரத்தடியில் தவத்தில் இருந்த சிவகணநாதரான திருமூலர் சிவகணங்கள் கயிலை சென்று சேர்வதையும் அதைக் கண்டு மாணிக்கவாசகர் முறையிட்டு நிற்பதையும்

உடையான் அடியார் அடியாருடன் போய்
படையார் அழல் மேனிப் பதி சென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டு அறிவிப்ப
உடையாய் வருக என ஓலம் என்றாரே (547)

என்று கூறியுள்ளார். தில்லையம்பலக் கூத்தன் மாணிக்க வாசகரிட மிருந்து திருவாசகத் துதிகளை எழுதிச் சென்றதை

இருந்துதி என்வயின் கொண்டவன் (திருக்கோவையார் - 300)

என்று மாணிக்கவாசகர் கூறியுள்ளார்.

இவ்வாறு பொன்னம்பலவன் மாணிக்க வாசகங்களை எழுதும் சேவகக் கூத்தராக விளங்கியதை

செம்பொன் திருமன்றுள் சேவகக் கூத்தனை (74)

என்று திருமூலர் போற்றியுள்ளார்.

இறைவனை நேரில் கண்டு அனுபவித்துப் பாடிய புலவர்கள் யாரையும் கேள்விப்பட்டது கூடக் கிடையாது என்பதை

நினைப்புலவோர் கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறியோம் உனைக் கண்டு அறிவாரை (20:5)

என்று திருப்பள்ளியெழுச்சித் தொடர்களிலே மாணிக்கவாசகர் கூறி யுள்ளார். எனவே கயிலை மலையில் பல்லாண்டுகள் தவம் செய்து பரமனது திருக்காட்சி பெற்று அஷ்டமகா சித்திகளையெல்லாம் அடைந்த திருமூலர் பாடிய திருமந்திரம் மாணிக்க வாசகரது காலத்திற்குப் பிறகே முற்றுப் பெற்றது என்பது விளங்குகின்றது.

எனவே அகத்தியர், பதஞ்சலி, வியாக்ரபாதர் ஆகிய முனிவர் களின் காலத்திலேயே பூமிக்கு வந்த திருமூலர் மாணிக்க வாசகருக்குப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பழைமையானவர். ஆனாலும் மாணிக்கவாசகரது முக்திக்குப் பிறகே திருமந்திரம் முற்றுப்பெற்ற காரணத்தால் இன்றுள்ள தமிழ் இலக்கியங்கள் எல்லாவற்றுக்கும் மிகப் பழைமையான நூல் திருவாசகமே ஆகின்றது.

சமண சமயத்திற்கு மதம் மாற்றப்பட்ட பின்னர் கலிங்க நாட்டு வடுக மன்னன் காரவேலன் தன் பதினொன்றாம் ஆண்டு ஆட்சிக் காலத்தில் நூற்றுப் பதிமூன்று ஆண்டுகள் நிலவி வந்த உடன் படிக்கையை மீறித் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்து பாண்டியர் தலைமையில் எதிர்த்த தமிழ் மன்னர்களை வென்று தமிழ்நாட்டைக் கைப்பற்றினான் என்று ஒரிஸ்ஸாவில் உள்ள ஹாதிகும்பா கல்வெட்டு கூறுகின்றது. இச்செய்தியைக் கல்லாடம், பழைய திருவிளையாடல் புராணம், பெரிய புராணம் ஆகியவை மூர்த்தி நாயனார் வரலாற்றில் கூறுகின்றன. இந்த மன்னனது ஆட்சியில் தமிழர்ச் சமயமும் அடியார் களும் அடைந்த துன்பங்களையும் மூர்த்தி நாயானாருக்குப் பரமேஸ்வரன் அருளிச் செய்த அற்புதத்தையும் திருமந்திரம் கூறகின்றது.

பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தம் கலங்கச் சிதைவுகள் செய்தவர் (532)

ஈசன் அடியார் இதயம் கலங்கிட
தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசமதாகும் நம் நந்தி ஆணையே (534)

அரசு நிலை கெடும்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்
காவலன் பேர் நந்தி கட்டுரைத்தானே (515)

என்று திருமூலர் கூறியுள்ளார். காரவேலனின் காலம் கலியுகம் 30-ஆம் நூற்றாண்டிற்கு அதாவது கி.மு.இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதல்ல. காரவேலர் காலத்தில் தமிழ்நாட்டில் புகுந்த அமண குருமார்கள் வேதங்களையும் ஆகமங்களையும் பழித்துத் தூற்றியும் எந்நேரமும் சண்டையிட்டு வாதபேதங்கள் செய்தும் தானதர்மம், அறநெறி, பரிவு, அன்பு போன்ற நற்பண்புகள் எதுவும் இல்லாமல் எந்நேரமும் பிச்சை எடுத்து உண்டு கொலை,கொள்ளை, களவு, புறங்கூறுதல், மதமாற்றம், கோயில்களை அடைத்தல், மறைத்து வைத்தல், இடித்தல் போன்ற இழிவான செயல்களையே செய்தும் தமிழ்நாட்டைக் கெடுத்து வந்ததை

வேத ஆகம நெறி காணோன்
பணிவு ஒன்று இலாதோன் பரநிந்தை செய்வோன் (2044)

அறிவற்றுப் பூசற்கு இறங்குவோர் போதக்குரு அன்றே (2052)

ஞானமில்லார் வேடம் பூண்டு
இந்த நாட்டிடை ஈனமதே செய்து இரந்து உண்டு (1656)

என்று திருமூலர் கூறியுள்ளார். பௌத்தர்களைக் கூட்டாகக் கொண்டிருந்த தீயபுத்தி கொண்ட அமணர்களின் அளவிற்கு மீறிய ஈனச் செயல்களைத் திருக்குறளும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களும் கூறுகின்றன.

நன்றாய்ந்த நீள் நிமிர்சடை முதுமுதல்வன் வாய்போகா
ஒன்று புரிந்த ஈரிரண்டின் ஆறு உணர்ந்த
ஒரு முது நூல் இகல் கண்டார் மிகல் (புறநானூறு 166)

மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார்
இகல் மேல் இன்னர் அறிவின் அவர் (குறள் 857)

சேரா அறத்துச் சீரிலோரும் அழிதவப்படிவத்து அயரியோரும்
(பரிபாடல் 5)

பூப்பலி விட்ட கடவுள் (கலித்தொகை 93)

மரஞ்சேர் மாடத்து எழுது அணி கடவுள் போகலின்
பூப்பெய்து ஒழுகுபலி மறந்த (அகநானூறு 167)

கடவுள் கந்தம் கைவிடப் பலிகள் மாறிய பாழ்படு பொதி

(புறநானூறு 52)

கந்தம்-கம்பம் (லிங்கம்). பலி - வழிபாடு, பூஜை

என்பன போன்ற தொடர்கள் பௌத்த சமணர்கள் தமிழர்களின் புனித நூல்களைப் பழித்துத் தூற்றியதையும் கோயில்களுக்குச் செய்த கொடுமை களையும் காட்டுகின்றன. புறச்சமயிகளான பௌத்த சமணர்களின் தாக்குதல் களிலிருந்து தொண்டர்கள் கோயில்களைச் சிறந்த முறையில் பாதுகாத்து வந்ததை

சிறந்து புறம் காக்கும் கடவுட்பள்ளி

என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது. கோயில் பணி புரியும் பெண் பக்தர்கள் கோயில் பிணாப்பிள்ளைகள் என்று திருவாசகத்தில் போற்றப் பட்டனர். (7:10) கோயில் பணி செய்து புனித வாழ்வு வாழும் இப் பெண்ணடியார்களை அறங்காவல் பெண்டிர் என்று பரிபாடல் போற்று கின்றது. (பரிபாடல் திரட்டு 2)

ஏழையடியார் அவர்கள் யாவை சொன்ன சொல் மகிழும் ஈசன்

(ஏழை-பெண்)

என்று சம்பந்தர் தேவாரம் போற்றுகின்றது.

மதுரையில் பக்திப் புலவர்கள் கூடி சங்கம் அமைத்து இயல் இசை நாடகம் என்ற மூன்று துறையிலும் தெய்வத் தமிழ் வளர்த்து வந்த சங்ககாலத்தில் பக்தியற்ற சில புலவர்கள் கள், காமம், மாமிசம் போன்ற தீய பழக்க வழக்கங்களையும் வீரம் என்ற பெயரில் கொடிய போர்களையும் பாராட்டிப் பாடி வந்தனர். இத்தகைய ஒழுக்கமற்ற காமப் புலவர்களின் பொய்யான புகழ்ச்சியில் மயங்கிய மன்னர்கள் தங்களுக்குள் ஒற்றுமை யில்லாமல் ஒருவரோடு ஒருவர் போரிட்டுப் பகை கொண்டனர். இதனை

காமத் தொழில் நின்று மாதவன் இன்பம் மறந்து ஒழிந்தார்களே

(2091)

அறம் அறியார் அண்ணல் பாதம் நினையும்
திறம் அறியார் சிவலோக நகர்க்குப் புறம்
அறியார் பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம் அறிவார் பகை மன்னி நின்றாரே (262)

என்று திருமூலர் கூறியுள்ளார். ஆணும் பெண்ணும் முறையே பதினாறு வயதிலும் பன்னிரண்டு வயதிலும் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்த சமுதாயத்தில் அகம் என்று கணவன் - மனைவி உறவையோ, குடும்ப வாழ்க்கையையோ பாடாமல் நடைமுறைக்கு ஒவ்வாத, சமுதாயத்தில் இல்லாத களவு, காமம் போன்ற ஒழுக்கக் கேடான உறவுகளையே நாடக

வழக்கில் பாடிய இத்தகைய பொய்ப் புலவர்களால் சமுதாயம் தீய பாதையில் செல்லாமல் இருப்பதற்காகக் காமத்தைப் பாடும் பாடல்களில் பெயர் குறிக்கக் கூடாது என்ற விதிமுறையைத் தொல்காப்பியர் வகுத்தார். இத்தகைய புலவர்களைக் கண்டித்து சமுதாயத்திற்கு நன்னெறி காட்ட விரும்பிய திருமூலர் வேதங்களிலும் ஆகமங்களிலும் கூறப்பட்டுள்ள அறநெறிக் கருத்துக்களைத் திருமந்திரத்தில் தலைப்புகளாக்கித் வலியுறுத்திக் கூறினார். திருமூலரைப் பின்பற்றியே பின்னர் திருவள்ளுவரும் திருமந்திரத் தலைப்புகளையே அதிகாரத் தலைப்புகளாக்கித் திருக்குறள் இயற்றினார். திருமூலரின் திருமந்திரத்தில் வலியுறுத்தப்படும் தலைப்புகளான வானச் சிறப்பு, தவம், ஊழ், ஞானம், துறவு, அன்புடைமை, பொறையுடைமை, அவா அறுத்தல், அறம் செய்வான் திறம், கூடா ஒழுக்கம், புறங்கூறாமை, வாய்மை, நடுவுநிலைமை, கொல்லாமை, புலால் மறுத்தல், கள்ளுண்ணாமை, பெரியாரைத் துணைக்கோடல், கல்வி, கேள்வி, கல்லாமை, பிறன்மனை நயவாமை, நிலையாமை, ஒழுக்கம் உடைமை, நல்குரவு, தானச் சிறப்பு, அரசாட்சி முறை ஆகியவையே திருக்குறளிலும் தலைப்புகளாக அமைந்து விளக்கப்படுகின்றன. இவ்வாறு திருமந்திரத்தைப் பின்பற்றி வேதங்களின் கருத்துக்களையே திருவள்ளுவர் எல்லோருக்கும் புரியும் வகையில் எளிய மொழியில் குறளாகச் செய்தார் என்பதை

வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார் ஓத
இன்பம் பொருள் அறம் வீடு என்னும் இந்நான்கும்
முன்பு அறியச் சொன்ன முதுமொழி நூல்
மன்பதைகட்கு உள்ள அரிது என்று அவை வள்ளுவர்
உலகம் கொள்ள மொழிந்தார் குறள்
அறம் பொருள் இன்பம் வீடு என்னும்
அந்நான்கின் திறம் தெரிந்து செப்பிய தேவை
(திருவள்ளுவமாலை)

என்று நரிவெரூஉத் தலையார் போன்ற பலப்பல சங்ககால நாடகப் புலவர்கள் பாராட்டியுள்ளனர்.

வேதப்பொருளைப் பாடும் திருக்குறளின் தெய்வீகம் காரணமாக சங்கத்தின் தலைமைப் புலவனான சிவபெருமானே முதலில் வாழ்த்துக் கவி பாடி திருக்குறளைச் சங்க நூலாக ஏற்றுக்கொண்டதை

**சமயக் கணக்கர் மதிவதி கூறாது**
**உலகியல் கூறி பொருள் இது என்ற**
**வள்ளுவன் தனக்கு வளர் கவி புலவர் முன்**
**முதற்கவி பாடிய முக்கட்பெருமான்** (கல்லாடம்13)

என்று சங்கப்புலவரான் கல்லாடர் கூறுகின்றார்.

திருமந்திரம், திருக்குறள் ஆகியவற்றைப் பின்பற்றி பத்துப்பாட்டு எட்டுத்தொகைப் புலவர்கள் கூட தீய பழக்க வழக்கங்களைக் கண்டிக் கலாயினர்.

சங்க காலத்தில் திருமூலரின் பெயர் புகழ்பெற்று விளங்க அவரது பெயர் மக்களுக்குப் பெயராக வைக்கப்பட்டு வழங்கப்பட்டதை மாமூலனார் இளம் போதியார் என்ற எட்டுத்தொகைப் புலவர்களின் பெயர்கள் காட்டுகின்றன.

திருவாவடுதுறை போதிமரத்தடியில் (அரசமரம்) பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் இளமையுடன் வாழ்ந்ததால் திருமூலருக்கு இளம்போதியார் என்று பெயர்.

எனவே திருமூலரின் காலம் அசுர குலம் மற்றும் அகத்தியர் பதஞ்சலி புலிக்கால் முனிவர் போன்றவர்கள் வாழ்ந்த காலத்தில் தொடங்கி திருக்குறள் மற்றும் 49 சங்கப் புலவர்களின் காலத்திற்கு முன்பு வரை அடங்குகின்றது. அதாவது துவாபர யுகத்திற்கு முன்பு பூமிக்கு வந்த திருமூலர் கலியுகம் 31ஆம் நூற்றாண்டு வரை (கி.மு.முதல் நூற்றாண்டு) வாழ்ந்துள்ளார். துவாபர யுகத்திற்கு முன்பு பூமிக்கு வந்த திருமூலர் கலியுகத்தின் தொடக்கத்தில் திருமந்திரம் இயற்றத் தொடங்கி மூவாயிரம் ஆண்டுகளில் ஆண்டுக்கு ஒரு பாடலாகப் பாடிமுடித்தார். இப்போதுள்ள திருமந்திரப் பதிப்புகளில் திருமூலர் பாடிய வரிசைப்படி பாடல்கள் இல்லை. எவ்வாறு திருவாசகப் பதிப்புகளில் மாணிக்க வாசகர் இறுதியில் பாடிய நமச்சிவாய வாஅழ்க என்ற பதிகமும் பிற தில்லைப் பதிகங்களும் முதலா வதாக அமைக்கப்பட்டுள்ளனவோ அவ்வாறே திருமூலரின் திருமந்திரத்திலும் பாடல்கள், தலைப்புகள் எல்லாம் முன் பின்னாக அமைக்கப்பட்டுள்ளன.

திருமந்திரத்தில் உள்ள வேத ஆகமங்களின் முதற்பகுதியாகிய கர்மகாண்டச் செய்திகளைத் திருக்குறள் விளக்கிக் கூறியது போல் திருமந்திரத்தில் கூறப்படும் ஞானகாண்டச் செய்திகளையே பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்கள் விளக்கிக் கூறின. பல சாத்திர நூல்கள் திருமூலர் காலத்தும் அதற்கு முன்பும் இருந்ததை

**தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம் (87)**

என்று திருமந்திரம் கூறுகின்றது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்த அவையெல்லாம் தமிழ்மொழியை வெறுத்துப் பழித்துத் தமிழ்ச் சங்கத்தை அழித்த சமண மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் (களப்பிரர்கள் காலம்) அழிக்கப்பட்டு விட்டன. களப்பிரர்கள் என்ற சமண மன்னர்கள் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்து ஆண்டபோது மதுரை மன்னர்கள் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்து ஆண்டபோது மதுரை சுந்தரேஸ்வரர் திருக்கோயிலும் திருக்கோயிலில் இருந்த தமிழ்ச் சங்கமும் அழிக்கப்பட்டன. சங்க நூல்கள்

எல்லாம் கொள்ளியிடப் பட்டன. தமிழையும் புலவர்களையும் தமிழர்ப் பண்பாட்டையும் வெறுத்துப் பழித்த களப்பிரர்களின் ஆட்சிக்காலத்தில் தமிழ் மொழி மிகவும் நொந்து கிடந்தது. புலவர்கள் பழிக்கப்பட்டனர், தமிழ் சமஸ்கிருதம் போன்ற மொழிகள் பயிலப்படாமல் புறக்கணிக்கப் பட்டன. இசை நடனக் கலைஞர்கள் புறக்கணிக்கப்பட்டனர் என்பதை

**ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன் அறிகிலா அந்தகர்**
(3: ஆலவாய் 3:4)

**புலவோர்களைப் பழிக்கும் பொலா அங்கதர்** (3: ஆலவாய் 3:2)

**சங்கம் எனும் துங்கமலி கடலுள்**
**அரிதில் எழுந்த பரிபாட்டு அமுதம்**
**அரசு நிலை திரீஇ அளப்பரும் காலம்**
**கோதில் சொல்மகன் நோதகக் கிடத்தலின்**
**நிருத்தர் கீதர் இடர்** (1:நெடுங்களம் 1:6)

என்று பரிபாடல் உரை சிறப்புப் பாயிரமும் சம்பந்தர் தேவாரமும் புலப்படுத்துகின்றன. எனவே திருமந்திரமே மெய்கண்ட சாத்திர நூல் களுக்கு முதல் நூலாக விளங்கியது.

திருமூலரின் வரலாறும் காலமும் திருமந்திரத்திலேயே இவ்வளவு அழகாக விளக்கப்பட்டு இருக்கும் போது இவற்றைத் தமிழுலகம் ஒரு சிறிதும் உணராமல் கற்பனை, யூகம், விருப்பு, வெறுப்பு, ஆகியவற்றின் அடிப்படையில் கருத்து தெரிவிப்பது மிகவும் வேதனைக்கு உரியது. மூல நூல்களைப் படிக்கும் ஈடுபாடும் பொறுமையும் திறமையும் உண்மை உரைக்கும் பண்பும் இல்லாத தமிழாசிரியர்கள், தமிழறிஞர்களின் செயல் வெட்கப்பட வேண்டிய ஒன்று.

ஒருவரைப் பற்றிப் பேசும்போது அவர் என்ன கூறியுள்ளார் என்று அவரது வாக்குமூலத்தைப் பார்க்காமலேயே அகச் சான்றுகளைப் புறக்கணித்து விட்டு அவரைப் பற்றிக் கருத்துக்கள் தெரிவிப்பதாலேயே நக்கீரர், மாணிக்க வாசகர் உட்பட பல தெய்வீகப் புலவர்களின் வரலாறு களும் காலமும் மனம் போனபடி திரித்து உரைக்கப்பட்டு மாசுபடுத்தப்படு கின்றன. ஒருவருடைய உண்மையான வரலாறு தெரியும்போது மட்டுமே அவர் காலம் பற்றிய உண்மையும் புலனாகும். யாரைப் பற்றிப் பேசினாலும் நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் போன்று தக்க ஆதாரங் களுடன் உண்மையைப் பேச வேண்டும் என்று தமிழறிஞர்கள் முயன்றால் யாருடைய வரலாறும் காலமும் தவறாகப் போவதற்கு இடமே இருக்காது.

சுந்தரர் சிவ கணங்களுள் ஒருவர். ஆதலால் சிவகண நாதரான திருமூலரை

**நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்**

என்று போற்றிப் புகழ்ந்தார்.

# 14. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

திருமதி ஆ.எஸ்தர் பிரதீபா, சிதம்பரம்.

சைவ சமயத்தின் உயிர்நிலையை விளக்கும் பன்னிரெண்டு திருமறைகளுள் பத்தாம் திருமுறையாகிய "திருமந்திர மாலை" என்னும் திருமந்திரம் எல்லாத் திருமுறைகளுக்கும் காலத்தால் முற்பட்டது.

இந்நூல் "தமிழ் மூவாயிரம் எனவும் வழங்கப்படுகிறது. சுந்தர நாதர் என்னும் இயற்பெயருடைய திருமூலரால் இயற்றப்பட்டு உலகுக்கு அளிக்கப்பட்டது.

திருமூலர் நந்தி திருவருள் பெற்றவர் என்றும் அணிமாதி சித்தி பெற்றுடையார் என்றும் நான்மறை யோகிகளியொருவர் என்றும் தவமுனிவர் என்றும் சேக்கிழாரால் போற்றப்பட்டவர்.

இவர் இயற்றிய திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப் பெற்ற 3000 பாடல்களைக் கொண்டது. இம்மூவாயிரம் பாடல்களும் தேவர் தலைவனாம் சிவபெருமானின் சிறப்புகளை சீரிய முறையில் எடுத்தியம்புகின்றன. இப்பாடல்கள் வாயிலாக சிவபெருமானின் தன்மைகளை, குண நலன்களை சைவ சித்தாந்தச் சிறப்புகளை திருமூலர் தொகுத்து வழங்கியுள்ளார்.

பொருள் செறிந்த அப்பாடல்கள் படிக்கத் தெவிட்டாதவை, செவிக்கு இன்பம் பயப்பவை முக்திக்கு வழிகாட்டுபவை. சைவ நெறி மெய்யுணர்ந்த திருமூலர் காட்டும் சிவபெருமானின் பெருமைகள் ஆயிரமாயிரம். அவை எண்ணிலடங்காதவை. அவற்றை திருமூலர் கண்ணாரக் கண்டுள்ளார்.

அவர் தான் கண்டு அறிந்த சிவபெருமானை யாவரும் அறியும் வண்ணமாக இந்நூலை கருத்தாழத்துடன் யாத்துத் தந்துள்ளார். திருமந்திரம் காட்டும் சிவபெருமானின் பெருமைகளை இங்கு காண்போம்.

இந்நூலின் பாயிரமாக அமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்களுள் 4-ஆவது பாடலில் "சிவனோடொக்கும் தெய்வம் வேறில்லை" என்பதின் மூலம் சிவனேயன்றி வேறு தெய்வம் இல்லை. அவனே முழு முதற் கடவுள். அவனுக்கு ஒப்பானவர் வேறு யாரும் இல்லை என்று கூறி வணங்குகிறார். இதனால் சிவபெருமான் ஒப்பற்றவன் என்பதை

அறிகிறோம். மேலும் அதே பகுதியில் 16-ஆவது பாடலில் "அமரரும் தேவரும் கோது குலாவி குணம் பயில்வாரே" என்று கூறி அமரரும் தேவரும் அவனை வாழ்த்தி வணங்குகின்றனர். மானிடராகிய நாமும் வணங்க வேண்டும் என்பதாக 36-வது பாடலில் "ஏத்துமின், ஏத்தினால் அப்பரிசீசன் அருள் பெறலாமே" என்று அவன் வணங்குபவர்களுக்கு அருள் புரியும் அருளாளன் என்கிறார். மேலும் அவன் தன்னை வணங்கு பவர்களுக்கு இணக்கமானவன் என்பதை 41-ஆவது பாடல் மூலம் கூற வருகிறார் "சினஞ் செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப் புனஞ் செய்த நெஞ்சிடை போற்ற வல்லார்க்குக் கனஞ் செய்த வாணுதல் பாகனும் அங்கே இனஞ் செய்த மான்போல் இணங்கி நின்றானே" என்கிறார்.

இவற்றின் மூலம் சிவபெருமானின் குணநலன்கள் அறியப்படு கின்றன. இவ்வாறு தன்னை நன்றாகப் படைத்த சிவபெருமானை நன்றாகத் தமிழில் பாடினார்.

முதல் தந்திரப் பாடல்களில் சிவனின் வல்லமை விளக்கிக் காட்டப் படுகிறது. "களிம்பறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி (பாடல் 114) என்பதால் அவன் பாவங்களை நீக்கும் "பாபநாசன்" என்றும் அதே சமயம் "அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" என்ற அடியின் மூலம் (பாடல் 270) சிவன் அன்பு வடிவானன் என்கிறார். உள்ளம் உருக வேண்டினால் அவன் யாருக்கும் காட்சி தரும் காட்சிக்கு எளியன் என்கிறது திருமந்திரம்.

**ஆர்வம் உடையவர்க்கு சிவன் காட்சி தருவான்**
**ஆர்வம் உடையவர் காண்பார் அரன் தன்னை**
**ஈரம் உடையவர் காண்பார்இணையடி** பாடல் (273)

அடுத்து சிவன் பேரறிவாளன் வாலறிவன்; அதனால் தன்னிடம் அன்பு கொண்டாரை உடனே அறிந்து கொள்வான்.

**"ஈசன் அறியும் இராப்பகலும் தன்னை**
**பாசத்துள் வைத்து பரிவு செய்வார்களை"** (பாடல் 288)

என்கிறார். சிவனை இறை என்றும் ஈசன் என்றும் போற்றுகின்றார். அவன் எங்கும் நிறைந்திருப்பான் என்கிறார்.

**"எல்லா இடத்தும் உளன் எங்கள் தம் இறை"** (பாடல் 311)

இரண்டாம் தந்திரத்தில் பல புராணச் செய்திகளின் மூலம் அவனது பண்புகளை விவரிக்கிறது திருமந்திரம். சிவன் அழித்தல் தொழில் செய்பவன். ஐந்தொழிலும் செய்வான் அவனே. தக்கனின் வேள்வியை அழித்தவன் என்ற செய்தி "தந்தை பிரான் வெகுண்டான் தக்கன் வேள்வி" என்பதன் மூலம் காட்டப்படுகிறது. (பாடல் 353)

அன்பே உருவான சிவபெருமான் அகந்தையைக் கண்டால் வெகுண்டெழுந்து சினஞ்செய்வான்.

அதேபோல் சினங்கொண்டு திரிபுரத்தை அழித்தவன் என்பது ''வில்லாற்புரத்தை விளக்கெரி கோத்தவன்'' என்பதின் மூலம் தெரிவிக்கப் படுகிறது.

சிவபெருமான் ஜோதி வடிவானவன் அவன் பரந்து விரிந்து விஸ்வரூபம் காட்டும் போது அவனது முடியையும் அடியையும் தேடி அலைந்து பிரம்மாவும் திருமாலும் அரற்றித் திரிகின்றனர் என்ற செய்தி கீழ்வருமாறு கூறப்படுகிறது.

''பிரம்மன் மால்..................
சரனடி தேடி அரற்றுகின்றாரே'' (பாடல் 372)

மேலும் சிவபெருமான் படைத்தல் தொழிலையும் செய்கிறான். ''புவனம் படைப்பான் அப்புண்ணியன் தானே'' (பாடல் 386) என்பதால் அவன் சிறந்த படைப்பாளி படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில்களையும் செய்யும் ''ஐந்தொழிலோன்'' என்ற குறிப்பு நூல் முழுவதிலும் விரவி வருகிறது.

மூன்றாம் தந்திரத்தின் மூலம் பாம்பை கழுத்திலும் பிறைமதியைச் சடையிலும் அணிந்து அவற்றின் பகைமையைத் தீர்க்கும் பகை தீர்ப்பாளன் அவன் என்பது தெரிய வருகிறது. ''பாம்பு மதியும் பகை தீர்த்துடன் கொளீஇ நீங்கல் கொடானே நெடுந்தொகையோனே'' (பாடல் 871)

நான்காம் தந்திரத்தில் சிவநாமம் கூறப்படுகிறது. ''நமச்சிவாய'' என்பது அவன் நாமம். அதைக் கூறி ஜெபிப்போருக்கு பிறப்பு நீங்கும். அவன் ஐந்தெழுத்து வேந்தன். அரகர என்று கூற செய்ய முடியாத காரியங்கள் கூட கைகூடும். இதை

''......சிவாய நமச்சிவாய நம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை'' (பாடல் 905)

என்றும்

''அஞ்செழுத்தாலே அமர்ந்தனன் நந்தியும்'' (பாடல் 934)

என்றும்

அரகர என்ன அறியதொன்றில்லை (பாடல் 916)

என்றும் கூற சிவநாமம் காட்டப்படுகிறது. அதோடு முக்கண்ணன், சண்முகனின் தந்தை, ஆலம் உண்டவன், சடை முடியோன் என்ற பெயராலும் குறிக்கப்படுகிறான்.

"முக்கண்ணன் தானே முழுச்சுடராயவன்" (பாடல் 1025)

"எந்தை பிரானுக்கு மூன்று வட்டமாய்த்
தந்தை தன்முன்னே சண்முகம் தோன்றலால்" (பாடல் 1026)

"ஆலமுண்டான் அமுதாம் ஆங்கவர்தம் பாதம" (பாடல் 1211)

"மாயம் புணர்க்கும் வளர் சடையானடி" (பாடல் 1249)

மேற்கண்டவற்றால் அவனது நாமமும் உருவமும் காணக்கிடைக்கின்றன.

ஐந்தாம், ஆறாம் தந்திரங்களில் சிவன் சைவ சமயத்தின் நாயகன் என்றும் சைவ நெறியை வகுத்தவன் என்றும் வகுத்ததைப் போதிக்கும் குரு என்றும் திருமந்திரம் காட்டுகிறது.

"சைவ சமயத்தின் தனி நாயகன் நந்தி
உய்ய வகுத்த குரு நெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ்சேர்த் துய்ய
வையத்துள்ளார்க்கு வகுத்து வைத்தானே" (பாடல் 1567)

"குருவே சிவமெனக் கூறினான் நந்தி" (பாடல் 1581)

என்பதால் சன்மார்க்கம் கூறும் வழிகாட்டியாகிறான் சிவபெருமான். அதேபோல் சிவனின் இணையடியே மந்திரம். அதுவே மாமருந்து அதுவே தந்திரம். அதுவே தானம், அதுவே அழகு அதுவே தூய நெறி என்பதும் கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது.

"மந்திரமாவதும்...........இணையடிதானே" (பாடல் 1604)

சிவன் கேட்போருக்கு வாரி வழங்கும் வள்ளல், செல்வம், ஞானம் போன்றவற்றை வழங்குவதோடு சிவலோகத்தையும் அளிப்பவன். அவன் அருளால் மாந்தர்கள் தேவர்களாகி தெய்வத்துக்கிணையாக மாறுவர் என்கிறார் திருமூலர்.

"பிரானருள் உண்டெனில் உண்டு நற்செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்" (பாடல் 1645)

"அவனருளால் வினைநீங்கி சிவலோகம் சித்திக்கும்"
(பாடல் 1649)

சிவபெருமான் அழகன். அவன் சுந்தரன், எழில் வடிவானவன். அவன் வடிவம் இலிங்கம். அவன் குறியீடு "ஓம்" போன்ற செய்திகளை ஏழாம் தந்திரம் காட்டுகிறது.

"எரிகொண்ட ஈசன் எழில் வடிவானவன்" (பாடல் 1653)

"மானிடராக்கை வடிவு சிவலிங்கம்" (பாடல் 1726)

"அகார வுகாரம் இலிங்கம் தானே" (பாடல் 1753)

எட்டாம் தந்திரம் சிவனை முதலும் முடிவுமானவன் என்கிறது.

"அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்" (பாடல் 2594)

தன்னைப் பரவும் அடியாருக்கு அடிமையாகிறார் சிவன்.

"அடியார்...............................
அடியானிவனென் றடிமை கொண்டானே" (பாடல் 2624)

எங்கும் நீங்கமற நிறைந்து நிற்பவன் என்பது

"காலினில் ஊறும்.........எங்கும் கலந்து நின்றானே"
(பாடல் 2639)

என்பதால் தெரிவிக்கப்படுகிறது.

ஒன்பதாம் தந்திரப் பாடல்கள் மிகவும் சிறப்புடையன. திருமூலர் தான் கண்ட சிவகூத்துத் தரிசனத்தை விரிவாகத் தந்து அவன் தலைசிறந்த கூத்தன் என்பதை நிரூபிக்கிறார். 2722 முதல் 2803 முடிய கூறப்பட்ட பாடல்கள் அத்திருக்கூத்து தரிசனத்தை விவரிக்கிறது. திருமூலர் முன்னிலை யில் சிவபெருமான் ஆனந்தக் கூத்தனாய் சிவானந்தக் கூத்தனாய் தில்லைக் கூத்தனாய், பொற்பதியிலுள்ள கூத்தனாய், பொற்தில்லைக் கூத்தனாய், அற்புதக் கூத்தனாய், சுந்தரக் கூத்தனாய், புரிசடை கூத்தனாய், உத்தமக் கூத்தனாய், சேவகக் கூத்தனாய், சம்பந்தக் கூத்தனாய், தற்பரக் கூத்தனாய் பரஞ்சோதியாய் காட்சி தருகிறார். எங்கும் அவன் திருநடனம் எதிரொலிக்கிறது. எங்கும் ஆனந்தம் நிலவியது. அவ்வானந்தத்தில் ஆடலரங்கம், பாடல்கள், பல்லியம், வாத்தியம் அத்தனையும் ஆனந்தமாயின.

ஐந்தொழில்களையும் நிகழ்த்திக்கொண்டே ஆனந்தத் தாண்டவம் ஆடுபவனாக சிவன் தோற்றமளிக்கிறான். அவனது ஆடல் மிக பிரம்மாண்டமாக இருந்தது. அவன் ஆடும் போது வேதங்களும், ஆகமங்களும், கீதங்களும், அண்டங்களும், பூதங்களும், புவனங்களும் ஆடினவாம். அவன் ஆடும்போது தன்னோடு பூதம், பொறி, பேதம், மாமகம், கலை, ஊழி அண்டம் யாவற்றையும் இணைத்துக் கொண்டு ஆடினான்.

தேவர், சுரர், நரர், சித்தர், வித்யாதரர், மூவர், முப்பது முக்கோடி தேவர்கள், தாபதர், சத்தர், சமயம், சராசரம் யாவும் உடனாடின. காளி, கூளி கனிகாசலம், குவலயம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆகியவற்றில் ஆடி பின்னர் அம்பலத்திலும் ஆடினான். உமை அதை கண்டு களித்தாள். தானும் ஆட முற்பட்டாள்.

சிவன் ஆடும்போது அவன் கையிலுள்ள கனல், அவனது சடைமுடி, பிறைநிலா ஆகியவை ஆட, அண்டங்கள் அதிரும்படி நாதத்துடன் ஆடினார்.

நடனமாட தென்திசையிலுள்ள தில்லை அம்பலத்தைத் தேர்ந்தெடுத்தான். அவனது ஆடிய பாதங்களையும், சிலம்போசையையும் இசைத்த பாட்டையும், பலவாறான நடனத்தையும், அவரது நடன கோலத்தையும் கண்டு மெய்சிலிர்த்து அருட் கண்ணீர் சொறிந்ததாக திருமூலர் குறிப்பிடுகிறார்.

குனிந்து நிமிர்ந்து, உருவமாகவும், அருவமாகவும், அருவுருவ மாகவும், மாதொரு பாகனாகவும் தோற்றமளித்து ஆடினார். அவரது எட்டு கைகளுடனும் ஆகாயம் போன்ற உடலுடனும் முக்கண் களுடனும் நடனம் ஆடினார். கொடு கொட்டி, பாண்டுரங்கம் போன்ற எண்வகை ஆடல்களையும் நாதம் சேர்த்து ஆடலின் 11 உறுப்புகளைச் சேர்த்து அடவுகளாக்கி பாதச் சிலம்பும் துடியும் நாதம் எழுப்ப அதற்கேற்ப நடனம் ஆடினார்.

அதைக்கண்டு காலம் கழிவதை அறியாது லயித்திருந்தார் திருமூலர். கூத்து, நிருத்தம் நடனம், நட்டம், நாடகம், நடிப்பு போன்ற நாட்டியச் சொற்களை பயன்படுத்தி திருமந்திரம் சிவனின் நடனத்தை வர்ணிக்கிறது.

சிவனின் நடனம் தனி நடனம் (Solo) அதைப் பார்த்த பிற பொருட் களும் ஆடின. அது களி நடனம், (ஆனந்த தாண்டவம்) அது குறு நாடகம், அது தாண்டவம், அற்புதக் கூத்து என்று வியந்து போகிறார் திருமூலர். இந்த கூத்தே சிவதத்துவம், சிவசித்தாந்தம், சிவனின் தனித்துவம், இந்நூலின் சிறப்புப்பகுதி (High Light) திருக்கூத்து தரிசனமே.

திருமூலர் இவ்வாறு காட்டிய சிவனைப் பணிவோம்.

**"திருமூலர் மாலையென்னும் தெப்பத்தைப்
பற்றி கருவேலையைக் கடப்போம்
அவர் பெற்ற இன்பம் பெறுக இவ்வை
யகம். சிவ சிவ என்ன தீவினைமாளும்"**

**வாழ்க வாழ்க நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத்தான் பதம்.**

# 15. திருமந்திரத்தில் நால்வகை நெறிகள்

திருமதி தி. கல்பனாதேவி, காஞ்சிபுரம்.

பன்னிரு திருமுறைகளுள் - 10-ஆம் திருமுறையாகத்திகழும் போற்றற்குரிய நூல் திருமூலரின் - திருமந்திரம். இந்நூல் முழுமுதலும், முடிவானதுமான கருவூலநூல். தமிழ் மூவாயிரம், மந்திரமாலை மற்றும் தமிழ்மறை எனவும் வழங்கப்பெறும். 3000 திருப்பாக்களையும், 195 உட்தலைப்புகளையும் பாயிரம் முதல் ஒன்பதுதந்திரங்களையும் கொண்டும், தமிழ்மறை 14-ம், தமிழ்முறை 12-ம் உள்ளடக்கியும், முப்பொருள் உண்மை களான இறை உயிர், தளை விளக்கும் சிறப்புமிகு நூல். அறம், பொருள், இன்பம், வீடு, போன்ற மறைவிளக்கங்கள் முதல் நான்கு தந்திரங்களிலும், பேறுபேற்று வழி, வழிபாட்டுறுதி மாறாவாழ்வு பின் ஐந்து தந்திரங்களிலும் விளக்கப்பெற்றுள்ளன. திருமந்திரம் தாய்நூலாகவும், திருமுறைகள் மற்றும் திருமுறைகள் சேய்நூல்களாகவும், மற்ற அருள் நூல்கள் துணை நூல்களாகவும் கொள்ளுதலே சிறப்பு.

சரியை - இறைவனுடைய திருவுரு நோக்கிச் செய்யும் வழிபாடு. கிரியை முதல்வனது அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. யோகம் - கரணங்களைச் சிவார்ப்பணஞ்செய்து ஆறாதாரங்களில் அகத் தொழிலால் தியானித்தல். ஞானம் - கேட்டல், சிந்தித்தல் முதலியன ஆகிய இந்நால்வகை நெறிகளான சரியை, கிரியை, யோகம், ஞானம் பற்றி இக் கட்டுரையில் ஐந்தாம் தந்திரத்தில் உள்ள செய்திகளைத் திருமூலரின் வழி காண்போம்.

**நால்வகை நெறிகள்**

சரியை - அறிவு வழிபாடு - செறிவு வழிபாடு
இறையருள் - சித்தர் - திருக்கோலம்
சிவவுலகப் பேறுகள் - நான்கு
உருவப்பூசை, அருவப்பூசை
சமயம் - புறச்சமயம் - அகப்புறச் சமயம்
தீக்கை - சிவதிக்கையின் வகைகள் - மூன்று
கிரியை -
எதிக்கும் நிறைந்தவள்
மண்ணும், விண்ணும் நிறைந்தவன் - சத்திநிபாதம் பெறல்
இறைவிட ஐந்தொழில் அம்மை - சிவப்பணி - திருப்பணி

யோகம் - செறிவு - சிவத்துடன் கூடல்
ஊழி முதல்வன் - மறைந்துளான்!
மலர்மணம் - சிவமணம்
பிறவி ஒழித்தல் - பிறவாவுலகு - அகத்தவம்
யோகி
ஞானம் - மெய்யுணர்வு
ஞானி - சன்மார்க்க நெறி - மெய்ந்நெறி
சிவோகம் - மருத்துவன் - சிவன்
சிவஞானியர் - சிவவுலகில் வாழ்வோர் - அருட்சுடர் - ஒண்சுடர்
சிவஞானிக்குரிய பண்புகள், சிவதீக்கைகள் நான்கு - திருமூலர் கருத்து.

**சரியை சீலம் : அறிவுவழிபாடு - செறிவுவழிபாடு - புறப்பூசை**

சிவபெருமான் அனைத்துயிரிலும் உயிர்க்கு உயிராய் நிற்கும் உண்மையினை அவனருளால் கண்டுணர்தல் சிறந்த அறிவு வழிபாடு. அச்சிவன் உள்ளொளியாய் நின்று அறிவை விளக்கும் அவ்வுண்மை காண்டல் செறிவு வழிபாடு. புறத்திருவுருவின் கண் உயிர்க்குயிராய் நிற்கும் சிவபெருமானை ஆவாகனம் முதலாகச் சொல்லப்படுகின்ற அழைத்தல், இழைத்தல், குழைத்தலாகிய தொண்டினைத் திருமுறை வழியாகச் செய்யின் அது நோன்பு வழிபாடாகி புறப்பூசையாகும். பூசை முடிவில் மீண்டும் அச்சிவபெருமானை அகத்தே அமைத்தல் நுழைத்தல் எனப்படும்.

**நாற்பூசைகள்**

ஞானபூசை - எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் கருதி நிற்றல். யோக பூசை - உயிரின் கண் ஒளியைக் கண்டு நிற்றல். கிரியா பூசை - தன் உயிரின் கண்உள்ள சிவத்தை வெளியிலுள்ள பொருட்களில் தாபித்துப் பூசித்தல் என்கின்றார்.

**இறையருள் - சித்தர் - திருக்கோலம்**

மெய்யடியார் - நல்லுள்ளங்களை திருக்கோயிலாகக் கொண்டவன் சிவன்! சிவன் ஒழுக்கநெறியில் நிற்கும் மெய்யடியார்கள், அவனின் திருநாடு, திருநகரம், திருக்கோவில் முதலியவற்றைப் பாடுதலும் பணிதலும் ஆகத் தேடித்திரிந்து தொழுவோரின் நல்லுள்ளங்களை திருக்கோவிலாகக் கொண்டருள்வான்.

**சித்தர்**

பத்தர், தொண்டர், சிவயோகர், சிவஞானி, திருக்கோலம் சீலநெறியிற் சொல்வோர் பத்தர் - சரியையாளர். நோன்பு நெறியிற் செல்வோர் தொண்டர் - கிரியையாளர். இயமாதி எண்ணுறுப்புங் கைக்கொண்டோர் சிவயோகர். சிவனை மறவாச் செய்கையோர் - சிவஞானி. இவர்களே

சித்தர்கள் ஆவர். திருக்கோலம் - இந்நால்வரும். திருவெண்ணீறு, சிவமணி, திருவைந்தெழுத்து முதலிய திருக்கோலமுடையவராவர்.

**சிவவுலகப் பேறுகள் - நால்வகை முத்திகள் சிவயோகம் - சிவவுலகிருத்தல்**

சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் : சரியையாளர் சாலோகத்தையும், கிரியையாளர் சமீபத்தையும், யோகத்தார் சாரூபத்தையும், ஞானத்தார் சாயுச்சியத்தையும் அடைவர். திருவடியுணர்வு கைவரப் பெற்ற சிவஞானியர் சிவனிறைவில் அடங்கிச் சிவனாயிருப்பர். எண்வகைத் தவத்தால் சிவயோகம் மேற்கொண்டவர் திருவுருவினைப் பெறுவர். நோன்பினராய கிரியையாளர் சிவன் அனுக்கராயிருப்பர். சீலத்தராய சரியையாளர் சிவவுலகினிலிருப்பர்.

சிவஞான சித்தியார், சுபக்கம், பாடல் 271-ல் உள்ளது.

**"தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயில்....**
**இயற்றுவதிச் சரியை செய்வோ ரீசனுல கிருப்பர்"**

இதனால் சிவவுலகில் இருக்கும் பக்தரை அறியலாம்.

**நால்வகை முத்திகள்**

சிவபெருமானை அடையும் வழிகள் நால்வகைப்படும். பணிநெறி (தாதமார்க்கம், புதல்வநெறி புத்திர மார்க்கம்), நட்பு நெறி (சகமார்க்கம்) நன்நெறி சன்மார்க்கம் என்பன. அவற்றிற்குப் பயன் இறைவனுல கிலிருந்தல், அவனுடனிருத்தல், அவன் வடிவம் பெறல் அவனோடு இரண்டறக் கலத்தல், அவற்றுள் முதல் மூன்றும் பத முத்தி, நாலாவது பரமுத்தி என்பதனை,

**"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்ர மார்க்கந்**
**தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையு**
**நன்மார்க்க நாலவைதா ஞான யோக**
**நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்**
**சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்ய**
**சாரூப்பிய சாயுச்ய மென்று சதுர் விதமா**
**முன்மார்க்க ஞானத்தா லெய்துமுத்தி**
**முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்"**

சிவஞான சித்தியார் பாடலால் அறியலாம்.

270-ஆவது பாடல் குறிப்பிடுவதை இந்நூல் குறிப்பிடுகின்றது.

**உருவப்பூசை அருவப்பூசை**

கிரியையாளரும், யோகிகளும் செய்வது உருவப் பூசையாகும் ஞானபூசை என்பது அருவப்பூசையாகும். நோன்பு, செறிவு, அறிவு, - முந்நிலையினில் வழிபடும் பூசை உயர்ந்த உரியபூசையாகும், நோன்பினர்,

செறிவினர் ஆகிய இருவரும் திருவுருவப் பற்றுக் கோட்டுடன் புரிவர். அறிவினர், உணர்வில் திகழும் பற்றுக் கோடில்லாத அறிவுருவிற்தொழுவர்.

**சமயம் - புறச்சமயம் - அகப்புறச்சமயம்**

ஞானம், வேதாந்தம், சமயம், சீலம், நோன்பு செறிவு, அறிவு, என்னும் நன்னெறி நான்கினுள் அறிவு நிலையாகிய ஞானம் நான்கு. அவர்கள் சரியையின் ஞானம், கிரியையின் ஞானம், யோகத்தின் ஞானம், ஞானத்தின் ஞானம் என்பன என்றும், வேதாந்த நெறிஆறு அவைகள் கபாளம், காணாதம், பாதஞ்சலம், அச்சபாதம், வியாசம், சைமினியம் என்பன இவை ஆறும் புறச்சமயமாகும். சித்தார் நெறி ஆறு அவைகள் வைரம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன இவை ஆறும் அகப்புறச் சமயம். சிவவுபகத்தினில் நின்று நந்தியங்கடவுள், குன்றாவருளால் குருவுருவாய்த் தோன்றி அறியாமை வயப்பட்டுழலும் மாந்தர்க்கு மெய்ப்பொருளுணர்வு தோன்றுமாறு சில நன்னெறி நான்கினை யும், அருள்புரிந்து முழுமுதற் சிவனை வழிபடுமாறு அமைத்தனர்.

''சரியாதி நான்குள் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளா னதுநந்தி பொண்ணகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே'' - 1421

என்பதால் அறியலாம்.

சாதக அலங்காரம் நூலினுள் - அகச்சமயம் மேலே கூறிய ஆறும், சிவாகமங்கள் - காமிகம், யோகசம், சிந்தியம், தாரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரவேதம், விசயம், நிசுவாசம், சுவாயபுவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தான சருவோத்தமம், பாரமேச்சுரம், சீரணம், பேதம், வாதுளம், என இருபத்தெட்டாம் என்பதனை,

**''வாமமுதல் பலசமய வகைநூல்ஆ கமங்கள்.............பணிவாம்''**

என்று குறிப்பிடுகின்றது.

சிவஞான சித்தியார் பரபக்கம் எனும் நூல் : 10

**''போதமிகுத் தோர்......................**
**.............. முன்னார்**
**இறைவனருள் நந்திதனக் கியம்பநந்தி**
**கோதிலருட் சனர்குமா ரர்க்குக் கூறக்..........**
**.......சிவஞான சித்தியென்றே''**

இதே கருத்தை தெரிவிக்கின்றது.

சிவப்பிரகாசம் எனும் நூல் : 5

"தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர்......."

என்பதால் அறியலாம்.

**தீக்கை - சிவதீக்கை - வகைகள் : தீக்கை - தீட்சை**

தீட்சை - பாசங்களை அழித்து அருளைத் தருதல். தீட்சனீகம் தீட்சனியம் - சார்ந்த அறிவு என்பதை இதன் சிறந்த பொருள் செந்நெறிக் கண் திருமுறை வழியாகச் செய்யப்படும் சிவதீக்கை மூவகைப்படும் அவைகள் சமயதீக்கை, விசேட தீக்கை, நிர்வாண தீர்க்கை என்பன வாகும். சமயதீக்கை - நன்னெறிக்குத்தடையாகிய தீமைகள் பலவற்றின் உண்மையினை உணர்த்தி அவற்றினைத் தூய்மைப்படுத்தலும், சிவபெருமானருளின் துணையின்றி எவர்க்கும், யாண்டும் எச்செயலும் இல்லை. விசேடதீக்கை - 'நந்தி நாமமாகிய' திருவைந்தெழுத்தை இடையாவது கணிப்பதால் எல்லாவகையான அகப்புறத் தூய்மைகள் எய்துவனவாகும். நிருவாண தீக்கை - ஆறுவகை வழியாகிய மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை, என்பணவற்றைத் தூய்மைப் படுத்தலாகும். 'நமசிவாய' எனும் மந்திரம் சைவத்திலுள்ள தீட்சைகளை விவரிக்கின்றது. இத்தீட்சைகள் பற்றிய மேற்சொன்ன செய்தியினைக் கூறி சைவாகமத்தினில் விதித்த சட்சுதீட்சை, பரிசதீட்சை, வாசக தீட்சை, பாவனா தீட்சை, சாஸ்திர தீட்சை, யோகதீட்சை என அறுவகை சிவதீட்சைகள் காணப்பெறுதலை சா. அத்தொடர்,

"உயர்திருப்பணி உபதேசம்........"

என்பதால் குருவினிடத்தில் தீட்சை உபதேசம் பெறுதல் என்பதைக் குறிப்பிடு வதால் அறியலாம். அ.சி நூலினுள், பரிச தீட்சை - கோழி தன் சிறகால் தழுவிக் காத்தல் போல் ஆசிரியன் மாணவனை ஞான அஸ்தத்தால் மந்தகத்தில் தொட்டுப்பாச நீக்கல் வாசக தீட்சை - ஐந்தெழுத்து உபதேசத்தால் தீட்சித்தல். சாஸ்திர தீட்சை - சிவாகமங்களைப் போதித்துத் தீட்சத்தல். யோகதீட்சை - யோக வழியில் மாணவன் இருதயத்தில் சென்று தீட்சித்தல் நிர்வாண தீட்சை - மோசத்தைத் தரும் தீட்சை என்றும் சத்யோ நிர்வாணம், அசத்யோ நிர்வாணம், லோகதர்மினி, சிவதர்மினி என்றும் குறிப்பிடுகின்றது.

கருவூரார் சித்தர் 10 வயதுடைய சிறுபிள்ளையாய் இருக்கும் வாலையை அவளின் 10 திருநாமங்களால் (புவனை, யாமளை, வாலை, திரிபுரை) - 3 எழுத்து 5 எழுத்து தசதீட்சைகள் கூறித் துதித்தச் செய்தி யினை (பெயர்கள்)

"தெரிசித்தால் தன்னில் சிறுபிள்ளை யாயிருந்த தேவி......
பத்து நாமம் தீட்சையென்ன.........தீட்சைக்கு வயனமேது
......தசதீட்சை...........பாடினாரே"

இப்பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

## கிரியை - நோன்பு

### எத்திக்கும் நிறைந்தவன்

10 திக்குகளிலும் ஒப்பில்லாத ஒருவனாய் விளங்கும் முழுமுதற் சிவன். அவன் எங்கும் நிறைந்துள்ளான். அகத்தே 'கொல்லாமை, ஐந்தடக்கல், கொள் பொறுமை, இரக்கம், நல்லறிவு, மெய்தவம், அன்பெட்டு, அமையப் புறத்தே அவற்றிற்கு இனமாகிய நறுமலர்களைக் கொண்டு திருமுறை போற்றித் தொடர்புகன்று திருவடிநீழலே மாறாப்புகலிட மென்று அருச்சித்தல் வேண்டும்.

"பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்....
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே"

எனும் பாடல் அடியால் அறியலாம்.

இதனை சிவப்பிரகாசம் - 89 பாடல் அடிகள்,

"எல்லையில் பிறவிநல்கு மிருவிணை யெரிசேர்வித்தின்
.........போமே"

எனக்குறிப்பிடுகின்றார்.

### மண்ணும், விண்ணும் நிறைந்தவன் - சத்திநிபாதம் பெறல்

மண்ணும், விண்ணும், ஆக நிறைந்திருக்கும் இறைவனை, நருமணம் கமழும் சந்தனமும், அத்தகைய சிறந்த மணம் கமழும் நறுமலரும் கைக்கொண்டு நாளும் வழிபட்டாலும், இறைவனின் திருவருள் ஆனது திருவருட்பாதம் - புலால் உண்ணாதவர்க்கே கிட்டும் என்பதால் அசைவ உணவினை தவிர்த்தல் வேண்டும் என்பதை அறியலாம். பிற உயிர் களைக் கொல்லாமை, கொன்றதை தின்னாமை வேண்டும். இது பற்றியே தாயுமானவரும் 192-ஆம் கண்ணியில்,

"கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லோர் மற்று
அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே"

இவ்விதம் குறிப்பிடுகின்றார்.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்"

என்ற குறளினால் அசைவத்தினக் கைவிடலினால் எல்லாஉயிருந் தொழும் உயரிய பண்பான இடத்தினைப் பெறலாம்.

### இறைவி

எவர்க்கும் முழுமுதலாய் வேண்டுவார் வேண்டுருவுடன் தோன்று பவராய் உள்ள சிவபெருமானின் தாயாய் விளங்குபவள் திருவருளம்மை. அவளின் ஒலிக்கும் சிலம்பணிந்த திருவடியினைத் தொழுதால் - அவள்

மெய்யுணர்வு நல்கும் வித்தாய் உங்கள் நடுவே எழுந்தருள்வாள். அதனால் ஆனேற்றின் மீது வரும் சிவபெருமானின் பேரின்பப் பெருவளம் மிகுதியாய் உண்டாகும். அச்சிவபெருமான் வானுலகப் பசுக்களாகிய தேவர்களால் என்றும் தொழப்படும் சிறப்பினன்.

**ஐந்தொழில் அம்மை : ஒரு கூற்றில் உடையவன் - சிவன் : சிவப்பணி - திருப்பணி**

மேற்கூறிய முறைமைகளை வணங்கி ஏற்றுக்கொண்டு எட்டுத் திசைகளால் சூழப்பெறும் உலகு உடல் பொருட்கள் நிறை மண்டலங் களையெல்லாம் படைத்து, அளித்து, அழித்து, மறைத்து, அருள் செய்யும் ஐந்தொழிலினுடைய அம்மையை ஒரு கூற்றிலே உடையவன் சிவன். மாந்தரின் இறைபணி சிவப்பணியேயாம். இச்சிவப்பணியே நோன்பாளராகிய கிரியையினர் செய்யும் சிவப்பக்தித் திருப்பணியாகும். சிவபக்தன் திருமுறையில் கூறியபடி சீலம், நோன்பு இரண்டினையும் சிறப்பாகச் செய்து வர இயற்கைத் திருவருள் மேலும் துணைசெய்யும். சித்தம் சிவமாய சிவபக்தன் எல்லையிலாத் தலையன்பால் உருகுபவன். அவன் எந்நாளும் அடிமைப்பணி செய்தொழுகுவான். பொன்போலும் திருமேனியும் செந்தாமரை அனைய திருவடியும் உடையவன் சிவன். அவன் அடியேன் முன் நின்று அருமறையருளத் திருவடியுணர்வு கைவந்த ஒரு மெய்யடியாரை ஊர்ந்து செறிந்த அறிவொளியாய் விளங்கியருள்வான்.

சி.சி.சு - பாடல் - 272 எனும் மேற்கோள் பாடலினைக்,

"புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப்போது........
நின்மலன்ற னருகிப்பர் நினையுங் காலே"

எனக் குறிப்பிடுவதால் அறியலாம்.

**யோகம் - செறிவு**

**சிவத்துடன் கூடல்**

ஆசான் அருளிய அருமறை வழியே ஒழுகி அகத்தவமாகிய யோகத்தில் பொருந்தி ஆ முதலியவற்றை மாறுதலின்றி இருந்தாற் போல், தம் உடம்பை இருத்தித் தினவு முதலியன உடம்பில் தோன்றினும், சொறியாமலும், காற்று, மழை, மின்னல், இடி, முதலியன உடம்பில் மோதினும், அசையாமலும் இருந்து கருதிய குறியாம் சிவத்தை அறிவார்க்கு அருளால் அச்சிவத்துடன் ஒன்றுதல் நிலைப்பெறுவார்.

**ஊழிமுதல்வன் - மறைந்துளான் : அரி, அயன் - காணா இறைவன்**

ஊழிதோர் ஊழி பலவரினும் என்றும் நின்று நிலவும் முழுமுதற் சிவனை அவன் அருட்கண்ணால் உணர்ந்தவர்க்கல்லாமல் பலஊழி கண்டாலும் தம் அறிவால் அச்சிவனைக் காணமுடியாது. சக்கரப் படையைத் தாங்கும் அரியும், அயனும் பல ஊழி முயன்றும் காணக் கிடைக்காமல் நீங்கி மறைந்து நின்றுள்ளான் என்பதனை,

''ஊழிதோ றூழி உணர்ந்தவர்க் கல்லால்
ஊழிதோ றூழியுணரவுந் தானொட்டான்
ஆழி அமரும் அரியயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சியு ளானே''

இப்பாடல் விளக்குகின்றது.

**மலர்மணம் - சிவமணம்**

மலரின் கண் மணம் பொருந்தியமைவதுப்போல் ஆருயிரின் கண்ணும் அனையத்தனாம் சிவமணம் பூத்தமைந்தது அதனைப் பெற்றோர் 'புனைந்து சித்திரம் போல' அச்சிவனையே உணர்ந்தவர். அப்படி அறிகின்றவர் புனுகுப் பூனை அணைந்த நடுதறி போன்று அசையா திருப்பவர். என்பதனை,

''பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சிவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே''

எனும் இவ்வழகிய உவமைகளின் மூலம் திருமூலர் விளக்குகின்றார்.

தேவாரம் : 6 - 659 பாடலடிகள்,

''மாதினை யோர் கூறுகந்தாய்...........
...........நெஞ்சினுள்ளே
கன்றாப்பூந் நடுதறியைக் காணலாமே''

எனச் சான்று பகர்கின்றது.

**பிறவி ஒழித்தல்**

உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்தி வரும் முதன்மை வாய்ந்த சிவபெருமானைக் கண்டவரே உய்வர். இருந்தும் உணராதிருக்கின்றீர்கள். மணங்கமழும் நல்லார்தம் நெஞ்சத்தாமரையில் கலக்கின்ற நந்தியை உங்கள் உள்ளம் பொருந்தத் தெளிந்தால் - மன இருள் நீங்கி நுண்ணுடலாகிய கருவுறாது தோன்றும் முதற் பிறவியை ஒழிப்பதற்கு அத்தெளிவு அழியாக் காரணமாகும். இலக்கண இலக்கியங்களும் இவற்றின் விரிவாக 64 கலைகளும் பழித்தற்கிடமாகிய சுட்டுணர்வாகும். அச்சுட்டுணர்வாகிய பாசத்தினால் தொடரும், பிறவியும், நீங்காத முறைமை வாய்ந்த இடப்பால் நரம்பாகிய திங்களும், வலப்பால் நரம்பாகிய ஞாயிறும், நடுப்பால் நரம்பாகிய தீயும் அருளான் அமையும் நிலை களையுனர்வர். அவ்வுணர்வால் செந்நெறிச் செல்லும் மேன்மை ஏய்தும். சிவத்தை விரும்பி நின்று செயல் செய்யும் நல்லோர் உண்மை தவத்தவராவர். அவ்வாறே ஒழிகின் குருவருள் அருமறை கைகூடும் அஃது இறப்பில் தவமாகிய உண்மைத் தவமாகும். இதனை மேற்கொள்ளின் சிவனெனமதிக்கப்படுவர்.

**பிறவாவுலகு - அகத்தவம்**

அகத்தவமாகிய யோகநெறியினைப் பேணுவார் - மீண்டும் பிறப்பதற்கு வாயில்லாத தூயசிவவுலகை அடைவர். இவ்வுலகே பிறவாவுலகு எனப்படும். அருட்கண்ணாற் காண்பார். சிவபெருமான் வேறறக் கலந்து நிற்கும் சீவனில் கலந்து நிற்பர். இதனை மேற் கொள்ளாதோர் இருளுலகு எய்தி இன்னலுறுவர். சிவன் உடம்பினுள் அவ்வுடம்பு நிலைத்து நிற்பதற்கு வேண்டும் சூட்டினையருள்வான். முடியுடை வேந்தர்களும், கெடாத விழுத்தவ வேந்தர்களும், அளவிறந்த சித்தர்களும், தேவர்களும், மூவர்களும், ஆகியோர்களும் சிவபெருமானையே விரும்பி வழிபட்டுச் சிறப்பும், பெறுமையும் சேரப் பெற்றனர். அனைவரும் சிவபெருமான் திருவடியிணைக்கே தலையன்பு பூண்டு ஒழுகுவர்.

**யோகி**

செறிவு நிலையாகிய யோகிக்குச் செறிவு, நோன்பு, சீலம் ஆகிய இம்மூன்றினையும் கொண்டு செலுத்துவோர் ஆவார். நோன்பு நிலையாகிய கிரியையாளர் சீலம் என்று சொல்லப்படும் சரியைக்கும் உரியவராவர். ஆசையறுத்தவராகிய சீலத்தர் சரியை ஒன்றற்குமே உரியர். இறைவனிடம் அன்பு வைத்தவர்.

**செறிவு நிலை - யோகத்தின் நான்கு நிலைகள்**

சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம், என்பனவாகும். இவைகள் முறையே சிவநுழைவு, சிவநோன்மை, சிவநுண்மை, சிவநுகர்மை என அழைக்கப்பெறும். யோகத்தில் சமயம் பல வகையான யோகி முறைகளை நினைத்தல். யோகத்தில் விசேடம் எட்டுறுப்புடன் கூடிய யோகம், யோகத்தில் நிர்வாணம், முழுமுதற் சிவன் தோன்றல், யோகத்தில் அபிடேகம் சித்தி பெறுதல் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

**ஞானம் - மெய்யுணர்வு**

திருவடியுணர்வாகிய ஞாலத்தின் மிக்க பிறப்பறுப்பதாகிய அறநெறி எந்நாட்டினும் இல்லை. சிவஞானத் தோற்சிறந்தோர் மாந்தறிற் சிறந்தோராகிய அந்தண் மெய்யடியாராவர்.

**ஞானி - சன்மார்க்க நெறி - மெய்நெறி**

விரைவாக எங்கும் நிறைந்துள்ள ஒலி முதலிய நாதமெய்யும், அதுபோன்ற பரந்த தன்மையுள்ள மனமும், அம்மனம் பற்றி ஐயுற்ற பொருளை உறுதி செய்வதாகிய இறுப்பு என்னும் புத்தியும், அப்புத்தி யினை எழுப்புவதாகிய அகங்காரமும், தூக்கி எண்ணுவதாகிய சித்தமும் ஆகிய ஐந்தனுள் சித்தம் மனத்தின் கண் அடங்குவதாலும் நாதம் இவற்றைத் தொழிற்படுத்துவதாலும் ஏனையமணம், அகங்காரம், புத்தி

என்னும் மூன்றும் சிறந்தன. அவை முறையே நிகழ்த்தும் நினைப்பு, எழுச்சி, இறப்பு ஆகிய அந்தகரணச் செய்கைகளும் நாதகலையும் கடந்தவரே ஞானியராவர். அவர்கள் செல்லும் நெறியே சன்மார்க்க நெறியாகும்.

**சிவோகம் - மருத்துவன் - சிவன்**

"மருத்துவனைச் சார்ந்த நோயாளிக்கு நேரும் முயற்சியெல்லாம் மருத்துவனாலேயாம்" என்பதைப் போல அனைத்து முயற்சியும் "சிவத்தாலே" யாம். மருத்துவன் ஆனவன் நோயாளியின் உடல் நலம் அறிந்து அதற்கு ஏற்றாற்போல பக்குவமாய் மருந்து அளித்து குணப்படுத்துவான். ஆகவே நோயாளிக்கு தரும் மருந்து முயற்சிக்கு கர்த்தாவாக விளங்குபவன் மருத்துவன். இதுவே சிறந்த மருத்துவனின் கடமையாகும். இதைப் போல மாயையான நிலையில்லாத இவ்வுலகும், அதோடு தொடர்புடைய உடம்பும் இறைவன் திருவருளால் கிடைத்தன. இறைவன்பால் நீங்காத அன்பு வைத்தால் அச்சிவத்துள் அடக்கித் தானே சிவமாகப் - சிவோகமாகப் பொலிவான். பின் திருவருள் முயற்சியினால் தானாகவே திருவடியன்பினைத் தலைக்கூடுவான். ஆதலின் அனைத்திலும் கர்த்தாவாய் நிற்பவன் சிவன் என்கின்றார். நோயாளிகளான நாம் அனைவரும் சிவமே மருத்துவன் என்பதை உணர்ந்து அவன் நெறியில் நிர்ப்பின் குணமடைவோம். நற்கதி அடைவோம் என்பதை இங்கே திருமூலர் குறிப்பிடுகின்றார். இதனை,

**"தன்பால் உலகுந் தனக்கரு காவதும்**
**அன்பா லெனக்கரு ளாவது மாவன**
**என்பார்கள் ஞானமும் எய்துஞ் சிவோகமும்**
**பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே"**

என்பதால் அறியலாம்.

**சிவஞானியர்**

மாறுபாடில்லாத சிவஞானத்தைத் திருவருளால் தெளிந்துணர்ந்தோர் சிவஞானியராவர். அவர் ஒடுக்கமாகிய நிட்டை கூடியிருக்குமிடம் சிவன் எழுந்தருளியிருக்கும் இடம் என்னும் இங்குதினை நிலைத் திணையாகிய கூட்டம் அனைத்தும் அவர்கட்கு உலக உறவாகும். மேம்பாடு மிக்க ஒழுக்கமனைத்தும் தாமே வந்து எய்தும்.

**சிவவுலகில் வாழ்வோர்**

சிவத்தை அறியும், அறிவும், சிவத்தில் அடங்கும் அடக்கமும், சிவத்தைப் பற்றும் தலையன்பும் உள்ளவர் கேடில்லாத சிவவுலகத்தில் வாழ்வோராவர். அவர்கள் தம் புற அடையாளச் சிவக்கோலமும், அக அடையாளச் சிவப்பண்பும், ஒலிக்கும் கழலணிந்துள்ள சிவபெருமான்

திருவடியிணையினை நீங்கா நிலைமையினைக் குறிப்பனவாகும். அவர்களிடம் உள்ள திருவடி உணர்வு காற்று முதலிய துணையால் 'நீரில் ஒலி உண்டாவது போல்' செந்நெறிச் செல்லும் துணையால் வெளிப்படும். நீரினிடத்து உள்ள ஒலி காற்று முதலிய கூட்டுறவால் வெளிப்படுவது போல, அறிவால் ஆன்மாவில் அடங்கியுள்ள ஞானம் பிரகாசிக்கும்.

''அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
..................................
..................................
நெறியறி வார்க்கிது நீர்த்தொனியாமே''

எனும் பாடல் அடிகளால் அறியலாம்.

**அருட்சுடர் - ஒண்சுடர்**

திருவடியுணர்வாகிய சிவஞானமே உருகி நிற்கும் நல்லார் திருவுள்ளத்துள் மூலாதாரம் உயிர்ப்பு முதலிய அகத்தவத்துக்கு வேண்டும் கருவிகளோடு கூடிச் செய்யும் யோகமும் கைகூடும் அதனால் காணப் பெறும் வழிதரும் பற்றுக்கோடின்றிச் சென்று புருவநடுவாம் திங்கள் மண்டிலத்துத் தோன்றும் புத்தமிழ்தங் காண்பர். கண்டுதிருவருளால் மலமாயா கன்மங்களாகிய தளையினை அறுத்து நிலை நிற்பர். அங்ஙனம் நின்றாற்கு விட்டு நீங்காது விளங்குவது சிவனார் அருட்சுடரே யாகும் அச்சுடர் ஒண்சுடர்.

**சிவஞானிக்குரிய பண்புகள்**

நான்காகும். அவைகள் அறிவிற் சீலம், அறிவிற் நோன்பு, அறிவிற் செறிவு, அறிவிற் அறிவு என்பன என்றும், சிவசக்தியில் தன்மை மறந்து நிற்க அஃது அப்பால் நிலையிலுள்ள குண்டலினி சக்தியின் வலிகொண்டியற்றும் யோகப் பயனை விளைத்திடும். இவையே பற்றுக் கோட்டோடும் செய்யும் யோகியர்க்கும் நிகழும் அறிவிற் சீலம், அறிவிற் நோன்பு எனப்படும். இவை ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை எனப்படும். அறிவில் அறிவாகிய ஞானத்தில் ஞானமே யான் எனதென்னும் செருக்கறல். ஞானத்தில் யோகம் 36 மெய்யுங்கடந்த அருள் வெளியில் காணும் சிவஒளி. ஞானத்தில் கிரியையே திருவடிப் பேற்றினை நாடுதல் என்கின்றார். சிவஞானத்தின் நாற்படியும் மேற்கொண்டவன் பிறப்புக்கு வித்தாம் இருள்சேர் இருவினையும் கடந்தோனாவான். இருவினை நான் என்றும் முனைப்பாற்செய்யும் புண்ணியப்பாவம், கருதப்படுகின்ற பிழம்போடு கூடித்தோன்றி அருளும் திருவுருவில் மறைந்திருக்கும் அன்பின் விளைஞானச் சிவப்பொருளை காண்பவனே சிவப்பேறு எய்திய சித்தன்.

**சிவதீக்கைகள்**

நான்கு சிவநுழை - சிவனைக் காணும் முறையால் தன்னைக் காண்பது. சிவநோன்மை - மேலாம் சிவத்தோற்றம் காண்பது. சிவநுண்மை - வாலறிவின னாகிய சிவபெருமானின் திருவருள் வீழ்ச்சி. சிவநுகர்மை - திருவருளாசான் திருவடியினை மறவாமை என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

"ஞானச் சமயமே நாடுந்தனைக் காண்டன்
ஞான விசேடமே நாடு பரோதயம்
ஞான நிர்வாணமே நன்றறி வானருள்
ஞானாபிடகமே நற்குரு பாதமே"

என்பதால் அறியலாம்.

இதே கருத்தினை கருவூரார் சித்தர் கருவூரார் பலதிரட்டு எனும் நூலில் சரியை, கிரியை,யோகம், ஞானம், பற்றிக் குறிப்பிடுகையில் அனைத்து சித்திகளும் கைவரப் பெறும் ஞானத்தை அடைதல் என்பது எப்போழுது என்றும், எவ்வாறு என்பதும் பற்றியும் சரியையில் நின்றுதேறி, கிரியையில் சார்ந்து அக்கிரியை முத்தியை உரைக்குமெனில் இறைவியின் யோகத்தில் சேர்க்கும் யோகத்தில் ஞானவரையைக் காணலாம் என்பதனை,

"தானென்ற சரிகையிலே நின்று தேறித்
தாங்கி நின்ற கிரிகையிலே சாரப் பண்ணித்
தேனென்ற கிரிகை முத்தி யுறைத்து தானால்
தேவியுட யோகத்தை சேர்க்குஞ் சேர்க்கும்
மானென்ற யோகத்தால் சேர்த்து தானால்
மயங்காதே ஞானமென்ற வரையைக் காணும் ஸ
ஊனென்ற சடத்துக்கு எடுத்த வாறு
ஓகோகோ சரிதையி(னைஉரை) த்திடாயே"

அடியார்கள் ஞானிகள் சான்றோர்கள், சித்தர்கள், இறைவழி நிற்போர் - ஆன்மீக நெறிகளான சரியை, கிரியை, யோகம், ஞானம், இந் நால்வகைகளின் வழிநின்று சிவப்பேறு எய்தியதை அறியலாம். இச் செய்தியினை திருமூலரின் திருமந்திரமானது அழகாகக் குறிப்பிடுகின்றது. ஆதலின் நாமும் இறைத்தொண்டினில் ஈடுபடுவோம்.

- இறையன்பு கொண்டிலங்க வேண்டும்.
- இறைத்தொண்டாற்ற வேண்டும்.
- புலால் உண்ணாமை வேண்டும்.
- பிறவி பாவத்தினை அறுத்தல் வேண்டும்.
- சிவத்துள் ஒன்றி பிறவா நிலை, சத்திநி பாதம் பெறல் வேண்டும்.

இறைவழி நிற்போம்!

# 16. ஒன்பதாம் திருமுறை அமைப்பும் சிறப்பும்

திருமதி கலையரசி நடராசன், சென்னை.

திரு. இசைப்பா திருப்பல்லாண்டு என்னும் ஒப்பற்ற இரண்டு ஞானக் கருவூலங்களை தன்னகத்தே கொண்டது ஒன்பதாம் திரு முறையாகும் இத்திருமுறையை அருளிச் செய்த அருளாசிரியர்கள் ஒன்பதின்மரும் தேவார ஆசிரியர்கள் அருளிச் செய்த பதிகப்பெருவழியைக் கடைபிடித்தே தமது திருப்பதிகங்களை ஆக்கி அளித்துள்ளார்கள். ஒன்பதாம் திருமுறை யில் இருபத்தி ஒன்பது திருப்பதிகங்கள் உள்ளன. இப்பதிகங்கள் தேவாரப் பதிகங்கள் போன்று இசை நலம் வாய்ந்தவை. இவற்றின் ஆசிரியப் பெருமக்கள், (1) திருமாளிகைத்தேவர் (2) சேந்தனார் (3) கருவூரத்தேவர் (4) பூந்துருத்தி நம்பிகாடநம்பி (5) கண்டராதித்தர் (6) வேணாட்டடிகள் (7) திருவாலியமுதனார் (8) புருடோத்தமநம்பி (9) சேதிராயர் ஆகிய ஒன்பதிமரில். திருமாளிகைத்தேவர் திருவிசைப்பாவில் முதல் நான்கினையும் பாடி அருளியுள்ளார். இத்திருமுறையின் தொடக்கமே "ஒளிவளர் விளக்கே" என்பதாம் இறுதியாக ஆன்மாவுக்கு எல்லாமுமாய் ஆனவன் இறைவனே என்பதால் இறைவனுக்கே பல்லாண்டு கூறுவதாய் அமைந்த திருப்பல்லாண்டு எனும் பதிகமாம் இவ் ஒன்பதாம் திருமுறை முன்னூற்றொரு திருப்பாடல்கள் உடையதாய் விளங்குகின்றது. அளவிற் சிறியதாயினும் இது, தான் தோன்றிய நாளாய் திருக்கோவில் வழி பாட்டில் பஞ்சபுராணமென ஓதப்பெறும் திருமுறை ஐந்தனுள் இரண்டு திருப்பாடல்க்ள் தன்னுடையதாய் நின்றுதிகழ்கிறது பதினோரு திருமுறை களில் மூன்று திருப்பாடல்களும் ஒன்பதாம் திருமுறையில் மட்டும் இரண்டு திருப்பாடல்களும் எடுத்தோதப்படுகிறது என்றால் ஒன்பதாம் திருமுறையின் சிறப்பினை உயர்வினை என்னென்பது?.

திருஇசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் இத்திருப்பதிகங்களைப் பாடி அருளிய ஆசிரியப்பெருமக்கள் வாழ்ந்த காலம், முதலாம் ஆதித்த சோழன் வாழ்ந்த காலம் தொடங்கி, கங்கை கொண்டசோழன் வாழ்ந்த காலம் வரை என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சைவம் உச்சத்தில் இருந்தது. திருவிசைப்பா போற்றிப்பாடும் திருத்தலங்கள்.

(1) தில்லைச்சிற்றம்பலம் (2) திருவீழிமிழலை (3) திடிவாவடுதுறை (4) திருவிடைக்கழி (5) திருக்களத்தை ஆதியேச்சரம் (6) திருக்கீழக்

கோட்டூர் மணியம்பலம் (7) திருமுகத்தலை (8) திரைலோக்கியசுந்தரம் (9) கங்கை கொண்ட சோழிச்சரம் (10) திருப்பூவணம் (11) திருசாட்டியக்குடி (12) தஞ்சைஇராசராசேச்சரம் (13) திருவிடைமருதூர் (14) திருஆரூர் என பதினான்கு திருத்தலங்களாகும் இவற்றுள் தில்லைச் சிற்றம்பலத் திற்கு மட்டும் 'பதினாறு திருப்பதிகங்களாகும் இதுவும் இத்திருமுறை யின் சிறப்புகளில் ஒன்றெனலாம் மற்றும்முள்ள பதின்மூன்று திருப்பதிகங் களும் ஏனைய திருத்தலங்கள் தலா ஒன்றைப்பெறுகின்றன இந்த தெய்வத்திருமாலையை ஓதியருளிய ஞானாசிரியர்களின் பெயர்கள் மேலேகுறிப்பிட்டுள்ளோம் இவ்வருளாளர்கள் உளமுருகி வடித்தெடுத்த ஒன்பதாம் திருமுறையாகிய இதனுள் இடம்பெற்றுள்ள இருபத்தொன்பது பதிகங்களும், காந்தாரம், புறநீர்மை, சாளரபாணி, நட்டராகம், இந்தளம், பஞ்சமம், என்கின்ற ஆறு பண்களிலேயே அமைந்துள்ள இவற்றுள் சாளரபாணி தவிர மற்ற ஐந்துபண்களும் தேவராத்திருப்பதிகங்களில் அமைந்தவையே.

திருமாளிகைத்தேவர் சிவ ஞானசித்தராகிய போக நாதரிடம் தீக்கை பெற்று திருவாவடுதுறையில் தங்கியிருந்து பல அற்புதங்களை நிகழ்த்தினார் திருமாளிகைத்தேவருக்கு திருவாவடுதுறை திருமடத்தில் திருக்கோயில் அமைந்து உள்ளது. தேவாரத் திருமுறையில் முதல் திருமுறையாய் முதல் பதிகமாய் முதல் பாடலாய் திருஞான சம்பந்தப் பெருமான் பாடி அருளியதுபோல், ஒன்பதாம் திருமுறையில் முதல் பதிகத்தின் முதல் பாடலிலேயே திருமாளிகைத்தேவரின் திருமொழிகள் இறைவனிடம் இரைஞ்சும் பெருமொழிகளாய் திகழ்கிறது.

**வெளிவளர தெய்வக் கூத்துகந்தாயைத்**
**தொண்டனேன் விளம்புமா விளம்பே என்று**

தான் எப்போதும் சிவபெருமானின் பெருமையை பேசுவதையே பெரும் பேறாய் எண்ணுவதால் உன்னைப் பற்றிய விளக்கமான உரைகளை தந்தருள்வாய் என்று வேண்டுகிறார் இதுபோலவே.

**படரொளி பரப்பிரந்து நின்றாயை**
**'தொண்டனேன் பணியுமா பணியே.**

நின்னையான் பணித்தேத்த என்னைப்பணித்தருள்வாய் என்கின்றார்.

**கற்பகமாய் உலகாய் அல்லையானைத்**
**தொண்டனேன் கருதுமா கருதே**

தொண்டனாகிய யான் நின்னை என்கருத்தில் நிறுத்த நீ என்னை அருள் கூர்ந்து நின்கருத்தில் நிறுத்தி அருள் புரிவாயாக என்றும்,

**ஒருமையிற் பலபுக்கு உருவி நின்றாயைத்**
**தொண்டனேன் உரைக்குமாறு உரையே**

எனதுரைத்தனதுரை எனச் சொன்ன ஆளுடைப்பிள்ளைக்கு அருளியவாறு என்பது கருத்தாம்.

**ஞாலமே தமியேன் நற்றவத்தாயைத்**
**தொண்டனேன் நணுகுமா நணுகே**

தனித்தவனும் தொண்டனுமாகிய யான் நின்னை நெருங்கும் பொருட்டு நீ என்னை நெருங்கி அருள்வாயாக எனவும்,

**ஏறணிகொடிஎம் ஈசனே உன்னை**
**தொண்டனேன் இசையுமாறு இசையே**

அடிமையாகியயான் நின் திருவடியை பொருந்துதற்கு ஏற்றவண்ணம் நீயும் என்பால் மனம்பொருந்துவாயாக என்பதாயும்,

**உனகழல் இணையென் நெஞ்சினில் இனிதாத்**
**தொண்டனேன் நுகருமா நுகரே**

யான் நின் திருவடிகள் இரண்டையும் என் மனதில் கலந்துய்க்குமாறு என் அடிமைத்திறத்தை நீ துய்த்து அருளுவாயாக என்றும்,

**புரஞ்சமண் புத்தர் பொய்கள் கண்டாயைத்**
**தொண்டனேன் புணருமா புணரே**

புறச்சமயத்தவரான புத்தர், சமணர்களையும், வேறுபல பொய் சமயங்களையும் உண்டாக்கியவனாகிய உன்னை தொண்டனாகிய நான்சேருமாறு நீ சேர்ந்து அருள்வாயாக என்றலும்,

**சொக்கனே எவர்க்கும் தொடர்வரியாயைத்**
**தொண்டனேன் தொடருமா தொடரே**

அறிதற்கு அரிதாகிய உன்னை தொண்டனாகியயான் தொடரும் வண்ணம் நீ எனக்கு தொடர்ந்து அருள்வாயாக எனவும்,

**விடங்கொள் கண்டத்தெம் விடங்கனே உன்னைத்**
**தொண்டனேன் விரும்புமா விரும்பே**

தொண்டனாகிய உன்னை விரும்பும் வண்ணம் நீயும் என்னை விரும்பி அருள்வாயாக என்றும்,

**நிறைதருகணா நிலையமே உன்னைத்**
**தொண்டனேன் நினையுமா நினையே**

நிறைந்தகருணைக்கு இருப்பிடமாக விளங்குபவனே உன்னைத் தொண்டனாகிய நான் நெஞ்சு நெக்குருக நினைக்கின்றேன் நீயும் என்னை நினைத்து அருள்வாயாக எனவும் இறைவனை நேருக்குநேர் பார்த்துகேட்பவர் போல் ஒருதாயிடம் பிள்ளை எதிர்பார்த்து உரிமை யுடன் சட்டம் பேசுவதுபோல்,

ஆற்றவேல் திருஉடையீர நல்கூர்ந்தீர் அல்லீர
அணி ஆரூர் புகப் பெய்த அருநிதியம் அதனில்
தோற்றமிகுமுக்கூற்றில் ஒரு கூறுவேண்டும்
தாரீரேல் ஒருபொழுதும் அடிஎடுக்கல் ஒட்டேன்

என்று வன்முறைபேசாது உரிமை பேசுகின்ற அழகே அழகுதான். அடுத்து கூத்தபிரானது திருவுருவத்தைப் பாதாதி கேசம் (அடிமுதல் முடிவரை யுமாக) வரை நேரில்பார்த்தவர்போல் நினைந்து போற்றும் வண்ணம் அருளிச்.செய்துள்ளார். திருவுரு எனத்தொடங்கி திருவடி கணைக்கால் திருத்துடை, திருவுடை, திருவுந்தி, திருவயிறு, திருக்கரங்கள் திருவாய், திருமுகம், திருமுடி பணிதல் என இத்திருப்பதிகத்தை சிவமயமாய் அமைத்தருளியுள்ளார். மூன்றாவது திருப்பதிகம். அகப்பொருளில் மயங்கிசை யாய் விளங்குகின்றது. நான்காவது திருப்பதிகம் சிவபெருமானிடத்து அவர்தம் அடியாரிடத்து அன்பு இல்லா நெஞ்சினர்தம் இழிவைச்சுட்டியும் பேய்களுக்கு ஒப்பான அவர்களோடு சிவனடியார்கள் பேசுதலும் கூடாதென்று உணர்த்துவன வாய் அருளிச் செய்துள்ளார்.

**சேந்தனார்**

ஒன்பதாம் திருமுறையின் ஆசிரியருள் சேந்தனார் பெற்றிருப்பது மிகவும் சிறந்த இடம், எவ்வாறெனில் இறைவன் சிவபெருமானுக்கே திருப்பல்லாண்டு பாடிய பேரருள் பெரும் பேறு பெற்றவர். இவர் தமது முதல் பதிகத்தில் இரண்டாம் பாடலில்

''கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை''

எனத்தொடங்கி வீழிமிழலையில் வீற்றிருக்கும் பெருமானை கண்டு கண்களும் உள்ளமும் குளிர்ந்தன என்று கூறுகின்ற தன்மை சிவனடியார் களின் சிந்தைகவர்ந்தது. அடுத்து, அந்தாதி அமைப்பில் இரண்டு திருப்பதிகங்கள் அதில் ஒன்று திருமுருகனைப் பற்றியது.

**கருவூர்த் தேவர்**

கருவூரைத்தோற்ற பூமியாய் கொண்டவர் கருவூர்த்தேவர் ஆதலால் கருவூர்த்தேவரானார் ஆலயங்கள் பலவும் தொழுதுபோற்றிய கெழதகை யாளர், திருவிடைமருதூர் மகாலிங்கேஸ்வரரிடம் திருவடி தீக்கைபெற்றவர் முதலாம் இராஜ ராஜ சோழன் தஞ்சை பெருவுடையாரை நிலை நிறுத்தியபோது அட்டபந்தன மருந்து இளகி சிவலிங்கத் திருவுருவம் மருந்தினால் பிணிப்புறாமை அறிந்து கருவூர்தேவர் தஞ்சையை அடைந்து தம் வாயின் தம்பலத்தால் அட்டபந்தன மருந்தை இறுகச் செய்து பெருவுடையார் நிலைபெற நிறுத்தினார் என்னும் செவிவழிச் செய்தி ஒன்று வழங்கி வருகிறது அன்று முதல் இராஜ ராஜ சோழனின் அரசு குருவானார் ஆயினும் அரசபோகங்களை அவர் விரும்பியதில்லை

ஒன்பதாம் திருமுறையில் பத்து பதிகங்களை அவர் அருளிச்செய்துள்ளார் கணம்விரிகுடுமி... எனத்தொடங்கும் கோயில் பதிகத்தில் இரண்டாம் பாடலில்,

**என்உடன் பிறந்த**
**ஐவரும் பகையே யார் துணை என்றால்**
**அஞ்சல் என்று அருள் செய்வான் கோயில்**

என்று வரும் வரிகள் அருட் செறிவும் பொருட்செறிவும் கவிதை நயமும் மிகுந்து திகழ்கின்றது. முதலாம் ஆதித்த சோழன் கட்டிய சிவாலயத்து ஈசனாரைப் போற்றும் போது,

**பவளமே மகுடம் பவளமே திருவாய்**
**பவளமே திருவுடம்பதனில்**

என்று வளரும்.

இரண்டாம் பதிகத்து ஐந்தாம் பாடல் படித்துப் படித்து பரவசமடையத் தக்க தெள்ளுதமிழ் தேன்மலர். இதைப் போலவே எளிமையும் எழிலும் கொஞ்சும் கருவூர் சித்தரின் பதிகங்கள்பத்தும் பயின்று பயனடையத் தக்கன.

## பூந்துருத்தி நம்பிகாடன் நம்பி

முதிர்ந்த சிவபக்தர் நம்பி காடன் நம்பி என்று இருபுறமும் சிறப்புப் பெயர் கொண்ட இவர் சாளரபாணி என்னும் புதிய பண்ணில் கோயிற்பதிகம் பாடி உள்ளார் ஆரூர் ஐயனுக்கு இரண்டு பதிகங்களை ஓதியுள்ளம் மகிழ்ந்த அவர்,

**முத்த வயிரமணி மாணிக்கமாலைக்கண்மேல்**

என்று தொடங்கும் அழகிய கோயிற்பதிகத்தின் இரண்டாம் பாடலில் இறைவன் சிவபெருமானை நோக்கி "அடியார்க்கு திருக்கயிலையில் தன் ஆட்சியை பகிர்ந்து அளித்து விட்டு தில்லையில் அந்தணர்களோடு உடனுறையும் வாழ்க்கையினைமேற்கொண்டு நீ இன்புறுகின்றாயே ஆனந்தக் கூத்து ஆடுகின்றாயே என்னே உனது அருள் என்று உள்ளம் உருகும் மாண்பு நாம் எண்ணி மகிழத்தக்கது இறுதிப்பாடலில்,

**சேடர் உறை தில்லை சிற்றம்பலத்தான்றன்**
**ஆடல் அதிசயத்தை ஆங்கறிந்து பூந்துருத்திக்**
**காடன் தமிழ் மாலை பத்தும் கருத்தறிந்து**
**பாடும் இவைவல்லார் பற்றும்நிலை பற்றுவரே**

என்று உறுதிபடக் கூறுகின்றார் சேடர் என்போர் அடியார்கள் எண்வகைப் பத்திநிலைகளை உடையவர்கள் மெய்யன்பர்கள் எண்வகைப்பத்திகளாவன.

(1) சிவனடியாரை வணங்குதல் (2) சிவதரிசனம் செய்தல் (3) சிவபூஜை செய்தல் (4) சிவத்தொண்டுகளை சிவார்ப்பணம் செய்தல் (5) சிவ சரிதங்களைக் கேட்டு மகிழ்தல் (6) மயிரக் கூச்செறிதல் (7) சிவத்தியானத்திலிருத்தல் (8) சிவத்திருப் பொருளை கொண்டு சீவியாதிருத்தல் - ஆகியனவாம்.

**கண்டராதித்தர்**

சிவஞானக் கண்டராதித்தர் என்று கல்வெட்டுகளில் கூறப்படும். விஜயாலயச் சோழனின் தனிச் சிறப்பு வாய்ந்த மரபினில் வந்த ஆன்மீகத் தென்றல்தான் பராந்தகச் சோழனின் இரண்டாவது மகனான கண்டராதித்தர் இவரது இல்வாழ்க்கையின் இணையற்ற நற்துணைவியார் செம்பியன் மாதேவி என்பார் கணவர் சிவபக்தியில் பதம் பெற உறுதுணையாய் நின்றவர். கண்டராதித்த சோழன் அருளிச்செய்த,

**மின்னார் உருவம் மேல் விளங்க**

எனத்தொடங்கும் கோயிற் பதிகம் முழுவதும் இறைவன் சிவபெருமானைச் சென்றடையும் பொன்னாளும் என்னாளோ என்று அவர் உள்ளம் ஏங்கும் ஏக்கம் நம் நெஞ்சையும் உருக்குகின்றது சோழர் குலத்து சுடர்க் கொழுந்து இவர்.

**வேணாட்டடிகள்**

தென் திருவிதாங்கூரின் பழம் பெயரேவேணாடு இந்நிலப்பகுதியை ஆண்ட அரசபரம்பரையில் வந்த குறுநில மன்னராய் நாடாண்டவர் இந்த சேரர் குலத்தோன்றல் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர் எனினும் ஈசனை நேரில் காணா நிலைக்கு வருந்திக் கதறுகிறார், சுந்தரர் பெருமான் தோழமை உறவுடன் இறைவனின் குறைகளை இடித்துரைப்பது போல் அல்லாது இவர்மிகவும் மென்மையாய், தனக்கு காட்சிதராததை நினைத்து வருந்திப்பிதற்றுகின்றார். சுந்தரர் பெருமான் இறைவனை மகத்தில் புக்கச் சனியானீரே என்கிறார், வேணாட்டடிகளோ,

**கைச்சாலும் சிறுகதலி, இலைவேம்பும் கறிகொள்வார்,**
**தம்பாலைச் சாய்ப்பற்றார் என்னும் முதுசொல்லும்**
**பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளம் என்றதுபோல்**
**கன்று பிரிகற்றாப்போல் கதறுவித்தி வரவி நில்லாய்**
**அடியறிய உணர்த்துவதும் அகத்தியனுக்கு ஒத்தன்றே**
**இடுவதுபுல் ஓர் எருதுக்கு, ஒன்றினுக்கு வைவிடுதல்**
**நடு இதுவோ திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே**

என்று கருத்தும் சுவையும் மிக்க பழமொழிகளை பதிகங்களில் அழகாய் இணைத்துப் பாடுவது அடியாருக்கும் தம் கருத்தேபோல் எண்ண இயம்புகின்றார் இந்த பாங்கு போற்றுதற்குரியது.

## திருவாலி அமுதனார்

வைணவகுடியில் தோன்றிய திருவாலியமுதனார் சிவபிரானிடத்துப் பேரன்பு பூண்டு அருள் நலம் பெற்று சிவனடியாராகத்திகழ்ந்தார். தில்லை நடராஜ பெருமானையே தம் குலதெய்வமாய்க் கொண்டு சிவ பக்தியில் சிறந்து விளங்கினார் இவர் நான்கு பதிகங்களால் தில்லையாம் கோயிலைப்பாடிப் பரவினார். முதல் பதிகம் கோயில்ப்பதிகம் பாதாதிகேசம் இறைவனின் திருவுருவை வருணிப்பதாகும். மற்ற மூன்றும் அகப்பொருள் அந்தாதிவகையாகும் ஆயினும் இறைவன் சிவபெருமான் மீது ஆராக் காதல் கொண்டவர் என்பதை அவரது ஒவ்வொரு பாடலும் உணர்த்துகின்றன.

## புருடோத்தம நம்பி

இவரும் வைணவக்குலத்தில் தோன்றியவர்தான் ஆயினும் ஒப்பற்ற சிவபக்தரானார் திருச்சிற்றம்பலவன் பால் இவர் கொண்ட அன்பின் வெளிப்பாடுதான் எத்துணை இனிமையும் ஏக்கமும் கொண்டதாய்த் தோன்றுகின்றது! என்பதனை ஒவ்வொரு பாடலையும் பயிலும் போதும் நாம் உணரலாம் அகப்பொருளில் அந்தாதியாய் அமைந்தது எனினும் பக்திசுவை சொட்டுகிறது.

**தேடி இமையோர் வரவும் தில்லைச்சிற்றம்பலவர்**
**ஆடிவரும் போது அருகே நிற்கவுமே ஒட்டாரே**

என்பதனால் இந்திராதிதேவர்கள் கூட்டத்தில் நான் அவரை நெருங்கி நிற்க முடியாதுபோலிருக்கிறதே என்று ஏங்குகிறாராம்.

**ஏ, யிவரே வானவர்க்கும் வானவரே என்பரால்**
**தாயிவரே எல்லோர்க்கும் தந்தையுமாம் என்பரால்**
**தேய் மதியம் சூடிய தில்லைச்சிற்றம்பலவர்**
**வாயினை கேட்டறிவார் வையத்தார் ஆவாரே**

என்கின்றபாடலால் சைவத்தின் மாண்பினையும் சிவபெருமான் ஒருவரே கடவுள் என்பதனையும் தெள்ளத்தெளிவாய் பறை சாற்றுகின்றார்.

## சேதிராயர்

வள்ளல் பரம்பரையில் வந்தவர் எனலுமாம் மலையமான் நாட்டின் திருக்கோவலூரின் பரப்பில் குறுநில மன்னராய் இருந்து வீரமும் ஈரமும் சிறந்தோங்கி தம்முன்னோர்களைப் போல் சிவபக்தியில் சீரோங்கி எப்போதும் ஈசனையே எண்ணிஏங்கி இளைத்து அகப்பொருளை வைத்து அந்தாதியாய் அமைத்து

**சேலுலாம் வயல் தில்லையுளீர உமைச்**
**சாலநாள் அயன் சார்வதினால் இவள்**

**வேலையார் விடம் உண்டு கந்தீர என்று**
**மாலதாகும் என்வாணுதலே.**

என்று பதிகம் முழுவதும் இறைவனார் மீது காதலமுதை பொழிகிறார் இறுதியாக... நம் வழிபாட்டிற்குரிய சேந்தனார் பெருமான் இறைவன் சிவபெருமானுக்கு திருப்பல்லாண்டு பாடிமகிழ்கிறார் - சேந்தனார் பெருமானைப் பற்றிய விவரங்களை முன்னமேகண்டோம் சேந்தன் என்ற பெயரில் பலர் வாழ்ந்துள்ளனர் ஆயினும் திருப்பல்லாண்டு பாடினார் எவரோ அவரே நம்மைச் சேர்ந்தனார் அவர் திருவடியைச் சிந்தித்து எந்த நற்செயல் எவண் நிகழ்ந்தாலும் அதுபோழ்து இத்திருப்பல்லாண்டினை இசைத்து இறைவன் சிவபெருமானின் திருவருளைப் பெறுவோம்.

**மன்னுகதில்லை வளர்க நம் பக்தர்கள் வஞ்சகர் போயகல**
**பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனியெலாம் விளங்க**
**அன்ன நடை மடவாள் உமைக்கோன் அடியோமுக்கருள்புரிந்து**
**பின்னை பிறவியறுக்க நெறிதந்த பித்தர்க்கு பல்லாண்டு கூறுதுமே**

சிதம்பரமாம் தில்லையில் அடியார்கள் திருக்கூட்டம் வந்து குவியட்டும் நெஞ்சில் சிவபக்தி இல்லாத வஞ்சகர்கள் (பொய்யடியார்கள்) தொலைந்து போகட்டும் நம் இனத்தவர்களாகிய மெய்யடியார்கள் மேன்மேலும் செழிக்கட்டும் சிறக்கட்டும் பொன்னால் வேயப்பட்ட மண்டபத்துள்ளே புகுந்து உலக முழுமைக்கும் சிவபக்தி செழிக்கட்டும் சிவ சோதியாய் விளங்கட்டும் அன்னம் போன்று நடை பயிலும் எம் அன்னைக்கு அரசனாகிய சிவபெருமானின் அடிமையாகிய எங்களுக்கு பேரருள்புரிந்து பின்னரும் தொடரவிருந்த பிறிவித்தொடக்கினை அறத்துயாம் உய்ய வழிகாட்டிய எங்கள் மெய்பரம் பொருளினைப் புகழ்ந்து பல்லாண்டு வாழ்க என போற்றுவோமே.

**மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் விரைந்து வம்மின்**
**கொண்டுங் கொடுத்தும் குடிகுடி ஈசற்கு ஆட்செய்மின்**
**குழாம் புகுந்து**
**அண்டங்கடந்தபொருள் அளவில்லதோர் ஆனந்த**
**வெள்ளப்பொருள்**
**பண்டும் இன்னும் உள்ள பொருள் என்றே பல்லாண்டு கூறுதுமே**

இறைவன் சிவபெருமான் அன்றும் இன்றும் என்றும் உள்ளவன் இதில் ஐயப்பாடு உள்ளவர்கள் தூரப்போய் விடுங்கள் சிவம் அண்டங்கள் அனைத்தும் கடந்த ஆனந்த வெள்ளப்பொருள் அந்தப் பரம்பொருளுக்கு யாம் பல்லாண்டுவாழ்க எனப்போற்றுவோம்.

**நிட்டையிலா உடல் நீத்தென்னை ஆண்ட நிகரிலா வண்ணங்களும்**
**சிட்டன் சிவனடியாரை சீராட்டும் திறங்களுமே சிந்தித்து**

அட்டமூர்த்திக்கு என்னகம் நெகஊறும் அமர்தினுக்கு ஆல நீழல்
பட்டனுக்கு என்னைத் தன் பாற்படுத்தானக்கே பல்லாண்டு
கூறுதுமே

உன்னை மட்டுமே நினைந்து மற்றனைத்தையும் மறந்து ஒடுக்கத் திருக்காத இந்த உடலை நீக்கி என்னை ஆட்கொண்ட என்போன்ற சிவனடியாரை சீராட்டும் நின் திறங்களை சிந்தித்தால் என் நெஞ்சு நெகிழ்ந்து அமிழ்து ஊறுகிறது அத்தகைய பட்டனுக்கு பெரும் (பரமஞா்னிக்கு) பல்லாண்டு வாழ்க எனயாம் போற்றிக் கூறுவோம்.

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத்தொண்டருள்ளீர்
சில்லாண்டிற்சிதையும் சில தேவர்சிறு நெறிசேராமே
வில்லாண்டகனகத்திரள்மேரு விடங்கன் விடைப்பாகன்
பல்லாண்டெனும் பதம் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

எல்லா மொழிச்சொற்களின் பொருளையும் தனதாய் கொண்ட சிவாக மங்களின் பொருள் நன்குணர்ந்த தெளிந்த தூய மனத்தொண்டர்களே நீங்கள் சில காலங்களில் அழிந்து விடுகின்ற திருமால், பிரமன், இந்திராதி, தேவர்கள் சிறு தெய்வங்கள் ஆகியவற்றை வழிபடுகின்ற கொள்கைகளை உடைய மதங்களில் சாராமல் பல்லாண்டுகாலம் வாழ்வான் என்கின்ற சொற்களையெல்லாம் கடந்தவனான இறப்பும், பிறப்பும் இல்லாதவனான தாயும், தந்தையும் இல்லாதவனுமான இறைவன் என்று சொல்லப்பட்ட சிவபெருமானை மட்டுமே சிந்தியுங்கள் அந்த பல்லாண்டு எனுசொல்லை கடந்தவனுக்கே நாம் பல்லாண்டு வாழ்க என்று போற்றிக் கூறுவோம்.

புரந்தரன் மாலயன் பூசலிட்டு ஓலமிட்டு இன்னம் புகலரிதாய்
இரந்திரந்து அழைப்ப என்னுயிராண்ட கோவினுக்கு என்
செயவல்லம் என்றும்
கரந்தும் கரவாத கற்பகனாகி கரையில் கருணைக்கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலா பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே

பற்பல அண்டங்களில் இந்திரன், பிரம்மன், திருமால் முதலிய தேவர்கள் இறைவன் சிவபெருமான் சந்நிதியை அடைந்து அவரைக் காண வேண்டும் நான், நீ என்று முந்தி முட்டிமோதி சண்டையிட்டுக் கொண்டு இறைவனே ஓலம் என்று முறையிட்டு தஞ்சமடைய அவர்தம் தகுதி எண்ணி அவர்களுக்கு அருளாமல் எனது உயிரை தன்வயப்படுத்திக் கொண்ட இறைவன் சிவபெருமானுக்கு யாம் என்ன கைமாறு செய்ய வல்லோம் அளவில்லாத பெருங்கருணைக்கடலாக இருந்து எப்பொருள் களிடத்தும் பரவியும் நிறைந்தும் விளங்கும் எல்லையற்ற எனது தோழைமையுடைய சிவபெருமானைப் புகழ்ந்தே பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் போற்றுவோம்.

சேவிக்க வந்த அயன் இந்திரன் செங்கண்மால் எங்கும் திசை திசையென
கூவிக் கவர்ந்து நெருங்கிக் குழாம் குழமாய் நின்று கூத்தாடும்
ஆவிக்கு அமுதை என் ஆர்வத்தை தனத்தினை அப்பனை ஒப்பமரா்
பாவிக்கும் பாவகத்து அப்புறத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

இந்திரன் மாலயன் மேலும் பற்பல தேவர்களும் இறைவன் சன்னிதியின் வாயிலை ஆக்ரமித்து அடைத்துக்கொண்டு அடைக்கலம் கேட்டு அவர்கள் ஓலமிட அப்போது ஆனந்த நடனமிடும் என் ஆருயிர்க்கு அமுதம் போன்றவனை என் தந்தையை, தாயை தேவர்கள் உவமை சொல்வதற்காக நினைப்பதற்கு அப்பாற்பட்டவனாகிய சிவபெருமானை புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் போற்றுவோம்.

சீரும் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவார் உலகில்
ஊரும் உலகும் கழற உளறி உமை மணவாளனுக் ஆம்
பாரும் விசும்பும் அறியும் பரிசு நாம் பல்லாண்டு கூறுதுமே

இணையாருமில்லாத சிவலோக நாயகனின் திருவடியின் கீழிருந்து பிறர் எவரும் பெறுதற்கரிய அறிவினைப் பெற்றேன் இவ்வுலகில் நான் பெற்ற பேற்றை யார் பெற வல்லவர் என்று ஊரில் உலகில் உள்ளவர் களும் பேசுகிறார்கள் தேவலோகத்தில் உள்ளவர்கள் அறிந்து போற்றும் வகையில் பக்திமேலீட்டினால் நாக்குளறி அச்சிவபெருமானை போற்றி புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் வாழ்த்துவோம்.

சேலும் கயலும் திளைக்கும் கண்ணார் இளங்கொங்கையில் செங்குங்குமம்
போலும் பொடியணிமாா்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியாநெறிதந்துவந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே பல்லாண்டு கூறுதுமே

திருமாலும், பிரம்மனும், அறியாத அறியமுடியாத திருவருள்நெறி யினை எனக்கு அருளி என்மனத்திலுள்ளே வந்து இனிமை பயக்கும் பாலையும் அமுதத்தையும் ஒத்து நின்றவனாகிய நடராசப் பெருமானைப் பாடி புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் போற்றுவோம்.

பாலுக்குப் பாலகன் வேண்டிய அழுதிட பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னியதில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர்வாழ்கின்ற சிற்றம்பலமே இடமாக
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே

வியாக்ரபாத முனிவரின் குழந்தையாகிய உபமன்யு முனிவர் பசி யினால் பாலுக்கு விரும்பி அழ அவர்க்கு பாற்கடலையே உண்ணக்

கொடுத்தருளிய பெருமான் திருமாலுக்கு சலந்தரனை பிளந்தசுதர்சனம் எனும் சக்கரப்படையை முன்னமே அளித்தருளிய இறைவன், என்றும் நிலைபெற்றுத்திகழும் தில்லையில் சிற்றம்பலமெனும் பொன்னம்பலத்தை தமக்கு இடமாகக் கொண்டு அன்பர்களுக்கு அருள்புரிந்து ஆனந்த நடனம் புரியவல்ல சிவபெருமானைப் புகழ்ந்து பல்லாண்டுவாழ்க எனக்கூறி நாம் போற்றுவோம்.

தாதையை தாளற வீசிய சண்டிக்கு இவ்வண்டத்தொடும் உடனே
பூதலத்தோரும் வணங்க பொற்கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித்தாமமு நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்கு பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

தன் தந்தை எச்சத்தத்தரின் கால்கள் அற்று விழும்படி வெட்டிய அந்தணச் சிறுவராகிய விசார சருமர் என்ற சண்டேஸ்வரருக்கு அப்பொழுதே தேவர்களோடு பூலோகத்தவரும் வணங்குமாறு அழ்கிய கோயிலும் சிவநிரமால்யமான அமுதும் தந்தருளி இன்னும் பரிவட்டமும் ஒளி பொருந்திய அழகிய இண்டைமாலையும் சண்டேஸ்வரர் என்னும் திருப்பெயரும் சண்டீசர்பதவியும் தொண்டர்க்கெல்லாம் அதிபதியாம் விசாரசருமர் செய்த பெரும் பாவச்செயலுக்கு வெகுமதியாய் கொடுத் தருளிய சிவபெருமானைப் புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் போற்றுவோம்.

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி மிகுதிரு ஆரூரின்
மழவிடையார்க்கு வழிவழி ஆளாய் மணஞ்செய்க்குடிப் பிறந்த
பழ அடியாரொடுங்கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே

குழல் ஒலியும், யாழ் ஒலியும் கூத்தின் ஒலியும் பெருகித்திகழ்கின்ற ஆரூர் அம்மானுக்கு தலை முறை தலை முறையாய் அடிமை பூண்டு ஆண்களும், பெண்களும் மணம் புரிந்து கொண்ட பழைமையான அடியாரொடும் சேர்ந்து நின்று எம்தந்தையாகிய சிவபெருமானைப் புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி நாம் வாழ்த்துவோம்.

ஆரார் வந்தார் அமரர்குழாத்தில் அணியுடை ஆதிரை நாள்
நாராயணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்குழாங்கள் திசையனைத்தும் நிறைந்தும்
பாரார் தொல் புகழ்பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

இன்பமான மார்கழித்திருவாதிரை திருநாளில் நம் தந்தையாகிய சிவபெருமானைப்போற்றியும் புகழ்ந்தும் பாடுதற்கு தேவர் கூட்டத்தில் யார்யார் வந்தனர் திருமாலுடன், பிரமதேவனும், அக்கினி தேவனும், சூரிய தேவனும், இந்திரனும் வந்தனரா? நன்று நன்று தேவரோடும்

சிவமேநிலவும் நான்கு திருவீதியிலும் தேவர்கள் கூட்டங்கள் எங்கணும் பரவிநிற்க உலகைப்படைத்து நிறைந்த உத்தமனின் எல்லையற்ற பழைமையான புகழைப்பாடிக் கொண்டும் அவனைப் பல்லாண்டு வாழ்க என நாம் போற்றுவோம்.

எந்தை எந்தாய் சுற்றம் முற்றும் எமக்கு அமுதாம் எம்பிரான் என்றென்று
சிந்தை செய்யும் சிவன் சீர அடியார் அடிநாய் செப்புறை
அந்தமில் ஆனந்தச்சேந்தன் எனைப்புகுந்தாண்டு கொண்டாருயிர்மேல்
பந்தம் பிரியப்பரிந்தவனே என்று பல்லாண்டு கூறுதுமே

என் தந்தையும் என் தாயும் என் உறவினரும் மற்றும் எனக்கு எல்லாமுமாகி நின்றுதன் அருளமுதத்தை என் உயிரில் கலந்து என் உயிருக்கு இருந்த இந்த உலகப்பற்றினை பிரித்து எப்போதும் சிவன்சீரடி சிந்திக்கும் அடியார் பெருமக்களுக்கு அடிமையாய் நிற்கும் செப்புறைத் தோன்றலாகிய சேந்தனாகிய யாம் தோற்றமும் முடிவில்லாத அந்தப் பரம்பொருளை பரமசிவனைப்புகழ்ந்து பல்லாண்டு வாழ்க எனக்கூறி போற்றுவோம். இது ஒன்பதாம் திருமுறையின் ஒப்பற்ற சிறந்த திருப்பதிகம் இன்னும் சொல்லப்போனால் பன்னிருதிருமுறைகளிலேயே தனிச்சிறப்பு வாய்ந்தது ஆனால் வேறு யார் யாருக்கெல்லாமோ யார், யாரோ பாடிய பல்லாண்டுகளுக்கெல்லாம் ஏற்பட்ட பரப்புதல், இந்த உயர்தனி பல்லாண்டுக்கு இல்லாமல் போனதன் காரணம் சைவர்கள் இதனை முதன்மையாய் ஏற்று ஓதி உணராமையே. அனைத்துக்கும் மேலான முழு முதலுக்கு நாம் வாழ்த்துச் சொல்லும் அளவுக்கு நமக்கு உயர்வேது. என நினைக்கும் தாழ்வுமனப்பான்மையே. அருளாளர்கள் ஆக்கி அளித்த அருட் திருப்பதிகங்களை ஓத தகுதி எதுவும் தேவை யில்லை அப்படி ஒருதகுதி தேவை என நினைப்பதும், சொல்வதுவும், மடமையிலும் மடமை நாம் ஓதாவிட்டால் அந்த அருட்செல்வக் கொடைகள் காலப்போக்கில். மறைந்து விடும் இது நம் தாய்மொழிக்கு நாம் செய்யும் பெரும்பிழை நம் ஆன்மாவுக்கு தூய்மை சேர்க்கவாவது திருமுறைப் பதிகங்களை நாளும் ஓதுவோம் நலம் பெறுவோம்.

வாழ்கதமிழ்! வளர்க திருமுறைப்புகழ்!

# 17. திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்

**திருமதி அர. கலைவாணி, கோவை.**

**தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி**

இத்தகைய போற்றுதலுக்குரியவர் சிவபெருமான். இவர் மக்களை முத்திநெறியடைய வைப்பவர். மக்களுக்கு மாந்தர் என்னும் ஒரு திருப்பெயரும் வழங்க வருகின்றது. மாந்துதல் என்றால் உட்கொள்ளுதல் என்று பொருள். அதாவது ஐம்புலனுகர்வும் உட்கொள்ளுதலே ஆகும். திருமறை - உபதேசம் மந்திரம். அம்மறையினை மாந்துவிப்பாரும் மாந்துவாரும் மாந்தரெனவே அழைக்கப்பெறுவர். மாந்துவிப்பாரை நிறைமொழி மாந்தர் என்பர். இவ்வாறு நிறைமொழி மாந்தரால் அருளப்பட்டு மெய்கண்டார் நம் அறிவினால் உணர்தலே மந்திரம் இந்த கருத்தை

**ஐம்புலனால் மாந்தல் அனைத்துயிர்க்கும் ஆம்பொது**
**செம்புலனால் மாந்தல் சிறப்பாமால் - இம்பரிடை**
**மக்கட்கே மாந்துணர்வு மாந்திரமே மந்திரமாம்**
**தக்கபொருள் மந்திரத்தாம் சாற்று**

என்கிறார் திருமூலர். இதே கருத்தை

**நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழிதானே மந்திரம் என்ப**

என்கிறார் தொல்காப்பியர் - இதனையே

**மறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்**

என்கிறார் திருவள்ளுவர். திருமந்திரம் காட்டும் கருத்துக்கள் பலவாயினும் நாம் இங்கு விளக்கப்போவது அறக்கருத்துக்கள் மட்டுமே.

திருமந்திரத்தில் திருமூலநாயனார் அறக்கருத்துக்களையே முதலில் கூறியுள்ளார். அன்புடைமை, நிலையாமை, பிறன் இல் விழையாமை, அரன்செய்வோன் திறன் அறன் செய்யான் திறன் என அறத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார். அறம் வாழ்வில் முக்கியத்துவம் வகிக்கிறது என்று அனைத்துச்சான்றோர்களுமே உணர்ந்திருந்தனர்.

அன்பும், அறனும் ஒருவனிடம் இருந்தால் பிற செல்வங்கள் தானாக வந்தடையும் என்று உணர்ந்து இருந்தனர்.

**திருமந்திரம்**

திருமூலரால் அருளப்பட்டது திருமந்திரம். மூவாயிரம் பாடல்களைக் கொண்டது திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. சைவசமயத்தில் தோத்திரமாகவும் விளங்கும் சிறப்பு பெற்ற நூல் திருமந்திரம். திருமந்திரம் எளிய தமிழ்நடையில் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையை தெளிவுபடுத்துகிறது.

**அறம்**

''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'' என அறத்திற்கும், மெய்ப்பொருள் காண்பது அறிவு என அறிவுக்கும், ''அகநகநட்பது நட்பு'' என நட்பிற்கும், ''உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்'', ''சொல்லுக சொல்லிற்பயனுடைய'', ''எண்ணித்துணிக கருமம்'' என எண்ணம், சொல், செயல் ஆகியவற்றிற்கு இலக்கணங்கள் திருக்குறளில் கூறப்பட்டுள்ளன.

''அறம்செய விரும்பு'', ''மருந்தேயாயினும் விருந்தோடு உண்'' ''செய்வன திருந்தச்செய்'' என்பன ஔவையார் காட்டும் அறநெறிகள்.

பிற உயிர்களிடத்தும் அன்பு செலுத்துதலும். துன்பம் செய்தாரையும் தோழனாகக் கருதுதலும் பயன் கருதாது உதவி செய்தலும், பொறாமை, கோபம், ஆசை, கடுஞ்சொல் போன்றவற்றைத் தவிர்த்து நடைபெறுவதே அறம் ஆகும்.

அறம் என்பதே அறன் என்றாயிற்று. மனிதன் வாழ்வு நற்செயலைக் கொண்டு தான் முன்னேற வேண்டும். அறத்தைத் தவிர ஒருவன் உயர்வடைய வேறு வழியே இல்லை. ஒருவன் ஆக்க சக்தியைப் பெறவேண்டுமானால் அறச்செயலைச் செய்தாலே போதும். இல்லா விட்டால் அவன் வாழ்வில் ஒரு அடிகூட முன்னேற முடியாது.

**தலையாய மனிதன் ஆவதற்கு திருமந்திரம் கூறும் அறநெறி**

உலகில் மனித வாழ்க்கைக்கும் விலங்கு வாழ்க்கைக்கும் இடையில் போட்ட எல்லைக்கல் கடவுள் உணர்வேயாகும். கடவுள் உணர்வு இல்லாத வாழ்க்கை விலங்கு வாழக்கையாகும். ஏனெனில் இவ்வுணர்வைத் தவிர மனிதனுக்கும் விலங்குக்கும் ஒரே மாதிரியான வாழ்க்கைதான் நடைபெறுகிறது. எனவே கடவுள் உணர்வு இல்லாதவரை விலங்குகள் என்கின்றனர் சான்றோர். வள்ளுவரும் ''விலங்கனையர் மாக்கள்'' என்கிறார். ஆனால் கடவுள் உணர்வு கொண்டு இம்மண்ணில் முழுமுதற் பரம் பொருளாய சிவபெருமானுக்கு அடிமை என்ற உறுதியான மனத்தை உடையவனே மனிதன் ஆவான் என்பதனை

''என்தாயோடு என்அப்பன் ஏழேழ் பிறவிக்கும்
அன்றே சிவனுக்கு அடிமை'' (திருமந்திரம்)

என்றபாடல் இயம்புகிறது.

**திருமந்திரம் காட்டும் அறநெறி**

மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'' என அறத்திற்கு மட்டும் விளக்கம் தந்ததோடு நில்லாமல் மேலும் அறத்தை வலியுறுத்துகின்றார் வள்ளுவர்

''செயற்பாலது ஒரும் அறனே''

என ஒருவனுக்குச் செய்யத்தக்கது நல்வினையே எனவும்

**வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதொருவன்**
**வாழ்நாள் வழி அடைக்குங் கல்**

என அறத்தைச் செய்தால் அவ்வறம் பிறப்பை நீக்கி வீடுபேற்றைக் கொடுக்கும் என்கிறார். ஒருவன் அறஞ்செய்யின் தனக்கும் தன் வழியின்னுள்ளார்க்கும் அழியாத பழியில்லாத புகழ் நிறுவியவனாவன். அவ்வறம் சிவனடி சேர்வதற்கும் வாயிலாக அமையும் என்பதை

**திளைக்கும் வினைக்கடல் தீர்வுறுதோணி**
**இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு**
**கிளைக்குந் தனக்கம் அக்கேடில் புகழோன்**
**விளைக்குந் தவம் அறம் மேற்றுணை யாமே (திருமந்திரம் - 15)**

என்ற பாடல் விளக்குகிறது.

**அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்** - குறள்

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் இந்நான்கையும் நீக்கி நடப்பதே அறம் என்ற கருத்தையே

**தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்**
**தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்**
**தாமறி வார்சிவ தத்துவ ராவர்கள்**
**தாமறி வார்க்குத் தமர்பர னாமே (திருமந்திரம் 108)**

என்ற பாடல் மூலம் விளக்குகிறார் திருமூலர். அதாவது சிவபெருமான் தாள் பணியும் பேரன்பினர் தாம் ஆருயிர் அனைத்திற்கும் துன்பந் துடைத்து இன்பியற்றி இனிதுற வாழச் செய்யும் நிலைபேறாகும் அறத்தினை அறிவர். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இல்லாதவர் தம் தூய உள்ளத்து அறத்தினைத் தாங்கி நிற்பர். அவர்களே சிவபெருமானின் பிறவா இறவா இயற்கைப் பேருண்மையினை இனிதுணர்வார். இவர் சிவ உண்மை உணர்ந்த சிவ தத்துவராவர்.

நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறிமார் அதுவே (புறம் 195)

சான்றோர்களே நீங்கள் நல்லது செய்யவில்லை என்றாலும் தீயது செய்யாமல் இருத்தலே மிகவும் சிறப்பு. அதுவே அனைவரும் விரும்பக்கூடியதும், நம்மை நல்வழியிலே செலுத்தி உய்யுமாறு செய்வதற்கும் அதுவே ஏற்ற வழி என்கிறார் நரிவெரூஉத் தலையார்.

இதையே

'கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டியமுதுமைக்கு' (தொல்.)

எனக் காட்டுகிறார் இளம்பூரணார்.

இதே கருத்தை

"அறம் செய்த அருளுடையீர் ஆகுமின்; யாரும்
பிறந்தும் பிறவாதார் இல்" (நாலடியார்-7)

வாழ்நாள் முடிவதற்குள் அறம் செய்து அருள் உடையவர் ஆதல் வேண்டும் மானிடப் பிறவியின் பயனும் அதுவே என்பதனை

தன்னை அறியாது தான்நல்ல ரென்னாதிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே (திருமந்திரம்-112)

கால முடிவில் தவறாது கூற்றுவன் வருவன்; அவனை யாரும் அறிந்து கொள்ளுதல் முடியாது. வருகின்ற அவன் கொண்டு போகப்படுபவர் நல்லவரா? பொல்லாதவரா? என நாடமாட்டான். வறுமையால் வாடும் குடும்பமே என நினையான். ஆண்டில் இளைஞரே எனவும் வேண்டான். எவரும் மாற்ற முடியாதபடி மிக்க வன்மையுடன் வருவன். அக்கூற்றுவன் வரும் முன் நீங்கள் சில நல்ல செயல்களைச் செய்யும் தன்மை பெற்று அதனால் நற்றவஞ் செய்யுங்கள் என அறத்தை வலியுறுத்துகின்றார் திருமூலர்.

தான் தவஞ் செய்வதாஞ் செய்தவ தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்கள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான் தெய்வம் என்று நமன்வருவானே (திருமந்திரம் - 114)

சிவமாந்தன்மை பெற்ற சிவஞானிகள் பராவுசிவனார் ஆவார். அந்நல்லாரை மதித்து அறவழியில் நிற்கும் மாந்தர்கள் தாம் தவம்

செய்யும் மாந்தராவார். அத்தகையோரை சிவஞானிகளே சிவமென வழிபடுவர். ஏனையோர் தான் எனும் செருக்கில் மூழ்கியவர். செருக்குடையவரைத் தேடி இறைவன் வாரான் நமனே வருவான் அவனே அறமல்லாதவர்க்குக் கடவுள்.

**மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்**
**அறந்தான் அறியும் அளவறி வாரே (திருமந்திரம் - 113)**

சிவனை மறந்தார்பால் சிவனும் வந்திடான். அறத்தின் பகுதியில் அறிய வேண்டிய எல்லையைக் கூடச் சிவனை மறந்தார் அறியார் என்கிறார் திருமூலர்.

மேலும்,

**பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை**
**அற்றம் உசையான் அறநெறிக்கல்லது**
**உற்றுகங் ஏால்ஒன்றும் ஈந்தது வேதுணை**
**மற்றண்ணல் வைத்த வழிகொள்ளுமாறே (திருமந்திரம் - 116)**

மெய்யண்பர் இவ்வுலகில் யாரிடமும் எவ்வகையான குற்றமும் புகலார். அறநெறியில்லாமல் பிறநெறியிற் செல்லார். (பிறநெறி-பாவநெறி) அறவழியில் ஈட்டிய பொருளை அறவோர்க்கு மனமுவந்து உங்களால் கொடுக்கப்படும் ஒன்றே. உங்களுக்கு வழித்துணையாகும் என்றும் இயம்புகின்றார் திருமூலர்.

பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்றுவிட்ட பண்பாளராம் தவத்தோர் உண்ணும் ஊணே அறப்பாங்கும் என்று தமிழ்மறை மொழியும். பொருளும் இன்பமும் போலல்லாது அறன் - இம்மை மறுமை வீடு என்னும் மூன்றையும் போற்றிக்கொடுத்துக் காக்கக் கூடியது.

திருமந்திரத்தில் திருமூலர் கூறும் அறநெறிகளை, முத்திக்கு வழியைக்காட்டுகிறார் என சமுதாயம் முழுதும் உணர வேண்டும்.

அந்நாளே இறைவன் மண்ணில் வந்து முத்தியளிக்கும் நாள் மானுட சமுதாயம் முழுதும் முத்தியினைப் பெறும் நாள் அந்நாளே பொன்னாள்.

**'ஈசனடிபோற்றி எந்தையடி போற்றி**
**நேசனடி போற்றி சிவன் சேவடி போற்றி'**

# 18. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

செல்வி சு. காளீஸ்வரி, மதுரை.

சைவம் என்பது சிவம் என்னும் செந்தமிழ்ச் சொல்லின் அடியாகப் பிறந்தது. சிவனோடு தொடர்புடையது சைவம். சைவத்தில் எல்லா உயிர்களும் சிவசம்பந்தம் உடையவையாகும். இதனை,

**நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம் (சம்பந்தர் புராணம் 926)**

என்பது சேக்கிழார் வாக்கு. எனவே உலகம் அனைத்தும் சிவமயம் ஆகும். அனைத்து உயிர்களையும் மாசு நீக்கிப் பக்குவப்படுத்திச் சிவமாம் தன்மைபெறச் செய்வதே சைவ சமயத்தின் நோக்கமாகும்.

### கடவுள் என்ற சொல்லாட்சி

கடவுள் என்ற சொல் இறைவனின் இருபேரியல்புகளைக் குறிப்பது. உயிர்களையும், உலகங்களையும் கடந்து நின்று அவற்றை இயக்குபவன் என்ற பொருளை "கட" என்னும் பகுதியும், ஒவ்வொரு பொருளின் உள்ளிருந்து அது அதுவாய் அவற்றுடன் கலந்து நின்று அவற்றின் இருப்புக்கும் அவை இயங்குவதற்கும் துணையாய் இருப்பவன் என்ற பொருளை 'உள்' என்னும் விகுதியும் குறிக்கின்றன. பொருள்களைக் கடந்து நிற்பது கடவுளின் சிறப்பியல்பு, அவற்றுடன் கலந்து நிற்பது கடவுளது பொது இயல்பு.

திருமந்திரத்தில் கடவுள் என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. அப்பாடல்,

**ஒழிந்தேன் பிறவி உறவு என்னும் பாசம்**
**கழிந்தேன் : கடவுளும் நானும் ஒன்று ஆனேன்**
**அழிந்தலங்கு இனிவரும் மார்க்கமும் வேண்டேன்**
**செழுஞ்சார்பு உடைய சிவனைக் கண்டேனே (2958)**

### எண்குணத்தவன் இறைவன்

சிவபெருமான் என்றும் வினையினால் கட்டுப்படாதவன் என்றும் எண்குணங்களுள் ஒன்றாகிய இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன் என்பதை,

**வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்**
**கண்டது முதல் நூலாகும்.**

என்று தொல்காப்பியம் கூறுகிறது.

திருமூலரின்- திருமந்திர பாயிரத்தில் சிவபெருமான் ஒருவரே கடவுள் என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளார். திருமந்திரத்தில் அமைந்த முதற் பாடலில்,

**ஒன்று அவன்தானே: இரண்டு அவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் : நான்கு உணர்ந்தான் : ஐந்து**
**வென்றனன்: ஆறு விரிந்தனன்: ஏழு உம்பர்ச்**
**சென்றனன்: தான் இருந்தான் உணர்ந்து எட்டே.**

மூலம் அறியலாம்.

### நிகரில்லா நிமலன்

சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் எதுவும் இல்லை. அவனுக்கு இணையானவர் எங்கு தேடினும் எவரும் இலர். அனைத்து புவனங்களையும் கடந்தவன். பொன் போல் மிளிரும் சூரியனை ஒத்த சடாமுடியை உடையவன். இதயத் தாமரையில் எழுந்தருளியிருப்பவன். இதனைத் திருமூலர்,

**சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்க யாவரும் இல்லை**
**புவனம் கடந்து அன்று பொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே.** 5

என்றருளச் செய்துள்ளார்.

சிவபெருமானை மறந்து செய்யும் எந்த அரிய தவமும் தவமாகாது. இதனைத் திருமூலர்,

**அவன் அன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை**

என்கிறார். இதனையே சிவஞான சித்தியார்,

**அரன்தன் பாதம்,**
**மறந்து செய் அறங்கள் எல்லாம் வீண் செயல்** (117)

என்று எடுத்தியம்புகின்றது.

### தன்னிகரில்லாத் தலைவன்

சிவபெருமானை அனைவரும் வழிபடுவர். அவனால் வழி படத்தக்கவர் எவரும் இல்லை. இதனைத் திருமந்திரம்.

**பொன்னால் புரிந்திட்ட பொற்சடை என்னப்**
**பின்னால் பிறங்க இருந்தவன் பேர் நந்தி**
**என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்**
**தன்னால் தொழப் படுவார் இல்லை தானே** (9)

எடுத்துரைக்கிறது. சிவபெருமான் எவரையும் தொழாதவன் என்பதால் தான் அவன் பொற்சடை எக்காலத்தும் முதுகுப்புறத்தில் பின்தாழ் சடையாக உள்ளது. இக்கருத்தைத் திருவாசகம்,

**சேர்ந்து அறியக் கையான்**

என்கிறது.

சிவபெருமான் தன் இரு கைகளையும் சேர்த்துக் குவித்து யாரையும் வணங்கினான் அல்லன். உலகிற்கு மழையைத் தருபவன் சிவபெருமானே என்பதில் அவனுடைய அருட்சத்தியைக் குறிக்கிறது. இதனைத் திருமந்திரம்,

**தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்**

என்கிறது.

**பிறப்பிறப்பற்றவன்**

சிவபெருமான் ஒருவனே எல்லா வல்லமையும் உடையவனாவன். அவன் திருவடியே நமக்கு உறுதி எனப்பற்றி நிற்கவேண்டும். அவன் அருளே வடிவானவன். அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைத் தருபவன். பிறப்பு, இறப்பு அற்றவன். அப்பெருமானை வணங்கினால் எல்லா இன்பங்களையும் பெறலாம் என்பதைத் திருமந்திரம்,

**பிறப்பிலி பிஞ்ஞகன் பேர்அரு ளாளன்**
**இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்**
**துறப்பிலி தன்னை தொழுமின் தொழுதல்**
**மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே** (25)

என்று முழங்குகின்றது.

சிவபெருமானிடம் உயிர்கள் எந்த அளவுக்கு பற்றுக்கொண்டு இருக்கிறதோ, அந்த அளவுக்கு அவன் உயிர்களுக்கு உதவுகிறான். பொதுவாக சிவபெருமான் எல்லோருக்கும் அருளும் பொருட்டு கருணையே வடிவாகி, சத்தியை உடையவன், உயிர்கள் அனைத்திற்கும் தலைவன், உயிர்களின் உலகப்பற்றுக்கு ஏற்ப மும்மலங்களையும் இயக்குபவன் என்ற உண்மையை,

**பரை பசு பாசத்து நாதன்** (49)

என்ற தொடரால் திருமூலர் குறிப்பிடுகிறார்.

**அருள் வடிவான தன்மை**

உலகில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் தந்தையாய் இருப்பவன் சிவபெருமான். அவனை எவ்வளவு நினைத்து அனுபவித்தாலும் தெவிட்டாத அமுதம் போன்றவன். அவனுக்கு இணை எவரும் இல்லை.

எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பவன். ஆதலால், இறைவனை எந்த நிலையில் நின்று தொழுகிறோமோ, அந்த நிலையில் நின்று அவனருளைப் பெறலாம். இதனை,

**அப்பனை நந்தியை ஆரா அமுதினை**
**ஒப்பிலி வள்ளலை, ஊழி முதல்வனை**
**எப்பரிசு ஆயினும் ஏத்துமின் ஏத்தினால்**
**அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே** (36)

என்றருளிச் செய்தார் திருமூலர்.

**அன்பு செலுத்துதல்**

சிவபெருமானை இகழ்பவர்களை அவன் அறிவான். உண்மை அன்பு செய்பவர்க்கு அருளைப் பொழிவான். இந்தப் பிறப்பில் எந்த தவறு செய்தாலும் சிவபெருமானிடம் அன்பு கொண்டு விளங்குபவரின் தவறுகளைப் பொருட்படுத்தாமல் அருள் செய்து இந்தப் பிறப்பிலேயே அவர்களுக்கு முத்தியைத் தருவான் என்னும் இவ்வுண்மையை,

**இன்பப் பிறவிக்கு இயல்வது செய்தவன்**
**துன்பப் பிறவித் தொழில்பல எண்ணினும்**
**அன்பில் கலவி செய்து ஆதிப்பிரான் வைத்த**
**முன்பு இப்பிறவி முடிவது தானே** (281)

என்றருளிச் செய்துள்ளார். சிவபெருமானிடம் எவ்வாறு அன்பு செய்ய வேண்டுமென்றால், புணர்ச்சியின் போது மகளிர் மேல் வைத்த அன்புபோல், உணர்ச்சி வயப்பட்டு அவனோடு ஒன்றாய் ஒடுங்கி அன்பு செய்யவேண்டும் என்பதை திருமூலர்,

**புணர்ச்சியுள் ஆயிழைமேல் அன்புபோல**
**உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்க வல்லார்** (283)

விளக்குகிறார்.

சில நேரங்களில் என்ன செய்வதென்று தெரியாமல் இருக்கும் சமயத்தில், சிவபெருமானை உள்ளம் உருகி நினைத்தால் தமது புத்தியினுள் புகுந்து நமக்கு வழிகாட்டுவான். இதனை,

**வணங்கி நின்றார்க்கே வழித்துணை யாமே** (28)

என்று தெரிவிக்கிறார் திருமூலர்.

**சிவபெருமானின் பெருமை**

சிவபெருமானின் பெருமையை யார் அறியமுடியும்? அவனது முழுநிறைவான வியாபகத் தன்மையை யார்தன் அறிவர்? அவன் பேரொளிப் பிழம்பாய் இருப்பவன். அவ்வொளிப் பிழம்பின் பெயரும்

யாருக்கும் தெரியாது. சிவபெருமானின் தொடக்கமும், முடிவும் யாராலும் அளவிட முடியாதன. இத்தகைய இறைவனைக் குறித்து திருமூலர் பின்வரும் பாடலின் மூலம்,

**ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை**
**ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்**
**பேர் அறியாத பெருஞ்சுடர் ஒன்று, அதின்**
**வேர் அறியாமை விளம்புகின் றேனே**

விளக்குகிறார்.

சிவபெருமானின் பெயரைப்பெற்று சீகண்ட பரமேசுவரன் உயிர்களுக்குத் தலைவனாக இருக்கிறான். அயனும், மாலும் சிவனடியார்கள் ஆவர். எனவே அவர்கள் நமக்குப் புறம்பானவர் அல்லர் என்ற கருத்தை,

**பயன் அறிந்த அவ்வழி எண்ணும் அளவில்**
**அயனொடு மால், நமக்கு அன்னியம் இல்லை**
**நயனங்கள் மூன்னுடை நந்தி தமராம்**
**வயனம் பெறுவீர் அவ்வானவ ராலே** (107)

திருமூலரின் திருமந்திரம் தெரிவிக்கிறது. எனவே வானவரைச் சிவனடியாராகக் கருதி வழிபட்டு நன்மையைப் பெறும்படி திருமூலர் உயிர்களை வழிப்படுத்துகிறார்.

**எல்லாமாய் நின்ற சிவபெருமான்**

சிவபெருமான் ஊழிக்காலத்தில் அனைத்தையும் தன்னுள்ளே ஒடுக்கி, மீண்டும் உயிர்களின் மலகன்மங்களைப் பக்குவமடையச் செய்வதன் பொருட்டு உலகத்தைப் படைக்கின்றான். இவ்வாறு எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கி மீண்டும் அதனை வெளிப்படுத்தும் திறனுடைய ஒருவன் சிவபெருமானாவான். சிவபெருமானே, ஈசுவரன், உருத்திரன், திருமால், அயனாக நிற்கிறான். கண் பிற பொருள்களைக் காட்டும். ஆனால் தன்னைக் காணாது. அதுபோல, இறைவன் தன்னைக் காட்டாமல் உயிர்களுக்குப் பிறவற்றைக்காட்டி நிற்பதே மறைப்பாற்றல் ஆகும். இதனைத் திருமூலரின் திருமந்திரம்,

**கண் ஒன்றுதான் பலகாணும் தனைக் காணா**
**அண்ணலும் அவ்வண்ணம் ஆகிநின்றானே** (440)

என்கிறார்.

திருமந்திரம் காட்டும் சிவபெருமான் என்ற தலைப்பில் அமைந்த சிவபெருமானின் எண்குணம், சிவபெருமானின் பெருமை, தன்னகரில்லா தலைவன், அருள் வடிவானவன், பிறப்பு இறப்பு அற்றவன் போன்ற பல செய்திகளையும், இறைவன் என்றுமுள்ள அநாதிப் பொருள் என்பதையும் அறியலாம்.

# 19. திருமந்திரத்தில் நால்வகை நெறிகள்

முனைவர் த. காவேரி, விருதுநகர்.

சிவபெருமானை அடையும் நெறிகள் நான்கு என்பர். அவை தொண்டு நெறி (தாச மார்க்கம்), மகன்மை நெறி (சற்புத்திர மார்க்கம்), தோழமை நெறி (சகமார்க்கம்), நன்னெறி (சன்மார்க்கம்) என முறையே பெயர் பெறும். இவற்றையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை நெறிகளாக சைவசித்தாந்தம் கூறுகிறது. இந்த நெறிகள் தான் சீவனை சிவனிடத்தில் கொண்டு சேர்க்கின்றன இதனை,

**"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கம்**
**தாதமார்க்கம் என்றும் சங்கரனை அடையும்**
**நன்மார்க்கம் நால் அவைதாம் ஞான யோக**
**நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்...**

என்ற சிவஞான சித்தியாரின் பாடலடிகள் மூலம் அறியலாம். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நெறிகள் படிப்படியாக இறைவனைச் சென்றடைய உதவும். மேலும் சரியை முதலிய மூன்றும் ஞானத்தின் வளர்ச்சி நிலைகளே என்ற பேருண்மையை,

**"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்**
**அரும்பு மலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே"**

என்ற தாயுமானவ சுவாமிகளின் திருவாக்காலும் அறியலாம். சிவபெருமானை அடையும் இந்த நால்வகை நெறிகள் பற்றித் திருமூலர் கூறிய கருத்துக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சரியை**

முதலாவது நிலையான சரியை கூறப்படுகிறது. இது இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று அங்கு செய்யப்படும் உழவாரப் பணிகள் பற்றியது எனலாம். இதனை,

**"தாத மார்க்கம் சாற்றில் சங்கரன் தன் கோயில்**
**தலம் அலகிட்டு இலகு திருமெழுக்கும் சாத்தி**
**போதுகளும் கொய்து பூந்தார் மாலை கண்ணி**
**புனிதற்குப் பல சமைத்துப் புகழ்ந்து பாடி**
**தீதில் திருவிளக்கிட்டு திருநந்தவனமும்**
**செய்து திருவேடங் கண்டால் அடியேன் செய்வது**

யாது பணியீர் என்று பணிந்து அவர்தம் பணியும்
இயற்றுவது இச்சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர்''
என்ற பாடல் விளக்குகிறது.

இச்சரியை நெறியை திருமந்திரம் கீழ்க்கண்ட பாடலில் கூறுகிறது.

''நாடு நகரமும் நற்றிருக்கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்த பின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே''

இப்பாடலில் சீலநெறி (சரியை) நிற்போர் திருத்தொண்டு ஓதப் பெறுகின்றது. சிவபெருமானின் அடியவர்கள் நாடு நகரங்களில் இருக்கும் திருக்கோயில்களைத் தேடிச் சென்று பணிகள் பல செய்து பரமனைப் பணிந்தேத்துவார்கள். திருமூலர் இப்பாட்டில் சரியா பூசையைப் பற்றிக் கூறுகிறார். இந்த முறையில் சரியையைப் பின்பற்றி வருபவர்கள் அடையும் நிலை பற்றித் திருமூலர் கூறுகிறார். ''நேர்ந்த சரியையோர் நீள் நிலத்தோரே'' என்பது அவர்தம் அருள்வாக்கு. சிவஞான சித்தியார் கூறும் அதே கருத்தை, அதாவது ''சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர்'' என்ற கருத்தைத் திருமூலரும் கூறி உள்ளார். சைவ சமயக்குரவர்கள் நால்வரில் அப்பர் சுவாமிகள் இவ்வழியினைப் பின்பற்றியவர். இதனை அவரது பாடலே பறைசாற்றுகின்றது. திருத்தாண்டகப் பாடலில்,

''நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சய போற்றி போற்றியென்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும்
ஆரூரா என்றென்றே அலறாநில்லே''

சிவபெருமானுடன் இணையும் நல்ல நிலையைப் பெற வேண்டு மானால் இச்சரியை மார்க்கம் சொல்லும் வழிகளைப் பின்பற்ற வேண்டுமென நெஞ்சத்திடம் கூறுகிறார்.

திருமூலர் இச்சரியை நெறியில் செல்பவர்கள் உருவ பூசை செய் கிறார்கள் என்கிறார். இவர்கள் பத்தர் எனப்படுவார்கள் என்று திருமந்திரப் பாடலடி கூறுகிறது.

''பத்தர் சரியைப் பாடுவோர்...'' என்பது அத் தொடர் ஆகும். மேலும் இச்சரியை நெறியே சுத்த சைவத்தின் உயிர் எனவும் திருமூலர் கூறுகிறார்.

"சேர்ந்திடு மூலசரியை நெறியிதென்
றாய்ந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண் மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே"

சைவநெறியின் உயிராகத் திகழும் சரியை நெறியைப் பின்பற்றிச் சென்றால் அடுத்த படி நிலையினைச் சீவன் அடைகிறது.

**கிரியை**

உலகங்களை எல்லாம் படைக்கின்ற சக்தியை இடப்பாகத்தில் உடையவனாகிய ஈசனுக்கு, அவனை இம்முறையால் வணங்கிப் பணியும் மனிதர் செய்யும் பணி கிரியை நெறி வழிபாடாகும். அது பதி பணி. அதனைச் செய்வதே அவனிடம் அன்புடைமைக்குச் சான்றாகும் எனத் திருமூலர் தம் பாடலில் கூறியுள்ளார்.

"இது பணிந்து எண்திசை மண்டலம் எல்லாம்
அது பணி செய்கின்றவள் ஒரு கூறன்
இது பணி மானிடர் செய்பணி, ஈசன்
பதி பண்ணி செய்வது பத்திமை காணே"

என்பது திருமந்திரப் பாடலாகும்.

இதனைச் சிவஞான சித்தியார் இறைவனை ஆவாகித்து வழிபடுதல் எனக் கூறுகிறது.

"புத்திர மார்க்கம் புகலின் புதிய விரைப்போது
புகை ஒளி மஞ்சனம் அமுது முதல் கொண்டைந்து
சுத்தி செய்து ஆசனம் மூர்த்தி மூர்த்திமானாம்
சோதியையும் பாவித்து ஆவாகித்து சுத்த
பத்தியினால் அருச்சித்து பரவிப் போற்றிப்
பரிவினோடும் எரியில் வருகாரியமும் பண்ணி
நித்தலும் இக்கிரியையினை இயற்றுவோர்கள்
நின்மலன் தான் அருகிருப்பர் நினையுங்காலே"

இப்பாடல் கருத்தை அப்படியே பிரதிபலிக்கும் பாடல் திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ளது அதில்,

"அன்பின் உருகுவன் நாளும் பணிசெய்வன்
செம்பொன் செய் மேனிக் கமலத் திருவடி
முன்பு நின்று ஆங்கே மொழிவது எனக்கருள்
என்பினுட் சோதி இலங்குகின்றானே"

எனத் திருமூலர் அன்பால் உள்ளம் உருகி இறைவனை வழிபடுவேன் எனக் கூறுகிறார்.

இக்கிரியை நெறியைப் பின்பற்றியவர் திருஞானசம்பந்தர் ஆவார். இதனை அவரது முதற் பதிகத்தின் முதல் பாடலிலேயே நாம் காண முடிகிறது. ஏடுடைய மலரான் நாளும் பணிந்தேத்த அருள் செய்த சிவபெருமானைத் தனது தந்தைக்குக் காட்டுகிறார். ஆகவே இறைவனை ஆவாகித்து வழிபடும் நிலை இதில் காட்டப்படுகிறது எனலாம். மற்றொரு பாடலிலும்,

"சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்குங்
கோனாளுந் திருவடிக்கே கொழுமலர் தூவெத்தனையுத்
தேனாளும் பொழிற் பிரமபுரத்துறையுந் தீ வணனை
நாநாளும் நல் நியமஞ் செய்தவன் சீர் நவின்றேத்தே"

சிவபெருமான் திருவடியைத் தூமலர் தூவித் தொழ அவன் பெரும் பேற்றினைத் தருவான் என்கிறார். இவ்வாறு காதலால் கசிந்து, கண்ணீர் மல்கி, தூமலர் தூவித்தொழ சிவபெருமானோடு நெருங்கி இருக்கும் பேறு வாய்க்கும். அதுவே யோகநிலை

**யோகம்**

யோகம் என்பது ஒன்றுதல் எனப் பொருள்படும். இந்த யோக நிலையை அடையக்கூடிய தகுதி யாருக்கு உண்டு என்பது பற்றித் திருமூலர் கூறுகிறார்.

"நெறி வழியே சென்று நேர்மையுள் ஒன்றி
தறி இருந்தாற் போல் தம்மை இருத்தி
சொறியினும் தாக்கினும் துண்ணென்று உணராக்
குறி அறிவாளர்க்குக் கூடலுமாமே"

மூலாதாரத்திலிருந்து தொடங்கிச் சகஸ்ராரம் வரை, ஆதாரங்களின் வழியே உணர்வைச் செலுத்தி அங்குச் சிவத்துடன் பொருந்தி, கம்பம் போல அசையாமல் இருந்து, கீறினாலும் தாக்கினாலும் திடுக்கிட்டு உணராமல், குறியாகிய சிவத்தை அறிவார்க்கு, அதனுடன் ஒன்றிக் கலக்க இயலும். எவ்வித இடையீடும் இல்லாமல் சிவனோடு இணைந் திருப்பது யோக நெறியாகும். இதனை,

"சகமார்க்கம் புலன் ஒடுக்கித் தடுத்து வளி இரண்டும்
சலிப்பற்று முச்சதுரமுதல் ஆதாரங்கள்
அகமார்க்கம் அறிந்து அவற்றின் அரும் பொருள்கள்
உணர்ந்து இங்கு
அணைந்துபோய் மேலேறி அலர்மதி மண்டலத்தின்
முகமார்க்க அமுது நினைந்திருந்தல் முதலாக வினைகள்
முழுச்சோதி நினைந்திருந்தல் முதலாக வினைகள்

உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்
உழத்தல் உழந்தவர் சிவன்தன் உருவத்தைப் பெறுவர்"

என்ற சிவஞான சித்தியார் பாடலும் விளக்குகிறது.

திருமந்திரம் இந்த யோகநிலையில் இருப்பவர்கள் பெறும் நிலை பற்றியும் கூறியுள்ளது.

"பூவினில் கந்தம் பொருந்தியவாறு போல்
சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்து அறிவாளர்க்கு
நாவி அணைந்த நடுதறியாமே..."

என்ற இப்பாடலின் மூலம் திருமந்திரம் யோக நிலையில் பூவின் மணம் போல சீவன் சிவமணம் பெறும் எனக் கூறுகிறது. திருமூலர் யோகம் என்பதற்கு ஒரு வரைவிலக்கணம் தருகிறார்.

"யோக சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோக நிர்வாணமே உற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தியுற்றலே"

என்ற பாடலின் மூலம் ஒண்சித்தியுற்றலே யோகம் என இலக்கணம் கூறுகிறார் திருமூலர். மேலும் யோகிக்கு யோகம், கிரியை, சரியை என்ற மூன்று நெறிகள் உள்ளன என்றும் திருமூலர் கூறியுள்ளார். "யோகிக்கு யோகாதி மூன்றுள....." என்பது தொடராகும். இந்த யோக நெறியில் உறுதியாக இருந்தால் இறுதியான ஞானநெறி வந்து வாய்க்கும்.

**ஞானம்**

ஞானத்தின் உயர்வினைப் பற்றித் திருமூலர்,

"ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவால்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே"

என்ற பாடலின் மூலம் கூறுகிறார். ஞானம் அல்லாத ஏனைய நெறிகள் பரமுத்தி நல்க மாட்டா. ஆதலின் ஞானத்திற் சிறந்தோரே மக்களுள் சிறந்தோர் ஆவார் என்பது திருமூலரின் கருத்தாகும். அடுத்த பாடலில் தன்னை உணர்தலே சன்மார்க்கம் (யோக நெறி) எனத் திருமூலர் கூறுகிறார். மேலும்,

"தன்பால் உலகும் தனக்கு அருகாவது
அன்பால் எனக்கு அருளாவதும் ஆனவன்

என்பார்கள் ஞானமும் எய்து சிவயோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடும் தானே''

என்ற பாடலின் மூலம் ஞானம் என்பது உலகமும், பொருள்களுமாக இருப்பவன் இறைவனே என உணர்தல் என்கிறார் திருமூலர் - சிவயோகம் என்பது எனக்கு அருள் அனுபவம் தந்து நிற்பவன் இறைவனே என உணர்தல் என்பர். ஞானி இவ்வாறு தன்னால் அறியப் பட்ட 'நேயம்' ஆகிய சிவத்தினைப் (சிவநிலையை) பிறகு பெறுவான்.

இதனைச் சிவஞானசித்தியார்,

''சன்மார்க்கம் சகல கலை புராணம் வேதம்
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள் பலவும் கீழாக மேலாம்
பதிபசுபாசம் தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமோடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின் மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்
பெருமை உடையோர் சிவனைப் பெறுவர் காணே''

என இப்பாடலில் விளக்குகிறார்.

இந்த ஞானநெறியைப் பின்பற்றிச் செல்பவன் ஞானத்தைப் பெறுகிறான் எனத் திருமூலர் கூறுகிறார்.

''நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக் கற்றோன்
கண்ணியஞேயங்கரை ஞானங் கண்டுள்ளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே''

என்பது அப்பாடலாகும்.

திருமூலர் கூறும் நால்வகை நெறிகள் பற்றி மேலே கண்டோம். இந்த நெறிகளைப் பின்பற்றினால் முறையே சாலோகம், சாரூபம், சாமீப்பியம், சாயுஜ்ஜியம் என்ற நிலைகளை அடையலாம். இதனைத் திருமூலர்.

''சார்ந்த மெய்ஞ் ஞானத்தோர் தான் அவனாய் அற்றோர்;
சேர்ந்த எண் யோகத்தர் சித்திச் சமாதியோர்;
ஆய்ந்த கிரியையோர் அர்ச்சனை தப்பாதோர்;
நேர்ந்த சரியையோர் நீள் நிலத்தோரே''

என்ற பாடலின் மூலம் விளக்கியுள்ளார். எனவே திருமந்திரம் நால்வகை நெறிகள் பற்றியும், அந்நெறியில் சென்றால் அடையப்படும் குறி பற்றியும் விளக்கியுள்ள சைவ சமய சாத்திரங்களுக்கு ஆதார நூல் எனலாம்.

# 20. திருமூலரின் பல்துறைச் சிந்தனைகள்

முனைவர் ந. கிருஷ்ணமூர்த்தி, காரைக்கால்.

**எல்லாப் பொருளும் இதன் பாலுள**
**இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்**

என்பர் திருக்குறளைப் புகழ்ந்துபோற்றும் சான்றோர். இக்கூற்று திருமூலரின் திருமந்திரத்திற்கும் மெத்தப் பொருந்தும்.

இறைநெறி பரப்ப எழுந்த திருமந்திரம் இறைநெறியை மட்டுமல்லாது உலக நோக்கிலான எண்ணிலடங்காப் பல்துறைச் சிந்தனைகளைப் படர விட்டு மணம்வீசித் திகழும் மாபெரும் படைப்பாகும். ஒருபொருள் குறித்து விளக்கவந்த பல்துறைச் சிந்தனைகள் திருமந்திரத்தின் வேர்களை வலுவூட்டு வதாக அமைகின்றன.

பக்திநெறி பரப்பும் பனுவல்களை யாத்த திருமூலர் அந்நெறியைப் போற்றுதற்கும் பல்லோரும் பல்விதமாய் உணர்ந்து பறைசாற்றுவதற்கும் பல்துறைச் சிந்தனைகளை ஆங்காங்கே பொறித்துச் செல்வது அவரின் நுண்ணாற்றலுக்குச் சான்று பகர்வதாய் அமைகிறது. இந்நிலையில் திருமூலர் காட்டும் பல்வேறு துறைச் செய்திகளில் குறிப்பாகப் பத்துத் துறைச் செய்திகளை மட்டும் இக்கட்டுரை வகைமாதிரி ஆய்வாக மேற் கொள்கிறது. பக்க விரிவஞ்சி பாடல்களின் விளக்கம் தவிர்க்கப்படுகிறது. காரணம், கற்றுத்துறைபோகிய ஆய்வறிஞர் மத்தியில் இக்கட்டுரை சமர்ப்பிக்கப்படுவதேயாகும்.

திருமூலரின் திறன் காட்டுவனவாகக் கீழ்வரும் துறைச்செய்திகள் முகிழ்த்து மணம் வீசுகின்றன.

1. மானுடவியற் சிந்தனை
2. அறவியற் சிந்தனை
3. தத்துவியற் சிந்தனை
4. கல்வியியற் சிந்தனை
5. கணிதவியற் சிந்தனை
6. எண்ணியற் சிந்தனை
7. அணுவியற் சிந்தனை

8. உழவியற் சிந்தனை
9. தாவரவியற் சிந்தனை
10. விலங்கியற் சிந்தனை

**மானுடவியற் சிந்தனை**

அறவியல் உள்ளிட்ட அனைத்து சிந்தனைகளுக்கும் அடிப்படையாய் அமைவது மானுடவியற் சிந்தனையாகும்.

மனிதன் ஒரு சமுதாய விலங்கு என்னும் கூற்று மனிதனோடு பிறவற்றை ஒப்புநோக்கும் தன்மையில் அமைவதேயாகும்.

மானுடம் என்பது மனிதனின் முறையான மற்றும் முறையற்ற ஒழுகலாறுகளின் சங்கமம். முறையற்ற தன்மை சமுதாய முணு முணுப்புக்கும் முறையான தன்மை அதே சமுதாய வரவேற்புக்கும் கட்டியங் கூறுவதாய் அமையக் காணலாம்.

திருமூலர் மானுடவியலின் முழுத்தன்மையையும் அறிந்தவராய் இருத்தலுக்கு அவரது பல பாடல்களைச் சான்று காட்டலாம். குறிப்பாக, மனிதன் மனிதனாய் வாழ்ந்தாலே போதும்; அவனுள் இறைவந்து குடிகொள்ளும் என்றும் இறைவனுக்கான ஆரவாரப் பூசனைகள் தேவை யற்றவை; மனிதனுக்கும் அவனுக்காய் உதவக் காத்திருக்கும் விலங்கு களுக்கும் ஒருவன் செய்யும் சேவைகளே இறைவனை ஈர்க்கப் போது மானவை என்றும் புரட்சிகரக் கருத்துகளைத் துணிவுடன் கூறியவர். இதனை,

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே

(திருமந்திரம், சென்னை : கழக வெளியீடு, 1969, 1972)

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே 1821

என்னும் இவ்விரண்டு பாடல்களும் விரித்துரைக்கக் காணலாம். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்னும் அமரத்துவ சிந்தனை அன்றைய சமுதாயத்தில் இவரைத் தவிர வேறொருவரும் கனவிலும் மனங்கொண்டிலர் எனலாம்.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே

சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே 2066

என்ற பாடல் இன்றைக்கும் எம்மதத்திற்கும் ஏற்றுப் போற்றும் சமரசத் தன்மை கொண்டிலங்கக் காணலாம்.

## அறவியற் சிந்தனை

மானுடவியலின் ஒரு கூறாக அமையும் அறவியற் சிந்தனை 'திருமூலரின் படைப்புகளில் பரவலாகக் காணப்படுகிறது. அறவியல் என்பது மனிதனின் முறையான வாழ்வு நெறியில் தாம் நடந்துகாட்டு வதையும் பிறரிடம் நடந்தாகவேண்டுமென எதிர்பார்ப்பதையும் உள்ளடக்கிய சிந்தனைத் தொகுப்பாகும். தர்மம் அல்லது அறம் அழிவற்றது; என்றும் நின்று நிலைக்கக் கூடியது; எத்தகு இடர்கள் ஏற்படினும் இறுதியில் வெல்வது என்பன போன்ற கருத்துகளும் தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வும்; தர்மம் மறுபடி வெல்லும் என்ற கீதையின் பாதையும் இங்கு நாம் எண்ணிப் பார்க்க வேண்டிய செய்திகளாகும்.

பிறருக்கு ஒன்றை ஈவதே இனிய அறமென்றும் ஆசையைத் துறப்பதைவிட சிறந்த அறம் ஏதுமில்லை என்றும் இன்சொல்லால் பிறரை மகிழ்விப்பதும் ஏற்ற அறமே என்றும் அறத்திற்குப் புதியவடிவம் தருவதைத் திருமூலரிடம் காணமுடிகிறது.

ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்ற புத்தரின் வாக்கும், மனத்துக் கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் என்னும் வள்ளுவர் நோக்கும் திருமூலரின் அறவியல் போக்காக இருப்பதை,

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்த மாகுமே 2570

ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறமினே 107

யாவர்க்கும் மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கும் மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கும் மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கும் மாம்பிறர்க் கின்னுரை தானே 109

ஆகிய பாடல்கள் நிலைநிறுத்தக் காணலாம்.

**தத்துவவியற் சிந்தனை**

தர்க்கம் என்றும் வன்மை மென்மைகளை ஆய்வு செய்தல் என்றும் குறிப்பிட்ட கருதுகோளுடன் ஒரு கருத்தை நிறுவுதல் என்றும் தத்துவ வியலை ஒருவாறு வரையறுக்கலாம். எதனையும் ஒரு காரண காரியத் தோடு அணுகுவது இதன் அடிப்படைத் தன்மை ஆகும். புகை தன் ஆதியாய அனல் காட்டல் போல /. சீதமின்மை பனியின்மை காட்டல் போல எனும் இலக்கியத் தொடர்கள் இக்கருத்தை நிறுவும். குறிப்பிட்ட ஒரு கருத்தைத் தெளிவுபடுத்த அதனோடு தொடர்புடைய சிந்தனைகள் பலவற்றை இணைத்துக் காணும் இத்தத்துவப் போக்கைத் திருமூலர் மிகச் சிறப்பாகக் கையாளுகிறார். நெய்க்குத் தொன்னை ஆதாரமா? தொன்னைக்கு நெய் ஆதாராமா? எனப் பிரித்தறிய இயலாதிருக்கும் எல்லாம் தத்துவார்த்த அடிப்படையின. காற்று வந்து மரமசைந்ததா? மரமசைந்து காற்று வந்ததா?; முந்தியது கடலா அலையா எனப் பின்னிக் கிடக்கும் தொடர்களில் மின்னும் தத்துவம் திருமூலரின் தனிப்பெருந் தவம்.

தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந் தானன்றே 2774

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுங் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே 2773

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே 2251

என்னும் பாடல்கள் தத்துவம் விரிப்பன. தகைசால் மறைபொருளைத் தம்முள் பொதித்து வைத்திருப்பன.

**கல்வியியற் சிந்தனை**

கல்வி என்னும் மூன்றெழுத்து மந்திரம் பற்றிப் பேசாத இலக்கணமும் இல்லை, இலக்கியமும் இல்லை. தொல்காப்பியம் தொடங்கி சங்க இலக்கியம் முழுமைக்குள்ளும் இக்கால இலக்கதியத்திலும் பரந்து விரிந்து கிடக்கும் கல்விச்சிந்தனையை விரிவாக விளக்காமல் திருமூலரின் கல்விச் சிந்தனைக்குச் சான்றாக அவரது.

கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன்அன்று

கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே 304

என்ற ஒரேஒரு பாடலைச் சுட்டி, கல்வியில்லாத மனிதன் மனிதனே அல்ல; கல்லாத மூடரால் சமுதாயம் கருத்தழிந்து சீர்குலையும் எனும் அவரது சிந்தனைப்போக்கினை மனங்கொள்வோம்.

**கணிதவியற் சிந்தனை**

இறைநெறி காட்டவந்த திருமூலர் அதனை இனிமை பயக்குமாறு காட்டுதற்குப் பல்துறைச் சிந்தனைகளைப் பின்புலமாக ஏற்கிறார். இது அவரது நுண்ணறிவுத் திறனைக் காட்டுவதாய் அமைந்து நம்மை வியப்பின் எல்லைக்கே இட்டுச்செல்கிறது. கணிதவியலில் மிக இன்றி யமையாத சதுரம், வட்டம், முக்கோணம், நாற்கோணம், அறுகோணம், எண்கோணம் முதலானவற்றைப் பரம்பொருளோடு இணைத்துப் பேசும் திருமூலரின் கணக்கியல் அறிவு நாம் கணக்கிற்கொள்ளவேண்டிய ஒன்றாகும்.

வலையமுக் கோணம் வட்டம் அறுகோணந்
துலையிரு வட்டந் துய்ய விதமெட்டில்
அலையுற்ற வட்டத்தில் ஈரெட் டிதழாம்
அலைவற் றுதித்தனன் ஆதித்த னாமே 1942

சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடும்
சத்தி அறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்
சத்தி யுருவாஞ் சதாசிவன் தானே 1715

என்னும் மேற்குறித்த இவ்விரு பாடல்கள் பண்டைய கணக்கியல் அறிஞராய்த் திருமூலரை இனம் காட்டத்தக்கன.

**எண்ணியற் சிந்தனை**

கணக்கியலின் ஒரு கூறாய் ஆனால் பன்முகப் பரிமாணங்களோடு திகழ்கிறது திருமூலரின் எண்ணியற் சிந்தனை. இது சித்து விளையாட்டாய், சுழல் விளையாட்டாய்ப் பல பாடல்களில் அமைந்து அவரது கவித் திறமையையும் எண்ண ஓட்டத்தையும் பிரதிபலிக்கக் காண்கிறோம். ஒரு மனிதரின் பேரறிவாற்றலை அவர்தம் கணக்கியல் அறிவால் இன்றும் முடிவு செய்யக் காணலாம். ஆசு கவி, மதுர கவி, சித்திர கவி, வித்தார கவி எனக் கவிஞரைத் திறன் அடிப்படையில் வகைப்பாடு செய்யப்பட்ட காலம் திருமூலர் காலம். நாற்கவிராச நம்பி என்ற பெயர் இலக்கிய வரலாற்றில் இருந்தமை அதற்குச் சான்று பகரும். நார்கவிகளோடு மட்டுமன்றி எண் விளையாட்டு, புதிர் விளையாட்டு போன்ற உத்திகளைப் புகுத்திச் சோதனைக் கவிதைகள் பலவற்றைத் திருமூலர் படைத்திருப் பதை நம்மால் அறிய முடிகிறது.

மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்
மூன்றினில் ஆறாய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினில் அக்க முடிவாக முந்தியே
மூன்றிலும் ஆடினான் மோகாந்தக் கூத்தாமே 2738

ஏழினில் ஏழாய் இகழ்ந்தெழுந் தேழதாய்
ஏழினில் ஒன்றாய் இழிந்தமைந் தொன்றாகி
ஏழினிற் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி
ஏழிசை நாடகத் தேஇசைந் தானன்றே 2737

பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தகர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்
அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரன்றே 2848

என்னும் பாடல்கள் எண்ணின்பம் கூட்டி, எழுத்தின்பம் காட்டிச் சொல்லின்பம் ஊட்டும் திருமூலரின் அற்புத ஆற்றலை உணர்த்தி நிற்கின்றன.

**அணுவியற் சிந்தனை**

அணு மிகச்சிறிய நுண்கூறு. இன்றைய புரோட்டான், எலக்ட்ரான், நியூட்ரான் என்னும் பெயர்களைக் கண்டிராத அக்காலத்து இலக்கிய அந்தஸ்து மிக்க சொல். திருக்குறளின் பெருமை கூறவந்தோர்

அணுவைத் துளைத் தெழுகடலைப் புகட்டி
குறுகத் தரித்த குறள்

என சிறு அணுவின் பெருமையும் ஆற்றலும் அறிந்து உவமை கூறினர். அத்தகு அணு பற்றித் திருமூலரின் சிந்தனையிலும் சிறப்பான இடம் இருந்திருப்பதை உணர முடிகிறது. அணுவைப் பிரித்து அதன் மூலம் அண்டங்களையே பிளக்கும் ஆற்றல் பெறச் செய்யலாம் என்ற அறிவியல் அறிவு திருமூலரின் பல பாடல்களில் இலைமறை காயாக வெளிப்படக் காணலாம். பல பாடல்களில் அணு பற்றிய அவ்ரது சிந்தனை விரிந்தாலும்,

அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்
டணுவில் அணுவை அணுகவல் லார்கட்
கணுவில் அணுவை அணுகலு மாமே 1971

படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளற வோட்டி
நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே 1972

அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்

இணையிலி யீச வனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே 1973

என்னும் பாடல்கள் அவரது அணு குறித்த அறிவுக்குச் சான்றாய் அமையக் காணலாம்.

**உழவியற் சிந்தனை**

உழவன் சேற்றிலே கால் வைக்காவிட்டால் நாம் சோற்றிலே கை வைக்க முடியாது என்ற உண்மையைத் திருமூலர் நன்கு உணர்ந்திருந்தார். உழுவோர் உலகத்தார்க்கு ஆணி, சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் என்னும் வள்ளுவப் பெருந்தகையின் வாக்குகளையும் திருமூலர் அறிந்திருந்தார். இதற்கு,

பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்த
துள்ளச்செய் யங்கே உழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானன்றே 2831

இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
கிடாக்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
கிடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே 2838

ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள
மூத்தான் இறைக்க இளையான் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாகுமே 2833

என்னும் பாடல்கள் சான்று பகர்கின்றன. உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்யும் நிலையில் திருமூலர் சொல்லேர் உழவராக மட்டு மின்றி நல்லேர் உழவராகவும் நம் கண்முன் தெரிகிறார்.

**தாவரவியற் சிந்தனை**

தாவரங்கள் நம் தாய் மண் தந்த வரங்கள். புறக்காழனவே புல்லென மொழிப, அகக்காழனவே மரனென மொழிப எனத் தாவரங்களின் இலக்கணத்தை வரையறுப்பார் தொல்காப்பியர். திருமூலருக்குத் தாவர வியலில் தணியாத தாகம் இருந்தமைக்கு,

கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்
கட்டியுந் தேனும் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழுத்துக் கிளைக்கின்ற வாறன்றே 2861

தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாகுமே 2863

என்னும் அவரது பாடல்கள் சான்று பகரக் காணலாம்.

**விலங்கியற் சிந்தனை**

ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை உள்ள தாவரங்கள் தவிர்ந்த பிற உயிரினங்களான விலங்குகள், பறவைகள் பற்றிய சிந்தனைகள் திருமூலருக்கு மிகப் பெரிய அளவில் இருந்திருப்பதற்கு அவரது பல பாடல்கள் சான்று பகர்கின்றன.

திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு
வகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக்கன் றைந்து
பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே 2174

அன்ன மிரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி யிரண்டும் துணைப்பிரி யாதன்னந்
தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால்
பின்ன மடவன்னம் பேறணு காதன்றே 1969

கூகையும் பாம்புங் கிளியொடு பூனையும்
நாகையும் பூழும் நடுவில் உறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறன்றே 2851

என்னும் பாடல்கள் நடப்பன, பறப்பன, ஊர்வன பற்றிய பேரறிவு பெற்றிருந்தார் திருமூலர் என்பதற்கு ஏற்ற சான்றுகள் ஆகும்.

இவ்வாறு திருமூலரை அவர்தம் படைப்புக் கண்ணாடிகொண்டு கண்ணுறும்போது அவர் ஒரு மானுடவாதியாய், கல்வியாளராய், கணித மேதையாய், எண்ணியற் புலமையாளராய், அணுவியல் அறிஞராய், உழவியற் கலைஞராய், தாவரவியல் வல்லுநராய், விலங்கியல் பேராசிரியராய்ப் பன்முகப் பேராற்றல் பெற்றுத் திகழ்வதைக் காணமுடிகிறது. இத்துறைகள் மட்டுமின்றி இன்ன பிற துறைகளிலும் அவர் கற்றுத் துறைபோகிய வித்தகராய் உலாவருவது நம் நெஞ்சினிக்கும் நற்செய்தியாகும். திருமூலரின் பல்துறைச் சிந்தனைகள் என்னும் இத்தலைப்பு எதிர் காலத்தில் ஒன்றுக்கும் மேற்பட்ட முனைவர் பட்ட ஆய்வுகளுக்குக் களம் விரிக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

# 21. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி குருக்கள், அன்னவாசல்.

சிவபெருக்கும் திருநூலாகச் சிந்தைக்கு சித்திக்கும் செந்தமிழ் தேனாக படிக்கின்ற அனைவரும் அமிர்தம் ஆக்கும் அருள் நூலாகும் திருமந்திரம். அத்தகைய திருமந்திரத்தைப் பற்றி பல்வகை அடியார்கள் பல கருத்துகளை விவாதித்து திருமூலரின் வாழ்க்கை வரலாற்றை அற்புதமாக நமக்கு ஒரு பொக்கிஷமாக நமக்கு ஒரு பொக்கிஷமாக தந்துள்ளார்கள் சைவ சமய பெருமக்கள் இறைவன் நம்மீது வைத்த பரம கருணையில் நம்முடைய பக்குவத்திற்கு ஏற்றபடி உருவமாய், அருவமாயும் நம்முன்னோர்கள் வழிபட பல புராண இதிகாச நூல்களை எழுதி வைத்தது நாம் செய்த பாக்கி'பம்.

வாய்மை எனப்படுவது யாருக்கும் எப்பொழுதும் தீமை இல்லாததைச் சொல்லுவதே ஆகும்.

**காணும் உலகில் உண்மை இல்லை,**
**உண்மைக்கு என்று சாட்சி இல்லை,**
**நட்டு கொள்வதில் நிதானம் தேவை,**
**நட்பு கொண்டபின் உறுதியும் தேவை.**

உன்னை விட உயர்வான ஒருவனைத் தவிர பிறரிடம் ஒருபொழுதும் நட்புக்கொள்ளாதே. நழுவும் ஆடையை கை ஒட்டி காப்பதுப்போல் நண்பனின் துன்பத்திற்கு உதவிசெய் என்று சான்றோர் திருவாக்கு.

சிறந்த செயல் ஒன்றைச் செய்ய துலங்குகையில் எல்லாவல்ல இறைவனை வழிபடுதல் நம் அனைவரது இயல்பு தன்னிலும் மேலான சக்தி ஒன்று உள்ளது. அதுவே இயற்கை பின் கண் ஆகும். நிறைக்குடம் தழும்பாது! குறைக்குடம் கூத்தாடும். தகரம் ஓசை செய்யும். தங்கம் எதுவுமே பேசாது. பெருமை என்றும் பணியும் சிறுகதை தன்னை தானே புகழும் கஷ்டங்கள் நஷ்டங்கள் அடைந்த பிறகே மனிதர் அதிக அடக்கத்தையும் அறிவும் பெறுகின்றனர்.

பாரதநாடு பழம்பெருநாடு என்று இரு தெய்வம் உண்டு என்று இரு மற்றெல்லாம் அன்று உண்டு இரு கொள்கையில் அசைக்க முடியாத நாடு.

ஒரு நாமம், ஓர் உருவம், ஒன்றுமிலாருக்கு ஆயிரம் திருநாமம் பாடி தெள்ளேணம் கொட்டாமோ என்கிறார் மாணிக்கவாசக பெருமான்.

இத்திருநாமத்தில் ஒன்றுதான் சிவம். சிவம் என்ற சொல்லுக்கு மங்களம் என்ற பொருளாகும். மங்களம் தரும் பொருள் யாவுமே சிவம் தான் பேரின்ப நிலையாகிய முக்தி சிவகதி எனப்படும். சிவகதியில் கொண்டு சேர்க்கும் நெறி. இலங்கும் உயிர் உடல் அனைத்தும் ஈசன் கோவில் உயிருக்கு உறுகண் செய்யாமை என்னும் தவநெறியே அன்புநெறி.

கொல்லாமையைக் கொள்கையாய் கொண்டது சைவ சமயம். கொல்லா விரதம் சிவாலயம் எல்லாம் ஓடாக எல்லார்க்கும் சொல்வது என் இச்சை பராபரமே (தாயுமானவர்) காட்டுங்குறியும் கடந்தவர் காரணம் காட்டின் புறத்தில் எழுதி வைத்தென பயன - என்பார் (திருமந்திரம்)

பரம்பொருளை பொருத்த வரை நம்முடைய அறிவு ஒரு எல்லைக் கோட்டில் நின்றுவருகிறது. அந்த எல்லைக் கோட்டைதாண்ட நாம் அறிவைக் கொண்டு எடுக்கும் முயற்சிகள் வெற்றிபெறாது பரந்து விரிந்த கடலில் மற்றொரு கரையை நம் கண்களால் கண்டு கொள்ள முடியுமா கரையற்ற பெரும் வெள்ளம் அடித்து வரும்போது அதனுடைய கரையைக் காண்பது மிகவும் கடினம் அல்லவா அதேப்போல் உறையற்ற இறைவனுடைய தன்மையை நம்முடைய புலனறிவினால் மட்டும் கண்டுக்கொள்ளமுடியாது.

உறையற்ற கொன்றையுரை செய்யுமூடர்காள்
கரையற்ற தொண்டரைக் கரை காண லாகுமோ - (திருமந்திரம்)

நமது அறிவுக்கு எட்டாத பரம்பொருளை மறைப்பொருள் என்கிறோம். இறை என்னும் உண்மையை திருமூலர் இறைவனை அனைத்து உலகுக்கும் தலைவனாகக் காண்கிறோம். உயிருக்கு உயிராய் உயிர்களின் அறிவில் பொருத்தியிருந்தானை காண்கிறோம். அண்டத்திலும் உலகென்கிலும் நிறைந்து நிற்பதை காண்கிறோம். உள்ளத்தில் தியான பொருளாக விளங்கி அனுபவிக்கிறார். இறைவனின் அருளின் தன்மையை உணர்கின்றார். பொய்மை நிறைந்த உடலில் உயர்ப்பு சக்தியாக உட்புகுந்து வெளி வருவதை காண்கிறார். மற்றவர்கள் இந்த உண்மையைத் தெரிந்து கொள்ளவில்லையே என்று நினைத்துக் கொள்கிறார்.

உள்ளொத்துளே தான் உகந்தெங்கும் நின்றவன்
வள்ள்த்து தலைவனை மலகுறை மாதவன்
பொள்ளிற் குரம்பை புகுந்து புறப்படும்
கள்ளத் தலைவன் கருத்தறியார்களே (திருமந்திரம்)

கள்ளத்தலைவன் என்ற எத்தனை கருத்துகளை உள்ளடக்கி வைத்துள்ளது சகல உயிர்களுக்கும் தலைவன் தான் உலகத்தாரருக்கு ஓர் தத்துவம்

நிற்கும் என்கிறார். திருமூலர் சிந்திக்க வேண்டும். இறைவன் உள்ளத்திலும் இல்லை வெளியிலும் இல்லை என்று நீங்கள் நினைத்தால் உங்களுடைய மனதில் அந்த எண்ணமே உண்மை என புலப்பட்டுக் கொண்டிருக்கும். பரம்பொருளானது உங்களுடைய எண்ணங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டது என்கிறார் திருமூலர்.

உள்ளத்துஉள்ளன் புறந்துலின் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துலின் எம்பிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே - திருமந்திரம்

சில்லென்று பூத்த சிறுநெரிஞ்சிக்காடு அதில் ஒரு ஏற்றடித்தடம் என்று போகிறது. இரண்டையும் படைத்தவன் இறைவன் மனிதன் நெறியை விடாமல் நிதானமாகப் போனால் வீடு அடையலாம் நெறியை விட்டு விலகி நெஞ்சில் முள் பாய்ந்து அவதிப்பட்டானேயானால் அதற்கு இறைவனால் பழி இல்லவே இல்லை என்று அமுத்தத்தோடு வருகிறது. திருமந்திரப்பாடல் ஒன்றாகும்.

நெறியைப் படைத்தான் நெரிஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெரிஞ்சில் முள்பாயும்
நெறியில் வழுவாது இயங்க வல்லார்க்கு
நெறியில் நெறிஞ்சில் முன் பாயகிலாலே!

சமூக நல்லிணக்கம் நம்முடைய பண்பாடாகும்.
சமயங்களில் உண்மை லட்சியம் ஆகும்
ஒன்று பட்டாலும் உண்டு வாழ்வு!

என்ற ஒப்பற்ற தத்துவத்தையே நம்முடைய சமயமும் சமய சான்றோர்களும் வற்புறுத்தி வந்துள்ளார்கள்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்றும் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே முழங்கினார் ஒரு சித்தர் அவர்கள் தான் திருமூலர்.

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்கிறார்!

கைமுழக்கம் செய்தான் கணியன் பூங்குன்றனார்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்கட்கும் என்பது வள்ளுவர் வாக்கு!

சித்திரம் பேசும் சழக்கர்காள் கோத்திரமும், குலமும் கொண்டு என் செய்வீர் என்று முழங்கினார். அப்பர் பெருமான்.

சம்மந்தர் வேதியர் குலத்தில் பிறந்து மூன்று வயது குழந்தையாக இருந்தபோது அம்மையே என்று அழுது பார்வதி தேவியிடம் ஞானப்பால் குடித்து தேவாரம் பாடியவர் தம்முடைய தேவாரத்திற்கு மொழிசையிட்ட அவர் உற்ற தோழராய் கொண்டிருந்தார் திருநீலகண்டத்து யாழ்பாணர்.

இறைவனை அறிந்துகொண்டு அவனுடைய திருவடிகளை தொழுது அவனை இதயத்தில் தங்கச் செய்வதே மேலான கல்வி என்று திருமூலர் சொல்கிறார்.

ஒன்றும் படிக்காமல் இருப்பதைக் கூட ஏற்றுக்கொள்ளலாம் இறையும், பண்பையும் அறியாத வகையில் அத்தகைய கல்வி பெற்றவர்களை பார்க்க வேண்டாம் சொல் கேட்க வேண்டாம் என்கிறார்.

தன்னிழல் தருக்கன் சூழும்
தலமது மயிலை தன்னில்
விண்ணவர் காளு மெய்யன்
தேவ நாயகனாம் தேவன்
கண்ணுதற்கடவுள் தன்னைக்
கருத்திணிலிருந்தி நித்தம் எ
என்னுதி நெஞ்சே என்னும்
எண்ணமும் இனிக்கும் தானே
உயிர்வர்க்கர்களை ஈடேற்றும் பொருட்டு
இறைவனை ஐந்தொழில் புரிகிறான் என்பது
சைவசித்தாந்த படைத்தல் காத்தல் அழித்தல் சித்தாந்தம்
மறைக்கல் அருளில் கிருஷ்டி ஸ்திதி ஸம்காரம் திரோத்பவம்
அனுக்கிரகம் அச்சின்னங்களை நடராஜ வடிவில் காணலாம்

விரிவிலா அறிவினார்கள் ' வேறொரு சமயம் செய்தே எரிவினர் சொன்னேரேனும் எம்பிரார்க்கு ஏற்றதாகும் என்பது அப்பர் தேவாரம் சைவ சமயத்தின் முடிவுகள் சித்தாந்தம் என்பது அதன்படி அநாதியாக உள்ள பொருள் மூன்றுபதிகள் என்பது கடவுள் பசு என்பது உயிர் பாசம் என்பது கட்டு இவையே திரிபா தம்பாசத்திலிருந்து விடுபட்ட நிலையில் உயிரானது. பதியைச் சென்றடையும் அதுவே வீடு அதுவே மோட்சமாகும். கர்மயோகம் செய்வது பெரிய சாதனை மனத்தூய்மை தான் மனம் தூய்மை அடைகிறது மனதிலிருக்கின்ற விருப்பு வெறுப்பு நன்றாக அழிந்துவிடுகிறது. மனதில் நிம்மதி நிலவுகிறது. தூய அமைதியான மனதில் விவேகம் அல்லது பகுத்தறிவு நன்றாக வேலை செய்கிறது. ஆண்டவனை ஆராதனையாக செய்கிறோமோ அப்போதே மனம் சுத்தமாகிவிடும் மனதில் உள்ள அழுக்குகள் நீங்கி மனம் சுத்தமாகிவிடும்.

கல்லாத மூடனாகக் காணவும் ஆகாது
கல்லா மூடர் சொல் கேட்க கடன் அன்றி
கல்லாத மூடர்க்கு கல்லாதார் நல்லாராம்.
கல்லாத மூடர் கருத்தறியாதே திருமூலர்

இறைவன் நமது புலன்களுக்கு புலப்படுவதில்லை. ஏன் என்றால் புலனறிவு, சிற்றறிவு இரண்டு உள்ளது. புலனறிவைக் கொண்டு

பேரறிவை காண இயலாது. சிற்றறிவு என்பது ஒரு சிறிய வட்டமாகும். நாம் எல்லோரும் அந்த வட்டத்தின் வரம்பிற்குள் இருக்கின்றோம். பேரறிவானது எல்லையற்றது வரம் பெற்றது. ஆறு ஆசை கடலில் கலந்து மறையலாம் கடல் ஆற்றில் கலந்து மறைவதில்லை சிற்றறிவு பேரறிவினிலே சங்கமம் ஆகலாம். அறிவு அறிவுள்ளே அழிந்தது போல் என்பார் திருமூலர் ஆனால் பேரறிவிற்கு சிற்றறிவினால் ஈடுகட்ட இயலாது சிற்றறிவைப் பெற்றுள்ள நமது உவமை கிணற்றில் வசிக்கும் ஆசையின் நிலையைப் போன்றதாகும். கிணற்று ஆமை கடலில் வசிக்கும் ஆமையை பார்த்து உங்கள் கடல் எங்கள் கிணற்றிற்கு ஒப்பாகுமா என்று கேட்டால் அது கிணற்று ஆமையின் அறியாமையைத்தான் குறிக்கும் வினைகளால் உந்தப்பட்டு நாம் நமது வாழ்க்கையை நடத்தி வருகிறோம். அறிவை விட அறியாமை என்கிற அடிப்படையில் தான் நம்முடைய வாழ்க்கையை நடத்தி வருகிறோம். அறிவை விட அறியாமை என்கிற அடிப் படையில்தான் நம்முடைய வாழ்க்கை நடந்து வருகிறது.

இந்த அறியாமையைப் பெருக்க நாம் மேலும் மேலும் செய்யும் வினைகள் வித்திட்டு வருகின்றன. அந்த நிலையில் நம்மில் பலர் கடவுள் இல்லை என்று சொல்லி நம்முடைய மனதில் இருந்து அந்த எண்ணத்தை விலக்கி விடுகின்றோம். வேறு பலர் இறைவனைக் காண்பது அறிது என்று சொல்லி அவனைக் காண நாம் மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் பயன் தராது என்று சொல்லி நம்மை நாமே திருப்தி செய்துகொள்கிறோம். இது என்ன பேதமை என்கிறார் திருநாவுக்கரசர் சுவாமிகள்.

கூவல் ஆமை குறைகடல் ஆமையைக் கூவலோடு ஒக்குமோ கடல் என்றால்போல பாவகாரிகள் பார்ப்பது அரிது என்பவரால் தேவ தேவன் சிவபெருந் தன்மையே!

உண்மையில் இறைவனுடைய அருட் சக்தியே இந்த வினைகளைச் செய்ய வைக்கிறது. பாசத்தைக் கொடுக்கிறது உயிரை மலங்களோடு சேர்த்து வைக்கிறது. இறைவனுடைய மறைப்பு சக்தி காரணமாக நாம் இறைவனை அறிவதில்லை. இறைவன் நம்மிடமிருந்து மறைந்து நிற்கிறார். நம்முடைய கண்கள் புறப்பொருட்களைப் பார்க்கும் ஆற்றலைப் பெற்றிருக்கின்றன. ஆனால் நம்முன் நிற்கும் இறைத் தன்மையை காணமுடிவதில்லை.

கண் ஒன்று பல காணும் தகாகாரை அண்ணலும் இவ்வாண்மை ஆகி நின்றனே என்கிறார். திருமூலர் ஆகவே தான் இறைவனை மறைப் பொருள் என்று குறிப்பிடுவது உண்டு மணப்பொருட்கள் பல ஆய்வுக்கு அப்பாற்ப்பட்டது இன்னதன்று சொல்லிக்குறிப்பிட்ட உணர்த்த இயலாது

இறைவன் மறைப்பொருளான காரணத்தினால் அவனை எழுத்தாலோ, வாக்காலோ கட்டுப்படுத்த முடியாது இதைத்தான் திருமூலர்

கொள்ளினும் நல்ல குருவினைக் கொன்னாக
உள்ள பொருள் உடல் ஆவியுடன் ஈக
எள்ளத்தனையாற் இடைவிடாதே நின்று
தெள்ளி அறியச் சிவப்பதந்தானே!

வேயின் எழுங்கனல் போலேகிம் மெய்யெனுங்
கோளிலிருந்து குடிகொண்ட கோள் நந்தீ
தாயினும் மும்மலம் மாற்றித் தடாஎன்னுந்
தோயம் தாய் எழுசூரியனாமே (திருமந்திரம்)

உம்பார் அழியில் உயிரார் அழிவார்
திடம்பா மெய்ஞானச் சேரவு மாட்டார்
உடம்மை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன். (திருமூலர்)

உம்பினை முன்னம் இருக்கின்றி ருந்தேன்
உடம்பினுகுள்ளே வுறு பொருள் கண்டேன்
உடம்புள்ளே உத்தமர் கோவில் கொண்டேன் என்று
உடம்பினை யூலிருந்தோயி கின்றேனே (திருமந்திரம்)
(திருப்பெயர்)

பாவித்தவர்க்கும் குரைகழல் தனில் படிந்து
சேவித்தவருக்கம் விரைமலர் வகை தொடுத்துத்
தூவித்து துதித்தார் தமக்கு மிங்குள்ளதாமே!
ஆளித்து உணதான் அரன் மகன் திருப்பெயரே!
(அருள்ஜோதி. வி. கிருஷ்ணமூர்த்தி குருக்கள்)

சமுதாயத்தில் ஆதரவு அற்றவர்கள் அனாதைகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுக்கு வாழ்நாளில் பண்டிகை நாட்களில் நம்மால் முடிந்த உதவிகளை செய்தும் அவர்களுக்காக கூட்டுப் பிரார்த்தனை செய்தும் நம்மால் இயன்றதாவது ஒருவிதத்தில் மகிழ்ச்சி யையும் நல்லெண்ணத்தையும் பரப்பி இந்தநாள் இனியநாளாக பரவட்டும்!

திருமூலர் மக்களுக்காக மணி மந்திர ஔஷதம் போன்ற நூல்களை எழுதி ஆன்மீகம் மருத்துவம், மாந்திரீகம் நம்மை சிந்திக்கும் கருத்து இந்து சமயம் வைதீக நெறி, ஆசாரகோவை சந்தி அடிப்படையில் உயர்வு தாழ்வு கற்பிக்கும் கருவூலமாகும் சிறுவர் முதல் பெரியோர்கள் வரை படித்துச் சுவைத்து இன்புற வேண்டிய அழியா பொக்கிஷமாகும்.

திருச்சிற்றம்பலம்!

# 22. அறக்கருத்துரைப்பில் திருமந்திரம் திருக்குறள் நாலடியார்

முனைவர் வ. கிருஷ்ணன், உடுமலை.

சிறந்த தோத்திர நூலாகவும் நல்லதொரு சாத்திர நூலாகவும் பண்பட்ட மனித வாழ்க்கையினை வாழ வலியுறுத்தவும் வாழ்க்கை நூலாகவும் பன்முக ஆற்றல் படைத்த நூலாக பத்தாம் திருமுறையான திருமந்திரம் அமைகிறது. மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த மனித வாழ்க்கைக்கான நற்கருத்துக்களை வழங்கிய ஞானசித்தரான திருமூலரின் கருத்துக் களஞ்சியம் திருமந்திரம். கால எல்லைக்கு அப்பாற்பட்டு திருமூலரின் அறவுரைகள் நிலைத்து நிற்கும் தன்மையன. காலத்தால் அழிக்க இயலா ஆற்றல் பெற்ற திருமந்திரத்தில் - முதல் தந்திரத்தில் உலகப்பொது மறையாம் திருக்குறள், அறநூலாக மட்டுமின்றி அறிவு நூலாகவும் விளங்குகின்ற நாலடியார் ஆகிய நீதிநூல்களின் சீரிய கருத்துக்கள் பயின்றுவரும் பாங்கினை இக்கட்டுரைச் சுட்டிச்செல்ல விழைகிறது.

### காலம் அழியாக் காலம்

திருக்குறள், நாலடியார், திருமந்திரம் ஆகிய நூல்களின் காலத்தை வரலாற்றியல் ஆய்வறிஞர்களும், தமிழறிஞர்களும் இயலாத நிலைமையிலேயே இருக்கின்றனர். அறிஞர் பெருமக்களிடம் கால ஆராய்ச்சியில் மாறுபட்ட கருத்துக்களும் நிலை கொள்கின்றன. இருப்பினும் திருக்குறள் முதலிலும் அடுத்து நாலடியாரும் பின்னர் திருமந்திரமும் தோன்றியதை அறிஞர்களின் (வையாபுரிப் பிள்ளை, மா. இராசமாணிக்கனார்) ஆய்வு முடிவுகளின்படி ஏற்கலாம். வெவ்வேறு காலகட்டங்களில் இப்படைப்புகள் தோன்றினாலும் பொதுவான - பொதுவியல் சிந்தனைகள் இம்மூன்று நூல்களிலும் இடம்பெறுகின்றன. மிகத்துல்லியமாகக் காலத்தை அறுதியிட்டுக் கூறுவதில் ஒருமித்த கருத்துக்கள் எழாவிடினும் காலமாகவே இந்நூல்கள் திகழ்கின்றமையை ஒத்த கருத்துடன் ஏற்கின்ற நிலை தமிழுலகில் நிலவுகிறது. காலமாகவே அமைந்திட்ட திருமந்திர நூலில் திருக்குறள் நாலடியார் கருத்துக்களின் வன்மை மென்மைகளை அறிவது இன்றியமையாதது.

### கடவுள் வாழ்த்து

நூலுக்கு இன்றியமையாத கூறுகளுள் ஒன்று கடவுள் வாழ்த்து. வாழ்த்து, வணக்கம் வருபொருள் எனும் மூன்றனுள் ஒன்று உறுதியாக

அமைந்து வருவதைக் காப்பிய இலக்கணம் வரையறை செய்கிறது. காப்பிய இலக்கணம் தோன்றுவதற்கு முன்பும் இவை பின்பற்றப்பட்டி ருப்பதைத் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களுள் அமைந்திட்ட கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பறைசாற்றுகின்றன. இவ்வகையில் திருமந்திரம், திருக்குறள், நாலடியாரில் கடவுள் வாழ்த்துப் பகுதி அமைகிறது. பொதுமையில் இயங்கும் கடவுளைத் திருக்குறளும், அருகக்கடவுளை நாலடியாரும், செம்மை எனும் சிவபெருமானைத் திருமந்திரம் கடவுள் வாழ்த்தாகப் பாடித் துதிக்கின்றன. கடவுளர் வேறுபட்டாலும் கடவுளை வாழ்த்தி வணங்கி எந்தவொரு செயலும் செய்தல் நலம் என்பதை அறிவுறுத்தும் வகையில் மூன்று நூல்களும் ஒன்றுபடுகின்றது.

**நிலையாமை**

இறைக்கொள்கையில் இறைவன் ஒருவன் மட்டுமே அழியாப் பேறுபெற்றவன்; நிலைத்து நிற்கும் வலிமை படைத்தவன். மற்றவை அனைத்தும் நிலையாது மறைவன. மனிதன் தன்னுடைய வாழ்வில் ஞான நிலையை அடையவேண்டின் நிலையாத்தன்மை பெற்ற நிலையினை அறிந்துகொள்ள முற்படவேண்டும். இறைவனைத் தவிர அனைத்தும் நில்லாதது என்ற தத்துவத்தை திருமந்திரம் யாக்கை, செல்வம், இளமை, உயிர் எனும் நான்கு வகைகளில் எடுத்துரைக்கின்றது. நாலடியார் செல்வம், இளமை, யாக்கை நிலையாமை குறித்துக் கூறுகிறது. திருக்குறள் நிலையாமை என்ற ஒற்றைத் தலைப்பில் அனைத்தையும் விதந்தோதுகின்றது. அரசனாயினும், அரச வாழ்க்கையை வாழ்பவராயினும், உடலை விட்டு உயிர் பிரியின் உடலை எரித்து விடுவர். நிலையாமையை உணராத வர்கள் பிறப்பு இறப்பு எனும் துன்பத்தில் உழல்கின்றனர். சிலருக்கு உலக மயக்கம் தீராது நிறைந்திருக்கின்றது. இத்தகு தன்மை கொண்டு நிலையாமையினைத் திருமூலர்,

**அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்**
**மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்**
**இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்**
**கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே**

என்று (யாக்கை நிலையாமை : 5) பாடுகின்றார். எல்லாம் இருப்பது போல் இருந்து உயிர் நீங்கும் தன்மை இப்பாடலில் கூறப்படுகின்றது. உயிர் உடலை விட்டு நீங்கிய பின்னர் உள்ள நிலையினை,

**ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே**

என்ற (யாக்கை நிலையாமை : 3) திருமந்திரப் பாடல் நுவலுகின்றது. இறந்துபோன வரை, இறப்போர் சுமந்து செல்கின்ற நிலையை,

**சென்றே எறிப ஒருகால் : சிறுவரை**
**நின்றே எறிப பறையினை நன்றேகாண்**
**முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டுஎழுவர்**
**செத்தாரைச் சாவார் சுமந்து**

என்று நாலடியார் (யாக்கை நிலையாமை : 4) குறிப்பிடுகின்றது. இக் கருத்துக்களை இரத்தினச் சுருக்கமாக வள்ளுவர்,

**நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**
**பெருமை உடைத்து இவ் உலகு**

என்று (நிலையாமை : 6) மொழிகிறார்.

யாக்கை நிலையாமை குறித்து திருமூலர் 25 பாடல்களிலும் நாலடியார் 10 பாடல்களிலும் விவரிக்கின்றனர். மூன்று குறட்பாக்களில் யாக்கை நிலையாமையினை வள்ளுவம் மொழிகின்றது. பாடல்கள், குறட்பா எண்ணிக்கை வேறுபட்டாலும் திருமந்திரம் மிக விரிவாக விவரிக்க நாலடியாரும் திருக்குறளும் சுருக்கமாக எடுத்துரைக்கின்றன. மையப் பொருளில் வேறுபாடு இல்லை.

**செல்வநிலையாமை**

யாக்கை நிலையாதது போலவே வளம்பெறு செல்வமும் நிலை யாதது. செல்வ நிலையாமையை,

**"மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே**
**கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம் போல்"**

என்று திருமூலர் (செல்வநிலையாமை : 6 : 1-2) நீரில் மூழ்குகின்ற படகு போன்றதென உவமிக்கின்றார். நாலடியார் வண்டிச்சக்கரத்துடன் ஒப்புமைப்படுத்துகின்றது. அப்பாடல்;

**துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்**
**பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க.**
**அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்**
**சகடக்கால் போல வரும்.**

என்று (செல்வநிலையாமை : 2) அமைகிறது. ஆடல் அரங்கில் கூடும் கூட்டம் வருவதுபோல் வந்து உடனே நீங்குவது போல் செல்வம் நீங்கிவிடும் என்பதை,

**கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று**

என்று வள்ளுவர் (நிலையாமை : 2) வாய்மொழி அறிவுறுத்துகின்றது. நீரில் மூழ்கும் கலம், வண்டிச்சக்கரம், கூத்தாட்டு அரங்கம் என உவமிக்கும் பொருள் மாறினாலும் செல்வம் நிலையாது என்ற ஒரு பொருண்மையில் மூன்று நூல்களும் ஒன்றையே மொழிகின்றன.

## இளமை நிலையாமை

எதனையும் அச்சமின்றிச் சந்திக்கவும் செய்து முடிக்கும் திறனும் பெற்றது இளமை. இவ் இளமை என்றும் தொடராது; நிலைத்தும் இராது. இறைவனை நினைத்து வழிபடுவோருக்கு இளமை நிலையாது போனாலும் இறைவன் அருள் தருவான் என்பதை,

**காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்**
**மாலை படுவதும் வாணாள் கழிவதுஞ்**
**சாலும்அவ் வீசன் சலவிய னாகிலும்**
**ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே**

என்று திருமூலர் (இளமை நிலையாமை : 6) கூறுகிறார். 'இன்று என்னுடைய பிறந்த நாள்' என்று கொண்டாடுவோர் இளமையினை விட்டு நீங்கி முதுமைக்குச் செல்கின்றனர் என்று அறியாதவராய் விளங்கு கின்றனர். ஒவ்வொரு நாளும் வாழ்நாளைக் குறைக்கும் வாளாக உள்ளதை உண்மையை உணர்ந்தோர் அறிவர் என்பதை வள்ளுவர்,

**நாள் என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**
**வாள்அது உணர்வார்ப் பெறின்**

என்று (நிலையாமை : 4) உணர்த்துகின்றார்.

**பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்**
**கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை - நனி பெரிதும்**
**வேல்கண்ணள் என்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்**
**கோல்கண்ண ளாகும் குனிந்து**

என்று நாலடியார் (இளமை நிலையாமை : 7) இளமை நில்லாததை கனி உதிர்க்கும் சோலையுடன் ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றது. வேல் போன்ற கண்ணையுடையவளும் கோல் ஊன்றிக் குனிந்து செல்லும் காலம் வரும் என இளமை நில்லாமையைத் தெளிவுபடுத்துகின்றது.

## கொல்லாமை

வன்முறை தலைவிரித்தாடுகின்ற இன்றைய சூழலில் உயிர்க் கொலை பெருகி வருவது பரவலாகக் காணப்படுகின்றது. பிற உயிரைக் கொல்வதற்கு மனிதனுக்கு உரிமை இல்லை. அங்ஙனம் பிற உயிரைக் கொல்பவர் நரகத்தில் தள்ளப்படுவர் என்பதைத் திருமந்திரம்

**கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை**
**வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்**

**செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை**
**நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே**

என்று (கொல்லாமை : 2) குறிப்பிடுகின்றது. வள்ளுவர் பத்து குறட் பாக்களில் கொல்லாமையை எடுத்துரைக்கின்றார். அவருடைய பார்வையில் பிற உயிரைக் கொல்பவர் இழிந்தவராகக் கருதப்படுகின்றார். இதனை,

**கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவார் அகத்து**

என்ற குறட்பா (கொல்லாமை : 9) புலப்படுத்துகின்றது. நாலடியாரில் கொல்லாமை எனத் தனி அதிகாரத்தில் கூறப்படவில்லை.

**புலால் மறுத்தல்**

அற இலக்கியங்கள் தோன்றிய காலத்தில் புலால் உண்ணுதல் அறத்திற்குப் புறம்பானதாகக் கருதப்பட்டது. அற இலக்கியச் சிந்தனை உருப்பெறுவதற்கு முன்பு புலால் உண்ணும் வழக்கம் தள்ளப்படவில்லை. தன் ஊனைப் பெருக்க பிற உயிரின் தின்பது மாபெரும் தவறாகக் கருதப் பட்ட அறக்காலத்தில் புலால் உண்பவர் இழிவாகக் கருதப்பட்டனர். இதனைத் திருமூலர்,

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை"

என்று (புலால் மறுத்தல் 1:1) குறிப்பிடுகிறார். எல்லோராலும் இழிவாகக் கருதக்கூடிய புலையராக புலால் உண்பவர் இருப்பர் என்பது திருமூலரின் கருத்து. புலால் உண்ணாமையை வலியுறுத்திய வள்ளுவர் உடன்பாட்டு முறையில்,

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்.**

என்று (புலால் மறுத்தல் : 10) எடுத்துரைக்கின்றார். புலால் உண்ணாத வனை உலக உயிர் அனைத்தும் கைகூப்பித் தொழுகின்ற நிலை உருவாகும் என்ற கருத்தினையொட்டி திருமந்திரக் கருத்தில் புலால் உண்பவர் இழி தக்க புலையனாக சித்தரிக்கப்படுகிறான். புலால் உண்ணாமையை இரு நூல்களும் வலியுறுத்த நாலடியார் தனி அதிகாரம் அமைத்துப் பாட வில்லை.

**பிறன்மனை நயவாமை**

தன் மனைவி தன் அகத்தே இருக்க மாற்றான் மனைவியைத் தேடிச் செல்வது இழிவான குணம். தன் மனைவியை மட்டுமே நேசித்தால் தீங்கு ஏதும் வாராது. இதனைத் திருமந்திரம், திருக்குறள், நாலடியார் ஆகியவை ஒரே நேர்கோட்டில் வலியுறுத்திக் கூறுகின்றன.

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

என்று திருமூலரும் (பிறன்மனை நயவாமை : 1),

நலக்கு உரியார் யார்? எனின் நாமநீர் வைப்பின்
பிறற்குஉரியாள் தோள்தோயா தார்

என்று (பிறனில் விழையாமை : 9) வள்ளுவரும்,

பல்லா ரறியப் பறையறைந்து நாள் கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிப்புக்க - மெல்லியற்
காதன் மனையாளும் இல்லாளா என்ஒருவன்
ஏதின் மனையாளை நோக்கு

என்று (பிறன்மனை நயவாமை : 6) நாலடியார் ஆசிரியரும் மொழி கின்றனர். பிறன்மனையைத் தேடுவது அருகிலுள்ள நன்கு பழுத்த சுவை மிகுந்த பலாவை விடுத்து காட்டகத்தே சென்று ஈச்சம்பழத்தை நாடி அவதியுறுவது அறியாமை என்கிறார் திருமூல நாயனார். உலகிலுள்ள நலமனைத்தும் பெறுவதற்குரியவர். பிறர் மனைவியை நாடாதவர் என வள்ளுவர் பகர்கின்றார். பலரறிய மணம் செய்த பெண் மனை யகத்தில் இருக்க மற்றவர் மனைவியை நேசிக்கும் குணம் எங்கிருந்து வந்தது என நாலடியார் வினவி மனைவியை மட்டும் நேசிக்க வற்புறுத்து கின்றது. இக்கருத்தில் மூன்று நூல்களும் ஒரே பாதையில் பயணம் செய்கின்றன.

**அறன் வலியுறுத்தல்**

அறம் செய்பவர் திறன், அறம் செய்யாதவர் திறம், என இரு அதிகாரங்களில் 19 செய்யுட்களில் திருமந்திரம் அறத்தை விரித்துரைக் கின்றது. மிக எளிய அறச்செயலை,

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே

என்ற (அறம் செய்வான் திறன் : 2) செய்யுள் விதந்துரைக்கின்றது. எல்லோரும் செய்யக்கூடிய எளிய அறத்தினை பாடல் நுவல வள்ளுவப் பெருந்தகையோ,

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கு இல்லை கேடு

என்று (அறன் வலியுறுத்தல் : 2) அறத்தை விட உயரிய செல்வம் வேறு எதுவும் உலகில் இல்லை என்று கூறுகிறார். அறம் சிறிதாயினும் தகுதி உடையோர்க்கு பயன் நல்கையில் மிகப்பெருமை வாய்ந்தது என் நாலடியார் அறத்தின் பெருமையைப் பறைசாற்றுகின்றது.

உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங் கறப் பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்

என்பது (அறன் வலியுறுத்தல் : 8) நாலடியார் செய்யுள். அறத்தின் சிறப்பையும் பெருமையையும் நாலும் இரண்டும் கூற எளிய அறத்தைத் திருமந்திரம் ஓதுகின்றது.

**கள்ளுண்ணாமை**

நீதி நூல் காலத்தில் கள்ளுண்டு களித்தல் அறவே ஒதுக்கக்கூடிய செயலாகக் கருதப்பட்டது. சங்க காலத்தில் கள்ளுண்ணல் மிகப்பெரிய தவறாகக் கொள்ளப்படவில்லை. அறநூல்கள் கள்ளுண்ணலைக் கடிந்து ஒதுக்குகின்றன.

மயங்குந் தியங்குங் கள்வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே

என்ற (கள்ளுண்ணாமை : 7) திருமந்திரப் பாடல், கள் தரும் மயக்கமும் அதனால் பெறும் சிற்றின்பமும் அதில் மூழ்கியோர் பேரின்பம் பெறாது போதும் நிலையையும் எடுத்துரைக்கின்றது. பேரின்பம் என்பது சிவானந்தத் தேறலாக உணர்த்தப்படுகின்றது.

ஒரு மனிதன் சான்றோரால் போற்றி உரைக்கப்படும் வகையில் வாழ்தல் வேண்டும் அங்ஙனம் போற்றப்பட வேண்டாமென விரும்புவோரே கள்ளுண்பர் என்று,

உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்

திருக்குறள் (கள்ளுண்ணாமை : 2) மொழிகின்றது. நாலடியார் கள் உண்ணாமை குறித்து நுவலவில்லை. அறிவை இழக்கச்செய்யும் கள்ளுண்ணாமை குறித்து வள்ளுவம் விவரிக்க, திருமந்திரமோ இறை யின்பமான சிவானந்தத் தேறலை மட்டும் உண்ண வலியுறுத்துகின்றது.

**மகளிர் இழிவு**

இறைசிந்தனைக்கு இடையூறாக விளங்குவது மகளிரைப் பற்றிய எண்ணம். இங்குக் குறிப்பிடும் மகளிர் பொதுமகளிராக (பரத்தையராக)க் கொள்ளலாம். அதனால், இறைவனை நினைத்து துதித்து வழிபட்டால் மட்டுமே பேரின்பப் பெருவீட்டை அடையலாம் என திருமந்திரம் கூறுகின்றது. இக்கருத்தினின்று சிறிதளவும் வேறுபடாது திருக்குறளும் நாலடியாரும் அமைந்திருக்கினறன. வரைவின் மகளிரென வள்ளுவமும் பொதுமகளிரென நாலடியாரும் தனி அதிகாரம் அமைத்துக் கூறுகின்றன. திருக்குறளும் நாலடியாரும் பொதுமகளிரால் தனிமனிதன் அடையும் துன்பங்களை விவரிக்கின்றன. திருமந்திரம் மகளிர் இன்பத்தை நாடாது இறையின்பத்தை நுகர்ந்து பேரின்பம் பெற வலியுறுத்து கின்றது.

திருமந்திர அறக்கருத்துக்கள் திருக்குறள், நாலடியாரினின்று வேறு பட்டவை அல்ல காலத்தால் பிந்திய நூலான திருமந்திரம், வள்ளுவரை யும், நாலடியாரையும் ஏற்றுகொள்கின்றது. திருக்குறளின் அறக்கருத்துக்கள் பலவற்றையும் திருமந்திரம் ஏற்கின்றது. நாலடியாரில் கூறப்படாத சிலவற்றைத் திருமந்திரம் உரைக்காமல் செல்லவில்லை. இருப்பினும் திருமந்திரம் குறள், நாலடியாரினின்று வேறுபடும் தளம் ஒன்று உண்டு. அஃது இறைக்கோட்பாட்டை - இறைநெறியை வலியுறுத்தும் தளமே யாகும். நிலையாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, பிறன்மனை நயவாமை, அறன் வலியுறுத்தல், கள்ளுண்ணாமை ஆகிய அறக்கருத்துக் களை இறையனுபவத்துடனும் இறைவனுடனும் தொடர்புபடுத்தி விவரிக்கின்றது. குறளாரும், நாலடி ஆசிரியரும் கடவுள் வாழ்த்தில் மட்டுமே இறை நெறியைக் கூற திருமூல நாயனார் அறம் எது? அறத்தின் சிறப்பு என்ன? அறத்தின் பயன் என்ன? என்பதை விவரித்து இறைநெறியில் நின்றால் இவ் அறம் அனைத்தும் அளிதில் கைகூடும் என உறுதிபடக் கூறுகிறார். இதுவே, மற்ற இரு அறநூல்களினின்று வேறுபட்டு தனித்து நிற்கும் தன்மையதாகும்.

# 23. திருவிசைப்பா தலங்கள்

திரு. க. கிருஷ்ணராஜு, சிதம்பரம்.

இறையருள் நிரம்பப்பெற்ற மேலோர்களால் மனம் கசிந்து பாடப்பெற்ற தஇருவிசைப்பாக்களாலேயே தலங்களுக்கும் பெருமை சேர்ந்தது எனக் கூறுவது மிகையல்ல.

அத்தகைய சிறப்பான தலங்கள் சிலவற்றையும் அங்குறையும் இறைவனைப் போற்றிப் பாடிய பாடல்கள் சிலவற்றையும் திருவிசைப்பா தலங்கள் என்னும் நான் எடுத்துக்கொண்ட தலைப்பிற்கேற்றவாறு ஓரளவு விளக்கியுள்ளேன். இந்தப் பதிகங்களின் மூலமாக தமிழின் பெருமையை யும், இசையின் அருமையையும் நிச்சயம் நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

**திருவிசைப்பா தலங்கள்**

**1. திருமாளிகைத்தேவர் பாடிய திருத்தலம் கோயில் பதிகம் (சிதம்பரம்)**

**பண்-பஞ்சமம்**

"ஒளிவளா விளக்கே! உலப்பிலா வொன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவாளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே!
அம்பலம் ஆடரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே"

**2. சேந்தனார் பாடிய திருத்தலம் திருவீழிமிழலை பதிகம்**

**பண்-பஞ்சமம்**

"ஏகநா யகனை இமையவர்க் (கு) அரசை
என்னுயிர்க்(கு) அமுதினை எதிர்இல்
போகநா யகனைப் புயல்வணற்(கு) அருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா பகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்

யோகநா யகனை யன்றிமற் றொன்றும்
உண்டென உணர்கிலேன் யானே

இதுபோல திருவாவடுதுறை, திருவிடைக்கழி கோயில் - திருப்பல்லாண்டு

"மன்னுக தில்லை! வளர்க நம்
பத்தர்கள் வஞ்சகர் போய் அகல
பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனி யெல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோ முக்கருள் புரிந்து
பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே.

**3. கருவூர்த்தேவர் பாடிய திருத்தலங்கள்**

1. கோயில், 2. திருக்களந்தையாதித்தேச்சரம், 3. திருக்கீழ்க்கோட்டூர், 4. திருமுகத்தலை, 5. திரைலோக்கியசுந்தரம், 6. கங்கைகொண்ட சோளேச்சரம், 7. திருப்பூவணம், 8. திருச்சாட்டியக்குடி, 9. தஞ்சை இராசராசேச்சரம், 10. திருவிடைமருதூர்.

**கங்கொண்ட சோளேச்சரம்**

**பண்-பஞ்சமம்**

"அன்னமாய் விசுப்பு பறந்(து) அயன் தேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னையாள் விரும்பி என்மனம் புகுந்த
எளிமையை என்று(ம்) நான் மறக்கேன்;
முன்னம்மா லறியா ஒருவனாம் இருவா!
முக்கனா! நாற்பெருந் தடந்தோள்
கன்னலே! தேனே! அமுதமே! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

**திருச்சாட்டியக்குடி**

**பண்-பஞ்சமம்**

"பெரியவா கருணை இளநிலா எறிக்கும்
பிறைதவழ் சடைமொழுப்(பு) அவிழ்ந்து
சரியுமா சுழியங் குழைமிளிர்ந்(து) இருபால்
தாழ்ந்தவா காதுகள் கண்டம்
கரியவா தாமுஞ் செய்யவாய் முறுவல்
சாட்டுமா சாட்டியக் குடியார்

இருகைகூடம் பினகண்(டு) அலர்ந்தவா முகம் ஏழ்
இருக்கையில் இருந்தஈ ஈசனுக்கே

**தஞ்சை இராசராசேச்சரம்**
**பண்-பஞ்சமம்**

உலகெலாம் தொழவந்(து) எழுகதிர்ப் பருதி
ஒன்றுநூ றாயிரங் கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம்(பு) அச்சோ!
அங்ஙனே அழகிதோ; அரணம்
பலகுலாம் படைசெய் நெடு நிலை மாடம்
பருவரை ஞாங்கர்வெண் டிங்கள்
இலைகுலாம் பதணத்(து) இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத்(து) இவர்க்கே.

**4. பூந்துருத்திநம்பி நாட நம்பி பாடிய திருத்தலம் திருவாரூர்**
**பண்-பஞ்சமம்**

கைக்குவான் முத்தின் சரிவளை பெய்து
கழுத்திலோர் தனிவடங் கட்டி
முக்கண்நா யகராய்ப் பவனிபோந்(து) இங்ஙன்
முரிவதோர் முரிவுமை அளவும்
தக்கசீர்க் கங்கை அளவுமன்(று) என்னோ!
தம்மொருப் பா(டு) உல கதன்மேல்
மிக்கசீ ராரூர் ஆதியாய் வீதி
விடங்கராய் நடம்குலா வினரே

5. கண்டராதித்தர் பாடிய திருத்தலம் கோயில் பதிகம், 6. வேணாட்டிகள் பாடிய திருத்தலம் கோயில் பதிகம், 7. திருவாலியமுதனார் பாடிய திருத்தலம் கோயில் பதிகம், 8. புருடோத்தம நம்பி பாடிய திருத்தலம் கோயில் பதிகம், 9. சேதிராயர் பாடிய திருத்தலம் கோயில் பதிகம் ஆக மொத்தம் 301 பாடல்கள் உள்ளன.

இத்தகைய அழகான, மிகச்சிறப்பான 301 பாடல்கள் திருவிசைப்பா தொகுதியில் உள்ளன என்பதை அறியும் போது நாம் வியப்படைகிறோம். தமிழ் தவிர மற்றைய மொழிகளில் இது போன்ற இலக்கியங்கள் இருக்கின்றனவா என்பதையும் என்னால் கூற இயலவில்லை. இசையும் தமிழும் இருகண்களாகக் கொண்டு இறைவனைக் கண்ட நமது ஆன்றோர் மக்களுக்கு நமது இதயம் நிறைந்த வணக்கத்தைத் தெரிவிப்பதோடு, வருங்காலத்திலும் வழி வழியாகத் தமிழர்தம் பெருமை இது போன்ற பாடல்களால் உயர்வடையும் எனக்கூறி எனது உரையை நிறைவு செய்கிறேன்.

# 24. திருவிசைப்பா அருளிய அருளாளர் வரலாறு

செல்வி பி. கீதா, மதுரை.

மக்களை நல்வழிப்படுத்த உருவான சக்தி இறைவன். அவ்விறைவனை மக்கள் பலவழிகளில் பல்வேறு பெயர்களால் வழிபட்டனர். இவ்வழிபாட்டு முறைகளாலேயே இம்மண்ணுலகில் பலவிதமான சமயங்கள் மலர்ந்தன. சமயம் என்பதற்கு பக்குவப்படுத்துவது, சமைப்பது, ஒழுங்குபடுத்துவது என்று பல பொருள்கள் உண்டு. இத்தகு பக்குவப்பட்ட நெறிகளில் ஒன்று சைவம், சைவத்திருமறைகள் பன்னிரெண்டில் ஒன்பதாம் திருமுறையாக விளங்குவன திருவிசையப்பா, திருப்பல்லாண்டு, திருவிசைப்பா அருளிய அருளாளர்கள் வரலாற்றினை இக்கருத்தரங்கு கட்டுரையின் வாயிலாக ஆராயலாம்.

**திருவிசைப்பா**

பன்னிரு திருமுறைகளில் ஒன்று திருவிசைப்பா, திருப்பல்லாண்டு. இத் திருவிசைப்பா தேவாரத்தின் நெறிகளைப் பின்பற்றி அமைக்கப்பட்டிருக் கிறது. ஏழிசையாய் இசைப்பயனாய் உள்ள இறைவனைத் தம்மைப் போலவே இசைத்தமிழால் பாடி ஈறில் இன்பத்தை எய்தும் நெறி தமக்குப் பின்னால் அற்றொழியாது வளரவேண்டும் என்பதே தேவாரா ஆசிரியரின் திருவுள்ளம். திருவுள்ளத்தின்படி காணப்பட்ட இசைத்தமிழின் வளர்ச்சியே திருவிசைப்பா.

திருவிசைப்பா - கடவுள் தம்மை பொருந்திய இசைப்பாட்டுகள் எனப்பொருள். திருப்பல்லாண்டு கடவுள் வாழ்த்து.

**ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பா**

ஒன்பதாம் திருமுறையை பாடியருளிய அருளாளர்கள் ஒன்பதின்மர் ஆவர். அவர்கள் 1. திருமாளிகைத்தேவர், 2. சேந்தனார், 3. கருவூர்த் தேவர், 4. பூந்துருத்திநம்பிகாடநம்பி, 5. கண்டராதித்தர், 6. வேணாட்டடிகள், 7. திருவாலியமுதனார், 8. புருடோத்தமநம்பி, 9. சேதிராயர் ஆகியோர் ஆவார். இதனை,

"செம்பொன்மணி அம்பலத்து நிருத்தனார்குத்
திருவிசைப்பா உரைத்தவர் தம் திருப்பேர் சொல்லிற்
பம்புபுகழ் நெறி திருமாளிகைமெய்த்தேவர்
பரிவுடைய சேந்தனார் கருவூர்த்தேவர்
நம்பி காடவர்கோன் நற்கண்ட ராதித்தர்
நான்குயர்வேணாட்டடிகள் திருமாலியமுதனார்

அம்புவியோர் புகழ் புருட்டாத்தமர் சேதிராயர்
ஆக இவர் ஒன்பதின்மர் தாமுறை கண்டடைவே"

என்ற தனிப்பாடல் மூலம் அறியலாம்.

## திருவிசைப்பா அருளிய அருளாளர்கள் வரலாறு

### 1. திருமாளிகைத் தேவர்

திருவாடுதுறை நவகோடி சித்தர்புரம் என்ற திருத்தலத்தில் யோகசித்தர் எனும் ஞானயோக சாதனை செய்து மகிழ்ந்திருந்தார். இவருடைய சீடர்களில் ஒருவர் திருமாளிகைத்தேவர். இவர் வேளாண் குலத்தினர். சோழ மன்னர்களின் குருவாக விளங்கியவர். முன்னோர்கள் வாழ்ந்த மடம் மாளிகை மடம். அம்மடத்தின் சிறப்பு காரணமாக இவர் திருமாளிகைத் தேவர் என அழைக்கப்பட்டார்.

போகர், "திருமாளிகைத் தேவருக்கு நடராஜ பெருமானை பூசை செய்யும் செயல் முறையையும், கருவூர்த் தேவருக்கு பராசக்தியைப் பூசை செய்யும் முறையையும் உபதேசித்தார். திருமாளிகைத் தேவர் தாம் பூசித்த பூசை செய்த பொருட்களை கருவூர்த்தேவருக்கு கொடுப்பார். அப்பொருட் களை அவர் பெற்றுக்கொள்வார். ஆனால் கருவூர்த்தேவர், தாம் பூசித்த பொருட்களை திருமாளிகைத் தேவருக்குத் தர மறுத்தார். இச்செயலை நினைத்து மனம் வெதும்பி போகரிடம் முறையிட்டார். இறைவனை பூசிக் கின்ற பூசை மிகச்சிறந்தது. இதில் பூசைப்பொருட்களை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதில் தவறில்லை எனக் கூறி கருவூர்த் தேவரை தேற்றினார். தனது குருநாதரின் உரையை கேட்டு மனம் தெளிவாகி போகரையும் திருமாளிகைத் தேவரையும் வணங்கி உடன் உறைவார் ஆயினார்.

ஒருநாள் போகர் தம்முடைய பாதுகையை திருமளிகைத்தேவருக்கு கொடுத்து இதனை பூசித்துக் கொண்டு இத்திருத்தலத்திலேயே இருந்து அருள் வழங்குக என ஆணையிட்டார். அதன்படியே செய்தார் என்பதை,

"தேசிகர் பணிந்த வண்ணம் செய்கை தப்பாமல் பேணி,
மாசிலா மணிபொற் பாதம் நாடொறும் வணங்கி மிக்க
நேசமொ டொசான் சைம்பொன் திருவடி நேர்வைத்தர்ச்சி
தாசை யொடடியார் கூட்டத்துடன் கலந்தமாந் தெந்நாளும்"

என்ற திருவாடுதுறைப்புராணம் பாடல் மூலம் அறியலாம்.

### திருமாளிகைத் தேவரின் அற்புத செயல்கள்

1. திருமாளிகைத் தேவர் ஒருபொழுது காவிரியில் நீராடி பூசைக் குரிய நறுமலர்களை எடுத்துக்கொண்டு திருமஞ்சனை குடத்துடன் தம் திருமடம் வந்துகொண்டிருந்தார். எதிரே சாப்பாறை முழங்க இறந்த ஒருவரின் உடலை சுடலைக்கு எடுத்துக்கொண்டு வருவதை

பார்த்தார். ஒருவழிப்பாதை ஆகையால் விலகிச்செல்ல இடமில்லை. பூசைக்கு செல்லும் தமக்கு இழுக்காகி விடுமோ என்று கருதி பூசைப் பொருட்களை வானோக்கி விடுத்து அவற்றை அங்கேயே இருத்தி பிள்ளையாரை பூசிக்கத் தொடங்கினார். உடனே இறந்த உடலானது உயிர்பெற்று எழுந்து சென்றது. அன்று முதல் அப்பிள்ளையாருக்கு கொட்டுத்தவிர்த்த கணபதி என்று பெயர் இன்றும் வழங்கப்படுகிறது.

2. சுடுகாட்டில் எரிந்துகொண்டிருந்த சவத்தின் புகையை நறுமணம் கமழும்படி செய்தார்.
3. கொங்கணவர் என்ற சித்தருடைய கமண்டலத்தில் என்றும் வற்றாத தண்ணீரை வற்ற செய்தார்.
4. சிவபெருமானுக்கு நிவேதனமாக வந்த சுண்டலை பாத்திகட்டி விதைத்து பலருக்கு பலன் தரும் வகையில் செய்தார்.
5. திருவிழிமிழலையில் இருந்த காலத்தில் அங்கு நடந்த தேர்த் திருவிழாவின்போது மக்களால் இழுக்க முடியாத தேரை வடத்தை சுழற்றிவிட்டு தானே அத்தேரிடை ஓடுமாறு செய்தார். இவ்வற்புத செயல்களை கொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர்,

திருவிழிமிழலைப்புராணத்தில்,

குடங்கர் விசும் பிடைநிறுவிக் குணபம் நடந்
திட இயக்கிக் கொடிஞ்சிப் பெற்றோர்
வடங்சுழற்றி ஓட்டிமதில் நந்திகளை
வரவழைத்து வரைநன் காட்டின்
உடம்பின் எழு புகை மாற்றிக் கொங்கணர் பாத
திரம் சுவற்றி உணவதாய் வெந்
திடும் பயறு முளை செய்தெமக்கு அருள்
திருமாளிகைத்தேவர் தேவர் இணைத்தாள் போற்றி

என்று பாடுகிறார்.

### 2. சேந்தனார்

திருவெண்காட்டிற்கு அருகில் உள்ள நாங்கூர் என்ற ஊரில் தோன்றியவர் சேந்தனார். இவர் பட்டிணத்து அடிகளின் கணக்கராக விளங்கினார். பட்டினத்தாரின் கட்டளைபடி கருவூலத்தில் உள்ள பொருட்களை பலருக்கு அள்ளி கொடுத்தார். இதை அறிந்த சோழவேந்தன் சேந்தனாரை சிறையிடும்படி ஆணையிட்டார். அப்போது பட்டினத்தார் இறைவனை வேண்டி நின்றார். இதனால் சேந்தனார் விடுதலை பெற்றார்.

பிறகு மனைவி மக்களுடன் தில்லையம்பதி சென்று விறகு வெட்டி வாழ்வு நடத்தி வந்தார். நாள்தோறும் விறகு விற்ற பொருளில் இருந்து ஒரு சிவனடியாருக்கு உணவு அருந்தும் திருத்தொண்டினை செய்து வந்தார். ஒருநாள் நடராஜபெருமானே சிவனடியாராக காட்சி தந்து

சேந்தனார் அளித்த கலியை உண்டு தனது திருமேனியைக் காட்டி அருளி அவருடைய சிவபக்தியை உலகம் உணரும்படி செய்தார். இதனை,

**"செம்பொண் அம்பலத்து வேந்தன் தனக்கு"**

என வரும் கோயில் திருப்பண்ணியர் விருத்தங்களால் அறியலாம்.

ஒருநாள் சேந்தனார் சிதம்பரத்திலிருந்த பொழுது மார்கழி திருவாதிரை நடந்தது. நடராஜ பெருமான் எழுந்தருளிய திருத்தேர் ஓடாது தடைபட்டு நின்றது. அதுகண்ட சேந்தனார் திருப்பல்லாண்டு பாடி அத்தேர் ஓடி நிலைக்கு வருமாறு செய்தார்.

சேந்தனார் நடராஜப் பெருமானுக்கு தவிட்டை அமுதாகக் கொடுத்தார் என்பதை

**"வரையேற விட்டமுதம் சேந்தன் உண்டானை"**

எனும் சிவஞான சுவாமிகளின் பாடல் வரி மூலம் அறியலாம்.

**3. கருவூர்த்தேவர்**

கருவூர்த்தேவர் கொங்கு நாட்டில் உள்ள கருவூரில் பிறந்தார். இவர் பிறந்த ஊரோடு சேர்ந்து கருவூர்த்தேவர் என வழங்கப்படுகிறது. இவர் அந்தணர் குலத்தை சேர்ந்த வேதாகம கலைகள் பலவற்றை கற்றவர். மிகப்பெரிய யோகசித்தர். போக முனிவரிடம் உபதேசம் பெற்று பல ஞான நூற்கள் ஆராய்ந்து காயகல்பம் உண்டவர். உலக வாழ்வில் புளியம்பலமும், ஓடும் போல ஒட்டியும் ஒட்டாமலும் வாழ்ந்தார். இவர் செய்த செயல்கள் இவரை, "பித்தர்" என அழைக்கும்படி செய்தது.

கருவூர்த்தேவர் கொங்கு நாடு முதல் பல தலங்களுக்கு சென்று இறைவனிடம் திருவடி தீட்சைப் பெற்று திருநெல்வேலியை அடைந்து நெல்லையப்பர் சன்னதியில் நெல்லையப்பா என்று அழைக்க "இங்கு கடவுள் இல்லை போலும்" என சினந்து கூற அவ்விடம் பாலாகியது. மீண்டும் மக்கள் வந்து அழைக்க நெல்லையப்பர் கருவூர்த்தேவருக்கு காட்சி நல்கினார்.

இராஜராஜ சோழன் தனது 20-ஆம் நூற்றாண்டு ஆட்சி காலத்தில் கட்டப்பட்ட பெருவுடையார்க்கு அஷ்டபந்தன மருந்து சார்த்தினார். அம்மருந்து பலமுறை சார்த்தியும் இறுகாமல் இளகிக் கொண்டிருந்தது. இதனை அறிந்த போகமுனிவர் கருவூர்த்தேவரை தஞ்சைக்கு அழைத்து பெருமாள் அருளால் அஷ்டபந்தனமருந்து இறுகும்படி செய்தருளினார். இவரது காலம் பத்தாம் நூற்றாண்டு கடை முதல் பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி எனலாம்.

**4. பூந்துருத்தி நம்பிகாடநம்பி**

சோழவளநாட்டில் காவிரியின் தென்கரையில் திருவையாற்றுக்கு அருகில் உள்ள திருழந்துருத்தி இத்தலத்தில் ஆத்திரேய கோத்திரத்தில் அந்தணர் குலத்தில் பிறந்தார். நம்பி என்பது குலச்சிறப்பு பெயர். சிறந்த

சிவபக்தர். கண்ணப்பர், கணம்புல்லர் முதலிய நாயன்மார்களைப் போற்று வதில் விருப்பமுடையவர்.

திருவாரூர், சிதம்பரம் என்ற இருதலங்கள் பற்றி திருவிசைப்பா திருப்பதிகங்கள் அருளிச்செய்துள்ளார். தேவாரத்திருப்பதிகங்களில்லாத "சாளரபாணி" என்ற ஒரு பண்ணில் இவர் பாடியுள்ளார். இவரது காலம் பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் எனவும் குறிப்பிடுவர்.

**5. கண்டராதித்தர்**

திருவிசைப்பா அருளிச்செய்த அருளாளர்களில் ஐந்தாவதாக விளங்குவர் கண்டராதித்தர். தில்லை சிற்றம்பலத்திற்குப் பொன்வேய்ந்து புதுப்பிக்க முதற்பராந்தகசோழன் என்பவனின் இரண்டாவது திருமகனாவார்.

இவர் சோழர், கி.பி 950-957 சோழ நாட்டை திறம்பட ஆண்டவர். சிறந்த சிவபக்தர் தேவாரத் திருமுறைகளில் மிகப் பற்றுடையவர். இவரைச் "சிவஞானகண்டராதித்தர்" என்று கல்வெட்டுக் கூறுகிறது.

தில்லையில் எழுந்தருளிய நடராஜப் பெருமானிடத்தும் திருவாரூர் தியாகேசப் பெருமானிடத்தும் மிகுந்த ஈடுபாடு உடையவர். செந்தமிழ் புலமை சான்ற இம்மன்னர் பல சிவாலய திருப்பணிகளைப் புரிந்துள்ளார். இவரது மனைவி செம்பியன்மாதேவி ஆவார்.

**6. வேணாட்டடிகள்**

திருவிசைப்பா பாடிய அருளாளர்களில் ஆறாமவர் வேணாட்டடிகள். அக்காலத்தில் கொடுந்தமிழ்நாடு பன்னிரெண்டு பகுதியாகப் பிரிக்கப் பட்டிருந்தது.

**"தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண்பூழி**
**பன்றி அருவா அதன் வடக்கு நன்றாய**
**சீதம் மலாடு புனல் நாடு செந்தமிழ் சேர்**
**ஏதமில் பன்னிரு நாட்டெண்"**

இதில் வேநாடு என்பது சேரநாட்டிற்கும் தென்பாண்டி நாட்டிற்கும் நடுவே உள்ளது. வேணாட்டில் தோன்றிய இவர் அரசர் குலத்தில் தோன்றி துறவு மேற்கொண்டவர். இவர் சிவபெருமானிடத்து கொண்ட அளவற்ற பக்திப் பெருக்கால் பல சிவதலங்களுக்கு சென்று சிவபெருமானைப் பாடி வழி பட்டனர். இவர் பாடிய திருவிசைப்பா திருப்பதிகங்கள் ஒன்று. அத் திருப்பதிகம் சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானை பற்றிப் பாடியது.

**7. திருவாலியமுதனார்**

திருமயிலையில் வைணவ அந்தணர் குலத்தில் பிறந்தவர். சோழ நாட்டில். சீகாழிப்பதிக்கு அருகில் உள்ளது திருவாலிநாடு. அதன்

தலைநகர் திருவாலி. திருமாலுக்கு அமுதன் என்று பெயர். இவரது பெற்றோர் சிவபக்தி கொண்டவராகத் திகழ்ந்தார். தம் திருமகனார்க்கு திருவாலியமுதன் என்று பெயரிட்டு அழைத்தனர். சிவபிரானிடத்துப் பேரன்பு செலுத்தி அருணாசலம் பெற்றுச் சிவனடியாராகத் திகழ்ந்தார். பெருமான் எழுந்தருளிய பலதலங்களுக்கு திருப்பதிகம் பாடி அருளினார்.

**8. புருடோத்தமநம்பி**

திருவிசைப்பா அருளிய எட்டாமவர் புருடோத்தமநம்பி. புருஷோத்தமன் என்பது திருமால் திருநாமங்களில் ஒன்று. இவர் தம்மை "மாசிலா மறைப ஓது நாவன் வண்புகுடோத்தமன்" என்று கூறுவதால் வைணவ அந்தணர் குலத்தில் தோன்றியவர் என அறியலாம்.

வைணவ குலத்தில் தோன்றியச் சிவபெருமானிடத்துப் பக்தி பூண்டு சிவனடியாராக விளங்கியவர். நம்பி என்பது இவரது சிறப்புப் பெயர்.

கல்வி, கேள்வியில் சிறந்து விளங்குபவர். தில்லையில் எழுந்தருளி யுள்ள நடராஜ பெருமானையே வழிபட்டுக் கொண்டு சிதம்பரத்திலேயே வாழ்ந்து வந்தவர்.

**9. சேதிராயர்**

திருவிசைப்பா அருளிய ஒன்பதாம்மவர் சேதிராயர். இவர் சேதி நாட்டைச் சேர்ந்தவர். குறுநில மன்னர் சேதியர் என்ற ஒரு வ்கை மரபினர் ஆண்டநாடு சேதிநாடு. தொண்டை நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் நடுவே உள்ள நடுநாடு எனவும் குறிப்பிடுவர்.

சேதிராயர் தன்னை "ஏயுமாறெழிற் சேதியர் கோண்" என்று கூறிக் கொள்வார். சுந்தரமூர்த்தி சுவாமிகளை அவருடைய தந்தையாரிட மிருந்து கேட்டுப் பெற்று அபிமானப்புதல்வராக வர்த்தக நரசிங்க முனையர் வழியில் வந்தவர். இவர் சிவபக்தி சிறந்து விளங்கினார். பல சிவத்தலங் களுக்கு சென்று வழிபட்டவர். இவரது காலம் குலோத்துங்கன் வாழ்ந்த காலம் என்றும் கி.பி 1070 முதல் 1120 வரை உள்ள காலம் என்றும் குறிப்பிடுவர்.

இவ்வாறு திருவிசைப்பா பாடி அருளிய அருளாளர்கள் ஒன்பதின்மரும் சிவபக்தியின் சிறந்து விளங்கியவர்களாவர். அவர்கள் "தாம் பெற்ற இன்பம் பெறுக வையகம்" என்று தாம் பெற்ற பெரும் பேற்றினை பிறருக்கு திருவிசைப்பா திருப்பல்லாண்டு மூலம் விளக்கியுள்ளனர்.

# 25. திருமூலர் வரலாறு

திரு. ஆர்.கே. குமார், சிதம்பரம்.

சித்தாந்த சைவ சமய இலக்கியங்களுள் தலை சிறந்தனவாக விளங்குவன பன்னிரு திருமுறைகள் ஆகும். இவைகளை அருளிச்செய்த ஆசிரியர்கள் இருபத்தேழுபேர். இவர்களுள் முடிசார்ந்த மன்னர்கள், குறுநில மன்னர்கள், இல்லறத்தோர், முற்றத் துறந்த முனிவர்கள், பால் மணம் மாறாத பாலர் எனப் பலதிறத்தினரும் உண்டு. இவர்கள் அனைவரும் ஒரே காலத்தவர் அல்ல. ஆனால் அனைவரும் ஒரே நிலையை எய்தப் பெற்றவர்கள். இத்திருமுறைப் பாடல்களுள் பத்தாம் திருமுறையாகப் போற்றப்படுவது திருமூலரின் திருமந்திரம் ஆகும். தத்துவ நுட்பங்களை உள்ளடக்கி, மறைபொருளாக கனிந்த இந்நூலிற்கு திருமந்திரம் என்ற பெயர் மிகப் பொருத்தமான ஒன்று. இத்தகைய வாழ்வியல் நெறிமுறைகளையும், இலக்கிய நயங்களையும், கலைகளையும் சைவ சித்தாந்த கொள்கைகளையும், இசைக்குறிப்புகளையும், புராணச் செய்திகளையும் உள்ளடக்கிய இச்சிறப்புமிகு திருமந்திரம் நூலை எழுதி திருமூல தேவரது வரலாற்றினையும், வாக்கின் வளத்தினையும் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

### திருமூலரின் திருமூலம்

திருமூலர் அட்டமா சித்திகள் பெற்ற தவயோகி என்றும், அவர் திருக்கயிலாய மலையில் இருந்து புறப்பட்டுத் தென்னாடு வந்து, திருஆவடுதுறைத் திருத்தலம் அடைந்து, அங்கு எழுந்தருளியுள்ள செம்பொன் தியாகேசனை வணங்கிக் கோவிலின் மேற்குப் பக்கம் உள்ள படர் அரசமரத்தடியில் அமர்ந்து யோக நிட்டை புரிந்து, ஆண்டுக்கொரு பாடல் என்று, மூவாயிரம் ஆண்டுகாலம் வாழ்ந்து; மூவாயிரம் தமிழ்ப் பாடல்களைப் பாடினார் என்றும், அவையே திருமந்திரம் எனவும் கூறப் படுகிறது. இது திருமூலர் வாக்காகவே ஒன்பதாம் தந்திரத்தின் ஈற்றில் மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ் என்று பதிவாகியுள்ளது. இனி அவர் கயிலையிலிருந்து புறப்பட்டுத் தென்னாடு வந்தார் என்பதற்கு என்ன ஆதாரம் என்றால், தெய்வச் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்தில்;

"கயிலாயத்து ஒரு சித்தர் பொதியில் சேர்வார்
காவிரி சூழ் சாத்தனூர் கருதும் மூலன்"

என்று குறிப்பிடுவதே இதற்கான சான்றாகும். சரி, திருமூலர் என்பதுதான் இவர் இயற்பெயரா எனில் இல்லை. இவர் பெயர் சுந்தரநாதன் என்று கூறத்தக்க சில குறிப்புகள் உண்டெனினும், கொள்ளத்தக்க உண்மை. இவர் இயற்பெயர் தெரிந்திலது என்பதே! பின் எப்படி இவர் திருமூலர் என்றழைக்கப்பட்டார்? என்று கேட்டால் இங்கேதான் திருமூலர் வாழ்க்கை தொடங்குகிறது.

கயிலையை விட்டுத் தென்னாடு வந்த தவயோகி திருவாவடு துறைக் காவிரிக் கரையில் உள்ள சாத்தனூர் வந்தார். அங்கு ஓரிடத்தில் பசுக்கள் கூட்டமாக நின்று கதறிக் கொண்டிருப்பதைக் கண்டார். அருகே சென்று பார்த்தபோது பசுக்களை, மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்னும் இடையன் இறந்து கிடப்பதையும், அதன் காரணமாகவே பசுக்கள் துன்புற்றுத் துடிக்கின்றன என்பதையும் உணர்ந்து, அவற்றின் துயர் கிடைக்க நினைத்தார். தன்னுடைய யோக சித்தியினாலே, தன் உடலை ஓரிடத்தில் மறைத்து வைத்து விட்டுத் தன் உயிரை மூலன் உடம்புக்குள் புகவிட்டார். உடனே மூலன் தூங்கி எழுதுவது போல உயிர் பெற்று எழுந்தான். மூலன் எழுந்ததைக் கண்ட பசுக்கள் மகிழ்ந்து துள்ளின. மேய்ச்சல் நிலம் விட்டு வீடு நோக்கிப் போகத் தலைப்பட்டன. யோகியும் அவற்றுடனே போனார். பசுக்கள் எல்லாம் அதன் அதன் சேரிடம் புகுந்தபின், ஒரு பசு மூலன் வீட்டு வாசலில் வந்து நின்றது. யோகியும் நின்றார். நின்ற பசுவின் குரல் கேட்டு மூலன் மனைவி வீட்டின் உள்ளிருந்து வந்து மூலனை வரவேற்றாள். நிலைமையைப் புரிந்து கொண்டு விட்ட யோகி நமக்கும் உனக்கும் ஒரு தொடர்பும் இல்லை எனக் கூறி வந்த வழியே திரும்ப; மூலன் மனைவி தன் கணவனுக்குச் சித்தம் கலங்கிப், பித்தம் பிடித்து விட்டது என்று எண்ணிச் சாத்தனூர் பெருமக்களைக் கூவி அழைத்துச் சேதியைக் கூறினாள். அவ்வூர்ப் பெரியவர்கள் வந்து பார்த்தனர். யோகியின் செயல்கள் பேச்சு எதுவும் மூலனுடையதாக இல்லை உடல் உரு மட்டுமே மூலன், மற்றபடி இவர் மூலன் அல்ல வேறு என்று துணிந்தனர் என்றாலும் அவர்களாலும் உண்மையான முழுமையாக உணர முடியவில்லை. எனவே மூலன் மனைவியிடம், இவர் இனி உன் கணவரல்ல. அவர் வழியே செல்ல விட்டுவிடு எனக் கூறிவிட, சாத்தனூர் மூலன் மனைவி வருந்தி அழுவதை தவிர வேறெதும் செய்ய இயலாது இருந்து விட்டாள்.

யோகியும் வந்த வேலை முடிந்துவிட்டது என்று முன்பு மறைத்து வைத்திருந்த உடலைத் தேடி அங்கு சென்றார். மறைத்து வைத்திருந்த உடல் அங்கிலாலாது மறைந்திருப்பதை உணர்ந்தார். இதுவும் ஈசன் செயல் என்று, இடையிலே பெற்ற மூலன் உடலுடனேயே இருந்தார். இதுவே திருமூலர் எனும் பெயர்வரக் காரணமான கதையாகத் திருத்தொண்டர் திரு அந்தாதியில்,

"குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம்
மேய்ப்போன் குரம்பை புக்கு"

என வரும் நம்பி ஆண்டார் நம்பிகள் வாக்குமூலம் உறுதி செய்கிறது. எனவே, திரு என்னும் அடைமொழியும், ஓர் என்னும் சிறப்பு விகுதியும் பெற்று, மூலன் உடம்பெடுத்த யோகி திருமூலர் ஆயினார். எனவே திருமூலர் என்பது திருமந்திரம் பாடிய திருமூலரின் சொந்தப் பெயர் அல்ல, பின் வந்த பெயர் என்பது தெளிவாகிறது.

**திருமூலரின் காலம்**

திருமூலர் திருமந்திரம், மூவாயிரம் ஆண்டுகளுக்கும் முந்தையது என்றும், திருமூலர் பலகோடி ஆண்டுகள் வாழ்ந்தவர் என்றும், வழி வழிச் சேதிகள் வழங்கும் குறிப்புகளுக்குச் சான்றாவணங்கள் இல்லை என்பதாலேயே அவை சரியல்ல எனச் சொல்லிவிடவும் இயலாது.

"இருந்தேன் காயத்தில் எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே - என்றே"

திருமூலர் திருமந்திரத்தில் தாம் வாழ்ந்த காலத்தை வரைபடமாக அவரே காட்டியுள்ளார்.

"நந்தி அருள் பெற்ற நாதரை நாடிடில்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்
என்றிவர் என்னோடு எண்மரும் ஆமே என்றும்,
மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துரு காலாங்கி கஞ்ச மலையானோடு
இந்த எழுவரும் என் வழி ஆமே - என்றும்"

திருமூலரே தந்துதவியுள்ள மந்திரக் குறிப்புக்கள், புராண காலம், வேத காலத்துக்கு எல்லாம் முந்திய தொல்பெரும் பழைமைக் காலத்தவர் திருமூலர் என்றும், தாம் வாழ்ந்த காலத்துக்கும், வழிமுறை தொடர்ந்த காலத்துக்கும் அவரே ஒரு பெயர் பட்டியலே தந்துள்ளார் என்றாலும், ஆராய்ச்சி அறிவு, சேதிகளை மதிப்பதில்லை. தேதிகளையும் ஆண்டு களையுமே அளவுகோலாகக் கொண்டு, ஆதாரம் தேடும் என்பதையும், தவறு என்று ஒதுக்கிவிட முடியாது. எனவே எந்த வகையில் பார்த்தாலும் திருமூலர் காலம் எப்படியும் இன்றைக்கு ஆயிரத்து ஐந்நூறு ஆண்டு களுக்காவது முந்தையதுதான் என்பதை முற்றாகவும் ஒதுக்கி விடுவதற்கு இல்லை. எப்படி?

திருமூலரின் திருமந்திரம், பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையாகவும், திருமூலர், அறுபத்து மூன்று மெய்யடியார்களில்

ஒருவராகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறார். தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்று தொடங்கும் திருத்தொண்டர் தொகையில் நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் என்று சுந்தரர் வாக்கால் வாழ்த்தி வணங்கப்படுகிறார் திருமூலர். சுந்தரர் காலம் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டு என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. அல்லாமலும் திருமந்திர அதிகார அமைப்புகளும் சில தலைப்புகளும், சிலசொற்றொடர்களும் கூட இவர் திருவள்ளுவருக்குப் பிற்பட்டவர் என்று எண்ணவைக்கிறது. மந்திரங்கள் அமைப்பைப் பாடல்களைப் பார்க்கிறபோது, இவர் சங்க காலத்தவராக இருக்கக்கூடும் என்றும் எண்ணவைக்கிறது. எப்படியோ இவர் குறைந்தபட்சம் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்தியவரே அன்றிப் பிந்தியவர் அல்ல. போகட்டும், வாழ்ந்த காலமும் அவரின் வாழ்க்கையும் யாதாயின் என்ன? அவர் வாக்கு வழங்கிய வண்ணத் தமிழமுதம் அதன் நேர்த்தி, அருமை, அற்புதம், ஆனந்தம் என்று சொல்லவேண்டும்.

தமிழில் இருப்பதாலேயே இவை மந்திரம் அல்ல என்று யாரும் சொல்லிவிடக்கூடாது என்பதற்காகவே மந்திரத்தின் முத்தாய்ப்பான ஈற்றுப்பாடலில் மூலன் உணர செய்த மூவாயிரம் தமிழ், முந்நூறு மந்திரம் என்று பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. மந்திரம் என்பது சொல்லின் அதிர்வு, அதை மனைப்படுத்தும், உச்சாடனம் செய்யும் மனத்தின் ஆற்றல். இதனை விளக்குபவையே, திருமந்திரத்தில் குறிக்கப்பட்டிருக்கும் பல வகையான சக்கரங்கள் - அட்சர அமைப்புகள்

"திருமூலரே இதனைத் தெளிவுபடுத்தும் விதமாக
நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான் பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றப் தலைப்படும் தானே"

என தானருளியவை தமிழ் மந்திரங்கள். அதுவும் இறைவன் அருள் செய்யச் செய்தவை; எனக்காக அல்ல; எல்லாரும் இன்புற என்பதன் மூலம் திருமூலரின் ஆன்மநேயம். ஆருயிர்கள் அனைத்தினிடத்திலும் வைத்த பேரன்பு, மெய்ப்பக்தி, திருமூலரை அருட்கவியாக, ஞானியாகக் கொள்வதைவிட, அன்பே சிவமாக, அறிவே தவமாகக் கொண்டு வாழ்ந்த ஞானத் தவயோகம் திருமூலர் வாழ்க்கை என்றும், அவர் வாக்கான திருமந்திரம் தமிழ் செய்த தவ, தமிழர் செல்வம் என்றும் ஏற்றுக் கொள்வதே ஏற்புடையதாகும்.

# 26. ஒன்பதாம் திருமுறையில் உள்ளங்கவர் பாசுரங்கள்

புலவர் க. கொன்றையாண்டி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவை சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாம் திருமுறையாகப் போற்றப்பெறுகின்றன. இத்திருப்பதிகங்கள் தேவாரத் திருமுறைகளைப் போலவே பண் அமைப்புடன் கூடியவையாய் இசையுடன் வாய்ந்தன. ஆதலின் திருவிசைப்பா என வழங்கப்பெறுவன ஆயின. இத்திருமுறையின் இறுதியில் உள்ள திருப்பதிகம் இறைவன் உயிர்கட்குப் புரியும் திருவருட் செயல்களையும் அவன் பெருமைகளையும் கூறி, உய்விக்கும் தன்மை கண்டு மகிழ்ந்து அவனைப் பல்லாண்டு வாழ்ந்து மேன்மேலும் உயிர்களை உய்விக்க வேண்டும் என்ற மகிழ்ச்சியில் அவனுக்குப் பல்லாண்டு கூறுமாறு அமைந்துள்ளதால் அது திருப்பல்லாண்டு எனப் பெயர் பெற்றது.

இறைவன் தனக்கென ஒன்று வேண்டும் குறையில்லாத நிறைவுடையவன். தனக்கு இயல்பாயுள்ள எல்லையற்ற பெருங்கருணையினாலே குறைபல உடைய உயிர்களை உய்விக்கத் திருவுளங் கொண்டவன். ஆகையால் அவன் எண்ணற்ற செயல்களை மேற்கொண்டு அவற்றிற் கேற்ப உருவம் பெயர் முதலியவற்றையும் கொண்டு விளங்குகிறான். அங்ஙனம் நின்று உயிர்களை அவற்றின் தகுதிக்கேற்பப் பல வகையான உலகங்களில் உலாவவிடுகிறான். எனவே இறைவன் உயிர்கட்கு மனித உடம்பைக் கொடுப்பதின் குறிக்கோள் மனமொழி மெய்களால் அவனை நினைத்தும் வாழ்த்தியும் வணங்கியும் அவனது திருவடியை அடைவதேயாகும். இதை,

''மானுடப்பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றே''

என்ற சிவஞான சித்தியார் செய்யுளால் அறியலாம். மேலும்,

''வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை''

என்று அப்பர் சுவாமிகளும்,

''வணங்கத் தலைவைத்து வார் கழல்கள்
வாய் வாழ்த்த வைத்து''

என்று மணிவாசகரும்,

"வாய் அவனை (திருமாலை) அல்லது வாழ்த்தாது, கைகள் உலகம்
தாவியவனை அல்லது தாம் தொழாஅ"

என்று பொய்கை ஆழ்வாரும் கூறியதால் அறியலாம்.

எனவே மனத்தால் நினைத்தல் வாயால் வாழ்த்துதல் உடம்பால் வணங்குதல் என்னும் மூன்றனுள் வாயால் வாழ்த்துதல் சிறப்பாகும். இறைவன் எல்லாராலும் காணப்படும் பொருள் அல்லன். ஆகையால் மக்கள் இறைவனை தம் தவமுதிர்ச்சியால் அவனைக் கண்ட பெருமக்கள் "நாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் பெருங் கருணையால் அருளிச்செய்த பாடல்களைப் பாடியே அவனை உணர்தல் வேண்டும்.

இவ்வாறு அருளாளர்கள் பாடிய பாசுரங்கள் நாம் அன்றாடம் வழிபாட்டில் கூறித் துதிக்கப் பயன்படும். அப்படிப்பட்ட பாடல்களில் ஒன்றைக் காணலாம்.

செங்கணா போற்றி! திசைமுகா போற்றி!
சிவபுர நகருள் வீற்றிருந்த
அங்கணா போற்றி! அமரனே போற்றி!
அமரர்கள் தலைவனே போற்றி!
தங்கள் நான் மறைநூல் சகலமும் கற்றோர்
சாட்டியக் குடியிருந்தருளும்
எங்கள் நாயகனே போற்றி! ஏழிருக்கை
இறைவனே போற்றி! போற்றி!

இவ்வாறு நாம் நாள்தோறும் இப்பாடலைப் பாடி கசிந்துருகி வழி பட்டுய்யலாம்.

இவ்வாறு தன்னை மறந்து வழிபாடு செய்யும்போது இடையூறு செய்பவர் எவராயினும் தண்டனைக் குறியவரே என்பதை சண்டேசுவரர் வரலாற்றால் அறியலாம்.

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கவ்
அண்டத் தொடுமுடனே
பூதவத்தோரும் வணங்கப் பொற் கோயிலும்
போனகமும் அருளிச்
சோதி மணிமுடித்தாமமும் நாமமுந்
தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே"

என்று சேந்தனார் கூறுகிறான்.

இவ்வாறு திருவிசைப்பா திருப்பல்லாண்டில் இறைவன் தன்மையை இனிய எளிய முறையில் பாமரரும் பாடிப்பரவும் நிலையில் அமைந் திருப்பதைக் காணலாம்.

இறைவன் அகல், எண்ணெய், திரி இல்லாத இயற்கையான விளக்காக இருக்கிறார். எனவே அவன் என்றும் அழியாத (அணையாது) ஞான ஒளி வடிவினன். பளிங்கு மலை போன்ற இயற்கை ஒளியுடையவன். அடியார்களின் அவனிடம் ஈடுபாடுடையோரின் உள்ளத்தில் இன்பம் நல்கும் கனியாக பொன்னம்பலத்தில் நடனமாடிக் காட்டுகிறான். இவ்வாறு நம் உள்ளம் கவர்வதாகும் இப்பாடல்

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள் மணிக்குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே!

மேலும் சிவபெருமான் தன்மைகளையும் கருணையையும் திருவீழிமிழலை என்னும் தலத்தில் கண்டு கொண்டதாக ஓர் இனிய எளிய பாடலில் கூறுவதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டு உள்ளம்
குளிர என் கண் குளிர்ந்தனவே

இப்பாடலில் இறைவன் மெய்ந்நூல்களைக் கற்றவர்களால் அனுபவிக்கப் படுபவன். மனிதர்கள் தம் ஆணவ முயற்சியால் கற்று அறியமுடியாதவன். தன்னை மதித்து வழிபடும் அடியார்கள் உள்ளத்தில் ஞானஒளியாக இருக்கிறான். ஆணவம் உள்ளவர்களை அழித்து அடியார்களுக்கு அருளும் தன்மை உடையவன்.

இப்படிப்பட்ட இறைவனை நாம் மனம் உருகி அழைத்து ஓலமிட்டு வழிபடத் தமிழ்ப்பாடல்கள் பல இருந்தும் நான் உன்னை வேண்டி அப்பாடல்களைப்பாடி அலற மாட்டேன். ஒரு திருத்தொண்டும் செய்யவில்லை. எனினும் பாவியாகிய என் உயிரினுள் புகுந்து நீங்கா திருப்பது உன் பெருங்கருணையேயாம் என்று நாம் வழிபட வேண்டிய முறையையும் அவ்வாறு வழிபடாவிட்டாலும் இறைவன் நம்மை ஆட் கொள்வான் என்று அவன் கருணையையும் கூறுவதை அறியலாம்.

இவ்வாறு ஏழிசையாய் இசைப்பயனாய் இருக்கும் இறைவனை நம்மால் இயன்ற இசையால் வழிபட்டுய்ய நம் பெருமக்கள் பாடிய இசைப்பாடல்களைப் படித்துப் பாடி அவன் அடியை அடைவோமாக.

நாம் இறைவனுக்குச் செய்யும் வழிபாடுகள், வணக்கங்கள், வாழ்த்துக்கள் யாவும் உபசாரமேயாகும். இறைவன் உண்பதும் இல்லை, உறங்குவதும் இல்லை. அவன் பண்டும் இன்றும் என்றும் ஒரு தன்மையாகவே இருக்கிறான். எனவே அவனை வைதாலும் வாழ்த்தினாலும் அவனுக்கு வருவதொன் றில்லை. என்றாலும் நமக்கு வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்திருப்பதால் அவனை வணங்குவதும் வாழ்த்துவதும் போற்றுவதும் நம் கடமை என்பதை உணர்த்தவே திருப்பல்லாண்டு தோன்றியது. நாம் ஒருவரிடம் ஏதாவது ஓர் அரிய பயன் பெற்றால் அவரை வாழ்த்துவது இயல்பு. அதுபோல் இறைவன் நமக்குப் பல அருளிச் செயல்கள் செய்து காப்பாற்றுவதால் அவனை அந்த மகிழ்ச்சியில் பல்லாண்டு வாழ்க என வாழ்த்தும் முறையில் இது அமைந்துள்ளது.

"மன்னுகதில்லை வளர்க நம் பக்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனி எல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன் அடி
யோமுக் கருள் புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே"

இப்பாடலில் இறைவன் நமக்கு அருள் பாலித்து இனிப் பிறவி இல்லாமல் செய்து அதற்குரிய ஞானத்தையும் அருளியுள்ளார். ஆகையால் அவன் பல்லாண்டு வாழ்க என்று கூறுவதாக அமைந்திருப்பதை அறியலாம்.

மிண்டுமனத்தவர் போமின்கள்
மெய்யடியார்கள் விரைந்துவம்மின்
கொண்டும் கொடுத்தும் குடிகுடி ஈசற்குஆட்
செய்மின் குழாம் புகுந்து
அண்டங்கடந்த பொருள் அளவில்லதோர்
ஆனந்த வெள்ளப் பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள் என்றே
பல்லாண்டு கூறுதுமே.

இப்பாடலில் இறைவன் பெருமையைக்கூறி இப்படிப்பட்ட இறைவனை நினைத்து உருகாத மனமுடையவர்கள் எங்களை விட்டு நீங்குங்கள். உண்மையடியார்கள் விரைந்து வந்து இறைவன் அருளைப் பெறுங்கள் என்றும் கூறுவதை அறியலாம். எனவே இறைவனிடம் நாம் பெறும்

பேரருட் செயல்களை அறிந்து அவனுக்குப் பல்லாண்டு கூறுவதாக அமைந்தமை அறியலாம்.

திருவாரூரிலும் தில்லையிலும் அக்காலந்தொட்டே திருவாதிரைத் திருநாள் சிறப்பாக நடைபெறும். அவ்விழாவின் சிறப்பையும் அவ் விழாவின்போது மனிதர்கள் மட்டுமல்ல தேவாதி தேவர்களும் வந்து கண்டு மகிழ்வதோடு அவனை வணங்கி உய்தி பெற வேண்டும் என்ற குறிப்புகளைப் பின்வரும் பாடல்களால் அறியலாம்.

**குழல்ஒலி யாழ்ஒலி கூத்தொலி ஏத்தொலி**
**எங்கும் குழாம் பெருகி**
**விழவொலி விண்ணளவும் சென்று விம்மி**
**மிகு திவாருரின்**
**மழவிடையாற்கு வழிவழி ஆளாய்**
**மணஞ்செய் குடிப்பிறந்த**
**பழஅடியா ரொடுங் கூடிஎம் மானுக்கே**
**பல்லாண்டு கூறுதுமே.**

இப்பாடலில் திருவாரூர்த் திருவாதிரைத் திருவிழாவின் சிறப்பைக் கூறி அங்குள்ள சிவபெருமானுக்கப் பரம்பரை பரம்பரையாக அடிமையாய் வாழும் குடும்பங்களுக்குள்ளேயே திருமணம் செய்யவேண்டும் என்பதையும் அறியலாம்.

இத்தகைய விழாக்களில் மனிதர்கள் மட்டுமல்ல தேவர்களும் வந்து இறைவனை வணங்கி உய்தி பெற்றனர் என்பதையும் யார் யார் அவ்விழாவிற்கு வரவேண்டியவர்கள்? அவர்கள் எல்லாரும் வந்தார்களா? என்று அறியப்படும் என்றும் பின்வரும் பாடல் கூறுகின்றது.

**ஆரார் வந்தார் அமரர் குழத்தில்**
**அணியுடை ஆதிரை நாள்**
**நாராயணனொடுநான்முகன் அங்கி**
**இரவியும் இந்திரனும்**
**தேரார் வீதியில் தேவர் குழாங்கள்**
**திசையனைத்தும் நிறைந்து**
**பாரார்தொல் புகழ்பாடியும் ஆடியும்**
**பல்லாண்டு கூறுதுமே.**

இவ்வாறு சேந்தனார் திருப்பல்லாண்டு என்ற பதிகத்தில் இறைவன் பெருமையையும் அவனுக்கு நடைபெற்ற முக்கியமான திருவிழாவைப் பார்த்து அவன் அருளைப் பெறவேண்டும் என்றும் சிறப்பாகக் கூறப் பட்டிருப்பதை அறியலாம். திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பாடல்களில் என் உள்ளங்கவர்ந்த பாடல்கள் இவையே எனக் கூறி அமைகின்றேன்.

# 27. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

புலவர் கோபால கண்ணன், சென்னை.

திருமூலர் திருவாக்கில் மலர்ந்தநூல் திருமந்திரமாகும். நினைப்பவரைக் காப்பதெதுவோ அதுவே மந்திரமாகும். இறைவன் மந்திரவடிவானவ னென்று சைவசித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன. இறைவன் திருமேனியில் பரவி ஓடும் குருதியே மந்திரமென்று குமரகுருபரர் கூறுவார் கந்தர் கலியில் மந்திரமே சோரியாக என்று.

குருதியோட்டமின்றேல் உயிரோட்டமின்றாம் உயிரோட்டமின்றேல் உலகம் பொய்யாம். ஓங்கார ரீங்காரமற்ற உலகு இருண்டேகிடக்கும்.

**மந்திரம் பற்றித் தொல்காப்பியம்**

"நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப" - தொல் பொ. 480

என்று கூறுவதா, மந்திரத்தினை உரைப்போர் நிறைமொழி மாந்தராகவே இருப்பார் என்றும், அவர், கூறியபடி கூறலே மந்திரத்திற்குரிய பெருமை யும் ஆற்றலும் வந்தமையும் என்றும் தெற்றென விளங்கும். இதனையே வள்ளுவரும்

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" - திருக்குறள் 28

என்றார். 'நிறைமொழி'க்குப் பொருள் கூறவந்த பரிமேலழகர் "அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களை அளித்துவிடும் மொழி" என்று உரை கூறியுள்ளார். இதனை, பல்லக்கு ஏறிச்சென்ற நகுடன், அகத்தியர் சினத்தால் மலைப்பாம்பாகி நிலத்தில் உருண்டதையும், கூன்பாண்டியன் ஞானசம்பந்தர் வாழ்த்தால் கூன்நிமிர்ந்து 'நின்றசீர் நெடுமாறனாய்' ஆன வரலாற்றாலும் உணரலாம்.

நிறைமொழி உருவாவதே இறையருளால்தான். அவ்வருள் யாதால் விளையும் யாங்ஙனம் அடையலாம் என்பதனை மூலர்,

"ஒருமையுள் ஆமைபோல் உள்ஐந்து அடக்கி
இருமையும் கேட்டிருந்தார் புரையற்றே"
- தி.ம. தந்திரம், உப. 21

ஆமைபோல் ஐம்புல ஒடுக்கத்தால் அமையுறும் அஃது என்பார். உணர்வுகளை உள்ளடக்கக் குற்றமே நேரா என்பதாம் மேலும்,

"சத்து முதல் ஐந்தும் தன்வழித்தான்சாரில்
சித்துக்கும் சித்தன்றிச்சேர்விடம் வேறுண்டோ" - உ.ப. 23

இதனால் புலனொடுங்கிய மனமே சிவன் ஒளிரும் சிந்தை ஆம் எனலார். சிந்தையில் ஊறிப்பழுத்தக்கனியாம் சொற்களன்றி வேறு வெளிப்படா. இத்தகு நிறைமொழி மாந்தர்தாம் திருமூலதேவர்.

சிவயோகியாக இருந்த இவர், பழைய இடைமூலனாய் இல்லாமல் திருமூல நாதராக விளங்கினார். சிவயோகத்திலிருந்து ஆண்டிற்கு ஒன்றாக திருமந்திரத்தை அருளிச்செய்தார் என்பதனைச் சேக்கிழார் பெருமான்

"ஊனுடன்பிற் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்குமலர் நல்திருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயிறு அணிந்தாரை ஒன்றவன்தான் என எடுத்து"
- திருமூலர் புராணம் - 26

"முன்னியவர் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை
தன்னிலணைந்து ஒருகாலும் பிரியாமைத்தாளடைந்தார்"
- தி.மூ.பு. 27

இவற்றால் திருமூலர், நிறைமொழி மாந்தர் என்பதையும் அவர் இயற்றியவை திருமந்திரங்கள் என்பதையும் உணரலாம்.

திருமந்திரத்துள் அமைந்துள்ள இருநூற்று முப்பத்திரண்டு அதிகாரங் களையும் நோக்க சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு பிரிவுகளின் விளக்கங்களே எனலாம். இத்திருமந்திரத்தின் திரண்ட பொருள், 'அன்பே சிவம்', என்பதே ஆகும் இதனைப் பெரியபுராணம்,

"உள்ளுணர் வான ஞானம்முதலிய ஒருநான்குண்மை
தெள்ளுதீந்தமிழால் கூறும் திருமூலன்" - பெரி.ஏயர்.கலி.பு. 409

எனவும்,

"ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்கு மலர் நற்றிருமந் திருமாலை"
- திருமூலநாயனார் புரா - 26

எனவும் கூறுவதால் உணரலாம்.

அன்புநெறியில் அசையாத் திருமூலர் தாம் பெற்ற இன்பமனைத்தும் இவ்வைய மாந்தரும் பெற்றுய்யவேண்டுமென எண்ணினார். எண்ணிய

எண்ணியாங்கு எய்தவும் எண்ணங்கொண்டார். அவ்வெண்ணத்தின் ஊக்கமே, இறை வழிபாட்டில் மேலோங்கும் பேரின்பமாகும்.

**மூலன்தொழுதமூலவர்**

பரந்த நோக்கமும் நிறைந்த ஞானமுங் கொண்ட திருமூலர் உள்ளம், எல்லாம்வல்ல இறைவன் சிவனையே முழுமுதற்கடவுளாக எண்ணத்துணிந்தது,

ஒக்க நின்றானை - தேவர்கள் நக்கன் என்று ஏத்திடும் நாதனை நாடொறும் பக்கநின்றார் அறியாத பரமனைப் புக்குநின்று அவர் புகழ்ந்து போற்றுவார்.

"ஈசன் உறவுக்கு எதிரில்லை" - க.வா. 17

என்பதால், 'அவனைப்' போற்றிசைத்தும் - புகழ்ந்தும் - புனிதனடி தேற்றிநிற்பார் என்றும் சிவனடிக்கே செல்வம் ஆற்றியதென்று மயலுற்றச் சிந்தையை மாற்றி நின்றார்வழி மன்னி நிற்பார்.

பிறப்பிலியை - பிஞ்ஞகனை - பேரருளாளனை - இறப்பிலியை யாவர்க்கும் இன்பம் அருள்வானை - துறப்பிலிதன்னைத் தொழுதெழுவார் திருமூலர்.

இணங்கி நின்றானை எங்குமாகி நின்றானை - பிணங்கி நின்றானை - பின்முன்னாகி நின்றானை - உணங்கி நின்றானை - அமராபதி நாதனை வணங்கியே வாழ்வார் திருமூலநாதனார்.

மண்ணகத்தானை - வானகத்தானை விண்ணகத்தானை - வேதகத்தானை - பண்ணகத்தின்னிசைப்பாடல் உற்றானைக் கண்ணத்தே நின்று காதலிப்பார் மூலர்.

"வாழ்த்த வல்லார் மனத்துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும், எம்பெருமான் என்றிறைஞ்சியும்
ஆத்தம்செய்து ஈசன் அருள் பெற்றே" வாழ்ந்தார் மூலனார்
க.வாழ் - 39

போற்றித் தன் அன்பையெல்லாம் ஈசன் பொன்னடிக்கே பொலியவைத்துப் புகழ்ந்தார்.

"அந்திவண்ணா என்றும் அரனே, சிவனே என்றும்
சிந்தைசெய் வண்ணம், திருந்தடியார் தொழுது" நிற்பார்
க.வா. - 46

"சூடுவார் - நெஞ்சிடைவைப்பார் - பிரான் என்று
பாடுவார் - பன் மலர்த்தாவிப் பணிவார் - ஆடுவார்

**ஆடிஅமரர் பிரானென்று நாடுவார்'' பக்திபெருக்கு**
**மிக்கூரவே மூலர்** - க.வா.-50

ஆடுவதும் - பாடுவதும் - தேடுவதும் - நாடுவதும் அவன் கழலிணைக் காணவேண்டிதான் என்பதை மணிவாசகப் பெருமானும் திருவாசகத் திருச்சதகத்துள்

**''ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பிலை என்புருகிப்**
**பாடுகின்றிலை பணிகிலைப் பாதமலர்''**

என்பார்.

ஆக மூலவன் தொழுததும், முன்னவர் பணிந்ததும் முழுமுதற் கடவுளாம் சிவபெருமானையே என்பது போதரும் திருமூலர், தான் திருவாவடுதுறையின்கண் வதிந்திருந்த காலத்தில் ''தண்ணென் துறை மல்கும் ஆவடுதுறையில் சிவனோடு சேர்ந்திரந்ததாகவும் - அவ்வாறு சிவனோடு ஐக்கியமாகி இருந்த இடம் ஆவடு துறைக்கண் நிலவிய போதிய மரநிழலில் தான் என்றும் - அப்போது 'சிவாயநம' என்ற சிவ நாமத்தை ஓதியே இருந்ததாகவும் திருமூலர் தம் வரலாற்றால் காட்டுவார்.

**''சேர்ந்திருந்தேன்சிவ மங்கைதன் பங்கனைச்**
**சேர்ந்திருந்தேன் சிவனாவடு தண்துறை**
**சேர்ந்திருந்தேன் சிபோதியான் நீழலிற்**
**சேர்ந்திருந்தேன் சிவ நாமங்கள் ஓதியே'' - திருமூலர் வரலாறு 7**

**அன்புடைமை**

அகத்திலே அன்புநிறை கொளார்க்குப் புறத்தாம் உடற்கண் இயற்றும் ஆடம்பரங்கள் யாது பயன் நல்கும்?

அன்பு உள்ளத்துள் இல்லாதார் வாழ்வானது வலிய பாலை வனத்துள் பட்டமரம் தளிர்கொண்டால் அற்றதேயாம்

அன்பின் வழியதல்லாவோ உயிர்நிலை? அஃது இல்லார்யாவரும் என்புதோல் போர்த்த உடற்கொண்டவரல்லாவா? என்று பலவாறாகத் திருவள்ளுவப் பெருந்தகை அன்புடைமை அதிகாரத்துள் கூறிச்செல்வார்.

அன்புகொண்டார் உள்ளம் கனிவு கொண்டதாகும். கனிவு கொண்டார் உள்ளத்தே கடவுளிருப்பான்.

அன்பும் சிவமும் வேறல்ல அன்பே சிவம். சிவமே அன்பாம்.

**''அன்பு சிவம் இராண் டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே'' - முதல் தந்திரம் 18-1**

ஆக சிவன் உய்யும் இடம் அன்பு கொண்டாரிடம் - அன்போடியைந்த வழக்கேயாகும் ஆருயிர்க்கு என்போடியைந்தத் தொடர்பு என்பதை அழுத்தி உரைக்கிறார் திருமூலர்தாமும்!

"அன்போடு உருகி அகங்குழை வார்க்கன்றி
என்போல் மணியினை எய்தவொண்ணாதே" முதந் - 18-3

இறைவன் திருவடித் தாமரையை எண்ணிய எண்ணியாங்கு எய்த வேண்டுமானால் ஒன்றி இருந்து அவனை நினைக்க வேண்டு மென்றும் மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும்வித்தை வித்திப் பொய்மையாம் களையை வாங்கிப் பொறுமையாம் நீரைப் பாய்ச்சித் தம்மை உள்ளத்தே கண்டு நோக்கித் தகவெனும் வேலியிட்டுச் செம்மையுள் நிற்பார்க்கே 'சிவகதி' விளையும் என்றும் அப்பரடிகள் கூறுவார்!

"ஆர்வம் உடையவர் காண்பர் அரன் தன்னை
ஈரம் உடையவர் காண்பர் இணையடி" மு.தந். 18-4

என்றும்,

"என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கி பெருந்தகை நந்தியும்
தன்னன் பெனக்கே தலைநின்றவாறே" - மு.தந். 18-5

என்றும் தெரிவிப்பார்!

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையவன் - அன்பெனும் கரத்தமர் அமுதவன் - அன்பெனும் குடில்புகும் அரசவன் - அன்பெனும் வலைக்குட்படும் பரம்பொருளவன் அவனைத் திருமூலர்,

"அன்பினுள் ளான்புறத் தால்உடலாயுளான்
முன்பினுள்ளான் முனிவர்க்கும் பிரானவன்
அன்பினுள்ளாகி அமரும் பொருள்
அன்பினுள்ளார்க்கே அணைதுணையாமே" - மு.தந். 18-10

அன்பு செய்வாரையே அறிவான் சிவன். அன்புளார்க்கு அணையாகவும் துணையாகவும் இருப்பான்.

ஈசன் அறிவான் இரவும் பகலும் தன்னைப் பாசத்துள் வைத்துப் பரிவு செய்வார்களை! தேசுற்று அறிந்து செயலற்று இருந்திடில் ஈசன் மாசற்ற சோதியாய் மனத்திடை மன்னுவான் என்பதனைத் திருமூலநாதர் :

"கண்டேன் கமழ்தரு கொன்றை யினான் அடி
கண்டேன் கரியுரி யான்தன் கழலிணை
கண்டேன் கமலமலர் உறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே" தி.தந். 19-6

கண்டதோர் காட்சியில் கொண்டதோர் இன்பப் பெருக்கை யாவரும் கொள்ளுமோர் உபாயம் காட்டவே கூறுவார் மூலர்!

"சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனோடொப்பார் இங்கு யாவரும் இல்லை
புனங்கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே" க.வா. 5

சீவன் உள்ளே சிவனைக் கண்டு தெளிந்த சீவன் முக்தரே திருமூலர். சிவன்தான் மூல முதல் இறைவன் - அவன் பிறவா ஆக்கைப் பெரியோன். அவன் ஒருவனே யாவற்றையும் கடந்து நிற்கும் கடவுள். மற்ற தெய்வங் களெல்லாம் அவனைத் தொழும் அடியார் தேவர், குருமார்களாவர்!

பிறக்கும் பொருளெல்லாம் பிறந்து, பின் வளர்ந்து, வாழ்ந்து இறக்கும்!

இறப்பிற்குரியதெல்லாம் இறைவனாகா. பிறப்பித்தும், காத்தும், இறப்பிப்பவன் எவன்? அவனே எல்லாமாகிய மேலோன்!

சீவன் உள்ளே 'சிவன்' இருக்கிறான் என்பதனைக் காணார்கள், கண்டுதெளியும் வண்ணம் பூவுனுள்ளே பொருந்திய மணம் அமைந்த வாற்றினைக் கூறி, இந்தச் சீவனுக்குள் சிவமணமும் அமைந்துள்ள நிலைமைக் கூறுவார்

"பூவினுள் கந்தம் பொருந்தியவாறுபோல்
சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது" - தந். 5. அதி. 7.3

பூவினுள் கந்தம் கண்ணில் புலப்படாத ஒன்று! முகரக் கிடைக்கும் நறுமணமதுபோல் உணர்வால் நுகரக் கிடைப்பான் சிவன் என்பார் திருமூலர்.

"விறகினில் தீயினன் பாலினில் படுநெய்போல் .
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றால்
முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே" - அப்பர் தேவாரம்

விறகினுள் தீ இருப்பதும் பாலுக்குள் நெய் இருப்பதும் வெளிப்படுவதில்லை. ஆயினும் தீ இருப்பதும் நெய் இருப்பதும் உண்மையன்றோ, அதுபோல் உயிருக்குள் உத்தமன் என்றும் இருக்கிறான்! அவனைப் பக்தி என்னும் உறவுகோல் கொண்டு நல்லுணர்வால் மனமுருகி அன்பு செய்வார்க்கு அட்டியின்றி அவன் காட்சிக்கொடுப்பான் என்பதாம்!

"உணர்ந்து ஒழிந்தேன் அவனாம் எங்கள் ஈசனை
புணர்ந்தொழிந்தேன் புவனா பதியாரை" தந்திரம் 4 ஆ.ஆ. 96

சீவன் அழிந்தால் சிவானந்தம் காண்டலரிது. சீவனுள்ளே சிவமணம் பூக்க சீவன்வேண்டும். சீவன் ஆட்சி பெற ஆயுள் தேவை. ஆயுள் நிலைக்க

ஆரோக்கியம் வேண்டும். ஆரோக்கியம் காண நல்லுடல் வேண்டும்! நல்லுடலுக்கு உடற்பயிற்சி அவசியம்!

உடற்பயிற்சியால் உயிர்தழைக்கும். உயிர் தழைய மெய்ஞ்ஞானம் பெருகும் இதனை மூலர்;

"உடல் வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே
உடலார் அழியின் உயிரார் அழிவர் எனும்
கருத்தால் மெய்ஞ்ஞான நெறிவளர்க்கும் வழிச்சொல்லுவார்.

உள்ளப் பூசையே கொள்ளல் வேண்டும். உள்ளம் அவன் கருவறை யாகவும், உடம்பினை ஆலயமாகவும், வாயினைக் கோபுரவாயிலாகவும், உயிரைச் சிவலிங்கமாகவும், ஐம்புலன்களை மணிவிளக்காகவும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"

என்பார் மூலர்.

நல்லுடல் கொடுத்த நாயகனை, அல்லல் கெடுத்து ஆட்கொள்ளும் அரும் பொருளாம் சிவனை எண்ணாது காலம் கழிப்பார் உளரோ? உளரானால் அவர்த் தீவினையாளரே!

தீவினையாளர்க்கு மீண்டும் பிறப்புண்டு. பிறப்பிலாப் பேரின்ப வாழ்வு பெற அவர் சிவசிவ என்று அவன் பேர்ச் சொலல் வேண்டுமன்றோ?

"சிவசிவ என்சிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத்தீவினை மாளும்
சிவசிவ என்றிடத்தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே" - தந். 9 சூ ப.8

'சிவாய நம' வென்று சிந்தித்து இருப்போர்க்கு அபாயம் ஒன்றில்லை; எனும் வழக்காறுக் கொப்ப சிவசிவ என்றால் தீவினை மாய்ந்து சிவகதி கிட்டுவதோடு தேவருள்தேவராய் வாழ்வர் என்பதாம்.

காலினில் ஊறும் கரும்பினிற்கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்தினுள் இரதமும்
பூவினில் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்கும் கலந்து நின்றானே - தந். 8 சோதனை - 5

காற்றில் உணர்வும் - கரும்பினில் வெல்லக் கட்டியும் பாலுக்குள் நெய்யும் - பழத்தினுள் இனியச் சாறும் - பூவுக்குள் நாற்றமும் போல்

மறைந்தும் எம் இறைவனான சிவபெருமானை கண்ணாறக் கண்டார்பலருள் திருமூலர் சிறந்த ஞானியாவார்.

"மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"

- சிவபு. வரி 32

என்பார் மணிவாசகர்.

சிவபெருமான் திருவருள் பேற்றைப் பலவாறு திருமூல நாயனார் எளிய இனிய பாக்களால் மிகவும் நுணுக்கமாகவும், தெளிவாகவும் எடுத்துக்காட்டி; நல்லானை - நல்லான நான்மறையோடு ஆறங்கம் வல்லானை, வல்லார்கள் மனத்துறையும் மைந்தனைச் செல்லானைச் சொல்லார்ந்த பொருளானை துகளேதும் இல்லானை எம்மானை நாமெல்லாம் மனத்துள். வைக்க ஞானகுருவாக மோனவாரியாக கானக் குரலெடுத்துத் தேனாய்த் திருமந்திரமாய் தெளித்தார்.

"திருமந்திரமே சிவகதிக்கு வித்தாம்
திருமந்திரமே சிவமாம் - அருமந்த
புந்திக்கு ளேநினைந்து போற்றும் அடியார் தமக்குச்
சிந்திக்கும் தற்பரமே தான்"

ஒரு தனிப்பாடல் இவ்வாறு கூறும்.

சிவபெருமான் மந்திர வடிவானவன் அவனைச் சென்று சேரும் நெறிகளைக்காட்டும் மந்திரநூல் திருமந்திரமாகும். எனவே, சிவகதிக்கு வித்தாகும் திருமந்திரநூல் 'சிவம்' என்றே இப்பாடல் காட்டுவதை அறியலாம்.

திருமந்திரநூல், திருநெறியச் சைவத்தை நெறிப்படுத்தும் நூலாகும். என்னை நன்றாக இறைவன் படைத்தனன் - தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே என்பதால், தமிழையும் வளர்த்துச் சைவத்தையும் வளர்த்தப் பெருமையால் தமிழ்ச்சைவம் மேலோங்க வழிக் கண்டதாம். மந்திரம் தந்த மாமனிதர் திருமூலரைப் போற்றித் தொழுவோம்.

# 28. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

திருமதி கோமதி முத்துக்குமரன், சென்னை.

**திருமந்திரம்**

நம் தென்றமிழ் நாடே தொன்மை மிகு நன்னாடாகும். ஆழி சூழ் அகிலமெங்கும் மொழி வளத்தாலும், இறைக் கொள்கையாலும், நாகரிகப் பண்பாட்டாலும் நலம் பல நல்கி அன்றும், இன்றும் என்றும் தலை சிறந்து நிற்பது நம் பொன்னாடாகிய செந்தமிழ் நாடேயாகும். சிவநெறியும், செந்தமிழும் உயிரும் செயிர்தீர் உடம்பும் போல இயைந்தியங்குவன. அவை மாற்றரும் வேற்றுமையகற்றி ஆற்றரும் ஒற்றுமை தேற்றிப் போற்றியொழுகச் செய்யும் பொற்பின. நம் நற்றமிழில் தோன்றிய ஒப்பற்ற நூல் எனப் போற்றிப் பயிலத்தக்கது சிவபெருமான் திருவருளால் நம்பிரான் மூலர் நவின்றருளிய திருமந்திரமாலையெனும் தமிழ்மூவாயிர மாகும். நவ ஆகம நூல், முத்தமிழ் வேதம் எனப் போற்றப்படும் திருமந்திரம் ஆதி நூல். முதல் நூல் எனும் சிறப்புடைத்து. திருமந்திரம் என்ற சொல்லுக்கு தெய்வத்தன்மை வாய்ந்த மறைச் செய்திகளைக் கொண்ட நூல் எனப் பொருள் கொள்வர். இதன்கண் ஒன்பது தந்திரங் களும் நூற்றுத் தொண்ணூற்றைந்து உட்பிரிவுகளும் காணப்படுகின்றன.

"மனிதன் காமப் பசியால் உருகி வயிற்றுப் பசியுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்" என்பது கிரீஸ் பழமொழியின் ஒரு துளி. ஐம்பொறி களின் இயக்கங்களால் அலைப்புண்டு அவதியுறும் மனிதனை. ஐம்பொறி களையும் கட்டுக்குள் வைத்து நெறிப்படுத்தி இறையருள் பெற்று, ஆனந்தமாய், பேரானந்தமாய் வீடுபேறு அடையச் செய்வதற்கு வழி காட்டுவது திருமந்திரம். "திருமூல தேவனையே சிந்தை செய்வார்க்குக் கருமூலமில்லையே காண்", "திருமந்திரமே சிவகதிக்கு வித்தாம்" எனும் பாடல் வரிகளும் இதனைப் புலப்படுத்தும். இத்தகு சிறப்புமிக்க திருமந்திரத்தில் சிவபெருமானைப் பற்றிப் பல செய்திகளைத் திருமூலர் கூறியுள்ளார். அவற்றைக் காண்போம்.

**ஒரே தெய்வம் சிவபெருமான்**

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

என மாணிக்கவாசகர் தென்தமிழ் நாட்டிற்குரிய சிவபெருமான் தான் உலகிற்கே (எந்நாட்டவர்க்கும்) இறைவன் எனக் குறிப்பிடுகிறார்.

''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்ற பாடல் வரி மூலம் உலகம் முழுவதும் ஒரே குலம். ஒரே இறைவன் எனவும் அந்த ஒரே இறைவன் சிவபெருமான் தான் என்பதையும்

**''சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனொடொப்பார் இங்கு யாருமில்லை''**

என்ற பாடல் வரிகள் மூலம் சிவபெருமானுக்கு ஒப்பாகக் கூறக்கூடிய தெய்வம் எதுவும் இல்லை. ஆகையால் சிவபெருமானே முழுமுதற் கடவுள், ஒரே கடவுள் என அறுதியிட்டுக் கூறுகிறார் திருமூலர். சிவபெருமானே ஆதி சக்திக்குத் தலைவன், இவ்விறைவனின் தன்மையை யாராலும் அறிய முடியாது என்பதை ''பக்கநின்றார் அறியாத பரமன்'' - எனக் குறிப்பிடுகிறார்.

''சைவம் சிவனுடன் சம்பந்தமாவது'' - என்ற வரியில் சைவர்க்குச் சிவபெருமானே முழுமுதற் கடவுள் எனக் குறிப்பிடுகிறார் திருமூலர். சக்தியை உடலில் பாதி ஏற்று அம்மையப்பராக விளங்குவது சிவபெருமான் ஒருவரே. சைவ சிந்தாந்தமும் சிவனையே கடவுள் எனக் குறிப்பிடு கிறது. ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க'' (திருவண்டப்பகுதி) எனத் திருவாசகத்தில் மாணிக்கவாசகர் இறைவன் ஒருவனே எனப்புகல்கிறார்.

**அன்பும் சிவமும்**

தமிழர்கள் பண்பாட்டின் முக்கிய அம்சமாகத் திகழ்வது அன்பு நெறி. அன்பு என்பது ஓர் இறைத் தத்துவம். 63 நாயன்மார்கள் சிவபெருமானிடம் எல்லையற்ற அன்புடையவர்கள். இறைவன்பால் அன்பால் தம்மைப் பிணைத்துக் கொண்ட காரைக்கால் அம்மையார் பேய் உருக்கொண்டு இறையருளில் திளைத்து நின்றார்.

''எவ்வுயிர்க்கும் அன்பாயிரு'' என்றார் ஔவையார். ஒவ்வொரு உயிரும் அன்புடன் வாழ்தலே சிவபெருமானை வழிபட்டதாகும். ''அன்பே சிவம்'' என்றார் திருமூலர். அன்பு வடிவமாகிய சிவபெருமானை அடைவதற்கு அன்பே தேவையானதாகும். அன்பினில் விளைந்த ஆரமுதான அன்பு வடிவமான சிவபெருமானை அன்புடன், ஆர்வமுடன் வழிபட வேண்டும் என்பதைத் திருமூலர்,

**''ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை**
**ஈரம் உடையவர் காண்பவர் இணையடி''**

எனக் குறிப்பிடுகிறார். ''அன்பல்லாது சிவபெருமானை அடைய முடியாது'' என (274) கூறுகிறார். ''அன்பு செய்வாரை அறிவன் சிவன்'' என்கிறார்.

பிறப்பு இறப்பில் உழலும் பெருமக்கள் தம் உடம்பினுள் மறைந்திருக்கும் மெய்ப்பொருளான சிவபெருமானைக் காண முடியாமல் எங்கெங்கோ தேடி அலைந்து அல்லல்பட்டு வாடுகிறார்கள் (2951) அவர்கள் பிறப்பு இறப்பு இல்லாத சிவபெருமானை வணங்கினால் அஞ்ஞானம் அகலும் என "பிறப்புஇலி" எனத் தொடங்கும் பாடலில் குறிப்பிடுகிறார்.

**சிவமூல மந்திரம்**

காசியில் சிவபெருமானால் நந்தியெம்பெருமானுக்கு உபதேசிக்கப் பட்ட "சிவயநம" சிவவாசகம் என அருளப்படுகிறது. இதன் பொருளே பிரணவம். சிவபெருமானே இதற்குப் பரமாசாரியன். மந்திரங்கள் அனைத்திற்கும் தலையானதாகவும், முதலாவதாகவும் விளங்குகின்ற "சிவயநம" மந்திரம் சிவனை அறிவதற்கு ஆதாரமாய் இருப்பதால் "சிவமூல மந்திரம்" எனப் போற்றப்படுகிறது. செந்தமிழ் பழமறைக் குள்ளே பழுத்து முதிர்ந்தன. "சிவயநம" என்னும் திருவைந்தெழுத்தாகும் எனத் திருமூலர் (திருமந்திரம் 2673) கூறுகிறார். விநாயகப் பெருமான் ஔவையாருக்கு உணர்த்தியதும் பஞ்சாட்சரத்தின் அரும்பொருளேயாகும். வேதம் நான்கினுக்கும் உண்மைப் பொருளாக விளங்குவது சிவனது "நமசிவாய" மந்திரமே எனத் திண்மையாகக் கூறுகிறார் திருஞான சம்பந்தர். திருநாவுக்கரசர் சமணர்களது துன்புறுத்தல்களிலிருந்து மீள "நமசிவாய" மந்திரத்தையே நாடினார். "நமசிவாய" பதிக்ங்கள் பாடியருளினார் சுந்தரர். அவர்

"நற்றவா உனை நான் மறக்கினுஞ்
சொல்லுநா நமச்சிவாயவே"

எனப் பெருமிதத்துடன் கூறுகிறார்.

திருவாசகத்தின் ஆரம்பமே "நமசிவாய வாழ்க" எனத் தொடங்கிய மாணிக்கவாசகர் திருவைந்தெழுத்தாகிய "நமசிவாய" மந்திரத்தை ஓதவும் உணரவும் என்ன தவம் செய்தேன் என உள்ளம் உருகிக் கூறுகிறார்.

"ஐந்தெழுத்தும் சோராமல் எப்பொழுதும் சொல்" அதுவே உய்வுறவழி எனத் திட்டவட்டமாக எடுத்துரைக்கிறார் நக்கீரர்.

"நமசிவாய பொருளாளனே" எனப் புகழ்கிறார் அருணகிரிநாதர். வள்ளலார் பெற்ற தாயை மகன் மறந்தாலும், பிள்ளையைத் தாய் மறந்தாலும் கண்கள் இமைப்பதை மறந்தாலும் "நமசிவாய" மந்திரத்தை நான் மறவேன் என இயம்புகிறார். சிவவாக்கியர் ஐந்தெழுத்து மந்திரத்துள் அனைத்தும் அடங்கும் என இயம்புகிறார். சிவசங்கர சங்கிதையில் சிவபெருமானின் பெருமையையும் ஐந்தெழுத்து மந்திரத்தின் அருமையையும் கச்சியப்ப சிவாச்சாரியார் விளக்குகிறார். திருமூல நாயனாரோ

அனைத்திற்கும் மேலாக ஐந்தெழுத்தால் சிவபெருமானின் திருவருள் பெற்று உய்யலாம் (2657) என்றும், திருவைந்தெழுத்தின் பெருமை உணராதவர்கள் ஆணவ வல்லிருளாகிய இராவினை மாற்றும் வன்மை யுடையவர் ஆவாரோ? ஆகார் (2658) என விளம்புகிறார்.

''நமசிவாய'' எனும் பஞ்சாட்சர மந்திரமே பிறவி எனும் பெருங் கடலைக் கடந்து பேரானந்த வெள்ளத்தில் திளைத்துப் பெருநிலை அடைவதற்கான மூலமந்திரமாகும். இம்மூலமந்திரம் நம் பாவங்கள் அனைத்தும் போக்கி, துன்பங்களைத் துரத்தி, எல்லா நலன்களையும் கொடுத்து இன்ப மயமான வாழ்வை நல்கும் என்பதில் ஐயமில்லை.

**சிவபெருமானின் வீரச்செயல்கள்**

திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரத்தில் ''பதிவலியில் வீரட்டம்'' எனும் தலைப்பில் இறைவனே மறக்கருணை காட்டி ஆட்கொள்ள மேற்கொண்ட எட்டு வீரச்செயல்களை விளக்குகிறார் திருமூலர். அந்தகாசுரனை அழித்த வரலாறு (339) மூலம் அவதியுறுங்காலத்து ஆன்மாக்களுக்கு அடைக்கலத்தானம் அரனே என அறிவிக்கிறார். தக்கனைத் தண்டித்ததும் அருள் செய்ததும் ஆகிய இரண்டையும் (340) கூறி இறைவனுடைய நிக்கிரகானுக்கிரகத் தன்மையை விளக்குகிறார். பிரமனின் சிரம் கொய்து செருக்கடக்கிய வரலாறு மூலம் (341) படைத்தும் காத்தும் தொழில்புரியும் கடவுளரும் சிவன் ஏவல் வழி நிற்பர் என்றலின் சிவனே முழுமுதற் கடவுள் என உணர்த்துகிறார். சலந்தரனை வென்ற இறைவனது வீரம் உணர்த்தி (342) மலபரிபாக காலத்து இறைவனே எழுந்தருளிவந்து மறக்கருணை காட்டி ஆட் கொண்டும் தன்னடிக்கீழ் வைப்பன் என்ற மெய்ப்பொருள் உணர்த்து கிறார். திரிபுரம் எரித்த வரலாற்றில் தத்துவமாகிய (343) மலமாதி முப்புரங்கள் இன்றும் எம்முயிரைப் பந்தித்து நிற்கின்றன. யான் அன்பு செய்கின்றேன். அரன் அவற்றை அழித்தருளுகின்றான் என்று உணர்த்து கின்றார். இறைவன் யானையை உரித்துப் போர்த்தியதை அறிவிக்கும் வரலாறு மூலம் (344) யானைத் தோலைப் போர்த்தும் அழியாமையால் இறைவனுடைய நித்தியத்துவம் பெறப்பட்டது. காலனை வென்றதன் தத்துவம் (345) மார்க்கண்டேயராகிய உயிர் சிவத்தோடு யோகமாக இருந்தமையே என்பதுணர்த்தியது. இறைவன் காமனைக் கொறுக்கையில் அழித்த வரலாற்றின் குறிப்பு (346) பற்றும் சிந்தையை நிறுத்தல். இதுவே யோகம், யோக மூர்த்தியாகவே இறைவன் கொறுக்கை எனும் தலத்தில் இருந்தார் என்பதாம். இவ்வெட்டுப் பாடல்களிலும் சிவபெருமானின் வீரமும் பெருமையும், வீரச்செயல்களில் அடங்கிய தத்துவங்களையும் திருமூலர் விளக்குகிறார்.

## சிவபெருமான் வரலாறு உணர்த்தும் உண்மைகள்

திருவருளால் அருட்குறியாகிய சிவலிங்க வடிவைத் தாங்கி எழுந்தருளிய இறைவனது தொன்மையான வரலாற்றைக் கூறுவது இலிங்கபுராணம். திருமூலர் இரண்டாம் தந்திரத்தில் (3) லிங்கபுராணம் எனும் தலைப்பின் கீழ் திருவருட்சத்தி இறைவனைப் பூசித்த வரலாறு உணர்த்தி (347) இறையடிசேர் ஞானத்தை அடைவிப்பது பத்திநெறி யொன்றேயென உணர்த்துகிறார். திரிபுரத்தை எரித்த இறைவன் பரிவொடு நின்று அருளும் செய்வார் என்பதை (348) பகைவர்க்கு அரியனாயினும் அன்பர்க்கு எளியன் என்பதை உணர்த்துகிறார். இறைவன் அரிபிரமாயர் கட்கு அருள் செய்தமையையுணர்த்தி (349) அரியும், அயனும் தாமே பெரியர் எனப் பொருதகாலத்து இருவர்க்கிடையே தீப்பிழம்பாய் நின்று சிவபெருமான் (அண்ணாமலை) அருள் செய்கிறார். இராவணற்கு அருள் செய்தமையை இயம்பி (350) கயிலைமலை இவனால் தாங்கக் கூடாததாக இருந்தது என்ற உண்மையை உணர்த்துகிறார். சண்டேசருக்கு அருள் செய்தமை மூலம் (351) இணையீடற்ற அன்பை இறைவன் மீது செலுத்துவோர்க்கு இணையற்ற பதவியை இறைவன் நல்குவார் என உணர்த்துகிறார். தேவர்கள் வருத்தத்துடன் வந்து விண்ணப்பிக்க இறைவன் அருள் செய்தமையை அறிவித்துத் (352) தன்முனைப்பு அடங்கி இறைவனை நாடி "நமசிவயாநம" எனக் கும்பிடுவோர் முன் சிவம் வெளிப்படும் என்பதையுணர்த்துகிறார்.

## சிவபெருமானின் லிங்க வடிகம்

சிவபெருமானுக்கு 64 உருவ வெளிப்பாடுகள் உள்ளன என சிவாகமம் கூறுகிறது என்றாலும் சிவபெருமான் பொதுவாக லிங்க வடிவிலேயே பெரும்பாலும் வணங்கப்படுகிறார். திருமூலர் கூறும் பல லிங்க வடிவங்கள் பற்றிக் காண்போம்.

ஏழாம் தந்திரத்தில் **அண்டலிங்கம்** எனும் தலைப்பில் திருமூலர் உலகே சிவம். சக்தியின் துணை கொண்டு சிவன் இவ்வுலகைப் படைத்தான். இன்பம் முதல் வீடுபேறு வரை நல்குபவன் சிவனே. சிவன் அண்டங்களைக் கடந்து நின்று காக்கின்றான் என்ற உண்மையைத் தேவர்கள் கூட அறியார். கண் ஒளி போலவும், உணர்வைப் பெருக்கும் சந்திர ஒளி போலவும் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து விளங்கு கிறான் சிவன். சிவபெருமான் தாபித்த இலிங்கத்துள் நின்று அருள வல்லவன். கருவறையின் மேல் விளங்கும் விமானம் பருலிங்கம். அதனுள் உள்ள சிவலிங்கம் நுண்மையுடைய லிங்கம், பலிபீடம் பத்திரலிங்கம் எனக் கூறுகிறார்.

முத்துடன் மாணிக்கம், பவளம், செதுக்கப்பட்ட மரக்கொம்புகல், திருநீறு, மரகதம், சிவாகமம், சாதம், அரிசி என்பவையும் மலர், மணல்

என்பவையும் சிவலிங்கம் அமைத்தற்குரியவையாகும். இறுகிய தயிர், தூய நெய், பால், பசுஞ்சாணம், விளக்கிய செம்பு, அக்னி, பாதரசம், சங்கு, நன்கு வெந்த செங்கல், அழகிய வில்வம், பொன் முதலியவை கொண்டும் சிவலிங்கம் அமைத்து வழிபடலாம். படிக லிங்கத்தை அந்தணரும், பொன் லிங்கத்தை மன்னரும், மரகத லிங்கத்தை வணிகரும், வாணலிங்கத்தை வேளாளரும், வழிபடற்குரிய லிங்கங்களாகக் குறிப்பிடு கிறார். இறைவன் மண், நீர், தீ, காற்று, வான், கதிரவன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டிலும் கலந்துள்ளான். இதை உணர்ந்த சீவனின் உடலையும், தன்னைத் தேடுபவர் உள்ளத்தையும் கோயிலாகக் கொண்டவன். ஆதி பகவனான சிவன் அண்டத்தை திருமேனியாகக் கொண்டு விளங்கும் தன்மையன். இதுவே அண்டலிங்கத்தின் பெருமையாகும்.

பிண்டலிங்கம் எனும் தலைப்பில் திருமூலர் உடலின் வடிவமே லிங்கம். உடல் சதாசிவத்தின் வடிவத் திருமேனி, உடலளவு கூத்தப் பிரானின் கூத்தே ஆகும். ஐம்பூதத் தலைவர் சிவனை வணங்கினால் உடல் அழிந்தாலும் அழியாது சிவன் நம் உள்ளத்தில் புகுந்து நம் உடலை இடமாய்க் கொண்டு அருள் செய்வான். பெருமையையுடைய இறைவன் இவ்வுடலை அவன் விளங்குதற்கு ஏற்ற கோயிலாகக் கொண்டு நாடிகள் பத்தும் இயங்கச் செய்தான் என நவில்கிறார்.

சதாசிவலிங்கம் எனும் தலைப்பில் உலக முதல் சிவம் சதாசிவலிங்கம். ஆருயிர்கள் அன்பினால் வந்து கூடி இன்புறுதற்பொருட்டு அமைந்த திருவடிகள் இரண்டு. புகழ்ந்து கூறப்பட்ட திருக்கைகள் பத்து. நாடும் திருமுகங்கள் ஐந்து. கண்கள் பதினைந்து. இத்தனையும் கொண்டு விளங்கும் சதாசிவன் நல்ல திருவருள் ஒளியாகிய முத்தாகும். சதாசிவம் சிவத்தின் ஆணையினை உருவ வடிவு கொண்டு நான்முகன் முதலிய நால்வகையையும் கொண்டு ஆதார சக்தியுடன் அகலாமல் விந்து நாதங்களைத் தொழிற்படுத்தும். மேலும் சிவனின் அண்ட கோசத்தில் ஒளியாய் விளங்கும். அண்டகோசமே சதாசிவனின் அறிவு நிலையம். சமயத்தில் காணப்படும் உருவத்திற்கும், காணப்படாத அருவத்திற்கும் இடையே சதாசிவ நிலை இருக்கின்றது. சதாசிவமூர்த்தியின் உருவத் தோற்றம், அவர் சக்தியுடன் கலந்து உலகமாய் விளங்குதல், உருவமும் அருவமுமாய் ஆகும் சதாசிவம். இவரை உள்ளத்தில் இருத்தி வழிபட வேண்டும். தலையிலிருந்து திருவடி வரை துதிக்கவேண்டும். மேலும் குண்டலினி சத்தி, சிவனின் ஐந்து சக்திகள், சதாசிவம் விளங்கும் விதம். அவரே பஞ்சப்பிரமம் ஒன்பது நிலைகளிலும் பொருந்தி விளங்குதல், உடம்பிலும் உயிரிலும் சிவன் கலந்து உடன் நிற்றல். அவனே நாதமாய் விளங்குதல், உடலில் சந்திரமண்டலம் விளங்க உதவுதல், உடலை ஒளிப் பிழம்பாய்க் கண்ட ஞானியர் சிவமாதல், அகரம் உகரம் சேர்ந்தது சதாசிவ

நிலை, அகர, உகர, மகர, விந்து நாதமாகிய பிரணவம் ஆகியவற்றைப் பற்றி விரிவாக விளக்குகின்றார் திருமூலர்.

ஆன்மலிங்கம் எனும் தலைப்பில் உயிர்சிவம். உயிரே சிவலிங்கமாதல், சிவசக்தி வடிவம் அகரம், உகரம், நாதம் விந்து கலப்பே. ஆன்மலிங்கம், தாவரங்களின் சக்தி சிவமே. ஆன்மா அண்ட கோசத்தின் உச்சியில் உள்ளது. ஆன்மாவிடம் பொருந்திய விந்தும் நாதமுமே ஆன்மலிங்கம். முப்பத்தாறு தத்துவங்களே அது. ஆன்மாவான சதாசிவ லிங்கத்திற்கு அடிப்பகுதியாவது ஆன்மதத்துவம். கண்டம் - வித்யா தத்துவம். பாணம் - சிவதத்துவம், சிவசத்தி விளங்கும் இடம், மனத்துள் விளங்கும் பேரொளியே ஆன்ம லிங்கம், உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவனே உலக நாதன். அவனை நான் என்றும் வீணங்கிக் கொண்டிருப்பேன் எனத் திருமூலர் விவரிக்கின்றார்.

ஞானலிங்கம் எனும் தலைப்பில் உணர்வே சிவம். அச்சிவம் வேண்டியவற்றை வேண்டியாங்கு அளிப்பவன், நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுவரன் ஆகிய நால்வரும் உருவம், நாதம், விந்து, சக்தி, சிவம் ஆகிய நால்வரும் அருவம் உடையவர்கள். நடுவேயுள்ள சதாசிவம் அருவுருவமாய் உள்ளதால் இவ்வொம்பது வகையும் பரசிவமே ஆகும். சதாசிவம் அருள்வார். வினைநீங்கும் சதாசிவத்திடம் பராசக்தி பொருந்தியுள்ளாள். சதாசிவ நிலையைக் கடந்து சிவம் விளங்குதல், சத்திக்கு மேல் அருவமாய் நிராதார கலைகளே ஞானலிங்கம் விளங்குமிடம், சிவசத்தியை உணர்தலே ஞானம், 'சீவனைச் சிவன் உறையும் கோயிலாக மாற்றுதல், சிவத்தின் உரு சத்தி என்பனவற்றை விளக்கிக் கூறுகிறார் திருமூலர்.

சிவலிங்கம் எனும் தலைப்பில் சிவலிங்கம் என்பது சிவகுருவாகும். பரந்து விரிந்து விளங்கும் சிவனை ஒரு குறியில் வைத்து வணங்க இயலாது. சிவனின் நாமத்தைக் கூறுபவரிடம் அவன் நீங்கான், சிவன் அருள்வான், ஒன்பது வடிவமாய்ப் பயன்களைத் தருகின்ற லிங்கமே மேலான சிவமாகும். சிவகதி உண்டாகும் முறை ஆகியவற்றை விளக்கிக் கூறுகிறார் திருமூலர்.

## சிவபெருமான் அருளிச் செய்த ஆகமங்கள்

திருமூலர் இயற்றிய திருமந்திரத்தின் முதல் தந்திரத்தில் மூன்றாவதாக "ஆகமச் சிறப்பு" என்றீ பகுதியில் ஆகமங்கள் பற்றிய பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன. அதில் "அஞ்சனமேனி அரிவை ஓர்பாகத்தான்" (57) எனத் தொடங்கும் முதற்பாடலில் சிவபெருமான் அருளிச் செய்த ஆகமங்கள் இருபத்தெட்டு என்றும், அவற்றை அறுபத்து அறுவர் சிவபெருமானை வணங்கி அவனது மேன் முகமாகிய ஈசான முகத்தின்

வழி கேட்டுணர்ந்தனர். அவற்றுள் கூறப்படுவதே அரும்பொருள் என்றும் குறிப்பிடுகிறார் திருமூலர். மேலும் ஆகமங்கள் ஆன்மாக்கள்மீது கொண்ட கருணையால் இறைவன் உரைத்தருளியவை என்றும், அவை அறத்தை உரைப்பன என்றும், ஆகமம் கூறும் பொருளைப் பதினெட்டு மொழிகளையும் அறிந்த அறிஞரே உணரமுடியும் என்றும், சிவபெருமான் ஆகமத்திலே அறிவாய் விளங்குகின்றான் என்றும், முக்கியமான ஒன்பது ஆகமங்களும் பரசிவத்திடமிருந்து நந்தியெம்பெருமான் வழியாகப் பெற்றவையென்றும் சிவபெருமான் ஆகமப் பொருளை ஊழிக்காலத்தில் பராசக்திக்கு அருளினான் என்றும் ஆகமப் பொருளை இறைஞானம் கொண்டு அறிதல் வேண்டும் என்றும், சிவனை ஆகம அறிவால் அறிய இயலாது என்றும் விளக்குகிறார்.

**சிவபெருமானை அடைவதற்குரிய நெறிகள்**

திருமூலர் மூன்றாம் தந்திரத்தில் அட்டாங்க யோகம் பற்றிக் குறிப்பிடுகிறார். இது இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு உறுப்புகளை உடையது. இவை இறைவனை அடைவதற்கு உரிய நெறிகளாகும். அட்டாங்க யோகநெறியில் பொருந்தியவர்க்கு ஞானயோகம் வாய்த்துச் சிவப்பேறு பெறலாம். இதில் இயமமாவது புலனடக்கம், தீயவற்றிற் மனஞ்செல்லாது கட்டுப்படுத்துதல், பெருமையிற் சிறந்தவனாகிய சிவபெருமான் இயமநிலையினைத் திருவருளிற்றோய்ந்த சனகாதியர் நால்வருக்கும் அருளினான். "கொல்லான் பொய்கூறான்" (554) எனும் பாடலில் ஒருயிரையும் கொல்லாதவனும், பொய் கூறாதவனும், திருடாதவனும், எண்ணத் தக்க குணங்களையுடையவனும், நல்லவனும், அடக்கமுடையவனும், நடுவுநிலை நிற்றலை உடையவனும், எல்லோர்க்கும் பகுத்துக் கொடுத்து மீதியைப் பின்பு தான் உண்பவனும், குற்றமற்றவனும், கள்காமம் என்ற இத்தீய குணமில்லாதவனும் ஆகிய இவ்விலக்கண முடையானே இயமத்தான் எனக் குறிப்பிடுகிறார்.

நியமம் என்பது நல்லவனவற்றைச் செய்தல். நியமத்தான் சிவசக்தியின் இயல்பை உணர்ந்து ஒழுகுதல் வேண்டும். நியமத்தில் நிற்பவன் தூய்மை, அருள், சுருங்கிய உணவு, பொறுமை, நேர்மை, உண்மை, உறுதியுடைமை ஆகியவற்றை வளர்த்தலும், காமம், களவு, கொலை ஆகியவற்றை தீயவை என ஒதுக்கலும் என்ற பத்தையும் மேற்கொண்டு நிற்றல் வேண்டும். மேலும் நியமத்தை மேற்கொள்பவன் தவம், செபம், மகிழ்ச்சி, தெய்வ நம்பிக்கை, கொடை, முப்பொருள் உண்மை, கேட்டல், வேள்வி, சிவபூசை, பேரொளி தரிசனம் என்ற பத்துச் செயல்களையும் கடைப்பிடிக்க வேண்டும் என நியமம் பற்றி விளக்கிக் கூறுகிறார் திருமூலர்.

ஆதனம் என்பது ஆசனம் அல்லது இருக்கை எனப்படும். இங்கு யோகத்தை மேற்கொள்வதற்குமுன் இருக்க வேண்டிய இருக்கைநிலை, அவற்றால் உண்டாகும் பயன்கள் பற்றிக் கூறுகிறார் திருமூலர். பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சௌத்திரம், வீரம், சுகாதனம் என்ற ஏழு ஆசனங்கள் மேலானவை. பழமையானவை. இவற்றுடன் நூற்று இருபத்தாறு ஆசனங்கள். இவற்றின் மேலுள்ள ஆசனங்களும் உண்டு. பங்கயம் என்பது பத்மாசனம். குக்குட ஆசனம் கோழி போன்றது. சோர்வு இல்லாமல் "சுவத்திகம்" என்ற சுகாசனத்தில் பொருந்தி இருக்கத் தக்கவன் தலைவன். கோமுகாசனம் பசுவின் முகம்போல விளங்கும். இந்த ஆசனங்களை முறைப்படிச் செய்வதால் உடல் ஆரோக்கியம் சிறக்கும்.

பிராணாயாமம் என்பது பிராணனைக் கட்டுப்படுத்துவது. இது பலவகையுடையது. ஏதேனும் ஒரு ஆசனத்தில் இருந்து பிராணாயாமம் செய்தல் வேண்டும். பிராணாயாமம் செய்யக் குருவருள் தேவை. பிராணாயாமம் செய்வதால் பிராண செயம் உண்டாகும். சோம்பல் நீங்கிச் சுறுசுறுப்பு உண்டாகும். பிறவி நீங்கும் இளமையுடன் இருக்கலாம். இடகலை வழியாகப் பூசித்தால் சிறப்பு உண்டாகும். கும்பகம் செய்யும் முறையை மேற்கொண்டால் நீண்ட காலம் வாழலாம். அதனால் அருள் உண்டாகும். காலனைக் கடக்கலாம். உடம்பில் மாற்றம் உண்டாகும். திருவைந்தெழுத்து வடிவம் பெறலாம். துரிய புவியில் இருக்கலாம் எனத் திருமூலர் கூறுகிறார்.

**பிரத்தியாகாரம்**

வெளியே செல்லும் உள்ளத்தை உள்ளே நிறுத்திப் பழகுதலே பிரத்தியாகாரம் ஆகும். இஃது அடயோகம், இலய யோகம், நியமம், ஆசனம், இலம்பிகாயோகம், மந்திர யோகம், இராஜ யோகம், சிவயோகம் எனப் பலவகைப்படும். பிரத்தியாகாரப் பயிற்சியில் ஈடுபட்டு மனத்தை மந்திரத்தால் உள்ளிழுத்துப் பழகி மனதை உள்ளொளியில் நிறுத்தினால் உடல் அழியாதிருக்கும். உடலில் ஆனந்தப் பரவசம் உண்டாகும். காலத்தை வெல்லலாம். இறவாத் தன்மை அடையலாம், பழம் பொருளான சிவனை உணரலாம் எனத் திருமூலர் விளக்குகிறார்.

**தாரணை**

பிரத்தியாகாரப் பயிற்சியால் உள்ளுக்கு இழுத்த மனத்தை நிலை பெறும்படிச் செய்தல். அவ்வாறு தாரணை செய்தால் வாழ்நாள் வளரும், ஒலியுடன் கூடிய ஜோதியைக் காணலாம். இளமைத் தன்மை உண்டாகும், ஒளி பெற்றுப் பல்லாண்டு வாழலாம். கால எல்லையைக் கடக்கலாம். பிராணனைச் செலுத்திச் சோதியை அறியலாம். ஐம்பொறிகளையும் அடக்கி மனம் என்ற குரங்கைக் குறும்பு செய்யாமல் இருக்கச் செய்யலாம்.

நிலைத்திராத உடலை நிலைப்படுத்திக் கொள்ளலாம் எனக் கூறுவதுடன் ஆன்மா சிவனோடு பொருந்தி நிற்பதே தாரணை என்றும் கூறுகிறார்.

**தியானம்**

இடைவிடாமல் நினைந்த வண்ணம் இருத்தல் தியானம். சத்தியை எண்ணுவது பரத்தியானம், ஒளியுடைய சிவனை எண்ணுவது சிவத்தியானம் எனத் தியானம் இருவகைப்படும் என்றும், சிவனைச் சிந்தைக்குள் வைத்துத் தியானம் செய்ய வேண்டும் என்றும், தியானத்தின் போது புருவ நடுவில் பார்வை இருக்க வேண்டும் என்றும், அவ்வாறு தியானத்தை மேற்கொண்டால் பரம்பொருள் பேரொளி காட்டி மனத்தை மிகழ்விப்பார். பெருவெளியில் பேரொளியைக் காணலாம். சிவமாகிய சோதி நீங்காது, மன உறுதியுடன் தியானம் செய்வோர்க்குக் கடல், மேகம், யானை ஆகியவற்றின் ஓசையும், வீணையின் நாதமும், சங்கொலியும் கேட்கும். மேலும் நாதத்தில் இறைவன் விளங்குகிறான் என்பது விளங்கும். நீலகண்டப் பெருமாள் நாத முடிவில் உள்ளமை விளங்கும். பொன்னொளி யில் விளங்கும் இறைவன் திருவடியைச் சேரலாம். வெண்மையான ஒளி தெரியும். உடல் அழியாதிருப்பர். ஆன்ம தரிசனம் செய்யலாம், இருள் நீங்கி இன்பம் எய்தலாம் எனப் புகல்கிறார்.

**சமாதி**

சமாதி எனும் தலைப்பில் உயிரும் இறைவனும் ஒன்றி நிற்றலே சமாதி என்றும் அந்நிலையில் பேரொளியைக் காணலாம். மனமும் பிராணனும் அடங்கும். காலன் என்ற சொல் கனவிலும் இல்லை. சிவக்கனி யுடன் இருக்கலாம். சமாதி நிலையில் சிவனுடன் கூடியிருக்கலாம். திங்கள் மண்டலத்தில் சிவமாய் இருக்கலாம். நடுவுநிலைமை தானே வந்து சேரும். சிவமும் சத்தியும் உள்ளே விளங்கும் மலம் அற்ற ஆன்மாவும் சமாதியில் ஒன்றே. தான் எனவும் சிவம் எனவும் வேறுபாடாக எண்ணாத வர்க்குச் சமாதி தேவையற்றது என்பனவற்றை விளக்கிக் கூறுகிறார்.

திருமூலர் கடவுள் வாழ்த்தில் "ஒன்று அவன் தானே" எனத் தொடங்கும் முதற் பாடலில் ஒரே பொருளான சிவபெருமானே இனிய சத்தியுடன் இரண்டாய் உள்ளவன். நான்முகன், திருமால் என்று மூன்று நிலையில் நிற்பவன். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் உணர்ந் தவன். மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளையும் வென்றவன். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாதகம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களில் விரிந்தவன். அதற்கு மேல் ஏழாவதான சகசிரதளத்தில் விளங்குபவன், நிலம், நீர், காற்று, தீ, வான், கதிரவன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டுப் பொருள்களையும் உணர்ந்து அவற்றில் கலந்து விளங்குபவன் என்று பாடுகிறார். சிவபெருமான் ஒருவனே மாதொருபாகனாய் அட்டமூர்த்தமாய் விளங்குகிறார். அத்தகு சிறப்புடைய ஒரே தெய்வமான சிவபெருமானை வழிபட்டு உயர்வடைவோமாக.

# 29. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

செல்வி ப. கௌரி, சென்னை.

பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையான திருமந்திரம் திருமூலரால் இயற்றப்பட்டது. இத்திருமுறை ஒன்றே தோத்திரமாகவும் சாத்திரமாகவும் விளங்கும் பெருமையுடையது. இவ்விரண்டு இயல்பும் பொருந்திய நூல்வேறு இல்லாமைக் குறிக்கத்தக்கது. இது திருமந்திரத்தின் தனிச்சிறப்பாகும். ஏனைய திருமுறைகளைத் தோத்திர நூல்களாகக் காண்கிறோம்.

**திருமூலர் பெயர் காரணம்**

திருமூலநாதர் என்னும் பெயர் திரு, மூலர், நாதர் என்னும் மூன்று சிறப்பு மிகுந்த சொற்களின் சேர்க்கையாகும். 'திரு' என்பது சிறப்பினைக் குறிக்கும் அடையாகும். இச்சொல் இலக்குமி, செல்வம், சிறப்பு, அழகு, பொலிவு, தெய்வத்தன்மை, நல்வினை முதலிய பொருள்களைக் குறிப்பதாகக் காணப்படுகிறது.

உரையாசிரியர்களில் சிறந்த பேராசிரியர் திருக்கோவையார் என்னும் நூலுக்கு உரை எழுதும்போது 'திரு' என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை எனக்குறிக்கின்றார். திரு என்பது தெய்வத் தன்மை பொருந்திய அல்லது வணக்கத்திற்குரிய எனப்பொருள் கொள்வது தகும். ஆகவே இறைவனைப் பற்றிப் பாடிய நூல்களை 'திரு' என்னும் சொல் சேர்த்து உரைத்தனர். சேக்கிழார் சுவாமிகள் இந்நூலைக் குறிப்பிடுங்கால்,

"ஊனுடம்பிற் பிறவியிடம் தீர்ந்துலகத் தோர்உள்ள
ஞானமுதல் நான்கு மலர் நற்றிரு மந்திரமாலை"

என்று கூறுகின்றார். திருமூலரே தன் வரலாறு கூறும் வகையில்,

"மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை
உறைப்பொடுங் கூடிநின்று ஓதலு மாமே"

எனக் குறிப்பிடுவது கொண்டு, இந்நூலின் இயற்பெயர் திருவெனும் அடையடுத்த 'மந்திரமாலை' என்பதாகும். அதுவே 'திருமந்திரம்' எனச் சுருங்கிய வடிவில் நாடறி நற்பெயராக அமைந்தது.

மந்திரம் என்னும் சொல் தமிழில் 'தவத்தோர் மறைமொழி' என்னும் பொருளில் அமைந்துள்ளது. இதனை,

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'

என்று தொல்காப்பியத்திலும் மந்திரம் என்னும் சொல்லை விளக்கியுள்ளார்.

**திருமூலர்**

திருமூலர் ஒரு சிவயோகி. இவர் நந்தியினிடத்து உபதேசம் பெற்றவர். தமிழகத்தில் ஒரு ஞான பரம்பரையினை உருவாக்கியவர்.

பெரிய புராணத்தில் குறிப்பிடும் திருமூலர் கதையில், ஆடுமேய்க்கும் மூலன் என்பவனால் தன் உடலை இழந்தார். திருமறைப் பொருளைத் தெள்ளிய தமிழில் எடுத்துச் சொல்வதற்காகவே இறைவன், அந்தப் பழைய உடலை இவ்வாறு மறைந்தருளினான். இதை ஞான உணர்வால் தெரிந்து கொண்ட முனிவர் இடையனாகவே நடந்து சென்று திருவாவடு துறைக்கு வந்தார். தெய்வத்தன்மை பொருந்திய ஒரு படர் அரச மரத்தை அங்கே கண்டார். அதன் அடியில் அமர்ந்து சிவயோகத்தில் கண் இமை களை மூடினார். ஓராண்டு கழித்துக் கண்களைத் திறந்து ஒரு பாடலை அருளினார். இப்படி மூவாயிரம் பாடல்கள் அருளியவர். பதி, பசு, பாசம் என்ற மூன்றின் அடிப்படையில் சிவபெருமானின் அருட்பெறும் செயல் களை விளக்கிக் கூறியவர். இவரது பாடல்கள் இனிய எளிய தமிழில் அமைந்திருப்பதும், இவரது பக்திச்செறிவும் போற்றத்தக்கது.

திருமூலர் குறிக்கும் சைவம் 'ஆகமாந்தம்' எனப்படுவது. இதைச் சித்தாந்த சைவம் எனக் குறிக்கலாம். இச்சைவ முறை கி.பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளில் சிறப்புற்றிருந்தது எனத் தெரிகின்றது என டாக்டர் இராசமாணிக்கனார் அவர்கள் குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

திருமூலர் என்ற பெயர் தமக்கு இடையில் வந்தது என்று வேறொரு பாடலில் குறிப்பிடுகிறார்.

"நந்தித அருளாலேநாதனாம் பேர் பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவது என்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்டி நானிருந்தேன்"

இந்தப் பாடலில் மூன்று உண்மைகளைத் தெரிவிக்கிறார். அதாவது மூலனை நாடியது, அதற்கு முன்னால் நாதன் என்ற பட்டம் பெற்றது. மூலனை நாடியபின் இது நந்தியருள் என்று நந்தி வழிகாட்ட மூலனாகவே இருந்தது என்பன.

**தமிழில் ஆகமங்கள்!**

> "மன்னு மாமலை மகேந்திர மதனில்
> சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்,"

என்று பாடுகிறார் மணிவாசகர். எனவே யோகிகளுக்கு ஆகமத்தை இறைவன் தான் உபதேசித்தான். எந்த மொழியில்? என்றால் இங்கு ஒன்றை நினைவில் வைத்தல் வேண்டும். மொழி என்பது ஒரு கருவி. கருவியின் துணையில்லாமல் செயல்பட முடியாதவர்கள் நாம். கருவி கரணங்களின் துணை வேண்டாதவன் இறைவன். அதனால் தான் ஆலமர நிழலில் தென்முகக் கடவுளாய் சனகாதியர் நால்வருக்கு உபதேசம் செய்த போது இறைவன் மௌன உபதேசம் செய்ததாக வரலாறு கூறுகிறது.

> "நன்னல மைந்தர்கள் ஞானபோதகம்
> சொன்னடை யன்று' என்பது கந்த புராண வாக்கு"

"சொல்லாமல் சொன்ன வரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்லாம்" என்பது திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதியார் வாக்கு. இன்னும் 'மோன ஞானமது உணர்த்தியே' என்று பாடுவார் தாயுமானவர்.

"சொற்பிரிவு இலாத மறைபாடி நடமாடுவர்" என்பது ஞானசம்பந்தர் வாக்கு. "சொல்லே அதற்கு உரிய எழுத்துக்களே இல்லாத மறையை இறைவன் பாடியருளினான்" என்பது சம்பந்தர் பாடலின் பொருள்.

> "கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனும் இல"

நமது வாழ்நாளில் சிவனின் அருளைப் பெற மேற்கொள்கின்ற விரதமும், அதன்மூலம் நாம் பெறும் சிவன் அருளும், உடலின் ஒரு கூறினைப் போன்றது, நமது உடல் வீழ்ந்தால் உள்ளிருந்த உயிர் வெளிப்படும். வெளிப்பட்டால் மீண்டும் அதனுள் புகாது. இதனை,

> "முப்பதும் முப்பதும் முப்பத் தறுவரும்
> செப்ப மதியளுடைக் கோயிலுள் வாழ்பவர்
> செப்ப மதியளுடைக் கோயில் சிதைந்த பின்
> ஒப்ப அனைவரும் ஒட்டெடுத் தார்களே"

எனவரும் பாடல் வரியின் மூலம் உடல் இழந்தவுடன் இத்தத்துவங் களும், தாத்துவீகங்களும் விரைந்து நீங்கும்.

**தவம்**

சிவனிடத்தில் மனதைச் செலுத்தி நிலைபெற்ற உத்தமர்களின் உள்ளமானது, உலகிலுள்ள எத்தகைய துன்பத்தையும் கண்டு அஞ்சுவ

தில்லை, அத்தகையவர் எமனுக்கும் பயப்படுவதில்லை. அவர்களுக்குத் துன்பமும் இல்லை, இரவு பகல் என்ற வேறுபாடும் இல்லை. பிற பொருளின் மேல் பற்று நீத்தவர்க்கு விளைகின்ற பயன் வேறொன்றும் இல்லை.

இதற்கு "நாமார்க்குங் குடியெல்லாம் நமனை அஞ்சோம்" என்ற திருநாவுக்கரசர் வாக்கும் காண்க."

துன்பமான உலகில் துன்பமற்று இன்பமாய் வாழ இறைவன் துணையே உற்றதாகும்.

"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் இல்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே"

இடைவிடாது இறைவனை எண்ணித் தவம் புரிபவர் இம்மையில் நல்ல இன்பம் பெறுவர். பல வகையாகப் பொருளீட்டும் முயற்சி யின்றிப் பிச்சை எடுக்கின்ற மனிதர்கள் பிறப்பின் நோக்கத்தை அறிய மாட்டார். ஆனால் இறைவனை மறவாது பெரிய தவத்தைச் செய்பவர்கள் இப்பிறப்பில் சிறப்போடு வேண்டிய செல்வத்தைப் பெறுவர். மேலும் பிறப்பினை நீக்கும் பெருமையும் பெற்றவர் ஆவர்.

"பிறிப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே"

என தன் பாடலில், இறைவனைப் பற்றிக் கொண்டால் வீடுபேறு அடைவோம் என பாடுகிறார்.

**தத்துவம்**

உண்மையை உணர்த்தும் நூல்களின் கருத்துக்களை அறிந்து அடங்கினால் ஓதலும் வேண்டா. அங்ஙனம் அறிந்து மெய்ப் பொருளோடு கூடினால் நாத சம்மியமும் தேவையில்லை. இவ்வாறு நின்றவர் மனம் அசுத்தமில்லாது, சுத்தம் செய்யும் காரியம் வேண்டாம் என வாழ்வின் தத்துவங்களை தன் பாடலினால் உணர்த்துகிறார்.

"கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே"

**சைவம்**

சுத்த சைவமாவது, சடங்குகளில் நில்லாது தலைவனையும் தன்னையும் தளையையும் அறிந்து, தளையின் நீங்கித் தலைவன் திருவடிச் சார்பு பெறுதல்.

ஊரையும், ஊர் அடங்கிய உலகத்தையும் ஒரு சேரப் படைக்கின்றன, பேரறிவாளனாகிய இறைவனது பெருமையை அளவிட்டுக் கூறப்புகின், மேரு மலையும், மூவுலகங்களையும் ஆளுகின்ற இறைவனிடமிருந்து தோன்றிய பூமியும், நால்வகைச் சைவமும் ஆகிய இவற்றின் பெருமைக்கு ஒப்பாகும்.

"ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற
பேரறி வாளன் பெருமை குறித்திடின்
..............................................
தாரணி நால்வகைச் சைவமு மாமே" (ப.எண். 1419)

என இறைவனது பெருமையைப் பாடுகிறார் திருமூலர்.

**சிவனருள்**

வினைகள் முடிகின்ற காலத்தில் சிவன் தனது சக்தியைப் பதிப்பித்து ஆண்டருளும், ஆற்றிலை வாராத இடைக்காலத்தில் உயிருக்குயிராய் நின்று வினைகளை ஊட்டி நிற்கும் சிவனுக்குப் பின்னே நின்றருளிப் பிறவியை நீக்கிவிடும். அவனே முன்தோன்றி வீடுபேற்றை அளிப்பவனாவான் என இறைவனைப் பற்றிக் கொண்டால் ஏற்படும் நன்மைகளை தன் பாடல்களில் வெளிப்படுத்தினார்.

"முன்னின் றருளு முடிகின்ற காலத்து
நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே" (ப. 1648)

**இறையே குரு**

இவ்வுலகில் போலி குருமார்கள் காலங்காலமாக இருந்து வருகின்றனர். அவர்களின் புறத்தோற்றத்தைக் கண்டு நீங்க வேண்டும். குருடனை வழிகாட்டியாகக் கொண்டதுபோல் ஆகிவிடும். குருடனுடன் சேர்ந்துக் குழியில் விழும் நிலையே ஏற்படும் என்பதால் இறைவனையே குருவாகக் கொண்டு வாழ்ந்தால் வாழ்வில் வளம் பெறலாம்.

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே" (திருமந்திரம்)

**நூலின் பயன்**

திருமந்திரம் என்கிற இந்த நூலின் பயன் இது என்று கூறும் பாடல் ஒன்று உண்டு.

"மூலன் உரை செய்த மூவாயிரந் தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்
ஞாலத் தலைவியை நண்ணுவர் அன்றே"

திருமூலரே தன் பாடலில் நூலின் பயனைக் கூறி இருப்பது குறிப்பிடத் தக்கது.

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான் பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படும் தானே!"

தான் பேரா இயற்கைப் பேரின்பத்தைப் பெற்றதாகவும், அதை இவ்வையகமும் பெற வேண்டும் என்று எண்ணுகிறார். செய்ய வேண்டியவை எவை என இவ்வையத்திற்கு பாடுகிறார். திருமந்திர நூலை உணர்வுடன் பற்றிக் கொண்டால் இவ்வையகத்தாருக்கும் அந்தப் பேரின்பம் தலைப்படும் என்று கூறி நூலின் பயனைத் தெளிவாகக் கூறிவிட்டார்.

**ஆகமச் சிறப்பு**

பாயிரத்தில் திருமூலர் தாம் கொண்ட தமிழ் வேதத்தின் சிறப்புக் களைத் தெளிவாக்கியவர் அடுத்து தமிழாகமத்தின் சிறப்பைக் கூறுகிறார்.

ஆகமங்கள் மொத்தம் எத்தனை என்று முதல் பாடலில் தொகை கூறுகிறார்.

"அஞ்சலி மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சோ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத்தறு வரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே"

திருமந்திரம் பெயர் காரணம், நூலின் சிறப்பு போன்றவைக் கூறப் படுகிறது.

இறைவன் திருவடிகளைப் பற்றினோருக்கு இப்பிறவியிலும் மறுமையிலும் துன்பம் இல்லை என்கிறார்.

யான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டும் என தன் உள்ள கிடக்கையை வெளிப்படுத்துகிறார்.

# 30. சிவஞானி திருமூலதேவர்

திரு. ம. சகாதேவன், காஞ்சிபுரம்.

**இமய உச்சியே தமிழ் நாட்டின் எல்லை**

தமிழகம் - பல்லாயிரம் ஆண்டு காலமாக எல்லா நலன்களையும் வளன்களையும் பெற்று திகழ்ந்த நாடு என்பது வரலாற்று உண்மை யாகும். பரதகண்டம் முழுவதுமே தமிழ்பேசும் நிலமாக விளங்கி இருந்தது என்பதை தமிழ் பழங்குடிகளான மூவேந்தர்களும் இமய உச்சியில் தம் அரச சின்னங்களான புலி - வில் - கயல் - ஆகிய உருவங்களை எழுதினர் என்பது வரலாறு. இதுவே தமிழின், தமிழர்களின் வெற்றியின் எல்லை எனவும் - கருதலாம். இன்றைய பிற நாட்டு மக்கள் நாகரீகம் பெறா முன்னரே தமிழர்கள் - கடல் கடந்து சென்றும் பிற நாட்டை வென்றும் - கலைகள் பல செய்து சிறந்தும் சித்தர்களும் முனிவர்களும் தன் சிந்தனைகளால் பல அரிய கருத்துக்களுக்கு பிறப்பிடமாகியும் திகழ்ந்தனர் எனலாம்.

கடற்கோள்களால் - அழிந்துபட்ட கருத்துக் கருவுலங்கள் - சிதைக்கப் பட்டன - ஆயினும் அரிய சில நூல்கள் - இறைவன் அருளால், அவர்தம் ஆணை வழி - அருளாளர்கள், மக்களும் உலகமும் நலம் பல பெற்றிட - மக்களிடையே தோன்றி - மக்களுக்குத் தேவையான - செயல் - பலச் செய்து, வழி காட்டிச் சென்றனர். அவ்வகையில் மூவாயிரம் ஆண்டு களுக்கு முன் தோன்றிய நூல் திருமூல தேவர் அருளிய திருமந்திர மாலை என்பதாகும்.

**சேக்கிழார் வழியே திருமூலர் காலம்**

காலம் வரையறுக்காத - வரலாறு விளங்காத - பொய்யான கற்பனைகள் நிறைந்த பல தமிழக மேன்மக்களின் வரலாற்றுச் சிறப்புகள் முறையாக அறிய முடியாத நிலையில் பிற்கால அறிஞர் பெருமக்களின் வழி காட்டுதல் மூலம் உறுதி செய்வதே சிறப்புடையதாகும்.

பெரிய புராணத்துள் காட்டப்பட்டுள்ள நாயன்மார்களின் ஆளுடைய நம்பிகள் - கோட்செங்கட் சோழர் ஆகிய இருவரைத் தவிர வேறு எவருக்கும் முன்னைய நிலையின் வரலாறுகளை விரித்து கூறாத ஆசிரியர் வழியே நாமும் அமைந்து - ஏற்பதே நன்று என்ற வகையில் திருமூலர் காலம் சேக்கிழார் வழியே முடிவு செய்வது நலமாகும்.

3589 ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுத னான்குமலர் நாற்றிருமந் திரமாலை
பான்மைமுறை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஞானவெயி றணிந்தாரை "யொன்றவன்றான்" எனவெடுத்து;

3590 "முன்னியவப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேன் மகிழ்ந்திருந்து"

என்றும் - வாழ்ந்த காலமும் - நூல் செய்த நோக்கமும் அவ்வழியே - திருமூலதேவர் செய்தது, திருமந்திர மாலை உண்மை வரலாறு என்று ஏற்பதே சிறப்பாகும்.

மேலும் திருமூல தேவரே தம் பாடல்கள் மூலம் இக்கருத்தை பாயிரத்தில் "தம் வரலாறு" என்னும் தலைப்பில்

சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே, திருமந்திரம் 18

இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி;
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே; திருமந்திரம் 19

என்னைநன் றகஇறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ் செய்யு மாறே, திருமந்திரம் 20

இப்பாடலை எடுத்துக்காட்டியுள்ளது, சிந்திக்கத் தக்கதாகும். திருமூலர் வாழ்ந்த காலம் 5-ம் நூற்றாண்டுக்குக் கொண்டு செல்வோர் சேக்கிழார் பெருமானை மறுப்பவர் என்று கொள்வது சரியாகுமா சிந்திக்கவும்.

திருமந்திரம் என்பது அன்பின் அடிப்படையில் நோக்கினால் தோத்திரமாகவும் - அறிவின் அடிப்படையில் பார்த்தால் சாத்திரமாகவும் விளங்கி நிற்கும். அரிய இந்நூல் 232 தலைப்புகளில் - ஒவ்வொரு தலைப்பிலும் வரையறையின்று 2 பாடல்கள் முதல் 100 பாடல் வரை கூடுதல் பாடல் 3047 பாடல்கள் உள்ளன. மூலர் செய்த மூவாயிரம் மந்திரம் என்பது வரலாற்றுச் சான்றானால் இடைச்செறுகல் மீதியாகும்.

**தமிழ்சாத்திரம் சொன்ன திருமூலர்**

அரியதெனக் கில்லை அட்டமாசித்தி
பெரிதருள்செய்து பிறப்பறுத் தானே திருமந்திரம் 626

இது திருமூலரின் "அட்டமாசித்தி" எனும் தலைப்பில் தரும் சுய சரிதை யாகும். நாள் தொறுஞ்சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றார் என்றும் சிவாகமம் என்னுமப் பேர் பெற்ற நூல் செய்தார் என்பதும் திருமந்திரம் உணர்த்தும் உண்மையாகும்.

"நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" திருமந்திரம் 24

எனத் தொடங்கும் பாடலின் தெளிவுரை "பரவெளியைப் பற்றி நிற்கின்ற வேதப் பொருளை உள்ளவாறு உணர்ந்து சொன்னால் அதுவே - உடம்பைப் பற்றி நிற்கின்ற உயிருணர்வில் நிலைத்து நிற்கும் மந்திரம் எனப்படும். அம்மந்திரத்தை இடையறாது உணர உணரப் பேரின்பம் கிடைப்பதாம். அவ்வாற்றல் நான் பெற்ற இன்பத்தை இவ்வுலகம் பெறுவதாக" என்பதாகும்.

கடவுள் உண்மையை இப்பாயிரம் மூலம் உரைக்கும் திருமூலதேவர் "தாங்கி மிகாமை வைத்தான் தமிழ் சாத்திரம்" திருமந்திரம் 26 பிறர்போல் லட்சம் கிரந்தம் - கோடி கிரந்தம் என்று வீணேகாட்டாமல் தமிழ் நூல்களை கற்பாரின்றியும் ஏற்பாரின்றியும் வீணே கிடக்காமல் அளவாக வைத்தான் என்று சாத்திரத்தின் சிறப்பை வலியுறுத்துவார்.

**ஒரு குலம் ஒரு கடவுள்**

ஒரே கடவுள் நெறி - தமிழர்களின் - பெரு நெறியாகும் - அதே போல் ஒருகுலம் தமிழர்களின் அன்பு நெறியாகும். "எல்லா உலகும் ஆனாய் நீயே" என்று இறைவனை அழைத்து மகிழும் திருமுறை. மணிவாசகரும் "தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" - 464-65 (போற்றித் திருவகவல்) என வழி மொழிவார்.

ஏழாம் தந்திரம் இதோபதேசம் எனும் தலைப்பில் அரிய பாடலாக

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" - திருமந்திரம் 2070

என்ற பாடல் "உலகத்தார் பல சாதிகளைக் கூறுவாராயினும் உண்மையில் உள்ளது ஒரு சாதியே; அது சைவ சாதி. உலகத்தார் பல கடவுளர் களைக் கூறி கொண்டாடுவராயினும் உண்மையில் கடவுள் ஒருவனே; அவன் சிவன். இவற்றை நீவிர் முதலில் நன்கு உணருங்கள் - உணர்ந்தால் நமனும் உங்களை அணுகான். வெட்கமின்றி பிறந்து - இறந்து - பிறப்புகளிலே மீண்டும் - மீண்டும் பிறக்கும் நிலையும் உங்களுக்கு இல்லையாகும். அப்பால் மேற்கூறிய உண்மைகள் உங்கள் உள்ளத்தில் அசையாது நிலைபெற அதன்வழி சிவனை இடையறாது நினைந்து உய்தி பெறுங்கள்" என்னும் சிறப்பான பொருள் தந்து நிற்கும்.

மனித இனம் தோன்றி- வளர்ந்து - நிலை பெற்ற நாவலந் தீவு மக்கள் நாகரிகம் பெற்ற, சிறந்த நிலையைக் காட்டுவது அவர்கள் வணங்கிய ஒரே கடவுள் - சிவன் என்பதாகும். அது வரலாறு காட்டும் உண்மையாகும். நிலை பெற்ற அக்கடவுள் நெறி தொடர்ந்து திருமூலர் காலத்தில் வேறுன்றி மாணிக்கவாசகர் காலத்தே பல்கி தழைத்தது. சிவபுராணத்தன்னை விளக்கிக் காட்டி "ஐயாறதனிற் சைவனாகியும்" நிற்பவன் சிவனே என்பதை தொடர்ந்து மூவர் முதலிகளும் சிவனைத்

தவிர வேறு தெய்வம் கொள்ளாத நிலை தொடர்ந்துள்ளது. கடல் கோள் கொண்ட பின் தோன்றிய நூல்களில் முதன் முதலில் சிவ சம்பந்தங் கொண்ட சைவ சமய கோட்பாட்டையும் - வழிபாட்டிற்குகந்த ஆகமங் களையும் - அதற்கான வழி முறைகளையும் இறைவன் ஆணையால் வகுத்தளித்தவர். திருமூல தேவரே ஆகும். "சிவபரத்துவம்" எனும் தலைப்பில் முதல் தந்திரம் திருமந்திரம் 40ல்

"சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை"

(திருமந்திரம் 40)

"நல் அன்பர்க்குத் தாயினும் நல்லன் தாழ் சடையோனே"

(திருமந்திரம் 43)

"மற்றவன் தன்னால் தொழப்படுவாரில்லை தானே"

(திருமந்திரம் 44)

என்றெல்லோரும் ஏற்று போற்றிய தொன்மை குலமும் - போற்றத் தகும் கடவுளும் - சொல்லி தமிழ் மறைகள் சொன்ன திருமூலர் - மேலும் தமிழ் மறைகளின் தோற்றம் பற்றி ஏழாந்தந்திரம் "கேடு கண்டிரங்கல்" என்னும் தலைப்பில் - 2055 பாடலாக

விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை ஓராப் பழிமொழியாளர்
உரந்தன்மை யாக ஒருங்கிநின் றார்களே.

"மறைகள் எனப்படும் முதன் நூல்கள் நான்கு என்பதாகும். அவற்றைப் படைப்பு காலத்தில் சிவபிரான் கல்லால மரநிழலின் கண் எழுந்தருளி இருந்து முனிவர் நால்வர்க்கு அருளிச் செய்தான் என்பதும் அந்நான்கு மறைகள் அறம் - பொருள் - இன்பம் - வீடு என்றும் உறுதிப் பொருள் நான்கினை உணர்த்துவன என்பதும் தேவார - திருவாசகங் களாகிய திருமுறைகளில் பல இடங்களில் பரவலாகவே சொல்லப்படுவன; அவற்றுள் சிவன் கல்லால் மர நிழலில் எழுந்தருளி இருந்து நால்வர்க்கு முதன் மொழியாகச் சிலவற்றை மொழிந்தது மட்டும் இம்மந்திரத்தில் சொல்லப்பட்டது.

மேற்கூறிய மறைகள் பற்றிய செய்திகளுள் ஒன்றேனும் இன்று வழங்கும் இருக்கு முதலிய ஆரிய நால் வேதங்களில் ஓரிடத்தும் சொல்லப்படாமையாலும் - இவ்வேதங்கள் நான்கும் அறம் முதலிய நாற்பொருள் பற்றிக் கூறாமையாலும் திருமுறைகளில் சொல்லப்பட்ட அம்மறைகள் இருக்கு முதலிய ஆரிய வேதங்கள் அல்ல என்பது தெளிவாதலால் - அம்மறைகள் தமிழால் ஆயவையாய் விளங்கி

இருந்து பின்னர் மறைந்தவையாகும்" என்பார் ஆராய்ச்சியாளர்கள் என்று விளக்கம் தருகிறார் மகாவித்துவான் அருணை வடிவேலனார் அவர்கள். வடமொழி வேதம் தமிழ் வேதத்திற்கு மாறுபட்டதா? வேறு பட்டதா? என்பது ஆய்வுக்குரியதே. இன்றும் சனாதனிகள் என்று கூறிக் கொள்ளும் அத்வைதிகள் வேதம் அநாதி என்பார் - சைவர் சிவபிரான் முனிவர் நால்வர்க்கு சொன்னது என்பார். சிந்தனைக்குரிய வேற்றுமைகள் இவைகள்.

**அந்தணர் என்போரறவோர்**

மறைகள் பற்றி விளக்கிய திருமூலர் வேதம் ஓதிடும் வேதியர்கள் - அந்தணர்கள் - ஒழுக்கம் கூறும் வழி முதல் தந்திரம் "அந்தணரொழுக்கம்" என்றும் தலைப்பின் பாடல்

**நூலும் சிகையும் நுவலிற் பிரமமோ;**
**நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்,**
**நூலது வேதாந்தம்; நுன்சிகை ஞானமாம்,**
**நூலுடை அந்தணர், காணும்; நுவலிலே.** திருமந்திரம் 229

"முப்புரி நூலை விடாது அணிகின்ற அந்தணர்களே ஆராய்ந்து சொல்லின் நீவிர் கொண்டுள்ள முப்புரி நூலும் குடுமியுமே பிரமமாகி விடுமோ? நூல்பஞ்சும், சிகைமயிருமேயாம். உண்மையை சொல்லுமிடத்து நூலாவது வேதத்தின் ஞான காண்டச் செய்யுட்களே, நுண்ணிய சிகை யாவது அச்செய்யுட்களின் பொருள் தெளிவே, இதனை அறிந்து கொள்ளுங்கள் என்பது விளக்கமாகும். இங்கு குறிப்பிட்டபடி பிரம ஞானம் இல்லாதார் வேடமாத்திரத்தால் பிராமணராகார் என்பதை அப்பரடிகளும்

**கோலும் புல்லும் ஒருகையில் கூர்ச்சமும்**
**தோலும் பூண்டு துயரமுற்றென் பயன்** திருமுறை 5-39-9

எனப் பொய்வேடதாரிகளை சாடுவார். மேலும் கடவுள் நெறியுடன் ஆன்மிக நெறியையும் காத்தல் அரசன் கடனாகும் என்று திருமூலத்தேவர் முதல் தந்திரம் "அரசாட்சி முறை" என்ற தலைப்பில் வலியுறுத்துவார். அது பாடல் இது,

**மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்**
**வாடும் புவியும்; பெருவாழ்வு மன்னனும்**
**பீடொன் றிலனாகும்; ஆதலாற் போர்த்துணர்ந்**
**தாடம் பரநூற் சிகையறுத் தால்நன்றே** திருமந்திரம் 240

வேடமாத்தரத்தானே தம்மைப் பிராமணர் என மதித்துக் கொள்வோர் தம் மூடத்தை நீக்கிக் கொள்ள முயலாராகலான் அவர்க்கும் அவரது வேடத்தால் அவரை உயர்ந்தோர் எனக் கருதி அவர்க்கு பிறர் செய்யும் தானங்கள் - அவரது தீயொழுக்கத்தால் உலகிற் பல தீச்செயல்கள் நிகழ்தற்கே

காரணமாதலின் அப்பொய் வேடத்தை களையவே நீங்க "அறுத்தால் நன்றே" என்றார்.

**ஆகமத்தவறு அழிவுக்கு வழியாகும்**

தமிழாகமம் சொல்ல கயிலையினின்று தமிழகம் வந்த திருமூலதேவர் இரண்டாம் தந்திரம் 507-ஆம் பாடல் தொடங்கி திருக்கோயில் குற்றம் பற்றி 5 பாடல்களில் குறிப்பிடுவார்.

**தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்**
**ஆவதன் முன்னே அரசு நிலைகெடும்;**
**சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்;**
**காவலன் பேர்நந்தி கட்டுரை தானே.**

ஒரு திருக்கோயிலில் உள்ள அசையாத சிவக்குறியை பெயர்த்துக் கொண்டுபோய் வேறொரு திருக்கோயிலில் நிறுவினால் அச்செயல் முடியாதவாறு அரசனால் காத்தல் வேண்டும். அரசன் அறியாதவாறு இச்செயல் முடித்துவிட ஒருவரும் எண்ணலாகாது. ஒரு கோயிலில் உள்ள இலிங்கம் எப்பொழுது யாரால் நிறுவப்பட்டதோ அதனை அவர்களது கருத்திற்கு மாறாகப் பெயர்த்து கொண்டுபோய் வேரிடத்தில் வைத்தல் கூடாது. இதனாலே ஒரு கோயிலில் முன்பு உள்ள மூர்த்தியை தக்க காரணமின்றி நீக்கி வேறொரு மூர்த்தியை நிறுவுதலும் குற்றம் என்பது மூலர் வாக்கியம் அடுத்த 508-ம் திருமந்திரப் பாடலில்

**கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்**
**வெட்டுவிக்கும்; அபிடேகத் தரசரை**
**முட்டுவிக்கும்; முனி வேதியராயினும்**
**வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே.**

திருக்கோயில் மதிலைக் கட்டுவித்தவரே பின்பு பொருளாசைக் கொண்டோ வேறு காரணங்களாலோ, அதினின்று ஒரு கல்லை எடுப்பினும் சதாக்கிய தத்துவத்தில் இருந்துக் கொண்டு ஆகமங்களை அருளிச் செய்த சதாசிவ மூர்த்தியின் ஆணை அவரை அழிக்கும். அக்குற்றம் நிகழாதவாறு காவாமைப்பற்றி அப்பொழுது ஆள்கின்ற அந்நாட்டு அரசரையும் அவ்வாணை இடருறச் செய்யும் அக்குற்றத்தைச் செய்தவர் முனிவர் என்று உயர்த்திச் சொல்லப்படுகின்ற அந்தணராயினும் - அவ்வாணை அவரை கொலை யுண்டுமடியவே செய்யும்.

கட்டுவித்தார்க்கே இவ்வாறாம் எனின் பிறர் அது செய்வார் எனின் என்னாவார் என்று சொல்ல வேண்டியதில்லை. இதனால் கோயில் மதில் முதலியவற்றிற்கேயன்றி அதன் உள்ளிடம், நந்தவனம் - முதலியவற்றிற்கும் பழுது செய்யலாகாது என அறிவுறுத்தலாகக் கொள்ள வேண்டியது என்று அறிவுறுத்தியும்.

**கூற்றுதைத் தான் திருக்கோயில்களானவை**
**சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே** திருமந்திரம் 509

**முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்**
**மன்னர்க்குத் தீங்குள வாரிவளங்குன்றும்,** திருமந்திரம் 510

**பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்**
**போர்கொண்ட வேந்தர்க்கு பொல்லா வியாதியாம்**
திருமந்திரம் 511

509-510 பாடல்களில் திருக்கோயில்களில் நித்திய நைமித்திகங்கட்குக் குறையுண்டாகச் செய்தல் விலக்கப்பட்டது.

மேலும் பிறப்புரிமை ஒன்றே கொள்ளப்படுவது சிறப்புரிமையாகக் கொள்ளப்பட்டது. பிறப்பால் பிராமணரல்லாத திருநாவுக்கரசு சுவாமி களை பிராமண அப்பூதியடிகளும் - மெய்கண்ட தேவரை சகலாகம பண்டிதரும் தம்மின் மிக்காராயும் தக்காராகவும் கருதி ஆசிரியராக ஏற்றுக் கொண்டது பிறப்பு பற்றியதன்று

**மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்** (குறள் 134)

''மறந்தவழி இழிகுலத்தனா மாகலின் மறக்கலாகா தென்னும் கருத்தான் மறப்பினு மென்றார்'' என்று பரிமேலழகர் உரை வகுப்பார்.

ஆளுடைய அரசுகளும்

**''நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே''**
திருமுறை 5-39-9

என்பார்.

### தெய்வநெறி சொன்ன திருமூலர்

பெருநெறியாம் தெய்வ நெறி - தமிழகத்தில் சிறப்புற விளங்கிட அருளாளர்களின் வழி போற்ற வேண்டும். உலக மக்களுள் உயர்வு - தாழ்வு நீங்கி - ஒரு குலம் ஒரு கடவுள் நெறியினை ஏற்று நடந்திட வேண்டும். நந்தியம்பெருமானை குருவாக ஏற்ற திருமூலரைப் போல நாமும் நமது சமய ஆசாரிய பெருமக்கள் காட்டிய வழி கடை பிடித்து - தீட்டிய கருத்துக்களை மந்திரம் எனக்கொள்ள வேண்டும்.

திருமூலர் வழியில்

**சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடொப்பார் இங்கும் யாவரும் இல்லை** திருமந்திரம் 50

என்று உறுதியாக நின்று நாம் ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று சொல்லி அலையும் அறிவாளிகளாய் உழலக் கூடாது என்பதும், தமிழ், மறை

ஒன்று வேறு இருந்துள்ளது என்பதும் - தற்போது சொல்லும் நால்மறை இறைவன் அருளியது அல்ல என்பதும், அறம் - பொருள் - இன்பம் - வீடு என்பதின் விளக்கங்கள் நம் திருமுறைகளில் பேசப்படும் நிலையில் அது பேசாத ஆரிய நூலான வேதம் தமிழ் வேதத்திற்கு வேறுபட்டது என்பதும், ஒன்பதாம் திருமுறை திருமாளிகை தேவர் திவிசைப்பா - கோயில் "இணங்கிலா ஈசன்"என்ற தலைப்பில் 39-ம் திருப்பாடல் திருமூலரின் வழி படரும் பாடல் என்பது

**திசைக்குமிக் குலவு கீர்த்தித்**
**தில்லைகூத் துகந்து தீய**
**நசிக்க வெண்ணீற தாடும்**
**நமர்களை நணுகா நாய்கள்**
**அசிக்க ஆரியங்கள் ஓதும்**
**ஆதரைப் பேதவாதப்**
**பிசுக்கரைக் காணா கண்வாய்**
**பேசாதப் பேய் களோடே.**

யார் என இனங்கண்டு கொள்ள நசிக்க வெண்ணீற தாடும் நமர்களை நணுகாநாய்கள் - அத்வைதிகள் தங்களை சைவர்கள் அல்ல சுமார்தர் என்றும் நெற்றியில் பூசும் நீறு திருநீறு அல்ல - யாகசாலை சாம்பல் என்றும், கூறுவதும் குறிப்பிடத் தக்கது. சிந்திக்கத்தக்கது.

எனவே நாம் சிவபெருமான் பெயரையே சிந்தித்து அவன் திருவடியை வந்தித்து - மறந்தும் பிறிதொரு நெறியை நினையாது சிவாகம வழி நின்று - வழிபாடியற்றி "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற திருமூல தேவர் நெறியினை தொடர்ந்து பற்றி சிவனடியை சிந்திப்போமாக.

வாழ்க திருமந்திர மாலை.

# 31. திருமூலர் காட்டும் உடல் மேம்பாட்டிற்கான கூறுகள்

செல்வி எ. சகுந்தலா, சென்னை.

பிறவா வரம் வேண்டி முக்தி பெறுவதே வாழ்வின் குறிக்கோளாக கொண்ட அடியார்கள் நடுவில் "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்று பாடிய பக்தர் திருமூலர். நோயற்ற வாழ்வும் சாகா நிலையும் மனிதன் அடைய வேண்டிய இடம் என்று சித்தர்கள் நிரூபித்துள்ளனர். சித்தர் இலக்கியங்களுக்கு தலைமையேற்கும் சிறப்பைக் கொண்டது திருமந்திரம். மனித உயிரின் தோற்றம் முதல் இறுதிவரை உள்ள அனைத்து நிலைகளையும் திருமந்திரம் கூறுகிறது. உடலில் உள்ள உறுப்புகளையும் ஆதாரங்கள்ளையும் கூறி மனிதனின் வாழ்நாள் எவ்வாறு வீணாக கழிகின்றது என்பதனையும், எவ்வாறு அழிகின்ற உடலை அழியாமல் காக்க இயலும் என்பதையும் திருமந்திரம் கூறுகிறது. உடலுக்குள் உறைந்த உயிர்க்கு அடிப்படையாக உள்ள பிராணாயாம சிறப்புகளையும் எடுத்துக் கூறுகிறது திருமந்திரம்.

## பிராணாயாமம்

பிராணன் என்றால் உயிர்க் காற்று ஆகும். மனித உடலில் உள்ள பத்து வகையான காற்றுகளும் தொழிலாற்றுகின்றன. இந்த பத்து வாயுக் களில் பிராணன் என்னும் உயிர்க் காற்று ஒன்பது வாயுக்களையும் தத்தம் இடங்களில் தங்கித் தொழில் புரியச் செய்கின்றது. ஒன்பது வாயுக்களை மட்டும் அல்லாமல் பத்து நாடிகளையும் தொழில்படச் செய்கின்றது. இதனை,

"நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலில் ஒடுங்க யிருத்திடுங்
கூடிய காமங் குளிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே" (திருமந்திரம் - 2135)

என்ற பாடலின் மூலமாக இடையறாமல் சுவாசிக்கும் பிராண வாயுவைப் பற்றி திருமூலர் குறிப்பிடுகிறார். இத்தகைய உயிர்க் காற்றை உள்ளே இழுத்து அடக்குதல் என்பது பிராணாயாமம் ஆகும். 'யாமம்' என்பதற்கு அடங்குதல் என்பது பொருளாகும்.

## காற்றின் அளவு பூரகம், ரேசகம், கும்பகம்

பிராணாயாமம் செய்வோர் 'நமசிவாய' என்னும் பஞ்சாட்சரத்தின் மாத்திரை அளவை அறிந்து காற்றை இழுக்கும் பயிற்சியை மேற்கொள்ள

வேண்டும். பூரகம் என்பது பூரித்தல் அதாவது உடலில் உள்ள திசுக்கள் உயிர்க்காற்றைப் பெற்று பூரிப்படைகின்றன. கும்பகம் என்பது 'அடக்கி வைத்திருத்தல்' என்பது பொருளாகும். குறிப்பிட்ட காலம் வரையில் அடக்கி வைத்திருந்தால் காற்று உடல் முழுவதும் பரவி வியாபித்திருக்கும். கும்பகம் முடிந்த பின் இரேசகம் நடைபெற வேண்டும். இரேசிக்கும் போது மூலாதாரத்தில் இருந்து சீராக மேலெழுந்து உச்சந்தலை தொட்டு வெளிவரும்.

**பிராணாயாமம் செய்யும் காலம்**

மனித உடலில் காலையில் பித்தமும், மதியத்தில் வாதமும், மாலையில் சிலேட்டுமமும் தன் நிலையில் அடங்கி நிற்கும். எனவே காலை நேரம், மதிய நேரம், மாலை நேரத்தில் பிராணாயாமம் செய்ய வேண்டும்.

**ஆசனம்**

இட்து காலின் பெருவிரல் வலது காலின் மடக்கில் இருக்கும்படி அமைத்துக் கொள்வது சுவஸ்திகாசனமாகும். சுவஸ்திகாசனத்தில் அல்லது பத்மாசனத்தில் நேரே நிமிர்ந்து அமர வேண்டும். அமரும் இடம் தனிமையில் அமைதியாகத் தியானம் செய்ய வாய்ப்புடையதாக அமைய வேண்டும்.

நல்ல ஒளி, காற்றோட்டம், ஆரோக்கியமுள்ள இடமாக அமைய வேண்டும். நிமிர்ந்து அமர வேண்டும். முதுகுத் தண்டு எக்காரணம் கொண்டும் வளையக் கூடாது.

**பூரகம் படிக்க வேண்டிய முறை**

மனித உடலில் நெற்றியில் யகரமும், கண்டத்தில் வகரமும் நெஞ்சில் சிகரமும் உந்தியில் மகரமும் மூலத்தில் நகரமும் இருப்பதால் ஐந்தெழுத்துக்களே பிராணாயாமத்திற்கு மாத்திரைகளாகக் கணக்கிட ஏற்றவை.

காற்றை உள்ளிழுக்கும்போது பதினாறு மாத்திரைகள் எண்ணி உள்ளிழுக்க வேண்டும். இதற்கு மேல் காற்றை எக்காரணம் கொண்டும் உள்ளிழுக்கக் கூடாது. காரணம் நுரையீரலை இயல்பான அளவுக்கு மேல் விரிவடையச் செய்யக் கூடாது. எப்பொழுதும் பிராணாயாமம் செய்யத் தொடங்கும் போதும் இடது மூக்கின் வழியாகத் தொடங்க வேண்டும். காற்றை உள்ளுக்கு இழுக்கும் முன் சுட்டுவிரலால் வல்து மூக்கை அழுத்தி இடது மூக்கின் வழியாக உள்ளிருக்கும் காற்றை வெறியேற்றி விட்டு பிறகு அதே இட மூக்கின் வழியாகப் பதினாறு மாத்திரை அளவினதான உயிர்க்காற்றை உள்ளுக்கு இழுக்க வேண்டும். இதுவே பூரகமாகும்.

**உடல் அழியாமை**

**"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானச் சேரவு மாட்டார்**

உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''
(திருமந்திரம் - 704)

மரணம் என்பதும் மறுபிறப்பு என்பதும் சித்தர் கொள்கைக்கு எதிரானவை. எனவே பிறப்பு இறப்பு என உழன்று வரும் இச்சமுதாயத்தில் இறைவனின் திருவடியை பெற வேண்டுமாயின் மன அழுக்குகளை நீக்கி தியானத்தில் திளைக்க வேண்டும். அதற்கு நிலைகளனாக விளங்குவது உடலாகும். உடல் அழிந்துவிட்டால் உயிர் நீங்கும். எனவே உடலைச் சுகமாக வளர்த்து மனத்தில் தெளிவை நிறுத்தி மெய்ஞானத்தைக் காண முயல வேண்டும். இதற்கு அடிப்படையாய் விளங்குவது உடலாகும். இத்தகைய உடலைச் சிலர் இழுக்கானது என்று எள்ளி நகையாடுகின்றனர். ஆனால் இறைவன் உறையும் இடும் உடலே ஆகும். எனவே உடலை நடமாடும் கோவிலாக எண்ணி அன்பு செய்தல் வேண்டும்.

இதனை,

''உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே'' (திருமந்திரம் - 705)

இயல்பாக நம் உடலில் அமைய வேண்டிய மூச்சுக் காற்று பன்னிரண்டங்குலம் ஆகும். எனவே இடப்பால் வலப்பால் வழிச் செல்லும் மூச்சை அடக்கினால் உடலுக்கு அழிவு ஏற்படாது. இதனை,

''நான்றவிம் முட்டையிரண்டையுங் கட்டியிட
டூன்றி யிருக்க உடம்பழியாதே'' (திருமந்திரம் - 708)

என்கிறார் திருமூலர்.

மூச்சுக் காற்றினை நூற்றறுபது மாத்திரை அளவு இட மூக்கு வல மூக்கு வழியாக உள்ளிழுக்க வேண்டும். அதனை நடு நாடி வழியாக மேல்நோக்கிச் செல்ல விட்டால் மனிதனின் சராசரி ஆயுட்காலமாகிய நூற்றாண்டினையும் மாறும்படி நீண்ட நாள் வாழ முடியும் என்பதனை,

''நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுப்தும் ஆறும் புகுவரே'' (திருமந்திரம் - 709)

என்ற திருப்பாட்டால் உணர்த்துகின்றார்.

பொதுவாக மக்கட்கு உள்ளே போகும் உயிர்ப்பு பத்து அங்குலம் ஆகும். ஆனால் வெளியே செல்கின்ற உயிர்ப்பு பன்னிரண்டு அங்குலம்

ஆகும். இவை மட்டும் அல்லாமல் நடக்கும்போது இருபத்து நான்கு அங்குலம் வெளியில் செல்கிறது. ஓடும்போது நாற்பத்திரண்டு அங்குலமும் உறங்கும்போது ஐம்பது அங்குலமும் உடனுறைவின் போது அறுபது அங்குலமும் வெளியில் செல்கிறது. நாம் உண்ணும் போது பதினெட்டு அங்குலம் வெளியில் செல்கிறது.

புணர்ச்சியை குறைத்தால் உயிர்ப்பை மிகுதிப்படுத்தலாம். அதே போல் உணவையும் அளவில் சிறிது குறைத்து உண்டால் உயிர்ப்பு மிகுதியாகத் தங்கும். இதனால் உடம்புக்கு அழிவு ஏற்படுவதில்லை.

இதனை,

"அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே" (திருமந்திரம் - 715)

என்கிறார்.

மூலாதாரத்தில் உள்ள குண்டலியாற்றலை எழுப்பி நடுநாடி வழியாக அடுத்தடுத்துச் செலுத்துதல் வேண்டும். அவ்வாறு செலுத்தினால் உடல் பொன் போன்று ஆகும்.

"பிண்டத்துள் உற்ற பிறக்கடை வாசலை
அண்டத்துள் உற்று அடுத்தடுத் தேகிடில்
வண்டிச்சிக்கு மலர்க்குழல் மாதரார்
கண்டிச் சிக்குதற் காயமு மாமே" (திருமந்திரம் - 716)

என்கிறார்.

உடலை வளர்க்கும் உணவிலும் சிறந்தது உயிர்ப்பு. இது உடலை நீண்ட காலம் வளர்க்கும். புருவ நடுவில் யோகப் பயிற்சியால் அமிழ்தம் பெற இயலும். இங்குத் தொழில்படும் கருவிகள் முப்பத்தைந்து (பொறி பத்து, புலன் ஐந்து, வளி பத்து, கலன் பத்து) ஆக முப்பத்தைந்து ஆகும்.

"விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு
உச்சிக்கு முன்னே யுழவு சமைத்தது
அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ண மாட்டாதார்
இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே" (திருமந்திரம் - 1849)

என்கிறார்.

மக்கள் இன்று பல நோய்களால் துன்பம் அடைகின்றனர். இதற்கு காரணம் உடலைச் சரியான முறையில் பாதுகாக்காமல் இருப்பது தான். குறிப்பாகச் சரியான முறையில் மூச்சுப் பயிற்சி செய்யாமை ஆகும்.

உயிர்ப்பினை உள்ளிழுத்து வெளிவிடும் முறைமைச் செயலால் பொன் போல் அருள்ஒளி மிகும். அதனால் மலம் கழலும். இதனால் நெஞ்சத் தாமரை பொலிவு பெறும். எழுபத்தாயிர நாடிகளிலும் சுழன்று வரும் வழியை அறிபவர்க்கு உடல் துன்பம் தருவதை விட்டுத் திருவடி இன்பத்தைத் தரும் மந்திர மைப்போல் ஆகும்.

"சுழற்றிக் கொடுக்கவே சுத்தி கழியுங்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்து
உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு
அழற்றித் தவிந்துடல் அஞ்சன மாமே" (திருமந்திரம் - 706)

மூச்சுப் பழக்கத்தால் உடல் தூய்மை பெறும். காலைப் பயிலும் மூச்சுப் பழக்கத்தால் பித்தம் நீங்கும். நடுப்பகலில் பயில்வதால் வாதம் நீங்கும். மாலையில் பயில்வதால் கபம் என்று சொல்லப்படும் கோழை அறும். இம்மூன்றின் வேறுபட்டால் உடற்கண் நிகழும் நஞ்சாம் நோய் அணுகாமல் நீங்கும். இதனால் உடலில் நரை, திரை தோன்றாது "நஞ்சறச் சொன்னோம் நரைதிரை நாசமே" (திருமந்திரம் - 707)

**உடல் அழியாமை**

நாட்டம் இரண்டினையும் புருவ நடுவிற்கு நேராக மூக்கு நுனியில் வைத்தல் வேண்டும். அவ்வாறு வைத்து உயிர்ப்பினை அடக்கி அசைவற்ற நிலையில் இருந்தால் திருவருள் ஒளி மனத்தில் எழும். அத்தகைய ஒளி காணப்படவே உடலுக்கு எவ்வகை துன்பமும் இல்லை. அழிவும் ஏற்படாது.

"நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டம் இல்லை சிவனவ னாமே" (திருமந்திரம் - 584)

இயல்பாக நமது உடலில் உயிர்ப்பு பதினாறு மாத்திரை ஓடிக் கொண்டிருக்கும். அவற்றுள் நான்கு அகமும் முந்நான்கு புறமுமாய் இருக்கும். இப் பன்னிரண்டும் அகமாய் அடங்கிவிட்டால் அஃது உயிர்ப்பின் பெறும் பேறாகும். இத்தகைய சிறப்பினைப் பெற்றவர் பல காலம் நீரில் மூழ்கி இருந்தாலும் நிலத்தில் புதைந்து இருந்தாலும் உடம்பு அழியாது. இதனை,

"ஈராறு கால் கொண்ட டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமாயி ரத்தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே"

என்கிறார் திருமூலர்.

இவ்வுலகில் நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற விருப்பம் கொள்பவர் சிறிது சிறிதாக உயிர்ப்பு பயிற்சியைப் பழகுதல் வேண்டும். அங்ஙனம் முயலாவிட்டால் உலகக் கணக்கின்படி வாழ்நாள் முடிந்து விடும். சில நாட்களுக்குக் கூட கூடுதலாக வாழ முடியாது. எனவே இவ்வுலகின்கண் நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற விருப்பம் உடையவர் முறையாக உயிர்ப்பு பயிற்சியினை பயின்று அதனைப் பறைபோல் அடுத்தவர்க்கு வெளிப்படுத்தாமல் பணிவுடன் வாழ்நாளைப் பெருக்க வேண்டும் என்ற கருத்தினை,

"முறைமுறை யாய்ந்து முயன்றில ராகில்
இறையிறை யார்க்கும் இருக்க அரிது
மறையது காரண மற்றொன்று மில்லை
பறையறை யாது பணிந்து முடியே" (திருமந்திரம் - 728)

என்ற பாடலில் திருமூலர் விளக்கியுள்ளார்.

**வாழ்நாள் பெருகுதல்**

"ஒன்றில் வளர்ச்சி உலப்பில கேளினி
நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடுஞ்
சென்றிடு முப்பதுஞ் சேர இருந்திடிற்
குன்றிடைப் பொன்திகழ் கூத்தனு மாமே" (திருமந்திரம் - 736)

என்ற பாடலின் மூலம் வாழ்நாளை எவ்வாறு பெருக்கிக் கொள்ள இயலும் என உபாயம் கூறுகிறான். உயிர்ப்பு மூன்று நாடிகளிலும் செல்லுவதால் வாழ்நாள் குறைந்தும் கூடியும் வருகிறது. அவ்வாறு அமையாமல் நடுநாடி ஒன்றில் மட்டும் உயிர்ப்பினைச் செலுத்தினால் வாழ்நாள் பெருகும். இதனால் நூறு ஆண்டுகள் வாழ இயலும். மேற்கூறிய பயிற்சியினைத் தொடர்ந்து பயின்றால் ஆயிரம் ஆண்டுகள் மட்டுமல்லாமல் ஊழிக்கலாம் (உலக முடிவு) வரை வாழ்வர். இதனை,

"சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துடல் ஆயிரங் கட்டுறக் காண்பர்கள்
சோத்துடல் ஆயிரஞ் சேர இருந்தவர்
மூத்துடன் கோடி யுகமது வாமே" (திருமந்திரம் - 738)

எனும் பாடலில் திருமூலர் தெளிவுப்படுத்துகின்றார்.

**ஆயுள் நீட்டித்தல்**

விந்துவானது மூலத்துள் இயற்கையழலால் வற்றப்பட்டு உடலுடன் கலந்து கரைந்து விடுதல் வேண்டும். அவ்வாறு உடலுடன் ஒன்றாய் விந்து விலகாது வேறிடம் செல்லாது நிற்பின் விரைவில் உயிர் அழியாது. ஆற்றலும் நீங்காது. எண்பெரும் சித்தியாவும் சிவ அருளால் உண்டாகும்.

"ஒழியாத விந்துவுடன் நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சக்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே" (திருமந்திரம் - 1911)

## நீண்ட ஆயுள் பெற வழி

வலமூக்கின் வழி இயங்கும் உயிர்ப்பை இடமூக்கின் வழி வாங்கியும், இடமூக்காகிய திங்களின் வழி இயங்கும் உயிர்ப்பை வலமூக்கின் வழி வாங்கியும் இம்முறையாக அம்மூச்சைத் தவறுதலில்லாது பழகி வந்தால் நீண்ட ஆண்டுகள் வாழ இயலும்.

"காணும் பரிதியின் காலை இடத்திட்டு
மாணும் மதியதன் காலை வலத்திட்டுப்
பேணியில் வாறுபிழையாமற் செய்விரேல்
ஆணி கலங்காதவ ராயிரந்தாண்டே" (திருமந்திரம் - 846)

எனவே முறையான மூச்சு பழக்கத்தின் மூலமாக உடலை அழியாமல் நிலைத்திருக்கச் செய்ய இயலும்.

## தொகுப்புரை

இக்கட்டுரையில் பிராணாயாமம்; காற்றின் அளவு பூரகம், ரேசகம், கும்பகம், பிராணாயாமம் செய்யும் காலம்; ஆசனம்; பூரகம் படிக்க வேண்டிய முறை; உடல் அழியாமை; வாழ்நாள் பெருகுதல்; ஆயுள் நீட்டித்தல்; நீண்ட ஆயுள் பெற வழி ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

# 32. திருமந்திரத்தில் சக்தி வழிபாடு

புலவர் சு. சங்கர நாராயணன், புதுக்கோட்டை.

நந்தி அருளாலே நாதனாம் பேர் பெற்று உயர்ந்த திருமூல நாயனாரின் அருட்கொடையே "திருமந்திரமாலை" எனும் திருமந்திரம்.

இஃது சைவப் பெருஞ்சாத்திரமாகவும். தோத்திரமாகவும் திகழ்வது. ஆழ்ந்த சிவானுபூதியின் விளைவாய் ஆண்டுக்கு ஒரு பாடலாய் - அருளப்பெற்றது என்பதே இதன் ஆழ அகலத்தைப் பாரித்து உரைக்கும்! சுத்தாத்துவிதமான சைவ சித்தாந்தத்தின் கூறுகள் பலவும் - மெய்கண்ட சாத்திரங்களின் முன்னோடியாக இந்நூலில் விரிவாக விளக்கம் பெறுகின்றன! இவற்றுள் என் உள்ளம் கவர்ந்த சக்தி வழிபாடு என்பது பற்றி கூடியவரை சுருக்க ஆய்வு மேற்கொள்கிறேன்.

சித்தாந்த நோக்கில் சக்தி பற்றிய விளக்கம், வழிபாடு என்ப்தின் வகைமை, திருமந்திரத்தில் சக்தி வழிபாடு விளக்கம் பெறும் பாங்கு முறையான வழிபாட்டால் எய்தலாகும் விழுப்பயன் என்ற தலைப்புக் களில் இந்த ஆய்வுரை அமைகிறது.

## சித்தாந்த நோக்கில் சக்தி பற்றிய விளக்கம்

"அருளது சக்தியாகும்" என்று சிவஞான சித்தியார் வரையறுக்கிறது. சக்தி என்பது தமிழ் மரபிற்கேற்ப இனி சக்தி என்றே கூறப்பெறும். பரம சிவனாம் முதல்வனோடு பிரிப்பின்றி செம்பாதியாய் விளங்குபவளே சத்தி என்பதும் சத்தியை விட்ட சிவனில்லை சிவனை நீங்கிய சத்தி யில்லை என்பதும் சித்தாந்த வாய்பாடாகும். ஆகவே சத்தி வழிபாடு என்பது சிவசத்தியாகிய அருள்வழிபாடே என்பது போதரும்.

## வழிபாடு என்பதின் வகைமை

வழிபடு என்ற வினைச் சொல்லின் நீட்சியாகிய தொழிற்பெயரே வழிபாடு எனக் கருதலாம். வழிப்படுத்துதல் - ஆற்றுப்படுத்துதல் என்பன ஒருபொருட் கிளவிகளாம்.

இவ்வழிபாடு பலதிறப்படினும் புறவழிபாடு, அகவழிபாடு என்று இருவகைமையுள் வைத்து நோக்கத்தகும். பொதுவாகக் கூறுமிடத்து எங்கும் வியாபகமாயுள்ள சிவசத்தியை, திருக்கோயிலில் சென்று வழிபடுவது புறவழிபாடாகக் கொள்ளப்படும்.

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்று திருமூலர் வரையறுத்த வழியில், மூலாதாரத்தினின்று மூண்டெழுத்தக்க குண்டலினி சத்தியை உண்முகமாக உன்னி, உயர்த்தி, பிரமரந்திர சகஸ்ரதளம்' என்னும் தலைக்கு மேல் உள்ள சந்திர கலையாகி ஒளிரும் பராசக்தியோடு இணைத்து வழிபாடு நிகழ்த்தலாம். இஃது அகவழிபாடு என்று கொள்ளப்படும்.

இவ்விரு வகையுள் திருமந்திரத்தில் பெரிதும் விளக்கம் பெறுவது ஆற்றலை ஒன்று திரட்டி ஏற்றம் பெறலாகும், அகவழிபாடே ஆகும். சக்திக்கு ஆத்ம சமர்ப்பணம் புரிந்து மகாகவி பாரதியார், உடலின் ஒவ்வோர் உறுப்பினையும் சுட்டி 'சக்தி தனக்கே கருவியாக்கு' என்று பாடிய பாங்கு இங்கு நினைக்கத்தகும். சிவன் என்ன சீவன் என்ன வேறில்லை என்று பிறிதோரிடத்தில் கூறியவாறு, ஒவ்வோர் ஆன்மா வோடும் ஒன்றாயிருந்து இயக்கம் பெறுவிக்கும் ஆன்மசிற்சத்தியை ஈண்டு அவதானிக்கலாம்.

## திருமந்திரத்தில் சக்தி வழிபாடு விளக்கம் பெறும் பாங்கு

நான்காம் தந்திரம் சத்திபேதம், வயிரவி மந்திரம், பூரண சத்தி, ஆதாரவாதேயம் எனும் தலைப்புக்களிலும், மற்றும் ஆங்காங்கேயும் சத்திவழிபாடு பற்றிய செய்திகள் விரவியுள்ளன.

மாமாயை, மாயை, வயிந்தவம், வைகரி
ஓ மாயை உள்ஒளி ஓர்ஆறு கோடியில்
தாம்ஆன மந்திரம் சத்திதன் மூர்த்திகள்
ஆம்ஆய் அலவாம் திரிபுரை ஆங்கே. (1045)

திரிபுரை, சுந்தரி, அந்தரி சிந்தூரப்
பரிபுரை, நாரணி, ஆம்பால வன்னத்தி
இருள்புரை, ஈசி மனோன்மணி என்ன
வருபல வாய்நிற்கும் மாமாது தானே. (1046)

என்ற பாடல்களில் திரிபுரை என்ற பெயரில் மும்மண்டலத் தலைவியாக விளங்கும் சத்திதேவி ஒவ்வோர் பாங்கிலும் செயற்படும்போது பற்பல பெயர் தாங்கி நிற்கும் சத்தி பேதச் செய்திகள் கூறப்படுகின்றன.

**அவளை அறியா அமரரும் இல்லை**
**அவள்அன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை**
**அவள்அன்றி ஐவரால் ஆவதொன்று இல்லை**
**அவள் அன்றி ஊர்புகும் ஆறு அறியேனே!** (1053)

என்ற பாட்டு, சந்திர மண்டலத்தில் விளங்கும் சத்திதேவியின் மகிமையைப் பறைசாற்றுகிறது. இதில் நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுரன் சதாசிவன் ஆகிய ஐவரும் சத்தியை முன்னிட்டே சீவர்களைத் தொழிற் படுத்த இயல்கிறது என்பதும், அவளே முத்திக்கு இட்டுச்செல்ல வல்லவள் என்பதும் விண்டுரைக்கப்படுகிறது.

அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்
அறிவார் அருவுரு வாம்அவள் என்பர்
அறிவார் கருமம் அவள்இச்சை என்பர்
அறிவார் பரனும் அவளிடத் தானே. (1054)

என்ற பாட்டில் அவளே ஆனந்த ரூபிணி, அறிவாம் அருஉரு, செயலாற்றத் தூண்டும் இச்சை, சிவபெருமானை ஆட்கொண்டவள் என்பன கூறப்பெறுகின்றன.

அடுத்து வரும் பாடல்களில் சிவனும் சத்தியும் இணைந்தே செயற்படுதல், சத்தியே யாவுமாய் விளங்குதல், இன்ப ஞானங்களை சத்தியே வழங்குதல் போன்ற செய்திகள் கூறப்படுகின்றன.

ஆதார சத்தியாக உருக்கொள்ளும் பாங்கு ஆதார வாதேயம் என்ற பகுதியில் முதல் பாடலாக அமைந்துள்ளது. ஆதாரம் + ஆதேயம் எனில் இடமும் இடத்தில் உள்ள பொருளும் என்பதே பொருள். இவ்வாறு அருளம்மையாம் சத்தியே எங்கும் ஆரோகணித்திருப்பதை இப்பகுதிப்பாடல் விளக்குகிறது.

நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
தான்இதழ் ஆனவை நாற்பத்து நால்உள
பால்இதழ் ஆனவள் பங்கயம் மூலமாய்த்
தான்இதழ் ஆகித் தரித்திருந் தாளே (1155)

## இதன் பொருள்

நாலிதழ் பொருந்திய மூலாதாரம், ஆறாம் ஆதாரமாம் ஆக்ஞை ஆகிய இவற்றின் இடையே சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி எனப்படும் ஆதார சக்கரங்களில் முறையே 6, 10, 12, 16 என்றவாறு இதழ்கள் அமைந்துள்ளமைக்கு ஏற்ப (6+10+12+16=44) தொண்ணூறு நரம்புகள் செயல்படுகின்றன. அதாவது 44 நரம்புகள் செயலை செய்வன. 44 நரம்புகள் செயலை அறிவன. இவற்றோடு ஆக்ஞா சக்கரத்தே ஆணாகவும், பெண்ணாகவும், திகழும் அருளம்மையின் ஆற்றலாக 2 சேர்க்க தொண்ணூறு நரம்புகளின் இயக்கம் விளக்கம் பெறுகிறது.

அஃதாவது மூலாதாரத்தினின்று உயிர்ச்சத்தியை உந்திச் செலுத்தி ஆக்ஞா சக்கரம் - ஒளிவட்டத்தில் சந்திரகலையில் குண்டலினி சக்தியும், பராசத்தியும் கூடி இருக்கச் செய்தல். இவ்வாறு சத்தி வழிபாடு இங்கே ஆற்றலின் எழுச்சியாகி, அறிவியல் மகத்துவம் அடைகிறது.

இவ்வாறு பற்பல பாடல்களில் சத்தி வழிபாடு அல்லது சத்தியின் சீர்மை பற்றி அறியலாகும். குறிப்பாக மூலாதாரத்தே மூண்டெழும் உயிர்ச் சத்தியின் உந்து சத்தியாக உள்ள குண்டலினி என்னும் குமரி அல்லது வாலை சித்ரணிநாடி எனும் முதுகுத்தண்டின்வழி வளைந்து நெளிந்து அடுத்தடுத்த

ஆதார நிலைகளில் பொருந்தி ஆக்ஞையை அடைந்து ஆங்கே ஒளி வட்டமாய் அமைவது பற்றியும், இதற்கு ஏதுவாக பிராணாயாமம் எனும் மூச்சுப் பயிற்சி பற்றியும் அ+உ+ம் சேர்ந்த ஓம் எனும் பிரணவச் சிறப்பு பற்றியும் பல விஞ்ஞான மெய்ஞ் ஞானக் கூறுகள் பாடல்களில் அமைந்துள்ளன. இவை படிக்கத்தக்கவை என்பதைவிடப் பயிலத்தக்கவை என்பதே பொருந்தும்!

'வாயும் மனமும் கடந்த மனோன்மணி' என்ற பாடல் மனோன்மணி சத்தி ' அரனுக்குத்தாயாக, மகளாக தாரமாக முரணி அமையும் பெற்றியைக் கூறுகிறது.

'சிவம் சத்தி தன்னை ஈன்றும்' என்னும் சித்தியார் பாடல் இங்கு நினைக்கத்தகும்.

'முத்து வதனத்தி', தாரமும் ஆகுவள்' என்ற திருமந்திரப் பாடல் களும் அரிய தத்துவ விளக்கங்கள் ஆகும். சத்தியின் வடிவம் ஐந்து முகம், (5X3) 15 கண்கள், பத்துக்கரங்கள் உடைய கோலம் பொருந்தியது எனவும், சூரியன், சந்திரன், அக்கினி, இம்மூன்றும் முக்கண்கள் எனவும் விளக்கமாகின்றன. ஆகவே சிவனுடைய பெற்றி எல்லாம் சத்தியின் பெற்றியாக நினைக்கப்படுகிறது என்லாம்.

**முறையான வழிபாட்டால் எய்தலாகும் விழுப்பயன்**

சிவயோகம் பாவனை என்பது போல சத்தி உபாசனை மேற் கொள்வோர், ஒவ்வொரு நிலையிலும், திருமந்திரம் கூறுமாறு சத்தியை பாவனா ரூபமாகக் கொண்டு பயின்று, மனம் ஒன்றிப் பரவினால் எல்லாப் பேறுகளும் சித்திப்பதோடு வீடுபேறும் நிச்சயம், சத்தி உபாசனைக்குரிய யாமள ஆகமச் செய்திகளாக இவை சுட்டப்பெறும்.

ஆலம் உண்டான் அமுதுஆங்கு அவர்தம்பதம்
சாலவந்து எய்தும் தவத்து இன்பம் தான்வரும்
கோலிவந்துழ எய்தும் குவிந்த பதவையோடு
ஏலவந்து ஈண்டி இருந்தனள் மேலே (1211)

அண்டம் முதலாய் அவனி பரியந்தம்
கண்டது ஒன்று இல்லைக் கனங்குழை அல்லது
கண்டனும் கண்டியும் ஆகிய காரணம்
குண்டிகை கோளிகை கண்டத னாலே (1210)

என்றவாறு சர்வம் சத்திமயமாய் அருட்சத்தி ஆற்றலாய் சத்தி விளக்கப் பெற்று ஆன்ம இன்பம் அடையும் பெற்றி விதந்து கூறப்படுகிறது.

'சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலனருள் மேவுநாள் எந்நாளோ'

என்ற தாயுமான சுவாமிகளின் சிந்தனை வழி திருமூலர் அருள் வேட்டுவோம்!

# 33. திருவிசைப்பா, திருமந்திரத்தில் இயற்கை

முனைவர் சிவ. சண்முகசுந்தரம், காஞ்சிபுரம்.

பன்னிரு திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறையுள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் இரண்டு நூல்கள் உள்ளன. இவற்றைத் திருமாளிகைத்தேவர் உள்ளிட்ட ஒன்பது அருளாளர்கள் அருளியுள்ளனர், இவற்றுள் "மழை" என்னும் சொல் வரும் இரு திருவிசைப்பாப் பாடல் களில் அச்சொல் "மேகம்" என்னும் பொருளில் வருகின்றது. இப்பாடல்கள் கூறும் சிவபெருமானின் சிறப்புகளை முதலில் காண்போம்.

தரவார் புனம்சுனைத் தாழ்அருவி
தடங்கல் லுறையும் மடங்கலமர்
மரவார் பொழில் எழில் வேங்கை எங்கும்
மழைசூழ் மகேந்திர மாமலை மேற்
சுரவாஎன் னும்சுடர் நீள்முடிமால் அயன்இந்
திரன்முதல் தேவர்க்கெல்லாம்
குரவாஎன் னும்குணக் குன்றேஎன்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்தனையே -31

இப்பாடலில் மேலான நீண்ட புனம், சுனையினின்றும் வீழ்கின்ற அருவி, சிங்கம் தங்கியிருக்கும் படியான பெரிய குகை, குங்கும மரம் நிறைந்த சோலை, அழகிய வேங்கை மரங்கள் ஆகிய எவ்விடத்தும் மேகம் தவழ்கின்ற மகேந்திர மலையிலும் எழுந்தருளியுள்ள தேவன் என்றும் ஒளிவீசும் நீண்ட முடியுடைய திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாம் தலைவன் என்றும் நற்குணக்குன்று என்றும் சிறப்புடைய தில்லையில் உள்ள நடராசப் பெருமானைத் திருமாளிகைத் தேவர் கூறுகின்றார்.

கிழைதவழ் கனகம் பொழியுநீர்ப் பழனங்
கெழுவுகம் பலைசெய் கீழ்க் கோட்டூர்
மழைதவழ் மணியம் பலத்துள் நின்றாடும்
மைந்தர்தம் வாழ்வுபோன் றதுவே 107

ஒளிவீசுகின்ற பொன்சொரியும் நீரையுடைய வயல்களில் இருந்து ஆரவாரம் எழும்புதலானது திருக்கீழ்க் கோட்டூரில் உள்ள மேகம் தவழும் மாணிக்கச் சபையிலிருந்து ஆடும் நடராசப் பெருமானது வாழ்வளிக்கும் ஒலி

போன்று எனக்கு விளங்குகின்றது என்று இறைவனைக் காதலித்தாள் ஒருத்தியின் கூற்றாய் அமையும் முறையில் இப்பாடலைக் கருவூர்த்தேவர் அருளியுள்ளார்.

பன்னிரு திருமுறைகளுள் திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாகத் திகழ்கிறது. சைவ சமயத்தின் தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் விளங்கும் இந்நூலில் சிவபெருமானின் முதன்மை, அவனே அனைத்துப் பொருள்களுமாக உள்ளமை, பராசக்திக்கும் முனிவர்க்கும் உபதேசித்தமை, அவனை வழிபடுதலின் நோக்கம், முறை, பயன், திருக்கோவில்களில் வழிபாடு இல்லாமையால் வரும் தீமை, சத்தியை வழிபடுதலின் பயன், சீவன் சிவத்தன்மை அடைதல், மழையின் பயன் ஆகியவற்றைத் திருமந்திரத்தில் "மழை" எனப்பொருள் தரும் சொற்றொடருடைய பாடல்களின் வழி அறிவோம்.

**சிவபெருமானின் முதன்மை**

உலகத்தின் உயிராகவும் மண்ணாகவும் உயர்ந்த காற்றாகவும் கதிரவனாகவும் திங்களாகவும் தீயாகவும் ஆதியாகவும் உள்ள இறைவன் பெரிய மழைமேகம் பொருந்திய வானமாகவும் நீராகவும் ஆகி விளங்கு கிறான். பின் அவற்றை அழிப்பவனுமாகித் திக்குப் பாலர்க்குத் தலைவனாகவும் உள்ளான் என்பதனை,

**உலகம் தொத்துமண் ணொத்துயர் காற்றை**
**அலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்**
**நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்**
**செலவொத் தமர்திகைத் தேவர் பிரானே** - 3001

என்னும் பாடலால் அறியலாம்.

எங்கும் பொழியும் மழை போல் இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்து இவ்வுலகில் பல தலங்களில் உள்ளான். மேல் உலகிலும் மற்றும் எங்கும் இருக்கின்றான். எனவே அவன் எல்லாப் புவனங்களிலும் நிறைந்து விளங்கும் புண்ணிய மூர்த்தியாவான். அப்பெருமான் சீவன் களின் அஞ்ஞான இருளிலும் ஞான ஒளியில் கதிரொளி போன்றும் விளங்குகிறான் என்பதனை,

**இங்குநின்றான் அங்கு நின்றனன் எங்குஉளன்**
**பொங்கிநின்றான் புவனாபதி புண்ணியன்**
**கங்குல் நின்றான் கதிர்மாமதி ஞாயிறு**
**எங்கும் நின்றான் மழைபோல் இதைதானே** -3021

என்னும் பாடல் வழி உணரலாம்.

**அனைத்துப் பொருள்களாகவும் உள்ளமை**

இறைவனான சிவபெருமானே இவ்வுலகத்தைத் தாங்கிக் கொண்டு வானவடிவாய் விளங்குகிறான். அப்பெருமானே சுடும் தீயாகவும் சூரியனாகவும் சந்திரனாகவும் இருக்கிறான். அவனே மழையாகிய அருளைப் பொழியும் சக்தியாகவும் திகழ்கிறான். அவனே அகன்ற மலையாகவும் குளிர்ந்த கடலாகவும் உள்ளான் என்று

"தானே இருநிலம் தாங்கி விண்ணாய் நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்
தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்
தானே'தடவரை தண்கடல் ஆமே" -10

என்னும் பாடல் அறிவிக்க அறியலாம்.

சிவபெருமானின் பெருமையை நோக்குமிடத்து அவனுக்கு ஒப்பான பெருங்கடவுள் சேய்மையிலும் இல்லை; அண்மையிலும் இல்லை. முயற்சியும் அம்முயற்சியின் பயனும் மழையும் அம்மழை பெய்கின்ற மேகமும் ஆகிய எல்லாம் "நந்தி" என்னும் பெயருடைய அவனேயன்றிப் பிறர் இல்லை என்பதனை,

அயலும் புடையும் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதும் ஒன்று இல்லை
முயலும் முயலில்முடிவும் மற்றாங்கே
பெயலும் மழைமுகில் பேர்நந்தி தானே -11

என்னும் பாடல் உணர்த்த உணரலாம்.

தலையின் மீது பொருந்திய ஒளிமயமான வானத்தில் விளங்கும் அருள்மூர்த்தியாகிய இறைவன் உடலாகவும் உயிராகவும் உலகமாகவும் கடலாகவும் இருண்ட மேகமாகவும் மழைநீர் பொழிபவனாகவும் இவற்றுக்கு நடுவே உள்ளவனவாகவும் அழியாதவனாகவும் எங்கும் நிறைந்திருப்பவனாகவும் விளங்குகிறான் என்பதனை,

உடலாய் உயிராய் உலகம் அதுவாகி
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்கும் தானாகி
அடையாப் பெருவெளி அண்ணல் நின்றானே - 413

என்னும் பாடல் குறிப்பிடுவது காணலாம்.

ஏகமாய் விளங்கும் இறைவனே ஒருகாலத்தில் ஒப்பற்றச் சுடராய் விளங்குவான். உலகம் அழிய வேண்டிய காலத்தில் சூறாவளிக்காற்றாய் விளங்குவான். ஒரு காலத்தில் பெருமழையைப் பொழிந்து பெருவெள்ளம்

தோன்றச் செய்வான். ஒரு காலத்தில் திருமாலாய் விளங்கி உலகத்தைக் காப்பவனுமாவான் என்பதனை,

தான்ஒரு காலம் தனிச்சுட ராய்நிற்கும்
தான்ஒரு கால்சண்ட மாருத மாய்நிற்கும்
தான்ஒரு காலம்தண் மழையாய் நிற்கும்
தான்ஒரு காலம் தண் மாயனும் ஆமே - 415

என்னும் பாடலால் அறியலாம். இவ்வாறு சிவபெருமான் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நிற்றலானது அவன் பிற பொருள்களால் அடைக்கப்படாத பெருவெளியாய் நிற்றலினாலேயாம் என்பதனையும் அவனே எல்லாம் ஆக விளங்குகிறான் என்பதனையும் மேற்காணும் பாடல்களினின்றும் அறியலாம்.

**சிவபெருமான் பராசக்திக்கும் முனிவர்க்கும் உபதேசித்தமை**

மழைக்காலமும் கோடைக்காலமும் ஆகிய இரண்டும் இரண்டறக் கலந்ததும் எரியும் வறட்சி அடைந்ததும் ஆகிய ஊழிக்காலத்தில் படைப்புத் தொடங்குவதற்கு முன்பு வடமொழியையும் தென்மொழியையும் ஒரே காலத்தில் இறைவன் பராசக்திக்கு உலகம் உய்ய திருவருள் செய்தான் என்பதனை,

மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்று
ஏரியும் நின்றுஅங்கு இளைக்கின்ற காலத்து
ஆரியமும் தமிழும் உடனே சொலிக்
காரிகை யார்க்குக் கருணை செய்தானே - 65

என்னும் பாடலின் வாயிலாக அறியலாம்.

எட்டுத்திசைகளிலும் எழுந்து பெரிய மழை பெய்தாலும் வளர்ச்சியைத் தரும் கடமைகளைத் தடையின்றிச் செய்யுங்கள் என்று தம்பால் கொழுவிய குளிர்ந்த பவளம் போன்ற குளிர்ந்த சடையிடம் அன்பு கொண்ட சனகர் முதலிய நான்கு முனிவர்க்கும் சிவபெருமான் அருள் உபதேசம் செய்தான் என்று

எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையும்
செழுந்தண் நியமங்கள் செய்யுமின்என்று அண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே - 72

என்னும் பாடல் வழி உணரலாம்.

***சீவன் சிவத்தன்மை அடைதல்***

சிவனே உலகில் எல்லா உயிர்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறான். அதாவது நான் இந்தச் சீவனே என்று எண்ணுபவனான சிவபெருமான்,

உடலான இதனைத் தான் எனவே எப்பொழுதும் நினைக்கும் உயிர் போல் உள்ளான். அவன் வானில் பரவும் பெரிய மழை மேகத்தைப் போல அருள்மழை பொழிகிறவனாகவும் உள்ளான். அதனால் சீவனான நான் வானநாதனாக ஆனேன் எனப்பொருள் தரும் பாடல் வருமாறு :

நான்இது தான்என நின்றவன் நாடோறும்
ஊன்இது தான்உயிர் போல்உணர் வான்உளன்
வான்இரு மாமுகில் போல்பொழி வான்உளன்
நான்இது அம்பர நாதனும் ஆமே - 1790

**ஞானியின் உடல் எரித்தல் கூடாது**

சீவன், சிவனானபின் அது ஞானம் பெற்றதாகிறது. இந்நிலையில் இறந்த உடலை எரிக்காமல் மண்ணுக்குள் இடவேண்டும் என்பார் இராமலிங்க அடிகள். இவருக்கு முன் பல்லாண்டுகட்கு முன் தோன்றிய திருமூலரும் அவ்வாறே கூறியுள்ளமை நினைக்கத்தக்கது. அளவிலா ஞானம் பெற்ற ஞானியின் உடல் தீயில் இடப்பட்டு எரிந்தால் சிவபெருமான் எழுந்தருளியுள்ள சிவன் கோவிலைத் தீயிட்டுக் கொளுத்தியதைப் போன்ற தாகும். அந்த நாட்டில் மழை பெய்யாது, உலகத்தில் பஞ்சம் உண்டாகும். நினைத்தற்கு அரிய மன்னரும் பதவியை இழப்பார் என்பதனை,

எண்ணிலா ஞானி உடலெரி தாவிடின்
அண்ணல்தன் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணில் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பா ரரசே - 1911

என்னும் பாடல் தெரிவிக்கக் காணலாம்.

**சீவன் சிவனை வழிபட வேண்டுவதின் நோக்கம், முறை, பயன்**

சீவன், எண்ணற்ற துன்பம் அடையும் இம்மானிட வாழ்வில் பிறவாமையாகிய பேறு பெற இறைவழிபாட்டை மேற்கொண்டு திருவருள் வழி நிற்க வேண்டும். இதன் விளக்கம் இங்கு காண்போம். இரண்டு பாண்டங்கள் ஒரே வகை மண்ணால் செய்யப்பட்டன. அவற்றுள் ஒன்று தீயிலிட்டுச் சுடப்பட்டது மற்றொன்று தீயிலிடப்படாதது. தீயைச் சேர்ந்தது வன்மை பெற்றதாயிற்று. தீயைச் சாராதது தன்னியல்பில் மென்மையாய் இருந்தது. விண்ணின்று மழை பெய்யின் தீயைச் சாராத மட்கலன் அழிந்து மீண்டும் மண்ணாகி விடும். தீயினைச் சார்ந்த மட்கலம் அழியாது நிலைபெற்றிருக்கும். தீயினைச் சாராத மட்கலம் போன்றது வழிபாட்டை மேற்கொள்ளாத, திருவருள் வழி நில்லாத உடல். அது மீண்டும் பிறப்பதற்குக் காரணமாகி விடும். இவ்வாறு எண்ணில்லாத மாந்தர் இறக்கின்றனர். இக்கருத்தினை விளக்கும் பாடல் வருமாறு :

மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்னு நீர்விழின் மீண்டுமண் ஆனாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே - 143

இதனால் உடம்பை ஒருபொருளாகக் கருதாமல் அதனை நல்வழியில் செலுத்த இறைவழிபாட்டை மேற்கொள்ளச் செய்தல் அவசியம் என்பது அறியலாகிறது.

வானத்தினின்றும் தானே பெய்யும் மழை போன்று இறைவனும் தானே வலியவந்து அருளைப் பொழிவானோ எனச் சிலர் ஐயுறுவர். சிவபெருமான் தன்னைப் பிரிந்த கன்றைத் தாய்ப்பசு கதறி அழைப்பது போல் தன் அடியாரைத் தன்பால் கூவி அழைப்பவனே. ஆயினும் நான், என் பெருமானை இன்று அழைப்பது - வழிபடுவது ஞானம் பெறுதல் பொருட்டேயாகும் என்கிறார் திருமூலர். இதனை,

வானின் றழைக்கும் மழைபோல் இறைவனும்
தானின் றழைக்கும் கொல்என்று தயங்குவார்
ஆனின் றழைக்கும் அதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே - 30

என்னும் பாடலால் அறியலாம்.

வானில் இயங்கும் ஒளியுடைய சந்திரன் ஒளிகுன்ற இருளாகும். அதுபோல் செல்வம் குறைய தளர்ச்சியுண்டாகி வருந்துதலை யாரும் கூற வேண்டியதில்லை. ஆதலால் தேவர் தலைவனாகிய சிவபெருமானைப் பொருள் மயக்கத்தால் ஏற்படும் செல்வச் செருக்க நீங்கப் பெற்று நாடுங்கள். அவன் மழைக்காலத்து மேகம் போன்று பெருஞ்செல்வம் அளிப்பான் என்பதனை,

இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்கும்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே - 168

என்னும் பாடல் தெரிவிக்கத் தெளியலாம்.

சூரியனும் சந்திரனும் தம் இயக்கத்தில் மக்களின் வாழ்நாளைக் கணக்கிட்டு படிமுறையாகக் குறைத்து நிற்பன. உடல் அழியாது நிலைபெறும்படி பொழிகின்ற அமுதமழை, யோகத்தால் ஆற்றல் மிகுகின்றவனது உடலினுள்ளே நீங்காது நிலைபெற்றுள்ளது. பிரணாயாமத்தால் நாடிகள் மாற்றத்தை எய்தப் பெறுகின்ற யோகி, "அண்டம்" எனப்படு கின்ற தலைக்கு அப்பால் நிராதாரத்தில் சென்று அதனை ஒளி மண்டலமாகச் செய்ய அங்கு ஈசன் எதிர்பட்டு விளங்குவான் என்பதனை,

கதிரவன் சந்திரன் காலம் அளக்கும்
பொதிரவ னுள்ளே பொழிமழை நிற்கும்
அதிரவன் அண்டப் புறஞ்சென் றடர்ப்ப
எதிரவன் ஈசன் இடமது தானே - 868

என்னும் பாடல் விளக்க விளங்கலாம்.

மேல், கீழ், பக்கம் என்ற பாகுபாட்டைக் கடந்து ஒரே ஒளியாய்க் காணும்பொழுது எங்கும் பரவிய பரம்பொருள், அவனே தான் ஆன இறைமைக் குணங்கள் ஆறையும் (அவாவின்மை, இறைமைத் தன்மை, புகழ், செல்வம், ஞானம், வீரம்) மழைமேகம் தங்கும் கற்பக மரத்தைப் போன்று அருள்பொழிவான் என்கிறது பின்வரும் பாடல் :

மேல்என்றும் கீழ்என்றும் இரண்டறக் காணுங்கால்
தானென்றும் நானென்றும் தன்மைகள் ஓராறும்
பாரெங்கும் ஆகிப் பரந்த பராபரம்
கார்ஒன்று கற்பகம் ஆகிநின்றானே - 1706

சுவாதிட்டான சக்கரத்தினின்றும் ஊர்த்துவ முகமாய்ப் வான் கங்கையின் நீரைக்கொண்டு கருக்கொண்ட மேகம் மேல் செல்வத்தைப் போல் மேலே சென்று தேவர்கள் தளிர்த்துள்ள பாசத்தில் கிடந்து தயங்கி நின்று வழி படலில் தவறாமல் வழிபட்டவர்க்கு எம்பெருமானின் அருள் வாய்க்கப் பெறும் என்பதனை,

உழைக்கெண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி
மழைக்கொண்ட மாமுகில் மேற்சென்று வானோர்
தழைக்கொண்ட பாகம் தயங்கிநின் றேத்தல்
பிழைப்பின்றி எம்பெரு மானரு ளாமே - 1833

என்னும் பாடல் உணர்த்துகிறது.

சிவத்தை நினைந்து தியானித்தலில் வல்லவர் சுவாதிட்டான மலரினின்று சுழுமுனை வழியாய் மேல் நோக்கிப்பாயும் உணர்வு என்னும் நீரை ஏந்தித் தவறு இல்லாது இறைவனின் பெருந்தவத்தை விரும்பி இரண்டு கண் எனும் மலர்களைச் சேர்த்தலால் தோன்றும் திருவடியைப் பற்றி மழை பொழியும் மேகம் போன்று இடைவிடாது பரந்து அத்திருவடி ஒளியில் நிலைத்து நிற்றல் வேண்டும் என்று,

உழைக்கவல் லோர்நடு நீர்மலர் ஏந்திப்
பிழைப்பின்றி ஈசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத்து இனமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே - 1839

என்னும் பாடல் சிவத்தை தியானிக்கும் முறையைக் கூறுகிறது.

நீர் இல்லாமல் உணர்வு பாயும் சகசிரதளமான நிலத்தில் மரகதஒளி விளங்கும் ஞான சாதனையைச் செய்து இந்த உண்மையைக் காண வல்லவர் இலர். மிக்க மழையின்றிப் பெருகும் உணர்வாகிய நீரின் தன்மை, பொறிகளின் வயப்பட்ட மனம் என்னும் திடரில் பொருந்தி நில்லாது என்பது புலப்படும். இக்கருத்தை உணர்த்தும் பாடல் வருமாறு :

நீரின்றிப் பாயும் நிலத்தினில் பச்சையாம்
யாரும் என்றும் அறியவல்லார் இல்லை
கூரும் மழை பொழியாது பொழிபுனல்
தேரின் இந்நீர்மை திடரின் இல்லாதே - 2920

இதனால் இறையருள் பெற மனம் பொறிகளின் வழிச் செல்லுதல் கூடாது என்பது அறியலாகிறது.

அகண்ட சிவத்தை அடையும் தவமான உழவைச் செய்து உள்ளம் ஒருமையடைந்த காலத்தில் எண்ணம் என்னும் மழை பெய்யாமல், சிவபூமிக்குரிய சக்தி பொருந்த மலபரிபாகம் உண்டாக வினை போகத்தைக் கொடுக்காது. அந்நிலையில், வளரும் ஒளிக்கதிர்களை உடைய சிவபெருமான் பொருந்தி விளங்குவார் என்பதனை,

உழவு ஒன்றுவித்து ஒருங்கின காலத்து
எழுமழை பெய்யாது, இருநிலச் செல்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவான் வளர்சடை யோனே - 2913

என்னும் பாடல் அறிவிக்கிறது.

பந்த பாசங்களால் சூழப்பட்ட உலகில் எட்டு வகையான வடிவாய்த் திகழும் சிவனை உணர்ந்தவர்கள் எட்டுத் திசைகளிலும் திரியும் திசை யானைகளுடன் தேவர் கூட்டமும் தீயும் மழையும் இயங்குவதற்கு இடமான வெளியும் தம்முள் பற்றுக் கோடாகக் கொண்டு விளங்குவதைக் காணலாம் என்னும் செய்தியை,

புரியும் உலகினில் பூண்ட எட்டானை
திரியும் களிற்றொடு தேவர் குழாமும்
எரியும் மழையும் இயங்கும் வெளியும்
பரியும் ஆகாசத்தில் பற்றது தானே - 2534

என்னும் பாடல் அறிவிக்க அறியலாம்.

சிவன்பால் ஊனும் உருகும் உள்ளமும் உடையவரிடம் அவர் நிலைபெற்று விளங்குவார். அத்தகையோர் உலகினைத் தாமே நடத்திச் செல்லும் தலைமையுடையவர் ஆவர். அவர்கள் சிவதத்துவத்தை அருளும் மூர்த்தியும் ஆவர். அவர்களால் உலகில் மழைவளம் மிகும் என வேதங்கள் அறுதியிட்டுக் கூறுகின்றன என்பதனை,

தானே உலகில் தலைவன் எனத்தகும்
தானே உலகுக்கோர் தத்துவமாய் நிற்கும்
தானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்
ஊனே உருகிய உள்ளம் ஒன்றாமே - 2598

என்னும் பாடல் தெரிவிக்கிறது.

இப்பாடல்கள் வாயிலாக சிவபெருமானை வழிபடும் முறையும் பயனும் அறியலாகின்றன.

### சக்தி வழிபாட்டின் பயன்

ஒளிசெய்யும் பராசக்தி உள்ளத்தில் எழுந்தருளினால் களிக்கும் மனத்தில் உண்மைப் பொருளை விளக்கித் தெளிவு தரும்; மழையுடன் செல்வத்தையும் உண்டாக்கும். இவளை அறிந்து கொள்வோர்க்கு இங்ஙனம் அருள் செய்யும் என்று,

ஒளிக்கும் பராசக்தி உள்ளே அமரில்
களிக்கும் இச்சிந்தையில் காரணம் காட்டித்
தெளிக்கும் மழையுடன் செல்வம் உண்டாக்கும்
அளிக்கும் இவளை அறிந்து கொள்வோர்க்கே - 1345

என்னும் பாடல் அறிவிக்கிறது. இதனால் சக்தி வழிபாட்டால் அடையும் பலனை அறிய நேரிடுகிறது.

### திருக்கோவில்களில் வழிபாடு தவறாமையின் அவசியம்

ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோவில்க ளெல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே - 517

இப்பாடலின் வழி, காலனை உதைத்தவனான சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் கோவில்களில் மறைகளில் அருளியுள்ளவாறு பூசைகள் நடைபெறுதலில் தவறுமாயின் போக்க முடியாத நோய்கள் மிகும். மழை நிலத்தில் பெய்யாது போற்றுதற்கு அரிய மன்னரும் போர் ஆற்றலில் குறைவர் என்று அறிதலால் கோவில்களில் வழிபாடுகள் தவறாமல் நடைபெற வேண்டுதலின் அவசியம் உணரலாகிறது.

### மழையின் பயன்

இந்நிலவுகத்திற்கு மழையே முதற்காரணமாக விளங்குதலால் அதன் சிறப்பினையும் திருமந்திரத்தில் கூறியுள்ளார் திருமூலர். வற்றாத அமுத ஊற்றுப் போலச் சுரந்து பொழிகின்ற பெரிய மழை நீரால் பயன் தரும் பலமரங்கள் இயற்கையாக நிலத்தில் தோன்றி வளர்கின்றன. இனி

உழவரால் பயிரிடப்படுகின்ற பாக்கு, இளநீரையுடைய தென்னை, கரும்பு, வாழை முதலியனவும் அம்மழையினாலேயே மக்கட்கு நிரம்பிய உணவைத் தருகின்றன. பயிரிடப்படாத எட்டி முதலிய நச்சு மரங்களும் அம் மழையினாலேயே வளர்கின்றன என்று,

**அமுதூறு மாமழை நீரத னாலே**
**அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றும்**
**கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை**
**அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே** - 248

என்னும் பாடல் மழையினது சிறப்பைக் கூறுகின்றது.

இக்கட்டுரையில் மழையைக் குறிக்க மாமுகில் நீர், மழை, பெயல், மழைமுகில், கார்முகில், நீர்பொழிவான், பெயற்கொண்டல், மழைக்கொண்டல் ஆகிய சொற்றொடர்களும் மாரி என்னும் சொல் மழைக்காலத்தையும் கார் என்னும் சொல் மழை மேகத்தையும் குறிக்க வருவது காணலாம். மேலும் உலக வாழ்வுக்கு இன்றியமையாததான நீரை அளிக்கும் ''மழை'' என்னும் சொல் வரும் பாடல்களின் வழி மழையாகவும் மழைக்கு முதற்காரணமாகவும் விளங்கும் சிவபெருமானின் தலைமைச் சிறப்பு, அவரை பத்தியுடன் வழிபடும் முறை, அதனால் வரும் பயன் ஆகியன அறியலாயின.

# 34. ஒன்பதாம் திருமுறையில் சிவதத்துவம்

முனைவர் இரா. சந்திரசேகரன், நாமக்கல்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியங்கள் ஒரு பெரும் பங்கினை வகிக்கின்றன. அவரவர் செய்த வினைகளுக்கேற்ப நன்மை மற்றும் தீமைகள் அமையும் எனக்கூறி அருளாளர்கள் எனப் போற்றப் பெறும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி மக்களை நல்வழிப் படுத்த பாடுபட்டனர். சிவபெருமானைப் பொருளாகக் கொண்டு வழிபட்டு வருவது 'சைவசமயம்' ஆகும். இச்சமயம் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டு கட்கு முற்பட்ட பெருமை உடையது.

திருமுறைகள் சிவநெறியை மக்களிடையே அழகாக, அழுத்தமாக விதைக்கவல்லவை. பல்வேறு காலகட்டங்களில் வாழ்ந்த சமயச் சான்றோர்கள் இயற்றிய பாடல்கள் நம்பியாண்டார் நம்பி என்பவரால் தொகுக்கப்பட்டன. இருபத்தேழு சமயச் சான்றோர்கள் பாடிய 18, 326 பாடல்கள் 76 நூல்களாகத் தொகுக்கப்பட்டு பன்னிரு திருமுறைகள் என அழைக்கப்பட்டன. இப்பன்னிரண்டு திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறை என அழைக்கப்பெறும் திருவிசைப்பா மற்றும் திருப்பல்லாண்டு என்ற இருபகுதிகளாக இருபத்தொன்பது பதிகங்களை உள்ளடக்கியதாய், முந்நூற்றொரு பாடல்களை உடையதாய் விளங்குகின்றது.

தேவாரத் திருப்பதிகப் பாடல்களின் எண்ணிக்கையை நோக்கும் பொழுது ஒன்பதாம் திருமுறையில் பாடல்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. ஆனால் தேவாரத் திருப்பதிகங்கள் போலவே இசை நலமும், பொருள் நலமும் வாய்ந்தவை. ஒன்பதாம் திருமுறையாசிரியர் சமயக் குரவர்களின் வழியைப் பின்பற்றி உள்ளனர் என்பது இத்திருப்பதிகப் பாடல்களின் கருத்தாழத்தைக் காணும்போது தெள்ளெனத் தெரிகிறது. பன்னிரு திருமுறைகளையும் பல்வேறு நோக்கில் திறனாய்வாளர்கள் ஆராய்ந்து அதில் உள்ள உண்மைகளை அறிவுறுத்தி உள்ளனர். ஒன்பதாம் திருமுறையானது பெரும்பாலும் தொகுப்பு நூலாகத்தான் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இத்திருமுறையில் ஆய்வுகளும் அதிக அளவில் நடைபெற வில்லை. முழுமையான உரைப்பதிப்பும் தனியாக இந்நூலுக்கு என்று மிகுதியான அளவில் வெளிவரவில்லை. எனவே இவ்வொன்பதாம் திருமுறையை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு இத்திருமுறையில் காணப்படும்

சைவசித்தாந்தக் கருத்துக்களை விளக்கிக் கூறவேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சைவசித்தாந்தம்**

பிறவாயாக்கைப் பெரியோனாகிய இறைவன் படைத்த உலகத்திலுள்ள உயிர்கள் உலகிலுள்ள பொருள்களைக் கொண்டும் உடல்களைக் கொண்டும் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன. அவை அறிவு விளக்கம் பெறுவதற்கு இந்த உலகமும் உடலும் அவற்றிற்குத் தேவைப் படுகின்றன. உடலில் உள்ள கண், மூக்க, செவி முதலியன இல்லா விட்டால் உயிர்கள் ஒன்றையும் அறியமுடியாது. உலகில் பொருள்கள் இல்லாவிட்டால் அவை ஒன்றையும் நுகரமுடியாது. ஆக உயிர்களுக்கு அறிவு விளக்கம் ஏற்படும் பொருட்டே இறைவன் கருணை காரணமாக இவ்வுலகையும் மாயையிலிருந்து படைத்து உயிர்களுக்கு வழங்கியுள்ளான்.

"உடல் சடம் ஆதலால் அதுவம் மாயையிலிருந்தே தோற்றுவிக்கப் பட்டது என்பது தெளிவு. இந்த உலகத்துச் சடப் பொருள்களையும் உயிர்கள் சார்ந்துள்ள அனைத்து உடல்களையும் இறைவன் மாயையி லிருந்து தோற்றுவித்து ஒடுக்குகிறான் என்பது சைவசித்தாந்தக் கொள்கை"

உலகில் தோன்றிய உயிர்களில் மிகவும் உன்னதமான உயிர் மனித உயிராகும். அந்த உயிர் உய்வு பெற மிகவும் துணையாக இருப்பது சமய மாகும். அந்தச் சமயத்தில் உயர்வானது சைவ சித்தாந்த சமயம் ஆகும்.

இந்த சைவ சித்தாந்தம் கூறும் உயிரைப் பற்றியும் அந்த உயிரின் தன்மையைப் பற்றியும் அந்த உயிர் இறைவனை அடையத் தடையாக உள்ளவை எவை என்பது பற்றியும் அத்தடைகளை நீக்கிக்கொள்ள நாம் மேற்கொள்ள வேண்டியவைகளைப் பற்றியும் அதனால் உயிர்களுக்கு கிட்டும் வீடுபேறு பற்றியும் விளக்கிக் கூறுவது சைவ சித்தாந்தம் ஆகும். சிவபெருமானைப் பற்றிய நிலையையும் சிவனடி சேர்தற்கு உரிய நெறியையும் குறிப்பது சைவசித்தாந்தம் ஆகும் என்பர். இறைவனை எளிதில் எய்துவதற்கு உரிய நெறி சைவ சித்தாந்த செந்நெறி ஒன்றே ஆகும். இவ்வுண்மை திருமந்திரத்தில்

"கற்பன கற்றுக் கலை மன்னும் மெய்யோகம்
..........................................................
தற்பரம் கண்டுள்ளோர் சைவசித்தாந்தமே"

என்று திருமூலர் அருளிச் செய்துள்ளார். சித்தாந்தம் பல கோணங்களில் ஆய்வு செய்யப்பட்டுத் தருக்கநூல் அடிப்படையில் நிறுவப்பட்டு முடிவு அல்லது முடிந்த முடிவு என்றும் கூறலாம். சகலாகமப் பண்டிதர் ஆகிய அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியாரில்

"சிவாகமங்கள் சித்தாந்தமாகும்"

என்று அருளிச் செய்துள்ளதால், சிவாகமங்களும் சைவ சித்தாந்தமும் ஒன்றே என உணரலாம். சித்தாந்த பொருள் விளக்கம் என்பது முப்பொருள் உண்மை. முப்பொருள் இயல்பு முதலியன ஆகும். சித்தாந்தக் கொள்கை விளக்கம் என்பது இறைவன் சொரூபநிலை, தடத்தநிலை, முத்தியில் உள்ள ஆன்மாவின் நிலை முதலியன ஆகும்.

திருமுறைகள் சைவசமயத்தின் இலக்கியக் கருவூலங்கள் சித்தாந்த சாத்திரங்கள் அவற்றிற்கு இலக்கணங்களாகத் திகழ்கின்றன. திருமுறை களைச் சொல்லிய பாட்டின்வழி பொருள் உணர்ந்து கற்க விரும்பினால் சைவசித்தாந்த சாத்திரங்களைப் பயில வேண்டுவது இன்றியமையாததாகும்.

**பதி, பசு, பாசம்**

சைவ சித்தாந்தத்தின் முக்கிய தத்துவக் கொள்கையாகப் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மை பேசப்பெறும் இவை சைவ சித்தாந்தம் காட்டும் அடிப்படை உண்மையாகும். சைவ நூல்களில் முடிந்த முடிவைக் கூறும் நூல்களைச் சைவ சித்தாந்தம் என்பர். சிவம் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்த சைவம் என்ற சொல் சிவனைப் பற்றிய நிலையையும் சைவ நூல்களையும், சிவனடி சேர்தற்குரிய நெறியையும் குறிக்கும். சைவ சித்தாந்த நூல்களைக் கற்றுணர்வார் இம்மையிலும் மறுமையிலும் பயன் பெறுவர்.

சைவ சித்தாந்தம் கூறும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையினையும் அவற்றின் இலக்கணங்களையும் பாச நீக்கத்திற்குரிய சாதனமும் கட்டறுத்த ஆன்மா எய்தும் பேரின்பமும் ஆகிய திறங்களையும் அறிவியல் பூர்வமாக மெய்கண்ட நூல்கள் ஆராய்ந்துள்ளன.

பதி, பசு, பாசம் என்பது முப்பொரள். இதனை இறை, உயிர், உலகம் என்றும் கூறுவர். இதனையே திருமூலரும்

**பதிபசுபாசம் எனப்பகர் மூன்றில்**
**பதியினைப் போல்பசு பாசம் அனாதி**
**பதியினைச் சென்றணு நிலாவே"**

என்று கூறுகிறார்.

பதி என்பது இறைவன் உலகம் ஒடுங்குதற்குக் காரணமான முதல்வனாலேயே உலகம் தோன்றுகிறது. அதனால் அழிவைச் செய்யும் கடவுளே தோற்றத்தையும் செய்கிறான். இவ்வாறு தோன்றி அழிவதற்கு முதற்காரணம் மாயை ஆகும்.

இல்லது தோன்றாது; உள்ளது அழியாது என்பது சைவ சித்தாந்தம் கூறும் சற்காரிய வாதம் ஆகும். இச்சற்காரிய வாதத்தின்படி, தோன்று

வதாகிய உலகத்திற்கு அதனைத் தோற்றுவித்தற்குக் 'கர்த்தா' ஒருவன் தேவை என்பது விளங்கும். அவனே முழுமுதற் பரம்பொருளாகிய சிவபெருமான்.

பதியாகிய பரம்பொருளுக்குச் சிறப்பு இயல்பு, பொது இயல்பு என்ற இருவகை இயல்புகள் கூறப்பெறுவன இவற்றை முறையே சொரூப இலக்கணம் என்றும் தடத்த இலக்கணம் என்றும் இயம்புவர். திருவுந்தியாரின் முதற்பாடலே இவ்விருவகை இலக்கணத்தையும் சுட்டுகிறது.

**சொரூப இலக்கணம்**

"ஒரு பொருளுக்கு சிறப்பு இயல்பு என்றும் பொது இயல்பு என்றும் இரண்டு இயல்புகுள் உண்டு. சிறப்பு இயல்பைச் சொரூப இலக்கணம் என்றும், பொது இயல்பைத் தடத்த இலக்கணம் என்றும் சைவசித்தாந்தம் கூறும். பதிக்குரிய சொரூப தடத்த இலக்கணம். பதி பேராற்றல் உடையது. சுதந்திரம் உடையது. பதி எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும் ஒரே தன்மையதாய் இருக்கும். இதனால்தான் பதியைச் 'சித்' அல்லது மெய்ப்பொருள் என்பர். பதியானது உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்படும் இயல்புகள் தடத்த இலக்கணம் ஆகும்"

**"குணம் இலான்குணம் குறிஇலான்**
**..........................................**
**சிவன் எனத் தகுமே"**

எனும் தாயுமானவர் பாடலில் பதியின் சொரூப இலக்கணம் அமைந் துள்ளதைக் காணலாம். ஒரு தன்மையதாய் நிலைபெற்றுள்ள பொருள் 'சத்து' எனப்படும். தோன்றி அழியும் பொருள் 'அசத்து' எனப்படும். சிவம் சத்தாயும் உள்ளது சித்தாயும் உள்ளது. இவ்வாறு சத்தாயும், சித்தாயும் நிற்றலே பதியின் உண்மை இயல்பாகிய சொரூப இலக்கணம் ஆகும்.

இறைவனுக்குரிய இயல்புகள் இரண்டனுள் பொதுவியல்பு அல்லது தடத்த இலக்கணமாவது.

உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் எய்தும் இயல்பேயாகும். அஃதாவது இறைவன் 'அருவம்' 'உருவம்' 'அருவுருவம்' எனும் நிலைகளைக் கொள்ளுதலும் ஐந்தொழில் செய்தலும் ஆகும். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் முதலான ஐந்தொழில்களும் ஆருயிர்கள் பொருட்டு இறைவன் செய்யும் அருட்தொழில்களே ஆகும். இறைவன் பாச ஞானத்தாலும், பசுஞானத்தாலும் அறியப்படுபவரல்லர் அவர் பதிஞானத்தால் மட்டுமே அறியப்படக் கூடியவர். பதியாவாள் சிவனே ஆதலின் பதிஞானம் என்பது சிவஞானம் என்பதாகும்.

''ஞானநூல்கள் பதியை உணர்வதற்கு மேற்கொள்ள வேண்டிய முயற்சிகளையும் பயிற்சிகளையும் வகுத்துக் கூறுகின்றன. 'சரியை' முதலிய நெறிகளில் பலகாலம் பயிலவேண்டும். 'இருவினையொப்பு' என்னும் பக்குவநிலை வரவேண்டும். நல்லாசிரியர் வாய்க்கவேண்டும். அவர் காட்டும் நெறியில் சிறிதும் வழுவாது நடக்க வேண்டும் என்றெல்லாம் வற்புறுத்துகின்றன. சத்தாகிய சிவத்தின் முன் அசத்தாகிய பாசப் பொருள்கள் எதிர்பட்டு நிற்கமாட்டா. உயிர் உலகப்பற்றை விடுத்து திருவருளைப் பற்றி நின்றால் அதன்மூலம் சித்தைக் கண்டு இன்புறும். அதுவே பேரின்பம்''

**பதி இயல்பு**

இறைவன் எல்லையற்றவன். வரையறை கடந்தவன். சிவனுக்குரிய இயல்பினையும் இலக்கணத்தையும் நம்மனோரால் விவரித்துச் சொல்ல முடியாது. அவற்றைச் சொல்லுதற்கும் உணர்த்துதற்கும் உரியவன் ஞானக் குரவனே. இவ்வுண்மையினை,

''சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கென் றுந்தீபற
என்றால் நாம் என்சொல்லோம் உந்திபற''

எனவரும் திருவுந்தியார் தெளிவுறுத்துகிறது. இக்கருத்தினை மேலும் தெளிவுறுத்தும் பாங்கில்

''ஒன்றன்(று) இரண்டன்று உளதன்று இலதன்று
நன்றன்று தீதன்று நானன்று - நின்ற
நிலையன்று நியன்று நின்னறிவும் அன்று
தலையன்று அடியன்று தான்''

என வரும் திருக்களிற்றுப்படியார் அமைந்துள்ளது.

**பசு இயல்பு**

பதியாகிய முதற்பொருள் என்று உண்டோ அன்றிலிருந்த 'பசு'வும் 'பாச'மும் உள்ளன. இம்மூன்றில் பதியே தலைப்பொருள். இம்மூன்று பொருள்களை முறைப்படி உணர்தலே ஞானநூல்களின் முடிந்த முடிபை உணர்தல் ஆகும்.

மெய்கண்டார் "யாவையும் சூனியம்" எனும் நூற்பாவில் ஆன்மாவின் உண்மையியல்பாகிய சொரூபலக்கணத்தை உணர்த்துகின்றார்.

சித்தாயும் சத்தாயும் நிற்கும் பதிக்கும் அசித்தாயும், அசத்தாயும் நிற்கும் பாசத்திற்கும் சிறந்த தொடர்பு உண்டாவதில்லை. இதனால் ஒன்றால் மற்றொன்றுக்கு வருவது ஒன்றும் இல்லை. இடையில் இருக்கும்,

'பசு'வே இரண்டனோடும் தொடர்புடையதாய் உள்ளது. இதனால் இஃது இவ்விரண்டினாலும் வரும் நன்மை தீமைகளை எய்துகின்றது.

பாசம் அறிவில்லாத பொருள், பசு அறிவுடைய பொருள். பதிக்கும் பசுதான் இனம். பாசம்-வேற்றினம்.

பதியின் அறிவு சூக்குமசித்தாயும், மாற்றம் எய்தாததாயும் தூலசித்தாயும் தான் அடுத்த பொருளின் தன்மையை எய்தி நிற்பதாயும் இருப்பதால் அதனால் பாசம் பற்றுவதாகின்றது. எனவே பதி இயல்பாகவே பாசங் களின் நீங்கிய அறிவுடையது. பசு அநாதி இயல்பாகவே பாசத்திற் கட்டுண்டு கிடக்கும். பாசங்களால் பிணிக்கப்பெறுதலின் ஆன்மா 'பசு' என்று பெயர் பெற்றது.

## பாச இயல்பு

பாசம் என்பது தளை, கட்டு, ஆணவம், கன்மம், மாயை என்பன வற்றைப் பாசம் என்பர். ஆன்மாவுக்கு தனு, கரண, புவன போகங்கள் யாவும் மாயை என்ற பாசத்தினின்றும் வருவித்து இறைவனால் தரப் படுகின்றன.

பாசக் கட்டறுத்து இறைவனுடன் உயிர் இரண்டறக் கலப்பதே முக்தி அல்லது வீடு. பசுக்களின் லட்சியம் பாசத்தளையினின்றும் விடுபட்டு இறைவனோடு ஒன்றி இன்பம் உறுவது ஆகும். பாசத்தினின்றும் விட்டு பட்டு இன்பம் அடைவதால் அந்த இன்ப நிலைக்கு 'வீடு' என்றும் பெயர். வீட்டில் பசுவைக் கயிற்றால் கட்டிப் போடுகிறது. அதுபோல் இந்த உலகத்தில் பசுவாகிய உயிரைக் கட்டிப் போடுவது பாசம் பாசத்தை மும்மலம் என்றும் சொல்வது உண்டு. ஆணவம், கன்மம், மாயை என்பன மும்மலங்கள் ஆகும்.

## ஆணவமலம்

உயிருண்மை சாதித்தமையால் அதனுடன் அநாதியாக உள்ள ஆணவ மலம் உண்மையும் உணர்த்தப்பட்டது. அளப்பிலா ஆற்றல்கள் உடையதாய் உயிர்கள் தோறும் செம்பில் களிம்பு போல் அநாதியே விரவிநின்று அவ்வுயிர்களின் அறிவையும், தொழிலையும் மூடிப்போக நுகர்ச்சிக்கு நிமித்த காரணமாக நிற்பது ஆணவமலமாகும். ஆணவம் அறிவை மறைக்கும். மாயையோ அறிவை விளக்கும். ஆதலின் மாயை யினை 'விளக்கு' என்பர். மெய்கண்ட தேவநாயனார் ஆணவத்தின் இலக்கணத்தினை,

"ஒன்றதாய் அநேக சக்தி
யுடையதாய் உடனாய் ஆதி

..............................
என்றும் அஞ்ஞானம் காட்டும்
ஆணவம் இயைந்து நின்றே''

எனவரும் சித்தியார் செய்யுள் புலப்படுத்துகிறது.

**கன்மம் மலம்**

உயிர்கள் எடுக்கும் உடலங்கட்கு இன்ப துன்ப நுகர்ச்சி உண்டாக்கு வதாய் பிறப்பிற்கு ஏதுவாகித் திரிகாரணங்களால் செய்யப்படுவதாய், புத்தியில் பொருந்துவதாய் நல்வினை, தீவினை என்ற இருவகையினதாய் ஒடுக்கக் காலத்தில் மாயாகாரணத்திற் சேர்வதாய், மாயையுடன் கூடி நிற்பதாய், அருவருமாய், அசேதமாய் உள்ளது கன்மமலம் எனப்படும். கன்ம மலத்தின் காரியமாகிய இன்ப, துன்பங்கள் உயிருணர்வைப் பொருந்தும். அனுபவிக்கப்பட்ட பின் நீங்கும், கன்மம் காரண நிலையில் மூல கன்மம் எனப்படும். அது உயிர்களைத் தாக்குவது இல்லை. காரிய கன்மமே நல்வினை, தீவினை என இரண்டாக நிகழ்ந்து உயிர்களைத் தாக்கும். அதனால் காரிய கன்மமே கன்மமலம் எனப்படுகின்றது. ஒருவன் செய்யும் நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனும் கன்மம் எனப்படும்.

தொல்காப்பியர் கூறிய காரணவினையைத்தான் சைவ சித்தாந்தம் மூலகன்மம் என்று கூறுகின்றது. இவ்வகையில் நோக்கும்பொழுது சைவசித்தாந்தக் கருத்துக்கள் தொல்காப்பியர் காலத்திலேயே இருந்து வந்துள்ளன என்பதை உணர முடிகிறது. எனவே சமய நூல்களிலும் அறநூல்களிலும் 'இருவினை' புண்ணிய பாவங்கள் என்றெல்லாம் சொல்லப்படுவன இக்காரிய கன்மங்களேயாம்.

திருவிசைப்பா அருளிய அருளாளர்கள் தங்கள் திருப்பதிகப் பாடல் களின்வழி சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் கூறி உள்ளனர். பற்றுக்களை நீக்கி இறையருள் பெறுவதற்கும் உடல்களோடு மட்டும் இன்றி உலகப் பொருள்கள்மீதும் பற்று நீங்குவதற்கும் இறை அனுபவத்தைப் பெறும் நெறிகளைக் கூறுகின்றனர். மெய்ந்நூல்களைக் கற்றுத் தெளிதல் வேண்டும் என்கின்றனர்.

''கற்றவர் விழுங்கும் கற்பகக்கனி'' எனச் சேந்தனார், நல்லறிவு தரத்தக்க நூல்களைக் கற்றவராகிய மெய்ஞ்ஞானிகள் அனுபவிக்கும் படியான பேரின்ப உணர்வாகிய கற்பக மரத்தின் கனி போன்று விரும்பிய வற்றைத் தருபவன் இறைவன் என்கிறார்.

''கச்சரைக் கல்லாப் பொல்லாக்
கயவரை பசுநூல் கற்கும்
பிச்சரைக் காணா கண்வாய்
பேசா(து) அப்பேய்களோடே''

உயிர்களிடத்துள்ள பாசங்களைப் போக்குபவன் இறைவன் என்பது சைவசித்தாந்தக் கோட்பாடு. சிந்தையுட் புகுந்து என்னை அடிமை ஆகக் கொண்டு எனது உயிர்த்தளையாகிய பாசக்கட்டு நீக்கும் இச்சை மிக்கவனே என்று சேந்தனார் குறிப்பிடுவது உயிர்கள் இடத்திலுள்ள பாசத்தை நீக்குபவன் இறைவன் என்பதை உணர்த்தும். ஆணவமலச் சேர்க்கையினால் உயிர்கள் செய்யும் செயல்களே கன்மம் அல்லது வினை என்று கூறப்படும். திருவிசைப்பா ஆசிரியர்கள் தங்கள் திருப்பதிகப் பாடல்களில் 'அருவினன்' 'வல்வினை' 'கருவினை' 'தீவினை' என வினைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். 'எம்பந்த வல்வினைநோய்' என்று உயிர்களைக் கட்டியுள்ள வல்வினை பற்றியும் அந்த வல்வினை உயிர் களுக்குரிய நோயாகவும் குறிப்பிடுகின்றார். பூந்துருத்தி நம்பிகாடநம்பி, "புழுங்கு தீவினையேன் வினைகெடப்புகுந்து" என்று கருவூர்த்தேவர் உயிர்களுக்கு வினைநீக்கம் செய்பவன் இறைவன் என்பதை உணர்த்துகிறார்.

உயிர்களிடத்திலுள்ள பாசத்தை நீக்குபவன் இறைவன் என்பதை உவமை மூலம் கருவூர்த்தேவர் விளக்குகின்றார். கலங்கலையுடைய அழகிய குளத்து நீரைத் தேற்றாங்கொட்டை முதலியவற்றால் தெளியச் செய்வதுபோல நன்மையை அளிக்கும் திருவருளைத் தன்னுடன் கூட்டித் தன் அறிவின் மாசினை நீக்கி ஞானத்தெளிவினை இறைவன் அருளியதாகக் கருவூர்தேவர் கூறுகின்றார். மேலும்

"பண்ணிய தழலைகாய் பாலளாநீர்போல்
பாவமுன் பறைந்து பாலனையை
புண்ணிய பின் சென்(று) அறிவினுக்(கு) அறிய"

என்ற பாடலில் மூட்டிய தீயினால் காய்ச்சப்பட்ட பாலிலுள்ள நீர் பாலை விட்டு நீங்குவது போன்று தீவண்ணனாகிய இறைவன் என் உள்ளத்தில் என்னோடு கூடிய கூட்டத்தினால் எனது பாவ வினை நீங்கியது என்று பாசநீக்கம் பற்றிக் கூறுகின்றார்.

**சைவ சமயத்தின் வகைகள்**

சைவ சமயத்தின் இலக்கியங்களாக குறிப்பிடத்தக்கவை பன்னிரு திருமுறைகள் ஆகும். பன்னிரு திருமுறைகளைத் தொடர்ந்து எழுந்த பதினான்கு மெய்கண்ட நூல்களும் சைவசித்தாந்தக் கொள்கையின், இறை, உயிர், கட்டு ஆகிய முப்பொருட் கொள்கையினையும், கட்டினை விட்டு இறைவனை உயிர் மேவுதற்குரிய சாதனங்களையும் இம்முயற்சிக்கு உறுதுணையாகக் கொள்ளுதற்குரிய நல்லியல்புகளையும், அனைந்தோர் தன்மையினையும் விரித்துக் கூறும் வகையில் இச்சாத்திரங்கள் தோன்றின.

சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுவோர் சிவநெறியினராவர். சிவப்பரத்துவத்திற்கு மாறுபட்ட சமயங்கள் புறச்

சமயம் என்று விளங்கியபோது சைவப்பிரிவினர் அகச் சமயத்தார் என்னும் அமைப்பாயினர். தமிழ்நாட்டில் தொன்மைக் காலத்திலிருந்து சிறந்து விளங்கிய சிவ வழிபாட்டுச் சைவசமயம் பக்தி இயக்கத்தால் மறுமலர்ச்சி பெற்றது. அவ்வியக்கத்தில் சைவப் பிரிவுகளின் பணியும் சிறந்திருக்கக் கூடும். பயிரவ முதலிய சைவப்பிரிவுகளை தேவார மூவர் குறிப்பிட்டுள்ளனர். அவருள்ளும் திருநாவுக்கரசர் சைவ சமயப் பிரிவினரைத் தெளிவாகப் பாடியுள்ளார்.

சிவபெருமானை அரு, உரு, அருவுரு எனும் மூவடியில் வழிபடுவர். அடியாரைச் சோதிக்க சிவபெருமான் பல்வேறு திருவிளை யாடல்களைப் புரிந்தான். திருவிளையாடல்களுக்கேற்ப பல்வேறு அருட் கோலங்களைக் கொண்டான் அக்கோலங்களில் பல சிவ மூர்த்தங் களாக வழிபடப் பெறுகின்றன. சிவபெருமான் சுடலையாடிய மயானநாதர் வடிவே பயிரவ அருட்கோலமாகிப் பயிரவ மூர்த்தியாகவும் விளங்கு கிறது. பயிரவ மூர்த்தியை வழிபடும் திருக்கூட்டத்தாருள், முதன்மை பெறுவர் பயிரவச் சமயத்தார் ஆயினர்.

**ஆறுசமயங்கள்**

இறைவனின் திருவிளையாடல் காரணமாக பல்வேறு அருட்கோலங்கள் சிவ மூர்த்தங்களாக வழிபடும்பொழுது இச்சைவ சமயத்தில் பல பிரிவுகள் சிவமூர்த்தங்களை முன்னிட்டு உண்டாயின. இவ்வாறு பயிரவம், பாசுபதம், கபாலம், மாவிரதம், வாமம் எனும் ஐந்து பிரிவுகளும் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டு சிற்சில பழக்கவழக்கங்களால் சைவமாயிருந்தும் சைவப்பிரிவுகள் எனப் பெயர்பெற்றன. தென்னாட்டுத் தூய சைவம் என்று கூறப்படும் தொன்மை சைவத்துடன் இவ்வைந்தும் சேர்ந்து ஆறு சமயம் என்பர். இவ் ஆறுசமயங்களும் அகச்சமயம் புறச்சமயம் எனவும் வகைப்படுத்தப் பட்டுள்ளன. சேந்தன் திவாகரம், வைசேடிகம், நையாயிகம், மீமாஞ்சை, ஆடுகதம், பௌத்தம், பிரதிலோகாயிதம் என்று புறச்சமயங்களைக் கூறுவர்.

இறைவனின் திருநடனத்தில் சிறப்பிடம் பெறும் காபாலமேந்திய மயானதாண்டவ மூர்த்தியை மூர்த்தமாகக் கொண்டு வழிபட்டவர்கள் பயிரவ முதலிய சைவப்பிரிவினர். இவர்கள் பக்தி இயக்க காலத்தில் பங்குகொண்டு சிவநெறி போற்றிய சைவப்பிரிவினர் ஆவர்.

இதுகாறும் சைவ சமய வரலாறு தோன்றியவிதம், தொன்மை, சித்தாந்தத்தின் தோற்றம், சாரம், சிவ வழிபாட்டின் தொன்மை, பக்தி இயக்க காலம், சைவ சமயம் தழைக்க பாடுபட்ட அருளாளர்கள், சங்க இலக்கியத்தில் சிவ வழிபாட்டின் கூறுகள் போன்ற செய்திகளைப் பற்றி ஆராயப்பட்டுள்ளது.

# 35. திருமூலநாயனார்

திருமதி க. சம்பத்ராணி, கோவை.

"திருவாடுதுறை உமாதேவியார் பசுவின் கன்றாக வடிவம் பூண்டு தவஞ் செய்த பெருமைமிக்க திருத்தலம் ஆகும்". இத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானின் திருநாமம் பசுபதியார் என்பதாகும். இங்கு காவிரியாறு ஓடுவதால் நல்ல செழிப்பும் சுபிட்சமும் நிலைத்து நின்றன. குயிலை மலையின் முதற் பெருங்காவலராக விளங்குபவர் நந்தியெம் பெருமான். இவரின் ஞானம் பெற்றவர்களுள் ஒருவர் "சுந்தர நாதர்" என்னும் சிவயோகியார், இவர் சிவாகமங்களில் வல்லவராய் மேம்பட்டு விளங்கினார்.

அச்சிவயோகியார்க்குப் பொதிகை மலையில் வீற்றிருக்கும் அகத்திய முனிவரைக் கண்டு அவருடன் சில நாட்கள் தங்கி அளவளாவி மகிழ வேண்டும் என்ற விருப்பம் எழுந்தது. ஒரு நாள் அவர் பொதிய மலைக்குப் புறப்பட்டுச் சென்றார். திருக்கேதாரம். நேபாளம், திருசைலம் வழியாக திருக்காளத்தி மலையை அடைந்தார். திருவாலங்காடு, காஞ்சி, தில்லை முதலிய திருத்தலங்களிலுள்ள சிவன் கோவில்களை வழிபட்டவாறு திருவாடுதுறை என்னும் பழம்பெரும் புண்ணியதலத்தை வந்தடைந்தார்.

அத்தலத்தை அடைந்த யோகியார் அங்கு எழுந்தருளியிருக்கும் பசுபதிநாதரை வணங்கினார். அருகிலுள்ள பிறத் தலங்களையும் தரிசித்து விட வேண்டும் என நினைத்து காவிரி ஆற்றின் கரை வழியாக சென்று கொண்டிருந்தார்.

### ஆநிரைகளின் அன்பில் மூலன்

காவிரிக் கரையிலே பசுக்கள் கூட்டம் கூட்டமாக மேய்ந்து கொண்டி ருந்தன. அப்பசுக்களை மேய்ந்த வண்ணம் நின்று கொண்ருடிருந்தான் மூலன் என்பவன். மூலன் சாத்தனூரைச் சேர்ந்தவன் குலத்தில் இடையர். அதனால் தன் குலத்திற்கு ஏற்ப அந்தணர்கள் வீட்டு ஆநிரைகளை மேய்ந்து வரும் தொழிலைச் செய்து வந்தான்.

மூலன் கருணை உள்ளம் படைத்தவன். இவன் பசுக்களை அடிக்காமல் வெயிலில் மேயவிடாமல் கூடியமட்டும் நல்ல நிழலில் உள்ள இடமாகவே அவைகளைத் துன்புறுத்தாமல் மேய விடுவான். பாதுகாப்பாவும், அன்பாகவும் பேணி வளர்ப்பான். இதனால் அவன்

இத்தொழில் நல்ல ஊதியம் பெற்றான். மனைவி மக்களோடு கவலையின்றி, மன மகிழ்ச்சியோடு வாழ்ந்து வரலானான்.

### எதிர்பாராத சம்பவம்

ஓர்நாள் வழக்கம் போல மூலன் ஆநிரைகளை மேய்த்துக் கொண்டிருந்த போது யோகியார் வந்தார். ஆநிரைகள் மேய்ந்து கொண்டிருக்கும் அழகான காட்சியைக் கண்டு யோகியார் தம்மை மறந்த நிலையில் நின்று கொண்டிருந்தார்.

அப்போது, எதிர்பாராமல் ஒரு சம்பவம் நடந்தது. ஆநிரைகளை மேய்த்துக் கொண்டிருந்த மூலனுக்கு ஆயுள் நெருங்கிடவே அவன் இறந்து விட்டான்.

### யோகியாரின் உருக்கம்

இறந்து போன மூலனைச் சுற்றி பசுக்கள் கூடின. பசுக்களின் கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தன. மூலனை நாக்கால் நக்கியும், உடம்பினால் உராய்ந்தும் ஆநிரைகள் தங்கள் அன்பை வெளிப்படுத்தின. பசுக்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து கதறிப் பதறி அங்குமிங்குமாக சுற்றித் திரிந்தன.

இக்காட்சியைக் கண்ட யோகியார், மூலனைப் பிரிந்து இவ்வளவு தூரம் வாடும் இப்பசுக் கூட்டம் இனிமேல் ஆகாரம் உட்கொள்ளாது. அவனைப் போல் இறந்துதான் போகும். எம்பெருமான் திருவருளால் எப்படியும் இப்பசுக் கூட்டத்தின் இடரைத் தீர்ப்பேன் என்று தமக்குள் எண்ணினார்.

### திருமூலர் மூலன் ஆனார்

கருணைமிக்க சிவயோகியார் ஆநிரைகளுக்கு ஏற்ப்பட்டுள்ள துன்பத்தைப் போக்க முடிவு பூண்டார். கூடுவிட்டு கூடுபாயும் வித்தையைக் கற்றிருந்த தவசியார் மூலன் உடலுக்குள் தம் உயிரைப் புகுத்தினார். அவ்வளவு தான் மூலன் உறங்குபவன் போல் கண்விழித்து திருமூலராய் எழுந்தான்.

ஆநிரைகளுக்கு ஆனந்தம் தாங்கவில்லை துள்ளிக் குதித்தன. திருமூலராகிய சித்தருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. அவரும் பசுக்களைத் தட்டிக் கொடுத்து அவற்றோடு சேர்ந்துத் துள்ளிக் குதித்தார்.

### திருமூலரின் பிரச்சினை

மாலை மறைந்தது. வீடு நோக்கி பசுக்கள் புறப்பட திருமூலரும் கூடவே புறப்பட்டார். ஒவ்வொரு பசுவும் தத்தம் வீடு அறிந்து புகுந்து கொண்டன. திருமூலர், அவற்றை எல்லாம் வீடு சேர்த்தார். ஆனால் மூலன் மட்டும் அவரது வீட்டிற்குப் போக விரும்பவில்லை. அவர்

ஞான திருஷ்டியால் மூலனுக்கு திருமணம் ஆகிவிட்டது என்பதை அறிந்தார். அதனால் தனியாக ஒரு இடத்தில் அமர்ந்து என்ன செய்வது? என்று சிந்திக்கத் தொடங்கினார்.

மூலனின் மனைவி கணவன் வரவை வெகு நேரமாக எதிர்ப்பார்த்துப் பயன் ஏதும் காணாமையால் கணவனைத் தேடி புறப்பட்டாள். வரும் வழியிலே ஓரிடத்தில் கணவன் இருப்பதைக் கண்டு வியப்பு மேலிட அருகே சென்று வீட்டிற்கு வரக் காலதாமதம் ஆனது பற்றி வினவினாள். மூலன் மௌனம் சாதித்தார்.

**திருமூலரின் கூற்று**

மூலனின் மனைவி வியப்பு மேலிட கேள்வி மேல் கேள்வி கேட்டாள். திருமூலர் மௌனமாகவே இருந்தார். அவரது மனைவிக்கு ஒன்றும் புரியவில்லை. திருமூலரின் கையைத் தொட்டு அழைக்க முற்பட்டாள்!

அம்மையார் செய்கை கண்டு திருமூலர் சிறிது எட்டி விலகினார். அப்பெண்மணி அஞ்சி நடுங்கி ''உங்களுக்கு என்ன தீங்கு நேர்ந்தது? எதற்காக இப்படி விலகுகிறீர்கள்'' என்று மன வருத்தத்தோடு கேட்டாள்.

திருமூலர் தம் மனைவியிடம் ''என்னால் உன் வீட்டிற்கு வர முடியாது. உனக்கும் எனக்கும் எவ்வித உறவும் கிடையாது. அதனால் ஆலயம் சென்று அரனாரை வழிபட்டு அமைதி பெறுவாயாக!'' என்று கூறினார். அதற்கு மேல் அவள் முன்னால் நிற்பதும் தவறு என்பதை உணர்ந்து திருமூலயோகியார் அத்தலத்திலுள்ள திருமடம் ஒன்றிற்குச் சென்று சிவயோகத்தில் அமர்ந்தார்.

**மனைவியின் கலக்கம்**

கணவனின் நிலைமைக் கண்டு கதிகலங்கிப் போனாள் மனைவி. கணவனின் மணமாற்றத்தைப் பற்றி ஒன்றும் புரியாமல் கவலையோடு வீடு திரும்பினாள். இரவெல்லாம் பொல்லாத் துயர்பட்டுக் கிடந்தாள். மறுநாள் மூலனின் மனைவி சுற்றத்தாரை அழைத்துக் கொண்டு அவர் இருக்குமிடத்திற்கு வந்தாள். யோக நிலையில் அமர்ந்திருக்கும் திருமூலரின் முகத்தில் தெய்வ சக்தி தாண்டமாடுவது போன்ற தனிப் பிரகாசம் பொலிவு பெறுவது கண்டு அனைவரும் திகைத்து நின்றனர். இருந்தும் அவர்கள் மனைவிக்காக திருமூலரிடம் வாதாடினர். ஒரு பலனும் கிட்டவில்லை. ''முனிவர்'' ஆக மாறிய திருமூலர்.

அதன் பிறகு தான் திருமூலர் முனிவர் என்பதை அவர்களால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அவர்கள் மூலன் மனைவியிடம், ''உன் கணவர் முன்னைப் போல் இல்லை. இப்பொழுது அவர் முற்றும் துறந்த முனிவராகிவிட்டார். இனிமேல் இம்மெய்ஞானியரோடு வாழ வேண்டும்

என்பது நடக்காத காரியம்'' என்று உண்மையைக் கூறினார். அவர்கள் மொழிந்ததைக் கேட்ட மூலனின் மனைவி ''கணவனுக்கு இப்படப்பித்து பிடித்து விட்டதே!'' என்று தனக்குள் எண்ணியவாறே அவரது கால்களில் விழுந்து வணங்கி வேதனையோடு வீடு திரும்பினாள்.

**உடல் மறைவு**

சற்று நேரத்தில் யோக நிலை தெளிந்த திருமூலர், மறைவாக ஒரு இடத்தில் வைத்திருந்த தமது திருமேனியைத் தேடினார். கிட்டவில்லை, முதலில் யோகியாருக்கு அஃது சற்று வியப்பாகவே இருந்தது. மீண்டும் யோக நிலையில் அமர்ந்து, தனது மேனியைப் பற்றிய உண்மைப் பொருளை உணர எண்ணங்கொண்டார்.

தபோ வலிமையால் இறைவன் அருளிய ஆகமத் பொருளைத் தமிழிலே வகுத்து உலகோர்க்கு உணர்த்த வேண்டும் என்பதற்காகவே முக்கண்ணனார் தம் உடலை மறைத்தருளினார் என்பதை உணர்ந்து கொண்டார். திருமூல நாயனார் இறைவனின் கட்டளையை நிறை வேற்றிடச் சித்தங் கொண்டார்.

**முடிவுரை**

சிவயோகத்தில் நிலைத்து நின்று இதய கமலத்தில் எழுந்தருளிய எம்பெருமானுடன் ஒன்றினார். உணர்வுமயமாய்த் திகழ்ந்தார் திருமூலர். உலகோர், பிறவியாகிய நஞ்சிலிருந்து நீங்கி உய்யும் பொருட்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளையும் வகுத்தும், தொகுத்தும், விரித்தும் கூறும் நல்ல திருமந்திர மாலையினை ஓர் ஆண்டிற்கு ஒரு மந்திரப் பாடலாக மூவாயிரம் ஆண்டுகள், சிவ யோகத்தில் திருமுறையைப் பாடினார்.

சிவயோக நுணுக்கங்களை விளக்கமாகக் கூறும் திருமந்திரம் ஓர் அற்புதமான அறநூல்!

தெய்வீக ஆற்றலுடன் திகழ்ந்து, சிவபதவியை நினைப்பவரைப் பாவக்குழியிலிருந்து வெளியேற்றிக் காப்பதால் ''திருமந்திரம்'' எனத் திருநாமம் பெற்றது.

மூவாயிரந் திருமந்திரப் பாடல்களையும் வைகறை எழுந்து கருத்தறிந்து ஓதுவோர் பிறவிப் பாசம் நீங்கி பரமன் பதியை அடைவர் என்பது திருவாக்கு!

இவ்வாறு உலகோர் உய்யும் பொருட்டு திருமந்திர மாலையை, அருளிய திருமூல நாயனார் நெற்றிக் கண்ணனாருடைய பொற்றாமரைப் பாதங்களைப் பற்றிக் கொள்ளும் ஒப்பற்ற பெருவாழ்வைப் பெற்று உயர்ந்தார்.

''தம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்''

# 36. திருமந்திரத்தில் சக்தி வழிபாடு

திரு. வெ.அ. சம்பந்தம், பனப்பாக்கம்.

"செறிதரும் உயிர்தொறும் திகழ்ந்து மன்னிய,
மறுவரும் அரனிடம் மாபின் மேவியே,
அறுவகை நெறிகளும் பிறவும் ஆக்கிய இறைவி,
தன்திருவடி இறைஞ்சி ஏத்து வாம்"

பன்னிரு திருமுறைகளான தமிழ் சைவத்திருமறைகளுள் பத்தாம் திருமுறையாக நாம் போற்றுவது திருமூலர் அருளிய புனிதமானநூல் திருமந்திரம். நம்பிரான் திருமூலர் அடியார்க்கும் அடியேன் என்று தொழுது வணங்கிப்பாடுகிறார். - சுந்தரர்

நந்திதேவரின் சீடர்கள் பலருள் ஒருவர் திருமூலர். கயிலையில் சிவபூசைசெய்து கொண்டு நந்திதேவரிடம் உபதேசம் பெற்றவர். அகத்தியரைக் காண வேண்டி தென்னகம் வருகை தந்தவர். பல்லாயிரம் ஆண்டுகள் தமிழ் மண்ணில் யோகநிலையில் வாழ்ந்து திரும்ந்திரம் எனும் திருமறை தந்தவர். சிவபெருமானிடம் உபதேசம் பெற்ற குருமார்கள் எண்மருள் திருமூலரும் ஒருவர்.

சிவ வழிபாட்டையும் வழிபாட்டின் பயன்பற்றியும் மிக விரிவாக அருளித்தந்துள்ளார். மூவாயிரம் பாடல்களுக்கு மேலாக உள்ள புனித நூல் திருமந்திரம். - திருமூலர். "நாற்றிசைக்கும் நல்லமாதுக்கும் நாதன்" ஆதிபராசக்தி-உமையம்மை-சிவசக்திக்குத் தலைவன் சிவன் - சதாசிவன் - பரமசிவம் - நல்லசிவம், "தாயினும் நல்லன் தாழ்சடையோன்" "தானே மழை பொழி தையலுமாய்". சிவம் சக்தியாகத் திருவருள் புரிகிறான்.

"மழை பொழிதையல் - திருவருட்சக்தியாகிய சிவசக்தி"
"மாது குலாவிய வாள்நுதல் பாகன் - உமை பாகன்"
"அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன் - அர்த்தநாரீசன்"
"சிவமாம் பரத்தினில் சத்தி சதாசிவம், காரிகையார்க்குக்
கருணை செய்த சிவன்"

**பாடல் 65**

அற்புதமான பாடல்,

**"மாரியும் கோடையும் வார் பனி தூங்க நின்று ஏரியும் நின்று
அங்கு இணைகின்ற காலத்து ஆரியமும் தமிழும் உடன் சொலிக்
காரிகையார்க்குக் கருணை செய்தானே"**

மழைக்காலமும் கோடைக்காலமும் பனிக்காலமும் கலந்து போந்த நிலையில், நீர்த்தேக்கங்களான ஏரிகள் குளங்கள் வறண்டுநிற்கும் ஊழிக்காலத்தே சிருஷ்டி தொடங்கும் முன்னதாக, ஏககாலத்தே வட மொழியையும் தமிழ் மொழியையும் சிவசக்திக்கு சிவபெருமான் உபதேசம் செய்து திருவருள் புரிந்தான் என்பதைக் காண்கிறார் திருமூலர்.

**பாடல். 75**

"இருந்த அக்காரணம் கேள், இந்திரனே,
பொருந்திய செல்வப்புவனாபதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித்து அடியேன்
பரிந்துடன் வந்தனன் பக்தியினாலே"

உலகங்கள் யாவற்றுக்கும் தலைவியாகிய அருந்தவச்செல்வியான உமையம்மையை எல்லையற்ற வான் வெளியிலே வணங்கி வழிபட்டு தரிசனம் செய்து சிவப்பணியாளாக தென் நாட்டிற்கு வருகை தந்து நின்றனன் என்பதைத் தெரிவிக்கிறார் திருமூலர் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னே இமயத்திலிருந்து இழிந்து பொதிகைக்கு வந்ததன் காரணத்தைத் தொடக்கத்தில் தெரிவிக்கிறார் திருமூலர்.

**பாடல். 76**

"சதா சிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்." இறைவன் படைப்புக் காலம் தொடங்கிய போதே வெளிப்பட்ட வேதம் தமிழ்மறை என்கிறார். நீலநிறத்திரு மேனியன், உமையம்மையுடன் ஆடல்வல்லான் அம்பலத்தாசன் நடத்தும், ஐந்தொழிற் கூடத்தினை உலகத்தினர்க்கு விவரித்து உபதேசம் அளிக்கவந்தவன், யான் என்பதை இங்கு திருமூலர் குறிப்பிடுகிறார்.

"என் பிறப்பறுத்து ஆண்டவன், சீருடையான் சிவன் ஆவடு தண்டுறை
சீருடையான் பதம் சேர்ந்திருந் தேனே"

திருவாவடுதுறை எனும் பழமையான புனிதத்தலத்தில் சிவபெருமானுடன் பாதிபாகமாக அர்த்தநாரீஸ்வரியாக எழுந்தருளியிருக்கும் சிவானந்தவல்லி ஆதிசக்தியை, அடியேன் யோகநிலையில் நின்று பூசிக்கத் தொடங்கினேன். தொழுது கொண்டே இருந்தேன். சிவசக்தி உடனாய சிவபெருமான் திருவாவடுதுறை ஆலயத்தில், பரந்து காணப்படும் அரசமரத்தடியில் எழுந்தருளியிருப்பதைக்கண்டு இறை நாமங்களை உச்சரித்து ஓதி வணங்கி நின்றேன்.

**பாடல். 82**

நந்திநகர் எனும் சிவநகரான திருவாவடுதுறை எனும் புனிதத்தலத்தி ஒன்பது வழி சந்திப்பில் அரசமரத்தடியில் குடி கொண்டிருக்கும் ஞானத்

தலைவியுடனான சிவபெருமானை, பூவும் நீரும் கொண்டு பூசித்து திருவைந்தெழுத்தாகிய "நமசிவாய" எனும் திருமந்திரத்தைத் தொடர்ந்து இடைவிடாது அர்ச்சனை செய்து கொண்டிருந்தேன் என்பதை திருமூலர் நமக்கு உணர்த்துகிறார். உமையம்மை கண்டு மகிழப்பரந்த வான்வெளி யிலே கனகசபையிலே நடனம் செய்யும் சிவபெருமான், என்று ஆனந்த பரவசமடைகிறார் திருமூலர்.

இவ்வாறாகத் திருமூலர் தவயோக நிலையிலே அமர்ந்து சிவசக்தியை பலகாலம் தொழுது வந்ததின் காரணமாக ஞானப்பாடல்களைத் தொடர்ந்து திருவாய் மலர்ந்து, நாட்டுமக்கள் நல்வழி செல்லும் முகத்தான் உபதேசிக்கிறார் திருமூலர். சிவசக்தி வழிபாடு பற்றிய தெய்வீகப் பாடல்களை தொடர்ந்து அள்ளி அள்ளித்தருகிறார்.

**பாடல். 333**

**"சத்தன் அருள்தரின் சக்திஅருள் உண்டாம்,**
**சத்தி அருள்தரின் சத்தன்அருள் உண்டாம்**
**சத்தி சிவமாம் இரண்டும் தன் உள்வைக்கச்**
**சத்தியும் எண் சித்தித்தன்மையும் ஆமே"**

அன்பேசிவம் - சிவமே சக்தி, சிவசக்தியே இறைவடிவம், சிவசக்தியாகிய சதாசிவத்தை உள்ளத்தில் இருத்தி வழிபட்டுவரின் உடம்பிலும் மனதிலும் ஞானசக்தி அமர்ந்துயாவற்றுமான நன்மைகளையும் நம்மை வந்தடைய வைக்கும், அட்டமா சித்திகளையும் தந்தருளும் என்பது பெருந்தவ யோகியான திருமூலர் வாக்கு.

**பாடல். 386**

"புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப்புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசையானாய்
புவனம் படைப்பான் அப்புண்ணியன் தானே"

உலகங்கள் யாவற்றையும் தோற்றுவித்தருளிய பரம்பொருள் சிவமும் சத்தியும் இணைந்த சிவசக்தி. உலகை உற்பத்தி செய்யத்தொடங்கு முன் சிவசக்தி ஐந்து தேவபுருஷர்களை தோற்றுவித்தார். பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன். படைப்புத்தொழிலுக்கு அதிபதியாய் நின்ற பெருமான். புண்ணியமூர்த்தியான பிரம்ம தேவன்.

**பாடல். 401**

**"அளியார் முக்கோணம் வயிந்தவம் தன்னில்**
**அளியார் திரிபுரையாம் அவள் தானே**

அளியார் சதாசிவம் ஆகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்து செய்வாளே''

கருணை நிரம்பிய மும்மண்டல நாயகியான சிவசக்தி திரிபுரை எனும் நாமத்தோடு திருமூர்த்தியாகிய பரம்பொருளுடனாகி அருள்புரிபவள். அக்கினி, சூரியன், சந்திரன், மூன்று சக்திகளுக்கும் தலைவியும் அவளே யாவள், அவர்களின் இயக்கங்களுக்கு சக்தியைத்தந்து ஐந்தொழில் களையும் உடனிருந்து (படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளுதல்) செயல்படுத்துபவள் திரிபுரை எனும் நாமம் உடையாள்.

**பாடல். 402**

''வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரணி காரிய மாகக் கலந்தவள்
வாரணி ஆரணி வானவர் மோகினி
பூரணி போதாதி போதமும் ஆமே''

சிவசக்தி, மனோன்மணி என்ற பெயருடன் மங்களமாக நன்மை விளைவிப்பவள். எங்கும் எக்காலத்தும் முழுமையாய் நிறைந்து காணப் படும் சக்தி. ஓம் சக்தி. சிவசக்தி என மந்திரரூபமாயும் திருமறைப் பொருளாகவும் ஞான ஒளியைத் தந்து நிறைந்து நிற்பவள். உலக இயக்கங்களின் தலைவி சிவசக்தி என்ற தத்துவத்தை இங்கு விளக்குகிறார்.

**பாடல். 475**

''அருள் அல்லது இல்லை அரன் அவன் அன்றி,
அருள் இல்லை யாதலின் அவ்வோர்
உயிரைத் தருகின்ற போது இருகைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்டி வகுத்திடுந்தானே''

சக்தியின்றி சிவம் இல்லை, சிவம் இன்றி சக்தி இல்லை. பரம்பொருள் ஒன்று இரண்டாகி நிற்கிறது. உடலுக்கு உயிர் மூலப்பொருள். உயிருக்கு உடல் வேண்டும். இருகைத்தாயர் - குண்டலினி சக்தி, சிற்சக்தி என்கின்றனர். கிரியை - ஞானம் அதாவது அறிவும் ஆக்கமும் ஜீவனாக உருவாகும் பிறவிகளுக்குத்தேவை. அதுதான் ஞானமாகிய உயிரும் செயல்படும் உடலும் ஆகும்.

**பாடல். 719**

''தானே எழுந்த அத்தத்துவ நாயகி
ஊனே வழிசெய்து எம் உள்ளே இருந்திடும்
வானோர் உலகு ஈன்ற அம்மை மதித்திடத்
தேனே பருகிச் சிவாலயம் ஆகுமே''

தான் தோன்றியம்மை என்று கிராமங்களில் வழிபடுவார்கள், தானாகவே ஆதியாய் அந்தமிலாததோர் உருவாகத் தோன்றிய சக்தி-தத்துவநாயகி, மற்றுயாவற்றுமான பொருட்களுக்கும்-உயிர்கட்கும் ஆதாரமாய் உள்ள சக்தியை, அடியேன் சதா சர்வ காலமும் பல்லாண்டு காலமாய்த் தொழுது வழிபட்டு வருவதனால் என் உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கிறாள். வானவர் உலகையும் உயிரையும் உருவாக்கிக்காப்பவள், அந்த உலக நாயகியை வழிபடும் சிவயோகிகளின் உள்ளம் சிவாலயமாகும் என்பது திருமூலர் தரும் திருமந்திரம்.

**பாடல். 734**

"நீல நிறவடை நேரிழையா ளொடும்
சாலவும் புள்ளிச் சதமென்று இருப்பார்க்கு
ஞாலம் அறிய நரை திரை மாறிடும்
பாலனும் ஆவர் பராசக்தி ஆணையே"

நீல நிறத்தில் நிலவொளியில் ஒளி முகத்துடன் தரிசனம் தரும் உமாமகேஸ்வரியைத் தியானம் செய்து, தாயே, கதிஎன் - அடைக்கலம் என்று தொழுது வணங்குபவர்க்கு, உலகோர் போற்றும் வகையில் உடலும் மனமும் தளர்ச்சியுறாமல் நரை திரை மூப்பு ஒழித்து இளமைத் தோற்றத்துடன் ஒளிவீசும் முகத்துடன் காணப்படுவர் என்பது சிவபெருமானின் நல்வாக்கு - பராநந்தி ஆணையே என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார் தவயோக மாமுனிவர் திருமூலர்.

**பாடல். 823**

"தூரதரிசனம் சொல்லுவன் காணலாம்
காராரும் கன்னி கடைஞானம் உட்பெய்து
ஏராரும் தீபத்து எழிற் சிந்தி வைத்திடின்
பாரார் உலகம் பகன் முன்னதாமே"

கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் - தொலைநோக்குப் பார்வை - கண்பார்வைக்கும் அப்பாற்பட்ட இடங்களில் நிகழ்பவை பற்றித் தவ நிலையில் கண்டு சொல்லுதல் எனும் கலை, இறையருளும் திருவருளாலும் கலந்த ஞானம்பெற்றவர்களால் அனுபவத்தில் காணலாம்-கூறலாம். மேகங்கள் மழை தருவன போன்று திருவருள் வழங்கும் குளிர்ந்த கண்களையுடைய உமையம்மையான ஆதிசக்தியை தினம் தினம் தொடர்ந்து திருநெறி முறை வழி தொழுது வழிபடுபவர்கள் "நமசிவாய". என உச்சரித்து வணங்குவர்க்கு இறைஞானம் கிட்டும். தூரதிருஷ்டிப் பார்வை என்று கூறுப்படும் பல செயல்கள் பூமியில் நடப்பவை பகலில் நடப்பன போன்று காணலாம் என்பதை யோகநிலையில் கண்டு திருமூலர் உணர்த்துகிறார்.

சக்தி-சிவம்-சதாசிவம். அம்மையப்பன் சிவபெருமான். திருவருட் சக்தியாகிய சிவசக்திக்கு திரிபுரை என்று ஓர் நாமம். திரிபுரை மும்மண்டலநாயகி என மூன்று சக்தியாக மாற்றம் கொண்டார். கலைமகள், அலைமகள், மலைமகள், சிவத்துடன் ஒன்றிய சிவசக்தி பஞ்சருத்தியம் ஐந்து இயக்கங்களையும் நடத்துபவள். படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளுதல். இயங்கும் உலகம் மாயையின் மாற்பட்டது. ஒளி, ஒலியுடன் எழுத்துக்கள் ஆறு கோடி மாயையின் ஆற்றல்களும் தாமே இயங்க வல்லதான மந்திர உருவாகிய திருவருள் சக்தி இயைந்து பலவிதமாக இயக்குகிறது. மும்மண்டலநாயகியான ஆதிபராசக்தி பல இயக்கங்களைத் தோற்றுவித்து பல பெயர்களுடன் விளங்குகிறாள். சுந்தரி, அந்தரி, நாரணி, மனோன்மணி, மங்கலி என பல தேவதைகளாக உருவம் எடுக்கிறாள். கலைமகள்-மன்னுயிர்களுக்கு கல்வி ஞானத்தைத் தருபவள். திருமகள் - வாழ்விற்கு வேண்டிய செல்வம் தருபவள், மலைமகள் - முக்தி எனும் நற்கதி பேரின்பம் தருபவள்.

**பாடல். 1045**

''மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்
தாமான மந்திரம் சக்தி தன் மூர்த்திகள்
ஆமாய் அல்வாந் திரிபுரை ஆங்கே''

**பாடல். 1046**

''திரிபுரை, சுந்தரி, அந்தரி, சிந்தூரப்
பரிபுரை, நாரணி, யாம் பல வண்ணத்தி
இருள்புரை ஈசி மனோன்மணி என்ன
வருபலவாய் நிற்கும் மாமாது தானே''

சிவசக்தியான ஆதிசக்தி மூவுருவங்கள் கொண்டு பிறகு ஒன்பது உருவங்களாக மாறுகிறாள், சுந்தரி, அந்தரி, நாரணி, மனோன்மணி, அபிராமி, அகோசரி, தேவி இராஜேஸ்வரியாக மாறி நிற்கிறாள். நீண்ட காலம் தவயோகத்தில் நின்று திருவைந்தெழுத்து ஓதித்தொழும் திருமூலரின் மனக்கண்முன் தோன்றும் ஞான ஒளியினூடே உருவாகும் காட்சிகளையும் இயக்கங்களையும் அருட்பாடலாகத் தருகிறார். இராஜராஜேஸ்வரியின் திருஉருவத்தைத் தரிசித்து மகிழ்ந்து எழுதுகிறார்.

காலணி சிலம்பு, செம்பட்டு உடை, கச்சை அணிந்த மார்பகம், கைகளில் அங்குசம் மலர் அம்பு, கரும்புனில், அழகியமுடி, காதில் குண்டலம், செந்நிறத்திருமேனி தோளில் கழுத்தில் அணிகலன்கள், அருள்ஒளி வீசும் இன்முகம்-எனத்தான் கண்ட திருக்காட்சியை நமக்குத் தெரிவிக்கிறார். திருமூலரின் சக்தி வழிபாட்டை திருமந்திரத்தில் பல பாடல்களில் அள்ளித்தருகிறார்.

சண்டிகா தேவி எனும் பெயர் பெறும் சக்தி, நான்கு திசைகளிலுமாக உள்ள பரந்த உலகங்களைக் காப்பவளாகக் காண்கிறார். சண்டிகாதேவி, விந்தியாதேவி, சந்திரமண்டலி என அவதாரங்கள் எடுத்து ஆங்காங்கே கோயில் கொண்டு அமர்ந்து திருக்காட்சி தருகிறாள். சிவம் சக்தியாக இயங்குகிறது. சிவமும் சக்தியும் ஒன்றே என்பதை திருமூலர் பலநூறு ஆண்டுகட்கு முன்பே யோக நிலையில் தாம் கண்ட உண்மைகளைப் பாடலாக நமக்குத்தந்து தெளிவுபடுத்துகிறார். சில உண்மைகளைப் பலப்பல பாடல்களில் தொடர்ந்து திரும்பத்திரும்ப உணர்த்தி நம்மை நல்வழிப்படுத்துகிறார். இறைவன் திருவடி சேரும் நிலை - ஆதி சக்தியின் திருவருட் துணையுடன் தான் கைகூடச் செய்யமுடியும் என்பதைப் பாடல் 1053ல் அறிவுறுத்துகிறார்.

**பாடல். 1047**

"அறிவார் பராசக்தி ஆனந்தம் என்பர்
அறிவார் அறிவுருவாம் அவள் என்பர்
அறிவார் கருமம் அவள் இச்சை என்பர்
அறிவார் பரனும் அவளிடத்தானே"

யாவும் சக்தியின் திருவுருவம் மலர்ந்த ஞான உருவம் திருவுள்ளம். சிவம் சக்தியைத் தன்னகத்தே ஏற்றுள்ளது. சிவம் எங்கு உளதோ சக்தி அங்குள்ளது. உடல் உள்ள இடத்தில் உயிராய் உள்ளவன். பரந்த விண்வெளி முழுவதும் ஊடுருவி அப்பாலும் கலந்துள்ளவள் சக்தி. மந்தமாருதம் - தென்றற்காற்றாய் நிறைந்துள்ளவள்.

உயிர்களுக்கு இன்பத்தையும் ஞானத்தையும் அருள்பவள் சக்தி சிவ உலகத்து உள்ளவர்கள் தொடர்ந்து தடையின்றி நினைந்துதொழும் சிவ சக்தியை செம்மையான பவழம் போலும் திருமேனியையுடைய உமையம்மையை மும்மைக்கும் பெருந்துணை என்று உறுதுணையாக நம்பி மிக விரும்பி ஏற்று என் மனதில் எழுந்தருளச் செய்து தொழுது வழிபடுகின்றேன் என்று தனது நிலையைப் பாடலாகத் தருகிறார் திருமூலர்.

பல்உலகோரும் வருகை தந்து எளிதாகத்துதி செய்து வழிபடும் படியாகப் பொன் அம்பலத்தின் கண், மனோன்மணி எனவும் சிவகாமி எனவும் திருநாமத்தோடு மங்களமாக வீற்றிருப்பவள் உமாமகேஸ்வரி. சிவத்தில் கலந்து எங்கும் எப்பவும் சிவசக்தியாகத் திருவருள் தருபவள் என்று பரவசத்துடன் அறிவிக்கிறார் திருமூலர்.

**பாடல். 1062**

"ஒத்தடங்கும் கமலத்திடை ஆயிழை
அத்தகை செய்கின்ற ஆய பெரும்பதி

மத்தடைகின்ற மனோன்மணி மங்கலி
சித்தடைக்கும் வழி தேர்ந்துணரார்களே''

சிவசக்தி-தாமரைச்செல்வி - அருட்செயல் புரிகின்ற முதல்வி உயிர்களை மகிழ வைக்கும் மனோன்மணி தன்னைத்தொழுது வழிபடுவார்க்கு நல்லொளி பரவ திருவருட்சக்திகளை எளிதாக அருளும் நற்பெரும் சக்தி. கனிந்து எழுதல் எனும் ஓர் நல்வழிபாட்டுமுறை உண்டு.

**பாடல். 1063**

''உணர்ந்துடனே நிற்கும் உள்ளொளியாகி
மணங்கமழ் பூங்குழல் மங்கையும் தானும்
புணர்ந்துடனே நிற்கும், போதருங்காலை
கனிந்தெழுவார்க்குக் கதியளிப்பாளே''

சிவத்துடன் கூடி ஓர் பாகமாய் உடன் உறைபவள் சக்தி. அக வொளியாய் பரிமளிப்பவள். சிவசக்தியாய் வெளிப்பட்டு திருவருள் அளிப்பவள். அம்மையைத்தூய மனத்துடன் திருவிளக்கேற்றித் துதித்து வழிபடுபவர் களுக்கு நன்மையளிப்பவள் என்பதைத் தன் யோக நிலையில் கண்டதை எழுதுகிறார் திருமூலர்.

இளம்பெண் பிள்ளையைத்தூய நன்னீராட்டி, ஈர உடையுடன் அல்லது தோய்ந்து உலர்த்திய ஆடையுடன் நெற்றியில் திருநீறும் சந்தனமும் அணிவித்து மஞ்சள் குங்குமத்துடன் அலங்கரித்து கூந்தலில் மலர் சூடி ஆலயத்தில் அல்லது அவரவர் இல்லத்தில் தூய்மை செய்து கோலமிட்டு திருவிளக்கேற்றி, பூவும் நீரும் கொண்டு வாசனைப் பொருட்கள் கலந்து சக்தி உருவத்திற்கு அபிடேகம் செய்து அர்ச்சித்து ஒருமையுடன் தோத்திரப் பாடல்களைப்பாடி மங்கள ஒலி, ஒளி வாத்தியங்களுடன் வணங்கி வழிபட்டு வேண்டுவார்க்கு, அந்த இளம் பெண்ணின் உள் மனத்தில் அருட்சக்தி எழுந்தருளி அவள் வாயிலாக வெளிப்பட்டு நமது குறைகளை உணர்த்தியும் வேண்டும் நல்வாக்குகளையும் தருவதைக் காணலாம். இன்றும் இந்த வழிபாட்டு முறை நம்மிடையே உண்டு இந்த நிலையை அவர் காலத்திலேயே கண்டு நமக்கு வழிகாட்டுகிறார்.

**பாடல். 1064**

திருமூலர், திருவாவடுதுறை எனும் திருத்தலத்தில் அரசமரத்தடியில் பகல் இரவு என்ற சிந்தனையின்றி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே யோகநிலையில் அமர்ந்து சிவசக்தியைத் தொழுது அகக்கண் பார்வை யிலே தாம் கண்ட திருக்காட்சியை மக்களுக்குத் தெரிவிக்கிறார்.

''அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த
சுந்தரிபுளியுறு புண்பழம் போல் உள்ளே நோக்கித்

தெளியுருவித்துச் சிவகதி காட்டி
ஒளியுறவைத்து என்னை உய்ய உண்டாளே''

அனைத்து உயிர்களிடத்தும் சமநிலையில் நிறைந்த திருவருள் புரியும் மாதரசியுமான அருட்சக்தி.. புளியம்பழமும் மேல் தோடும் இணைந் திருந்தும் ஒட்டுப்பற்றின்றி நிற்பது போல, மெய்யடியார் உள்ளம் உலகியலில் பற்றின்றி நிற்கும் நிலையினைக் கண்டு உண்மையைத் தெரிவிப்பள். உயிரின் அழியாத்தன்மையினையும் சிவனுடன் கலந்த பேரின்ப நிலையினையும் தரிசனம் தருபவள். அதன்பின் திருவடி உணர்வு தந்து நம்மை உருவாக்குவள். அம்முறையில் அடியேனையும் நற்கதி பெற்று உய்யுமாறு வரம் அளித்து வாழ்வித்தாள் என்று உணர்த்துகிறார்.

எங்களது இறைவி வாக்குருபத்தில் விளங்கும் நல்நங்கையாவாள். மலர் முகத்தில் மூன்று கண்களை உடையவள். படிகம் போன்றதூய வெண்ணிறமேனி. வெண் தாமரை மலரில் அமர்ந்துள்ளவள். இனிய இசைமயமாய் விளங்குபவள். இவ்வம்மையின் பாத மலர்களை நமது தலை உச்சியில் முழு மனநிறைவோடு இருத்தி திருமுறை ஓதிப் போற்றிப் பணியுங்கள். திருவடிகள் இரண்டையும் வணங்கி வழிபட்டால் திருவருள் கைகூடும். நற்கதி கிடைக்கும் என்பது திருமூலர் அளிக்கும் திருமந்திரம்.

**பாடல். 1069**

''ஆதிவித மிகத்தண் தந்த மால் தங்கை
நீதிமலரின் மேல் நேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப்பல் காற் பயில் விரல்
சோதி மிகுந்து முக்காலமும் தோன்றுமே''

முழு முதற்கடவுளான சிவபெருமான் முதன்முதலாகப் படைப்புத் தொழிலைத்தொடங்கிய போது படைப்புச் சக்தியை தந்தவள். ஊக்குவித்துப் பெறுகச் செய்தவள். திருப்பாற்கடலில் சயனித்திருக்கும் ஸ்ரீமன் நாராயணனின் தங்கை. நாராயணி எனும் நாமம் உடையவள். நாராயணிக்கு உரிய திருநாமம் திருவைந்தெழுத்தாகிய புனிதமான தூய்மையான ''நமசிவாய'' எனும் திருமந்திரம். இந்த அருள்மந்திரத்தை நெறிமுறையுடன் எட்டு இதழ்கள் உள்ள தாமரை மலரில் மையத்தில் அமைத்துப் பலப்பலமுறை உச்சரிக்கத் திருவருள் சக்தி ஒளி தரும். அவ்வொளி பெருகின் அகக்கண் தெளிந்து திறந்து முக்காலமும் உணரும் நிலை நம்மில் உண்டாகும் யோகநிலையில் அனுபவித்ததை நமக்கு அருள்கிறார் திருமூலர்.

**பாடல். 1070**

''பதினாறு கலை வடிவமாக உருவானவள். வேதங்கள்
துதித்து வழிபடும் சக்தி. தூய நன்னெறியாளர்க்கு
ஆதாரமாய் உற்ற துணையாய் இருப்பவள்''

நாதாந்திர சொரூபன். வேதமந்திரருபன் சச்சிதானந்த சிவத்துக்குத் திருவருட் சக்தியாக உடன் உறைபவள் என்று தான் கண்ட திருக்காட்சியை எழுதுகிறார் திருமூலர்மெய்ப்பொருளான அருள் வழங்கும் புவன நாயகியின் திருவடிகளை வணங்குகிறேன்.

இவ்வுண்மையை உணரும் பேரருளாளர்கள் நாட்டு மக்களுக்கு உணர்த்த முன் வாருங்கள் என திருமூலர் அழைக்கிறார். திருமூலர் தவஞானசித்தர் பெருமான். தமிழ்முனிவர்களுள் ஒருவர், சிவயோகி, பல்லாண்டு காலம் யோக நிலையில் இருந்து தான் கண்ட உண்மை களை பேரானந்தக் காட்சிகளை நமக்கு உய்யும் வகைகாட்டி உபதேசம் செய்கிறார். 1072 வது பாடலைப் பார்ப்போம்.

"ஆனவராக முகத்தி பதத்தினள்
ஈனவர் ஆகம் இடிக்கும் முசலத்தொரு
ஏனை உழுபடை ஏந்திய வெண்ணகை
ஊனமற உணர்ந்தார் உளத்து ஓங்குமே"

ஆதிபராசக்தியைச் சூழஉள்ளவர்கள் சப்தமாதர்கள் வராகி, வயிரவி, சங்கரி, திரிசூலி, சாம்பவி, சாமுண்டி, மாகாளி என எழுவர். வராக முகம் எடுத்த சக்தி, தீயோரை அழித்து உலக்கை, கலப்பை எனும் ஆயுதங் களை திருக்கரங்களில் ஏந்தி நிற்பவள். தியானத்து வழிபடுபவர் மனதில் நிறைந்து நற்கதியளிப்பவள் என்பதை உலகோர் உணர்ந்து நல்வழிகாண அறிவுறுத்துகிறார் திருமூலர்.

**பாடல். 1080**

"ஓதிய நந்தி உணரும் திருவருள் நீதியில்
வேதநெறி வந்து உரை செய்யும்
போதம் இருபத்து எழுநாள் புணர்மதி
சோதி வயிரவி சூலம் வந்து ஆளும்"

நான்மறை போற்றும் ஆதிபகவன் திருமுறை வழியே நன்னெறி முறை களை மண்ணுலக மக்களுக்கு உபதேசித்தான். விண்ணில் திரியும் நட்சத்திரக்கூட்டம் அசுவனி முதல் ரேவதி முடிய 27 வீடுகளுக்கும் சென்று தங்கித்திரிந்து வரும் திங்கள் கிரகத்தை மையமாகக்கொண்டு ஞானம் அளிக்கும் இறைவனுடன் வயிரவி எனும் பெயருடன் முத்திலை வேலாகிய திரிசூலம் ஏந்தி துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து ஆட்சி செய்கிறாள் சிவசக்தி. சூலம், கபாலம், கயிறாகும் அரவம், அங்குசம், என நான்கு திருக்கரங்களிலும் ஏந்தி சோதி வடிவாய் நின்ற சிவபெருமான். திருமாலும் பிரமனும் அடிமுடி காண இயலாமல் நின்ற சிவபெருமான் தன் சோதித்திருவுருவின் கண், செம்மை வடிவம் தனதாகக் கொண்டு திகழ்ந்தவள் சிவசக்தி. அந்த சிவசக்தி மெய்யடியவர்களைக்

காப்பாள், நல்லோர்களுக்கு நன்மை செய்து தீயோரைத் தண்டித்து நிற்பவள், கலைஞானிகள் ஓதி நிற்கதரிசனம் தருபவள் முள்முருக்கம் பூநிறம் பெற்றவள். நவமணிகளால் ஆக்கப்பட்ட பொன்னுடை அணிந்தவள், பல மணிகள் கலந்த பொன்முடி தலையில் அணிந்து, காதணிகள் அலங்கரிக்க ஞாயிறு, திங்கள், தீ எனும் முக்கண்களை உடைய அம்மை சிவசக்தியின் தரிசனம் கண்டேன் என்கிறார் திருமூலர்.

**பாடல். 1084**

"பூரித்தபூவிதழ் எட்டினுக்கு உள்ளேயோர்
ஆரியத்தாள் உண்டு அங்கு எண்மர் கன்னியர்
பாரித்த பெண்கள் அறுபத்து நால்வரும்
சாரித்துச் சத்தியைத் தாங்கள் கண்டாரே"

மலர்ந்த தாமரை மலரில் எட்டு இதழ்களில் ஆற்றலும் திருவருளும் மிகவாக கன்னியர் எண்மர் இருப்பிடமாக அமர்ந்துள்ளனர். அவர்கள் 64 கலைத்தேவதைகளை தோற்றுவித்தனர். தேவதைகள் யாவரும் சத்தியம்மையின் திருவருளை உணர்ந்து உண்மை வழி நடப்பவர்கள் என்று தான் கண்ட யோக நிலைக்காட்சியைத் தெரிவிக்கிறார். தேர்ந்து தெளித்து எடுத்த நற்சிலம்பும் வலம்புரிச் சங்கும் திருச்சக்கரமும் தன திருக்கரங்களில் ஏந்தி எண்திசைகளிலும் நிறைந்து பல்வேறு உலகங் களையும் பல் உயிர்களையும் படைத்துக்காக்கும் திருவருட்செல்வி மெய்யடியவர்களின் இதயத்தை இடமாகக் கொண்டு பக்தர்களின் தொழுகையை ஏற்று நன்மை தருகிறாள்.

நறுமணம் வீசும் பொருள்களையும் நறுமலர்களையும் கொண்டு தூயநீர் கலந்து பூசை செய்து புத்தாடை அணிவித்து தோற்கருவி, தொலைக்கருவி, நரம்புக்கருவி தாளக்கருவி, மிடற்றுகருவி என ஐவகை வாத்தியங்கள் கொண்டு நல்லிசைப் பாடல்கள் பாடி திருவைந்தெழுத்து - "நமசிவாய" என பலமணி நேரம் ஓதி அடியவர் கூடிச்செய்யும் பூசனையை ஏற்று மகிழ்பவள் திரிபுரசுந்தரியாவாள் என்பதைத் திருமூலர் நமக்கு நினைவுபடுத்துகிறார்.

**பாடல். 1087**

"காணும் பலபல தெய்வங்களை வெவ்வேறு
பூணும் பலபல பொன் போலத்தோன்றும்
பேணும் சிவனும் பிரமனும் மாயனும்
காணும் தலைவி நற்காரணி காணே"

நாம் காணும் பற்பல தேவதைகள், ஆதிசக்தியால் தோற்றுவிக்கப்பட்டவை. காலத்திற்கேற்றவாறு இடமாற்றங்கட்கு ஏற்றவாறு நல்லோர்கள் பாதிக்கப்

படும்போது அவர்களின் வேண்டுதலை ஏற்று அதற்கேற்ப திருவருள் புரிந்து தீயன நீக்குவது தேவதைகளின் செயலாகும்.

சிவமும் விஷ்ணுவும் பிரம்மாவும் மாறுபட்ட தோற்றங்களுடன் தோன்றி உலகை இயக்குவது யாவற்றுக்கும் மூலகாரணியாக விளங்குபவள் மகா மகேஸ்வரியான ஆதிபராசக்தியேயாகும் என்பதைத் தனது தவயோக நிலையில் கண்டு திருமந்திரமாக உலகோர்க்குத் தெரிவிக்கிறார் திருமூலர்.

**பாடல்.1088**

"காரணி மந்திரம் ஓதும் கமலத்துப்
பூரண கும்ப விரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடு அங்கு உரை செய்த
ஆரண வேதநூல் அந்தமும் ஆமே"

"நமச்சிவாய" எனும் திருவைந்தெழுத்தாகிய ஆதிமந்திரத்தைத் தொடர்ந்து மறவாது தோத்திரம் செய்யும் மெய்யடியவர்கள் இதயத்து, மூச்சு உள்வாங்குதல், நிறுத்துதல், விடுதல் எனும் உயிருக்கு இன்றியமையாத இயக்கத்துக்கு உறுதுணையாக என்றும் எங்கும் உடனாகித் திருவருள் நல்குபவள் அன்னை ஆதிபராசக்தி. அவ்வாறு இயக்கம் நடத்துபவள் நாரணி, நாரயணி என்ற உருவம் பெறுகிறாள். கயிலைநாதனாகிய சிவபெருமான் அருளிச்செய்துள்ள திருமறை நூல்களின் ஆதி அந்தம் இலாதான அம்மையே காத்துரட்சிப்பவள் சக்தியேயாகும் என்பதை யோகநிலையில் உணர்ந்து மனநிறைவடைகிறார்.

**பாடல். 1099.**

"ஆதிவயிரவி கன்னித்துறை மன்னி
ஓதி உணரில் உடலுயிர் ஈசனும்
பேதை உலகில் பிறவிகள் நாசமாம்
ஓத உலவாத கோலம் ஒன்று ஆகுமே"

தத்துவம், வேதாந்தம், சித்தாந்தம் யாவற்றுக்கும் ஆதாரம் திருமூலரின் திருமந்திரம். தெய்வீகப் படைப்பு நாள்தோறும் செயல்படும் இயக்கத்துக்கு உரியதேவதை வயிரவி பல உலகங்களையும் பலப்பல ஜீவராசிகளையும் படைத்தவள். கருணைத்தேவதை கன்னியம்மையாகக் காட்சி தருபவள். உடலும் உயிருமாய் சிவமும் சக்தியுமாகி ஒரே ஜோதிமயமாயுள்ளவள், அறியாமை நிறைந்த உலகினர் அன்புடன் வழிபடும் போது பற்பல பிறவிகளை நீக்கி இறை திருவடியைத் தஞ்சமாகத் தருபவள். போற்றிப் பணிவுடன் வழிபடுவதற்குரிய திருமேனியாக உருவெடுத்த சக்தி உலவாத கோலம். அழிவற்ற தேகம்.

**பாடல். 1103**

"தையல் நல்லாளைத் தவத்தின் தலைவியை
மையலை நோக்கும் மனோன்மணி மங்கையைப்
பையநின்று ஏத்திப்பணிமின் பணிந்தபின்,
வெய்ய பவம் இனி மேவ கிலாவே"

மாதர்குலத்தின் மூலாதாரம் பெருந்தவத்தேவதை தவயோகிகளுக்கு தரிசனம் தரும் திருவருட்சக்தி. புவனங்கள் யாவையும் மயக்கத்தினின்று அகற்றும் மனோன்மணி. அத்தகு தேவியை பையநின்று ஏத்திப்பணிமின் மிகமிக அடக்கத்துடன் ஆரவாரம் இன்றி அமைதியான சூழ்நிலையில் அமர்ந்து சக்தி மூர்த்தங்கள் எழுந்தருளப்பெற்றிருக்கும். ஆலயங்களின் சன்னிதான வாயிலில் ஒதுங்கி நின்று அமர்ந்து தூய மனதுடன் தொழுது சக்தி தேவியின் திருநாமங்களைச் சொல்லி அர்ச்சனை செய்து வணங்குங்கள். நம்மை நோக்கி நெருங்கும் கொடியபிறவி விலகிச்செல்லும் என்பதை நமக்கு உறுதியாகத் தெரிவிக்கிறார் திருமூலர். சிவ மாமணிச் செல்வப் புனிதர்களான அறுபத்து மூன்று நாயன்மார்களுள் காலத்தால் மிகமிக முற்பட்டவர்கள் சண்டேஸ்வரர், கண்ணப்பர், காரைக்காலம்மையார், மணிவாசகர் திருமூலர் என்பது ஆய்வாளர் முடிவு. தவயோக நிலையில் 3000 ஆண்டுகட்கு முன் திருவாவடுதுறை அரசமரத்தடியில் அமர்ந்து ஆதி அந்தம் இலாதானை வழிபட்டுத்தான் யோக நிலையில் கண்ட காட்சிகளை வருடத்திற்கு ஒருமுறை வெளிக்கொணர்ந்து பாடல் மூலம் அறிவுறுத்துகிறார். சிவசக்தி - திருமூலர் முன்னர் எவ்வாறெல்லாம் தரிசனம் தந்ததோ அவ்வாறே அவ்வப்போது பாடல்களை எழுதித் தந்துள்ளார் என்பதை நாம் அறியலாம்.

**பாடல். 1109**

"அஞ்சொல் மொழியாள் அருந்தவப்பெண்பிள்ளை
செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென்று எண்ணித்தன் சேவடி போற்றுவார்க்கு
இன்சொல் அளிக்கும் இறைவி என்றாரே"

அஞ்சொல் மொழியாள் - புனிதமான வரிகள் - மண்ணில் பிறவி எடுத்த உயிர்களை நற்கதிக்கு அழைத்துச் செல்லும் "நமசிவாய" எனும் திருவைந்தெழுத்தை அருளித்தந்த அம்மை ஆதிபராசக்தி தானே அதற்குரிய நற்றவப் பேற்றினையும் அளிப்பவள், நற்புகழையும் நற்பண்புகளையும் தருபவள்.

தன் திருவடியே தஞ்சம் எனக்கருத்தித் தொழும் நல்ல ஆத்மாக் களுக்கு என்றும் நல்வரங்களை அளிப்பவள் ஆதிசக்தி என்று புண்ணியர்கள் தெரிவிக்கின்றனர்.

**பாடல். 1114**

"ஆதி அனாதி அகாரணி காரணி சோதிய சோதி சுகபர சுந்தரி மாது சமாதி மனோன்மணி மங்கலி ஓதி என் உள்ளத்து உடன் இயைந்தாளே" ஆதிசக்தி தொன்மைவனப்பும், நல்லொளியாய்த் திகழ் பவளும் நற்கதியளிக்கும் முழு முதல் சக்தியாயும் நிம்மதியைத் தரு பவளும் சிவ நினைப்பை நிலை பெறச்செய்யும் மங்கல முகமுடைய மனோன்மணியுமான இறைவியுமாவாள். அன்னவள், அடியேனுக்கு, திருவைந்தெழுத்தான "நமசிவாய" எனும் மந்திரத்தை உபதேசித்து என் இதயத்தில் அமர்ந்தவள் என்று உருக்கமுடன் தெரிவிக்கிறார் திருமூலர்.

**பாடல் 1122.**

"ஆவின் கிழத்திநல் ஆவடுதண் துறை
நாவின் கிழத்தி நலம் புகழ்ந்து ஏத்திடும்
தேவின் கிழத்தி திருவாம் சிவமங்கை
மேவும் கிழத்தி வினை கடிந்தாளே"

உயிர்கள் அனைத்தையும் காக்கும் அம்மையாகிய சக்தி திருவாடுதுறையில் நாவரசியாக அதாவது கலைமகள் கற்பிக்கும் கலைமகளாக எழுந்தருளி யிருக்கிறாள். மெய்யடியவர்களுக்கு அருள்தரும் சிவத்துக்குத் துணை சேர்ப்பிக்கும் சிவசக்தி. உயிர்களின் வினையை அகற்றினாள். தன்னைச் சரணடைந்தவர்களுக்கு உண்மைப்பொருளை உணர்த்துபவள் - சிவசக்தி. வேதியர்க்கு நான் மறைப்பொருளை உபதேசித்தவள். சூர்ய ஒளியைத்தருபவள். சிவனுக்கு வடிவமாக இருப்பவள் என்பதும் ஓர் கருத்து. பரந்த உலகத்துக்குரிய தோற்றமும் ஒடுக்கமுமாக உள்ள ஒருவன் ஆதிப்பிரானான சிவபெருமான் சிவசக்தி உடனாய் உமையொருபாகன் - என்பதனை உணர்ந்தேன். இவ்வாறாகத் திருமூலர் விளக்கம் அளிக்கிறார். சிவவழிபாடு செய்யும் புண்ணியச் சீலர்களின் திருக்கூட்டங்களைத் தன் திருவருள் சக்தியில் ஆழ்த்தி மனநிறைவு கொள்ளச் செய்யும் மலைமகள் சிவசக்தி என்று குறிப்பிடுகிறார் திருமூலர். எல்லையற்ற விண்வெளிப்பரப்பில் சோதிமயமாய் ஒளி பரப்பும் சிவ சக்தியை வழிபடும் நல்லோர் கால தேவனை வெல்லுதல் எளிது. முழுமுதற் கடவுளை சிவபெருமானை அறியாதவர்கள் மற்ற பல தேவதைகளைப் பயன்கருதி விருப்பப்படி வழிபடுவர். மறுமைப்பேற்றை அளிக்கவல்ல மூலப்பொருளை உணராது உள்ளனர். இம்மை நலன்களும் மறுமைப் பேறும் வேண்டின், எங்கும் நிறைந்திருக்கும் சிவசக்தியை வணங்க வேண்டும். நிலவு போன்ற திருவெண்ணீறு அணிந்த நெற்றியுடனும் குங்குமத்திலகமுடனும் காணப்படும் சிவசக்தி நல்லுயிர்களின் நெற்றியைப் பீடமாக ஏற்றுத்திருவருள் புரிகிறாள்.

**பாடல். 1186**

"அது இது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிடலாகும்,
மதிமலராள் சொன்ன மண்டலம் மூன்றே"

தேவையற்ற ஆசைகளை நினையாது சிவசக்தியை தோத்திரம் செய்து மறவாது தடையின்றித் தொடர்ந்து தியானித்து வருவோமானால் நம்மை பாதிக்கவரும் கெடுவினைகளிலிருந்து நீங்கி விடலாம். "சிவயநம" என்று பிராத்திப்பதே நமக்கு வரும் கேடுகளைக்கலையக் கூடியதாகும். மும்மண்டல நாயகி மலர்ந்த தாமரை போன்ற முகம் நிலவு போலும் குளிர்ந்த ஒளி படர்ந்த முகம் உடையவள். அவ்வம்மை அறிவித்த மூன்று மண்டலங்கள் காலம், நியதி, கலை என்பவனவாகும். இதுவே திருமூலர் உபதேசம்.

**பாடல். 1194,**

"முத்துவதனத்தி முகந்தொறும் முக்கண்ணி,
சத்தி, சதிரி, சகளி, சடாதரி
பத்துக்கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி என் உளம் மேவி நின்றளோ"

நன்முகத்தைப் போன்ற ஒளி வீசும் தூயமுகம். மூன்று கண்களை யுடையவள். சத்தி - ஞான ஒளியாய் உள்ளவள், சதிரி - நல்லாற்றல் அளிப்பவள். சகளி - அருட்திருமேனிசடாதரி - விரிந்த திருச்சடையாள் பத்துக்கரங்களையுடையவள் சிவத்துடன் அர்த்தநாரீஸ்வரியாய் உள்ளவள் வியத்தகு செயல் புரியும் சக்தி. அத்தகு திருவருளம்மை எளியவனின் மனத்தில் அமர்ந்து என்னை வழி நடத்துகிறாள் என்று கூறுகிறார் திருமூலர்.

**பாடல். 1200**

"ஆரே திருவின் திருவடி காண்பார்கள்
நேரே நின்று ஓதி நினையவும் வல்லார்க்கு
காரேர் குழலி கமலமலரன்ன
சீரேயும் சேவடி சிந்தை வைத்தாளே"

உலகநாயகியான சக்தியின் திருவடி காண்பார் யார். உமையம்மையின் சன்னதியில் நின்று திருநாமங்களை உச்சரித்துத் தூய்மையுடன் துதிப்பவர் கட்கு தனது திருவடி தரிசனத்தைத்தந்து அருள் செய்கிறாள். திருமூலர் தான் பெற்ற தரிசனத்தை அடியார்கள் பெற்று நன்மை பெற வேண்டும் என விரும்பி உபதேசிக்கிறார்.

சிவசக்தி ஒன்பது திருஉருவங்களாகக் கோலம் கொண்டு அருள் செய்யும் நிலை, ஒன்பது சக்தி வடிவங்கள். சக்தியின் திருமேனியை

அவரவர் விரும்பும் உருவத்தில் வழிபட்டு வணங்குவார்க்கு அத்திருவுருவே தரிசனம் தந்து, வேண்டும் வரம் தருவதாகும். சிவசக்தி எங்கும் எக்காலத்தும் அருட்பெருஞ்சோதி ரூபமாய் நன்மை பயப்பவள்.

நாகேஸ்வரி, பாகேஸ்வரி, வாகேஸ்வரி, லோகேஸ்வரி, ராஜேஸ்வரி, மகேஸ்வரி, புவனேஸ்வரி, சர்வேஸ்வரி, கனகேஸ்வரி. தவயோகநிலையில் நின்று தனிமையில் அமைதியாகத்தொழுது வழிபடும் ஞானிகள், ரிஷிகள், முனிவர்கள் சித்தர்கள், துறவிகள், யோகிகள் முதலியோர்களுக்கு அவர்களின் உளத்தே அமர்ந்து திருவருள் புரியும் சிவசக்தி, புறத்தே ஆங்காங்கே மண்ணுலகம் எங்கும் பலபெயர் உருவங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறாள். அக்கோயில் தோறும் சென்று நறுமண மலர்களையும் குளிர்ந்த நீரும்கொண்டு நாள்தோறும் காலையும் மாலையும் பூசை செய்து வழிபட்டு, "நமசிவாய" என ஓதும் மக்களுக்கு இறையருள் அருட்சக்தி எளிதில் கிட்டும் என்று தான் கண்ட காட்சியின் மூலம் உணர்த்துகிறார் திருமூலர்.

**பாடல். 1243**

"நவிற்று நன்மந்திரம் நன்மலர்தூபம்
கவற்றிய கந்தம் கவர்ந்து எரிதீபம்
பயிற்றும் உலகினில் பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை தானே"

அற்புதமான தெய்வீகப்பாடல். அகமும் புறமும் தூய்மையுடன் தொடர்ந்து ஓதப்பெறும் நன்மந்திர வழிபாடும் நறுமண மலர் பூசையும் மணம் வீசும்வாசனைப் பொருள்கள் கலந்த குங்குலிய தூபமும் ஒளிதரும் தீபம் கொண்டு உலகில் ஆங்காங்கே மக்கள் சிவசக்திக்கு குளிர்ந்த நீர் கொண்டு செய்யப்படும் பூசையானது வேள்வியில் இடும் அவிர்ப்பாகத்தை ஏற்கும் இறைவனுக்குரிய அர்ச்சனையாக அமையும், சக்தியும் சிவமும் ஒன்றேயான சிவசக்தியாதலின் பார்வதிக்கு செய்யப்படும் பூசை பரமனுக்கும் உகந்ததாகும் என்பது யோக நிலையில் திருமூலர் கண்ட தரிசனக்காட்சி உண்மை நிலையாகும்.

ஆலயம் சென்று சிவசக்தி ரூபத்தை வணங்கி ஓராயிரம் திருநாமம் கூறி பூசிக்கவும், "ஓம் நமசிவாய" நல்ல தேன் கொண்டு படைக்கவும். நறுமண மலர் கொண்டு பூசைசெய்து சாந்து, சவ்வாது, புனுகு, நெய்சாத்தி வழிபடின், நம்மை எதிர்த்து உருவாகும் பகை நிலை நம்மை நாடாது அழியும் என்பது திருமூலர் தரும் திருமந்திரம்.

**பாடல். 1301**

"குறைவதும் இல்லை குரை கழற்கூடும்
அறைவதும் ஆரணம் அவ்வெழுத்து ஆகித்

திறமதுவாகத் தெளிய வல்லார்க்கு
இறவில்லை என்று இயம்பினர் காணே"

இறைநாமம் - திருமந்திரம் - "நமசிவாயநம" எனும் திருவைந்தெழுத்து. தினம் தினம் உச்சரித்து ஓதி வழிபடுபவர்க்கு எவ்வகைக் குறையும் உண்டாகாது. மங்கல ஒலி தரும் வீரக்கழல் அணிந்த திருவடி தரிசனம் கிடைக்கும். இந்த உண்மையான நன்நெறியைக் கூறுவது மறை நூலாகும். மறைநூல் முறை நூலாகிய வேதஆகமங்களுக்கும் ஆதாரம் திருவைந்தெழுத்தேயாகும். இந்த உண்மையினை உணர்ந்து வழிபடு பவர்க்கு அடுத்தபிறப்பில்லை. இறப்பும் இல்லை சிவனடி சேர்வர் என்பதை செந்நெறிச் செல்வர்கள் அனுபவித்துத் தெரிவித்ததாக நமக்கு அருளுரை தருகிறார். திருமூலர்.

**பாடல். 1302**

"காணும் பொருளும் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்
ஊணும் உணர்வும் உறக்கமும் தானாகக்
காணும் கனகமும் காரிகையாமே"

சிவசக்தி வழிபாட்டை தினம் பூவும் நீரும் கொண்டு திருமந்திரங்களை ஓதி வழிபடுகிறவர்களுக்கு பராசக்தியின் திருவருளினாலே நமக்குத் தேவையான அனைத்துப் பொருட்களும் கைகூடும் கிடைக்கும். மனத்தகத்தே நாம் வழிபடும் தெய்வீக உருவம் வந்து நிற்கும். நாம் சிந்தையில் நினைத்துத்தொழுது போற்றி சொல்லி வழிபடும் புனிதத்தலங்கள், நீராடி வரும் புண்ணிய தீர்த்தங்கள் நம் கண் முன்னே நிழலாடும். தெய்வீகக் காட்சியாய் மலரும். நமக்குத் தேவையான உணவு, நல்லுணர்வுகள், உறக்கம் செல்வங்கள் யாவும் தானாக வந்து சேரும். திருவருளும் தரிசனமும் நற்செல்வங்களையும் அளிக்கும் சக்திக்கு திருமூலர் சாம்பவி எனும் பெயர் சூட்டியருளுகிறார்.

**பாடல். 1309**

"ஏக பராசக்தி ஈசற்கு ஆம் அங்கமே
யாகம் பாவித்தையாம் முத்தி சித்தையே
ஏகம் பராசக்தியாகச் சிவகுரு
யோகம் பராசக்தி உண்மை எட்டாமே"

ஏகரூபம் என்பது சிவசக்தி. சிவாம்சம் - இறைவனது அங்கம் திருமேனியின் திருவிளையாடல்கள். முத்தியையும் சித்தியையும் அளிக்கும் ஆதிசக்தி சிவத்துடன் சார்ந்து நிற்பதில் எட்டுச் சத்திகளாக உருவங்கள் கொண்டு திருவருளைத் தருகிறாள்.

**பாடல். 1318**

**"சேவிப்பதன் முன்னே தேவியை உத்வாகனத்தால்,**
**பாவித்து இதய கமலத்தே பதிவித்து அங்கு**
**யாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை,**
**நீ வைத்துச் சேவி நினைந்தது தருமே"**

தினமும் காலையில் உண்பதற்கு முன், தூய்மையுடன் திருநீறணிந்து திருவிளக்கேற்றி பூவும் நீரும் கொண்டு சிவசக்தி உருவைப்பூசித்து மலர்களால் அர்ச்சித்து மனதில் எழுந்தருளச்செய்ய வேண்டும். சிவத்தையும் சக்தியையும் இதயத்தில் பதியவைத்து திருவைந்தெழுத்தை உச்சரித்துத் தொழுது வரவும். திருவடியினிடத்தே மனத்தை வைத்து வேறு சிந்தனை யின்றி துதிக்கவும். நாம் வேண்டிநிற்கும் காரியங்கள் கைகூடாகும். நமக்கு சிவசக்தி வழிபாடு நல்வரம் அளிக்கும் என்பதை உறுதிபடத் தெரிவிக்கிறார் திருமூலர். தொடர்ந்து மேலும் திருமூலர் தெரிவிக்கிறார். சந்திநேரம் - அதாவது இரவும் பகலும் சந்திக்கும் காலை நேரம். பகலும் இரவும் சந்திக்கும் மாலைநேரம், குளித்து, தூய்மையுடன் மஞ்சள் கலந்த அரிசியும், அருகம்புல்லும் பூசைக்கான கிடைக்கும் பலவிதமான மலர் களையும் கொண்டு திருவிளக்கேற்றி அர்ச்சனை செய்து நீண்டநேரம் முடிந்தவரை தியானித்து வழிபடுபவர்க்கு சிவசக்தி திருவருள் நல்கும் என்பதை திருமூலர் நமக்கு வழிகாட்டி உபதேசிக்கிறார்.

**பாடல். 1345**

**"ஒளிக்கும் பராசக்தி உள்ளம் அமர்ந்திடில்**
**களிக்கும் இச்சிந்தையில் காரணம் காட்டித்**
**தெளிக்கும் மழையுடன் செல்வம் உண்டாக்கும்**
**அளிக்கும் இறைவியை அறிந்து கொள்வார்க்கே"**

சோதிசொருபமான சிவசக்தியை மனத்தில் இருத்தி தோத்திரம் செய்தால், நம் மனம் தெளிவடையும் உண்மைப்பொருளை அறியலாம். நன்மழையும் செல்வங்களும் கிடைக்கும். இவை திருமூலர் யோகநிலையில் கண்ட தரிசனம்.

**பாடல். 1349**

**"ஒளியது ஹௌ முன் கிரீம் அது ஈராம்**
**களியது சக்கரம் கண்டு அறிவார்க்குத்**
**தெளிவது ஞானமும் சிந்தையும் தேறப்**
**பணிவது பஞ்சாக்கரம் அதுவாமே"**

ஒளியுடைய வடசொல் "ஹௌ" எனும் எழுத்தை முதலினும் "கிரீம்" எனும் சொல்லை இறுதியிலும் வரைந்து திருவருளானந்தத்தை அளிக்கும் திருவருள் சக்கரத்தை உருவாக்கி வழிபடுவார்க்கு மெய்யுணர்வு கை

கூடாகும். பின் திருவைந்தெழுத்து மந்திரமான "நமசிவாய" என முடிந்த மட்டும் நீண்டநேரம் உச்சரித்துத் தொழுது முழுமுதற் கடவுள் சிவபெருமானை வழிபடுங்கள். நற்கதி கிடைக்கும் திருமூலர் உபதேசம்.

**பாடல். 1350**

"ஆமே சதாசிவ நாயகியானவள்,
ஆமே அதோ முகத்துள் அறிவானவள்,
ஆமே சுவை, ஒளி, ஊறு, ஓசை கண்டவள்,
ஆமே அனைத்துயிர் தன்உளும் ஆமே"

சதாசிவமூர்த்திக்குத் திருவருட்துணையாக இயங்குபவள் சிவசக்தி. நவாக்கரி எனும் பெயர் கொண்ட மனோன்மணி. விண்ணிலிருந்து மண்ணுலகம் நோக்கி தன் அருட்பார்வையினாலே. தாயின் வயிற்றில் உருவாகும் பிஞ்சு உடலுக்குள் உயிரைச் செலுத்தி பிறப்பிப்பவள் சிவசக்தி. சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம் ஆகியவற்றை உணரும் அறிவாகத் தந்தருள்பவள். உயிர்களை மின்னொளி போல அருவ நிலையிலே தன்னகத்தே வைத்துக் கொண்டு பருவ காலங்களில் உருவாகும் உடலுக்குள் உயிரைச் செலுத்தி ஜீவன்களை தோற்றுவிக்கிறவள் சிவசக்தி.

**பாடல். 1368**

"ஆகின்ற சந்தனம் குங்குமம் கஸ்தூரி
போகின்ற சாந்து சவ்வாது புனுகு நெய்
வேகின்ற கற்பூரம் ஆகோசன நீரும்
சேர்கின்ற ஒன்பதும் சேர நீ வைத்திடே"

அரைத்த சந்தனம், குங்குமப்பூ, கஸ்தூரி, புனாகு, சவ்வாது, நெய், கற்பூரம், கோமயம் பல வாசனைப்பொருள் கலந்த கூட்டுச்சாந்து ஆகிய ஒன்பது பொருள்களையும் குளிர்ந்த நீருடன் கலந்து சிவசக்திருபம் திருச்சக்கரத்துக்கு அபிடேகம் செய்து வழிபடுங்கள். நற்கதி கிடைக்கும். நினைத்தவை கைகூடும் பல்லாண்டுகள் தவயோகத்தில் நின்று தான் காணும் திருக்காட்சிகளை ஆண்டிற்கு ஒருநாள் கண்விழித்து ஒவ்வொரு பாடலாக எழுதியிருப்பதாக சான்றோர் பெருமக்கள் தெரிவிக்கிறார்கள். திருமந்திரப்பாடல்களைத் திரும்பத்திரும்பப் படிக்க வேண்டும். பொருள் தெரிந்து படிப்பது மேலும் உண்மைக்கருத்துக்களை நமக்கு உணர்த்துகிறது.

**பாடல். 1400**

"கடந்தவள் பொன்முடி மாணிக்கத்தோடு
தொடர்ந்தணி முத்து பவளம் கச்சாகப்
படர்ந்தல்குல் பட்டாடை பாதச்சிலம்பு
மடந்தை கிறியவள் வந்து நின்றானே"

சிவசக்தியம்மை அழகிய பன்மணிகள் கோர்த்த பொன் நகையணிந்த் நல்ல நீண்ட கூந்தல், மாணிக்கத்திருத்தோடு, முத்து பவளத்தால் ஆன அணிகலன்கள். பட்டாடை திருப்பாதங்களில் ஒலிக்கும் சிலம்பு: மடந்தை வடிவில் என்முன்தோன்றி தரிசனம் தந்து அருள் செய்தாள் என்று திருமூலர் பரவசமடைகிறார்.

**பாடல். 1416**

"கொண்டங்கு இருந்தனர் கூத்தன் ஒளியினைக்,
கண்டங்கு இருந்தனர் காரணத்து உள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்கும் தேடுமால்,
இன்று என் மனத்துளே இல்லடைந்து ஆகுமே"

ஆடல் வல்லான் அம்பலக்கூத்தனின் நடன ஒளியினைக்கொண்டு அங்கு எழுந்தருளியிருக்கும் சிவசக்தி அம்மையின் சோதி தரிசனத்தைத் தவயோகிகள் கண்டு வணங்குகின்றனர். சிவமும் சக்தியும் உமாமகேசனாய் அளிக்கும் திவ்ய தரிசனத்தில் உலகுடல் பொருட்கள் தோன்றி செயல் படுகின்றன. தொன்மைச் செந்தமிழ்த் திருமறைகள் யாவும் திருவருட்சக்தி யின் திருவடிகளைத் தேடி நாடும் காலத்தே அடியேனின் தவத்திற்கும் வழிபாட்டிற்கும் உளம் கனிந்து ஏனது மனத்தில் எழுந்தருளி என்னை நற்கதிக்கு அடியவனாக்கித் திருவருள் புரிந்தாள் சிவசக்தி என்பதை தெளிந்த ஞான வள்ளலாய் தவயோகி திருமூலர் வணங்கி நிற்கிறார். சிவயோகத்தில் அமர்ந்தவர். சிவயோகி திருமூலர். திருமூலரின் தலையாய அறிவுரை - "அன்பே சிவம்." அன்பை உயிர்கள் பால் அருள்பவள் சிவசக்தி. சக்திவழிபாட்டைப்பற்றி நான்காம் தந்திரத்தில் மந்திரசாத்திரம் - அஜபாமந்திரம், கபாலி மந்திரம், திருஅம்பலச்சக்கரம், பைரவச்சக்கரம், சாம்பவி மண்டலச்சக்கரம், புவனாபதிச்சக்கரம், நவரசர் சக்கரம் திரிபுரச் சக்கரம், ஏரொளிசக்கரம் என்ற தலைப்புக்களில் விளக்கமாகத் தந்துள்ளார். திருமந்திரத்தில் சக்தி வழிபாடு, உன்னதமானது, புனிதமானது, தில்லையில் பதஞ்சலி முனிவருடன் சிவசக்தியின் திருநடனம் கண்டு போற்றியவர். திருமூலரின் திருமந்திரம் தெய்வ வழிபாட்டு நூலாக மட்டுமின்றி நீதிநூலாகவும் போற்றப்படுவதாகும். திருக்கோயில் வழிபாட்டையும் திருவுருவச்சிறப்புக்களையும் மந்திர உபதேசங்களையும் திருமூலர் தந்துள்ள நூல் திருமந்திரம், தவயோகியான திருமூலர் தனது நூலான திருமந்திரத்தில் சக்தி வழிபாடு பற்றி விளக்கமாக, பல்லாண்டு தவ நிலையில் கண்ட சக்தி தரிசனத்தை முன்னூறு பாடல்களுக்கும் மேலாக நாம் உய்யும் பொருட்டு தந்துள்ள தெய்வீகப் பாடல்கள். அடியேன் இங்குத்தந்துள்ளது ஒரு சில பாடல்களேயாகும். திருமூலர் தந்த உபதேசங்களை மனத்தில் கொண்டு சிவசக்தியை வழிபட்டு வளமும் நலமும் பெறுவோமாக.

# 37. திருமூலர் கூறும் வாழ்வியல் அறங்கள்

முனைவர் எம். சற்குணவதி, சென்னை.

உலக ஒருமைப்பாட்டை முதன்முதல் பாடலில் வடித்துக் காட்டிய பெருமைக்குரியவர் திருமூலர். அவர் ஒரு சித்தராக வாழ்ந்த போதும் உலகில் மனிதன் செம்மையாக வாழும் வழிமுறைகளை வகுத்துக் காட்டியவர் இம்மை வாழ்விற்கும் மறுமை வாழ்விற்குமான நெறிகளையும் முறைகளையும் எடுத்துரைப்பதே வாழ்வியல் அறமாகும். அந்த வகையில் உடல்சார்ந்த, உள்ளம் சார்ந்த நெறிகளை திருமூலர் வகுத்து காட்டுகின்றார். திருமந்திரத்தின் முதல் தந்திரத்தில் ஒரு மனிதனை தீய வழிக்கு இழுத்து செல்லும் பண்புகளை சுட்டிக்காட்டி அவற்றை விலக்க வேண்டும் என்றும், நல்வழிக்கு இழுத்து செல்லும் பண்புகளை சுட்டிக்காட்டி அவற்றை கடைப்பிடிக்க வேண்டும் என்பதையும் எடுத்துரைக்கின்றார். அத்தகைய வாழ்வியல் அறங்களை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இந்தக் கட்டுரை கீழ்வரும் மூன்று பிரிவுகளின் கீழ் அமைந்துள்ளது.

1. மனிதனுக்குள் இருக்க வேண்டிய இறை நம்பிக்கை.
2. மனிதன் தள்ள வேண்டிய பண்புகள்.
3. மனிதன் கொள்ள வேண்டிய பண்புகள்.

### 1. மனிதனுக்கு இருக்க வேண்டிய இறை நம்பிக்கை

ஒரு மனிதன் நல்ல செயல்களை செய்வதும் தீய செயல்களை செய்வதும் இயல்பான ஒன்று. எதைச் செய்தாலும் நம்மை படைத்த ஒரு சக்தி; நம்மை வழிநடத்தும் ஒரு சக்தி நம்மை பார்த்துக் கொண்டுள்ளது என்னும் ஒரு உள்ளுணர்வு இருக்க வேண்டியது அவசியமாகின்றது. அதுதான் அவன் வாழ்வின் அடிப்படையாகின்றது. நாத்திகவாதிகளாக இருந்தாலும் அறம் என்னும் கடவுள் நம்மை கண்காணிக்கின்றது என்கிற உள்ளுணர்வினைப் பெறவேண்டியது அவசியமாகின்றது.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
நெறிநின்றார் நீடு வாழ்வர்" (குறள்-6)

என்னும் குறளில் வள்ளுவர் கூறுவது போன்று இறை நம்பிக்கை என்பது மக்களின் மனதிலுள்ள இடர்களை நீக்கி தெளிவடையச் செய்ய வல்லதாகும். இதைத்தான் திருமூலரும்,

"பொன்னால் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னால் பிறங்க இருந்தவன்; பேர் நந்தி
என்னால் தொழப்படும் இறை; மற்று அவன்
தன்னால் தொழப்படுவார் இல்லை தானே" (திருமந்திரம் - 9)

என்கிறார். இறைவன் இயற்றப்பட்டாற்போன்ற அழகிய சடை எனச் சொல்லும்படி பின்புறம் விளங்குபவன். அவனது திருநாமம் நந்தி என்பதாகும். என்னால் அவன் வணங்கத் தக்கவன். உயிர்கட்கு எல்லாம் தலைவன். ஆயினும் அவனால் வணங்கத்தக்கவர் எவரும் இலர். அத்தகைய இறைவன் நம்மை எப்பொழுதும் கண்காணித்து கொண்டுள்ளார் என்கிற இறை நம்பிக்கை முதலாவது ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றார்.

இந்த உலகையும் அண்ட சராசரங்களையும் படைத்து இயக்கும் சக்தியாகிய இறைவன் ஒருவன் உண்டு என்பதை மறந்து விடாதீர்கள் என்கிறார் திருமூலர்.

"வல்லவன் வன்னிக்கு இறை இடைவாரணம்
நில் என நிற்பித்த நீதியின் ஈசனை
இல் என வேண்டா; இறையவர் தம் முதல்
அல்லும் பகலும் அருளுகின்றானே" (திருமந்திரம் - 23)

என்ற பாடலில் இறைவன் எல்லாம் வல்ல ஆற்றல் உடையவன். கடலின் நடுவே அக்கினிக் கடவுளை நிலைக்கச் செய்த நீதியை உடையவன். இத்தகைய இறைவனை இல்லை எனச் சொல்ல வேண்டா. படைத்தல் முதலியவற்றைச் செய்கின்ற கடவுளர்க்கும் தலைவனாய் இரவும் பகலும் உயிர்களுக்கு அருள் செய்கின்றான் என்றுரைக்கின்றார். ஆக்கலும் அழித்தலுமாகிய அனைத்து செயல்களையும் இறைவன் செய்கிறான் என்பதை மனிதர்கள் உணர வேண்டும் என்கிறார்.

மற்றுமொரு பாடலில் எல்லா நேரங்களிலும் எல்லாச் சூழல்களிலும் இறைவனே நமக்கு வழித்துணையாகிறான் என்பதை சுட்டுகின்றார்.

"இணங்கிநின்றான், எங்குமாகி நின்றானும்
பிணங்கிநின்றான், பின்முன் ஆகி நின்றானும்
உணங்கிநின்றான் அமராபதி நாதன்
வணங்கி நின்றார்க்கே வழித்துணை ஆமே" (திருமந்திரம் - 28)

என்கிறார். எல்லா இடங்களிலும் நீக்கமில்லாமல் நின்றவன் சிவன் ஆன்மாக்களுடன் பொருந்தி விளங்குகின்றான். எக்காலத்தும் இருப்பவனான அவன் மாறுபட்ட தன்மையில் உள்ளான். அவன் தன்னை வழிபடுபவர்க்கு வழித்துணையாய் விளங்குகின்றான். எனவே எல்லாம் வல்ல இறைவனை நினைப்பதும் வணங்குவதுமான உணர்வினை மனிதர்கள் பெற வேண்டும்

என்பதையும் அதுவே மனித வாழ்வின் முதல் நெறியும் முறையுமாகும் என்பதை திருமூலர் உணர வைக்கின்றார்.

**2. மனிதன் தள்ள வேண்டிய பண்புகள்**

மனிதன் செய்கின்ற அத்துணை செயல்களுக்கும் காரணமாக அமைவது ஆணவம். தான் என்பதும் தனது என்பதுமான அகப்புற ஆணவங்கள். அதனால் கர்வம் கொண்டு தீமைகளை செய்கிறான், பிறரை இழிவாக நினைக்கிறான். அத்தகைய பண்புகளை விலக்க வேண்டும் என்பதே திருமூலரின் கருத்து. அதற்கு எத்தகைய மனநிலை வரவேண்டும் என்பதை பட்டியலிடுகிறார்.

உடலின் கவர்ச்சியும் அழகும் இறைவன் கொடுத்தது. அதற்காக இறைவனுக்கு நன்றி மட்டுமே செலுத்த வேண்டும். சில மனிதர்கள் உடல் கவர்ச்சி நிலையென நினைத்து கர்வம் கொண்டு பல தீமைகளை செய்கின்றனர். அவர்களுக்கு திருமூலர் சொல்கிறார். எந்தச் சூழ்நிலை யிலும் யாருக்கு வேண்டுமானாலும் எதுவேண்டுமானாலும் நடக்கலாம். எச்சரிக்கையாக இருங்கள். இந்த உடல் நிலையில்லாதது. அதனடிப்படை யிலான கர்வத்தை விடுங்கள் என்கின்றார்.

"மன்றத்தே நம்பிமாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகை பெற்று ஏறினான்
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்
சென்று, அத்தா என்ன திரிந்திலன் தானே" (திருமந்திரம் - 149)

ஓர் ஆடவன் மாடி வீடு கட்டி மகிழ்வுடன் வாழ்ந்திருந்தான். அவன் பலரும் காணப் பல்லக்கில் ஏறின்ான். அவன் பொது இடத்தில் தாழ்ந் தார்க்கும் சமமானவர்க்கும் மேலானவர்க்கும் ஆடையை வழங்கினான். உயிர் நீங்கிய பின்பு அவனுடைய மக்கள் அவனை 'அப்பா!' என்று அழைத்தனர். ஆனால் அவன் மீள உயிர் பெற்று எழவில்லை. நாம் இன்னும் பல காலம் இந்த மண்ணில் வாழப் போகிறோம் என்று பலர் நினைத்து ஆணவத்தில் அழிகின்றனர். அந்த உயிரும் நிலையில்லாதது என்பதை உணருங்கள் என்று எச்சரிக்கின்றார் திருமூலர்.

உயிரைப் போன்று உடலும் நிலையில்லாதது. அதை பெரிதாக நினைத்து ஆணவம் கொள்ளாதீர் என்கிறார் திருமூலர்.

"இடிச்சில் இருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்சது அறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சு இருள் ஆவது அறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்றவாறே" (திருமந்திரம் - 164)

உடல் என்னும் அகல் இருக்க உயிர் என்னும் தீப ஒளியை இயமன் எடுத்துச் சென்றான். அறியாதவர் உடம்பு அழிவதை அறியாது புலம்பு

கின்றனர். பிறப்பு என்னும் விடியலும் இறப்பு என்னும் இருளும் மாறி மாறி வரும் என்பதை உலகினர் அறியார். அறியாது நிலையில்லாத உடலை நிலை என நம்பிப் பற்றிக் கொண்டு வருந்துகின்றனர். உடலை நிலையென நினைத்து பெருமை கொள்ளும் எண்ணத்தை விட்டு விடுங்கள் என்கிறார்.

இளமைகாலத்தில் பல தவறுகளை மனிதர்கள் செய்கின்றனர். அந்த இளமையும் சூரியனைக் கண்ட பனித்துளிப் போன்று நீங்கி விடும் என்பதை உணர்ந்து செயல்படுங்கள் என்கிறார் திருமூலர்.

''கிழக்கே எழுந்து ஓடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டும் தேறார் விழிஇலா மாந்தர்
குழக்கன்று மூத்து எருதாய்ச்சில நாளில்
விழக்கண்டும் தேறார் வியன் உலகோரே'' (திருமந்திரம் - 177)

கிழக்கு திசையில் வானத்தில் தோன்றி விளங்கும் கதிரவன் மேற்கில் மறைவதைக் கண்டும் அறிவில்லாதவர் நிலையாமையை உணரமாட்டார். அதுபோல், இளங்கன்று சில நாளில் வளர்ந்து அடைந்து இறப்பதைக் கண்டும் அகன்ற இவ்வுலகத்தவர் இளமை நிலையாமையை உணர மாட்டார் என்று ஆதங்கப்படுகிறார் திருமூலர். இதன்வழி இளமை நிலையென கருதும் பண்பினை மாற்றிக் கொள்ளுங்கள் என்கிறார் திருமூலர்.

உடல் தொடர்பான ஆணவங்களைப் போன்று உள்ளத் தொடர்பான ஆணவங்களும் மனிதர்களிடம் குடிகொண்டுள்ளன. புறச் செல்வங்களை பெரிதாக நினைத்து அதனால் ஏற்படுகின்ற ஆணவங்கள், அவை யாவும் நிலையற்றது என்பதை உணருங்கள் என்கிறார் திருமூலர்.

''மகிழ்கின்ற செல்வமும் மனமும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம்போல
அவிழ்கின்ற ஆக்கைக்கு ஓர் வீடுபேறுஆகச்
சிமிழ் ஒன்று வைத்தமை தேர்ந்து அறியாரே'' (திருமந்திரம் - 173)

மகிழ்வடைந்து அனுபவிக்கும் பரம்பரைச் செல்வமும் தாமே முயன்று ஈட்டிய செல்வமும் ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுக் கவிழும் படகைப் போன்றவையாகும். அழியும் இயல்பு கொண்ட உடலுக்கு ஒரு நிலைபேறாகச் சேமித்து வைத்துள்ளதை நினைத்து பெருக்கிக் கொள்வதற்கு உலகத்தவர் எண்ணமாட்டார். எது ஒன்றிலும் அதிக பற்று வைத்தால், நிலையென நினைத்தால் ஆணவம் பெருகும். அதனால் தீமைகள் விளையும். எனவேதான் திருமூலர் உயிர், உடல், உடைமை ஆகிய மூன்றால் வரும் ஆணவம் நீங்கி நல்வழி நடந்து வாழ்வில் செம்மை அடைய வேண்டுமானால் உயிர், உடல், உடைமை அனைத்தும் நிலையில்லாததை உணர்ந்து செயல்பட வேண்டும் என்பதை சுட்டுகின்றார்.

### 3. மனிதன் கொள்ள வேண்டிய பண்புகள்

இந்த மண்ணுலகில் மனிதனாக பிறந்திருப்பதே மிகப்பெரிய பேறு என்பதை ஒவ்வொரு மனிதனும் உணர்ந்து அவரவர் வாழ்க்கையில் ஒழுங்கை கடைபிடிக்க வேண்டும் என்பதே திருமூலரின் வேண்டுகோள். மனிதன் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒழுங்கை அடிப்படை யாகக் கொண்டு அமைய வேண்டும். பிறரிடம் பேசுகின்ற பேச்சு, நடந்து கொள்கின்ற முறை, உண்ணும் உணவு, உடுத்தும் உடை, பார்க்கும் பார்வை இப்படி எல்லா நிலைகளிலும் ஒழுக்கத்தைப் பின்பற்ற வேண்டியது அவசியமாகின்றது. அதைத்தான் திருமூலர்,

"ஆம்விதிநாடி அறம்செய்மின் அந்நிலம்
போம்விதிநாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும் அதுஎன் சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமை வல்லார்க்கே" (திருமந்திரம் - 195)

என்ற பாடலில் இந்தப் பிறவியில் இன்பம் தரும் நெறியை நாடி ஒழுக்கத்தில் நில்லுங்கள். மேலாம் நிலம் அல்லது ஒளி மண்டலத்தை விரும்பி இறைவனைத் துதியுங்கள். மக்களாய்ப் பிறக்கும் நல்லூழைப் பெற்ற அரியவர்க்குக் கூறப்போனால் விதியாகக் கூறி விளக்க வேண்டியது எது இருக்கின்றது என்கிறார்.

பஞ்சமா பாதகங்களைச் செய்யாதிருத்தலும் பிறர் மனம் நோகும் படியாக, வலிக்கும்படியாக பேசாதீர்கள். அப்படியான செயல்களைச் செய்யாதீர்கள் என்று எச்சரிக்கின்றார் திருமூலர்

"அவ்வியம் பேசி அறம்கெட நில்லன்மின்
செவ்வியன் ஆகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்வியன் ஆகிச் சிறந்து உண்ணும்போது ஒரு
தவ்விக் கொடு உண்மின் தலைப்பட்ட போதே"

(திருமந்திரம் - 196)

வஞ்சனை பொய் முதலிய பிறர்க்குத் துன்பம் உண்டாக்கும் தீய சொற்களைச் சொல்லி அறமுறை கெடும்படி நிற்காதீர். பேராசை கொண்டு பிறர் பொருளைச் சிறிதும் விரும்பாதீர். எல்லா வகையிலும் மேம்பட்ட நல்ல பண்புகளை உடையவர் ஆகுங்கள். உண்ணும்போது யாரேனும் உம்மை நாடி வரின் ஓர் அகப்பை உணவு கொடுத்துப் பின்பு உண்ணுங்கள். காரணம் நாம் எதை செய்கிறோமோ அதையே பெறுவோம். எதை விதைக்கிறோமோ அதையே அறுப்போம். வள்ளுவர் சொல்வதுப் போன்று,

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்" (திருக்குறள் - 319)

என்பது உறுதி. இதையே திருமூலர் சுட்டுகின்றார்.

"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக்கயிற்றாற் கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவீர் தாமே" (திருமந்திரம் - 198)

'கொல்' எனவும் 'குத்து' எனவும் கூறிய விலங்கை ஒத்த மக்களை இயம தூதர் வலிய கயிற்றால் கட்டி, 'செல்' எனவும் 'நில்' எனவும் அதட்டித் தீப்பொருந்திய நரகத்தில் நெடுங்காலம் நிற்க எனவும் ஆணையிடுவர் என்று திருமூலர் தீயவர்களுக்கு எச்சரிக்கை விடுகிறார்.

அவரவர் தமது கடமையை செய்து வாழ வேண்டும். வாழ்நாளை வீண் நாளாக்கக் கூடாது என்பதையும் வலியுறுத்துகின்றார். நாள்தோறும் காலையில் எழுந்தவர்கள் மாலையில் உறங்கச் செல்லும் செய்கை வாழ்நாள் குறைதலைப் போன்றது. அங்ஙனம் வாழ்நாளைக் குறைக்கும் இறைவன் சினம் கொண்டவனாகிலும் தம் கடமையை பொருத்தமுற செய்தவர்களுக்கு இன்பத்தை அளிக்கின்றான் என்னும் கருத்தை கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

"காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாணாள் கழிவதும்
சாலும், அவ்வீசன் சலவியன் ஆகிலும்
ஏல நினைப்பவர்க்கு இன்பம் செய்தானே" (திருமந்திரம் - 182)

காலங்காலமாக மண்ணில் வாழ்ந்து மடியும் மக்களின் வாழ்க்கையைக் கண்டு நல்லன, தீயன எவை என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும். அவ்வாறு உணராமல் வாழ்நாளை வீண்நாளாக கழிக்காதீர் அறநெறி வாழ்க்கை வாழ்வதற்கு முயற்சி செய்யுங்கள் என்பதை கீழ்வரும் பாடலில் சுட்டுகின்றார்.

"ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளும் குறுகிப்
பிழிந்தன போலத் தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம் அறியாரே" (திருமந்திரம் - 261)

எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் நடுவுநிலைமையோடு செயல்படுங்கள். அதுவே அறவாழ்க்கையாகும் அதுவே இம்மைக்கும் மறுமைக்கும் வழியாகும் என்கிறார்.

"நடுவு நின்றார்க் கன்றி ஞானமுமில்லை
நடுவு நின்றார்க் கன்றி நரகமுமில்லை
நடுவு நின்றார் நல்ல தேவருமாவர்
நடுவு நின்றார் வழி நானும் நின்றேனே" (திருமந்திரம் - 320)

மேற்கூறிய நற்பண்புகள் ஒரு மனிதனிடம் குடிகொள்ளவும் தீய குணங்கள் அவனை விட்டு நீங்கவும் அவன் முதலில் செய்ய வேண்டியது இறை நம்பிக்கை. இறைவன் நீதிமான் என்பதையும் தாம் செய்கிற செயல்களுக்கு ஏற்ப நிச்சயமாக தீர்ப்பு வழங்குவான் என்கிற இறை அச்சம் மிகவும் அவசிய மானது. அந்த இறை அச்சம் வருகிறபோது தவறுகள் செய்ய மனிதன் அஞ்சுவான் என்ற கருத்தை மையப்படுத்தி ஆகுதி உண்ணப் பற்றுகள் நீங்கும் என்கிறார்.

"தானே விடும் பற்று இரண்டும் தரித்திட
நானே விடப்படும் எது ஒன்றை நாடாது
பூ மேவு நான்முகன் புண்ணியப் போகனாய்
'ஓம்'மேவும் ஓராகுதி அவி உண்ணாவே" (திருமந்திரம் - 237)

இறைவனை எண்ண, அகப்பற்று, புறப்பற்று தாமே விட்டு நீங்கும். அகங்காரம் அழியும். பின்னர் எந்த ஒன்றையும் நாடாது தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனைப் போலப் புண்ணியத்தை விரும்பியவனாய் ஆகுதி செய்யப்படும். அவியை உண்ணவே பிரணவம் பொருந்தும் என்கிறார். இறுதியாக ஒன்றை நினைவுபடுத்துகின்றார். எந்த இறைவனை நினைப்பது, எந்த இறைவனிடத்தில் அச்சம் கொள்வது என்ற கேள்வி நமக்குள் எழும். அதற்கும் விடை கூறுகின்றார்.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகும் கதியில்லை நுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்துய்மினே" (திருமந்திரம் - 2104)

மனித குலம் ஒன்றே, இறைவன் ஒருவன்தான். நீங்கள் நல்லனவற்றை நினையுங்கள். உங்களை நாடி இயமன் வரமாட்டான். நீங்கள் வெட்கம் அடையாமல் போய்ப் புகும் கதி வேறில்லை. உங்கள் மனத்தில் இறைவன் எண்ணம் நின்று நிலைபெற நீங்கள் அவனை நினைந்து உய்யுங்கள் என்கிறார்.

அணுயுகத்தில் வாழ்கின்ற மக்கள் எத்தனையோ சாதனைகளை செய்து வருகின்றனர். அவற்றையே பெரிதாக நினைத்து இறைவனை மறந்துவிடுகின்றனர். அனைத்திற்கும் காரணம் அவன் என்பதை நினைப்ப தில்லை. இதற்கிடையில் சாதிமத பூசல்கள் நாளும் நடக்கின்றன. இதனடிப் படையில் அழிவுகள் பல நேரிடுகின்றன. மனிதர்கள் விலங்குகள் போல் செயல்படுகின்றனர். இவையாவும் குறைய வேண்டுமானால் ஒழிய வேண்டுமானால் திருமூலர் சொல்லும் ஒரு அறத்தை மட்டுமே பின் பற்றினால் போதும் அதுதான் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்கிற தாரக மந்திரம். அந்த இறை கொள்கையை பின்பற்றி இறை அச்சம் மனதில் கொள்கிறபோது நிச்சயமாக மனிதனிடம் தீயன ஒழிந்து நல்லன பெருகும் என்னும் கருத்தை இந்தக் கட்டுரை நிறைவாக முன் வைக்கிறது.

# 38. திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்

திருமதி கோ. சாந்தி, வேலூர்.

**திருமூலர்**

திருமூலர் இயற்பெயர் 'சுந்தரன்', 'நாதன்' என்று நந்தியம் பெருமானால் பெயர் சூட்டப்பெற்றார். திருமூலர் மரபில் வந்தவர் தாயுமானவர் என்பர்.

சித்தாந்தம் என்ற சொல்லை முதன்முதலில் கூறியவர் இவரே ஆவார். இவர் பாடிய மூவாயிரம் பாடலுள் சிறந்த பாடல்

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்"**

என்ற பாடலில் சிவத்தை அன்பின் மூலம் மட்டுமே பெறமுடியும் என்கிறார்.

**திருமந்திரம்**

திருமந்திரத்தில் பாயிரமும் ஒன்பது தந்திரங்களும் உள்ளன.

**முதல் தந்திரம்**

இது அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அறத்தின் அடிப்படை யானது. முப்பொருள் உண்மையை உணர்த்துவது. அதுதான் பதி, பசி, பாசம் என்பவை. யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உயிர் நிலையாமை என்னும் நான்கும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை ஆகியவற்றை விளக்குமுகத்தான் காமம், வெகுளி, மயக்கம் ஒழிக்கும் திறம் உரைக்கின்றது.

இவற்றில் உள்ள அறக்கருத்தின் தனித்தன்மையையும், சிறப்பையும் பற்றி இனி நோக்கலாம்.

**முன்னுரை**

அறம் என்பது சிறப்பையும், செல்வத்தையும் கொடுக்கும்.

**"சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு"**

என்றார் வள்ளுவர்.

அறம் என்பதைப் பின்பற்றுபவன் எப்பொழுதும் நல்ல செயல்களை மட்டுமே செய்வான். அறம் எவையெவை என்பதையும், அறக் கருத்துக் களின் சிறப்புகளையும் பற்றி இக்கட்டுரையின் வழி காண்போம்.

**மழைநீரே அமுதம்**

"வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான் அமிழ்தம் என்று உணரற் பாற்று"

மழை இடைவிடாது பெய்வதனால் உலகம் நிலை பெற்றிருக்கிறது. ஆகவே அம்மழையையே அமுதமென்று உணர வேண்டும் என்கிறார் வள்ளுவர். தேவர்களுக்கு மட்டும் கிடைக்கக்கூடிய அமுதத்தை மழைக்கு ஒப்பிட்டு கூறுகின்றார். மழை இல்லையென்றால் எந்த உயிரும் வாழ்வது அரிது.

**மழையினது சிறப்பு**

ஒரு நாடு இயற்கை வளமான மரங்கள் செழித்துள்ள நாடு என்றால் அங்கு நீர்வளம் சிறப்பாக அமைய வேண்டும்.

"அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்பிசை தோற்றும்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே"

அமுதத்தைப் போல வளமையைத் தருகின்ற மழைப் பெருக்கினால் சுவையுடைய பல மரங்கள் உலகத்தில் உண்டாகும் பாக்கு. இளநீர்க் காய்களையுடைய தென்னை, கரும்பு, வாழை அமுதூறும் சமாதி நிலைக்கான மூலிகை முதலியவை உண்டாகும்.

இயற்கையினால் ஒரு நாடு அத்தனைச் சிறப்புக்களையும் அடைய முடியும் என்பதால் தான் இந்நாட்டின் சிறப்பை

"என்ன வளம் இல்லை இந்த திருநாட்டில்
ஏன் கையை ஏந்த வேண்டும் அயல்நாட்டில்"

என்று பாடுகின்றார் கவிஞர்.

**அறத்தின் சிறப்பு**

அறச்செயல் நன்மையை மட்டுமே செய்யும்

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்"

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கு தீக்குணங் களை வெறுத்து அவற்றை நீக்கிச் செய்வதே அறமாகும்.

அறச்செயல்களைச் செய்து வாழ்ந்தவர்களே உலகத்தில் உயர்ந்த புகழினை அடைந்துள்ளனர்.

**"அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்**
**தழுக்கிய நாளில் தருமமும் செய்யீர்**
**விழித்திருந்து என் செய்வீர் வெம்மை பரந்து**
**விழிக்க அன்று என் செய்வீர் ஏழைநெஞ் சீரே"**

அறம் செய்யாத உள்ளத்தை உடையவர்கள் காமம், வெகுளி, மயக்கம் என்ற குற்றங்களை அகற்றி அறிவைப் பெருக்காதவர்களாக உள்ளனர். செல்வம் வந்த நாளில் அறமும் செய்யவில்லை உலகில் காலத்தைக் கழித்து என்ன செய்வீர். இந்த உடலானது எரிந்து அழியும் காலத்தில் அறம் செய்யாமல் நீங்கள் காத்திருந்தால் என்ன பயனை அடைய முடியும். அதனால் நன்றாக உலகத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கும் பொழுதே அறச்செயல்களை செய்து பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டும்.

நம் முன்னோர்கள் பயன் கருதாது அறச்செயல்களை செய்ததனால் தான் இன்றும் உலகம் நிலைத்திருக்கின்றது.

**அறத்தின் மேன்மை**

உலகில் உயர்ந்த இடத்தைப் பெறுவதற்கும், மக்களிடையே நல் மதிப்பினைப் பெறுவதற்கும் அறம் செய்ய வேண்டும். அப்படிப்பட்ட அறச்செயல்களைச் செய்தவர்கள் பெற்ற பயனை திருவள்ளுவர் கீழ்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

**"அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல"**

அறநெறியில் வாழ்வதால் வரும் பயனே இன்பம். மற்ற வழி களில் வரும் பயன், இன்பம் இல்லாததும், புகழற்றதும் ஆகும்.

**"இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்**
**தருமம் செய் யாதவர் தம்பாலது ஆகும்.**
**உரும், இடி, நாகம், ஊரோணி, கழலை**
**தருமம் செய் வார்பக்கல் தாழகி லாவே"**

அறம் செய்யாதவரை இருமலும், சோகையும், கோழையும் அறமும் தேடிவந்து அடையும். மின்னலும், இடியும், பாம்புக்கடியும், தொண்டை நோயும், வயிற்றுக்கட்டியும் அறம் செய்பவர் அருகில் வராது என்கிறார் திருமூலர்.

அறம் செய்தவர்கள் மட்டுமே மேன்மையை அடைய முடியும் என்பதை இக்கருத்து தெளிவாக்குகின்றது.

**பிற உயிரை வருத்தாதார் உயர்வு**

அறம் செய்வதில் பிற உயிரை துன்புறுத்தி கொல்லாமல் இருப்பது சிறந்த அறமாகும்.

**"அறவினை யாதெனில் கொல்லாமை"**

சிறப்பு பொருந்திய கொல்லாமைச் செயலை ஒருவன் செய்யாமல் இருந்தால் அவனை ஒவ்வொரு உயிரும் போற்றும்

**"கொல்லாமை மேற்கொண்டு ஒருகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிருண்ணும் கூற்று"**

பிற உயிர்களைக் கொல்லக்கூடாது என்னும் கொள்கை உடையவனிடம் உயிர்களைப் பற்றும் கூற்றுவனும் செல்லுமாட்டான்.

கொல்லாமை அறத்தை மேற்கொள்வதால் பல்வேறு நன்மைகளை அடைய முடியும்.

**சிவபூசைக்குச் சிறந்த மலர் கொல்லாமை**

"பற்றுஆய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமும் சித்தமும்
உற்றுஆரும் ஆவி அமர்ந்துஇடம் உச்சியே"

நம்மை இயக்குகின்ற மூல ஆதாரமான பூசைக்கும் பலவகை மலராக உள்ளது கொல்லாமையே ஆகும். கண்மலரின் ஒளியே நல்ல மாலை யாகும். அசைவு இல்லாத மனமே நல்ல தீபமாகும். இவை அனைத்தையும் கொண்டு பூசிக்கின்ற உயிர் விளங்கும் இடம் தலையின் உச்சியாகும்.

இத்தகைய சிறப்புக்களை ஒருவர் பெறுவதற்கு கொல்லாமை என்ற அறத்தை மேற்கொண்டால் போதும் என்கின்ற பொழுது அதனை அனைவரும் பின்பற்றி வாழ்ந்தால் நாடு நன்மை பெறும்.

**ஊன் உண்ணாதவர் சிறப்பு**

இறைவன் உயிர்களைக் காக்க மட்டுமே நம்மை படைத்திருக் கிறான் என்பதால் பிற உயிர்களை உண்ணும் செயலைச் செய்யக்கூடாது. ஊனை உண்ணாததால் பல சிறப்புகளைப் பெற முடியும்.

**"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர் செகுத் துண்ணாமை நன்று"**

தீயில் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வதைவிட, ஒன்றின் உயிரைப்போக்கி அதன் ஊனை உண்ணாதது நல்லது.

உண்ணுவதற்கு என்று காய் கனிகள் சுவையுடையதாக இருக்க இவற்றை ஏன் உண்ண வேண்டும்.

**பேரின்பம் அடைதல்**

"கொலையே களவுகள் காமம் பொய்கூறல்
மலையான பாதக மாம்அவை நீக்கித்
தலையாம் சிவனடி சார்ந்து இன்பம் சார்ந்தோர்க்கு
இலையாம் இவை ஞானானந்தத்து இருத்தலே"

கொலை, களவு, கள், காமம், பொய் பேசுதல் ஆகியவை ஐந்து பெரும் பாவங்கள். அவற்றை விலக்கித் தலையில் இறைவன் திருவடி சூடி இன்பம் அடைந்தவர்க்கு அப்பாவங்களும், அவற்றால் வரும் துன்பங் களும் இல்லாது ஒழியும். அவர்கள் பேரின்பத்தில் திளைத்திருப்பார்கள்.

அறம் செய்வதில் உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என எண்ணுபவர்கள் புலால் உண்ணுதலை மறந்து அறச்செயல் செய்கின்ற பொழுது முழுமையான பயனை அடைவதோடு வீடுபேறும் அடையலாம்.

**பிறர்மனை நயவாமை**

பிறர்மனையை விரும்பியதால் இழிவு அடைந்தவர்களில் ஒருவன் இராவணன், இறை பக்தியாக இருந்தாலும், வீரத்திலும், படை வலிமை யிலும், அறிவிலும் இராமனுக்கு ஈடாக அனைத்துத் திறமைகளைப் பெற்றிருந்தாலும் தன் தங்கை சொல்லைக்கேட்டு சீதையை தூக்கி வந்ததால் அத்தனை திறமைகளையும் வீணாக அழிந்ததோடு அவன் நாடும், வீடும், மக்களும் இழந்தான்.

**பிறர் மனைவியை நாடுவது அறியாமை**

"ஆத்த மனையாள் அகத்தே இருக்கவே
காத்த மனையாளைக் காமுறு காளையர்
காய்ச்ச பலாவின் கனிஉண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடர்உற்ற வாறே"

அன்புடைய மனைவி வீட்டிலே இருக்க, அவளை விட்டு பிறரால் காக்கப்படும் மனைவியை விரும்பும் காமியர் செயல் வீட்டில் நன்கு காய்த்துப் பழுத்துள்ள பலாப்பழத்தை உண்ணாமல், காட்டில் பழுத்துள்ள ஈச்சம்பழத்தைப் பெறத் துன்பப்படுவது போன்றதாகும்.

"நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறர்குஉரியாள் தோள்தோயா தார்"

அச்சம் தரும் கடல் சூழ்ந்த உலகில் நன்மைக்குரியவர் யாரென்றால் பிறர் மனைவியைத் தோள் தழுவாதவரே.

இவ்வுலகில் நல்ல செயல்கள் எத்தனையோ இருக்க அதனை விடுத்து சிற்றின்ப பயனைப் பெரிதாக நினைத்தலே தவறு. அதிலும் பிறர் மனைவியை விரும்புவது அதனைவிடக் கேடு என்பதால் பிறர்மனை விரும்பாததன் முக்கியத்துவத்தை மிக அழகாக எடுத்துக்காட்டுகின்றனர்.

## கொடுத்தலின் பெருமை

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"

எனப் போற்றுகின்றது மணிமேகலை. பிறர் பொருளைவிட பசிக்கு உணவிடுதலை என்பது மிகச்சிறந்த அறமாகும்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை"

அறநூல் கூறும் அறங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது உண்ணும் உணவைப் பசித்த உயிர்கள் எல்லாவற்றிற்கும் பகிர்ந்து கொடுத்து உண்ண வேண்டும் என்பதே ஆகும். மற்றவர்களுக்கு கொடுத்து உண்ணுதல் சிறந்த அறமாகும்.

"ஆர்க்கும் இடுமின் அவர்இவர் என்னன்மின்
பார்த்து இருந்து உண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை உடையீர் விரைந்து ஒல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்து உண்ணும் காலம் அறிமினே"

அவர் உயர்ந்தோர், இவர் தாழ்ந்தோர் என எண்ணாமல் வரும் விருந்தை எதிர்பார்த்து அவருடன் கூடி உண்ண வேண்டும். பழம்பொருளைப் போற்றி பாதுகாக்க வேண்டாம். இம்மை மறுமையில் விருப்பம் உடையவரே மிக விரைவாக உண்ண வேண்டாம். காக்கைகள் உண்ணும் போது மற்றக் காகங்களை அழைத்து உண்பதை அறிந்து கொண்டு பின்பற்ற வேண்டும்.

ஐந்தறிவு பறவைகளுக்கே தன் இனத்தை சார்ந்த காகங்களுக்கு உணவு கிடைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அழைத்து உண்ணும் பொழுது ஆறறிவு உடைய மனிதன் அதனினும் உயர்ந்து இருக்க வேண்டும் என்று கூறுகின்றார் திருமூலர்.

அறக்கருத்துக்களாக பிற உயிர்களை கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை, அறன் வலியுறுத்தல் என்ற தலைப்பு களில் கூறி அறங்களால் உலக மக்களுக்கு ஏற்படும் நன்மைகளையும், அதனைப் பின்பற்றாதவர் படும் துன்பங்களையும் எடுத்துக் கூறியுள்ளதால் அறமாகிய நன்மையை மட்டும் மக்கள் போற்றுகின்ற பொழுது சமுதாயம் மிக விரைவாக நல்ல முன்னேற்றம் அடைந்து வளமாக இருக்கும் என்ற உயர்ந்த எண்ணத்தில் அறக்கருத்துக்களை எடுத்துரைத்துள்ளனர் சான்றோர்கள். சான்றோர் சொல்லைப் பொன்னாக போற்றி பின்பற்றினால் எல்லா வளமும் பெற்று வாழலாம்.

# 39. திருமந்திரத்தில் இலக்கிய நயம்

புலவர் எஸ். சாரதா, சென்னை.

இலக்கியத்தில் பாடுபொருள் காலத்தின் சூழலுக்கு ஏற்ப மாறி மாறி வந்தாலும் அடிப்படை என்று சொல்லக்கூடிய காதலும் வீரமும் பாடு பொருள் என்ற கோட்பாடு எக்கால இலக்கியத்திலும் மாறுவதில்லை என்பது தெள்ளத்தெளிவு. அந்த அடிப்படையில் வாழ்வின் உச்சக் கட்டமாக, வாழ்வின் ஆணிவேராக என்றும் விளங்கிடும் திருமூலர் இயற்றிய திருமந்திரம் என்னும் நூலில் அமைந்துள்ள இலக்கிய நயங்களை சுட்டிச் செல்வதே கட்டுரையின் நோக்கமாகும்.

**நூல் அமைப்பு**

மொத்தம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டு விளங்கும் இந்நூல் சைவத் திருமுறையில் பத்தாம் திருமுறையாக விளங்குகிறது. இந்நூல் தோன்ற காரணம் யாதென ஆராயும் இடத்து திருமூலர் தன் திருவாயாலே

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே"

கூறும் தொடர் விளக்கா நிற்கும் தமிழ் செய்தல் என்பது ஆகமம் செய்தல் என்பதால் இந்நூல் தமிழாகமம் என்று விளங்குகிறது. திருமந்திரம் மூவாயிரம் என்றும் மீண்டும் மீண்டும் சில பாடல்கள் வருவதால் 3047 ஆகவும் விளங்குகிறது. ஒன்பது தந்திரங்கள் உள்ளன. முதல் நான்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கினையும் சுட்டி செல்கிறது. ஐந்து முதல் ஒன்பது முடிய உள்ள தந்திரங்கள் வீடுபேறு வீடுபேற்றுக்குரிய வழிபாட்டு முறை வாழ்வு வாழ்வின் நெறி போன்ற கருத்துக்களை உணர்த்தி செல்கின்றன.

முதல் தந்திரம் அறத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இரண்டு - பெரியாரைத் துணைக்கோடல் என்ற கோட்பாட்டைக் கொண்டு விளங்குகின்றது. மூன்று - அட்டாங்கயோகம் பற்றிக் குறிப்பிடப்படு கிறது. நான்கு - அசபை முதல் நவாக்கரி சக்கரம் முதலியவற்றைக் கூறுகிறது. ஐந்து - சுத்த சைவம் பற்றியக் கருத்தை விவரிக்கிறது. ஆறு - குரு தரிசன முறைமையை விளக்குகிறது. ஏழு - ஆறு ஆதாரம் பற்றிய செய்திகளை குறிப்பிடுகிறது. எட்டு - பஞ்சபேதம் என்னும்

தத்துவத்தை பற்றி விளக்குகிறது. ஒன்பது - குருமட தரிசனம் பற்றி விளக்குகிறது.

**திருமந்திர சாரம்**

உடலில் உள்ள குண்டலினி சத்தியை விழிப்படையச் செய்து மூலாதாரக் கனலைச் சுழுமுனை நாடி வழியாகக் கழுத்தில் உள்ள விசுத்தி என்ற ஆதாரம் வரை ஏற்றி அருட்சத்தியின் அருளால் அதைக் குளிரச் செய்து, தலையில் உள்ள பராசத்தியுடன் சேர்த்து அங்குப் பெருகும் அமுதத்தைப் பருகி இன்பமடைதல் பற்றி இவர் குறிப்பிடுவது இங்குக் குறிப்பிடதக்க ஒன்று. இது யோக சாதனை நெறியைச் சிவயோக நெறியாக வளர்த்துத் திருமூலர் கூறுகிறார் எனலாம். இதுவே திருமந்திரத்தின் சாரம்.

**இலக்கிய நயம் என்பதன் பொருள்**

இலக்கு + இயம் + நயம் குறிக்கோளை நோக்கி செல்கையில் எடுத்துக் கூறும்போது தோன்றும் சிறப்புகள் நயம் என்று சொல்லப்படும். நயம் என்பது அழகு. சொல்லும் முறையில் அழகு. அது பல்வேறு கோணங் களில் செயல்படுகிறது. ஈண்டு கட்டுரையில் வடிவு கருதி அணி நயத்தில் உவமை சிலேடை அணிகளும் தொடை நயத்தில் மோனை, எதுகை, இயைபு, முரண், அந்தாதி என்ற தொடைகளும் மேற்கொள்ளப் படுகின்றன.

**மோனைத் தொடை**

மலர்களைக் கொண்டு மாலை தொடுப்பது போல சொற்களைக் கொண்டு செய்யுளில் நயம் கருதி தொடர் அமைப்பது தொடை என்று சொல்லப்படும். மோனைத் தொடை என்பது செய்யுளில் அடிதோறும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பதாகும்.

பருஊசி ஐந்தும்ஓர் பையினில் வாழும்
பருஊசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருஊசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருஊசி ஐந்தும் பனித்தலைப் பட்டால்
பருஊசிப் பையும் பறக்கின்ற வாறே

(முதல் தொகுதி ப.எண். 113 பாடல் எண் 183)

இப்பாடலில் அடிதோறும் ப என்ற எழுத்து ஒன்றிவரத் தொடுத் துள்ளமையும் மோனைத் தொடை என்றாயிற்று. பருத்த ஊசி என்ற நிலையிலும் ஐம்பொறி என்ற நிலைகளிலும் பொருள் தந்து நிற்கின்றன.

**எதுகை தொடை**

எதுகை தொடை என்பது செய்யுளில் அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பதாகும்.

பெருமை, சிறுமை அறிந்துஎம் பிரான் போல்
அருமை, எளிமை அறிந்து, அறிவார் ஆர்?
ஒருமையுள் ஆமைபோல், உள் ஐந்து அடக்கி
இருமையும் கேட்டு இருந்தார் புரை அற்றே

(முதல் தொகுதி ப.எண். 85 பாடல் எண் 133)

**இயைபு தொடை**

இயைபு தொடை என்பது செய்யுளில் அடிதோறும் ஈற்று எழுத்து ஒன்றிவரத் தொடுப்பதாகும்.

தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே

(முதல் தொகுதி ப.எண். 83 பாடல் எண் 30)

இச்செய்யுளில் அடிதோறும் ஈற்று எழுத்து ஏகாரத்தில் முடிந்து இயைபு தொடைக்கு சான்றாக நிற்கிறது.

**முரண் தொடை**

முரண் தொடை என்பது அடிதோறும் சொற்கள் அல்லது ஒரே அடியில் இணை சொற்கள் கருத்திற்கு முரணாக வந்து மாறுபட்ட பொருளை தருமாயின் முரண் தொடை எனப்படும்.

மதியமும் ஞாயிறும் வந்து உடன் கூடித்
துதி செய்பவர் அவர் தொல் வானவர்கள்
விதிஅது செய்கின்ற மெய்யடி யார்க்குப்
பதி அது காட்டும் பரமன் நின்றானே

(முதல் தொகுதி ப.எண். 428 பாடல் எண் 710)

இப்பாடலில் முதல் அடியில் உள்ள மதியமும் ஞாயிறும் என்ற இரண்டு சொற்களும் மதி - சந்திரன் - குளிர்ச்சி, ஞாயிறு - கதிரவன் - வெம்மை இவ்வாறு மாறுபட்ட கருத்தினை தரக்கூடிய சொற்களை வைத்துப் பாடுவது முரண் தொடை எனப்படும்.

**அந்தாதி தொடை**

அந்தாதி என்பது ஒரு செய்யுளின் இறுதி அடியோ சீரோ அசையோ அடுத்த செய்யுளின் முதலாவதாக வருவது அந்தாதி எனப்படும் அந்தம் - முடிவு ஆதி - தொடக்கம்.

திருவம்பலம் ஆகச் சீர்ச் சக் கரத்தைத்
திரு அம் பலம் ஆக ஈராறு கீறித்

திரு வம்பு அலமாக இருபத்தைஞ்சு ஆக்கித்
திருவம்பலம் ஆகச் செபிக்கின்ற வாறே

(இரண்டாம் தொகுதி ப.எண். 544 பாடல் எண் 904)

வாறே சிவாயநம, நமச்சிவாய நம
வாறே செபிக்கில், வரும்பேர் பிறப்புஇல்லை
வாறே அருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வரும்செம்பு பொன்னே

(இரண்டாம் தொகுதி ப.எண.545 பாடல் எண் 905)

இப்பாடல் (904) வாறே என்று ஈற்று சொல் முடிந்து அச்சொல்லே (905) அடுத்தப் பாடலுக்கு முதல் அடியாக தொடர்ந்து வந்துள்ளது. இவ்வாறு தொடர்ந்து வரும் தொடையை அந்தாதி தொடை என்பர்.

### அணி நயம் - உவமை அணி

தெரிந்த ஒன்றைக் கொண்டு தெரியாத ஒன்றை விளக்குவது உவமை அணி எனப்படும். தெரிந்த பொருள் உவமானம் தெரியாத பொருள் உவமேயம். இதில் இடையில் உவமஉருபு ஒப்புமை பொருளில் வந்து நிற்கும்.

புறை அற்ற பாலினுள் நெய் கலந்தாற்போல்
திரை அற்ற சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற்று உணர்வோர் உடம்பு இங்கு ஒழிந்தால்
கரை அற்ற சோதி கலந்தசத்து ஆமே

(முதல் தொகுதி ப.எண் 85 பாடல் எண் 134)

காய்ச்சி புரை இடப்படாத பாலில் நெய் எங்கும் நிறைந்திருக்கும். அது போன்று எண்ண அலைகள் இல்லாத மனத்தில் நீக்கம் இல்லாமல் நிறைந் திருக்கும் நல்ல ஆசிரியன் உரைக்கும் உபதேசத்தை ஆன்ம அறிவு கெட்டு உணர்பவர், தூல உடம்மை, இவ்வுலகத்தில் எல்லையற்ற அகண்ட சோதியுடன் கலந்து பொருந்தி அவர்கள் சிவம் ஆவர். நூலின் நீக்கம் இல்லாமல் நெய் நிறைந்திருத்தல் போல் ஆசிரியன் மாணவன் மனத்தில் நீக்கம் இல்லாமல் நிறைந்திருப்பான்.

திருமூலர் திருமந்திரம் முழுவதும் மனிதனின் வாழ்க்கைக்குத் தேவையான நன்நெறிகள் அனைத்தையும் உணர்த்துவதாய் அமைந்து நிற்கின்றன. நூல் முழுவதும் கற்பதற்கு எளிய நடையையும் புரிந்து கொள்வதற்கு ஆழமான கருத்துக்களையும் கொண்டு விளங்குகிறது. இல்லறம், துறவறம் இருவேறு நிலைக்கும் ஏற்புடையதாய் அமைந்து பிறவிப் பிணி நீக்கும் அருமருந்தாய் திகழ்கிறது. செய்யுளுக்குரிய நயங்கள் உத்திகள் அனைத்தும் ஆங்காங்கே விரவி வருகின்றன. மானுடம் நலமுடன் வாழ திருமந்திர சாரம் அவசியம்.

சிவாய நமக

# 40. திருமந்திரத்தில் வாழ்வியற் சிந்தனை

முனைவர் பா. சிங்காரவேலன், தேனி.

மதம் என்பது மனிதனுக்கு இறைச்சிந்தனையை ஊட்டுவதோடு, நல்வாழ்விற்கும் வழிகாட்டுகிறது. உண்மையை உணர்த்தி அவனை மேலோனாக்குகிறது. பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட வாழ்க்கையைப் பயனுள்ளதாக மாற்றிட உன்னதமான மனிதப் பிறவியின் மகத் துவத்தைத் திருமூலர் திருமந்திரத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலும் ஒவ்வொரு மனிதர்களும் தமக்குள் இறையாற்றல் இருப்பதை உணர வேண்டும். உணராதவர்களும் உணர்ந்து கொள்ளுவதற்குரிய வாய்ப்பை திருமந்திரம் வழங்குகிறது. திருமூலர் தம் பிறப்பைக் கூட தமிழ் ஆகமம் செய்வதற்கு என்று இறைவன் படைத்துள்ளார் என்கிறார். இதனை,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (81)

என்கிறார். மனிதப் பிறவி துன்பம் தருவது. மீண்டும் மீண்டும் ஏன் பிறக்கின்றார்கள் எனில் முற்பிறவியில் முறையாகத் தவம் செய்யாத வர்கள் என்று குறிப்பிடுகிறார். மேலும்

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" (85)

என்று இறையருள் கருணையால் உணர்ந்தறிந்த பேரின்ப ஞானப் பேற்றை, இவ்வுலக மக்கள் அறியும்படி தருவதற்குத் தன்னைப் படைத் துள்ளதாகத் திருமூலர் கூறுகின்றார்.

மூலன் என்ற உடலிலிருந்து திருமூலர் மூவாயிரம் தமிழ்ப்பாடல்களை தந்திரங்களாகச் செய்தார் என்பதைப் பாடலின் வழி அறிய முடிகிறது.

"மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்து அறிந்து ஓதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே" (99)

**ஒருவனே தெய்வம்**

பிறவா யாக்கைப் பெரியவன் சிவன். இவனைத் 'தாயுமிலி, தந்தையுமிலி தான் தனியன்' என்றும், 'போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன்' என்றும் அடியவர்கள் வணங்குவர். பெருஞ்சோதிப் பிழம்பான இறைவனை

"பிறப்பிலி பிஞ்ஞகன் பேரருளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்" (25)

என்றும்,

"பிறப்பிலி நாதனைப்பேர் நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்று கை கூப்பி" (86)

என்று விண்ணுலகத்தேவரும் சென்று ஞாலத் தலைவன் நந்தியை வணங்குவர் என்கிறார் திருமூலர். இப்படி பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்குத் துணையாக நிற்பவன் சிவன். இவனோடு ஒப்புமை சொல்லு வதற்கு வேறு கடவுள் எங்கும் இல்லை என்று பெருமிதத்தோடு திருமூலர்.

"சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை" (5)

என்று கூறுகின்றார். மேலும் மண்ணுலகில் பிறந்த மானிடர்கள் எல்லை யிலாப் பரம்பொருளை "அவன் அருளால் அவன் தாள் வணங்கி" நிற்கின்றனர். ஆதியும் அந்தமுமில்லா அருட்பெருஞ்சோதியாக விளங்கு வதால் அவனே அகிலத்திற்குத் தலைவன். அவனையன்றி தொழுவதற்குரிய சக்தி வேறில்லை என்கிறார். இதனை,

"என்னால் தொழப்படும் எம் இறை மற்றவன்
தன்னால் தொழப்படுவார் இல்லை தானே" (9)

என்கிறார். இறைவன் விரிந்தகன்ற மண்ணாகவும், பரந்த வானமாகவும், அக்கினியாகவும், சந்திரனாகவும், மழையாகவும் இருந்து மக்களின் வாட்டத்தைப் போக்கும் தாயாக இருந்து அடியவர்களுக்கு இன்ப மளிக்கின்றான். "தானே இருநிலம் தாங்கி விண்ணால் நிற்கும், தானே சுடும் அங்கி ஞாயிறும் திங்களும்" (10) என்று பார் முழுவதும் கடந்து கலந்து நிற்பவன். அவனைத் தன்னுள் தனக்குறவாக்கிக் கொள்வதைப் போன்று உற்றதுணை வேறில்லை என்பதைத் திருமூலர் பாடலில் காணமுடிகிறது.

"தேசம் கலந்தொரு தேவன் என்று எண்ணினும்
ஈசன் உறவுக்கு எதிர் இல்லை தானே!" (17)

**தாயிற் சிறந்த தயாளன்**

"அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமும் சுற்றமும் ஒரூரும் நீ"

என தாண்டகவேந்தன் நாவுக்கரசர் இறைவனை உறவுநிலையில் பார்க்கின்றார். இதையே மாணிக்கவாசகர் "அம்மையே அப்பா ஒப்பில்லா மணியே" என்று தாயாகத் தந்தையாகப் பாவிக்கின்றார். படைப்புக் கடவுளை உறவாகக் காண்பதே பக்தி இயக்கச் சிந்தனையாகும். திருமூலர்

"தன்னை அப்பா எனில் அப்பனுமாய் உளன்" (7)

என்றும், தந்தையைப் போல் இருப்பினும், குழந்தையைவிடக் குதூகலம் தருபவன். தாயினைப் போன்ற தயவுடையவன் என்கிறார். இதை

"சேயினும் நல்லன் அணியன் நல் அன்பர்க்கு
தாயினும் நல்லபின் தரழ்சடையோனே" (8)

என்று குறிப்பிடுகிறார்.

**வருந்தி அழைத்தால் வருவான்**

'வினையேன் அழுதால் உனைப் பெறலாமே' என்கிறார் மாணிக்க வாசகர். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினால் இறையருளைப் பெறலாம் என்கிறார் ஞானசம்பந்தர். நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் என்கிறார் நாவுக்கரசர். இப்படி அடியவர்கள் வேண்ட அருள்பாலிப்பவன் என்பதைத் திருமூலர் பின்வருமாறு கூறுகின்றார்.

"வான் நின்று அழைக்கும் மழைபோல் இறைவனும்
தான் நின்று அழைக்கும் கொல் என்று தயங்குவார்
ஆன் நின்று அழைக்கும் அதுபோல் என் நந்தியை
நான் நின்று அழைப்பது ஞானம் கருதியே" (30)

வறண்ட நிலத்துக்கு வான்மழை அவசியம். மழைபொழிவு மேகம் இருக்க வேண்டும். இறையருளும் அப்படித்தான். இறைவன் வலிய வந்து அருள்புரிவான் என்று நம்பி இருப்பவர் இறையருளைப் பெற முடியாது. ஆனால் பசிக்குப்பால் வேண்டிக் கன்று அழைப்பது போலப் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் ஆண்டவன் அருளை நாடினால், இறைவன் வலிய வந்து உதவுவான் என்கிறார்.

**'ரிசாய்ப் பெருக பரம்பொருளை**

"அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரிசு ஆயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே" (36)

என்று உயிர்க்குலத்துத் தலைவன் இறைவன். உண்ண உண்ண தெவிட்டாத அமுதம் போன்றவன். தனக்கு ஒப்பார் இல்லாத வள்ளல். ஊழிக்காலத்தும் நிலைத்து நிற்பவன். யாழ், முழவு என்னும் இசைக் கருவிகள் கொண்டு இசை கூட்டிப்பாடும் இன்னிசையும், ஆடல் மகளிர் நாடெங்கும் சென்று நடத்தும் நாட்டியமும் இடைவிடாது நடந்தபடி யிருக்கும் இப்பூமியில் ஆடல், பாடல் வழி ஆண்டவன் அருளைப் பெறலாம் எனக் கருதாது, வேள்வி, பலி, சண்டை எனச் செல்வர். அப்படிச் செல்பவர்கள் துன்பத்தையே அனுபவிப்பீர். இதை

"பாட்டும் ஒலியும் பரக்கும் கணிகையர்
ஆட்டும் ஆறாத அவனியின்" (56)

என்கிறார்.

**அறியொனாப் பொருளானவன்**

"ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்
பேர் அறியாத பெருஞ்சுடர் ஒன்று அதின்
வேர் அறியாமை விளம்புகின்றேனே" (95)

இறைவன் பெருமையை யாரால் விளக்கிக் கூறமுடியும். அவன் பேர் அறியாப் பெருஞ்சுடர், ஒரு நாமம் ஒரு உருவம் ஒன்றும் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி என்று மாணிக்கவாசகர் இறைவனைப் புகழ்கின்றார். அத்தகைய இறைவனை அடைய மன அழுக்கைத் துடைத்தெறிந்தால், பேரொளிப் பழம்பான அருட்பார்வையால் மாசற்ற பளிங்கு போல் உள்ளம் தோன்றும் என்பதை 'களிம்பு அறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி' என்கிறார். ஆணவம், கன்மம், மாயை என்ற தடைகளை அகற்றி, நல்நெறியில் நடந்தால் அடியவர்கள் பேரின்ப வீட்டினை அடையலாம். அப்பேரின்ப வீடு நிலையானது. மகிழ்ச்சியானது.

மனிதன் நிலையற்றவன். ஜனனத்திற்கும் மரணத்திற்கும் இடையே உள்ள வாழ்வைப் பயனுள்ளதாக மாற்றிக் கொள்ள வேண்டும். இன்று மரணபயமும், மன அழுத்தமும், நோயும் இறைபக்திக்கு ஆதாரமாக இருக்கிறது. அன்றே திருமூலர் மக்களிடம் நிலையாமையை உணர்த்தினால், எஞ்சிய வாழ்வைத் தெளிந்து நல்வழியில் நடப்பர் என்பதை உணர்ந்து, தம் முதல் தந்திரத்தில், வாழ்விற்குத் தேவையான சிந்தனைகளை முன்வைத்துள்ளார்.

**நிலையாமை**

"மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம் போல்" (173)

மனமகிழ்ச்சி தரும் செல்வம், வீடு, வயல் என்ற பிற வளங்களும், ஆற்று வெள்ளத்தில் மிதக்கின்ற படகைப்போல் ஒரு நாள் கவிழ்ந்து விடும். ஆனால் வீடுபேற்றிற்கு ஆதார சக்தியான அருட்செல்வத்தைப் பெருக்கி, இறையருளைப் பெறவேண்டும் என்கிறார் திருமூலர். மேலும்

"உடம்பொடு உயிர்இடை விட்டோடும் போது
அரும்பரிசு ஒன்றில்லை அண்ணலை எண்ணும்" (176)

உடம்பெனும் கூட்டில் வந்த உயிர், நடுவில் ஒருநாள் உடலை விட்டு ஓடிவிடும். உயிர் பிரியும் காலத்தில் இறைவனை வேண்டினால், எமதூதர்கள் துன்பத்தைத் தரமாட்டார்கள். எனவே மனிதர்கள் அருட்

செல்வத்தையே சேமிக்க வேண்டும் என்கிறார் திருமூலர். மற்றோரிடத்தில் கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே மறைவதைப்போல், அழகும் இளமையும் ஒரு நாள் அழிந்து போகும். இளங்கன்று சில நாளில் வளர்ந்து எருதாகிப் பின் இறப்பதைக் கண்டும், அறிவு தெளிவு பெறவில்லையே என்று திருமூலர் வருந்துகின்றார். இதனை,

"பாலன் இளையன் விருத்தன் என நின்ற
காலம் கழிவன கண்டும் அறிகிலார்" (181)

என்கிறார். ஆணும், பெண்ணும் விரும்பி அணியும் ஆடை பட்டாடை. சிக்கு இல்லாமல் நெய்த பட்டாடை ஒரு நாள் கிழிந்து போகும். கருப்பு முடியும் நரைத்துப் போகும். இந்த உலகில் நிலைமையை உணர்ந்தவர் இல்லை என்கிறார். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான குண்டலகேசி

"பாளையாம் தன்மை செத்தும் பாலனாம் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்"

என்று குழந்தை, பாலன், சிறுவன், காளை, முதுமை என்று எந்தப் பருவத்திலும் மனிதன் இறக்கலாம் என்கிறது சீவகசிந்தாமணி முக்தி இலம்பகம் கரு உருவானதிலிருந்து அழிவு நிச்சயிக்கப்பட்டது என்று பட்டியலிடுகிறது. இப்படி தமிழில் வாழ்க்கை நிலையில்லாதது என்பதை பக்தியிலக்கியம் உள்ளிட்ட பல நூல்கள் கூறுகின்றன. அப்படியெனில் வாழும் காலத்தில் எப்படி வாழ வேண்டும் என்பதையும் திருமந்திரம் குறிப்பிடுகிறது.

**கொல்லாமை**

கொலை, வெட்டு, குத்து என்று வெறி கொண்டு திரிபவர்களை, எமனின் தூதர்கள் வலிமையான கயிறு கொண்டு கட்டிக் கொண்டு போவான். நரகத்தீயில் விழுவர். சமண, பௌத்த மதங்கள் கொல்லாமை, புலால் உண்ணாமை, கள் அருந்தாமை என்ற கட்டுப்பாடுகளை விளக்கிச் செல்கின்றன. ஆனால் பெருந்தெய்வ, சிறுதெய்வ வழிபாடுகளில் உயிர்ப் பலி இருந்ததை இலக்கியத்தில் காணமுடிகிறது. ஆனால் திருமூலர் உயிர்க்கொலை கூடாது என்பதை வற்புறுத்துகிறார்.

"கொலையே களவுகள் காமம் பொய்கூறல்
மலைவான பாதகமாம் அவை நீக்கித்
தலையாம் சிவனடி சார்ந்து இன்பம் சார்ந்தோர்க்கு
இலையாம் இவை ஞானானந்தத்து இருத்தலே" (200)

கொலை, திருட்டு, பெண் இச்சை, பொய்பேசுதல், கள் உண்ணாமை ஆகிய ஐந்து பாவங்களையும் விட்டவர்கள் இறைவனின் அடியை அடைவர் என்கிறார் திருமூலர்.

**பிறன்மனை நயவாமை**

"மனைவியை நேசி, எய்ட்ஸ் வருமா யோசி" என்று விளம்பரப் பலகைகள் எழுதும் அளவிற்கு இன்று மக்களின் பண்பாடு மாறிவிட்டது. பெண்ணைப் போகப்பொருளாகக் கருதும் நிகழ்வை இந்திரன், இராவணன் உள்ளிட்ட பராணமாந்தர்களின் வழி அறியலாம். மாற்றானின் மனைவியை இச்சிப்பது பாம்பின் தலையை நக்குவதற்குச் சமம் என்கிறது நாலடியார்

"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனி உண்ண மாட்டார்கள்
ஈச்சம் பழத்துக்கு இடர் உற்ற வாரே" (201)

என்கிறார் திருமூலர். அன்புடைய இல்லத்தரசி வீட்டில் இருக்க பிறன் மனைவியை அடைய விரும்பும் இளைஞர் தம் வீட்டில் பலாப்பழத்தைத் தின்ன முடியாமல், எங்கோ பழுத்திருக்கும் ஈச்சம் பழத்துக்கு ஆசைப்படுவது போன்றதாகும் என்கிறார். மேலும் எட்டி மரத்தின் காய் பழுத்துக் கனி யானாலும் அதைத் தின்றால் உயிர் போய்விடும். அதைப்போல் தான் மாம்பழகையும், முல்லைப்பல் சிரிப்பழகையும் காட்டி நிற்கும் பெண்களிடத்து செல்லும் மனதை மறக்கச் செய்யுங்கள், மாற்றான் மனைவியை விரும்புவது காட்டாற்று வெள்ளத்தில் சிக்கிக் கொண்டு தவிப்பதைப் போன்றதாகும். இதை

"மனை புகுவோர்கள் மனைவியை நாடில்
சுனை புகுநீர்போல் சுழித்துடன் வாங்கும்" (205)

என்கிறார். ஆடவரைப் பொருட்பெண்டிர் செல்வர்கள் என்றால் விண்ணுலகத் தேவர் என்றழைப்பர். பொருளற்றவர் என்றால் போ வெளியே என்று விரட்டியடிப்பர். இவர்கள் உதட்டில் இனிப்பும், உள்ளத்தில் கசப்பும் கொண்டவர்கள். எனவே ஆண்மகன் தம் உயிர்ச்சக்தியை அடக்கி, புலன்களை அடக்கி ஆள வேண்டும். இல்லையெனில் இறப்பர் என்பதை

"தாழத் துடக்கித் தடுக்ககில்லா விடில்
பூழை நழைந்தவர் போகின்ற வாறே" (208)

பாவக்குழியில் விழுவர் என்கிறார். மக்கள் வாழ்வு மேம்பட புலன் அடக்கி ஆள வேண்டும் என்கிறார் திருமூலர். பொருளில்லார்க்கு இவ் வுலகம் இல்லை என்பார் வள்ளுவர். பொருளற்றவனை இந்த் உலகம் சபிக்கும். புறந்தள்ளும் கூடிய உறவினர்கள் ஒதுங்கி நிற்பர். இவர்களுக்குத் திருவிழாக்கள் இல்லை. நடைப்பிணமாக வாழ்வர். ஆனால் இறைவனின் அருட்செல்வத்தைப் பெற்றால் வாழ்வை நாம் புறந்தள்ளி விடுவோம். உன்னதமான அருளை நாம் தேட வேண்டும் என்கிறார் திருமூலர்.

**அறம் செய்வார் அடையும் பயன்**

'அறத்தான் வருவதே இன்பம்' என்பார் வள்ளுவர். தம்மை உணர்ந்தறிந்த ஞானிகள் பரம்பொருளின் திருவடிகளை வணங்கி

மனம், வாக்கு, காயத்தால் எவர்க்கும் தீங்கு செய்யாத அன்புள்ளம் கொண்டவராய் இருப்பர். இவர்களே சிவத்தின் உண்மைப் பொருளை உணர்ந்தவர்களாக இருப்பர். இதனை "தாமறிவார் அண்ணல் தாள் பணிவார்" (251) என்கிறார் திருமூலர். மேலும் அறம் செய்வதற்குப் பொருள் தேவையில்லை. மனம் இருந்தால் போதும் என்கிறார். பாலும் தெளிதேனும் கேட்கவில்லை. வழிபாட்டிற்கு பச்சிலை, பசுவிற்கு கைப்பிடி புல், வருபவர்களுக்கு கைப்பிடி உணவு, எல்லோரிடத்தும் அன்பு செலுத்துங்கள் போதும் என்று உரைக்கின்றார். இதனைத் திருமந்திரம்

"யாவர்க்கு மாம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்கு மாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம் பிறர்க்கு இன்னுரை தானே!" (252)

என்கிறது. இத்தகைய எளிய நல்லறங்களைச் செய்யத் தெரியாதவர்கள், சிவனின் திருவடி நினைத்துப் போற்றும் பக்தியை அறியமாட்டார்கள். மற்றவர் பொய்யுரை கேட்டு பாவக்குழியில் வீழ்வர் என்பதைப் பாடலின் வழி அறியலாம்.

"அறம் அறியார் அண்ணல் பாதம் நினையும்
திறம் அறியார்" (262)

**அன்புடைமை**

'அன்பிற்குண்டோ அடைக்கும் தாள்' என்றும் அன்பின் வழியது உயிர்நிலை என்றும் கூறுவார் வள்ளுவர். அன்பின் வடிவில் இறைவனைக் காணலாம். கல்வி அறிவு அற்றவர்களே அன்பு வேறு, சிவம் வேறு என்று பிரிப்பர். அன்பும் சிவமும் ஒன்றென உணர்ந்தால் ஆனந்தத்தில் திளைப்பர் என்கிறார் திருமூலர்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்த பின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" (270)

**கல்வி**

ஆணவம் அழிந்து, கர்மவினைகள் நீங்கி, மாயை மறைந்தால் மனம் ஒளி பெறும். அந்த மனமே இறைவனைச் சென்றடையும். மனித உடலாய் அவதரித்த என்னுள், தடையின்றி இறைவன் என்னுள் குடி புகுந்தான். பிறருக்குச் சொல்ல முடியாத பேரின்ப வீட்டை அடைந்தேன். அதுவே உண்மையான கல்வி என்கிறார் திருமூலர்.

"குறிப்பறிந்தேன் உடல் உயிரது கூடிச்
செறிப்பறிந்தேன் மிகு தேவர் பிரானை" (290)

மேலும் பெருமைக்குரிய பரம்பொருள் சிவனே என்று பேசிக் கொண்டிருக்கும் ஆன்மாக்களாகிய மனிதர்கள், தம் பக்தித் திறத்தால் தெய்வ நிலை பெற்றுத் தேவரும் ஆவர் என்கிறார் திருமூலர். ஆன்மாக்கள் எல்லாவற்றிற்கும் தலைவன் இறைவன் என்றாலும், கற்றறியா மூடர்கள் மனத்துள் இறைவனைக் காண மாட்டார்கள் என்பதைப் பாடலில் காணமுடிகிறது.

"எல்லா உயிர்க்கும் இறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காண ஒண்ணாதே" (312)

**நடுநிலை**

அறவழியில் நடப்பவர்கள் நடுநிலையோடு நடக்கக் கூடியவர்கள். இறைவனைப் போற்றிப் புகழ்ந்து உயிர்களிடத்து நேசம் கொள்பவர்கள் தேவர்களுக்கு நிகரானவர்கள் என்கிறார் திருமூலர்.

"நடுவு நின்றார்க்கு நரகம் இல்லை
நடுவு நின்றார் நல்லதேவரும் ஆவர்" (320)

மேலும் பெண் இச்சையும், கள் உண்ணுவதும் கீழ் மக்களாகிய தீயவர் களுக்கு உரியது. தான் என்ற ஆணவமும் மயங்கிப் புத்தி கெட்டுப் போகும். ஓம் என்னும் பிரணவப் பொருளான ஆனந்தத் தேனமுதை உண்டு களித்து மகிழுங்கள் என்கிறார் திருமூலர்.

இதனை,

"காமமும் கள்ளும் கலதிகட்கே ஆகும்
மாமலமும் சமயத்தில் மயல் உறும்" (326)

என்கிறார்.

சித்தத்துக்குள்ளே சிவனைக் காணச் செய்தவர். மானுடப் பிறவியின் மகத்துவம் பாடிய மாமனிதர். இகலோக இன்பங்களை விடுத்தால், பரலோக வாழ்க்கையைப் பெறலாம் என்று வழிகாட்டியவர். பாவச் சுமை மானிடப்பிறவி என்று பாடிய பக்தர் கூட்டத்தை விட்டு விலகி "உள்ளமே பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்" என்று பாடியவர். உள்ளத்துள்ளே இறைவனைக் காணாது வேறு எங்கோ தேடி அலையும் வீணர்களை மூடர்கள் என்கிறார். ஒன்பது தந்திரங்களில் கூறப்பட்ட செய்திகளே இன்று பலர் வழிகாட்டும் யோகக்கலையாக உள்ளது. திருமூலரின் ஞானமார்க்கத்தைப் பின்பற்றினால் மனிதனுக்குள் இருக்கும் ஆற்றல் பெருகும். ஆற்றல் பெருகினால் ஆயுளைக் கூட்டலாம். ஆனந்த வீட்டை அடையலாம். மனித நேயத்தோடு வாழலாம் என்று அறவழியில் வாழ்க்கை நடத்த வழிகாட்டுகிறார் திருமூலர்.

# 41. திருமந்திரத்தில் மிகைப்பாடல்கள்

முனைவர் சிவப்பிரியா, புதுதில்லி.

உலகில் எதை எதையோ அதிசயம் என்றும் அற்புதம் என்றும் அறிவிக்கின்றனர். உண்மையிலேயே உலக அதிசயங்கள் உண்டு என்றால் அவையெல்லாம் பாரதத் திருநாட்டில் குறிப்பாகத் தமிழ்நாட்டில்தான் உள்ளன.

போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாது எனத்
தாதையார் முனிவுறத் தான் எனை ஆண்டவன்

(சம்பந்தர் 3 : கழுமலம் 5:1)

என கிண்ணத்தில் உணவு உண்ணும் மழலைப் பருவத்திலேயே தோடுடைய செவியானது திருக்காட்சி கண்டு தங்கக் கிண்ணத்தில் பால் சாதம் ஊட்டப் பட்டு மூன்று காலமும் அனைத்து ஞானமும் உணர்ந்து. தமிழ் மொழியையும் தமிழர்ப் பண்பாட்டுக் கலாச்சாரத்தையும் பாதுகாத்து வளர்த்த அற்புதக் குழந்தை திருஞானசம்பந்தர் ஒரு ஈடு இணையில்லாத அதிசயம்.

பேயாய நற்கணத்தில் ஒன்றாய நாம் (அற்புதத் திரு அந்தாதி 86)

காரைக்கால் பேய் சொல் (அற்புதத் திரு அந்தாதி 101)

என இளம் வயதில் அழகு வடிவத்தை விடுத்துப் பேயுருவம் கொண்டு அருந்தமிழ்ப் பாடல்களைப் பாடியருளி, கயிலைமலை சென்று மீண்டு வந்த் காரைக்கால் அம்மையார் மற்றொரு அதிசயம்.

கண்ணார வந்து நின்றான் (திருவாசகம் 11:19)

பிரியேன் என்று என்று அருளிய அருளும் (திருவாசகம் 44:2)

என்று இறைவனைக் கண்ணாரக் கண்டு களித்து வாழ்நாள் முழுவதும் பரமனுடன் வாழ்ந்த மாணிக்கவாசகர் மற்றொரு அதிசயம். இவ்விதம் உலகில் எங்கும் இல்லாத தமிழ்நாட்டு அதிசயங்களிலே ஒன்று மண்ணிலே பிறக்காமல் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்து வடகயிலை மலையிலிருந்து தெற்கு நோக்கி வந்து செந்தமிழ் வேத ஆகமங்களைப் பாடிய திருமூல முனிவரின் திருத்தொண்டு உலகிலேயே மிகக் குறைந்த வயது உள்ள இசைஞானப் புலவர் திருஞானசம்பந்தர். மிகவும் அதிகமான வயதுள்ள தெய்வப் புலவர் திருமூலர். அகத்தியர், பதஞ்சலி, வியாக்கிர பாதர், ஆரிய அரசன் யாழ் பிரம்மதத்தன் போன்று வடநாட்டிலிருந்து

வந்து தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் தமிழர்த் திருநெறிக்கும் தொண்டு புரிந்த பலப்பல ஆரியர்களில் திருமூலரும் ஒருவர். திருமூல முனிவர் மிக உயர்ந்த விஷயங்களை மூன்று நூல்களில் எளிய நடையில் அருளிச் செய்துள்ளார். மூவாயிரம் பாடல்களைக் கொண்ட நூல் ஒன்று, முன்னூறு பாடல்களைக் கொண்ட நூல் ஒன்று, முப்பது பாடல்களைக் கொண்ட நூல் ஒன்று என மூன்று செந்தமிழ் இலக்கியங்களைத் திருமூல முனிவர் அருளிச் செய்துள்ளார் என்பது

**மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்**
**மூலன் உரை செய்த முன்னூறு மந்திரம்**
**மூலன் உரை செய்த முப்பது உபதேசம்**
**மூலன் உரை செய்த மூன்றும் ஒன்றாமே** (3046)

என்ற திருமந்திரப்பாடலால் தெரிய வருகின்றது. திருமந்திரம் என்ற நூலை அருளிச் செய்வதற்கு முன்பே மற்ற இரண்டு நூல்களையும் பாடியுள்ளார் என்பது இந்தத் திருமந்திரப்பாடலால் தெளிவாகின்றது. திருமந்திரம் தவிர மற்ற இரண்டு நூல்களும் கிடைக்கவில்லை. மூவாயிரம் பாடல் கொண்ட திருமந்திரமானது திருமூல முனிவரின் வாழ்க்கை வரலாற்று அனுபவ நிகழ்ச்சிகளைக் கூறுகின்றபடியால் தெய்வீக அனுபவத் திருப்பாடல்களின் தொகுப்பான பன்னிரு திருமுறையில் பத்தாம் திருமுறையாகப் பொலிவுறுகின்றது.

**நூலின் பெயர்**

மந்திரம் என்பதற்கு ஆகமம் என்றும் தோத்திரம் என்றும் பொருள். ஆகமவிதிப்படி அமைக்கப்படுவதாலும் தோத்திரம் சொல்லி வழிபாடு நடத்தப்படுவதாலும் கோயிலுக்கு மந்திரம் என்று பெயர். மக்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இந்த மந்திரம் கட்டப்பட்டது என்று காஞ்சி கைலாசநாதர்க் கோயிலைப் பற்றி அக்கோயில் கல்வெட்டு கூறுகின்றது.

மந்திரவிதியில் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி என்று திருமுருகாற்றுப்படை ஆகமவிதி மரபுப்படி அந்தணர்கள் வேள்வி செய்வதைப் போற்றுகின்றது. ஆகமங்களைத் தோற்றுவித்த மகேந்திரமலை மந்திரமலை என்றே அழைக்கப்பட்டது. மந்திரமாமலை மகேந்திர வெற்பன் என்பது திருவாசகம் (2:100). ஆகமங்களின் வழிநூல்களுக்குத் தந்திரம் என்று பெயர். இதை

**ஆகும் அனாதி கலை ஆகம வேதம்**
**ஆகும் அத்தந்திரம் அந்நூல் வழி நிற்றல்** (2379)

என்று திருமந்திரம் தெரிவிக்கின்றது. ஒன்பது ஆகமங்களின் சாரத்தை ஒன்பது தந்திரங்களாகப் பாடியதை

தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தர ஆகமச் சொல் (101)

என்று திருமூலர் தெரிவித்துள்ளார். எனவே மூவாயிரம் பாடல்களில் ஒன்பது ஆகமங்கள் அதாவது ஒன்பது மந்திரங்கள் கூறப்பட்டதால் இந்த ஆகமச் சார்பு நூல் திருமந்திரம் என்று அழைக்கப்பட்டது. மூவாயிரம் பாடல் கொண்ட இந்த நூலுக்கு மந்திரமாலை என்று திருமூலர் பெயர் வைத்தார் என்பது

மந்திர மாலை உறைப்பொடும் கூடி நின்று ஓதலுமாமே (86)

மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ் (3046)

என்ற திருமந்திரத் தொடர்களால் தெளிவாகின்றது. பெரிய புராணத்திலும் மந்திர மாலை என்ற பெயரே காணப்படுகிறது. (திருமூலர் 26) திருமந்திர மாலை என்பது பின்னர் திருமந்திரம் என்று வழங்கப்பட்டது.

### திருமந்திரம் சொல்லும் பொருள்

ஆகமங்கள் கன்ம காண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டவை. உலகில் மக்கள் நல்ல செயல் களைச் செய்து நல்ல பண்புகளுடனும் சிறந்த பழக்கவழக்கங்களுடனும் ஒழுக்கமாக வாழ்வதற்கான அறநெறியைக் கூறும் பகுதி கன்ம காண்டம். கோயில், திருவுருவம், பூஜை, திருவிழா மற்றும் வழிபாட்டு முறைகளை யெல்லாம் விளக்கும் பகுதி உபாசனா காண்டம். முதல்வன் (பதி), ஆத்மா (பசு), உலகம் (பாசம், பந்தம்) ஆகியவை பற்றியும் அவற்றுக்கு இடையே யுள்ள உறவு புற்றியும் விளக்கும் பகுதி ஞான காண்டம். திருமந்திரம் ஆகம நூல் ஆதலால் இந்த மூன்று பகுதிகளும் முறையாக சிறப்பாக விளக்கப் படுகின்றன. பாயிரத்தில் கடவுள் வாழ்த்து, வேதச்சிறப்பு, ஆகமங்களின் சிறப்பு, திருமூலர் வரலாறு ஆகியவற்றைக் கூறும் திருமந்திரத்தில் முதல் இரண்டு தந்திரங்கள் கன்ம காண்டமாகவும், மூன்று நான்கு ஐந்து ஆகிய தந்திரங்கள் உபாசனா காண்டமாகவும், ஆறு ஏழு எட்டு ஒன்பது ஆகிய தந்திரங்கள் ஞான காண்டமாகவும் உள்ளன. இறைவணக்கத்தோடு தொடங்கும் திருமந்திரம் இறைவணக்கத்தோடு முடிகின்றது.

1-2 தந்திரங்கள் - கன்ம காண்டம்
3-5 தந்திரங்கள் - உபாசனா காண்டம்
6-9 தந்திரங்கள் - ஞான காண்டம்

### பாடல் எண்ணிக்கையும் அமைப்பும்

திருமந்திரம் மூவாயிரம் பாடல்களைக் கொண்ட ஆகம நூல் என்பது

தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தர ஆகமச் சொல் (101)

மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ் (99,3046)
முத்தி முடிவு இது மூவாயிரத்திலே (100)

என்ற திருமந்திர வரிகளால் விளக்கமாகின்றது. முக்குற்றம், முப்பதம், முப்பரம், முத்துரியம், மும்முத்தி, முச்சொரூபம், முக்கரணம் முக்சூனிய தொந்தத்தசி, முப்பாழ், முத்தீ என்று பலவிதமான மூன்றுகளைப் பேசும் திருமூலர் இயற்றிய மூன்று நூல்களின் பாடல் எண்ணிக்கையும் மூவாயிரம், முன்னூறு, முப்பது என்று மூன்றிலேயே அமைந்துள்ளது. மூவாயிரம் பாடல்கள் பத்து இயல்களில் இருநூற்று முப்பது அதிகாரங்களாக அமைந்துள்ளன.

| இயல் | அதிகாரங்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 1. பாயிரம் | 9 | 112 |
| 2. முதல் தந்திரம் | 24 | 224 |
| 3. இரண்டாம் தந்திரம் | 25 | 212 |
| 4. மூன்றாம் தந்திரம் | 21 | 335 |
| 5. நான்காம் தந்திரம் | 13 | 535 |
| 6. ஐந்தாம் தந்திரம் | 20 | 154 |
| 7. ஆறாம் தந்திரம் | 14 | 131 |
| 8. ஏழாம் தந்திரம் | 38 | 418 |
| 9. எட்டாம் தந்திரம் | 43 | 527 |
| 10. ஒன்பதாம் தந்திரம் | 23 | 399 |
| | 230 | 3047 |

இரண்டு முறை வந்துள்ள பாடல்கள் - 45
மூன்று முறை அமைந்துள்ள பாடல்கள் - 2 45+4 = 49
இருநூற்று முப்பது அதிகாரங்களில் உள்ள பாடல் 3047-49 = 2998

இருநூற்று முப்பது அதிகாரங்களில் உள்ள மூவாயிரத்து நாற்பத்தேழு பாடல்களில் நாற்பத்து ஐந்து பாடல்கள் இரண்டு இடங்களில் அமைந்துள்ளன. இரண்டு பாடல்கள் மூன்று முறை இடம்பெற்றுள்ளன. ஆக நாற்பத்து ஒன்பது (45+4) பாடல்களைக் கழித்தால் பாடல் எண்ணிக்கை

---

பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு (7), தீருப்பனந்தாள், 1960, உரை நூலில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள 47 திருமந்திரப் பாடல்கள் பெருந்திரட்டு குறுந்திரட்டிலும் வைராக்கிய தீபவுரையிலும் நிட்டானுபூதி உரையிலும் அவிரோத உந்தியார் உரையிலும் முத்தி நிச்சயப் பேருரையிலும் திருமந்திரம் கைலாய சித்தர் உரையிலும் உள்ளன. கையேட்டுப் பிரதியில் காணப்பட்டவை என்ற பதினான்கு பாடல்கள் சைவ சித்தாந்த மகா சமாஜம் திருமந்திரம் மூன்றாம் பதிப்பில் காணப் படுகின்றன. 3047+47+14 = 3108 மூவாயிரத்து நூற்று எட்டு பாடல்களும் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீட்டு எண் ஏழில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இரண்டாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொன்னூற்றெட்டு. இந்தப் பாடல்களே அல்லாமல் உரைநூல்களில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள திருமந்திரப் பாடல்களின் எண்ணிக்கை நாற்பத்து ஏழு. ஏட்டுப் பிரதியில் காணப் பட்ட பாடல்களின் எண்ணிக்கை பதினான்கு. ஆக மொத்தம் அறுபத்தோரு பாடல்களைச் சேர்த்தால் திருமந்திரப் பாடல்களின் எண்ணிக்கை மூவாயிரத்து ஐம்பத்தொன்பது. எனவே திருமூலரின் திருமந்திரத்திலிருந்து ஐம்பத்தொன்பது பாடல்கள் நீக்கப்பட்டு அவற்றுக்கு மாறாக வேறு ஐம்பத்தொன்பது பாடல்கள் புகுத்தப்பட்டுள்ளன என்பது புலனாகின்றது.

| | |
|---|---|
| இருநூற்று முப்பது அதிகாரங்களில் உள்ள பாடல்கள் | 2998 |
| உரைநூல்களில் மேற்கோள் காட்டப்பட்ட பாடல்கள் | 47 |
| ஏட்டுப் பிரதியில் காணப்பட்ட பாடல்கள் | 14 |
| மொத்தப் பாடல்கள் | 3059 |
| திருமூலர் இயற்றிய பாடல்கள் | 3000 |
| பிற்காலப்பாடல்கள் | 59 |

திருமந்திரத்தில் எந்தெந்த பாடல்கள் இடைச்செருகல்கள் என்பதை எளிதாகக் கண்டறிய முடியும். திருமூலரின் அனுபவங்களுக்கும், ஆகமம் கூறும் உண்மைகளுக்கும், சைவ சித்தாந்த உண்மைகளுக்கும், நூலின் பிற இடங்களில் திருமூலர் கூறியுள்ள உண்மைகளுக்கும் மாறுபட்டு அமைந்த பிற்காலச் சேர்க்கையை எளிதாகக் கண்டறிய முடியும். உதாரணமாக 106-ஆம் பாடலாகவும் 990-ஆம் பாடலாகவும் இரண்டு முறை இடம் பெற்றுள்ள பாடல் வேறு ஒருவரால் இயற்றப்பட்டுப் புகுத்தப்பட்ட பிற்காலப்பாடலாகும். படைத்தல் காத்தல் அழித்தல் மறைந்து இருத்தல் வெளிப்பட்டு அருள்புரிதல் என்ற ஐந்து தொழில் புரியும் கடவுளான சிவபெருமான் மும்மூர்த்திகளுக்கு அப்பாற்பட்டவன். பிறப்பில்லாதவன். தோன்றாப் பெருமையன். இத்தகைய பரமசிவனை ஒரு தொழில் புரியும் தெய்வங்களான பிறப்பும் இறப்பும் உள்ள மும்மூர்த்திகளில் ஒருவன் என்று கூறும் இந்தப் பாடலும் மற்றும் 104, 110 எண்ணுள்ள பாடல் களும் திருமூல முனிவரால் இயற்றப்படவில்லை என்பது

**முன்னை ஒப்பாய் உள்ள மூவர்க்கு மூத்தவன் (7)**

**அவன் அன்றி மூவரால் ஆவது ஒன்று இல்லை (6)**

**மூவர் பெருமையாய் அத்தன் இவன் என்று அன்புறுவார்களே**
**மூவரோடு ஆடி முனிசனத்தோடு ஆடி (2757)**

**திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை**
**அரி அயன் என்று எண்ணி அயர்வுற வேண்டா (348)**

என்பன போன்ற பலப்பல திருமந்திரப் பாடல் தொடர்களால் தெரிய வருகின்றது.

திருமூலர் காலத்தில் பாரதத் திருநாடு முழுவதும் இரண்டே இரண்டு மொழிகள் தான் வழங்கி வந்தன. ஆரியம், தமிழ் என்ற அந்த இரண்டு மொழிகளிலும் ஆகமங்கள் இயற்றப்பட்டு வழிபாடுகள் நடத்தப்பட்டு வந்தன என்பது

**தமிழ்ச்சொல் வடசொல் எனும் இவ்விரண்டும்**
**உணர்த்தும் அவனை உணரலுமாமே (66)**

**ஆரியமும் தமிழும் உடனே சொல்லிக்**
**காரிகையார்க்கும் கருணை செய்தானே (65)**

என்ற திருமந்திரத் தொடர்களால் தெரியவருகின்றது. எனவே பதினெட்டு மொழியைப் பற்றிப் பேசும்

**பதினெட்டுப் பாடையும் அண்ட முதலான்**
**அறம் சொன்னவாறே (59)**

என்ற பாடல் மிகவும் பிற்காலத்திய சேர்க்கை என்பது புலனாகும். திருமூலர் காலத்தில் உலகம் முழுதுமே இத்தனை மொழிகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஈசன், ஈஸ்வரன் என்றால் முதல்வன், தலைவன், இறைவன் என்று பொருள். குறிப்பிட்ட ஒரு இனத்திற்கோ, ஊருக்கோ, நாட்டிற்கோ அல்லாமல் எல்லோருக்கும் எல்லா உலகங்களுக்கும் தலைவனாக, முதல்வனாக, இறைவனாக இருப்பதால் சிவபெருமானுக்கு ஈசன், ஈஸ்வரன் என்றே திருநாமங்கள் அமைந்தன. சிவன் என்றால் செம்மை யானவன் என்று பொருள். மலங்களால் பற்றமுடியாமல் சதாசர்வ காலமும் செம்மையானவனாக, தூய்மையானவனாக மாறுதல் இன்றி நிலைத்திருப்பதால் சதாசிவன் என்று பெயர். யார் முன்னும் கைகூப்புதல் இல்லாததால் சேர்ந்தறியாக் கையான் என்று பெயர். ஈசன், சதாசிவன் என்பதெல்லாம் பரமசிவனின் இயல்புகளைக் குறிக்கும் சிவநாமங்களே என்பது உலகு அறிந்த உண்மை. இவற்றையெல்லாம் திருமூலரும்

**எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்தினால்**
**அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே (36)**

**சதாசிவன் எம் இறை (112)**

**வாழ்க மலமிலான் பாதம் (3047)**

**எம் இறை மற்று அவன் தன்னால் தொழப்படுவார் இல்லைதானே (9)**

என்ற வரிகளில் உரைத்துள்ளார். எனவே ஈசன், சதாசிவன் என்பவை வெவ்வேறு தெய்வங்கள், தனித்தனி தெய்வங்கள், மலங்களால் பற்றப் படுபவர்கள், மற்றவர்களை வழிபடுகின்றவர்கள் என்றெல்லாம் கூறும்

பாடல்கள் யாவும் இடைச்செருகல்களே; ஆகமம், சைவசித்தாந்தம் ஆகிய புனித நூல்களைப் பற்றிக் கேள்வியும் பட்டிராத புறச்சமயிகள் மற்றும் நாத்திகர்களால் புனைந்து புகுத்தப்பட்ட பாடல்களே என்பது புலனாகும்.

திருமந்திரத்தின் முதல் சொல் ஒன்றவன்தானே என்பதாகும். திருமூலமுனிவர் ஒன்றவன்தானே என்று தொடங்கி ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல் பாடினார் என்பதை வரலாற்றுக் காவியமான பெரிய புராணத்தில்

நல் திருமந்திரமாலை பான்மை முறை
ஓராண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம்
ஏன எயிறு அணிந்தாரை ஒன்றவன்தான் என எடுத்து

(பெரியபுராணம் திருமூலர் 26)

என்று சேக்கிழார் பெருமான் கூறியுள்ளார். எனவே ஒன்றவன் தான் என்று தொடங்கும் கடவுள் வாழ்த்திற்கு முன்னதாக உள்ள ஐந்து கரத்தனை என்று தொடங்கும் விநாயகர் காப்புச் செய்யுள் சேக்கிழார் காலத்திற்குப் பிறகு எழுதிச் சேர்க்கப்பட்டது என்பது தெளிவாகின்றது. இவ்வாறு குறைந்த பட்சம் ஐம்பத்தொன்பது பாடல்கள் பிற்காலத்தில் புனைந்து புகுத்தப்பட்டள்ளன என்பது திருமந்திரம் கூறும் பாடல் எண்ணிக்கை யாலும் தற்போது உள்ள பாடல் எண்ணிக்கையாலும் விளங்குகின்றன. ஆதிகாலத்தில் தமிழ் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றாக இருந்தன பின்னர் முப்பதாகக் குறைக்கப்பட்டுள்ளன என்பதைத் திருமந்திரம் தெரிவிக்கின்றது (963). திருமந்திரத்தின் சில பகுதிகள் ஐம்பத்தொரு எழுத்துகள் இருந்த காலத்தில் இயற்றப்பட்டன என்பதும் நான்காம் தந்திரத்தால் தெரிய வருகின்றது. எனவே திருமந்திரம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் இயற்றப் படவில்லை, மூவாயிரம் ஆண்டுகாலத்தில் இயற்றப்பட்டது என்பது வலியுறுத்தப்படுகின்றது. திருமந்திரத்தின் முதல் பாடலுக்கும் இறுதிப் பாடலுக்கும் உள்ள இடைவெளி மூவாயிரம் ஆண்டுகள் என்பது பெரிய புராணத்தால் தெரியவருகின்றது.

**பாடல்தொடை**

நான்கு வரிப்பாடல்களாக அமைந்துள்ள திருமந்திரத்தில் அறுநூற்று அறுபத்தொன்பது பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன.

**நூல் தோன்றிய காரணம்**

வேதங்களின் சிறப்பையும் ஆகமங்களின் அருமையையும் உணர்ந்து கொண்டதனால் தான் அடைந்த பெறுதற்கு அரிய பேரின்பத்தை எல்லோரும் பெற வேண்டும் என்ற நோக்கத்தினால் உலக நன்மைக்காகத் திருமூல அந்தணர் நூல்களை இயற்றினார் என்பது

யான் பெற்றது எலாம் பெறுக என (70)

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான் பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன் பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படுந்தானே (85)

என்ற திருமந்திர வரிகளால் தெரிய வருகின்றது. எல்லா உலகங்களுக்கும் அப்பாற்பட்ட சிவலோகமாகிய முக்தியுலகத்தில் உள்ள சிவமுனி சித்தசன் என்ற கணநாதர் எல்லோருக்கும் நன்றாகப் புரியுமாறு எளிய தமிழில் வேத ஆகமங்களைப் பாடுவதற்காகவே இறைவன் திருவருளால் அந்தணயோகியாக உருக்கொண்டு வான்வழியாக பூமிக்கு வந்தார். இதை,

இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே (80)

மாலாங்கனே இங்கு யான் வந்த காரணம்
... சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே (77)

அரனடி நாள்தொறும் சிந்தை செய்து
ஆகமம் செப்பலுற்றேனே (73)

செல்கின்றவாறு அறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கு ஓர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர் தம்பால்
ஒல்கின்ற வான்வழி ஊடு வந்தேனே (83)

வேதத்தின் ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கு இங்கு அருளால் அளித்ததே (84)

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே (81)

என்ற திருமந்திரத் தொடர்கள் தெரிவிக்கின்றன. வேதாகமங்களைப் பாடுவதற்காக அந்தண முனிவராக உடல்கொண்டு பூமிக்கு வந்த சிவமுனி சித்தசன் பூவுலகின் மிகச் சிறந்த புனிதமான மலையாகிய வடக்கே உள்ள கயிலைமலையில் பலகாலங்கள் தவம் புரிந்தார். பரமேஸ்வரன் திருக்காட்சி தந்து அந்தணமுனிவருக்கு அஷ்டமகா சித்திகளை அருளிச் செய்தார். நந்தியெம்பெருமான் ஒன்பது ஆகமங்களை உபதேசித்தார். நான்மறை யோகியாய் கயிலைமலையில் இருந்ததிலிருந்து தொடங்கி திருமூலரின் வரலாற்றை சேக்கிழார் பெருமான் கூறியுள்ளார். அஷ்டமகா சித்திகளையும் ஒன்பது செந்தமிழ் ஆகமங்களையும் அறிந்த அந்தண முனிவர் தென்திசைக்கு வந்தார். சிதம்பரத்தில் பதஞ்சலி வியாக்கிர பாதர் ஆகிய முனிவர்களுடன் தில்லைக் கூத்தபிரானின் திருநடனம் கண்டு களித்தார். பல தலங்களையும் தரிசனம் செய்து வழிபட்டுத்

திருவாவடுதுறையை அடைந்தார். அங்கு தங்கி வழிபாடு புரிந்து வந்தார். இவ்வாறு சிவமுனி சித்தசன் என்ற கண நாதர் அந்தணமுனிவராய் வானத்திலிருந்து இறங்கி கயிலைமலை வழியாகத் திருவாவடுதுறைக்கு வந்ததை

**தலைநின்ற தாழ்வரை மீது தவம் செய்து**
**கலைநின்ற கள்வனைக் கண்டு கொண்டேனே** (2597)
**வளப்பில் கயிலை வழியில் வந்தேனே** (91)
**அரியது எனக்கு இல்லை**
**அட்டமாசித்தி பெரிது அருள் செய்து பிறப்பறுத்தானே** (641)
**செந்தமிழாதி தெளிந்து வழிபடு**
**நந்தி இதனை நவம் உரைத்தானே** (1089)
**தப்பிலா மன்றில் தனிக்கூத்து கண்ட பின்** (74)
**மன்றுதொழுத பதஞ்சலி வியாக்கிரமர் என்று இவர்**
**என்னோடு எண்மருமாமே** (67)
**சேர்ந்து இருந்தேன் சிவன் ஆவடுதண்துறை** (79)

என்ற திருமந்திரத் தொடர்கள் தெரிவிக்கின்றன.

**அந்தண முனிவர் திருமூலராதல்**

பசுக்களை மேய்க்கும் மூலன் என்ற இடையன் இறந்துபட்டதால் பசுக்களின் துயரம் தீர்ப்பதற்காக அந்தண முனிவர் ஆயன் உடலில் புகுந்தார். பசுக்களையெல்லாம் உரிய தலைவர்களிடம் சேர்த்த பின்னர் தனது வானலோகத்து உடலை வைத்த இடத்திற்கு மீண்டார். பரமன் திருவருளால் பெற்ற தெய்வீகப் புனித உடல் இல்லாததைக் கண்டார். மூலன் உடலுடனேயே இருக்கவேண்டும் என்பது ஈசனது திருவருள் குறிப்பு என்று அறிந்தார். அதனால் வேறு உடலைப் பெறவில்லை. இந்த உடலிலும் ஈசன் குடிகொண்டுள்ளான் என்று உணர்ந்து திருவாவடுதுறைத் திருக்கோயிலின் தலமரமான போதி மரத்தடியில் (அரசமரம்) அமர்ந்து தவம் செய்தார். ஈசனது திருக்காட்சி பெற்று மும்முலம் நீங்கிச்சிவமான திருமூலர் மூவாயிரம், முன்னூறு, முப்பது ஆகிய பாடல்களைக் கொண்ட மூன்று நூல்களை அருளிச் செய்தார். இவ்வாறு வானலோகத்து நான்மறையோகி திருமூலரான வரலாற்றை

**நந்தி அருளாலே மூலனை நாடினோம்** (68)
**பரகாயம் மேவலுமாமே** (643)
**கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்வது என்?**
**எல்லை கடப்பித்து இறைவனடிக் கூட்டியே**

வல்ல செய்து ஆற்றல் மதித்த பின் அல்லது
கொல்லை செய் நெஞ்சம் குறிப்பு அறியாதே (2016)

குரவன் அருளில் குறிவழி மூலன்
நந்தி வழிகாட்ட யான் இருந்தேனே (68)

உடன்பினை முன்னம் இழுக்கு என்று இருந்தேன்
உடம்பினுள்ளே உறு பொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே (725)

சேர்ந்து இருந்தேன் சிவபோதியின் நிழலில்
சேர்ந்து இருந்தேன் சிவநாமங்கள் ஓதியே (79)

யான் இருந்தேன் நற்போதியின் கீழே (82)

நந்தி அருளாலே மூலனை நாடிப் பின்
நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன் (92)

சாவதும் இல்லை சதகோடி ஆண்டிலும் (1954)

ஆணி கலங்காது அவ்வாயிரத்து ஆண்டே (866)

என்ற திருமந்திரத் தொடர்கள் எடுத்துரைக்கின்றன. மடங்கள் அமைத்து ஏழு மாணவர்களுக்கு நூல்களை அருளிச் செய்த திருமூலர் மீண்டும் சிவலோகம் சேர்ந்து எண்குண நிலையடைந்தார்.

அவயோகம் சாராது அவன் பதிபோக
நவயோக நந்தி நமக்கு அளித்தானே (122)

என்பவை திருமந்திர வரிகள். மூலன் உடலுடன் வாழ்ந்ததால் திருமூலர் என்ற பெயரும் போதிமரத்தடியில் இளமையுடன் வாழ்ந்ததால் இளம்போதியார் என்ற பெயரும் உண்டாயின. இந்த இரண்டு பெயர்களும் சங்ககாலத்தில் புகழ்பெற்ற பெயர்களாக விளங்கின என்பது மாமூலனார் இளம்போதியார் என்ற எட்டுத்தொகைப் புலவர்களின் பெயர்களால் தெரியவருகின்றது.

# 42. திருமந்திரத்தில் தந்திர அமைப்பு

முனைவர் சுடலி தியாகராஜன், சென்னை.

திருமந்திரத்தில் தந்திர அமைப்பு என்ற பொருளில் ஆராயும் நிலையில் திருமந்திரச்சிறப்பு, தந்திரங்கள் அமைந்துள்ள முறை, ஆகியன விளக்கப்படுகின்றன.

திருமந்திரம், தோத்திரம், சாத்திரம் என்ற இரண்டினுக்கும் உரியதாக அமைந்துள்ளது.

''அரனடி நாள்தோறும் சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேனே'' என்று ஆகமத்தைச் சிவரூபமாகக் காணும் திருமூலர், ''வேதத்தைச் செப்ப வந்தேனே'', ''என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'' என்று, நிலவுலகில் வேத ஆகமங்களின் கருத்தைத் தமிழில் ஆக்கவே இறைவன் படைத்தான் என்கிறார்.

''நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்'' என்று சுந்தரரும், ''சக்கரவர்த்தி தவராஜ யோகி எனும் மிக்க திருமூலனருள் மேவு நாள் எந்நாளோ'' என்று தாயுமானவரும் போற்றும் திருமூலர், சிவனிடமிருந்து நந்தியம்பெருமான் பெற்ற ஆகமப் பொருளைத் தமிழில் திருமந்திரமாகச் செய்தார் என்பதை ''தண்ணிலவார் சடையார்தாம் தந்த ஆகமப்பொருளை மண்ணின் மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்ப'' என்று சேக்கிழார் கூறுகின்றார்.

**திருமந்திர அமைப்பு**

திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங்கள் உள. முதல் தந்திரத்தில் தனிமனித ஒழுக்கம் முதலில் வலியுறுத்தப்படுகிறது. இதில் பொறை யுடைமையும், பெரியாரைத் துணைக் கோடலும் இல்லை. இரண்டாவது தந்திரத்தில் முதலில் புராணங்களின் உட்பொருள், மும்மலத்தார் பற்றிய விளக்கம், சகலருக்குரிய அறிவுரை, சிவ, குரு, மயேச்சுரநிந்தை கூடாது என்பனவற்றை உரைத்து, அடுத்து, இறுதியில் பொறையுடைமையையும், பெரியாரைத் துணைக்கோடலையும் கூறுகிறார். அடுத்து, மூன்றாம் தந்திரத்தில் அட்டாங்க யோகம் பற்றியும், நான்காம் தந்திரத்தில், மந்திரங்கள், வழிபடும் முறைகள், சக்கர அமைப்புப் போன்றவை பற்றியும், ஐந்தாம் தந்திரத்தில் நான்கு நெறி, நிலை, மார்க்கம் பற்றியும், ஆறாம் தந்திரத்தில் சிவ, தவவேடம் துறவு பற்றியும், ஏழாம் தந்திரத்தில்

அடியார் பெருமை, சமாதி, குருபூசை பற்றியும், எட்டாம் தந்திரத்தில் பக்தி, பதி, பசு, பாசம் பற்றியும், ஒன்பதாம் தந்திரத்தில் பஞ்சாட்சரம், கூத்துத்தரிசனம், சிவ போக இன்பம் பற்றியும் கூறுகிறார். சூன்ய சம்பாஷணை எனும் தலைப்பில் எழுபது பாடல்களை மறைபொருள் கூற்றாகக் கூறுகிறார் திருமூலர்.

## திருமூலர் முதலில் பதிவு செய்தவை

தனக்கு முன் யாரும் பதிவு செய்யாத சிலவற்றைத் திருமூலர் பதிவு செய்துள்ளார். அவை,

1. புராணங்களின் உட்பொருள்
2. அட்டாங்க யோகம்
3. சக்கர அமைப்பு, மந்திரம்
4. நான்கு நெறி, நிலை, மார்க்கம்
5. சூன்ய சம்பாஷணை
6. நமசிவாய மந்திரப்பகுப்பு
7. கூத்துத் தரிசனம்
8. சித்தாந்தம் எனும் சொல்லாட்சி
9. கலிவிருத்தப்பா அமைப்பு
10. உடம்பை பாதுகாத்தல்
11. கரு வளரும் முறை
12. அடியார் பெருமை, குருபூசை, சமாதி போன்றவற்றின் விளக்கங்கள்.

போன்றவை.

## ஞானம் பெறுவதற்கான படிநிலைகள்

ஞானத்தில் சரியை ............... கேட்டல்
ஞானத்தில் கிரியை ............... சிந்தித்தல்
ஞானத்தில் யோகம் ............... தெளிதல்
ஞானத்தில் ஞானம் ............... நிட்டை கூடுதல்

நிட்டை கூடுதல் என்பது சதாசர்வ காலமும் நினைந்திருத்தல். ஞான நிலையில், தெளிவு இல்லாதோரே தெளிதல், சிந்தித்தலுக்குப் போக்கு வரவு உடையவர்களாக இருப்பர்.

திருமூலர் கூறும் அட்டாங்கயோகம் என்பது, தீதகற்றல் (இயமம்) நன்றாற்றல் (நியமம்) இருக்கை (ஆசனம்) வளிநிலை (பிராணாயாமம்) தொகைநிலை (பிரத்யாகாரம்) பொறைநிலை (தாரணை) நினைதல் (தியானம்) நொசிப்பு (சமாதி) எனப்படுவன.

திருமூலரின் தந்திர அமைப்பு ஞானம் பெறும் படிநிலைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது எனலாம்.

**தந்திரங்களின் அமைப்பு**

பொதுவாக, எல்லாச் சமயங்களும் தனிமனித ஒழுக்கங்களையும், அன்பையுமே வலியுறுத்துகின்றன. திருமூலரும் முதலில் வலியுறுத்துவது தனி மனித ஒழுக்கத்தையே அடுத்து, அவற்றைப் பொறுமையாகக் கடைப் பிடிப்பதோடு சரியை, கிரியை, யோக, ஞான நிலையினரான ஓட, பாட, தேட, கூட வல்லாராம் பெரியாரைத் துணையாகக் கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தும் நிலையில் பொறையுடைமையை அடுத்துப் பெரியாரைத் துணை கோடலை அமைத்துள்ளார்.

பெரியாராகிய நம் மகான்கள், ஞானிகள், அருளாளர்கள், மெய் யுணர்வாளர்களுடைய அறிவுரையை முதலில் கேட்டல் வேண்டும். அப் பெரியவர்களுடைய அருளுரைகள் எவை என்று உணர்த்தும் நிலையில், மந்திரம், தந்திரம், யந்திரம், வழிபடும் முறைகள், சிவதவவேட முறைகள் அடியார் பெருமை போன்றவற்றைக் கூறி, அவற்றை அட்டாங்க யோக நிலையில் பொறை நிலையோடு, நினைத்து தியானம் செய்யவேண்டும். பின் ஒன்பதாம் தந்திரத்தில் கூறப்பட்டுள்ள சிவபோக இன்பத்தை அடையலாம் என்று கூறும் அமைப்பில் தந்திரங்களை அமைத்துள்ளார்.

ஒன்பதாம் தந்திரத்தில்தான் ஆன்ய சம்பாஷணையைக் கூறுகிறார்.

அதாவது, கேட்டு, சிந்தித்துத் தெளிந்தோர்க்கே, பக்குவப்பட நிலையில் மறைபொருளாகிய ஆழ்பொருள் புலப்படும். எனவே, இறுதியில் சூன்ய சம்பாஷணையை அமைத்து அதற்குப்பின் சிவபோக இன்பத்தைக் கூறியுள்ளார்.

ஓங்காரச்சுழுமுனையாகிய சிகரத்தை நாயோட்டு மந்திரம் என்கிறார் திருமூலர்.

"சிகரத்தில் ஏற்றி எனைச் சிவமாக்கினான்" என்று இராமலிங்கர் கூறுவது போல் திருமூலர்,

"நாயோட்டு மந்திரம் நான் மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாதன் இருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறியோ மன்றே"

என்கிறார்.

ஒழுக்கத்தால் பண்படுகின்ற பொழுது, சிந்தை தெளிவடையும். அத்தெளிவால், மலர்தலும் கூம்பலுமற்ற அசைவறுமதி ஏற்படும்.

அப்பொழுது ஞானம் சிறக்கும். இவற்றைப் படிப்படியாகப் பெறும் நிலையில், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்ற முறையில் இயமம், நியமம் போன்றவற்றைப் பொறைநிலையுடன் கைகொண்டால் தியானம், சமாதி போன்றவை செம்மை பெறும் என்று அறிவுறுத்தும் நிலையில் தந்திரங்கள் அமைந்துள்ளன.

# 43. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

முனைவர் ச.கா. சுதந்திரா, திருப்பத்தூர்.

**ஒருவரே கடவுள்**

திருமந்திரம் பாயிரத்தில் திருமூலர் சிவபெருமான் ஒருவரே கடவுள் என்பதை தெள்ளத் தெளிய விளக்குகிறார் திருமந்திரத்தில் முதல் பாடல் :

"ஒன்று அவன் தானே; இரண்டு அவன் இன்னருள்;
நின்றனன் மூன்றினுள்; நான்கு உணர்ந்தான்; ஐந்து
வென்றனன்; ஆறு விரிந்தனன்; ஏழு உம்பர்ச்
சென்றனன்; தான் இருந்தான் உணர்ந்து எட்டே"

**இதன் பொருள்**

ஒன்று சிவபெருமான் ஒருவனே கடவுள் :

இரண்டு அவனருளும் அவனும்;

மூன்று அரன் அரி அயன் என்னும் மூவர் உள்ளும் சிவபெருமான் நிலைபெற்றிருக்கிறான்;

நான்கு உலக அதீதன், உலக காரணன், உலகிற்கு உயிராய் இருப்பவன், உலக வடிவாய் இருப்பவன்;

ஐந்து ஐம்பொறிகளையும் இயல்பாகவே வென்றவன்;

ஆறு ஆறு ஆதாரங்களாகவும் அந்த ஆதாரங்களுக்குரிய தேவதைகளாகவும், ஆறு அத்துவாக்களாகவும் விரிந்து நிற்பவன்.

ஏழு ஆறு ஆதாரங்களுக்கு மேற்பட்ட ஏழாவது ஆகிய துவாத சாந்தப் பெரு வெளியில் விளங்குபவன்;

எட்டு மண், புனல், அனல், கால், வெளி, சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் அட்ட மூர்த்தியாக உணரப்பெற்று, அவற்றுள் கலந்து இருப்பவன்.

பாயிரத்தில் உள்ள கடவுள் வாழ்த்தில் சிவபெருமானைப் போற்றிப் பரவும் ஆன்மாவை இடமாகக் கொண்டு நிற்பவன். நான்கு திசைகளுக்கும், உமாதேவிக்கும் தலைவன். தென் திசையில் உள்ள கூற்றுவனை உதைத்தவன். அனைத்து உயிரிகளுடனும் பிரியாமல் உடனாய் நிற்பவன். தேவர்களால் போற்றப்படும் மாதேவன்.

அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருப்பவன் ஆனாலும் எவராலும் எளிதில் அறியப்படாதவன். அண்டங்கள் அனைத்தும் தோன்றி ஒடுங்குவதற்கு இடம் கொடுத்து நிற்கும் முழு நிறைவுடைய வியாபகப் பொருள்.

சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் எதுவும் இல்லை. எங்குத் தேடினும் அவனுக்கு இணையானவர் எவரும் இலர். அனைத்து புவனங் களையும் கடந்தவன்; பொன்போல் மிளிரும் சூரியனை ஒத்த சடாமுடியை உடையவன்; என் இதயத் தாமரையில் எழுந்தருளி இருப்பவன்; இதனை திருமூலர்

''சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை;
அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை;
புவனம் கடந்து, அன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே''

என்றருளிச் செய்துள்ளார்.

சிவபெருமானை மறந்து செய்யும் எந்த அரிய தவமும் தவம் ஆகாது. இதனைத் திருமூலர் அவன் அன்றிச் செய்யும் அரும்தவம் இல்லை என்கிறார். சிவபெருமானை எல்லோரும் வழிபடுவர்; அவனால் வழிபடத்தக்கவர் எவரும் இலர். இதனைத் திருமந்திரம்

''பொன்னால் புரிந்திட்ட பொற்சடை என்னப்
பின்னால் பிறங்க இருந்தவன்; பேர் நந்தி;
என்னால் தொழப்படும் எம் இறை; மற்றவன்
தன்னால் தொழப்படுவார் இல்லை தானே''

**தந்தையாய் இருப்பவன்**

உலகுக்கு மழையைத் தருபவன் சிவபெருமானே; இஃது அவன் அருட்சத்தியைக் குறிக்கிறது. இதனைத் திருமந்திரம்.

''தானே மழைமொழி தையலுமாய் நிற்கும்''

என்கிறது. திருவள்ளுவர் ''வான்சிறப்பு'' அதிகாரத்தைக் கடவுள் வாழ்த்தை அடுத்து வைத்ததன் நோக்கம், இக்கருத்துப் பற்றியே ஆகும். மழை நீரும் அவன்; மழை மேகமும் அவன். சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து குபேரனை வடதிசைக்கு அனுப்பியவன் சிவபெருமானே ஆவன்; திருமால் செய்த தவத்தை நோக்கி அவனைப் பெரும் செல்வத்திற்கு அதிபதி ஆக்கிய வனும் எங்கள் சிவபெருமானே. இதனைத் திருமந்திரம்,

''அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவம் நோக்கி

அதுபதி யாதரித்து ஆக்கம்அது ஆக்குஎன
இதுபதி கொள்என்ற எம்பெரு மானே" - 18

என்று சொல்கின்றது. உண்மை இவ்வாறு இருக்க, உலகத்தில் உள்ளவர்கள் திருமாலை வழிபட்டால் செல்வம் சேரும் என்று மயக்கமுற்றிருக்கின்றனர். சிவபெருமானை மட்டும் வழிபட்டால் அவன் ஆணையிட அனைத்துச் செல்வமும் கிட்டும் என்பதை இந்தச் சிவாகமக் கருத்து தெளிவுறுத்துகின்றது.

எல்லா வல்லமையும் உடையவன் சிவபெருமான் ஒருவனே ஆவான். எனவே அவன் திருவடியையே நமக்கு உறுதி எனப் பற்றி நிற்க வேண்டும். அவன் அருளே வடிவானவன். அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தை தருபவன். பிறப்பு இறப்பு இல்லாதவன் அவனொருனே. அவனையே தொழுங்கள் தொழுதால் எல்லா இன்பங்களையும் பெறலாம். இதனைத் திருமந்திரம்

"பிறப்பிலி, பிஞ்ஞகன்; பேர்அரு ளாளன்,
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்,
துறப்பிலி தன்னை தொழுமின்; தொழுமின்; தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே"

என்று முழங்குகிறது. சில நேரங்களில் என்ன செய்வது என்று திகைத்து நிற்போம். அந்நிலையில் அவனை உள்ளம் உருகி நினைந்தால் நமது புத்தியினுள் புகுந்து நமக்கு வழிகாட்டுவான். இதனை வணங்கி நின்றார்க்கே வழித்துணையாமே என்கிறார் திருமூலர்.

சிவ்பெருமானிடத்து எந்த அளவு நாம் உறைப்புக் கொண்டு இருக்கிறோமோ, அந்த அளவு அவன் நமக்கு உதவுகிறான். பொதுவாக எல்லோருக்கும் அருளும் பொருட்டு இரக்கமே வடிவாகி (1) சக்தியை உடையவன். (2) உயிர்கள் அனைத்திற்கும் தலைவன்; உயிர்களின் உலகப்பற்றுக்கு ஏற்ப (3) மும்மலங்களையும் இயக்குபவன், இவ்வுண்மையை "பரை பசு பாசத்து நாதன்" என்னும் தொடரால் திருமூலர் குறிப்பிடுகிறார். (1) பரைநாதன் (2) பசுநாதன் (3) பாசத்துநாதன் என இத்தொடர் பிரித்துப் பொருள் கொள்ளத்தக்கது.

உலகில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் தந்தையாய் இருப்பவன். அவனை எவ்வளவு நினைத்து நினைத்து அனுபவித்தாலும் தெவிட்டாத அமுதம் போன்றவன். அவனுக்கு இணை எவரும் இலர். எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பவன். ஆகலின் எந்த வகையில் எந்த நிலையில் நின்று அவனைத் தொழுகிறோமோ அந்த வகையில் அந்த நிலையில் நின்று அவனருளைப் பெறலாம். இதனை,

''அப்பனை, நந்தியை, ஆரா அமுதினை,
ஒப்பிலி வள்ளலை, ஊழி முதல்வனை,
எப்பரிசு ஆயினும் ஏத்துமின்; ஏத்தினால்
அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே'' -36

என்றருளுகிறது திருமந்திரம். சிவபெருமானின் பெருமையை எவரே அறிய முடியும்? அவனது முழுநிறைவு ஆகிய வியாபக நிலையை யார்தான் அறிவர்? அவன் பேரொளிப் பிழம்பாய் இருப்பவன். அவ்வொளிப் பிழம்பின் பெயர் எவருக்கும் தெரியாது. சிவபெருமானின் மூலமும் முடிவும் யாவரும் அளவிட முடியாதன. இத்தகு இறைவனைக் குறித்து நான் கூறுகின்றேன் என்று தன்னடக்கத்துடன் திருமூலர் குறிப்பிடு கின்றார். இக்கருத்தமைந்த பாடல் வருமாறு

''ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை?
ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்?
பேர் அறியாத பெருஞ்சுடர் ஒன்று, அதின்
வேர் அறியாமை விளம்புகின் றேனே''

சீகண்ட பரமேசுவரன் சிவபெருமானின் பெயரைப் பெற்று நமக்குத் தலைவனாக இருக்கிறான். அயனும் மாலும் சிவனடியார்களே ஆவர். எனவே அவர்கள் சைவர்களாகிய நமக்குத் தலைவனாக இருக்கிறான். அயனும்மாலும் சிவனடியார்களே ஆவர். எனவே அவர்கள் சைவர் களாகிய நமக்கு புறம்பானவர் அல்லர். இதனைப்

''பயன் அறிந்து அவ்வழி எண்ணும் அளவில்,
அயனொடு மால், நமக்கு அன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்;
வயனம் பெறுவீர் அவ்வானவ ராலே;'' -107

எனவே, திருமாலைச் சிவனடியாராகக் கருதி வழிபட்டுப் பெறவேண்டிய நன்மையைப் பெறும்படி திருமூலர் நம்மை வழிப்படுத்துகிறார்.

முதல் தந்திரத்தில் ''அன்பு செய்வாரை அறிவன்சிவன்'' என்னும் தலைப்பின் கீழ்வரும் செய்திகளை பார்ப்போம். சிவபெருமானை இகழ்பவர்களை அவன் அறிவான்; உண்மை அன்பு செய்பவர்க்கே அருளைப் பொழிவான். இந்தப் பிறப்பில் என்ன தவறுகள் செய்தாலும் சிவபெருமானிடம் பேரன்பு பூண்டு இருப்பாராயின், அந்த தவறுகளைப் பொருட்படுத்தாமல் அருள் செய்து, இந்தப் பிறப்பிலேயே அவர்களுக்கு முத்தியைத் தந்துவிடுவான்.

இவ்வுண்மையை

''இன்பப் பிறவிக்கு இயல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல எண்ணினும்

அன்பில் கலவி செய்து ஆதிப் பிரான் வைத்த
முன்பு இப்பிறவி முடிவது தானே" - 281

என்றருளுகிறது திருமந்திரம். சிவபெருமானிடம் எப்படி அன்பு செய்ய வேண்டும்தெரியுமா? புணர்ச்சியின் போது மகளிர்மேல் வைத்த அன்பு போல் உணர்ச்சி வயப்பட்டு அவனோடு ஒன்றாய் ஒடுங்கி அன்பு செய்ய வேண்டும். இதனைப் புணர்ச்சியுள் ஆயிழைமேல் அன்பு போல உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்க வல்லார் என்று திருமூலர் அருளிச் செய்கிறார்.

சர்வ சங்கார காலத்தில் எல்லாவற்றையும் தன்னகத்து ஒடுக்கிய சிவபெருமான், மீண்டும் உயிர்களின் பல கன்மங்களைப் பரிபாகப் படுத்துதற் பொருட்டு, உலகத்தைப் படைத்திருக்கிறான். இவ்வாறு எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி மீண்டும் வெளிப்படுத்தும் திறன் உடையவன் சிவபெருமான் ஒருவனே ஆவான். தனக்கு எந்தத் தோற்றக் கேடுகள் இல்லாத தனது அருளாகிய பராசக்தியின் வாயிலாகச் சிவபெருமான் பஞ்சக் கிருத்தியங்களைச் செய்கிறான். சிவமும் சக்தியும் நிலமும் நீரும் போலக் கலந்து பிரபஞ்சமாக விரிந்திருக்கிறது. சிவபெருமான் ஒருவனே உலகம் முழுவதும் நிறைந்துள்ளான். உயிர்கள் ஆணும், பெண்ணுமாய் இருந்து வாழுமாறு சிவபெருமான் போகியாய் இருந்து உயிர்களுக்குப் போக நுகர்ச்சிகளை வழங்கியுள்ளான். சிவபெருமானே ஈசுவரனாயும், உருத்திரனாயும், திருமாலாயும், அயனாயும் நிற்கிறான்.

கண் ஒன்றே பிறபொருள்களை எல்லாம் கண்டும், தன்னைக் காணாது அதுபோல இறைவன் தன்னைக் காட்டாமல் உயிர்கட்குப் பிறவற்றை காட்டி நிற்பதே மறைப்பாற்றால் ஆகும். "கண் ஒன்று தான் பல காணும் தனைக் காணா அண்ணலும் அவ்வண்ணம் ஆகிநின்றானே." என்கிறார். குயவன் மண்ணைக் கொண்டு சக்கரத்தின் உதவியால் பாண்டம் செய்வதுபோல், இறைவன் மாயையைக் கொண்டு அருளின் உதவியால் உலகையும் உடலையும் படைக்கிறான்.

**சதாசிவம்**

மாயாகாரியம் ஆகிய உலகம் முழுவதும் சிவலிங்க வடிவமாகவே உள்ளது. சதாசிவம் ஆகிய போக சிவமே உலகெங்கும் நிறைந்துள்ளது.

மனித உடல் சிவலிங்க வடிவமாகும். இதனைத் திருமந்திரம் "மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்" என்கிறது. சதாசிவ மூர்த்தியின் ஐந்து திருமுகங்களின் நிறமும் திசைகளும் வருமாறு.

1. நடுவில் உள்ள திருமுகம் ஈசானம், அது வடகிழக்கு நோக்கி உள்ளது. வெண் பளிங்கு போன்ற நிறம் உடையது.
2. கிழக்கு திசையை நோக்கியது. தத்புருஷம் ஆகும். அது நல்ல குங்குமம் போன்ற செந்நிறம் உடையது.

3. தெற்கு நோக்கிய திருமுகம் அகோரம் எனப்படும். செறிந்த மை போன்ற கருநிறம் உடையது.
4. வடக்கு நோக்கியது வாமதேவ திருமுகம். அது செல்வரத்தம் பூப்போலும் செந்நிறம் உடையது.
5. மேற்கு நோக்கிய திருமுகம் சத்தோயஜாதம் ஆகும். அது பால் போலும் வெண்ணிறம் உடையது.

இந்த ஐந்து முகங்களிலும் பதினைந்து கண்களும் பத்துக் கைகளும், அவற்றில் பத்துவகைப் படைகளும் உள்ளன. சத்தியும், சிவமும் அனைத்து மாய்க் கலந்து விளங்குதலை உணர்த்துவதே சதாசிவம் ஆகும். சதாசிவமே எல்லாத் தத்துவமாய் விளங்குகிறது. தத்துவங்கள் அனைத்தும் அருவ மாகும் தத்துவங்கள் சராசரமாய் விரிந்து நிற்கும் பொழுது உருவமாகும். இதனை திருமந்திரம்,

"தத்துவம் ஆவது அருவம், சராசரம்
தத்துவம் ஆவது உருவம்"

என்கிறது. இருளார்ந்த கண்டமும், ஏந்தும் மழுவும் சுருள் ஆர்ந்த செஞ்சடைச் சோதியும் அச்சடையில் பிறையும் கொண்ட அருளார்ந்த சிவபெருமானையே தெளிந்து வழிபடவேண்டும்.

**சிவலிங்கம்**

சதாசிவம் திருவருட்சத்தி வடிவமாய் இயங்குகின்றான்; சதாசிவமே சிவலிங்கம், சிவானந்தம், தற்பரம் அதாவது சிவபரம் பொருள். அஃதே ஓங்காரமாகும். சதாசிவ லிங்கத்தின் பீடம் முதலான அனைத்து உறுப்பு களும் மந்திர வடிவம் ஆகும். சிவபெருமான் பிரணவ வடிவமாக சிவலிங்க வடிவில் நிற்கிறான். அவனை நினைப்பவர் மனத்தையே கோயிலாகக் கொண்டுள்ளான் என்பதை 'மனக் கோயில்சிராபரன்' என்றருளிச் செய்கின்றார் திருமூலர்.

சதாசிவ மூர்த்திக்கு மேல் நான்கு அருவ நிலைகளிலும், அவருக்குக் கீழ் நான்கு உருவ நிலைகளிலும், சதாசிவ மூர்த்தியாக அருவுருவ நிலையிலுமாகச் சிவபெருமான் ஒன்பது வகையான நிலைகளில் நிற்கிறான் என்று 1764, 1776 என்னும் திருமந்திரங்கள் கூறுகின்றன.

சிவபெருமான் ஞாயிறு, திங்கள், தீ என்னும் பேரொளி மூன்றிற்கும் மேலான சோதியாய் விளங்குகின்றான். பத்துத் திசைகளிலும் நீக்கமற நிறைந்து நிற்கிறான் சிவபெருமான். திருமந்திரநூல் முழுவதும் சிவமணம் கமழ்கிறது.

# 44. ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்களின் திருஉருவ அமைதிகள்

திரு. க. சுந்தரச் சிற்பி, சுவாமிமலை.

சைவ சமய உலகில் 63 நாயன்மார்களை தொடர்ந்து அடியார்களின் வரிசையில் இடம் பெற்ற பெருமை 9-ஆம் திருமுறை ஆசிரியர்களான திருமாளிகைத் தேவர், சேந்தனார், சேதிராயர், கண்டராதித்தர், பூந்துருத்தநம்பி காடவநம்பி, திருவாலி அமுதனார், புருடோத்தமநம்பி, கருவூர்த்தேவர், வேணாட்டடிகள் ஆகிய ஒன்பது ஆசிரியர்களும் ஆவர்.

சிவாலயங்களில் பெரும்பாலும் 63 நாயன்மார்களில் கல் மற்றும் செப்பு திருமேனிகள் இடம்பெற்றுள்ளன. இவர்களது திருமேனிகள் காணப்பெறுவது மிகவும் அறிதாகும். முன்னவர்கள் காலம், 9-ஆம் நூற்றாண்டுக்குள் அமையபெற்றதால் அவர்கள் படிமங்களை திருகோவில்களில் சோழ மன்னர்கள் சைவ சமயத்தின் மேன்மையை உணர்த்தும் பொருட்டு திருகோவில்களில் நிறுவி வழிபடலாயினர்.

பின்னவர்கள் சோழ பேரரசுக்கு பின் தஞ்சை பெரிய கோவில், கங்கைகொண்ட சோழபுரம், திருலோக்கி முதலிய கோவில்களை பற்றி எழுதப்பட்ட பதிகங்கள் திருவிசைப்பா என்றும் அதனை எழுதியவர்கள் திருவிசைப்பா ஆசிரியர்கள் என்றும் பெயர் பெற்று இவர்களது திருமேனிகள் ஒரு சில குறிப்பிட்ட ஆலயங்களில் மட்டும் அரிதாக காணப்படுகின்றன. இவர்களின் உருவ அமைதி பற்றி இந்த ஆய்வு கட்டுரையில் காண்போம்.

**திருமாளிகை தேவர்**

இவர் சோழ மன்னர்களின் தீட்சை குரு. சைவ மதத்தை சேர்ந்தவர். இவர் மாளிகை மடம் என்ற இடத்தில் வாழ்ந்ததால் மாளிகை தேவர் என பெயர் பெற்றார்.

உருவ அமைப்பு அமர்ந்த கோலத்தில் இடது கால் மடக்கி வலது கால் தொங்கவிட்டு வலது கை அபய முத்திரையுடனும் இடதுகை சுவடியுடனும் வலது, இடது மேற்கரங்கள் தாமரை மலரை தாங்கியவாறும் தலையில் ஜடா முடியுடனும் அமைய பெற்றதாகும்.

குரு பணிவிடை மற்றும் சிவ பூஜை செய்வதற்காக தனது தவ வலிமையால் மேலும் இரண்டு கைகளை உருவாக்கி கொண்டார் என்பது செவி வழி செய்தியாகும். இவரது காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு.

## சேந்தனார்

இவர் பட்டினத்தாரின் தலைமை கணக்கர். சிதம்பரத்தில் ஓடாத தேரை திருப்பல்லாண்டு பாடி ஓட செய்தார். இதை அறிந்த மன்னர் இவருக்கு நிலம் அளித்தார். அந்த இடம் சேந்தமங்கலம் என வழங்கப் படுகிறது. இவரது காலம் 10-ஆம் நூற்றாண்டு.

### உருவ அமைப்பு

திருக்கோலம் இறைவனை வணங்கிடும் அஞ்சலி ஹஸ்தத்துடனும் நேராக நின்ற கோலமும் முழங்கால் வரை உடுத்திய வஸ்த்திரத்துடனும் கழுத்தில் ருத்ராட்ச மாலையுடனும், தலையில் சிகை யின்றி மழித்த தலையுடனும், ருத்ராட்ச மாலை அணிந்த திருக்கோலமாகும்.

## கருவூர்தேவர்

கொங்கு நாட்டில் கருவூரில் பிறந்ததால் இவருக்கு கருவூர் தேவர் என்று பெயர். இவர் அந்தணர் குலத்தை சேர்ந்தவர். வேதங்களை கற்றவர். சித்திகள் கைவரபெற்றவர். இவர் தஞ்சை பெரிய கோவில் சிவலிங்கத் திற்கு அஷ்டபந்தன மருந்து சாத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவரது சிலை கரூர் பசுபதிஸ்வரர் கோவிலிலும் தஞ்சை பெரிய கோவிலிலும் காணப்படுகிறது.

### உருவ அமைப்பு

பத்மாசனத்தில் அமர்ந்த கோலத்தில் இரண்டு கைகளும் யோக முத்திரையில் அமையபெற்று மடக்கிய முழங்கால் மேல் அமைக்க பெற்று தலையில் ஜடாபாரம் தாங்கி காதுகளில் வளையங்கள் அணிந்து காணப் படுகின்றது. இவரது ஓவியம் ராஜராஜசோழன் அருகே நிற்பது போல தஞ்சை பெரிய கோவிலில் அவர் காலத்திலேயே வரைய பெற்றது குறிப்பிடத் தக்கது. இந்த படத்தை இன்றும் காணலாம்.

## பூந்துருத்தி நம்பி காடவநம்பி

இவர் திருவையாற்றை அடுத்து திருபந்துருத்தியில் பிறந்தார். அந்தணர் குலம். அந்தணர் குலத்தில் பிறந்தவர்கள் மரபாக பெயருக்கு பின்னால் நம்பி என்று சேர்த்துக்கொள்வார்கள். காடவர் என்பது பல்லவர் மரபாகும். இவர் சிறந்த சிவ பக்தர், தேவாரத்தில் இடம் பெறாத சாளரபாணி எனும் புதிய பண்ணில் பாடி இசைத்த பெருமை இவருக்கு உண்டு.

இவரது காலம் 10-ஆம் நூற்றாண்டு உருவ அமைப்பு திருக்கோலம் இடுப்பில் அரை வஸ்திரம், அஞ்சலி ஹஸ்தம், கழுத்தில் ருத்ராட்ச மாலை, காதுகளில் வளையாம். மழித்த தலையில் ருத்ராட்ச மாலை அணியப் பெற்றவர்.

**கண்டராதித்தர்**

இவர் சோழ மரபு, சிதம்பரம் நடராஜர் கோவிலுக்கு பொன் வேய்ந்த பராந்தக சோழனின் இரண்டாவது மகன். இவரது காலம் 10-ஆம் நூற்றாண்டு, சிறந்த சிவ பக்தர். பிற மதங்களை மதித்து போற்றியவர். இவரது மனைவி செம்பியன் மகாதேவி. கண்டராதித்தர் இறந்தவுடன் உடன்கட்டை ஏறாது சைவ சமயத்திற்காக வாழ்ந்தவர். இவரது காலத்திலே தான் திருக்கோவில்களில் செப்பு திருமேனிகள் அதிகமாக வடிக்கப்பட்டு வழங்கப்பட்டன.

**உருவ அமைப்பு**

கண்டராதித்தர் நேராக நின்ற கோலம். இடுப்பில் அரை வஸ்திரம், கூப்பிய கைகள், கழுத்தில் ருத்ராட்ச மாலை, தலையில் பின்னோக்கிய சிகை, ருத்ராட்ச மாலை அணியப்பட்டவர்.

**உருவ அமைப்பு**

செம்பியன் மகாதேவி இடது பக்கம் பங்கம் அமைந்த கோலம், கூப்பிய கைகள், உடலில் முழு வஸ்திரம், அணிந்தவர். காதுகளில் ஆபரணங்கள் அணிந்தவர். தமிழகம் என்று சொல்லக்கூடிய கொண்டை அணிந்தவர். இவரது கற்சிற்ப வடிவம் கீவளூர் அருகே உள்ள செம்பியன் மகாதேவி என்னும் ஊரில் காணப்படுகிறது. இவரது பெயராலேயே ஊர் அமைக்க பெற்றது சிறப்பாகும். இவரது காலம் 10-ஆம் நூற்றாண்டு.

**வேணாட்டடிகள்**

சேர நாட்டுக்கும் தென் பாண்டிக்கும் இடையே உள்ள வேணாட்டில் பிறந்ததால் வேணாட்டடிகளார் என பெயர் பெற்றார். அரசர் குலத்தில் தோன்றிய துறவு பூண்டவர். இவர் பாடிய ஒரே ஒரு பாடல் சிதம்பரம் நடராஜரை பற்றியதாகும்.

**உருவ அமைப்பு**

திரிபங்க கோலம் அஞ்சலி ஹஸ்தம், அரை வஸ்திரம், பின்னோக்கிய சிகை, கழுத்திலும் புஜங்களிலும், தலையிலும் ருத்ராட்ச மாலை அணியப் பட்டவர், திருநீறு பூசியவர்.

**திருவாலி அமுதனார்**

இவர் சீர்காழிக்கு அருகே திருவாலி எனும் இடத்தில் பிறந்தவர். இவரது தாய் தந்தையர்கள் திருமால் மீது அளவற்ற பக்தி கொண்டு இருந்ததால் இவருக்கு திருவாலி அமுதனார் என்று பெயர் சூட்டினர். வைணவ மரபில் பிறந்தாலும் சிவன் மீது பக்தி கொண்டு திருப்பதிகம் பல பாடினார். சிதம்பர நடராஜரை பற்றி பாடியுள்ளார்.

"பவள மால்வரை... படரொலி தறுதிருநீறும்
என மனம் தழல் மெழுகுக்கு ஒக்கின்றதே"

மேற்கண்ட பாடலை ஏழிசை மன்னர் எம்.கே. தியாகராஜபாகவதர் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**உருவ அமைப்பு**

நேராக நின்று திருமேனி, முழு வஸ்திரம், அஞ்சலி ஹஸ்தம், பின்னோக்கிய சிகை, தலை, புஜம், கழுத்து இவைகளில் ருத்ராட்ச மாலை அணியப்பட்டவர்.

**புருடோத்தமநம்பி**

திருமாலின் மறுபெயர் புருஷோத்தமனாகும் "மாசிலா மறை பல ஓதனாவன் புருஷோத்தமன்" என இவர் தம்மை கூறிக்கொள்வதால் இவர் வைணவ அந்தணர் என அறியலாம். இருப்பினும் சிவபெருமான் மீது பக்தி கொண்டார். தில்லை நடராஜபெருமானை வழிபட்டு வந்தார். உருவஅமைப்பு = இடுப்பில் அரைவஸ்திரம், அஞ்சலி ஹஸ்தம், பின்னோக்கிய சிகை, கழுத்து புஜம் சிகையில் ருத்ராட்சம், காதில் வளையம், நெற்றியில் திருநீறு அணிந்த திருக்கோலம்.

**சேதிராயர்**

இவர் சேதி நாட்டை ஆண்ட குறுநிலமன்னர். சுந்தரரின் வளர்ப்பு தந்தையாகிய நரசிங்க முனையரையர் வழிவந்தவர். சிறந்த சிவ பக்தர் நடராஜப் பெருமானை பற்றி திருவிசைப்பா பதிகம் ஒன்று பாடியுள்ளார். இவரது காலம் பன்னிரெண்டாம் நூற்றாண்டு. இவரது திருக்கோலம் நேராக நின்று, இடுப்பில் அரை வஸ்திரத்துடன், கூப்பிய கரத்துடன் பின்னோக்கிய சிகையுடன், திருநீறு அணிந்து உடலில் ருத்ராட்சமாலை அணியப்பட்டவர்.

மேற்கண்ட திருவிசைப்பா ஆசிரியர்களுடைய கற்சிற்ப திருமேனிகள் திருவாவடுதுறை ஆதீனம் கோமுக்தீஸ்வரர் ஆலயத்தில் வழிபாடு செய்யப்பட்டு வருகிறது.

மேலும் கடல் கடந்து மலேசிய நாட்டில் கிளாங் ஸ்ரீசிவன் கோவிலில் செப்பு திருமேனிகளாக சுவாமிமலை குபேரன் சிற்ப கலைக்கூடம் எஸ். கருணாநிதி ஸ்தபதியாரால் மேற்படி திருவாவடுதுறை ஆலயத்தில் உள்ள சிற்பங்களை முன் மாதிரியாக கொண்டு வடிவமைத்து அளித்து தற்சமயம் வழிபாட்டில் இருப்பது குறிப்பிடதக்கது.

திருக்கோவில்களில் அடியார் பெருமக்களின் திருவுருவங்கள் கற்சிற்பமாக இருந்தால் வெளிசுற்று பிரகாரத்தில் தெற்கு அல்லது வடக்கு

நோக்கியவாறும் அமைத்தல் மரபு. உலோக சிற்பமாக இருந்தால் மகா மண்டபத்தில் இரு மருங்கிலும் வடக்கு அல்லது தெற்கு நோக்கியவாறும் அமைக்க வேண்டும். வழிபடுவோர் அடியார் திரு உருவங்களை வணங்கி அதன் பின்னரே கருவறை சிற்பத்தினை வணங்குதல் பூர்ண பலனை தரும். அடியார் சிற்பங்களுக்கு எந்திர பிரதிஷ்டை கிடையாது. திருமேனி வடிவமைத்தாலும் இறைவன் சன்னதியில் எழ செய்து உரிய பதிகங்களை ஓதி கும்பாபிஷேக பிரதிஷ்டை செய்யப்படுதல் வேண்டும். அடியார் பெரு மக்களது ஜன்ம நட்சத்திர தினத்தன்று உரிய பூஜைகள் மேற்கொள்ள வேண்டும். அதுபோல் முக்தி அடைந்த தினத்தன்று குரு பூஜை வழிபாடு மேற்கொள்ள வேண்டும். அக்காலங்களில் சிவனடியார்களுக்கு திருவமுது படைத்தல் வேண்டும்.

# 45. பல்லாண்டு பாடும் மரபு

திரு. ஆர். சுந்தரம், புதுக்கோட்டை.

சைவ வேதமாம் பன்னிரு திருமுறையுள் ஒன்பதாம் திருமுறையாக இடம்பெறுவன திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் ஆகும். திருவிசைப்பா திருமாளிகைத்தேவர் முதல் சேதிராயர் ஈறாக ஒன்பது அருளாளர்களின் அருளிச் செயல்களாகும். இவ்வொன்பதின்மருள் ஒருவராகவும் விளங்கும் 'சேந்தனார்' என்னும் அருளாளரே திருப்பல்லாண்டு என்னும் 13 பாடல் களால் அமைந்த திருப்பதிகத்தையும் அருளிச் செய்தவர். திருக்கோயில் வழிபாட்டில் ஓதப்பெறும் பஞ்சபுராணங்களுள் திருப்பல்லாண்டு நான்காவதாக ஓதப்பெறுவதாகும். பல்லாண்டு பாடும் மரபு பற்றிய கருத்தாய்வாக இக் கட்டுரை அமைகிறது. இதனுள் பல்லாண்டு பாடுதலின் பொருண்மை, பழந்தமிழர் வாழ்வியலுள் இதன் அமைவு, வைணவ நெறியில் பல்லாண்டு பாடும் வகைமை, சேந்தனார் பல்லாண்டின் நுட்பம் என்றவாறு செய்திகள் நிரல்பட அமைக்கப்பெற்றுள்ளன.

### பல்லாண்டு பாடுதலின் பொருண்மை

தற்போது பரவலாக 'வாழ்க வையகம்; வாழ்க வளமுடன்' என்றவாறு வேதாத்திரி மகரிஷி அவர்களின் தாரக மந்திரம் எங்கணும் ஒளிக்கக் காண்கிறோம். இது ஒரு மங்கல மரபு. உள்ளார்ந்த உணர்வோடு நலம் நாடிக் கூறப்படும் நன்மொழி நல்வாழ்த்தாகிறது.

'வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய(து) உயர்வு'

என்று தமிழ் மறையும் உள்ளுணர்வின் உயர் மங்கலத்தை வரையறுக்கிறது. சிவோகம் பாவனை கைவந்த சீலர் எங்கும் சிவமயமாய் உணர்வர்; எனவே 'இந்நிலை இடையீடின்றி நிலைபெற்று வாழ்வதாகுக' என்றவாறு மங்கல வாழ்த்துப் பாடிப்பரவுதல் ஒரு சிவத்தொண்டே ஆகும். நாமும் வாழ நாடும் வாழ, பொங்கும் மங்கலம் எங்கும் தங்குக என்றவாறு நற்றமிழிலும், 'ஜய விஜயீபவ' என்று வடமொழியிலும் கூறுவன இதே பொருண்மையுடையனவே.

### பழந்தமிழர் வாழ்வியலுள் இதன் அமைவு

நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை

என்பது பழந்தமிழர் வாழ்வியலுள் ஒன்றிக் கலந்த உயர் பண்பாடாகும். சுமார் மூவாயிரம் ஆண்டிற்கு முற்பட்டதாகக் கருதப்படும் தொல்காப்பியத்துள்

'வாழ்த்தியல்' என்பதாக இஃது விளக்கப்படுகிறது. தொல்காப்பியம், புறத்திணை இயல் 29-ஆம் நூற்பா "அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்து" என்று இலக்கணம் வகுக்கிறது. இளம்பூரணர் போன்ற உரை காரர்கள். இதனை விரித்து இயன்மொழி, வாழ்த்து, இயன்மொழி வாழ்த்து என மூவகையாக நோக்குவர். இவ்விலக்கணத்தின். இலக்கியமாய் அமையும் புறநானூற்றின் பற்பல பாடல்களில் வாழ்த்திப்பாடும் சீர்மை உய்த்துணரத்தக்கது. எடுத்துக்காட்டாக ஒரு பாடலை நோக்குவோம்.

புறநானூறு 367-ஆம் பாட்டு, ஔவையார் எனும் புலவர் தமிழ் வேந்தர் மூவரையும் ஓரிடத்தே ஒற்றுமைப்பட நோக்கிப் பாடியதாகும். இஃது திணை; பாடாண் திணை துறை: வாழ்த்தியர் என்ற அடிக்குறிப்பு கொண்டது.

இங்கே காட்சிப்படுத்தப்படுபவர் சேரமான் மாவண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற மூவேந்தராவர். அம்மூவரையும் 'வேற்றுமை போற்றாது நீவிர் ஒன்றியிருந்து தமிழ்நாட்டைக் காப்பீராகுக! அயலவர் கால்கொள்ளாமல் ஓம்புவீர் ஆகுக! யாக குண்டத்து முத்தீப்போல நீவிர் ஒளிபெறுக!' என்று பற்பல விழுமங்களை ஔவையார் கூறுவதோடு,

'..................................வானத்து
வயங்கித் தோன்றும் மீனினம் இம்மென
இயங்கும் மாமழை உறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநும் நாளே!'

என்று பல்லாண்டு பாடிப் பாடலை நிறைவு செய்கிறார். அதாவது 'விண்ணில் மின்னும் வீண்மீன்களை விடவும், பெரு முழக்கமிட்டுப் பெய்யும் மழைத்துளிகளை விடவும் மேம்பட்டு விளங்கும் பல்லாண்டு காலம் நீங்கள் பொலிவு பெற்று வாழ்வீராகுக!' என்ற வாழ்த்தியலாக இப்பாடல் நிறைகிறது. இவ்வாறே பொன்னி மணலிற் பல்லாண்டு வாழ்க என்றவாறும் பிறிதொரு பாடலிற் காணலாகும். இவ்வாறு அரசர் புலவர் இடைப்பட்ட தொடர்புகளில் நோக்குகையில் வாழ்த்துதல் மரபு நீண்ட கால வழக்காறுடையதாக அறியமுடிகிறது. ஆனால் இவ்வாழ்த்தியல் மரபு பெரும்பாலும் அரசர், பெருநிலக்கிழார் இவர்களைப் புலவர் வாழ்த்து வதாகும். பழைய அகப்பொருள் மரபு, பக்தி இலக்கியக் காலத்தில் இறைவனை - பரம்பொருளைத் தலைவனாகக் கொண்டு நாயகன் நாயகி பாவப் பாடற்பொருளாகப் பரிணாமம் பெற்றவாறே, வாழ்த்தியல் மரபும், பின்னர் பிரபந்தம் திருமுறை பயின்ற காலத்தே பரமனை ஏற்றிப் போற்றும் பல்லாண்டு மரபாகப் பரிணாமவளர்ச்சி பெற்றுள்ளதாகக் கருதலாம்..

### வைணவ நெறியில் பல்லாண்டு பாடும் வகைமை

நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் அருளிய ஆழ்வார் பன்னிருவருள் காலத்தால் அன்றி, தகவால் முதலாமவராக எண்ணப்படுபவர் பெரியாழ்வார்.

இவரை பெரிய திருவடியின் அம்சபூதராக அவதரித்தவர் என்பர். இவர் அருளியவை திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என்பனவாகும். இவ்விரண்டையும் ஒரு கூறாகவும், இரு கூறாகவும் வைணவச் சான்றோர் வகைப்படுத்துவர். எவ்வாறாயினும் முதலில் திருப்பல்லாண்டே ஓதப் பெறும் மரபு வைணவ நெறியாகும். இதனை 'மங்களாசாசனம்' என்றும் உரைப்பர். மங்களம் = நன்மை. ஆசாசனம் = விரும்புதல் என்று பொருள் விரிப்பர். எம்பெருமானிடம் (திருமாலிடம்) அவனுக்கே நன்மைகளை வேண்டி ஆழ்வார் பாடிய பிரபந்தமாக இதனை உரைகாரர் விளக்குவர். இதில் முதல் பாசுரம் இரண்டு அடிகள்

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு'

என்று அமைந்த குறள்வெண் செந்துறையாகும். அடுத்து அமையும் 12 பாசுரங்கள் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்தவை.

இப்பல்லாண்டு பாய் பெற்ற காலச்சூழல் கீழ்வருமாறு: மதுரையை ஆண்ட ஸ்ரீ வல்லபதேவன் (கி.பி. 740-767) காலத்தே அவனது அறிவிப்பின்படி பரத்துவ நிர்ணயம் செய்து தெளிவிக்க வித்துவான்கள் அழைக்கப்பட்டனர். அப்பொழுது விஷ்ணுசித்தர் என்ற பெயரினராக, ஸ்ரீ வில்லிப்புத்தூரில் பெருமாளுக்குப் பூமாலை புனைந்தேத்தும் பணியினராக அமைந்த இவ்வாழ்வார், பெருமாள் கனவில் உரைத்த வண்ணம் மதுரைக்கு வந்து பாண்டிய மன்னன் அறிவிப்பை ஏற்று பரத்துவ நிர்ணயம் செய்து வென்றார். அப்போது 'பட்டர்பிரான்' என்ற விருது வழங்கப்பெற்று பட்டத்து யானை மீது ஏற்றப்பெற்று, அரச மரியாதை களோடு நகர்வலம் செய்விக்கப்பெற்றார். இந்த அரிய காட்சியைக் காண பெருமாள் பிராட்டியுடன் கருடன் மீதமர்ந்து வானத்தில் தோன்றினார். அனைவரும் எம்பெருமானைத் தரிசிக்கும் பேறு வாய்த்தது. ஆனால் பட்டர்பிரான் ஆகிய பெரியாழ்வார் மனம் 'நல்ல காலத்திலேயே இமண்ணுலகோர் தீங்கு செய்வர்; இக்கலிக்காலத்தில் எம்பெருமான் முகம் காட்டுகிறானே! அவனுக்கு ஏதேனும் தீங்கு (கண்ணேறு) நேருமோ!' என்று பயந்தபடியால், யானை மீதுள்ள மணிகளையே தாளமாகக் கொண்டு வாத்சல்ய பாவமாக திருப்பல்லாண்டு பாடச் செய்தது.

இவ்வாறு பாடப்பட்ட இத்திருப்பல்லாண்டு சேந்தனார் திருப் பல்லாண்டிற்குக் காலத்தால் முந்தியதாகும். இத்திருப்பல்லாண்டில் பெருமாளை மட்டுமின்றி, பிராட்டி, சக்கரம், சங்கு முதலான சேர்ந்த கோலங்களையும் பல்லாண்டு பாடிப் பரவுகிற அமைப்பு உள்ளது. அது மட்டுமல்ல, சேந்தனார் திருப்பல்லாண்டில் 13 பாடல்களும் 'பல்லாண்டு

கூறுதுமே' என்ற ஒரே படித்தான மகுடம் வாய்ந்தவை. பெரியாழ்வாரின் பல்லாண்டில் 'பல்லாண்டு கூறுதுமே', 'பல்லாண்டு கூறுமினே', 'பல்லாண்டு கூறுவனே' என்றவாறு மகுடம் பல முடிவுகளை உடையதாக அமைந்துள்ளன. இதற்குக் காரணம் பெரியாழ்வார் பகவத் சேஷத்துவம் பாகவத சேஷத்துவம் என்ற வைணவக் கோட்பாட்டிற்கிணங்க தம்மோடு ஏனைய அடியாரையும் கூட்டிக்கொண்டு பாடிய நிலையே என்பர் வைணவச் சான்றோர். மேலும் கைவல்யார்த்திகள், ஐஸ்வர்யார்த்திகள், முமுட்சுக்கள் என முத்திறத்தோரும் சேர்ந்து பல்லாண்டு பாடுவதாகவும் ஒரு மரபு கூறுவர். பல்லாண்டு பல்லாண்டு என அடுக்கி அடுக்கிக் கூறுவது, பெருமாள் பக்கல் அமைந்த தீவிர தர பக்தியின் ஆழத்தைப் பிரதிபலிப்பதாகக் கருதுவர்.

## சேந்தனார் பல்லாண்டின் நுட்பம்

சேந்தனார் அருளிய 'திருப்பல்லாண்டு குறித்து திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மைய வெளியீடாகிய 'திருமுறைகளில் சைவசித்தந்தம்' என்னும் நூலில், உரையாசிரியர் 'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்' கு. வைத்தியநாதன் (இயக்குநர்) அவர்கள் கூறுவன வருமாறு:

''இறைவனைப் 'பல்லாண்டு வாழ்க' என்று வாழ்த்துவதால் இப் பதிகம் திருப்பல்லாண்டு எனப்பட்டது. இறைவன் என்றும் உள்ளவன். ஆகலின், அவனை வாழ்த்துவதன் நோக்கம் யாது? வாழ்த்துபவர் வாழ்த்தும் வாழ்த்தினாலாவது, வைபவர்வையும் வசையினாலாவது, அவனுக்கு ஆகப் போவது ஒன்றுமில்லை. சினங்கொண்டவர்; யார் மீது சினம் கொள்கிறார்களோ அவரை வையும்பொழுது, தமது சினத்தை வெளிப் படுத்துகின்றனர். அப்போது அவரது இயல்பு வெளிப்படுகிறது. அதுபோல, சிவபெருமான் மீது அன்பு மீதூர்ந்து நிற்பவர் அந்த அன்பு காரணமாக அவனை வாழ்த்துகிறார்கள். அப்பொழுது அவரது அன்புநிலை வெளிப் படுகிறது. எனவே இறைவனை வாழ்த்துவதற்குக் காரணம், வாழ்த்துபவர் அவரது அன்பின் திறத்தை வெளிப்படுத்துதல் பொருட்டே அன்றி வேறில்லை''.

திருப்பல்லாண்டு குறித்த இவ்விளக்கம் உணர்ந்து போற்றத்தக்கது.

சேந்தனார் திருப்பல்லாண்டு பாடிய சூழல் எனச் சுட்டப்படும் செய்தி வருமாறு :

முன்பொருகால், தில்லைப்பதியிலே மார்கழித் திருவாதிரை திருவிழாவில் மழை பெய்தமையால் திருத்தேர் சேற்றில் அழுந்தி ஓடாது நின்றது. அப்போது, ''சேந்தா தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக''

என்றதோர் அசரீரி எல்லோரும் கேட்கும்படி தோன்றியது. தேர் இழுக்கும் அடியார் குழுவில் நின்ற சேந்தனார்;

**"மண்ணாக தில்லை; வளர்க நம் பத்தர்கள்"**

எனத் தொடங்கும் திருப்பல்லாண்டுப் பதிகத்தை பாடிப் போற்றினார். வடம் பிடிக்காமலே தேர் நிலைக்கு வந்து சேர்ந்தது. இவ்வற்புதத்தைக் கண்டார் அனைவரும் சேந்தனாரின் பேரன்புத் திறத்தைப் போற்றினர். ஆகவே சிவபெருமான் அசரீரியாகி ஆணையிட்டவாறு, அவரது திருவருள் உள்நின்று இயக்கத் திருவாய் மலர்ந்து அருளிச் செய்யப்பட்டது என்பதே இதன் பெருஞ்சிறப்பு என அறியலாம்.

சேந்தனார் பாடல்களில் இடம் பெற்றுள்ள ஒருசில நுண்பொருட் கூறுகளை பட்டியலிடுவோம்.

1. வைணவத் திருப்பல்லாண்டு திருமால், பிராட்டி, சங்கு, சக்கரம் முதலான கோலங்களை விவரித்து வாழ்த்தியதாக ஏற்கனவே அறிந்தோம். ஆனால் சேந்தனார் ஒவ்வோர் பாட்டின் இறுதியிலும் சிவபெருமானைப் பலவாறாகக் குறிப்பிட்டுப் 'பல்லாண்டு கூறுதுமே' என்று ஒரே படித்தான மகுடம் அமையப் பாடியுள்ளார். நுணுகி நோக்குவார்க்கு வேறுபல விழுமம் விளக்கம் பெறும். வளர்க நம் பத்தர்கள் என்று எடுத்த எடுப்பிலேயே சிவனடியார் திருக்கூட்ட வழிபாட்டையும் உடன் நிகழ்த்தி உள்ளார்.

2. 'கொண்டுங் கொடுத்தும் குடி குடி ஈசற்கு ஆட்செய்மின்' என்று கூறுமிடத்து, அவனது திருவருளைக் கைக்கொண்டு, நமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் சிவார்ப்பணம் என்றவாறு ஈசனுக்கு அடிமையாகக் கொடுத்தல், நமது குடும்பத்தோடு இச்சைவ நன்னெறி தலைப்படுதல் முதலியன குறிக்கப் பெறுகிறது.

   'பல்லாண்டு என்னும் பதங் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே' என்ற கூற்றில் சிவபரத்துவச் சீர்மை சிந்திக்கப்படுகிறது.

3. 'பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே' என்ற பாட்டில் சண்டேசுர நாயனாரின் வரலாறு சுட்டப் பெறுகிறது. சிவபெருமானிடத்துப் பொதுநீக்கிப் பேரன்பு செலுத்துபவர், என்ன தீவினைகளைச் செய்தாலும் அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது ஈசன் அவர்கட்கு பெரும் பதவி வழங்குவன் என்ற பெற்றி 'தாதையைத் தாளற வீசிய சண்டேசுரரர்' வாயிலாக ஈண்டு வரிவு பெறுகிறது.

4. 'வழி வழி ஆளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழவடியார்' என்ற தொடரின் மூலம் சிவப்பேறாம் தவப்பேறு தாய் தந்தை கால் வழியே தொன்றுதொட்டு இடையீடின்றி நிகழலாகும் சீர்த்தி சிந்திக்கப்படுகிறது.
5. "பல்லாண்டு கூறுதுமே" என்ற தொடர் சிவனடியார் திருக் கூட்டத்தோடு வழிபாடு நிகழ்த்தும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை என்பதே இதன் சிறப்பு! குரு, லிங்க, சங்கமம் என்ற சைவநெறி ஈண்டு கருதத்தக்கது.
6. 'ஒன்றவன் தானே' என்று திருமூலர் தெளிவுபடுத்திய வண்ணம் 'எந்தை எந்தாய்' என்ற இறுதிப்பாடல் சிவபரம் பொருளே அனைத்துமாய் விளங்குவதை சிலாகிக்கிறது.

வாழ்த்துதல் என்பது அன்பின் வெளிப்பாடே! தற்காலம் சில சுவரொட்டிகளில் 'வாழ்த்த வயதில்லை; வணங்குகிறேன் / வணங்கு கிறோம்' என்றவாறு பல இடங்களில் காண்கிறோம். இவ்வாறு கூறுதல் அறியாமையே. வாழ்த்துதல் என்பதற்கு வயதோ பிறவோ தடையில்லை. அஃது அன்பின் வெளிப்பாடே. ஆதலால் அன்பு உள்ளம் ஒன்றே வாழ்த்துதல் செயல்முறைக்கு அருகதை உடையது என்பதை நினைவில் கொள்வோமாக!

**அன்பின் வழியது உயிர்நிலை!**

**அன்பே சிவம்!**

**அன்பே பல்லாண்டு பாடும் பழ மரபு!**

# 46. திருமூலர் தமிழ் பக்திச் செறிவைக் காட்டுவது

திருமதி இரா. சுந்தரி, சென்னை.

**திருமூலரின் சிறப்பு**

'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் வாயாரப் புகழ்ந்து பாராட்டப்பட்டத் திருமூலர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். மக்கள் சிந்தித்துப் பார்க்கும் வகையில் அவர்களுடைய எண்ணத்தைத் தூண்டி, படிப்படியாக உயர்நிலைக்கு அழைத்துச் செல்லும் சித்தர்களில் ஒருவர். உடம்பு அழித்திருமாயின் உயிர் அடைய வேண்டிய மெய்ஞ்ஞானப் பயனை அடைய முடியாது. ஆதலின் உடம்பை வளர்க்கும் உபாயத்தை அறிந்து உடம்பை வளர்க்க வேண்டும் என்ற சிறந்த உண்மையை உலகிற்கு ஓதிய பெரியர். உலக இன்பங்களை நெறியிட்ட முறையில் துய்த்துக் கொண்டே பேரின்பம் பெறமுடியும் என்பது திருமூலரின் உள்ளக்கிடக்கை ஆகும்.

**திருமந்திரச் சிறப்பு**

''நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'' (தொல். 1434)

என்கிறது தொல்காப்பியம்.

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்'' (கு. 28)

என்றார் வள்ளுவர்.

நிறைமொழி மாந்தராகிய திருமூலர் திருவாய் மலர்ந்த மந்திரமே திருமந்திரம் ஆகும்.

''மூலன் உரை செய்த மூவாயிரந் தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது'' (தி.ம.29)

சைவத் திருமுறைகளில் ஒன்றாக விளங்கும் திருமந்திரம் மூவாயிரம் பாடல்களைத் தன்னகத்தே கொண்டது. பாடல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மந்திரமாக மலர்ந்துள்ளது. திருமந்திரம் தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் விளங்குவது மட்டுமன்றி வாழ்க்கை நூலாகவும் விளங்கும் பெருமையுடையது. இறையியல் நெறியையும் உலகியல் நெறியையும்

இணைத்து நடத்தும் எளிய வாழ்க்கை நெறியை உணர்த்தும் சிறப்புடையது திருமந்திரமாகும்.

**இறைவனின் ஒப்பற்றத் தன்மை**

சிவபெருமானோடு ஒப்பாகும் தெய்வம் எங்குத் தேடினும் இல்லை. அச்சிவனுக்கு நிகரானவர் யாவரும் இலர். எல்லா உலகங்கட்கும் அப்பாற்பட்டவன். அவன் அன்பர்களின் மனத்தாமரையில் அமர்ந்திருப்பான்.

**"சிவனொடொக் கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனொடொப் பார் இங்கு யாவரும் இல்லை"** (திரு. 4)

என்றும்,

**"அவன் அன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை"** (திரு. 3)

இறைவனை விடுத்துச் செய்யக்கூடிய அரிய தவங்கள் எவையும் இல்லை. என்றும் மேலும்,

**"ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை**
**ஒண்சுடர் ஆகிஎன் உள்ளத் தருக்கின்ற**
**கண்சுட சோன்உல கேழும் கடந்தஅத்**
**தண்சுடர் ஓமத் தலைவனும் ஆமே"** (திரு.92)

ஒளி பொருந்திய சுடராகி இருப்பவனும், அழிவில்லாத தலைவனும் கண் ஒளி போன்றவனும் ஏழு உலகங்களையும் கடந்த குளிர்ந்த சுடர் வடிவினன் ஆக இருப்பவனும் ஆகிய இறைவனே யாகத் தலைவனாவன் என்று கூறுவதன் மூலம் சிவபெருமானே ஒப்பற்ற தெய்வம் என்றும் ஏழ் உலகங்களையும் கடந்தவன் என்றும் அழிவில்லாத தலைவன் என்றும் மேலும் அன்பர்களின் மனத்தாமரையில் அமர்ந்திருப்பவன் என்றும் குறிப்பிடுகிறார்.

**இறைவனின் இயல்பு**

**"பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்**
**இறப்பிலி யாவர்க்கும் இன்பன் அருளும்"** (திரு. 148)

இறைவன் என்றும் பிறவாதவன். பேரருளாளனும் அவனே ஆவன். இறப்பும் இல்லாதவன். எத்தகைய உயிர்கட்கும் இன்பம் அருள்பவன். அன்பர்களை விட்டு நீங்காதவன் என்று இறைவனின் இயல்புகளைப் போற்றுகிறார் திருமூலர்.

**அன்பே சிவம்**

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே"** (திரு. 257)

உண்மை அறிவு இல்லாதவர் அன்பு வேறு சிவம் வேறு என்று பிரித்து இரண்டாகக் கூறுவர். அன்புதான் சிவமாக விளங்குவது என்று யாரும் அறிந்திலர். அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின் அன்பே சிவமாய் அமர்ந்திருந்தார் என்று கூறுவதன் மூலம் இறைவன் அன்பின் வடிவமாய் விளங்குவதை யாவருக்கும் தெளிவுப்படுத்துகிறார்.

**அன்பர்க்கு எளியவன்**

இறைவன் அணுகுதற்கு அரியவன் அல்லன். அன்புடையார்க்கு அடியவர்க்கு உண்மைப் பொருளாக இருப்பவன். அன்புடன் அவர்கள் கண்முன் நின்று அவர்களின் தன்மையை உணர்ந்து அருள் செய்பவன் இறைவன் என்பதை

"அரியன்என் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே" (திரு. 334)

என்று குறிப்பிடுகிறார்.

**இறைவனின் வீரம்**

இறைவனின் வீரம் மெச்சத் தகுந்ததாகும். இறைவன் உலகம் அழியும் காலத்தும் அழியாது இருப்பவன் அதாவது அழிவில்லாத தலைவன் ஆவான்.

அத்தகைய இறைவன் தேவர்களின் எலும்பையும் மண்டை ஓட்டையும் ஏந்தி நிற்கிறான். இதனால் இறைவன் வீரருள் வீரனாக விளங்குகிறான்.

**உலகின் தலைவன்**

இறைவன் எல்லாத் திசைகளிலும் வியாபித்து நிற்கிறான் உடலாகவும் உயிராகவும் பொருந்தி உடலின் தத்துவத்திலும் உயிரின் தத்துவத்திலும் விளங்குகிறான். அவனே கடலாகவும் மலையாகவும் இருப்பதோடு உலகின் தலைவனாக விளங்குவதை

"தானே உலகில் தலைவனும் ஆமே" (திரு. 399)

என்று குறிப்பிடுகிறார்.

**எங்கும் தானாகி இருப்பவன் இறைவன்**

இறைவன் உடலாகவும், உயிராகவும், உலகமாகவும், கடலாகவும், கரிய மேகமாகவும், நீரைச் சொரியும் ஆகாயமாகவும் இவற்றின் உள் உறைபவனாகவும் அழியாதவனாகவும், எங்கும் நிறைந்து விளங்குவதை

"... எங்கும் தான் ஆகி
அடையார் பெருவழி அண்ணல் நின்றானே" (திரு. 400)

என்கிறார்.

**இறைவன் ஒருவனே!**

பிறப்பால் எல்லோரும் ஒன்றே. ஆகவே குலம் பல இல்லை அதுபோல் தெய்வங்களும் பல இல்லை. தெய்வம் ஒன்றே ஆகும். ஆகையால் உங்கள் பூத உடல் மறைந்தாலும் புகழ் உடல் என்றும் நிலைத்திருக்க நல்லனவற்றைச் சிந்தித்து இறைவனை உள்ளத்தில் கொண்டு உய்ய வேண்டும் என்பதை

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
........ ........ ........ ........
சென்றே புகுங்கதி இல்லைநும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைத் துய்மினே" (திரு.2066)

என்று கூறுகிறார்.

**இறைவன் பக்தர்களுக்கு அருள் வழங்கும் தன்மை**

சோதியால் விளங்கும் இறைவனைச் சித்திகளை உடையவர் என்றும் ஆராய்ச்சியினால் அறிந்து விட முடியாது. ஆனால் பக்தியுடன் தன்னை வணங்கும் அடியார்க்கு வீடுபேற்றை அளித்து அவர்கள் முன் விளங்கித் தோன்றுவதை

"சித்தர்கள் என்றும் தெரிந்த றிவார் இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார் தொடி
முக்தி கொடுத்தவர் முன்புநின் றானே" (திரு. 271)

என்கிறார்.

**இறைவனை வழிபடும் முறை**

இறைவனை அன்புடன் வழிபடுவதே சிவ பூசை ஆகும். இதனை திருமூலர்

"செயிற் கடை நேசம் சிவபூசை ஆமே" (திரு. 1417)

என்கிறார்.

மேலும் உயிருள்ள போதே இறைவனது திருவடியை ஏத்தாதவர் உயிர் விரியும் போது அறிய மாட்டார் என்று கூறுவதன் மூலம் உயிருள்ள போதே இறைவனைப் போற்றிப் புகழ வேண்டுமென்கிறார்.

**இறைவனை அடையும் வழி**

எண்ணாயிரம் ஆண்டுகள் யோகம் பயின்றாலும் சோதியாய் விளங்கும் இறைவனைக் கண்ணாரக் கண்டவர் யாருமில்லை. உள்ளத்தில் ஒளி பொருந்தும் படி காண்பவருக்கே கண்ணாடி போல இறைவன் கலந்து நிற்பதை

"உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினாள்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே" (திரு. 583)

என்று கூறுவதன் மூலம் உள்ளத்தினுள்ளே ஒளி பெற நோக்குபவர்க்கே இறைவனைக் காணமுடியும் என்கிறார் மேலும்.

மேலும், இறைவனைக் காணவிரும்பும் அடியவரே அவனுக்கு இனியராக இறைவன் இருந்த இடத்தை அறிந்தவர் ஆவார் என்கிறார்.

**அடியார்க்கு உதவுதல்**

நடமாடும் அடியார்கட்கு நாம் ஒன்று கொடுத்தால் அது படம் ஆடும் மாடக் கோயில் இருக்கும் இறைவனைச் சாரும் என்பதை

"நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே" (திரு. 182)

என்று கூறுவதன் மூலம் 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்கிறார்.

**இறைவனின் இணையடி**

கொலை, களவு, கள், காமம், பொய்கூறல் ஆகியவை பஞ்சமா பாதகங்கள் எனப்படும். இவற்றை நீக்கி அழிவில்லாத தலைவனாகிய சிவபெருமானின் திருவடிகளை அடைந்து இன்பம் உற்றவர்கட்கு நரகத்துன்பம் இல்லை என்று கூறுவதன் மூலம் இறைவனின் திருவடியே ஞானனந்தத்தில் அழுந்தி இருக்கச் செய்யும் என்கிறார்.

**தூய சைவர்**

விபூதி உருத்திராக்கம் அணியும் வேடத்தில் உள்ள பற்றையும் விட்டு இறைவனிடத்தை விரும்பி அடைத்து, ஆடம்பரம் இல்லாமல் ஆசையாகிய பந்தத்தை நீக்கி, துன்பத்தோடு கூடிய பாசமும், ஆன்ம அறிவும் கெடும்படி அடித்துத் தொலைக்கும் சிவஞானம் பெற்றவரே சுத்த சைவர் ஆவார்.

**முப்பொருள் தன்மை**

பதி-சிவம் பசு-ஆன்மா பாசம் - ஆன்மாவை என்றும் பற்றி நிற்கும் உலக இன்பமும் அதனால் வரும் பாவ புண்ணிய பந்தங்களும் நிற்க மாட்டா என்று கூறுவதன் மூலம். முப்பொருள் உண்மையாம் சைவ சித்தாந்தத்தைத் தெளிவுறுத்துகிறார்.

**மும்மல எரிப்பு**

முப்புரம் என்பன மூன்று கோட்டைகள் அல்ல. அவை ஆணவம், கன்மம், மாயை, மூன்று கோட்டைகள் அல்ல. அவை ஆணவம், கன்மம், மாயை ஆகிய இவற்றின் காரியமாய் அமைந்தவை. இறைவன் அந்த மும்மலமாகிய கோட்டையை அழித்தான் என்றும் இதனை யாரும் அறிந்திலர் என்பதை,

''முப்புரம் ஆவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார் அறிவாரே'' (திரு.329)

என்கிறார்.

**திருமந்திர பயன்**

''யான் பெற்ற இன்பம் பெறுக இக்வையகம்'' (திரு.147)

என்று கூறுவதன் மூலம் திருமூலர் தாம் பேரின்பத்தைப் பெற்றதாகவும் அதை இந்த வையகமும் பெறவேண்டும் என்று எண்ணுகிறார். மேலும் அந்தப் பேரின்பத்தை பெற வழிமுறையையும் கூறுகிறார். அதாவது திருமந்திர நூலை உணர்வுடன் பற்றிக் கொண்டால் இவ்வையத்தாருக்கும் அந்தப் பேரின்பம் தலைப்படும் என்று கூறி நூலின் பயனைத் தெளிவுறுத்துகிறார்.

இறைவன் உலகின் தலைவனாகவும், எல்லா உயிர்க்கும் அப்பாற் பட்டவனாகவும், அன்பின் வடிவமாகவும், எங்கும் நிறைந்திருப்பவனாகவும் விளங்குகிறான்.

அழிவில்லாத தலைவனாகவும் ஏழு உலகங்களை கடந்தவனாகவும் எல்லா உயிர்க்கும் இன்பம் நல்கும் பேருருளானாகவும் அன்பர்க்கு எளியனாகவும் காட்சியளிக்கிறான்.

அன்புடன் வழிபடுவதே சிவ பூசை என்றும் பக்தியுடன் தன்னை வணங்குபவர்கே அருள் வழங்கும் தன்மையுடையவன் என்பதை திருமந்திர பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

திருமூலர் இயற்றிய திருமந்திர பாடல்கள் மூலம் பக்திச் சுவை பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுவதைக் காணலாம்.

# 47. திருமந்திரம் அமைப்பும், சிறப்பும்

திரு. எம். சுப்பிரமணியன், தூத்துக்குடி.

சைவத்திருமுறைகள் பன்னிரண்டும் முருகவேளின் பன்னிருகண்கள் போலவும், பன்னிரு திருக்கைகள் போலவும், தம்மை நாடிப் போற்றும் உயிர்களுக்கு ஆக்கந்தர வல்லன இப்பன்னிரண்டு திருமுறைகளுள் பத்தாவதாக நிலை பெறுவது திருமூலநாயனார் திருவாய் மலர்ந்த 'திருமந்திரம்' என்னும் உயரிய மந்திர நூல். இறைவனைப் பற்றித் தமிழில் பாடுவதற்காகவே தன்னை இறைவன் படைத்ததாகத் திருமூலர் குறிப்பிடுவதனால் (திருமந்திரம்-81) இறைக்கோட்பாடுகள் பற்றி விவரிக்கும் தமிழ் நூல்களில் திருமந்திரத்திற்கு முதன்மைச் சிறப்புண்டு. இந்நூலில் சைவ சமயத் தத்துவக் கருத்துக்கள் மட்டுமின்றி பிற சமய தத்துவக் கோட்பாடுகளும் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் அமைப்பு, சிறப்புக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அமைப்பு**

நூல் முகப்பில் கடவுள் வாழ்த்து, நுதலிய பொருள், குரு பாரம்பரியம், அவையடக்கம், நூலின் அளவும் பயனும் முதலிய பொருண்மைகள் விளக்கப்பட்டுள்ளன.

'ஒன்றவன்தான் என எடுத்து' எனச் சேக்கிழார் தரும் குறிப்பால் (6) இந்நூலின் முதற்பாடல் அதுவே யாமெனத் தெரிகிறது. 'ஐந்து கரத்தனை' எனத் தொடங்கும் மூத்த பிள்ளையாரைப் பற்றிய பாடல் ஆசிரியர் திருவாக்கன்றாம்.

**பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றதின்**
**வேரறியாமை விளம்புகின்றேனே** (7)

என வரும் அவையடக்கப் பாடலால் நுவலப்படும் பொருள் யாதாயினும் அதனை ஆழமாகவும் முழுமையாகவும் கூறவேண்டுமெனத் தெரிகிறது. திருமந்திரம் காரணாகமம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் ஒன்பது. ஆகமங்களின் சாரமாகத் திகழ்வது ஒன்பது ஆகமங்களையும் ஒன்பது தந்திரங்களாகக் கொண்டுள்ளது.

முதல் தந்திரம் நிலையாமை கூறுமுகத்தால் ஞானம் பெற அறம் உணர்த்துகிறது. இரண்டாம் தந்திரம் புராணங்களின் வழியே சிவபராக்கிர

மங்களையும் அவர்தம் புகழையும் பேசுகிறது. மூன்றாம் தந்திரம் பெருமானை அடையும் யோக சாதனங்களைக் குறிப்பிடுகிறது. நான்காம் தந்திரம் மந்திர, யந்திர வழிபாட்டு முறைகளை விளக்குகிறது. ஐந்தாம் தந்திரம் சைவத்தின் பிரிவுகளையும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளையும் தெரிவிக்கிறது. ஆறாம் தந்திரம் சிவமே குருவாக நின்று அருள் புரிவதையும் சற்குரு கிடைப்பது அவரவர் தவத்தின் பயனாலாகும் என்பதையும் உணர்த்துகிறது. ஏழாம் தந்திரம் அண்டமும், பிண்டமும் இலிங்க உருவாய் உள்ளதையும், சிவபூசை, குருபூசை செய்யவேண்டிய அவசியத்தையும் அறிவிக்கிறது. எட்டாம் தந்திரம் உயிர் எடுக்கும் உடல் பற்றிய அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமயகோசம் பற்றிய விளக்கங்களைக் கூறுகிறது. ஒன்பதாம் தந்திரம் அகர, உகர, மகரமாகிய ஓங்காரப் பிரணவமே எல்லாவற்றிற்கும் மூலம் என்பதையும், கால பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம் முதலிய ஐந்தெழுத்து உண்மை களையும் ஐந்தொழில் நடனத்தையும் சிறப்புற விளக்குகிறது.

**சிறப்பு**

திருமூலருக்கு முன் யாரும் கூறாத பல அரிய கருத்துக்களும் அமைப்பும் திருமந்திரத்தில் உள்ளன. அவை

1. புராணங்களின் உட்பொருளைக் கூறல்
2. அட்டாங்க யோகம்
3. மந்திரம், அந்திரம், யந்திரம், சக்கரப்பேறு
4. நெறி, நிலை, மார்க்கம்
5. பஞ்சாக்கிர வகைகள்
6. சூன்ய சம்பாஷணை
7. உடலோம்பல்
8. கலி விருத்தம்
9. சித்தாந்தம் என்ற சொல்

என்பன. இவையே திருமூலர் முதலில் இலக்கியத்தில் பதிவு செய்தவை.

சித்தாந்தம் என்ற சொல்லை முதன் முதலில் கையாண்டவர் திருமூலரே.

கலி விருத்தம் என்ற நான்கு சீரடி நான்கு கொண்ட கலிவகை யாப்பினை முதலில் கையாண்டவர் திருமூலரே. இதனால் விபுலானந்தர் யாழ் நூலில் கலி விருத்தத்தைத் திருமந்திரயாப்பு என்றே கூறுகிறார்.

**உடலோம்பல்**

உடலினைத் திருமூலருக்கு முன் உள்ள இலக்கியங்கள் நிலையில்லாதது. அழியக்கூடியது உப்பிட்ட பாண்டம் வரையோட்டுக்கும் ஆகாது. கால்காசுக்கும் ஆகாது என்றே கூறுகின்றன.

''வினையின் வந்தது வினைக்கும் விளைவாயது
புனைவன நீக்கில் புலால் புறந்திடுவது
மூப்பு விழிவு உடையது தீப்பிணை இருக்கை
பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்
புற்றடங்கு அரவின் செற்றச் சேக்கை
அவலக்கவலை கையாறு அழுங்கல்
மக்கள் யாக்கை இது என உணர்ந்து
மிக்கோய் இதனைப் புறம் மறீ இப்பாராய்''

என்கிறது மணிமேகலை.

ஆனால், திருமூலர் பொய்யான உடம்பைக் கருவியாக வைத்து மெய்ப்பொருளை அடையலாம். எனவே உடம்பைப் பாதுகாக்க வேண்டும் என்கிறார்.

''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''

''உடம்பை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பை யான் இருந்து ஓம்புகின்றேனே''

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனந்தும் காளா மணி விளக்கே''

என்கிறார் திருமூலர்.

**சூன்ய சம்பாஷணை**

சூன்ய சம்பாஷணை என்பது மறைவாகப் பேசுவது ஞானப் பொருளை மறைத்துப் பேசும் கூற்று. இதனை முதன் முதலில் கையாண்ட திருமூலர். ஒன்பதாம் தந்திரத்தில் எழுபது பாடல்களில் சூன்ய சம்பாஷணையை அமைத்துள்ளார்.

''வழுதலை வித்திட பாகல் முளைத்தது
புழுதியைக் கிண்டினேன் பூசணி பூத்தது

தொழுது கொண்டோடின தோட்டக்குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக்கனியே"

ஞானசோதனை என்ற கத்திரி விதையை விதைக்க திருவருள் விளக்கமாம் பாகல் முளைத்தது. தத்துவ சோதனையாம் ஆராய்ச்சியைச் செய்ய வைராக்கியமாம் பூசணி பூத்தது. உடம்பாகிய தோட்டத்தில் இந்திரியங்கள் ஓட ஆன்ம லாபமாகிய சிவப்பேறு கிட்டியது என்று உட்பொருள் அமைகிறது.

"பட்டிப்பசுக்கள் இருபத்து நான்குற
குட்டிப்பசுக்கள் ஓர் ஏழ்உள ஐந்துள
குட்டிப்பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப்பசுவே பனவற்கு வாய்த்ததே"

என்பதில் கள்ளத்தனமாய்த் திரியும் மலட்டுப் பசுக்கள் இருப்பத்து நான்கு ஆன்ம தத்துவங்கள், குட்டிப்பசுக்கள் என்பது ஏழு வித்தியா தத்துவங் களும், ஐந்து சிவ தத்துவங்களும் ஆகும். ஏழு உயிர்க்கு உதவுவன. சிவ தத்துவங்கள் ஐந்து அவற்றை இயக்குவன. ஆனால் ஆன்ம தத்துவங்களே ஈர்ப்பனவாக இருக்கும் என்பது பெறப்படுகிறது.

**பஞ்சாக்கிரம் (ஐந்தெழுத்து)**

பஞ்சாக்கிரத்தை முதன் முதலாகப் பலவகைகளாக வகுத்தவர் திருமூலர். பின்னால் சம்பந்தர் நமசிவா பதிகம் இரண்டும், அப்பர் ஒரு பதிகமும், சுந்தரர் ஒரு பதிகமும் பாடியுள்ளனர் மாணிக்க வாசகர், நமச்சிவாய என்று திருவாசகத்தைத் தொடங்கியுள்ளார்.

**பஞ்சாக்கரத்தின் பகுப்புகள்**

| | |
|---|---|
| நமசிவாய | - தூலபஞ்சாக்கிரம் (பருமை ஐந்தெழுத்து) |
| சிவாயநம | - ஆக்குமபஞ்சாக்கிரம் (நுண்மை ஐந்தெழுத்து) |
| சிவாய சிவ | - அதி சூக்குமம் (மீ நுண்மை) |
| சிவசிவ | - காரணம் (முதல்) |
| சிவ | - மகாகாரணம் (மா முதல்) |
| சி | - முக்திபஞ்சாக்கிரம் (வீடுபேற்று ஐந்தெழுத்து) |

மேலும், அசபை என்பது செபிக்கப்படாமல் பிராணனோடு சேர்ந்து இயங்கும் மந்திரம். அதுவே ஓம் என்பது இருமூன்று எழுத்து (ஓம் பஞ்சாக்கிரம்)

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளையும், சகமார்க்கம், சன்மார்க்கம், சத்புத்ர மார்க்கம், தாசமார்க்கம் என்ற நான்கு மார்க்கங்களையும், சலோக சாமீப, சாரூப சாயுச்சியங்களாகிய நான்கு நிலைகளையும் விளக்குகிறார் திருமூலர்.

**அட்டாங்க யோகம்**

> **''இயமம் நியமமே எண்ணிலா ஆதனம்**
> **நயமுறு பிரணயாமம் பிரத்தியாகாரம்**
> **சயமிகு தாரணை தியானம் சமாதி**
> **அயமுறு அட்டாங்கமாவது ஆமே''**

என்று எட்டுவகை யோக நிலைகளைக் கூறுகிறார் திருமூலர்.

| | |
|---|---|
| இயமம் | - தீயனவற்றைச் செய்யாதொழில் (தீ தகற்றல்) |
| நியமம் | - நல்லனவற்றையே செய்தல் (நன்றாற்றல்) |
| ஆதனம் | - இருக்கை (ஆசனம்) |
| பிராணாயாமம் | - (பிராணனைக் கட்டுப்படுத்தல் (வளிநிலை) |
| பிரத்யாகாரம் | - மனதை உள்ளே நிறுத்திப் பழகல் (தொகை நிலை) |
| தாரணை | - மனதை நிறுத்தல் (பொறை நிலை) |
| தியானம் | - நினைந்திருத்தல் (நினைப்பு) |
| சமாதி | - ஒன்றாகக் கலத்தல் (நொசிப்பு) |

அட்டாங்க யோகம் என்ற யோக உறுப்புகளை முதன் முதலாக இலக்கியத்தில் பதிவு செய்தவர் திருமூலரே.

**புராணங்களின் உட்பொருள்**

புராணங்கள், குறியீட்டின் வழி பொருளையும் (இறை) சீவன் களின் தன்மை, கடமைகளையும், மல ஒடுக்கங்களையும், உணர்த்துவன.

இறைவனின் தாய்மையுணர்வு, கருணை தண்டித்து அருளல், மலநீக்கம் போன்றவைகளை உட்பொருளாகக் கொண்டவை புராணங்கள்.

> **''அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்**
> **முப்புரம் செற்றனன் என்பர் மூடர்கள்**
> **முப்புரமாவது மும்மலகாரியும்**
> **அப்புரம் எய்தமை யாரறிவாரே''**

என்னும் திருமந்திரத்தில் முப்புரம் என்பது மும்மலங்கள் என்று குறிக்கப்பெற்றுள்ளது.

அட்டவீரட்ட செயல்களின் உட்பொருள், அறியாமை இருளாகிய அந்தகன் போன்றவற்றை அழித்து அருள் செய்வதே. இவ்வாறு, இரண்டாவது தந்திரத்தின் தொடக்கத்தில் புராணங்களின் உட்பொருள்களை விளக்குகிறார் திருமூலர்.

திருமூலர், கடமை, அன்பு, தொண்டு, ஆகியவற்றை வலியுறுத்தி இவற்றின் வாயிலாகப் படிப்படியாக இறையனுபவத்தைப் பெற்முடியும் என்கிறார். ஆக அன்பு நெறியே கடவுள் நெறி என்பது திருமந்திரத்தில் ஊடாடிக் கிடக்கும் நெறி.

# 48. திருவிசைப்பா தலங்கள்

புலவர் கோ. சுப்பிரமணியனார், திருவையாறு.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய சிவபரம் பொருளும், செந்தமிழும் ஒன்றே - சிவத்திற்குரிய ஐம்பேராற்றலும் நம் அருந்தமிழுக்கும் உண்டு. சிவத்தின் வடிவாகத் திகழும் தமிழ்மறையாம் திருமுறைகள் பன்னிரண்டாகத் தொகுக்கப் பெற்றுள்ளன - அவற்றுள் ஒன்பதாம் திருமுறையாகப் போற்றப் பெறுவது திருவிசைப்பா - திருப்பல்லாண்டாகும். திருவிசைப்பா வினை யார் - யார் எவ்வெத்தலங்களில் என்ன பதிகத்தை எவ்விசையில் எப்படிப் பாடியுள்ளனர் என்ற குறிப்பினையும் தலச் சிறப்பினை விளக்கத்துடனும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திருவிசைப்பா நூல்விளக்கம்**

திரு+இசை+பா = அழகிய இசைப்பாடலால் இறைவனைத் துதிக்கும் நூல் கண்டாரால் விரும்பப்படும் தெய்வத்தின் புகழைப்பாடும் பாமாலை எனவும் பொருள் பெறும். தமிழுக்கே உரிய முத்தமிழில் - (இயல், இசை, நாடகம்) நடுவணதாகிய இசையினால் சிவபரம் பொருளைப் பாடிப்பரவும் சிறப்புடையது. மூவர் முதலிகளாற் பாடப்பெற்ற தேவாரங்கள் பண் அமைதியுடன் அமைந்தது போன்று - திருவிசைப்பாப் பாடல்கள் யாவும் பண்களின் - இசை வடிவில் அமைந்தனவே.

**அமைப்புமுறை**

ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாவின் ஆசிரியர்களும் ஒன்பதின் மராவர். அவர்கள் 1. திருமாளிகைத்தேவர், 2. சேந்தனார், 3. கருவூர்த்தேவர், 4. பூந்துருத்தி நம்பிகாட நம்பி, 5. கண்டராதித்தர், 6. வேணாட்டடிகள், 7. திருவாலியமுதனார், 8. புருடோத்தம நம்பி, 9. சேதிராயர் என்போராவர். இவர்கள் பாடிய பதிகங்கள் 28 உடன் சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு தனியாக ஒருபதிகமும் சேர்ந்து ஆக 29 பதிகங்களுக்கும் உள்ள மொத்த பாடல்கள் 301 ஆகும்.

திருவிசைப்பாப்பதிகம் ஒவ்வொன்றுக்கும் "பண்" வரையறுக்கப் பெற்றுள்ளது. அப்பண்களாவன பஞ்சமப்பண், காந்தாரப்பண், புற நீர்மைப் பண், சாளரபாணிப்பண், நட்டராகப்பண், இந்தளப்பண் என்னும் ஆறு பண்களும் திருவிசைப்பாவில் அமைந்துள்ளன. "சாளரபாணி" என்ற பண் ஒன்று மட்டும் தேவாரங்களில் இல்லாத பண்ணாகும்.

## திருவிசைப்பாத்தலங்கள்

சிவவழிபாட்டிற்குரிய தலங்களில் சிலவற்றைத் தொகுப்புத் தலங்களாகக் கூறுவது மரபு. சப்தவிடங்கத் தலங்கள், அட்டவீரட்டத்தலங்கள், நவக்கிரகத்தலங்கள் என்பது போல பாடல் பெற்ற தேவாரத்தலங்கள், திருவாசகத் தலங்கள், திருப்புகழ்த்தலங்கள், எனக்குறிப்பிடுவதுண்டு. அவற்றில் ஒன்றுதான் திருவிசைப்பாத் தலங்கள் என்பதுமாகும். எனவே திருவிசைப்பாத்தலங்களில் மேலான முதன்மையான உயர்ந்ததலமாக உலகினரால் போற்றப்பெறுவது சிதம்பரம் எனும் கோயில் தலமாகும்.

## 1. சிதம்பரம் கோயில்

சைவமரபில் ''கோயில்'' என்று சொன்னாலே அது சிதம்பரத்தை மட்டுமே குறிக்கும் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றனாலும் சிறப்புற்றது. தலம் என்றால் தில்லை சிற்றம்பலம் தீர்த்தம் - சிவகங்கை மூர்த்தி - அம்பலக் கூத்தன் இம்மூன்றும் முதன்மையானவை என்கிறார் குமரகுருபரர்.

**''தீர்த்தம் என்பது சிவகங்கையே**
**மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே**
**ஏத்தரும் தலம் எழில் புலியூரே''**

என்பது அவர்தம் அருள்வாக்காகும்.

மந்திரங்களில் தலையாயது திருவைந்தெழுத்து ''ஓம்'' சிவாய நம நடராஜரைச் சுற்றி அமைந்த பிரபை ஓம் என்பதைக் காட்டுவதாகும். நடராஜர் பஞ்சாட்சர வடிவமாக இருக்கிறார் - கூத்தப்பெருமானின் உடுக்கையில் சிகமும், வீசிய கரத்தில் வக்ர அபயத்தி யகரமும், அழலில் நகரமும் ஊன்றிய திருவடியில் மகரமும் இருக்க ஓங்கார திருவாசியின் நடுவர் நிறை சுடராக பெருமான் நடனமாடுகிறார்.

வெளிநாட்டினரால் பெரிதும் விரும்பி வரவேற்கும் திருவுருவம் நடராசப் பெருமான் திருவுருவம், அவர் ஆட, உலகம் இயங்குகிறது என்ற தத்துவம் அவர்களை மிகவும் கவர்கிறது. சிதம்பரம் என்றால் நடராஜப் பெருமான் கோயிலைத்தான் குறிக்கும் ஊர்ப்பெயர் - தில்லை; கோயிற்பெயர் சிதம்பரம் இன்று உலக வழக்கில் ஊர்ப்பெயர் தில்லை என்பது மறைந்து, கோயிற் பெயர் சிதம்பரம் என்பதே ஊர்ப்பெயராய் வழங்கி வருகிறது. சென்னை - திருச்சி நேர்வழி இரயில் பாதையில் உள்ள ஊராகும் அனைத்து ஊர்களிலிருந்தும் பேருந்து வசதி உண்டு.

### கோயில் தலச்சிறப்பு

புலிக்கால் முனிவர் பூசித்தலமாதலின் இதனைப் பெரும்பற்றப்புலியூர் - எனத் தேவாரம் பாடும்; சித் + அம்பரம் ( அறிவு - வெட்டவெளி) சிதாகாசத்தலம் - பஞ்சபூதத்தலங்களில் ஆகாசத்தலமாகப் போற்றப்பெறும்

இதன் பொருளாகவே நடராஜப் பெருமானுக்குப் பக்கத்தில் "சிதம்பர ரகசியம் உள்ளது". இந்த ரகசியம் உள்ள இடத்தில் தங்க வில்வதளங்கள் தொங்குகின்றன. இக்கோயினுள் "திருமூலம்" எனும் தனிக்கோயில் உள்ளது. அர்த்த சாம வழிபாடு முடிந்தபின் எல்லாக்கோயில்களிலும் உள்ள சிவகலைகள் அனைத்தும் இந்த மூலத்தான இலிங்கத்தில் ஒடுங்குவதால் இம்மூர்த்திக்கு இப்பெயர் வந்தது. இங்கு அர்த்த ஜாம வழிபாடு சிறப்புடையதாகும்.

இங்கு ஐந்து சபைகள் பெருமன்றங்களாக உள்ளன. அதன் விளக்கங்களாவன.

**1. சிற்றம்பலம்**

நடராசப் பெருமான் திரு நடனம் புரிந்தருளும் இடம். "தூய செம்பொன்னினால் எழுதிவேய்ந்த சிற்றம்பலம்" என்பார் அப்பர். உயர்ந்த அமைப்புடையது பக்கவாயில் வழியாக மேலே செல்ல வேண்டும். சிற்றம்பலத்துள்ளே செல்வதற்கு ஐந்து படிகள் - பஞ்சாக்கரப்படிகள் உள்ளன; படிகள் இருபுறமும் யானை உருவங்கள் உள்ளன.

**2. பொன்னம்பலம்**

கனகசபை - நடராஜப் பெருமான் அபிஷேகம் கொண்டருளும் இடம் இங்கு படிகலிங்கத்திற்கு நாள்தோறும் ஆறுகால பூஜையும், இரண்டாம் காலத்திற்கு ரத்னசபாபதிக்கு அபிடேக வழிபாடும் நடைபெறும்.

**3. பேரம்பலம்**

"மேரு" தேவசபை - இங்குதான் பஞ்சமூர்த்திகளும் எழுந்தருளி யுள்ளனர். இப்பேரம்பலத்திற்குப் பொன் வேய்ந்தவன் மூன்றாம் குலோத்துங்கனாவான்.

**4. திருச்சபை**

நடராஜப் பெருமானின் கொடிமரத்திற்குத் தென்பால் உள்ளது. ஊர்த்துவத்தாண்டவம் செய்தருளிய இடம் - அத்திருமேனி இங்கே உள்ளது.

**5. இராச சபை**

ஆயிரங்கால் மண்டபம்; சோழமன்னர்கள் காலத்தில் 'இம் மண்டபத்தில்தான் முடி சூட்டுவிழா நடைபெறும். அதனை, தில்லைவாழ் அந்தணரே செய்துவந்தனர். இன்று மார்கழி திருவாதிரை ஆனித்திருமஞ்சன நாட்களில் நடராசப் பெருமானுக்கு அபிடேக அலங்காரமும் ஆனந்தத் தாண்டவமும் நடைபெறும் இடமாகத் திகழ்கிறது.

**இத்தலத்தே பேறு பெற்ற அருளாளர்கள்**

மாணிக்கவாசகர், திருவாசகம் - திருக்கோவையார்பாடி முத்தி பெற்றார்.

வியாக்ரபாதர், பதஞ்சலி, உப மன்யூ. வியாசர், சுகர் திருநீலகண்டர், திருநாளைப் போவார் கூற்றுவநாயனார், கணம்புல்லநாயனார், சந்தானாச்சாரியர்கள் முத்திபெற்ற பழம்பெரும்பதி.

**இத்தலத்தில் நிகழ்ந்த அரிய செயல்களாவன**

1. மணிவாசகர் புத்தரை வாதில் வென்று ஊமைப் பெண்ணை பேச வைத்தத்தலம்.
2. திருஞான சம்பந்தர் - தில்லைவாழ் அந்தணர்களைச் சிவகணங் களாகக் கண்ட தலம்.
3. உமாபதி சிவம் கொடிக்கவி பாடி கொடி ஏற்றியதலம்
4. திருப்பல்லாண்டு பாடிச் சேந்தனார் தடைப்பட்ட தேரை ஓடச் செய்ததலாம்.
5. திருமுறைகளை - இராசராச சோழனால் வெளிப்படுத்திய தலம்
6. சேக்கிழார் பெருமானுக்குப் பெரிய புராணம் பாட அடியெடுத்துக் கொடுத்த தலம்
7. பல்வேறு ஆசிரியர்களால் பல்வேறு இலக்கியங்கள் கண்டபதி திருவிசைப்பா பாடிய ஒன்பது புலவர்களுமே தில்லை (சிதம்பர) நடராசப் பெருமானைப் பாடியுள்ளனர் என்பது ஒரு தனிச்சிறப்பு

**1. திருமாளிகைத் தேவர்**

| வ. | ஒன்பதின்மரது கோயில் சிதம்பரம் | பதிகங்களும் | பணிஇசையும் |
|---|---|---|---|
| 1. | திருமாளிகைத்தேவர் | ஒளிவளர்விளக்கே | பண்-பஞ்சமம் |
| 2. | திருமாளிகைத்தேவர் | உயர்கொடியாடை | ப்ண்-பஞ்சமம் |
| 3. | திருமாளிகைத்தேவர் | உறவாகியயோகம் | பண்-பஞ்சமம் |
| 4. | திருமாளிகைத்தேவர் | இணங்கிலாவீசன் | பண்:காந்தாரம் |
| 2. | சேந்தனார் | மன்னுக தில்லை திருப்பல்லாண்டு | பண்: பஞ்சமம் |
| 3. | கருவூர்த்தேவர் | கணம்விரி | பண்: புறநீர்மை |
| 4. | பூந்துருத்தி நம்பி காட நம்பி | முத்துவயிரமணி | பண்: சாளரபாணி |

தேவாரம் பாடிய மூவர் பாடாத அரியதொரு ''சாளரபாணி'' எனும் புதிய பண்ணில் பூந்துருத்தி நம்பிகாட நம்பி அவர்கள் முத்து வயிரமணி பதிகம் பாடி ''இசையுலகிற்கு அவர் தந்த கொடை'' எனலாம். இசை யறிஞர்கள் சாளரபாணிப்பண், நெய்தல் யாழின் ஒரு திறம் என்றும்,

புறநிலைப் பணி என்றும் கூறுவர். இதனை, இன்று "ஆனந்த பைரவி" இராகத்தில் பாடுவார்.

| | | |
|---|---|---|
| 5. கண்டராதித்தர் | மின்னருவம் | பண் : பஞ்சமம் |
| 6. வேணாட்டடிகள் | துச்சான | பண் : புற நீர்மை |
| 7. திருவாலியமுதனார் | பாதாதிகேசம் | பண் : நட்டாரகம் |
| | அல்லாய்ப்பகலாய் | பண் : இந்தளம் |
| | கோலமலர் | |
| | அந்தாதித் தொடை | பண் : பஞ்சமம் |
| 8. புருடோத்தமநம்பி | வாரண | |
| | (அந்தாதித் தொடை) | பண் : பஞ்சமம் |
| | வானவர்கள் | |
| | (அந்தாதித் தொடை) | பண் : பஞ்சமம் |
| 9. சேதிராயர் | சேலுலாம் | |
| | (அந்தாதித் தொடை) | பண் : பஞ்சமம் |

திருவிசைப்பா-பாடும் முதல்தலமாக கோயில் - சிதம்பரம் கண்டோம், இனி, மற்றைய தலங்களைக் காண்போம்.

## 2. திருவீழிமிழலை

தஞ்சை மாவட்டம் பேரளத்தை அடுத்த பூந்தோட்டத்திலிருந்து 10 கி.மீ. தூரத்திலுள்ள தலம். வீழிச்செடிகள் நிறைந்திருத்தமையின் - வீழிமிழலையாயிற்று; மிகப்பெரிய கோயில் - உற்சவர் - கல்யாண சுந்தரர் - அழகிய மூர்த்தி; திருமால் சக்கரம் வேண்டி இறைவனைப் பூசை செய்யும்போது ஒரு நாள் ஒரு மலர் குறையத் தம் கண்ணையே பெயர்த்துச் சாத்தி இறைவனிடம் சக்கரம் பெற்றார். கல்யாணசுந்தரர் பாதத்தில் கண்ணும் - கீழே சக்கரமும் காணலாம். ஞானசம்பந்தருக்கும் - திருநாவுக்கரசருக்கும் படிக்காசு நல்கி பஞ்சம்போக்கியதலம், படிக்காசுப்பிள்ளையார் உள்ளார். அருகில் சம்பந்தர் அப்பர் உருவங்கள் உள்ளன - இருவரும் தங்கியிருந்த மடங்கள் வடக்குவீதி கீழ்கோடி, மேல்கோடியில் உள்ளன. சுவாமி உள்ள இடம் விண்ணிழி விமானம் - தங்கக் கலசத்தோடு பதினாறு சிங்கங்கள் தாங்கும் தனிச்சிறப்புடையது. இக்கோயிலில் வௌவால் நத்து மண்டபம் சிறப்பான வேலைப்பாடுடன் கூடியது - பார்க்க வேண்டிய ஒன்று கல்யாணசுந்தரர் - மாப்பிள்ளை சுவாசி யாகக் காட்சியளிக்கிறார். மூவர் பாடல் பெற்ற தலம் 23 பதிகங்களுடன் சேந்தனார் பாடிய திருவிசைப்பாவும், அருணகிரியாரின் திருப்புகழும் உண்டு.

## 2. சேந்தனார்

சேந்தனாரின் திருவிசைப்பா பதிகம்.

**3. தலம் திருவாவடுதுறை**

"பொல்லாத வேதியர் - பண் : பஞ்சமம் கும்பகோணம் - மயிலாடுதுறை சாலையில் உள்ளதலம். இறைவி பசுவடிவில் வழிபட்ட தலம் - திருவாவடுதுறை ஆதினக் கோயில் திருமாளிகைத் தேவர் வாழ்ந்த இடமே ஆதினமாகவுள்ளது. இறைவர் - மாசிலாமணீசுவரர், இறைவி - ஒப்பிலா முலையம்மை; நந்தி - தருமநந்தி - மூவர் பாடல் பெற்ற தலம்.

1. ஞானசம்பந்தர்தன் தந்தையின் வேள்விக்காக இறைவனிடம் பொற்கிழி பெற்ற தலம்.
2. சுந்தரர் உடற்பிணி தீர வேண்டிய தலம்
3. பரிவாரத்தலங்களில் நந்தித்தலம்
4. தேவர்கள் படர் அரசாக விளங்க அதன் கீழ் இறைவன் எழுந்தருளியதலம்.
5. திருமூலர்தங்கி தவமிருந்து திருமந்திரம் - அருளியதலம்
6. திருமாளிகைத் தேவர் பல அற்புதங்கள் நிகழ்த்திய தலம்
7. சேரமான் பெருமானார், விக்ரமசோழன் வழிபட்டதலம்
8. முசுகுந்தனுக்கு மகப்பேறு அருளி - இவ்வூரை திருவாரூராகவும் தியாகேசராகவும் காட்டியதலம்.
9. தருமதேவரை இவரை வழிபட்டு சிவபெருமானின் வாகன மாகும் பேறு பெற்ற தலம்
10. திருமூலர், திருமாளிகைத் தேவர் ஆகிய மகான்களின் சமாதி யுள்ளதலம்.

**4. திருவிடைக்கழி**

சேந்தனாதின் திருவிசைப்பா மாலுலரமனம் பண்-பஞ்சமம்

**தலச்சிறப்பு**

தற்பொழுது முருகன் தலமாக விளங்குவது மயிலாடுதுறையி லிருந்து தில்லையாடி சென்று அங்கிருந்த 3 கி.மீ. தூரத்திலுள்ள தலம் தெய்வயானை இறைவனிடம் திருப்பரங்குன்றம் செல்ல விடை கேட்டதாலும் இரணியாசுரனைக் கொன்ற பழிகழிந்ததாலும் இத்தலம், விடைக்கழி யாயிற்று.

இறைவன் - காமேசுவரர் - இறைவி - காமேசுவரி தலமரபு - "குரா" முருகன் பின்னால் சிவலிங்க மூர்த்தி காட்சிதரும் தலம், முருகன் குரா மரத்தடியில் யோக நிட்டையிலிருப்பதால் இங்கு அமர்ந்து தியானம் செய்தல் சிறப்பு.

### 3. கருவூர்த்தேவா - திருவிசைப்பா

**5. தலம் : திருக்களந்தை யாதித்தேச்சரம் - "கலைகள் தம்" பண் புறநீர்மை**

சோழநாட்டுக் காவிரித் தென்கரையில் திருத்துறைப்பூண்டி, மன்னார்குடி சாலையில் 3. கி.மீ. தூரத்தில் உள்ள முள்ளியாற்றின் தென்கரையில் களப்பாள் (களந்தை) எனும் ஊரிலுள்ள சிவாலயமே திருக்களந்தையாதித்தேச்சரம் ஆகும். இக்களந்தைத் தலத்தில்தான் கூற்றுவநாயனார் திருவவதாரம் செய்தார் - தேவாரம் பெறாத வைப்புத் தலமாகும்.

விசயாலய சோழன் மகன் ஆதித்த சோழன் (கி.பி. 850-890) என்பவன் களப்பாள் எனும் தலத்தில் சிவாலயம் கட்டி வழிபட்டதனால் அது ஆதித்த + ஈச்சரம் = ஆதித்தேச்சரம் என தஞ்சை கோயில் இராசராசேச்சரம் என்பது போல வழங்குவதாயிற்று.

தலப்பெயர் - திருக்களந்தை

இறைவன் - ஆதித்தேச்சுவரர்

இறைவி - பிரபா நாயகி

**6. தலம் : திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம்**

கருவூராரின் திருவிசைப்பா - "தளிரொளி மணிப்பூர்" பண் : பஞ்சமம் காவிரித் தென்கரைத் தலங்களில் 111-ஆவது தலம் - திருக்கோட்டூர் கோடு-கிளை-கிளை கனடா மரச்சோலை சூழ்ந்த ஊர் என்பது, பொருள். இத்தலம் திருத்துறைப் பூண்டிக்கு வடமேற்கே 8 கி.மீ. தூரத்தில் உள்ள மேல் கோட்டூர் - இது தேவாரப் பாடல் பெற்ற தலம் - இத்தலத்திற்கு கீழ்ப்பகுதி உள்ள சிவாலயமே - திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் ஆகும். இங்கு ஐராவதத்தின் மணி விழுந்ததால் இந்த இடம் மணியம்பலம் என்ற பெயர்பெற்றது. சிவபெருமான் திருநடனம் காட்டிய திருவம்பலங்கள் 64 ஆகும். அவற்றுள் கீழ்க்கோட்டூர் மணியம்பலமும் ஒன்றாகும்.

ஆலயத்தின் பெயர் - மணியம்பலம்

ஊர்ப்பெயர் - ஐராவதேச்சரம்

இறைவன் - மணியம்பலநாதர்

இறைவி - மணியம்பல நாயகி

**7. தலம் - திருமுகத்தலை**

கருவூர்த் தேவரின் திருவிசைப்பா - "புவனநாயகனே" பண்-பஞ்சமம் சோழ நாட்டு காவிரித் தென்கரைத்தலம் திருத்துறைப்பூண்டிக்கு வடகிழக்கில் சுமார் 4 கி.மீ. தூரத்தில் கொக்காலடி, மாராச் சேரவழியாக

ஊர் சேரலாம், தேவாரப் பாடல் பெறாத தலம். திருமுகத்தலை இத்தலம் மதுரை ஆதினத்திற்குச் சொந்தமானது. தற்போது இத்தலம் ''பன்னத்தெரு'' என வழங்கப்படுகிறது.

இறைவன் பெயர் - பன்னக பரணர்

இறைவி - சாந்த நாயகி

திருக்கோயில் உட்பிரகாரத்தில் ''முகத்தலை லிங்கம்'' ஒன்றுள்ளது. சோழர்காலக்கல்வெட்டுள்ளது.

**8. தலம் : திரைலோக்கிய சுந்தரம்**

கருவூராரின் திருவிசைப்பா

''நீரோங்கி வளர்'' பண்:காந்தாரம்

**தலச்சிறப்பு**

காவிரி வடகரைத்தலங்களில் 39-வது தலம் திருப்பனந்தாள் தலத்திற்குத் தென்கிழக்கில் 3 மைல் தொலைவில் தேவாரப்பாடல் பெறாத சிவத்தலம் - தற்பேது "திருலோக்கி" என வழங்கி வருகிறது. திருப்பனந்தாள் காசி மடத்திற்குச் சொந்தமானது முதல் இராசேந்திரன் கல்வெட்டில் ''திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம்'' என உள்ளது.

இறைவன் - சுந்தரேசுவரர்

இறைவி - அகிலாண்டேசுவரி

**9. தலம்: கங்கை கொண்ட சோளேச்சரம்**

கருவூராரின் திருவிசைப்பா : ''அன்னமாய் விசும்பு'' - பண் பஞ்சமம்.

**தலச்சிறப்பு**

திருச்சி மாவட்டம், வழி ஜெயங்கொண்ட சோழபுரத்திலிருந்து 10 கி.மீ. தூரத்திலுள்ள தலம் கங்கை கொண்ட சோழபுரம் இராசராசசோழன் மகன் முதலாம் இராஜேந்திரன் (கி.பி. 1014-1042) வடநாடு சென்று வெற்றியுடன் கங்கை நீர் கொண்டுவந்து புதிதாக அமைத்த நகரம் - இந்நகரில் அவனால் அமைக்கப்பெற்ற சிவாலயமே கங்கைக்கொண்ட சோளேச்சரம் ஆகும். தந்தை இராசராஜன் தஞ்சையில் எடுப்பித்த பெரிய கோயிலின் அமைப்பில் கட்டினார். உருவில் சற்று சிறிது - சிற்பத்திறத்தில் மிக உயர்ந்து காணப்பெறும் - சிவலிங்கத் திருமேனி - நந்தி பெரிய அமைப்புடையது. கோயிலும் - ஊரும் வளம் குறைந்து காணப்படுகிறது.

இறைவன் - கங்கை கொண்ட சோளேச்சரம்

இறைவி - பெரிய நாயகி

**10. தலம் : திருப்பூவணம்**

கருவூராரின் திருவிசைப்பா பதிகம்: "திருவருள் புரிந்து ஆள்" - பண் : பஞ்சமம் தலசிறப்பு மதுரை மாவட்டம்: பாண்டி 14-ல் 11-வது தலம் மதுரைக்குக் கிழக்கே 12 கல் தொலைவில் உள்ளது. காசிக்கு வீசம் அதிகம் மூவேந்தரும் வழிபட்டது. உமாதேவி நந்தவனம் அமைத்து வழிபட்ட தலமாதலின் இப்பெயராயிற்று பொன்னனையாள எனும் தாசிக்காக - சொக்கநாதர் எல்லாம்வல்ல சித்தராகவந்து சோமாஸ்கந்தர் வடிவை அமைத்துத் தந்தார்.

இறைவன் - பூவணநாதர்

இறைவி - மின்னம்மை

**11. தலம்: திருச்சாட்டியக்குடி**

கருவூராரின் திருவிசைப்பா பதிகம் : "பெரியவா கருணை" பண் : பஞ்சமம்.

**தலச்சிறப்பு**

திருவாரூர் மாவட்டம் கீழ்வேளூரிலிருந்து கச்சனம் வழியாக திருத்துறைப்பூண்டி செல்லும் வழியில் உள்ளதலம், சாட்டியம் - சுரநோய், வெப்பு நோய்க்குத்தெய்வம் ஜ்வரதேவதை பூசித்தலமாதலின் இப்பெயர் பெற்றது. இன்றும் சுரநோயினர் வழிபட்டு நலம் பெறுகின்றனர்.

இறைவன் - வேதநாதன்

இறைவி - வேதநாயகி

**12. தஞ்சை இராசராசேச்சரம்**

கருவூராரின் திருவிசைப்பா பதிகம் : "உலகெலாம் தொழவந்து" பண் : பஞ்சமம் ஆதியில் தஞ்சன் என்ற அரக்கன் ஆண்ட ஊர் தஞ்சன் ஊர் - தஞ்சாவூர் ஆயிற்று, மாவட்டத் தலைநகர் - தேவார காலத்திற்குப் பிந்திய தலம், தஞ்சையை ஆண்ட முதலாம் இராசராசசோழன் (கி.பி. 985-1014) கட்டிய சிவாலயமே தஞ்சை இராசராசேச்சரம் கோயிலாகும் சோழ மன்னர்கள் தமிழகத்தே கட்டிய கோயில்களில் தலைசிறந்தது கோயிலும் பெரியது, பெருமானும் பெரியவர், நந்தியும் பெரியது உலக அதிசயங்களில் ஒன்றாக - கட்டடக்கலை சிற்பக்கலைக்கு சிறந்ததாக போற்றப்பெறுவது கோபுரம் 216 அடி தெட்சினபேரு எனப் பெறும் சிவலிங்கத் திருமேனி மிகப்பெரிது - நந்தியும் 12 அடி உயரம் அதனால் பெரிய கோயில் என்றே பெயர் வழங்கப்படுகிறது.

இறைவன் - பெருவுடையார்

இறைவி - பெரியநாயகி

**13. தலம் திருவிடை மருதூர்**

கருவிராரின் திருவிசைப்பா "வெய்ய செஞ்சோதி" - பண்:பஞ்சமம்

காவிரித் தென்கரைத்தலங்களில் 30-வது தலம் - இரயில் நிலையம் உண்டு மருதமரத்தைத் தலமரமாகக் கொண்டதாலும் திருவிடைமருதாயிற்று, தஞ்சை மாவட்டக் கோயில் தலங்களில் மூலவர் மகாலிங்கேசுவரர், உமாதேவி தவம் செய்த தலம்.

இறைவன் : மகாலிங்கர் - மருதவாணர்

இறைவி : நன்முலை நாயகி

**14. தலம் திருவாரூர் 4, பூந்துருத்தி நம்பிகாட நம்பி**

திருவிசைப்பா பதிகம்: ''கைக்கு வான்'' பண் : பஞ்சமம்

காவிரித் தென்கரைதலங்களில் 87-வது தலம் மிகத்தொன்மை வாய்ந்த தலம் - பிருதிவி - மண் தலம் சிவத்தலபூசாகாலங்களில் "சாயரட்சை" எனப்படும் மாலை வழிபாடு சிறந்தது. உலகிலுள்ள அனைத்து சிவகலை களும் ஒரு சேர விளங்குவதும், சப்த விடங்கத் தலங்களில் முதன்மை யானதுமான தலம். தியாசேகர் - தியாக விடங்கர் திரு. இலக்குமியும். ஆர். பூமாதேவியும் புசித்ததலமாதலின் திரு ஆரூர் என ஊர்ப்பெயர் ஆயிற்று, கோயிற்பெயர் - பூங்கோயில் செல்வத்தியாகராசர் முசுகுந்தச் சக்கரவர்த்தியால் பிரதிட்டை செய்யப்பெற்றது. கோயில் ஐந்துவேலி, குளம் - ஐந்து வேலி, - செங்கழுநீர் ஓடை ஐந்து வேலி நாதர்.

இறைவன் : புற்றிடம் கொண்டார் வண்மீக நாதர்

இறைவி : நீலோர்ப்பலாம்பிகை, கமலாம்பாள்.

இதுகாறும் ஒன்பதாம் திருமுறையில் ஒன்பது அருளாளப் பெருக்களால் அருளிச் செய்யப்பெற்ற திருவிசைப்பாவில், அவர்களால் போற்றிப் பரவிய திருத்தலங்கள் பதினான்கினையும் கண்டுணர்ந்து அத்தலச் சிறப்புகளையும் அவர்களின் பண்ணோடுசைத்த பதிகக் குறிப்புகளையும் ஒருவாறு ஆய்ந்து வெளியிட்டுள்ளோம், சைவநல்லன்பர்கள் இதனைப் பயின்றுணர்ந்து மகிழ்வர் - பயனுறுவர் என்பது உறுதி.

ஓம் சக்தி!

# 49. சித்தர் தத்துவங்கள்

திருமதி ஜெ. சுபப்பிரியா, சென்னை.

ஆன்மீகவாதிகளான சித்தர்கள் உள்ளமே கோயிலெனக் கருதி உயிரினங்களையெல்லாம் வணங்கும் யோகமார்க்கத்தவர்கள். எந்த விதமான சமயங்களுக்கும் சடங்குகளுக்கும் உட்பட்டவர்கள் அல்லர். அனைத்து உயிர்களிலும் ஒருவித இணைப்பையும் இறைமையையும் கண்டவர்கள். காடு சென்று காய்கனியுண்டு மூச்சைப் பிடித்து முக்திக்கு வழி தேடுபவர்கள். சமுதாயத்தினின்று விலகிப் போகாதவர்கள். சமுதாயத்தை சீர்திருத்த வேண்டுமென்ற பெருநோக்கில் சாதி, மதம், சடங்கு முதலியவற்றைக் கண்டித்தவர்கள். இவர்கள் ஞான சித்தர், நாத சித்தர், ராஜேஸ்வர சித்தர் என்ற மூவகையாகப் பிரித்துப் பேசப்படுவார்கள்.

ஞான சித்தர் - உண்மையான ஞான நிலையில் நின்றவர்கள். 1. அகத்தியர்; 2. அகப்பேயார்; 3. திருமூலர்; 4. பாம்பாட்டியார்; 5. கடுவெளியார்; 6. இடைக்காடர்; 7. கருவூரார்; 8. சிவவாக்கியர்; 9. திருவெண்காடர்; 10. பத்திரகிரியார்; 11. அருணகிரிநாதர்; 12. திருமாளிகைத் தேவர் என்ற ஆன்றோர்கள் ஞானசித்தர்கள் ஆவார்கள்.

நாத சித்தர் - பிராணாயாமம் முதலிய யோகப் பயிற்சியால் சுழுமுனை நாடியில் உண்டாகும் நாதத்தில் தம் மனதையொடுக்கி சமாதி நிலையில் நிற்பவர்கள்.

1. ஆதிநாதர்; 2. அநாதிநாதர்; 3. சட்டேந்திரநாதர்; 4. கோரக்கர்; 5. சகோரநாதர்; 6. மச்சேந்திரநாதர்; 7. சித்திய நாதர்; 8. வெகுளிநாதர் என்பவர்களாவர்.

ராஜேஸ்வர சித்தர் - இரசாயன முறைகள் காய சித்தியடைந்த வர்கள் ராஜேஸ்வர சித்தர் எனப்படுவர்.

1. போகர், 2. இராசதாசர் முதலியவர்களாகவர். இவர்கள் மக்கட்குப் பயன்படும் வகையில் மருத்துவம், சோதிடம், வானவியல் முதலிய துறை களில் ஈடுபட்டுப் பல அரிய கருத்துக்களைத் தந்தவர்கள்.

### சித்தன் எனும் சொல்லின் தோற்றம்

இறைவனைச் சைவசித்தாந்தத்தில் சத்சிதானந்தம் எனக் குறிப்பர். சத்து+சித்து+ஆனந்தம் என மூன்று சொற்களின் இணைப்பு இது. சத்து

என்பது அழியாத நிலையில் உள்ள பொருள். சித்து என்பது பேரறிவு. ஆனந்தம் என்பது பேரின்பம். இவற்றுள் பேரறிவு என்னும் பொருளுடைய சித் என்னும் சொல்லை அடிச்சொல்லாகக் கொண்டு சித்தன் என்னும் சொல் தோன்றியுள்ளது.

"கடவுளைக் காண முயல்பவன் பக்தன்;
கண்டு தெளிந்தவன் சித்தன்"

எனப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் கூறுவ்து இதனை உறுதிப்படுத்துகிறது.

**சித்தத்தின் தத்துவம்**

சித்தத்தின் சலனமே உலகியலில் உழலக் காரணமாகும். இச்சித்தத்தின் சலனம் பிராணவாயுவின் அசைவினையொட்டியே இயங்கும்.

சுருங்கச் சொன்னால் பிராண வாயுவின் அசைவே சித்தத்தின் அசைவாகும். இவ்வுண்மையை உணர்ந்தே முன்னோர்கள் பிராணாயாமம் செய்தனர். சித்தம் ஒடுங்கிய நிலையே சிவ நிலையாகும் திரையற்ற நீர்நிலை போல் சிந்தை தெளிந்த நிலையே அது. இந்நிலையில் சித்தமும் இல்லை; செயலும் இல்லை. இதனைச் செத்தார் நிலை என்பர் திருமூலர். இதனை மணிவாசகப் பெருமான்,

"சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி
எனையாண்ட அத்தன் எக் கருளியவாறார்
பெறுவார் அச்சோவே"

எனக் குறிப்பிடுதல் காணலாம். எனவே சித்தத்தை வென்றவன் சித்தன் என்றும் அந்நிலையில் அவன் பெறும் பயனே சித்து எனவும் குறிப்பிடுவதை அறியலாம்.

**சித்தர் நிலை**

உயிரானது சடப்பொருளன்று; அறிவுடைய பொருளே ஆனால் தானாக அறியும் அறிவு உயிருக்கு இல்லை. கதிரவனது ஒளியினால் கதிரவனைக் காணுவது போல இறைவனது அருளினால் இறைவனை உணரும் நிலை கிட்டுகிறது. ஆதலின் சிற்றறிவுடைய உயிர் பேரறிவுடைய இறைவனையடையும் நிலையே சித்தர் நிலை எனக் கூறப்படும்.

**சைவ சித்தாந்தம்**

சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மைகளை விளக்குவது இவற்றை முறையே இறை, உயிர், தளை எனத் தமிழில் வழங்குவர். ஆணவம், கன்மம், மாயை என்றும் மூவகைப் பாசங்களையும் (தளை) கட்டு என்னும் சொல்லால் வழங்குவது பண்டைய மரபாகும்.

"சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெல்லாம் மொழிய நின்றன
ஆன்ற தொல்பதி ஆருயிர்த் தொகை
வான் திகழ் தளையென வகுப்பர் அன்னவே" - கந்தபுராணம்

எனவரும் சான்றோர் வாக்கால் இது தெளியப்படும்.

**சிவ சித்தர்கள்**

மாயாகாரியப் பொருள் பாசம். அதற்கு மூலம் ஆணவவல்லிருள் என உணர்ந்து அவற்றைத் துறந்து ஆணவத்தால் விளையும் மதமற்று யான் எனதென்னும் செருக்குமற்று அருள் நினைவால், சிவத்தை உணர்ந்தவர்களே சிவசித்தர் எனக் குறிப்பிடப்படுதல் காணலாம்.

**சித்தர் நெறிகள்**

உயிரானது இறைவனுடன் ஒன்றுபடும்போது ஐம்பொறிகளும் பற்று நீங்கி, மாயையற்று, அவை தம்மைத் தொடராத தன்மையையும் உணர்ந்து,

"இறைவன் திருவடிப் பேற்றினை அடைந்து"

பேரின்பம் துய்க்கும். இதனைச் சித்தாந்தம் என்பர்.

"தான் எனும் சித்தாந்தம்" (திரு-2332)

எனக் குறிப்பிடுகின்றார்.

திருமந்திரம் சித்தர் நெறி பற்றிக் கூறும் சீரிய நூலாக அமைந்துள்ளது. சித்து - இச்சொல் அருள் விளையாட்டு என்னும் பொருள் குறித்தது.

இச்சித்துமுறை தமிழகத்தில் பழமையானது. சங்க இலக்கியங்களில் இச்சொல் காணப்படவில்லை. ஆயினும் அச்சொல் உணர்த்தும் செயல் தமிழகத்தில் இருந்தது என்பதை அறிய முடிகிறது.

**சித்தர்களின் குண்டலினி சக்தி**

கொங்கணர், கருவூரார், சட்டைமுனி, இராமதேவர் முதலிய சித்தர்கள் வாலையைப் பூசிப்பவனே சித்தன் என விளக்கம் தருகின்றனர்.

வாலை என்னும் சொல் குமரி (அ) இளம் பெண் எனப்பொருள். சித்தர்களது குழூஉக்குறி இதுவாகும். விழிப்புற்ற குண்டலினி சக்தியை மேலே எழுப்பிப் பயன்பெறுவார்கள் சித்தர்கள் என்பது இதன் பொருளாக இருக்கலாம். சித்தர்கள் சக்தி வழிபாடு செய்பவர்கள்.

குண்டலினி மேலே தன்னுடைய பயணத்தின் போது ஒவ்வொரு ஆதாரத்தில் தங்கும்போது சாதனையாளர்களுக்குச் சில வகையான ஆற்றல்கள் கைவரப் பெறும். இவற்றையே அட்டமா சித்திகள் என்கின்றனர்.

| | | |
|---|---|---|
| 1. அணிமா | : | அணுவினும் மிக நுண்ணிய வடிவு பெறல். |
| 2. மகிமா | : | மேருவினும் பேருருப் பெற்று நிற்றல். |
| 3. லசிமா | : | சேறு முதலியவற்றில் இயங்கினும் அழுத்திலின்றிக் காற்றினும் கடுநடைத்தாய் மெல்லிய வடிவுற்று நிற்றல். |
| 4. பிராந்தி | : | மனத்தால் விழையப்பட்டன அனைத்தும் விழைந்த வாறே பெறுதல். |
| 5. பிரகாமியம் | : | எண்ணமாத்திரையான், ஆயிரம் மகளிரைப் படைத்து அவரனைவருடனும் ஆயிரவடிவாய் விளையாடல். |
| 6. ஈசத்துவம் | : | பிரமன் முதலியோர் மாட்டும் தன் ஆணை செலுத்தி நிற்றல் |
| 7. வசித்துவம் | : | உலகனைத்தையும் தன் வயமாக்கல் |
| 8. கரிமா | : | புலன்களை நுகர்ந்தும் அவற்றில் தொடக் குண்ணாமை. |

திருமூலர் அட்டாங்க யோகம் பற்றி விளக்கியுள்ளமையினின்று சித்தர் நெறி என்பது அன்பு நெறி, யோக நெறி என்பதனை அறியலாம்.

## சித்தர்களின் அன்புக் கொள்கை

சித்தர்கள் அனைவரும் சமயங்களையும் அவை தோன்றக் காரணமான உருவ வழிபாட்டையும் அதனோடு பிணைந்த சாத்திரச் சடங்குகளையும் சாடியவர்கள் என்பதை அறிவோம். ஆனால், எக்காலத்தும், எக்காரணத் தாலும் எவ்விதக் கருத்து வேறுபாடும் எழுதற்கியலாத அன்புக் கொள்கையை வற்புறுத்தியவர்கள் என்பதை மறுக்க இயலாது.

திருமூலர் சித்தர் மரபின் முன்னோடி எனவே இவரது சமயம், இறைக் கொள்கை 'அன்பே' என்பது தெளிவு. இவ்வன்பையே சமயமாகக் கொண்ட நிலை திருமூலர் புதிதாகக் கண்டதன்று. அவர் காலத்திற்கு முன்னால் பரவி இருந்த இக்கொள்கைக்குப் புத்துயிரும் புதுப்பொலிவும் தந்தார்.

**"இறைவன் அன்பு வடிவானவன், அவனையடைய அன்பே வழியாகும்"**

என்பதே திருமூலர் கண்ட திருநெறியாகும்.

**"அன்போடுருகி அகங்குழைவார்க் கன்றி**
**என்போல் மணியினை எய்த வொண்ணாதே"** திருமந்திரம். 259

அனைத்துயிர்கள் மாட்டும் எவ்விதப் பலனோ, அச்சமோ இன்றிக் காட்டும் விழுமிய அன்பே கருணை அல்லது சீவகாருண்யம் என்பது இறைவன் அனைத்துயிராயும் இலங்குகிறான் என்பதை சமயங்கடந்த சித்தர்களின் கொள்கையாகப் போற்றிவந்தனர்.

# 50. திருமந்திரம் அமைப்பும், சிறப்பும்

திருமதி எம். சுபாஷிணி, அண்ணாமலைநகர்.

பன்னிரு திருமுறைகளில் பத்தாந்திருமுறையாகத் திகழும் திருமூலர் திருமந்திரம் பலவகைகளில் சிறந்த தத்துவ நூலாகவும், ஆகம சாத்திரங்களை உள்ளடக்கியதாகவும் விளங்குகிறது. சைவ ஆகமக் கருத்துக்களும், சைவ சித்தாந்த கருத்துக்களும் பொதிந்த சிறந்த நூல். திருமந்திரத்தின் முழுப்பெயர் 'திருமந்திர மாலை' என்பது. 'தமிழ் ஆகமம்' என்பதற்கு ஏற்ப திருமந்திரத்தின் பெரும் பிரிவுகள் யாவும் 'தந்திரம்' என்னும் பெயரால் குறிக்கப்பட்டுள்ளன. ஆகமங்களை திருமூலர் அவற்றின் கருத்துக்களைத் தாம் திருவருள்வழி நின்று வெளியிட்டமையால் தமிழில் திருமந்திரமே மூலாமகம் ஆகின்றது.

## திருமூலர்

திருமூல தேவரது வரலாற்றை அறிய ஆதாரமாக உள்ள நூல்கள் மூன்று. அவை, முறையே திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, பெரியபுராணம் என்பனவாம். திருமூலர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். திருமூலர் காலம் கி.பி.6000-க்கு முந்திய வட்டெழுத்துக்காலம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். நம்ப ஆரூரர் அருளிய திருத் தொண்டத்தொகையில் 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்று குறிப்பிட்டுள்ளார். திருத்தொண்டத் தொகையில் 'பிரான்' என்னும் அருமைச்சொல்லால் இருவரையே ஆரூரர் போற்றியுள்ளார். ஒருவர் திருஞானசம்மந்தர். அவரை எம்பிரான் எனப் போற்றியுள்ளார். மற்றொருவர் திருமூலர். இவரை 'நம்பிரான்' என்றார்.

## தோற்றம்

திருமூலர் திருவாவடுதுறையினைச் சார்ந்து அங்கு பெருமானை வழி பட்டுத் திருக்கோயிற் சுற்றின் புறத்திலே மேற்குப் பக்கத்திலே, மிகவும் உயர்ந்திருந்த அரச மரத்தின் கீழே அமர்ந்து, சிவராச யோகத்தின் அழுந்தி, இதய கமலத்தில் அரும்பொருளாகிய இறைவனுடன் இரண்டறக் கூடியிருந்த நிலையில், உலகத்தார் உய்யும் பொருட்டு ஞானமுதலாகிய நான்கு நெறி களும் விரிந்து காணும் திருமந்திர மாலையினை ஓர் ஆண்டுக்கு ஒரு மந்திரமாக 'ஒன்றவன்றானே' என்று தொடங்கி அருளிச் செய்தார்.

இந்நூல் திருவாவடுதுறை திருக்கோயிலுள் பலிபீடத்தருகில் புதைந்து கிடந்ததாகவும் அங்கு தரிசனத்திற்கு வந்த திருஞானசம்பந்த சுவாமிகள் பலி பீடத்தருகே வணங்கி எழுந்த பொழுது இங்கு தமிழ்

மணம் கமழுகின்றது; தோண்டிப் பாருங்கள் என்று கூற அவ்வாறே தோண்டிய போது கிடைத்தது என்றும் ஆன்றோர் கூறுவர்.

**திருமந்திரத்தின் அமைப்பு**

திருமந்திர நூல் மூவாயிரம் பாடல்களைக் கொண்டது. ஒன்பது தந்திரங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளது. காலத்தால் தேவாரங்களுக்கு முற்பட்ட நூல். திருமூலர் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து, தம் வரலாறு முதலியவைகளை, 'பாயிரம்' என ஒரு தனிப்பிரிவாக அமைத்து கூறிய பின், முதல் தந்திரம், இரண்டாம் தந்திரம் என ஆரம்பித்துச் செய்து ஒன்பதாம் தந்திரத்துடன் நூலை முடித்துள்ளார். இந்நூல் பேசும் ஒன்பது தந்திரங்களுள்

முதல் தந்திரம் பொதுவாக அறங்களைக் கூறுகின்றது. பல திறப்பட்ட நிலையாமைகள், கொல்லாமை, புலால் உண்ணாமை, அந்தணர் ஒழுக்கம், அரசர் ஒழுக்கம், அறம் செய்திடல், அறம் செய்யாக் குற்றம், அன்புடைமை, நடுநிலைமை, கள்ளுண்ணாமை, கல்வி, கேள்வி ஆகிய தலைப்புக்களைக் கொண்டுள்ளது. முதல் தந்திரத்தில் திருமூலர் பல பொது அறங்களையே கூறினார். ஆகவே அது ஏறக்குறைய திருக்குறள் நாலடியார் போன்ற அறநூல்களைப்போல அறப்பகுதி யாகவே உள்ளது.

இரண்டாம் தந்திரம் புராணமரபு, புராண வரலாற்றின் தத்துவங்கள், இறைவனது ஐந்து தொழில்கள், திருக்கோயில் முறைமை, தீர்த்தச் சிறப்பு, தானம் செய்தற்கு உரிய பாத்திரம், கருப்பக் கிரியை, மூவகை சீவவருக்கங்கள் ஆகியவை அமைந்த உள்ளது.

மூன்றாம் தந்திரம் யோகம், யோகத்தின் உறுப்புக்களான இமயம், நியமம், முதலிய எட்டுப் பிரசாதயோகம், அட்டசித்தி, காய சித்தி, ஆயுட் பரிட்சை, யோகத்தின் பல்வேறு வகைகள் ஆகியவைகளைக் கொண்டுள்ளது.

நான்காம் தந்திரத்தில், இந்நூல் திருமந்திரம் என்பதற்கு ஏற்ப பலவகை மந்திரங்களும் அவற்றிற்குரிய யந்திரங்கள், அர்ச்சனை, நவகுண்டம், பூரணசக்தி, ஆதார ஆதேயங்கள் என்பன பேசப்பெறுகின்றன.

ஐந்தாம் தந்திரம் சைவத்தின் பொது மரபுகளைக் கூறுகின்றது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாச மார்க்கம் - இவைகளின் பயன்கள், நால்வகை சத்தி நிபாதங்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

ஆறாம் தந்திரம் சைவத்தில் நிற்கும் முறை, உரியார் இவர், அல்லாதார் இவன் என்பவைகளை பேசுகிறது. ஆன்மீகப் பயிற்சிக்கு இன்றியமையாதவை சிலவற்றை ஆறாம் தந்திரம் கோடிட்டுக் காண்பிக்கிறது.

ஏழாம் தந்திரம் முழுதும் தவநிலைக்கு உரியது என்றும் தவத்தை புரிவதற்கான ஆதார நிலைகளையும், மேல்நிலைகளையும் உணர்ந்து கொண்டாலொழிய தவத்தின் பலன் கிட்டாது என்றும் உணர்த்துகிறது.

ஏழாம் தந்திரமாய் உள்ளது 'தவச்சிறப்பு நிலை'. இதை "காலோத்திர ஆகமம்" என்பர். இது ஆதாரம் முதல் இதோபதேசம்" ஈராக முப்பது தலைப்புக்களைக் கொண்டது. நானூற்று ஏழு மந்திரங்கள் அடங்கியது.

எட்டாம் தந்திரம் உடலிற் பஞ்ச பேதம் முதல் சோதனை ஈறாக நாற்பத்து மூன்று பிரிவுகளை உடையது. மேலும், அருமறைகளிற் கூறப்படும் சித்தாந்த நுண்பொருள்களை விரித்துக் கூறுகிறது. குறிப்பாக சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதைகளில் ஞான பாதத்தை விளக்குவதாக எட்டாம் தந்திரம் அமைந்து உள்ளது.

ஒன்பதாம் தந்திரம் ஞானோதய நிலையில் சாதகன் ஐந்தெழுத்து மந்திரத்தின் உட்பொருளை நன்கு உணர்ந்தவனாக பெற்று, இறைவனின் ஐந்தொழில்களை அண்டத்திலும், பிண்டத்திலும் நடைபெறும் திருக்கூத்தாக தரிசித்து, திருவடிப்பேறு அடைந்து மாறாத பேரின்பத்தில் மூழ்கித் தளைத்து நிற்கும் நிலைகளையெல்லாம் நமக்கு படம் பிடித்துக் காட்டுகின்றது.

**சிறப்பு**

வடமொழியில் வேதம் பொது நூலாகவும், ஆகமம் சிறப்பு நூலாகவும் விளங்குகின்றன. அவைப் போல தமிழில் திருக்குறள் பொது நூலாகவும் திருமந்திரம் சிறப்பு நூலாகவும் போற்றப்படுகின்றது. வடமொழி வேத ஆகமங்களில் அனைத்துப் பொருள்களும் அடங்கியுள்ளன என்பது போல் திருக்குறளும், திருமந்திரமும் அனைத்துப் பொருள்களையும் பெற்று திகழ்கின்றன. இதனை ஔவைபிராட்டியார்:

**"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் கனிமொழியும் - கோவை**
**திருவாசகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகமென் றுணர்"**

என்கிறார்.

மேலும் நூல்களால் மக்கள் அறியத்தக்க பொருள்கள் அறம், பொருள், வீடு இன்பம் என்னும் நான்காகும். பொது நூல் அவைகளை பொதுவாகவும், சிறப்பு நூல் அவைகளை சிறப்பாகவும் பேசுகின்றன. திருக்குறள் முற்ற முடிந்த பொது நூல். திருமந்திரம் முற்ற முடிந்த சிறப்பு நூல் ஆகும்.

ஆக திருமந்திரம் ஒரு அனுபவ நூல்; செந்தமிழ் சிறக்க எழுந்த ஒரு சமய நூல்; மக்களை நல்வழிப்படுத்தும் ஒரு சமய நூல்; மக்களை நல்வழிப்படுத்தும் ஒரு யோக நூல்; சிவநெறியாகிய குருநெறியை போதிக்கும் நூல்; பாச இருளில் மூழ்கிக் கிடக்கும் உயிரினை படிப் படியாக உய்விக்கச் செய்யும் வழிகாட்டி நூல். எலலாவற்றுக்கும் மேலாக, எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் உயிரோடு உயிராக கலந்து வேறாகவும், "நீரினில் பால்போல் நிற்கின்ற நீர்மைய்ய" யாவருக்கும் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டி பேரின்பமயமான பரம்பொருள் அனுபவத்தை நம்முள்ளும் பெறலாம் என்கின்ற - உண்மையை போதிக்கும் நூல்.

# 51. நால்வகை நெறிகளும் முக்குற்றங்களும்

செல்வி ஜெ. சுஜாதா, சென்னை.

சித்தாந்த நூல்கள் எனக் கூறப்படும் பதினான்கும் திருமந்திரத் திற்குப் பின்னே தோன்றியனவாகும். சாத்திரங்களுக்கு முதல் நூலாக விளங்குவது திருமந்திரமேயாகும். பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையான திருமந்திரம் நீங்கலாக ஏனைய திருமுறைகளைத் தோத்திர நூல்களாகக் காண்கிறோம். பன்னிரண்டாம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணம் இறையடியார்களின் பெருமையைப் பற்றிக் கூறுகிறது. பத்தாம் திருமுறையொன்றே தோத்திரமாகவும், சாத்திரமாகவும் விளங்கும் பெருமை யுடையது. இந்நூலில் கூறியுள்ள நால்வகை நெறிகளையும் முக்குற்றங் களையும் பற்றிக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**நால்வகை நெறிகள்**

சீவன் சிவனாதல் வேண்டும் என்ற கருணையால் சிவபெருமான் கொடுத்த தனுகரண புவனபோகங்களைத் துய்க்கின்ற நிலையில் பின்பற்ற வேண்டிய நெறிகள் நான்கு என்று சித்தாந்தம் கூறுகின்றது. அவையாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.

கிரியை : எல்லா உயிரையும் தன்னுயிரென எண்ணல்

சரியை : அனைத்து உயிரிடத்தும் வேற்றுமையின்றி அன்பு காட்டுவது.

யோகம் : அனைத்துயிருள்ளும் ஒளிகாண்டல்

ஞானம் : உயிர்க்குயிராய்த் தான் நிற்றல்.

எனத் திருமூலர் 1417 ஆம் பாடலில் விளக்குகிறார்.

சரியை என்பதை விளக்குபவர் நித்தமும் கோயில்தோறும் சென்று இறைவனைப் பணிதலும், புலர்வதன் முன் அலகிட்டு பூமாலை புனைந்து புகழ்ந்து பாடித் தலையாயிரக் கும்பிட்டுத் தன்னை மறந்து அவன் புகழ் பாடல் என்று குறிப்பிடுவர். சரியையாளர் பக்தர்; கிரியையாளர் தொண்டர்; யோகியர் சாதகர்; ஞானியர் சித்தர்; எனத் தெளிவாக நால்வகை நெறியினைப் பின்பற்றுபவர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

மேலும் சரியையாளர் சாலோகத்தையும், கிரியையாளர் சாமீபத்தையும், யோகியர் சாரூபத்தையும், ஞானியர் சாயுச்சியத்தையும் அடைவர் எனவும் குறிப்பிடுகின்றார்.

சாலோகம் என்பது இறையுலகு வாசியாதல், சாமீபம் என்பது இறைவனுக்கு அணுக்கராய் உள்ளபேறு. சாரூபம் என்பது இறைவனைப் படியொத்த வடிவு பெறுதல். சாயுச்சியம் என்பது இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலை எனவும் குறிக்கின்றார். சரியையாளர் சந்தனம், மலர் முதலியன கொண்டு அர்ச்சித்தலோடு கொல்லாமை முதலிய நோன்பினையும் நோற்றல் வேண்டுமெனக் கூறுகிறார்.

கிரியையாளர்க்கு இறைக்காட்சி கிடைக்கும் என்கிறார். யோகியர் குரு சொல்லிய வண்ணம் நின்று அகத்துவமாகிய யோகத்தில் பசு முதலியன கட்டும் தறி மாறுதலினின்றி இருந்தாற்போல மனதை ஒரு நிலையினில் நிறுத்திச் சிவத்தை அறிகின்றவர்கள். யோகிகள் பூவினுள் மணம் பொருந்தி இருப்பது போல சீவனுக்குள் சிவமணம் பூத்துப் பொலியும். ஆதலின் தெளிந்த சிந்தையராய், பிறவி நீங்கி விளங்குவர். எனவே யோகியர்க்கு சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றும், கிரியையாளர்க்கு சரியை, கிரியை ஆகிய இரண்டும், சரியையாளர்க்கு அஃதொன்றுமே கூடும்.

**ஞானம்**

ஞானத்தைக் காட்டிலும் பிற நெறி இல்லை. அதனினும் முக்தி யளிக்க வல்லதுமில்லை. மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய நான்கையும் அடக்கியாள்பவனே, சன்மார்க்கி எனப்படுவான். அவனே ஞானியாவான். ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்கு வகையாகக் கூறப்படும்.

| | | |
|---|---|---|
| ஞானத்தில் சரியை | : | மேலோர் சொற்கேட்டு நடத்தல். |
| ஞானத்தில் கிரியை | : | திருவடிப்பேற்றினை நாடுவது. |
| ஞானத்தில் யோகம் | : | தத்துவங்களைக் கடந்து அருள்வெளி நிற்றல் |
| ஞானத்தில் ஞானம் | : | அருள் வெளியில் கலத்தல். |

ஞானத்தில் ஞானம் பெற்றவரே சிவன் முத்தர் அல்லது சித்தர் எனப்படுவர். சரியை என்பது அங்கசுத்தம். கிரியை என்பது மனப் பக்குவம் செய்தலாகிய அகநிகழ்ச்சி. இது இளமை நிலை. யோகம் என்பது மனத்தை அடக்கி வாயுவைப் பக்குவப்படுத்தும் முதுமை நிலை. ஞானம் என்பது சிவமாய் நிற்றல். இவையே திருமூலர் மனித வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளாகக் கூறியுள்ளார்.

**முக்குற்றங்கள்**

ஆருயிர்களின் பிறப்புக்கு வித்தாக இருப்பது மூன்று. அவை காமம், வெகுளி, மயக்கம் என்பன. இக்குற்றங்கள் மூன்றும் நம்மை

துன்பத்துக்குள்ளாக்குவன. மயக்கத்தால் தனக்கு தகுதியற்ற பொருளை விரும்பி, விரும்பிய பொருள்கிட்டாத நிலையில் கோபமுற்று, அதனால் உயிர்கள் அழிகின்றன. அதனால் இன்ப துன்ப நுகர்ச்சிக்குட்பட்டு, பிறப்பு, இறப்புக்கு ஆளாகின்றன.

இதனையே வள்ளுவரும்,

**காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக் கெடுநோய்**

என்பார். இதனை திருமந்திரம் 2396-ம் பாடல் வற்புறுத்துகின்றது.

## தொகுப்புரை

நம் உடம்பு திருவடியுணர்வு பெற்று முக்தி பெறுதற் பொருட்டே இறைவனால் தரப்பட்டது. அவ்வுடம்பை மெய்யுணர்வு வழியில் பழக்கி அத்திருவடி உணர்வினைப் பெறுதல் வேண்டும். அதனை வீணே அழிய விட்டால் உயிர் பயனடையாது. அது பாலை பருகுவதன் முன் பாற் கலத்தை அழியவிடுவதனை ஒக்கும். அவ்வுடம்பை வளர்க்கும் வழி திருவைந்தெழுத்தை எண்ணல், அதனை இடையறாது செபித்தல், பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சிவபெருமானை அனைத்து பொருள் களிலும் காணல் இதுவே உடம்பை வளர்க்கும் வழி. அதனால் உடம்பிலுள்ள உயிருக்கு வளர்ச்சியுண்டாம். உயிர்வளர மெய்யுணர்வு தோன்றும். தோன்றவே சிவபெருமான் உயிர்க்குயிராய் அருள் செய்வதற்காகவே கோயில் கொண்டுள்ளான். இது அவனுடைய உடைமை எனப் போற்றுதல் நம் கடமை. இதனை திருமூலர் பெருமான்,

**"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று**
**உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"**

என்கிறார்.

# 52. திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்

திருமதி ஞா. சுஜாதா சிவகுமார், வேலூர்.

"அறத்தினூங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு" - திருக்குறள்

திருவள்ளுவர் திருக்குறளில் ஒருவருடைய வாழ்க்கைக்கு அறத்தை விட நன்மையானதும் இல்லை அறத்தைப் போற்றாமல் மறப்பதை விடக் கெடுதியானதும் இல்லை என்று அறத்தின் சிறப்பைக் கூறியுள்ளார்.

சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறை திருமந்திரம் ஆகும். இதனை அருளியவர் திருமூலர் இந்நூலை இவர் படைக்கக் காரணம்,

'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செயயு மாறே'

என்ற அவரது பாடல்வரிகளால் உணர முடிகின்றது.

**நூலமைப்பு**

'மூலன்உரை செய்த மூவாயிரம் தமிழ்
மூலன்உரை செய்த முந்நூறு மந்திரம்
மூலன்உரை செய்த முப்பது உபதேசம்
மூலன்உரை செய்த மூன்றும் ஒன்றாமே'

இப்பாடல் வழி திருமூலர் இந்நூலை மூவாயிரம் பாடல்களை கொண்டு, முந்நூறு மந்திரங்களால் முப்பது உபதேசத்தைப் படைத்துள்ளார் என அறியமுடிகிறது.

இலக்கியம் மக்களின் சமுதாய வாழ்வினையும் காலச் சூழ்நிலை யினையும் எடுத்துக்காட்டும் காலக்கண்ணாடி ஆகும். அவை மக்களுக்காக ஓர் உயர்ந்த குறிக்கோளினையோ, கோட்பாட்டினையோ உணர்த்தும் நோக்கமாக அமையும். இம்முறையிலேயே மக்கள் அறவாழ்வு மேற் கொண்டு அறநெறியில் பொருளீட்டி, இன்பம் அடைந்து, வீடு பேறடைய வேண்டும் என்றே பல அறநூல்கள் படைக்கப்பட்டுள்ளன.

உலகியல் வழக்கில், வாழ்க்கை நடைமுறையை புனைந்துரையாக வாழ்க்கை நடைமுறையான அறக்கருத்துக்கள் அமைவன திருமூலரின் திருமந்திரம் ஆகும்.

இந்நூலில், மக்களின் செந்நெறி வாழ்க்கை முறையும், இறைவனிடம் காட்டப்பெறும் அன்பு நெகிழ்ச்சியும் பெருமிதமும், இறையுணர்வுப் பாடல்களின் வேரும் விழுதுமாக உள்ள அறக்கருத்துக்கள் உணர்த்தப்படுகின்றன.

திருமந்திரம், 'அறம்பொரு ளின்பம் வீடடைதல் நுற்பனே' என்று பவணந்தி முனிவர் நன்னூலில் கூறும் நூல் பயனை முபமையாகக் கொண்டு திகழ்கிறது.

திருக்குறள் உலக அறங்கள் எல்லாவற்றையும் மொழிந்தாலும் வீடுபேறு அடைதலை கூறவில்லை. ஆனால் திருமந்திரம் அறம் பொருள் இன்பம் ஆகியவற்றை நெறிப்பட விளக்கி வீடுபேறு அடையும் முறைகளையும் விளக்கும் முதல் நூலாகத் திகழ்கிறது.

உலகோர், காலை எழுந்தவுடன் திருமந்திரத்தைப் பொருளுணர்ந்து ஓதிவந்தால் உலக நாயகனாகிய இறைவனை அடைந்து இன்புறுவர், இதனைத் திருமந்திரப் பாயிரம்,

'காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே'

என்றுரைக்கிறது.

திருமந்திரம் சாத்திர நூலாகவும் தோத்திர நூலாகவும், வாழ்வியல் நூலாகவும் விளங்கிய ஓர் ஆகம நூல் ஆகும். ஆகமங்களின் கருத்துச் செறிவைத் திருமந்திரத்தின் ஒன்பது தந்திரங்களிலும் காணலாம்.

**அன்பே அருளின் முதல்படி**

"அன்பு என்பது அகத்தே உணரும் மென்மையான உணர்வு; இதற்கு புறவடிவம் என்ற ஒன்று இல்லை. அன்பு ஒருவனை உந்த அவன் தருமச் செயலில் ஈடுபடுவான்; அதுவே அன்பின் அடையாளமாகக் கருதப்படும். அன்பு தெரிந்தவர்களிடையேயும் பழகியவர்களிடையேயும் மலரக் கூடியது. ஆனால், அருள் என்னும் அன்பு ஈண் குழவி எல்லா மனிதரிடையேயும் வேறுபாடு காண இயலாத நிலையில் தோன்றுவது. உலகில் அன்புடையோர் பலர். அருளுடையோர் மிகச்சிலரே. அன்பும் அருளும் மனித சமுதாயத்தை உயர்த்துவன ஆகும்.

அன்பு என்பது ஒருவருக்கொருவர், பகிர்ந்துகொள்ள வளரும் தன்மை கொண்டது. ஒருவர் அன்புடன் சிரிக்க எதிரே இருப்பவரும் அவ்வன்புடனேயே சிரிக்க அங்கு உண்மை அன்பு பெருகும். இவ்வாறே அருளும் எந்த அளவு உண்மை அன்புடன் இறையை நாடுகிறோமோ அந்த அளவு பெருகும். திருமந்திரப்பாடல்,

'அன்பும் சிவமுமிரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்

அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே'

என உணர்த்துகின்றது.

### அறம் செய்வான் இயல்பு

எவர் ஒருவர் தம்மை அறிய முற்படுகின்றாரோ அவர் சிவபெருமானது திருவடியை வணங்குபவர் ஆவார். தம்மை அறிபவரே உண்மையை உணர்பவர் ஆவார். தம்மை அறிபவர்க்கு இறைவனே துணை ஆவான்.

ஒரு மனிதன் செய்யக்கூடிய சில அறங்களைச் சொல்கின்றார் திருமூலர். உணவு உண்பதற்கு முன் இற்றவனை வணங்க வேண்டும் என்றும், அப்படி வணங்கும் போது பச்சிலை தூவி வணங்க வேண்டும் என்றும், அதன்பின் பசுவுக்கு ஒரு வாய் அளவாவது புல் கொடுத்தல் வேண்டும் என்றும், நாம் உண்ணும் உணவில் சிறிதளவு மற்றவருக்கு கொடுத்து உண்ண வேண்டும் என்றும், மற்றவரிடம் இனிய சொல்லைப் பேசுதல் வேண்டும் என்றும் இந்த செயல் அறங்கள் யாவும் எல்லோராலும் செய்யக்கூடியதே என்றும் எடுத்துரைக்கின்றார்.

மேலும் இருவகையான பற்றுக்களையும் நீக்கிய சிவஞானியர்க்கு அளிக்கும் உணவே அறமாகும் என அறநூல்கள் கூறும். அங்ஙனமிருந்தும் கல்வியால் சிறந்து விளங்கும் மனிதர் எதிர்பார்த்திருந்து ஒரு கிணற்றங் கரையிலோ குளத்தின் கரையிலோ தங்கியுள்ள சிவஞானியரை அழைத்து வந்து உண்ணச் செய்வதன் பயனை பட்டினத்தார், 'இருக்கும் இடம் தேடி என்பசிக்கே அன்னம் விரும்பமுடன் தந்தால் உண்பேன்' என்று கூறுகின்றார். இக்கருத்திலிருந்து சிவனடிகள் உணவைத் தேடிச் செல்ல விருப்பமற்றவர்கள் என்று அறிய முடிகிறது.

### அறம் செய்ய வேண்டும்

அறம் செய்யாத உள்ளத்தை உடையவரே காமம், வெகுளி, மயக்கம் என்ற குற்றங்களை அகற்றி அறிவைப் பெருக்கவில்லை. செல்வம் இருந்த நாளில் அறமும் செய்யவில்லை. உலகில் காலத்தை கழித்து ஒரு பயனுமில்லை இந்நிலையில் உலகத்தில் காலத்தை கழித்து என்ன செய்ய முடியும். இந்த உடலானது எரிந்து அழியும் காலத்தில் அறம் செய்யாமல் நீங்கள் காத்து வைத்த பொருள் என்ன ஆகும். அதனால் உங்களின் வீடு பேற்றிற்கு உதவ முடியுமா என கேட்கின்றார்.

அகப்பற்றும் புறப்பற்றும் துறந்தவர்க்கு இந்த உலகத்தில் எவ் வகையான உறவும் இல்லை. இறந்துவிட்டவர்க்கு இவ்வுலக இன்பமும் இல்லை. இம்மையில் அறம் செய்யாமல் மறந்தவர்க்கு இறைவன் வழித் துணையாக வரமாட்டான். இம்மூன்று வகையினரும் அறம் செய்யும் முறையை அறிய மாட்டார்.

**திருமந்திரம் காட்டும் அறக்கருத்துக்கள்**

அறத்திணை என்பது ஒழுக்கம், வழக்கம், நீதி, கடமை, ஈகை, புண்ணியம், அறக்கடவுள், சமயம் என்னும் எட்டுப் பொருள்களில் வழங்குவர்.

திருமந்திரமோ - கொல்லாமை, புலால் மறுத்தல், நல்குரவு, அறம் செய்யாமை, கல்லாமை, கள்ளுண்ணாமை, திருக்கோயிலிழிவு, மயேச்சுர நிந்தை, கூடா ஒழுக்கம், மோட்ச நிந்தை, பொய் கூறல், அவா ஆகிய வற்றை அறத்திற்குப் புறம்பானவைகளாகக் குறிப்பிடுகின்றது.

**"அறனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்**
**சிவநெறி தேடித் திரிந்தஅந் நாளும்**
**உரநெறி யுள்ளக் கடல்கடந் தேனுந்**
**தரநெறி நின்ற தனிச்சுடர் தானே"**

**ஒழுக்க அறம்**

திருமூலர், 'வேதத்தில் குறிப்பிடப்படும் அறங்களை மனிதன் படித்து உணர்தல் வேண்டும் என்றும் திருமந்திரம் கூறுகின்றது. வேதத்தில் கூறப் படாமல் விடுபட்ட அறம் எதுவுமே இல்லை. ஆகவே அனைவரும் படிக்கத்தக்க நீதிகள் எல்லாப் பொருளும் நிறைந்த வேதத்தை படித்து முத்தியை அடைதல் வேண்டும்'' என்கிறார்.

அறிஞர் என்பவர் பதினெட்டு மொழிகளும் அறிந்தவர். அத்தகையவர் ஆகமம் கூறும் பொருள் நன்றாய் உணர்ந்தவர். அறிஞர் அறிந்த பதினெட்டு மொழிகளும் அண்டங்களுக்கு முதல்வனான சிவபெருமான் வெளிப்படுத்திய அறக்கருத்தை கூறுவனவாகும். ஆகவே அக்காலத்தில் அறநெறியில் வாழ்ந்தால் இன்பம் உண்டு என்றும், அறநெறி தவறினால் துன்பம் உண்டு என்றும், அதனால் மனம் தூய்மைப்பட்டு அறநெறியில் நிற்பதே இன்ப வாழ்க்கைக்கு வழி என்றும் உணர்ந்த முன்னோர் பல அறக்கருத்துக்களை கூறியுள்ளனர்.

**"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற"**

அறம் என்பது ஒருவன் தன் மனத்தில் குற்றம் இல்லாதவனாக இருக்க வேண்டும் என்பதேயாகும். மனத்தூய்மை இல்லாதவை ஆரவாரத் தன்மை உடையது என இத்திருக்குறளில் உணர முடிகின்றது.

பொறாமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகிய இந்த நான்கு குற்றங் களுக்கும் இடங்கொடுக்காமல் அவற்றை ஒழித்தலே அறமாகும் என்பதை திருவள்ளுவர்,

**"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்"**

இது போன்ற பல அறக்கருத்துக்களும் அறம் சார்ந்து தோன்றிய பழக்க வழக்கங்களும் மக்களிடையே ஒழுக்கத்தை வலியுறுத்துவனவாக அமை கின்றன. ஒழுக்கத்தின் அடிப்படையில் நன்மை தீமைகள் வரையறை செய்யப்படுகின்றன. இவற்றின் தொடர்பால் இரு வினைகள் தோன்றி உயிரைப் பற்றுகின்றன. வினைப்பற்று உள்ளவன் பிறவி தொடரும். பிறவி தொடர்ந்தால் உயிர் இறைவனைச் சென்று சேர முடியாது. எனவே உயிர் பேரின்பத்தில் திளைப்பதற்கான அடிப்படையாக ஒழுக்கம் வற்புறுத்தும் அறம் உணர்த்தப்படுகின்றன. அதனின்று தோன்றியதே அறக்கருத்துக்கள் ஆகும். வழக்கிலிருந்த பதினெட்டு மொழிகள் சொல்லும் அறத்தைக் கடைப்பிடித்தல் நன்று என்றும், வேத நூல்களைக் கடைபிடிப்பவர் தவத்தை மேற்கொள்வர், முத்தியும் அடைவர் என்றும் திருமூலர் கூறுகின்றார்.

நம்மை ஆழ்த்துகின்ற வினையான கடலிலிருந்து கரையேற்று வதற்கான தோணியாய் விளங்கி நமக்கும் உறவினர்க்கும் களைப்பைப் போக்கிக் காத்திட இரண்டு வழிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று அழியாப் புகழை உடைய இறைவனைப் பற்றி நின்று அறத்தை ஆற்றுவது மற்றொன்று இல்வாழ்வை நிகழ்த்தும் அறம். இவ்விரண்டுமே மறுமைக்குத் துணையாவன.

ஆதாரமாய் நின்ற மெய்ப்பொருளை உலகில் குறை சொல்லாத வனாய்ப் பிறநெறியில் செல்லாது பொருந்தி நீங்கள் மற்றவர்க்குக் கொடுத்த ஒன்றுமே துணையாகும். அதுவே சிவம் ஏற்படுத்திய முத்தி அடைவதற்குரிய வழி ஆகும்.

மேன்மையான மறுமைக்குரிய முத்தியும் இப்பிறவிக்குரிய செல்வமும் வேண்டினாரில் அரசன் எப்போதும் அறத்தையே நிலை நாட்டுதல் வேண்டும். சிறந்த கடல் நீரால் சூழப்பட்ட உலகில் வாழும் மக்கள் செய்யும் நல்வினை தீவினையாவும் தீமையிலும் ஆறில் ஒரு பங்கு உண்டாகுமாம். இதனை,

**அறக்கருத்துக்கள் கேட்கும் முறையும், நடக்கும் முறையும்**

அறத்தினை அந்தனர் வாய்மொழி வாயிலாகக் கேட்டு அறிந்து கொள்ளவேண்டும் என்றும், அதனைக் கடைப்பிடித்து அவ்வழி நிற்றல் வேண்டும் என்றும் அவ்வாறு நிற்பதால் சிவனருள் கிடைக்கும் என்று சிவனது அருளைப் பெற்றவர்கள் பேரின்பத்தில் திளைப்பர் என்றும். அதனால் ஒழுக்கம் சிறந்த ஒன்றாக யோகத்தின் கூறுகளாகிய இமய, நியமங்களோடு ஒன்றுவதாகும் என்கின்றார் திருமூலர்.

**இன்சொல் மொழிதல்**

**"இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"**

என்றுரைப்பார் திருவள்ளுவர். இதனை திருமந்திரம் இன்சொல் பிறரை ஏமாற்றும் நோக்கத்துடன் பயன்படுத்தலும் ஆகாது என்கிறது.

வஞ்சனை, பொய் முதலிய பிறர்க்குத் துன்பம் உண்டாக்கும் தீய சொற்களைச் சொல்லி அறமுறை கெடும்படி நிற்காதீர். பேராசைக் கொண்டு பிறர் பொருளைச் சிறிதும் விரும்பாதீர். எல்லா வகையிலும் மேம்பட்ட நல்ல பண்புகளை உடையவர் ஆகுவீர்கள். உண்ணும் போது யாரேனும் உண்ண நாடி வந்தால் ஓர் அகப்பை உணவு கொடுத்துப் பின்பு உண்ணுங்கள்.

இன்சொல் கூறுவதோடு இனியவற்றை நினைப்பவர் உள்ளத்தில் இறைவன் தங்குவதோடு அவர்களிடம் உறவாடுவான். உறவாடி மனத்தினுள் ஒன்றாய் இணைவான்.

**பொய் கூறாமை**

கரிய கண்டத்தையுடைய சிவன் செழுமையான கடல் சூழ்ந்த உலகில் பொய்யானவற்றையே பேசித் திரியும் மக்கள் உண்மையைப் பேசுவாராயின் தேவரும் வழிபடும் தன்மையை அளிப்பான். இவ்வுலகத்தைப் படைத்த அவ்விறைவன் பொய்மையும் மெய்மையும் நன்கு அறிவான்.

பிற உயிர்களுக்குத் தீங்கு ஏற்படாது நன்மை விளையும் என்றால் பொய்யும் ஏற்கத் தக்கதே என்பார் வள்ளுவர். ஆனால் பொய்யால் துன்பம் உண்டாகும் என்று கூறி, அதனை விலக்கல் வேண்டும் என்கிறார் இளங்கோவடிகள்.

'திருமூலரோ பொய் என்ற சொல்லில் இந்த உலகம் பொய்யானது என்னும் பொருளில் எடுத்தாளுகின்றார். மெய் என்ற சொல்லில் இறைவனை குறிக்கின்றார்.

இவ்வுலக மக்கள் இறைவனை உணர்ந்து கொள்ளாது பொய் பேசி அதனால் ஏற்படும் துன்பத்தில் வருந்தும் மனிதன், உண்மைப் பொருளான சிவனை நினைத்து அவன் பேரைச் சொல்லி மனத்தை ஒருநிலைபடுத்தினால் வானுலகில் உள்ளவர்களும் தொழுகின்ற தகுதியை மண்ணிற் பெறுவான் அந்த நிலைக்குத் தன்னை உண்மையோடு நினைப்போரையெல்லாம் உயர்த்து வான் சிவன் என்ற அறக்கருத்து திருமந்திரத்தில் உணர்த்தப்படுகின்றது.

**கொல்லாமை**

இறை வழிபாட்டில் 'வழிபடுதல்' இடம்பெறுகின்றது. பலியாக உயிர்களை இடக்கூடாது. பிற உயிரினங்களைப் பலியிடுதல் பொதுவாகச் சக்திக்குரிய வழிபாடாகக் கருதப்படுகின்றது. இத்தகைய வழிபாட்டை வழிபாட்டைத் திருமந்திரம் கடிந்துரைக்கிறது.

**புலால் மறுத்தல்**

திருமந்திரம் புலால் உண்பவரைப் 'புலையர்' என்கிறது. ஊண் உண்பவர்களுக்கு அம்மைப்பேறு கிடைக்காது என்கிறது. இதனால்

புலால் உண்ணுதல் சமுதாயத்தால் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று என்பதை உணரமுடிகிறது.

**கள்ளும் காமமும்**

கள்ளுண்ணுதலும், காமவேட்கையும் அறமற்ற செயல்களாகக் கொள்ளத்தக்கவை சக்தியை வழிபடும் சாக்தசமயத்தினர் கள்ளை விரும்புவர். இத்தகையோர் மகளிரை விரும்பிச் சிற்றின்பத்தில் ஈடுபட்டிருப்பரே அன்றி, ஞானத்தைத் தழுவி, அதன் பயனாகிய முத்தியை அடைய வேண்டும் என்னும் எண்ணம் எழாதவராய் இருப்பர். இதனால் கள்ளும் காமமும் கடிந்து ஒதுக்கப்பட வேண்டியவை என்று கூறுகின்றது திருமந்திரம்.

**களவு**

தனக்குச் சொந்தமில்லாத பிறருடைய பொருளை அவரறியாது தன்னுடைமை ஆக்கிக் கொள்ளுவது 'களவு' ஆகும். இதனை 'வெவ்வியனாகப் பிறர் பொருளைத் திருடாதீர்' என்று அறிவுறுத்துகிறது.

**ஈகை**

திருமூலர் ஈகையைப் பல நிலைகளில் உரைக்கின்றார். பொருளாகவும், உணவாகவும், உடையாகவும், பொன்னாகவும் ஈகைக்குரிய பொருள்களை ஏற்பவர் பசு, இரவலர், தவமுனிவர்கள் பிச்சை ஏற்காத முனிவர்கள் என்று தனித்தனியே காட்டுகின்றார்.

உண்டியும் உடையும், உறையுளும் கைம்மாறு கருதாது வறியவர்க்குக் கொடுப்பது ஈகை. எல்லோரும் கடைபிடிக்கக் கூடிய ஈகை எளிய நிலையில் பசுவுக்குக் கைப்பிடி அளவு புல்லை உணவாகக் கொடுப்பது. தான் உண்ணும் உணவில் ஒரு கைப்பிடி உணவினைப் பிறருக்குக் கொடுத்து உண்பது. இச்செயலால் ஈகைக்குணம் மறையாது பிறருக்கு நலம் உண்டாகும். இதனால் அறம் வளரும் என்கிறார் திருமூலர்.

**மாதர் ஆசையில் மயங்குபவர்**

பொருளிடத்துப் பற்று கொண்டவரும் அறிவை மறைத்து ஆளும் அறியாமையான இருளில் தோன்றிய மின் ஒளி போன்ற சிறிய அறிவைப் பெரிது என்று மதித்திருப்பவரும், மருட்சியுடைய பார்வை கொண்ட மங்கையரிடம் மயக்கம் கொள்வர். அங்ஙனம் மயங்கிய மயக்கத்தை மாற்ற முடியாதவர் ஆவர்.

இலை முதலானவற்றால் அழகுடையதாயினும் எட்டிப்பழம் குலையாய்ப் பழுத்தாலும், அக்குலையில் கவர்ச்சியுடைய பழத்தைப் பறித்து உண்ணுதல் இயலாது. அது போல், கொங்கை அழகைக் காட்டிப் புன்முறுவல் செய்பவர் மீது அவரது கவர்ச்சியிலே ஈடுபடாது விலகுதல் வேண்டும். அம்மங்கையரிடம் செல்லும் மனத்தையும் கடிதல் வேண்டும்.

**பிறன்மனை நோக்காத அறம்**

பிறன்மனை நோக்காமை ஒரு பெண்ணறமாகும். அன்புடைய மனைவி வீட்டிலே இருக்க, அவளை விட்டு பிறரால் காக்கப்படும் மனைவியை விரும்பும் காமியர்செயல் வீட்டில் நன்கு காய்த்துப் பழுத்துள்ள பலாப்பழத்தை உண்ணாமல், காட்டில் பழுத்துள்ள ஈச்சம்பழத்தைப் பெறத் துன்பப்படுவது போன்றதாகும் என்கின்றார் திருமூலர்.

**பிறர் மனைவியை விரும்புபவர் நிலை**

நன்றாக வளர்க்கப் பெற்ற இனிய மாம்பழத்தை சேமிப்புப் பொருளாக நினைத்து அறையிலே வைத்துவிட்டு, தகுதியற்றி புளியம் பழத்துக்காகப் புளிய மரக்கிளையில் ஏறி ஆலோசனை இல்லாதவராய் உயிர் வருந்துகின்றனரே.

திருமூலர் வேதத்திற்கும், சித்தாந்தத்திற்கும் ஓர் இணைப்பை ஏற்படுத்துகிறார். தமிழில் தோன்றிய முதல் யோக நூல் இதுவே என்றும் முதல் சித்தரும் இவரே.

இந்நூலிலுள்ள ஒன்பது தந்திரங்களுள் முதல் நான்கு தந்திரங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் உணர்த்துகின்றன எனலாம். ஐந்து முதல் ஒன்பது வரையில் உள்ள ஐந்தும், வீட்டுப்பேறு, வீட்டுப்பேற்று வழி, வழிபாடு, வழிபாட்டுறுதி, வாழ்வு ஆகிய ஐந்தையும் ஒருவாற்றால் உணர்த்துவன எனலாம்.

திருமந்திரம் அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அறத்தின் அடிப்படையானது, முப்பொருள் உண்மையை உணர்த்துவது. அதுதான் பதி, பசு, பாசம் என்பவை. யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உயிர் நிலையாமை என்னும் நான்கும் இப்பகுதியில் விளக்கப்படுகின்றது. இவற்றுடன் கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர் மனை நயவாமை ஆகியவற்றை விளக்கும் வண்ணம் காமம் வெகுளி மயக்கம் ஒழிக்கும் திறம் உரைக்கப்படுகின்றது. கல்வி, கேள்வி என்பனவும் இங்கு வலியுறுத்தப் படுகின்றன. இந்நூல் பொதுவும் சிறப்புமாக அமைந்து படிப்போர்க்கு இன்பமும் நன்மையும் உண்டாக்குகின்றது. இம்மை இன்பமே அன்றி முத்திப் பேரின் பதத்தையும் கொடுக்கின்றது இந்நூல். இதனை,

**'வைத்த பரிசே வகைவகை நன்னூலின்**
**முத்தி முடிவது'**

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

இப்பொருள் உணர்ந்த மக்கள் தமது இல்லங்களில் தினமும் படித்துப் பயனடைவர். ஆய்வு மாணவர் மேலும் பல ஆய்வுகள் நிகழ்த்தி அறம் பல உண்டாக்குவார்.

# 53. திருமந்திரம் தரும் முப்பொருள் உண்மை

திரு. மு. செல்வகுமார், மதுரை.

சைவ சித்தாந்தம் என்னும் சொல் சிவபெருமானைப் பற்றிய நிலையையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் குறிப்பதாகும். சைவசித்தாந்தம் என்ற இச்சொல்லை தமிழில் முதன்முதலில் திருமூலரே கையாளுகிறார். சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சைவசமயமாகும். "சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆவது" என்பது ஆன்றோர் வாக்கு. சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையை விளக்கி நிற்கின்றது. இதனைத் திருமூலரின் திருமந்திரம்,

பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல் பசுபாசம் அநாதி
பதியினைச் சென்ற அணுகாப் பசுபாசம்
பதியணுகில் பசு பாசம் நில்லாவே

என்கிறது. இதன் அடிப்படையில் திருமந்திரத்தில் இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையைப் பற்றி விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

**முப்பொருளின் பொது இயல்பு சிறப்பியல்பு**

- பதிக்குப் பொது இயல்பு → உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்றல். சிறப்பியல்பு → சச்சிதானந்தமாய் நிற்றல்
- பசுவுக்குப் பொது இயல்பு → கருவி கரணங்களுடன் நிற்றல் சிறப்பியல்பு → கருவி காரணங்களினின்றும் நீங்கி உடனாய் நிற்கும் சிவமாய் நிற்றல்.
- பாசத்திற்குப் பொது இயல்பு → காரிய ரூபமாய் நிற்றல், சிறப்பியல்பு → காரண ரூபமாய் நிற்றல்

**இறை கொள்கை (பதி)**

இறைவன் வியாபகப் பொருள். உயிர் வியாப்பியப் பொருள். அதனால் இறைவன் அஞ்ஞான காலத்தில் விளங்கித் தோன்றாமலும், முக்தி காலத்தில் விளங்கித் தோன்றாமலும் ஆகிய வேற்றமையும் உயிரை விட்டு என்றும் நீங்காது இருப்பான். சைவ சமயத்தில் கூறப்படும்

இறைவன் ஒருவன் தான். அவ்விறைவன் அநாதிப்பொருள். அநாதி என்பது இறைவன் தொடக்கமும், இறுதியும் இல்லாதவன். இறைவன் முழு நிறைவு உடையவன். தன் இயல்பால் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன். தன் அருளால் ஒவ்வொரு பொருளிலும் கலந்து நிற்பவன். எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன். இவ்விறைக் கொள்கையில் திருமந்திரத்தில் கூறப்படும் செய்திகளைக் காணலாம்.

திருமந்திரத்தில் அமைந்துள்ள பாடலில் சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் எதுவும் இல்லை. அவனுக்கு இணையானவர் எங்கு தேடினாலும் யாரும் இல்லை. அனைத்து புவனங்களையும் கடந்தவன் . பொன்போல் மிளிரும் சூரியனை ஒத்த சடாமுடியை உடையவன். தாமரை மலரில் எழுந்தருளி இருப்பவன். இதனை,

**சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்து அன்று பொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே** (5)

என்றருளிச் செய்துள்ளார் திருமூலர்.

சிவபெருமானே ஈசுவரனாயும், ருத்திரனாயும், திருமாலாயும், அயனாயும் நிற்கிறான். கண் ஒன்றே பிற பொருள்களை கண்டும் தன்னைக் காணாது. அதுபோல இறைவன் தன்னைக் காட்டாமல் உயிர்களுக்கு பிறவற்றைக்காட்டி நிற்பதே மறைப்பாற்றல் ஆகும். இதனைத் திருமூலர்,

**கண் ஒன்று தான் பல காணும் தனைக்காணா**
**அண்ணலும் அவ்வண்ணம் ஆகி நின்றானே** (440)

என்கிறார்.

திருமந்திர பாயிரத்தில் திருமூலர் சிவபெருமான் ஒருவரே கடவுள் என்பதைத் தெளிவுபடுத்துகிறார். திருமந்திரத்தில் அமைந்த முதல் பாடலில், சிவபெருமான் ஒருவனே கடவுள், அவன் அருளோடு இருப்பவன். அரன், அரி, அயன் என்னும் மூவருள்ளும் நிலைபெற்றிருக்கிறான். உலக அதீதன், உலகக் காரணன், உலகிற்கு உயிராய் இருப்பவன். உலக வடிவாய் இருப்பவன். ஐம்பொறிகளையும் இயல்பாகவே வென்றவன். ஆறு ஆதாரங்களாகவும் விரிந்து நிற்பவன். பஞ்ச பூதங்களுள் அட்ட மூர்த்தியாக கலந்திருப்பவன். என்பதை,

**ஒன்று அவன்தானே இரண்டு அவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான்கு உணர்ந்தான் ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழுஉம்பர்ச்**
**சென்றனன் தான்இருந்தான் உணர்ந்து எட்டே** (பாயிரம் 1)

திருமூலர் பாடலின் மூலம் அறியலாம்.

**உயிர்க்கொள்கை (பசு)**

உயிர்களைக் கடவுள் உண்டாக்கவில்லை என்பது சைவசித்தாந்தக் கொள்கை. உயிர் அறிவுடையப்பொருள், சைவசமயத்தைப் பொருத்த வரையில் ஓர் உயிருக்கு பல்வேறு பிறவிகள் உண்டு. இதனை மாணிக்கவாசகர்,

புல்லாகி பூடாய்ப் புழுவாய் மரமாகி
பல்விருகமாகிப் பறவையாய் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்

....... (சிவபுராணம் 26-29 வரிகள்)

சைவ சமயத்தில் மானுடப்பிறப்பிலே வீடுபேறு கிடைத்துவிடாது. இறைவனை அடையும்வரை உயிர் பிறப்பெடுத்துக் கொண்டே இருக்கும். சைவ சமயம் உயிர்களை 'அநாதி' என்கிறது. உயிர்கள் நான்கு வகையில் இன்பத்தை துய்க்கும். சாலோகம், சாரூபம், சாமீபம், சாயுச்யம் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாகும். உலகியல் சார்புகொண்டு விளங்கினால் துன்பத்தையும், அருளியல் சார்புகொண்டு விளங்கினால் இன்பத்தையும் துய்க்கும் என்று சைவ சமயம் கூறுகிறது.

உயிர்கள் முத்திறப்படும். உயிர்களை உடம்பினுள் ஆக்கியவன் சிவபெருமானே ஆவான். விஞ்ஞானகலரில் ஆன்மாக்கள் நான்கு வகையினர். விஞ்ஞானகலர் - ஆணவமலம் மட்டுமே உடையவர். பிரளயாகலர் மூன்று வகையினர். பிரளயாகலர் ஆணவனம், கன்மம் என்ற இரு மலங்களை உடையவர், சகலர் மூன்று வகையினர். சகலர் ஆணவனம், கன்மம், மாயை என்ற மும்மலங்களை உடையவர். எனவே ஆன்மாக்கள் பத்து வகைப்படும் என்று திருமந்திரம் கூறுகிறது. இதனை திருவருட்பயனும்,

திரிமலத்தார் ஒன்று அதனில் சென்றார்கள்
ஒரு மலத்தாராயும் உளர் (திருவருட்பயன் 12)

என்கிறது.

உயிர், மாயாகாரியம் ஆகிய துன்பங்களில் தோய்ந்து தானும் அசத்தாகும். ஞானமே வடிவாகிய குருவின் அருளாலே, திருவருள் தூண்டப் பெற்று செயல் ஒடுங்கி நிற்கும். உயிர்களை நாற்கால் பசுவோடு உவமித்துத் திருமூலர்,

கற்ற பசுக்கள் கதறித் திரியினும்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்
முற்ற பசுக்கள் ஒருகுடம் பால் போது
மற்றைப் பசுக்களும் வறள் பசுதானே (2015)

என்றருளிச் செய்துள்ளார். புவன போகங்களைத் துய்த்து உலகியலில் உழலும் உயிர்களை 'கொல்லையில் மேயும் பசுக்கள்' (2016) என்கிறார்.

சீவன் சிவனை உணர்ந்து அனுபவிக்கத் தலைப்பட்டால் உயிர் சிவமாம் தன்மை எய்தும். சீவனுக்குத் தற்போதம் உள்ளவரை சிவனை அறிய இயலாது. 36 தத்துவங்களையும் சிவபெருமானே உயிருக்கு அறிவுறுத்தினார் என்கிறார் திருமூலர். அவற்றை உணர்ந்த பின்பு சிவபெருமான் அவற்றைக்கடந்து பொருளாக நின்று காட்சி அளிப்பான்.

**ஆக மதத்தன ஐந்து களிறுள**
**ஆக மதத்தறி யோடு அணை கின்றில**
**பாகனும் பொய்த்து அவை தாமும் இளைத்த பின்**
**யோகு திருந்துதல் ஒன்று அறியோமே (2023)**

இப்பாடலில் ஐம்பொறிகளை யானையாகவும், ஆன்மாவை பாகனாகவும் உவமித்துக் கூறுகிறது திருமந்திரம் என்பதை அறியலாம்.

திருமந்திரம் ஏழாம் தந்திரத்தில் உயிரைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. உயிர் ஒருபோதும் இறைவனைப் பிரிந்திருக்கவே இயலாது. சிவனும், சீவனும் பிரிந்து நிற்காது. அவ்வாறு பிரிந்து நின்றால் வீடுபேறும் கிட்டாது. இக்கருத்தை அன்னப் பறவையோடு உவமித்துக் கூறுகிறார் திருமூலர். இதனை,

**அன்னம் இரண்டுஉள ஆற்றங் கரையினில்**
**துன்னி இரண்டும் துணைப்பிரி யாதன**
**தன்னிலை அன்னம் தனிஒன்றுஅது என்றக்கால்**
**பின்ன மடஅன்னம் பேறு அணு காதே (2003)**

என்றருளிச் செய்கின்றார் திருமூலர்.

**தளை கோட்பாடு (பாசம்)**

**சைவ சமயத்தில் உலகம் என்றுமுள்ள அநாதிப்பொருள்,**
**பதியனைப் போல் பசு பாசம் அநாதி - திருமூலர்**

என்றுமுள்ள மாயையிலிருந்து இறைவன் உலகத்தைப் படைக்கின்றான். உலகமும் ஒருசடப்பொருள், மாயையும் ஒரு சடப்பொருள். இந்த மாயையிலே இறைவன் உலகத்தை ஒடுக்குகிறான் என்கிறது சைவம். பாசத்தினை பொதுவாக மூன்று அவை ஆணவம், கன்மம், மாயை என்பதாகும்.

அருமையாக பெற்ற உடம்பை பேணிக்காக்க வேண்டும். உடம்பு அழிந்தால் உயிர் உடலைவிட்டு நீங்கிவிடும். ஞானத்தை அடைமாட்டார். எனவே உடம்பைப் பேணி அதிலுள்ள உயிரை வளர்க்க வேண்டும். இதனை,

**உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே (724)**

என்று எடுத்தியம்புகின்றார்.

உடம்பைக் குற்றம் உடையது என்று இகழாது உடம்பினுள்ளே சிவம் உறைகின்றான் என்றும் உடம்பைப் பேண வேண்டுவது பெரிதும் இன்றியமையாததாகும் என்பதை,

உடம்பினை முன்னம் இழுக்கு என்று இருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின் றேனே (725)

என்று திருமூலர் இயம்புகின்றார்.

சாக்கிரத்தில் இந்திரியங்கள் பத்து, விடயங்கள் பத்து, வாயுக்கள் பத்து, அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து தத்துவங்கள் தொழிற்படுகின்றன. உடம்போடு உயிர்க்கு உள்ள தொடர்பை உணராதவர். மடத்தில் புகுந்த நாயைப் போலாவர். பரு உடலும், நுண்ணடலும், நுண்ணுடலுள் பரசரீரமும், பரசரீரத்துள் உயிரும் உள்ளது என்பதைத் திருமூலர்,

உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற உயிரை அறியார்
உடம்போடு உயிரிடை நட்பு அறியாதார்
மடப்புகு நாய்போல மயங்குகின் றாரே (2148)

என்றருளிச் செய்தார்.

சிவத்தை அறிந்தவன் நின்மலனாவன், ஒன்றையும் அறியாது கிடப்பவன் கேவலனாவன். இவ்விருவரின் வேறானவன் சகலன். ஆன்மா தனக்குத் தானே நண்பனாவான், பகைவனாவன். இம்மை, மறுமை, வினைப்பயன் முதலானவற்றைத் தெளிந்திருந்தவன் தனக்குத் தானே தலைவனாவான். இவ்வுண்மையைத் திருமூலர்

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான் செய்த வினைப்பயன் துய்ப்பானும்
தானே தனக்குத் தலைவனும் ஆமே - (2228)

என்று தெளிவுப்படுத்துகிறார்.

திருமந்திரம் கூறும் முப்பொருள் உண்மை என்ற தலைப்பில் அமைந்த இறை, உயிர், தளை பற்றிய செய்திகளை மேற்கூறியதன் மூலமும், இறை, உயிர், தளை இவை மூன்றும் என்றுமுள்ள அநாதிப் பொருள்கள் என்பதையும் இக்கட்டுரையின் வழி நன்கு உணரலாம்.

# 54. திருமந்திரம் அமைப்பும் சிறப்பும்

திரு. இர. செல்வராசு, சென்னை.

பாரினில் பக்திக்கு ஒரு தனிநாடு தமிழ்நாடு. பக்திச் சுவை நனி சொட்டும் தெய்வத்தமிழ் மொழியே அதன் தனிப்பெரும் மொழியாகும்.

'தமிழ்' என்றால் என்ன? தமிழர் அறியாத தமிழா! அல்ல.'' ''த-மி-ழ்'', வல்லின, மெல்லின, இடையின எழுத்துக்களில் இறை தத்துவத்தைத் தன்னுள் அடக்கி, இறை அனுபவத்தை உணர்த்தி நிற்கும்.

''த'' - வல்லினம் - வலிமை - ஆண் - இறைவனைக் குறிக்கும். ''மி'' - மெல்லினம் - மென்மை - பெண் - இறைவியைக் குறிக்கும். ''ழ்'' - இடையினம் - நடுவில் உள்ள சோமாஸ் கந்தரைக் குறிக்கும்.

இவ்விதம் ஒலி அமைப்பு முறையிலேயே இம்மொழி அமைந்து, இறை தத்துவத்தை உணர்த்தும், தெய்வத்தன்மை பொருந்திய தமிழில், வழிபாடு செய்ய, தமிழில் ஆகமம் செய்யத் தன்னை இறைவன் படை(ணி)த்தான் என்பதே மூலரின் முறையான கூற்றாக அமைந்தது எனக்கருதலாம்.

**''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே''**

என்பதே அவரின் அகச்சான்று.

பக்தி வளர்ச்சிக்கு முதன்மை கொடுப்பது பன்னிரு திருமுறைகள். அவற்றுள்ளும் பத்தாம் திருமுறையான திருமூலர் அருளிய திருமந்திரம், மந்திரங்களின் மகிமையையும், சித்தர்கள் வாழும் சித்திப் பெருவாழ்வு நிலையையும் விளக்க வந்த ஓர் உயரிய ஒப்பற்ற மறை ஞான நூலாகும். பன்னிரு திருமுறைகளும் மந்திர சொரூபமே ஆயினும், ''மந்திரம் என்றே சிறப்புப் பெயர் பெற்று, முன்னும் பின்னும் உள்ள மற்றைத் திருமுறைகளும் மந்திர வடிவே என்பதை விளக்கி நிற்கும் ஓர் உயர்ந்த ஞானப்பனுவல் ''திருமந்திரம்'' ஆகும்.

தரணி போற்றும் தன் நிகரில்லா இத்தனிப்பெரும் நூலில், தாம் அருளிய மந்திரங்களில், உயிரானது ஊண்பற்றி நின்ற ஒன்று என்று உறுதி செய்து, உடம்பைப் பேண வேண்டிய கடமையினைத் தெளிவு

படுத்தி, அதனால் காயசித்தி பண்ணுவதின் அவசியத்தை நன்கு உணர்த்தி, என்றும் நிலை பெற்று வாழும் சித்திப் பேரின்பப் பெருவாழ்வு நிலையினை விளக்குவார்.

**சித்தர்**

கடவுளைக் காண முயல்பவர் "பக்தர்"

கண்டு தெளிந்தவர் "சித்தர்". இவரே சிந்தை தெளிந்து, இறை உணர்வு மிளிர்ந்து, இறையடியினில் ஒன்றாகும் தன்மை பெற்றவர் ஆவர். இவ்விதம் தன்னையே தானறிந்த தலைமைச் சித்தராம் திருமூலர், மிகவும் நுட்பமான மந்திர தந்திர முறைகளை, மூர்த்தி நிலைகளை, வழிபாட்டு முறைகளை, நுண்மான் நுழைபுலம் மிக்கோருக்கு மட்டுமின்றி, ஏனையோருக்கும் எளிய முறையில் அருளிப் போந்துள்ளார்.

சித்தருள்ளும் தலைமைச் சித்தரும் தலை சிறந்த தவயோகியான திருமூலர், சிவலோகத்தை இங்கேயே தரிசித்தவர். இவரது மந்திர மறைமொழிகள் இறைவனது திருவாக்கே ஆகும்.

திருமந்திர நூல் அமைப்பு - திருக்கயிலையில் வீற்றிருந்து அருளும் நந்தியெம் பெருமானிடம் சிவாகமங்கள் இருபத்தெட்டையும் நேரிடை உபதேசமாகப் பெற்று, அவற்றுள் காரணாகமம் முதல் மகுடாகமம் வரை உள்ள ஒன்பது ஆகமங்களின் பிழிவைத் தமிழ் ஆகமமாக ஒன்பது தந்திரங்களாகச் செய்து அருளியுள்ளார் திருமூலர்,

**"நந்தி அருளாலே நாதனாம் பேறு பெற்றேன்."**

என்பதே இதற்கு அகச்சான்று.

"மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்", என்பதே மூலன் மொழியாக அமைந்து கிடக்க, கற்றோரும் மற்றோரும் தத்தம் கூர்த்த மதியினால் இடைச் செறுகலாகச் சேர்த்த ம(மா)ந்திரங்களையும் கூடுதலாகப் பெறும்பேறு பெற்ற நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளோம் நாம்!

இத்திருமந்திரப்பனுவலில், வேத, ஆகம சித்தாந்தக் கருத்துக்கள் எல்லாம் பாங்குற பொதித்து கிடக்கும் பாங்கினைக் காணலாம். இம் மந்திரங்களில் பிறப்பு இறப்பின் நோக்கங்களை விளக்குவார். வாழ்வில் மாந்தர், தாம் கடைப்பிடிக்க வேண்டிய நெறி முறைகளை வகைப் படுத்திக் கூறுவார். இறைவனை அடைய, சரியை, கிரியை, தவ, யோக ஞானப்பாதைகளை வகுத்துக் கூறுவார். இறை அனுபவத்தை தாம் முழுதும் உணர்ந்து, அனுபூதியாய்த் திகழ்ந்தவர். எங்கும் எதிலும் எப்போதும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளைத் தம்முள் உணர்ந்து தாம் பெற்ற இறை இன்ப உணர்வை, அனுபவத்தை உலகோர் அனைவரும் உணரவே திருமந்திர நூலை அருளியுள்ளார்.

**இறை உணர்வும் வழிபாடும்**

> **"உள்ளத்தின் உள் விளங்கி, உள்ளுக்குள்ளே அடங்கி உண்டென்று காட்டி விட்டான் ஒருவன் - ஒரு உருவமில்லா, அவன் தான் இறைவன்"**

இவ்வண்ணத்தன் என்றெழுதிக் காட்டொணா இறைவனை இவ்வண்ணம் படம் பிடித்துக் காட்டுவார் கவியரசு கண்ணதாசன். மேலும், அவரே, "உருவுக்குள்ளும் உருவை வைத்தவன்" என்றும், "கருவுக்குள் கருவை வளர்த்தவனும், இருளில் ஒளியை மறைவில் வைத்தவனும், ஒளியில் இருளை அருகில் வைத்தவனும் அவனே" என்பார்.

இவ்விதம் மரத்திற்குள் விதையையும், விதைக்குள் மரத்தையும் வைத்தவன் அவனே என உணர, உயிரினங்கள் அனைத்தும் இறை உருவே என உணரலாம். உன்னையே நீ உணர அந்த உணர்வின் வெளிப்பாடே இறை உணர்வும், இறைவழிபாடும் ஆகும்.

**மந்திரம்/தந்திரம்/யந்திரம்**

மந்திரம் - இறையருள் வயப்பட்ட நிறைமொழிமாந்தர் திருவாய் மலர்ந்தருளியவையே மந்திரங்கள் ஆகும். இவை, அனைத்தையும் அறியவும், உயிர்களுக்கு அருளுவதையும் செய்வன. அருளிக்கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வச்சொற்களின் பொருண்மையை யாண்டும் எங்கும் குறைவற நின்று, அவ்வப் பயன்களை அவ்வப்பொழுதே அருளி, சாதகனை வாழ்வித்து அருளும் தன்மையன இம்மந்திரங்கள்.

தந்திரம் - மந்திரங்களை ஓதிப் பயன்படுத்தும் முறைகளைக் கூறி, தன்னை அடைந்தோரைக் காத்து, மந்திரங்களின் பொருளை விளக்கும். மேலும் இங்கு அனுட்டான நடைமுறைகளும் விளக்கப்படுகின்றன.

யந்திரம் (சக்கரம்) - மந்திரங்களை மரபுவழி, முறையாக ஓதி உணர்ந்து, வழிபடும் முறை. அதனால் கிடைக்கும் பயன்களைக் கூறும். வரை, பீசம் ஆகியவற்றை அடைவு செய்து, "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதாள் வாழ்க," என்ற அசபா மந்திரத்தை அடியொற்றி, அகம்நெகிழ, அன்பு மீதூர, அறுவகைக் குற்றங்கள் அற்று, ஐம்புல அடக்கத்துடன், சந்தனம், குங்குமம், ஜவ்வாதுடன் மலர் சூட்டி வழிபட, ஞான மயமான உள்ளத் தாமரையில் அருட்சத்தி பதிந்து விளங்கி நின்று, சாதகர் கருதிய பயனைத் தந்தருளும் எனக்கூறும்.

"மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி,
தீராத நோய் தீர்த்தருள வல்லான்"......... (தி.6.ப.54.பா.8)

என சொல்லரசர் யந்திர வழிபாட்டின் சிறப்பினைச் சிறப்பித்துக் கூறுவார். உடற்பிணி, உயிர்ப்பிணியைத் தீர்க்கும் மாமருந்து இந்த வழிபாடே என்பது, "கூற்றாயினவாறு விலக்ககிலீர் என, நீடிய கோதில் திருப்பதிகம் பாடிய பிரானின் அருள் வாக்கு ஆகும்.

இச்சக்கரம் அம்பலவாணர் சத்தியுடன் மந்திர வடிவாய் நின்று உயிர்களுக்கு அருளுவதைக் குறிக்கும்.

வேண்டுவோர்க்கு வேண்டியதை வேண்டும் பொழுது வேண்டுமளவு தந்தருளும் தில்லைக் கூத்தனுக்கு வலப்புறம் பொன்னால் ஆன வில்வ இலைகள் அமைக்கப்பட்டுள்ளன. இவை திருமூலராலேயே பிரதிட்டை செய்யப்பட்டவை ஆகும். இதுவே சிதம்பரரகசியம் என்று அழைக்கப் படும் திருவம்பலச் சக்கரமாகும். சிதாகாயப் பெருவெளியில் அம்பலவாணர் அருட்சத்தியோடு மந்திர வடிவாய் யந்திரத்திற்குள் வீற்றிருக்கும் நிலையை இது குறிக்கும். சாதகர் விரும்பும் இம்மை மறுமைப் பயன்களுக்கு ஏற்ப, திருவைந்தெழுத்து பலவிதமாக மாற்றி மாற்றி அமைக்கப்பட்ட முறை இதில் உள்ளன.

**திருச்சிற்றம்பலம்**

தில்லைப் பெருங்கோயிலில் கூத்தப்பெருமான் ஆனந்தத் தாண்டவ மாடும் இடம் திருவம்பலம் ஆகும். இதுவே, சிற்றம்பலம், சிதம்பரம், பொன்னம்பலம், சொல்லும் பொருளுமாயுள்ள உலகுகள் யாவும் தோன்றி நின்று ஒடுங்கும் இடம், முத்தான்மாக்களின் உறைவிடம், இவ்வுலகின் நடுவிடம், விண்ணிலே மறைந்து அருள்புரி வேத நாயகன் இடை யறாமல் ஆடல்புரியும் உள்ளக்கமலம், யோக ஞான தியானத்தானம் ஆகும்.

இச்சிற்றம்பலம் (1) ஆதியான்மிகம் (2) ஆதிதைவிகம் (3) ஆதி பௌதிகம் என ஆகும்.

சிற்சத்தி, வீடுபேறு உற்றோரின் மெய்யுணர்வுடன் இறைவன் விளங்கி நின்று ஆடல்புரியும் இடங்களுள் ஒன்றாக "திருச்சிற்றம்பலமும்" விளங்கு வதனால், இந்த தெய்வத் திருவர்த்தை ஒப்புயர்வற்ற, சீரிய, செந்தமிழ் திருமந்திரமாகும். இதனாலேயே, சைவத்திருமுறைகளாகிய தமிழ் மறை களை ஓதுங்கால், அவற்றின் முதலிலும் முடிவிலும் பிரணவ ஓங்கார மூலமந்திரப் பொருளாயுள்ள "திருச்சிற்றம்பலம்" என்னும் இம்மூல மந்திரத்தை ஓதியே தொடங்குதலும் முடித்தலும் தொன்று தொட்டே வரும் மரபு ஆகியது.

தத்துவ உண்மைகள், சொந்த அனுபவ இரகசியங்கள், குருவின் துணையோடு மட்டுமே கற்க வேண்டிய பாடல்கள், நவில்தொறும் நூல் நயம் போலும் இசைத்துப்பாடி இன்புறத்தக்க தீஞ்சுவை கூட்டும் தத்துவத் திருப்பாடல்களால் அருளப்பட்டதே திருமந்திரம்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தமது யோக வலிமை யினால் திருமூலர் உணர்ந்து அருளிய பல நுட்பங்களை தற்கால அறிவியல் வல்லுநர்கள் ''சைக்கோட்ரானிக்ஸ்'' என்னும் விஞ்ஞான வளர்ச்சியினால், புதிய புதிய நுண்ணிய விஞ்ஞானக் கருவிகளின் துணை கொண்டு, ''எழுத்து ஒலிகள்'', ''ஒலி வீச்சுகள்'', ''உள்ளத்தின் மந்திர ஒலிகள்'', ''ஆன்ம ஆற்றல்கள்'' போன்ற பல நுண்ணிய மறை பொருட்களை ஆராய்ந்து கண்டு, உறுதி செய்கின்றனர்.

குறை மதியோடு கூத்தாடும் புல்லறிவாளர்கள் உருஷ்ய நூல்களில் கூறப்படும் மொழி இயல் நுட்பங்களை ஒரு சிறிதேனும் படித்து, உணர்ந்து, தெளிந்து, அனுபவித்து திருமூலரைத் திரும்பிப் பார்த்து, சித்தர்களின் மொழி எக்காலத்தும் பொய்யாமொழி என உணர்வார்களாக!

# 55. திருமந்திரத்தில் சக்தி வழிபாடு

திரு. சேதுமுருகபூபதி, புதுவை.

"தேவர்குறளும் திருநான்மறையின் முடிவும்
மூவர்தமிழும் முனி சொன்ன கோதையும்
திருவாசகமும் மூலன் சொன்ன சொல்லும்
ஒரு வாசகம் என்று உணர்"

இது தமிழ் மூதாட்டி ஔவையின் பாடல். இதில் திருமந்திரத்தை மூலன் சொன்ன சொல் என்று குறிப்பிடுகிறார். வடக்கே இருந்து இரண்டு சுந்தரங்கள் வந்தது. ஒன்று திருத்தொண்டர் தொகை தந்த சுந்தரர். மற்றொன்று திருமூலர் என ஆன சுந்தரநாதன். சுந்தரநாதன் கயிலாயத்தில் இருந்து அகத்தியரிடம் தமிழ் கற்றுக் கொள்வதற்காக, தவத்தையும் நல்ல பண்புகளை மட்டுமே சுமக்கும் ஒழுக்கத்தையே பொதியாக சுமந்து விளங்கும் பொதிகை மலையை நோக்கி வந்த சுந்தரநாதன், சாத்தனூரில் இறந்து கிடந்த மூலன் உடம்பில் புகுந்தான். அஷ்டமா சித்திகள் பெற்றவன் என்பதனால் கூடு விட்டு கூடு பாய்ந்து மூலன் என்ற தமிழ் உடம்பில் புகுந்த மாத்திரத்திலே அவன் ஆன்மாவிற்கும் தமிழ் பாடல் ஆற்றல் வந்தது. சொல்லுலகம் என்ற காட்டில் மொழி என்ற கிளையில் ஆன்மா என்ற பறவை தங்கும். எந்த கிளையில் ஆன்மா என்ற பறவை தங்குகிறதோ அதன் இயல்பாகவே மாறும். அதுபோல தமிழ்மொழி பேசிய மூலன் உடம்பில் சுந்தரநாதன் என்ற ஆன்மா நுழைந்ததும் தமிழ் மொழி பேசும் ஆற்றல் வந்தது. அதுமட்டுமில்லை வேத மார்க்கத்தினால் இருட்டடிக்கப்பட்டு இருந்த (பதி-பசு-பாசம்) என்ற முப்பொருள் உண்மையை மையமாக வைத்து மீண்டும் தமிழ்ச் சமுதாயம் கண்ட சைவ நீதி என்ற உண்மையை தமிழால் தமிழனுக்கு சொல்லும் வன்மையையும் திருமூலர் சொல்லி உள்ளார். இதுதான் அநாதி சைவம் எனப்படும்.

சொல்லுலகத்தில் மந்திரம்-பதம்-வண்ணம் என்று மூன்று நிலைகள் உண்டு. மந்திரம் என்றால் சொற்றொடர் எனப்படும். 'மந்' என்றால் நினைப்பது என்று பொருள், 'திரம்' என்றால் நினைப்பவரை காப்பாற்றுவது என்று பொருள். மந்திரம் என்றால் நினைப்பவரை காக்கும் சொற்றொடர் எனப் பொருள்படும். ஒருவருடைய சொல் நினைப்பவரை காக்கும் ஆற்றலை எப்பொழுது பெறும் என்றால் சொல்லைச் சொல்லுபவன் கல்வி, கேள்வி, ஞானம் போன்றவைகளில் சிறந்தவனாகவும், அன்பு,

பண்புகளில் உயர்ந்தவனாகவும் கருவி, கரண ஒழுக்கங்களில் தவறாத வனாக விளங்கினால் அவனுடைய சொற்கள் தெய்வீகத் தன்மை பெறும். இந்த ஆற்றல்களை சமயக் குரவர்கள் பெற்றிருந்தார்கள். ஆகவே அவர்கள் பாசுரம் பாடியே அதிசயத்தையும் அற்புதத்தையும் காண்பித்து பேசப்பட்ட கடவுட்கொள்கைகளில் சைவ நீதியே சிறந்தது என்று நிலைநாட்டவும் செய்து பிறந்த மந்திரங்களில் நமச்சிவாயம் என்ற மந்திரமே சிறந்தது என்று நிலை நாட்டவும் செய்துள்ளார்கள். இப்படி பாசுரங்களில் ஆச்சரியத்தை உண்டாக்கிய சமயக் குரவர்களை போல நம்மால் செய்ய முடியவில்லை ஏன்? மேலே சொன்ன மூன்று தகுதிகளும் ஒருங்கே நம்மிடத்தில் யாரிடத் திலும் இல்லை என்பதுதான் உண்மை. தெய்வ நம்பிக்கையை கூட அற்புதத்தையும் ஆச்சரியத்தையும் காட்டி வளர்த்து வந்ததனால் அதுபோல் அற்புதத்தையும் ஆச்சரியத்தையும் கண்கூடாக காட்டினால் தான் நம்ப முடியும் என்று பகுத்தறிவாதம் பேசுகிறார்கள். அதில் தவறில்லை.

இறைவன் மந்திர வடிவானவன் என்பதை திருஞானசம்பந்தர் மந்திரமாவது திருநீர் என்றார்.

"மறைமொழி மாந்தர் ஆணையில் கிளர்ந்த
நிறை மொழிதானே மந்திரம்"

என்பார் தொல்காப்பியர்.

"நாதவிந்துக்கள்லாதி நமோநம
வேத மந்திர ஸ்வரூப நமோ நம"

என்பார் அருணகிரியார்.

இப்படி தான் பாடிய மூவாயிரம் பாடல்களுக்கு "திருமந்திரம்" என்று பெயர் பெற்று உள்ளது என்றால் அந்த பாடல்களின் அருமை பெருமைகளை முழுவதும் சொல்லமுடியாது. இருந்தாலும் தலைப்பை ஒட்டி ஒரு சிலவற்றைச் சிந்திப்போம்.

"திரு" என்ற சொல்லுக்கு இறவாத இன்ப-அன்பு எனப் பொருள் படும். திரு என்ற அடைமொழி உடைய ஆன்ம இலக்கியம் ஏதாவது ஒன்றைப் படித்தால் அது என்ன செய்யும் என்றால் இது நாள்வரை ஆன்மாவை நோய் போல் ஒட்டி வந்த பிறப்பு இறப்பு என்ற நோயை உயிரில் இருந்து கழித்து விடும். அப்படி இறப்பு கழிக்கப்பட்ட உயிர் - பிறப்புக்கு தகுதி அற்றதாகிவிடும். பிறப்புக்கு தகுதி இல்லாத ஜீவனை சிவமெனச் சிறக்கச் செய்து உய்வு என்ற உரிமையை தந்து இறைவனுக்கு உரியதாக ஆக்கும். ஆன்மா என்றைக்குமே சுதந்திரம் இல்லாத ஒன்று அது இறைவனையோ அல்லது பாசத்தையோ சார்ந்திருக்கும்.

திருமூலரின் திருமந்திரம் 12 திருமுறைகளில் 10வது இடத்தைப் பிடித்துள்ளது. காலத்தால் முந்தியது. திருமந்திரம் என்பதுமே அது

சிவத்தைப்பற்றித் தானே இருக்கும் என்று நாம் சிந்திப்போம். அங்கே சக்திக்கு என்ன வேலை என்று எண்ணுவோம். ஆனால் சாக்த தர்மத்தில் வாழும் சக்தி உபாசகர்கள் கூட ஆச்சர்யப்படும் வகையில் திருமந்திரத்தில் பராசக்தியைப் பற்றி ஒருபாடு குறிப்பிட்டுள்ளார்.

**"விண்ணின்று இழிந்து வினைக்கீடமாய் மெய்கொண்டு**
**தண்ணின்ற தாளை தலைக்காவல் முன்வைத்து**
**விண்ணன்று உருக்கி ஓர் ஒப்பிலா ஆனந்த**
**கண்ணென்று காட்டி களிம்பறுத்தானே",**

அதாவது ஆன்மாக்களை மேவி உள்ள களிம்பை அகற்றுவது இறைவனின் கருணையினால் நிகழ்வது. அதனால் ஆன்மாவை விட்டு எப்பொழுதும் இறைவன் நீங்கமாட்டான் காவலாக இருப்பான் என்று திருமூலர் கூறுகின்றார். தண்ணின்ற காவல், தலைப்பெய்தி என்பதன் பொருள், காரணங்கள், இரண்டு என்றும், ஒன்று அநாதி காரணம் மற்றொன்று ஆதிகாரணம் என்றும் பிரிக்கப்படுகிறது. அநாதி தொட்டே ஆன்மாவை மேவி உள்ள (பாசம்) ஆணவம் போன்ற மும்மலங்களின் வஞ்சனை காரணமாய் (பசு) ஆன்மா தன் வலிமை குன்றி இருக்கும் என்றும் இதற்கு துணையாக (பதி) ஆகப்பட்ட இறைவன், மனம், புத்தி, சித்தி போன்ற மூன்று அந்தக் கரணங்களை துணைக்கு வைத்து உதவுவார் என்றும் துணையாக வந்த அந்த கரணங்கள் தன்னுடைய நோக்கத்தை மறந்து ஆன்மாவை உண்மை நெறியை விட்டு விலகச் செய்து இறையாண்மையை மறைக்கும். இது, அநாதி காரணம் இதற்கு ஆன்மா எந்தவகையிலும் பொருப்பு இல்லை. இந்த அநாதி காரணமாய் உண்மை நெறியை விட்டு விலகிய ஆன்மா வலிமைகுன்றும். அப்பொழுது ஆணவம் மேவும். மேவிய ஆணவம் ஆன்மாவை வினைப்படச் செய்யும். இப்படி 'வினைவயப்பட்ட ஆன்மாவுக்கு அந்தக் கரணங்களும் தன் நிலை மறந்து மாயை வழி நடத்தும். வினை வழியே செல்லும். துணைக்கு வந்த அந்த கரணங்களும் தன் கடமையை மறந்து வினைவயப்பட்டதனால் மீள வகையறியாது, இழந்த இறையாண்மையைப் பெற முடியாமல் தத்தளிக்கும். இது அதிகாரணம் எனப்படும். ஆன்மாக்களை கரை சேர்க்கும் பொருட்டு பதியான இறைவன் ஆகமம், வேதம் போன்றவைகளை அருளியதோடு அல்லாமல், இறைவன் தனது உள்ளம் என்ற கயிலாத்தில் இருந்து அகம் அல்லது நான் என்ற முனைப்புடன் பிரிந்து சென்ற ஆற்றலே பராசக்தி எனப்படும். பரசிவத்தின் உள்ளத்தில் இருந்து பிரிந்ததனால் அந்த ஆற்றலுக்கு பராசக்தி எனப்பட்டது. இவைகள் யாவும் அருவநிலையில் நடக்கும் சம்பவங்கள்.

இந்த சக்திதான் எப்படியெல்லாம் வடிவம் மாறுகிறது, என்ன செய்கிறது என்பன போன்ற உண்மைகளை திருமூலர் தாம் பாடிய

திருமந்திரத்தில் நான்காம் தந்திரத்தில் ஒன்பது தலைப்புகளில் 373 மந்திரங்களாக பாடியிருக்கிறார்.

ஆன்மாக்களை உய்வடையச் செய்ய வேணும் என்ற இறைவனின் உள்ளமே அருளாகமாற அதுவே சக்தியாய் பரிமணித்தது என்றும் அரனுக்கு சக்தியாய் விளங்கும் அருட்சக்தியே இறைவன் என்பவனின் திருஉள்ளப்படி மூன்று கண்டங்கள் என்று திரிபுரையாகவும் அவை, சக்கரம், மந்திரம் என ஆனது என்றும் மாமாயை எனப் பிரிந்து, சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்றும் விந்து, வைகரி வாக்கு - ஓம் என்ற பிரணவம் மற்றும் ஆறு இறுதிகளை உடைய மந்திரம் என்றும், மாமாயை எனப் பிரிந்தது சுத்தமாயை, குடிலை, விந்து, குண்டலினி மாயை எனப் பிரிந்து அதுவே அசுத்தமாயை, அதோமாயை, மோகினி மாயை எனவும், மாமாயையானது திரிபுரமாயை என்றும், திரிபுரமாயை யானது ஒலி-உலகு, பொருள்-உலகு எனவும் மூன்று கண்டங்கள் (அக்கினி-சூரிய-மதி) எனவும் பிரிந்து திரிபுரை எனப்பட்டவள் பரை-அபிராமி-அகோசரி என்றும் உருவானது என்றும்,

"தாளணி, நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க் கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில் முடி
காரணி மாமனி குண்டலக் காதிக்கே"

என்று இராஜ ராஜேஸ்வரியையும்

குண்டலக்காதி கொலைவில் புருவத்தள்
கொண்ட வரத்தின் மன்னு கோலத்தள்
கண்டிகையாரங் கதிர்முடிமாமாதிச்
சண்டிகை நாற்றிசை தங்கி நின்றாலே

என்று சண்டிகா தேவியைப் பற்றியும்

"நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை
நன்றறி கண்டிகை நாற்காற் கரீடனி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே"

என்று கஜலட்சுமியையும்

"சுத்தவம் பாரத்தனத்தி சுகோதயன்
வத்துவ மாயா ளுமாசக்திமாபரை
அத்தகையான மனோரணி தானுமாய்
வைத்தவக் கோல மதியவளாகுமே"

என்று மனோ ஆரணியைப் பற்றியும் என்றெல்லாம் சொல்லால் அடையாளம் காட்டிய திருமூலர் எங்கு சிவமுள்ளதோ அங்கே தானும் பிரியாது

இருப்பாள் என்பதையும் எல்லாம் சக்தியின் செயலே என்றாலும் எங்கே சிவம் உள்ளதோ அங்குதான் சக்தி செயல்பட முடியும் என்பதை சிவமில்லையேல் சக்தி இல்லை என்பதை

"தானெங் குதங்குள தையன் மாதேவி
ஊனெங்குள அங்குள்ளுயிர்க் காவலன்
வானெங்குள அங்குளேவந்து மப்பாலாம்
கோனெங்கும் நின்ற குதிபல பாரே"

என்றும்,

நின்றா ளவன்றன் உடலும் உயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசக்தி
ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே
நின்றாள் பரங்சுடர் ஏடங்கை யாளே

இதன் பொருள் பராசத்தி உயிருட்கலந்து நிற்கும் நிலையை உணர்த்துதலை அறிவிக்கின்றது. இந்தப் பாடலின் பொருள் பரசிவத்தின் உடலும், உயிருமாக கலந்து நின்றாள், உயிர்களோடு உடனாய்ச் சேர்ந்துள்ள பராசத்தி சிவகதிக்கண் சென்றாள் என்றும் என்னோடு ஒன்றாக அடியேன் உயிருக்குள் புகுந்து உணர்வாகி நின்றாள். அங்ஙனம் நின்றவள் புத்தக தாரிணியாகிய பரஞ்சுடர் வடிவானவள் என்று சொல்லப்படுகிறது. அவன் தன் உடம்பிலும் உயிருமாய் நின்றாள் என்றது சிவத்தோடு அபின்னமாய் நிற்றலை உணர்த்தியது. சிவகதி சென்றால் என்றது முத்தி இன்பத்திலே ஆன்மாக்களை உய்விப்பவள் என்பதாம். சென்றாள் என்பதனைச் செல்வித்தாள் எனப் பிறவினையாக்குக. என்னுட்புதுந்து உணர்வாகியே என்றது ஒன்றாதலை உணர்த்திற்கு. ஏடு அங்கையாள் என்பது பராசக்தியை ஞானவடிவாகிய கலைமகள் என்று குறிப்பிடுகிறார்.

"சக்திராகத்தில் தான் நல்உயிராகி
ஒத்தபாசமலம் ஐந்தோடு ஆறாறு
தத்துவம் பேதம் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் மலமறும் ஆறே"

என்ற சைவ சித்தாந்தத்தின் கருவுக்கு சக்தி தத்துவம் எப்படி செயல் படுகிறது அல்லது சக்தி எப்படி எல்லாம் சிவத்தால் செயல்படுத்தப் படுகிறது என்ற உண்மையை நாம் உணர முடிகிறது.

சக்தி என்பது திருஉள்ளத்தின் வெளிப்பாடே என்றும். சிவத்தின் ஆணையின் வண்ணம் செயல்படுவது சக்தி என்ற உண்மையை சக்தியை வழிபடும் அன்பர்களும் உணர்ந்து கொள்ள வேணும் என்பதே திருமூலர் நமக்கு உணர்த்த நினைக்கும் உண்மை என்றும் ஆற்றலாய் வந்த ஒன்றின் அருளைப் பெறாமல் திருஉள்ளத்தை சேரமுடியாது என்பதே திருமூலர் காட்டும் பராசக்தி.

# 56. ஒன்பதாம் திருமுறை அமைப்பும் சிறப்பும்

முனைவர் அ. சௌந்தரம், திண்டுக்கல்.

''தமிழும் சைவமும், தமிழரின் இருகண்கள்'' அவைகளைத் தங்களிடத்தே அடக்கியவை நம்முடைய சைவத் திருமுறைகள்.

சைவசமயந் தந்த பக்திக் தமிழ்க்கருவூலங்களைத் திருமுறைகள் என்று முன்னோர் சாற்றினர். நம்பியாண்டார் நம்பி மூலமாக இத் திருமுறைகளைக் கண்டுபிடித்து முறைப்படுத்தியவன் முதலாம் இராசராசன் என்ற சோழப் பேரரசன் என்பது யாவருமறிந்ததே. இவன் எழுப்பித்த தஞ்சை இராசராசேச்சுரப் பெருங்கோயிலில் பணிவிடையின் பொருட்டு நியமிக்கப்பட்டிருந்த தளிச்சேரிப் பெண்களில் சிலராது பெயர்கள், ஒன்பதாந்திருமுறையில் சில பதிகங்களில் வரும் 'நீறணி பவளக்குன்றம்', 'எடுத்த பாதம்' 'மழலைச் சிலம்பு' என்பன போன்ற சொற்களைக் கொண்டி ருப்பதாக அறியப்படுதலின் முதலாம் இராசராசன் காலத்திலேயே ஒன்பதாம் திருமுறை சிறப்புற்றிருந்ததென்று அறியப்படுகிறது.

இத்திருமுறையில் திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் என்பவர் முடிய ஒன்பது பேர் இயற்றிய திருவிசைப்பாவும், சேந்தனார் என்பவர் இயற்றிய திருப்பல்லாண்டும் இடம்பெற்றுள்ளன.

இவற்றால் பாடப்பட்ட தலங்கள் - கங்கை கொண்ட சோளேச்சரம், தஞ்சை இராசராசேச்சரம், திருக்கலந்தை ஆதித்தேச்சரம், திருக்கீழ்க்கோட்டூர் மாணியம்பலம், திருச்சாட்டியக்குடி, திருப்பூவணம், திருமுகத்தலை, திருவாரூர், திருவாவடுதுறை, திருவிடைக்கழி, திருவிடைமருதூர், திருவீழிமிழலை, திரைலோக்கிய சுந்தரம், தில்லை என்பனவாகும்.

இத்திருமுறையிலுள்ள பதிகங்கள், ஆதித்தசோழன் காலமுதல் கங்கைகொண்டசோழன் காலம் முடிய இவ்வரசர்களின் இடைப்பட்ட காலத்தே இயற்றப்பட்டன. சேந்தனார் பாடிய் திருவிசைப்பாவில் திருவிடைகழி முருகப்பெருமான் மீது பாடிய பதிகமொன்று அமைந் திருப்பது குறிப்பிடத்தக்கதொன்றாகும். மூவர் தேவாரம் போன்று திருவிசைப்பாப் பாடல்களும் பண்ணமைதி பெற்று அம்முறைப்படி ஓதப்பட்டு வந்தன வென்பது இதன் தனிச் சிறப்பாகும்.

**திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா**

திருமாளிகைத் தேவர் போகர் என்னும் சித்தருடைய மாணாக்கருள் ஒருவர் என்பவர், இவர் திருவாவடுதுறையில் வாழ்ந்து வந்தவர். நரசிங்கன்

என்னும் கொடிய அரசனை வெல்லும்பொருட்டு ஸ்ரீ கோமுத்தீசுவரர் கோயில் மதில் மேலிருந்த இடபங்களை இவர் ஓருருவாக்கி அனுப்பினரென்பர். திருவாவடு துறை மடத்தில் இவருக்குக் கோயில் உள்ளது. ஆலயத்தில் உச்சிக்கால பூசை ஆனதும் ஆதிசைவர் இங்கே வந்து பூசையை முடித்த பின்னர் தான் மடத்தில் பகல் போசனம் நடைபெறுவது வழக்கம். இவர் காலம் 10-11 நூற்றாண்டாகும்.

இவரது திருவிசைப்பா தில்லைபெருமான் மீது பாடப்பட்டதாக நான்கு பதிகங்கள் காணப்படுகின்றன. முதற் பதிகத்தின் முதற் பாசுரம் (பண்-பஞ்சமம்) கற்பாருளத்தைக் கசிவிப்பதைக் காணலாம்.

**"ஒளிவளர் விளக்கே உலப்பிலா வொன்றே**
**உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே**
**தெளிவளர் பளிங்கின் திரள்மணிக்குன்றே**
**சித்தத்துள் தித்திக்கும் தேனே**
**அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே**
**அம்பல மாடரங் காக**
**வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்**
**தொண்டனேன் விளம்புமா விளம்பே"**

**சேந்தனார் திருவிசைப்பா**

சேந்தனார், பட்டினத்து அடிகளின் உதவியாளர் என்று கூறும் வழக்கொன்றுள்ளது. இவரைச் சோழன் சிறையிட்டபோது திருவெண்காடர்.

**"செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்த னிட்ட**
**கைத்தளை நீக்கி யென் முன் காட்டுவெண் காட்டுளானே"**

என்று பாடியதாகக் கூறுவர். இதனால் இவர் நாங்கூரினர் என்று தெரிகிறது. திருவிசைப்பாடிய சேந்தனர். இவரின் வேறெனரென்று கூறுவாருமுண்டு. ஸ்ரீசிவஞான சுவாமிகள் இயற்றி ஒரு பாடலால் இவர் ஒரு சமயம் தில்லைப் பெருமானுக்குத் தவிட்டை அமுதாக நிவேதனஞ் செய்தாரென்றும் அரிய செய்தி புலனாகிறது. ஒன்பதாந் திருமுறையில் திருப்பல்லாண்டும் இவர் பாடியதேயாகும்.

திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய தலங்கள் மீது திருவிசைப்பாவும், தில்லைக்குத் திருப்பல்லாண்டும் சேந்தனார் பாடியன வாகும். சாந்தையூரைச் சார்ந்த அந்தணர் ஆயிரவர் திருவாவடு துறையீசனை வழிபட்டுட பூசித்தனர் என்ற செய்தி இவர் பாசுரங்களால் அறியப்படுகிறது.

**"பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப் புகழாளர் ஆயிரம் பூசுரர்**
**மெய்யே திருப்பணிசெய் சீர்மிகு காவிரிக் கரைமேய**
**ஐயா திருவா வடுதுறை யமுதே யென்றுன்னை யழைத்தக்கால்**
**மையார் தடங்கண் மடந்தைக்கொன்றாருளா தொழிவது**
**மாதிமையே"**

திருப்பல்லாண்டில்,

"மிண்டுமனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள்
விரைந்து வம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி யீசற்காட்
செய்ம்மின் குழாம் புகுந்து
அண்டங் கடந்த பொருள் அளவில்லதோ ரானந்த
வெள்ளப் பொருள்
பண்டு மின்றுமென்று முள்ள பொருளென்றே
பல்லாண்டு கூறுதுமே"

என்ற பாசுரம் தொண்டின் சிறப்பை வலியுறுத்துகின்றது.

## கருவூர்த்தேவர் திருவிசைப்பா

இவர் சோழநாட்டிலுள்ள கருவூரைச் சேர்ந்தவரென்றும், சித்தருள் ஒருவரென்றும் கூறுகின்றனர். இவரைப்பற்றிய கர்ணபரம்பரைச் செய்தி யொன்று பின்வருமாறு :

முதலாம் இராசராசன் தஞ்சையில் பெருங்கோயிலெடுப்பித்துப் பெருவுடையாரைப் பிரதிட்டை செய்யும்போது அஷ்டபந்தன மருந்து இளகியதால் சிவலிங்கம் ஆவுடையாரோடு பொருந்தவில்லையென்பது கண்ட மன்னன் மிக வருந்தினான். அமைச்சர் கருவூர்த்தேவரை யழைக்க, அவர் வந்து கண்டு, தன் வாய்த் தம்பலத்தை யுமிழ, மருந்து இறுகிற றென்றும் கூறுவர். இவர் கங்கைகொண்ட சோளேச்சரத்திற்கும் திருவிசைப்பா இயற்றியுள்ளதால் இராசராசன் மகன் கங்கைகொண்ட சோழன் காலத்திலும் வாழ்ந்திருத்தல் வேண்டும். இவரது திருவுறுவம் தஞ்சைப் பெருங் கோயிலிலும், கருவூர் ஆனிலைத் திருக்கோயிலிலும், காணப்படுகிறது.

"நீலமே கண்டம்; பவளமே திருவாய்;
நித்தில நிரைத்திலங் கினவே
போலுமே முறுவல்; நிறையவா னந்தம்
கோலமே யச்சோ அழகிதே யென்று
குழைவரே கண்டவர்; உண்டது
ஆலமே யாகில் அவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே"

இறைவனின் திருக்கோலத்தில் ஈடுபடுத்துகின்ற இப்பாசுரம் திருக்களந்தை ஆதித்தேச்சுரப் பெருமான் மீது பாடப்பட்டது. கங்கைகொண்ட சோளேச்சரத் திருவிசைப்பாவில் ஓர் பாடல் கருவூரராது பக்தியைச் சிறப்பிக்கின்றது.

"தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்
டத்தில்அங் கொருகூறு உன்கண்வைத் தவறாக்
கமருல களிக்குநின் பெருமை

பித்தனென் றொருகாற் பேசுவ ரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தலஞ் சென்னி மேல்வைத்த கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே''

**பூந்துருத்தி காட நம்பி**

இவர் முதலாம் இராசராசன் காலத்தே வாழ்ந்து வந்த அடியாராவர். இராசராசனது 35-ம் ஆட்சியாண்டில் அமைந்த சாசனம் ஒன்றில், நம்பி காட கம்பி ஆத்ரேய கோத்திரத்தினராகிய அடியார் என்ற குறிப்பு காணப்படுகிறது. காடவர்கோன் என்றும் இவர் குறிக்கப்படுதலால் பல்லவர் வகையினராக இவர் கருதப்படுவதற்கும் இடமுண்டு.

**கண்டராதித்தர்**

இவர் சோழமன்னர் மரபினராவர். இவரது திருவிசைப் பாவில் திருக்கடைக் காப்புச் செய்யுளில்,

''சீரான் மல்குதில்லைச் செம்பொ னம்பலத் தாடிதன்னைக்
காரார் சோலைக் கோழிவேந்தன் தஞ்சையார் கோன் கலந்த
ஆரா வின்சொற் கண்டரா தித்தன்''

என்று குறிப்புக் காணப்படுவதால் இச்செய்தி உறுதிப்படுகின்றது. இவரது தந்தை முதலாம் பராந்தகன் ஆவான். தன் தந்தை தில்லைச் சிற்றம்பலத் திற்குப் பொன்வேய்ந்த செய்தியைத் தம் பாடலில் இவர் குறிப்பிடு கின்றார். சாசனக் குறிப்பொன்றில் இவர், பதிவஞான கண்டராதித்தர்'' எனக் குறிக்கப்படுவதால் இவரது சிவபக்திச் சிறப்பு விளங்கும்.

கண்டராதித்தர் இளமையிலேயே, இவரது தேவியார் செம்பியன் மாதேவி நீண்டகாலம் வாழ்ந்திருந்து பல சிவாலயத் திருப்பணிகளைப் புரிந்தனர் என்பது சாசனங்கள் காட்டும் செய்தியாகும். கணவரும் மனைவியையும் சேர்த்து சிவபெருமானை வணங்கும் கோலத்தில் சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. முதலாம் இராசராசன் செம்பியன் மாதேவியாருருவைப் பிரதிட்டை செய்து வணங்கினான்.

**வேணாட்டிகள்**

இவர் கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்றான வேணாட்டினர். தற்போதைய தென்திருவாங்கூர்ப் பகுதியே வேணாடென்பர், அடிகள் என்ற அடையால் இவர் துறவியோவென ஐயுற இடமுண்டு.

**திருவாலியமுதனூர்**

இவரது பெயரைக் கொண்டு இவர் சோழநாட்டிலுள்ள திருவாலி என்னும் ஊரினர் என அறிகிறோம். இவரது பெயர் அமுதனார் என்பதாலும், அந்தணர் என்பதும், மயிலையர் மன்னன் என்பதும் பின்வரும் இவரது குறிப்புகளால் காணக் கிடைக்கின்றன.

**"வரைசெய் மாமதில் மயிலையர் மன்னவன்,**
**மறைவல திருவாலி...."**
**"தூய நான்மறையான் அமுத வாலிசொன்ன தமிழ்மாலை"**
**"அறைசெந்நெல் வான்கரும்பின் அணியாணைகள்**
**சூழ்மயிலை, மறைவல வாலி"**

என்பன இவரது பாசுரங்களில் வரும் அடிகளாகும். அமுதன் என்றும் பெயர் ஓரிடத்து மட்டும் காணப்படுகிறது.

### புருடோத்தம நம்பி

இவரது திருவிசைப்பாவின் திருக்கடைக் காப்புச் செய்யுளில், "மாசிலா மறை பலவோது நாவன், வண்புருடோத்தமன்" என்னும் அடியால் இவரும் அந்தண மரபினரென அறியப்படுகிறார். இவரைப் பற்றிய வேறு செய்திகள் ஒன்றும் கிடைத்தில.

### சேதிராயர்

இவர் மலையமான்களின் பரம்பரையினராக இருக்கக் கூடும், அறுபத்து மூவரில் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் சேதிநாட்டரசரென்பது ஈண்டு கருதத் தக்கது. இவர் தம்மை,

**"ஏயுமா றெழிற் சேதிபர் கோன் தில்லை**
**நாய னாரை நயந்துரை செய்தன"**

எனக் கூறிக் கொள்வதால் இவர் அரசரென்பது புலப்படுகின்றது. இவரது காலம் முதலியன அறியக் கூடவில்லை.

அரிய சொற்றொடர்களும் பண்ணமைதியும் கொண்ட திருவிசைப்பா - திருப்பல்லாண்டு எனும் பக்திப் பாசுரங்கள் ஒன்பதாம் திருமுறையாகச் சைவவுலகத்தில் பெருமதிப்புற்று விளங்குகின்றன. இவற்றை மக்களிடையே நன்கு பரவச்செய்வது தமிழின்பமும், சிவனருட்செல்வமும் பெற்று மக்கள் நன்மையடையத் தொண்டாற்றுவது மிகவும் இன்றியமையாததாகும். திருமுறைகளைப் பரப்புவதற்கென்றே தோற்றுவிக்கப்பட்ட மதுரைப் பன்னிருதிருமுறை மன்றம் இத்தொண்டினை அயராது இயற்றியப் பெருமையுற எல்லாம் வல்ல சொக்கரின் திருவடிகளை இறைஞ்சுகிறேன்.

பக்தி நெறி நின்று பாமனை அடைந்த அருட்பெரும் சைவசமய ஆச்சாரியார்களால் அருளிச் செய்யப் பெற்ற தமிழ்வேதம் ஆகிய தோத்துரப்பாமாலைகள் திருமுறைகள் எனப் போற்றப் பெறுகின்றன. அவை பன்னிரு இருமுறைகளாகத் தொகுக்கப்பெற்று பெரிதும் சிறப்பு மிக்கப் பெறுகின்றன. திருமுறைகள் இருக்கும் இடம் திருமுறைக்கோயில். எனவே மதித்து வணங்கப்பெறுகிறது. தெய்வீகத் தன்மை பொருந்திய திருமுறைகளைப் புனிதமாக வைத்துப் போற்றுவதோடு அவைகளில் சில பாக்களையேனும் தினம் பாராயணம் செய்து வருதல் பெரும் பயன் தருவதாகும்.

# 57. திருமந்திரத்தில் நிலையாமைக் கருத்துக்கள்

திரு. இரா. தமிழ்ச்செல்வம், சிதம்பரம்.

சைவம், தமிழ் ஆகிய இரு துறைகளிலும் சிறந்து விளங்கக்கூடிய நூல்கள் மொத்தம் மூன்று. அவை திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள். திருமூலர் அருளிய திருமந்திரம், திருவாதவூரர் எழுதிய திருவாசகம். "திரு" என்ற அடைமொழியைப் பெற்றிருத்தலைக் கொண்டே இந்நூல் களின் அருமை பெருமைகளை நாம் நன்கு உணரலாம். மும்மணிகள் என்று போற்றப்படும் இம்மூன்று நூல்களுமே இம்மைக்கும், மறுமைக்கும் வேண்டிய உறுதிப் பொருள்களை குறைவில்லாது அளிக்கும் இயல்புடையன வாகும். நம் முன்னோர்கள் தோத்திரத்திற்குத் திருவாசகம், சாத்திரத்திற்குத் திருமந்திரம் என்பர். வேதம், ஆகமம் ஆகிய இரண்டிற்கும் இத்திருமந்திரம் அரிய விளக்கமாய் விளங்குகின்றது. திருமூலர் இயற்றிய இத்திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டது. மூவாயிரம் பாடல்களை உடையது.

"மூலன் உரை செய்த மூவாயிரத் தமிழ் ஞாலம் அறியவே நந்தியருளது" என்னும் திருமூலர் வாக்கால் இதனை அறியலாம். சிவகதிக்கு வித்தாக விளங்கக்கூடிய இத்திருமந்திரம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டினுள் பத்தாவது திருமுறையாக ஆன்றோர் பெருமக்களால் வைக்கப்பட்டுள்ளது. "சிவன் அன்பு வடிவானவன்" என்னும் அரிய உண்மையைத் தெளிவாகக் கூறும் திருமூலரின் திருமந்திரமே சைவ சித்தாந்தத்தின் முதல் நூலாகும். இனி கீழ்க்கண்ட கட்டுரையில் திருமந்திரத்தில் காணப்படும் நிலையாமைக் கருத்துக்களைக் காண்போம்.

**நூல் வரலாறு**

தஞ்சை மாவட்டம் திருவாவடுதுறைக்கு அருகில் உள்ள சாத்தனூரில் மூலன் என்ற இடையன் வசித்து வந்தான். இவன் ஆடு மாடுகளை மேய்ப்பதைக் குலத் தொழிலாகக் கொண்டவன். ஒரு நாள் இவன் புலியால் அடித்துக் கொல்லப்பட்டான். அவனது பிணத்தைச் சுற்றி ஆடு மாடுகள் அகலாமல் நின்றன. அப்போது திருக்கையிலையில் நந்தியின் அருளினைப் பெற்ற யோகி ஒருவர் அங்கு வந்து உண்மையை உணர்ந்து மூலனின் உடலில் தன்னுயிரைப் புகுமாறு செய்து கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார். அவர் அந்த உடலில் இருந்து கொண்டு திருவாவடுதுறைக் கோயிலின் அரச மரத்தடியில் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்தில் அமர்ந்து, எண் பெரும் சித்திகளைப் பெற்று, ஆண்டுக்கொரு பாடல் வீதம் மூவாயிரம்

பாடல்களை எழுதினார். அப்பாடல்களின் தொகுப்பே திருமந்திரம் ஆகும். திருமுறைகளுள் மிகவும் பழமையானது திருமந்திரமே ஆகும். ''திருமந்திர மாலை'' ''தமிழ் மூவாயிரம்'' போன்ற பல்வேறு சிறப்புப் பெயர்களைக் கொண்ட இத்திருமந்திரத்தில் எண்ணற்ற சமுதாய சீர்திருத்தக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

சமயக் குரவர்களில் முதல்வராகத் திகழும் திருஞானசம்பந்தர், காலத்தால் திருமூலருக்குப் பிற்பட்டவர் ஆவார். இவரது காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆகும். சிவயோகி ''திருமூலநாயனார்'' ''தமிழ்ச்சித்தர்'' என்று பலவாறாக இவர் அழைக்கப்படுகிறார். சேக்கிழார் தாம் எழுதிய திருத்தொண்டர் புராணத்தில் திருமூலரின் வரலாற்றை மிகச் சிறப்பாகக் கூறியுள்ளார்.

**நூற்சிறப்பு**

திருமந்திரத்தின் மூவாயிரம் பாடல்களும் ஒன்பது தந்திரங்களாக. 232 அதிகாரங்களாக பிரிக்கப்பட்டுள்ளன. ஞானநெறி, யோக நெறி, தத்துவம், சித்த மருத்துவம், நிலையாமை ஆகிய கருத்துக்களை உள்ளடக்கிய இந்நூல் சைவ சித்தாந்தக் கொள்கைகளை உணர்த்தும் தமிழ் ஆகம நூல் என்றால் அது மிகையாகாது.

**''உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்''**
**''நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''**
**''ஒன்றே குலம் ஒருவனே தேவன்''**
**''அன்பே சிவம்''**
**''நன்றே நினைமின்''**
**''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''**

என்பன போன்ற பாடல் வரிகளைத் தமிழுலகம் நன்கறியும்.

**நிலையாமை**

திருக்குறளில் நிலையாமை என்றத் தலைப்பில் பத்துக்குறட் பாக்கள் இடம்பெற்றுள்ளன. திருமூலர் யாக்கை, செல்வம், உயிர், இளமை என்னும் நான்கு நிலையாமைகளை அடக்கிக் கூறுகின்றார். நிலையாமைக்கு நான்கு அதிகாரங்களைத் தந்துள்ளார். யாக்கை நிலையாமைக்கு 25 பாடல்கள், செல்வ நிலையாமைக்கு 9 பாடல்கள், இளமை நிலையாமைக்கு 10 பாடல்கள், உயிர் நிலையாமைக்கு 10 பாடல்கள் ஆக நிலையாமைக்கென 54 பாடல்களைக் கூறுகின்றார். அதாவது 54 மந்திரங்களைக் கூறுகின்றார் என்றே கொள்ளலாம்.

**1. யாக்கை நிலையாமை**

நல்வினைகள், தீவினைகள் ஆகியவற்றால் அடைக்கப்பட்டது இந்த உடம்பு அத்தகைய உடம்பு சில காலம்தான் உலகில் வாழும். அக்காலத்தில்

தனக்கு என்று அறுதி வைக்கப்பட்ட வினை போகங்களை அது அனுபவிக்கும். அவற்றையெல்லாம் உடனிருக்கும் மனைவி மக்களும் அனுபவிப்பர். காலனால் கைப்பற்றப்பட்டு உயிர் சென்றபின் கூடவே இன்ப சுகங்களை அனுபவித்த மனைவியோ, மக்களோ உடன் வாரார். பின் எவர் வருவர் எனின் அவர் வாழ்கின்ற காலத்தில் கடைப்பிடித்து வந்த விரதத்தின் பயனும் ஞானமுமே ஆகும். இதனை பின்வரும் திருமந்திரப் பாடலால் அறியலாம்.

"பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக்கால்
உண்ட அப் பெண்டிரும் மக்களும் பின் செலார்
கொண்டவிரதமே ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழி நட வாதே" (144)

இங்கு பண்டம் பெய் கூரை என்பதற்கு நல்வினை, தீவினைகளால் அடைக்கப்பட்ட கூரையாகிய உயிரோடு கூடிய உடம்பு எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமையுடைத் திவ்வுலகு" என்பது திருக்குறள் நேற்று இருந்தவன் இன்றில்லையாயினான், என்ற பெருமையையுடையது இவ்வுலகம் என்ற பொருளில் யாக்கை நிலையாமை பற்றிக் கூறிய வள்ளுவர் கருத்தை, அவர் காலத்திற்கு முன்னேயே திருமூலர் எவ்வாறு கூறுகின்றார் என்பதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே" (148)

நல்ல முறையில் பக்குவமாகச் சமையல் செய்து வைத்தனர். அவ்வாறு சமைத்த அறுசுவை உணவை வீட்டுத் தலைவர் உண்டார். மனைவியோடு அன்று இரவு கூடி இன்பம் அனுபவித்தார். இடப்புற நெஞ்சம் சிறிது வலிக்கிறது என்று கூறிப் படுத்தார். அப்படியே படுத்து இறந் தொழிந்தார் என்பது இப்பாடலின் கருத்தாகும். மந்தணம் என்பதற்கு உடலுறவு கொள்ளுதல் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இக்கருத்தை நாலடியார்,

"மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவரக் காங்கே பிணப்பறையாய்ப் பின்றை
ஒலித்தலும் உண்டாம் என்று உய்ந்துபோம் ஆறே
வலிக்குமாம் மாண்டார் மனம்"

என்று குறிப்பிடுகிறது.

(மணமேடையில் மங்கல ஒலி கேட்டுக் கொண்டிருக்கும் நிலை மாறும். அப்போதே அங்கேயே சாப்பறை ஒலிக்கும்; அழுகுரல் கேட்கும்,

இதை எல்லாம் உணர்ந்துதான் அறிவுடைய பெரியோர் நெஞ்சம் இத்தகைய துயரங்களில் எல்லாம் இருந்து விடுபட்டு வாழும் நல்வழியை நினைத்தபடி இருக்கும் என்பது இதன் கருத்து) யாக்கை நிலையாமையை எவ்வளவு அழகாகக் கூறுகின்றார் என்பதை ஈண்டு எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

பிறந்தவர் இறத்தல் நிச்சயம் என்பதை உருவகமாகக் கூறியிருப் பதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

"அத்திப் பழமும் அரைக்கீரை நல்வித்தும்
கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அறைக்கீரை வித்துண்ணக்
கத்தி எடுத்தவர் காடு புக்காரே" (160)

சுரோணிதமாகிய அத்திப்பழத்தையும் சுக்கிலமாகிய அரைக்கீரை விதையை யும் கிளறிய கருப்பையாகிய உலையில் இட்டுக் கருவாகிய கூழைச் சமைத்தனர். சுரோணிதமாகிய அத்திப்பழத்தை, சுக்கிலமாகிய அரைக்கீரை வித்துண்டு சிசுவாய் வளர்ந்து தோன்றியவர். பின்னர் (உரிய காலம் இருந்தபின்) சுடுகாட்டுக்குச் சென்றாரே. (அத்திப்பழத்தை அரைக்கீரை உண்ணலாவது சுக்கில சுரோணிக் கலப்பாகும்).

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்கின்ற உண்மைக் கருத்தை பிறப்பு இறப்பு நிச்சயம் என்கின்ற கருத்தை இப்பாடல் அழகாய்த் தெளிவாய்க் கூறுகிறது. இத்தகைய யாக்கையின் நிலையாமையை திருவள்ளுவர்

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும் வாய் எல்லாம் செயல்"

என்று கூறுகிறார்.

## 2. செல்வம் நிலையாமை

செல்வம் நிலையாமை என்ற அதிகாரத்தில் வரும் செல்வம் நிலையாமை என்பதற்கு மாடு, மனை, செல்வம் முதலியவற்றின் நிலையாமையாம். அதற்கு நிலையில்லாத செல்வங்களைக் கொண்டு நிலைபெற்ற அறச்செயல்களைச் செய்து என்றும் நிலை பெற்ற அவன் அருளைப்பெறுங்கள் என்பதும் பொருளாம். நிலையான செல்வம் என்பது இறைவன் அருளைக் குறிக்கும்.

செல்வம் நிலையாமையை நன்கு அறிந்து தெளியுங்கள். தெளிந்த வர்கள் பயங்கொள்ள வேண்டியதில்லை. ஆற்று வெள்ளம் போல் பெருகி வரும் செல்வத்தைக் கண்டு மயங்காமல், உங்களது பொருட் பற்றினை நீக்கி, மேலன. சிவமாகிய செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள்.

உயிரை உடலினின்று எடுத்துச் செல்கின்ற கூற்றுவன் வரும்போது அவனை வெல்லுதலும் கூடும் என்கிறது ஒரு பாடல். அப்பாடல் பின்வருமாறு

"தேற்றித் தெளிமின் தெளிந்தீர் கலங்கல்மின்
ஆற்றுப் பெருக்கில் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்து உங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதித்தலும் ஆமே" (172)

கூற்றன் வருங்கால் குதித்தலுமாமே என்பதற்கு மேலாகிய சிவமாகிய செல்வத்தைப் பெற்றால் இயமனையும் வெல்லலாம் என்பது பொருளாம். இதற்கு மார்க்கண்டேயருக்குத் திருக்கடவூர் பெருமான் அருள் புரிந்ததையே சான்றாகக் கொள்ளலாம். திருவள்ளுவரும் தவம் செய்தலால் வரும் "வல்லமை பெற்றார்க்குக் கூற்றம் குதித்தலும் கை கூடும்" என்று தவம் என்ற அதிகாரத்தில் கூறுகின்றார்.

வேதனையில் மிகப்பெரிய வேதனை மரண வேதனை ஆகும். அத்தகைய மரண வேதனையை வெல்லுவதற்குரிய வழியைக் கூறுகின்றார் ஒரு பாடலில். அப்பாடல்

உடம்போடு உயிரிடை விட்டோடும் போது
அடும்பரிசு ஒன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய் நின்ற மெய்ந்நமன் தூதர்
சுடும்பரி சத்தையும் சூழ்கி லாரே (176)

உடம்பைவிட்டு இடையே உயிர் செல்லும் போது அதனை வெல்லும் வகை வேறு ஒன்றுமில்லை. இறைவனை எண்ணுவதேதான். யாரும் உயிரினை உடம்பினின்று வேறுபடுத்தும் தன்மையைப் பரிசாகக் கொடுக்க எண்ண மாட்டார்கள். அஃதாவது உடம்பை விட்டு உயிர்ப்பிரியும் போது இறைவனை எண்ணுவதே மரண வேதனையைத் தடுக்கும் உபாய மாகும். ஆக இப் பாடலால் மரண வேதனையைத் தடுப்பதற்குரிய உபாயத்தைக் கூறுகின்றார்.

ஈண்டு செல்வம் நிலையற்றது. அது சகடக்கால் போல வரும் தன்மையது. ஆகவே அச்செல்வம் கைத்துண்டாம் போதே கரவாது அறம் செய்யின்என மக்களுக்கு அறிவுறுத்தும் நாலடியார் கருத்தும் ஒப்பிட்டு நோக்குதற்குரியதாகும்.

### 3. இளமை நிலையாமை

கட்டான உடல், வலிமையான தோள், முறுக்கான மீசை, துடுக்கான பருவம் இத்தகைய வாலிபப் பருவத்தில் உள்ளவரைக் கண்டு எந்தப் பொண்ணும் மயங்குவர். அதே வாலிபர் முதுமைப் பருவம் வந்துற்ற போது தளர்ந்த உடலினராயும், வலிமையற்ற தோள்களையும், சக்தியற்றவராயும், சுருக்கம் விழுந்த முகத்தினராயும் விளங்குகின்ற காலத்து அவரால் எந்தப் பெண்ணையும் மயக்க முடியாது. அதே போல பெண்களும் அவரைக் கண்டு மயங்கார்.

விரும்புவர் முன் என்னை மெல்லியல் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குங்
கரும் பொத்துக் காஞ்சிரங் காயம் ஒத்தேனே (180)

மென்மையான சாயலையுடைய பெண்கள், கரும்பைப் பிழிந்து கடைசியில் வருகின்ற சாற்றினை அனைவரும் விரும்புமாப் போல இளமைக் காலத்தில் என்னை இனிமையாக விரும்புவர். அத்தகையயான் தாமரை அரும்பு போன்ற மார்பினையும் அழகிய அணியையும் உடைய பெண்களுக்கு இளமையில் கரும்பைப் போன்று இருந்தேன். ஆனால், இப்பொழுது முதுமையில் எட்டிக்காய் போன்று கசப்பாக ஆனேன். எனவே இதிலிருந்து இளமை நிலையாதது. இளமைக்குப் பின் வருகின்ற முதுமைப் பருவம் பலராலும் வெறுக்கப்படக்கூடிய ஒன்று என்பது இந்தப் பாடல் மூலம் பெறப்படுகின்றது.

கிழக்கே தோன்றிய சூரியன் மாலையில் மறைதலைக் கண்டும், இளமையான கன்று சில நாளில் மூப்படைந்து இறப்பதைக் கண்டு வைத்தும், உலகினர் இளமையின் நிலையாமையை உணராமல் இருக்கின்றார்கள். அவர்கள் இவ்வுலகத்தைக் கடந்து அதற்கு மேலாக உள்ள அண்டங்களையும் ஊடறுத்து நிற்கின்ற இறைவனது திருவடியை மேன்மேலும் பொருந்தி அன்பு செய்தல் வேண்டும்.

பாலன் இறையன் விருத்தன்என நின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலம் கடந்தண்டம் ஊடறுத் தான் அடி
மேலும் கிடந்து விரும்புவன் நானே (181)

பாலன் என்றும் இளையன் என்றும் முதியோன் என்றும் பருவ காலங்கள் கழிவதை உலகினர் அறியவில்லை. ஆனால் இவ்வுலகத்தையெல்லாம் கடந்து, அதற்கு மேலே உள்ள அண்டங்களையெல்லாம் ஊடறுத்து நிற்கின்ற இறைவன் திருவடியை நான் எக்காலத்தும் அன்பு செய்வேன் என்பது இப்பாடலின் கருத்தாகும். அண்டம் ஊடறுத்தான் என்பதை

"விண்ணிறைந்து மண்ணிறைந்து
மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந்த எல்லையுடையானே"

என்ற திருவாசகத் தொடரிலும் வருதலைக் காணலாம்.

**4. உயிர் நிலையாமை**

இறைவன் ஊனாய் உயிராய் எங்கும் நிறைந்துள்ளான் என்பதை உணர்ந்தவர்கள் ஆருயிரை உணர்ந்தவர்கள் ஆவார்கள் என்பதனைச் சொல் நயமுள்ள ஒரு பாடலைக் கொண்டு அற்புதமாக விளக்குகிறார் திருமூலர்,

வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்ற விரகுஅறி யாதவர்
தாங்கவல்ல ஆருயிர் தாம் அறி யாரே (190)

சிரசின் மேல் வடக்குத் திக்கில் விளங்குபவனும், வாக்கு உருவமாக இருந்து கொண்டு நடிப்பவனும் வெந்து போகின்ற உடம்பினுள்ளே விளையாடும் தீயாக உள்ளவனும் ஆகிய இறைவன், அழிகின்ற உடம்பிலே உள்ளான் என்ற தன்மையை அறியாதவர்கள் அவ்வுடம்பினைத் தாங்குகின்ற அருமையான உயிரின் தன்மையை அறியாதவர்கள் ஆவார்கள்.

மூன்று இடங்களில் வரும் வேங்கடம் என்ற சொல்லாட்சியைக் கண்டு இன்புறலாம். (1) வேங்கடநாதனை - சிரசின் மேல் வடக்குத் திக்கில் உள்ள இறைவனை (2) வேங்கடத்துள்ளே விளையாடும் நந்தியை - அழிகின்ற உடம்பினுள் மூலாதாரத்தில் அக்கினியாக இருந்து தாங்கும் உருத்திரன். (3) வேங்கடம் - வேம் + கடம் - அழியும் உடம்பு.

உயிர் நிலையாமையை அறிந்து அறவாழ்வு வாழ வேண்டும் என்பதை இப்பாடலில் கூறுகின்றார்.

அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக் கொபடு உண்மின் தலைப்பட்ட போரே (196)

வஞ்சனையோ பொறாமையோ பேசி அறம் அழிய நடவாதீர்கள். கொடியராகிப் பிறர் பொருளைக் கவராதீர்கள். செம்மையுடையோனாகி நன்றாக உண்ணும் போது யாரேனும் நின்பால் வந்தால் அவர்கட்கு ஓர் அகப்பை உணவு கொடுத்துப் பின் உண்ணுங்கள் என மனித வாழ்வுக்குரிய அறமார்க்கங்களை உயிர் உடலில் இருக்கும்போதே செய்யுங்கள் என்றார். அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் என்றாற் போல வாழ்கின்ற காலத்திலேயே அறம் செய்க என்பதாம்.

மேற்கண்ட கட்டுரையின் மூலம் திருமந்திரத்தில் காணப்படும் நிலையாமைக் கருத்துக்களையும், திருக்குறள், நாலடியார், திருவாசகம், திருவருட்பா ஆகிய நூல்களில் திருமந்திரக் கருத்துக்கள் பெருமளவில் இடம்பெற்றுள்ளதையும், அறிந்துகொள்ள முடிகிறது. அறிவுக் கடலாகிய திருமந்திரத்தின் ஊடே எண்ணற்ற முத்துக்களும், பவளங்களும் நிறைந் திருப்பினும், சிற்றறிவினனாகிய என்னால் ஒருசிலவற்றை மட்டுமே கொண்டு வர முடிந்தது. மீதமுள்ளவற்றைக் கொண்டுவர சமய உலகும், தமிழுலகும் முயற்சி செய்ய வேண்டும்.

நன்றி.

# 58. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திருமதி கே. தமிழ்ச்செல்வி, வேலூர்.

தண்டமிழ் நெறியும், பண்டமிழ் இசையும் ஒரு சேர அமைந்த நூல் திருமந்திரமாகும். கற்பாரை மேலும் மேலும் கற்கத் தூண்டும் சொற்பலம் கொண்ட பொற்புடை பனுவலாகும்.

''தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்று உணர்'' - நல்வழி செய். 4

என்று ஔவையார் போற்றி இருப்பது இங்கு நினைத்தற்குரியது திருமந்திரக் கருத்துகளோடு ஒத்திருக்கும் பிறநூற்கருத்துகளுக்கு சில எடுத்துக்காட்டுகள்

''அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தை செய் அந்தணர்'' திருமந்திரம் - தந் 1அ.ஒ.11.

**திருக்குறள்**

''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்'' திரு.செய்.30.

**திருமந்திரம்**

''ஒருமையுள் ஆமைபோல் உள்ஐந்தும் அடக்கி
இருமையும் கேட்டிருந்தார்புரை யற்றே'' - தந். உப. 21.

**திருக்குறள்**

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து'' - திரு.126.

**திருமந்திரம்**

''தன் ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்'' - தி.ம.க.வா.7

**திருநாவுக்கரசர்**

''மற்றாரும் தன்னொப்பார் இல்லாதானை'' - தே. 6:1:2

- இவ்வாறு முன்னோர் நுலின் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்றியுள்ளார்.

**திருமந்திரம் மூவாயிரம்**

"மூலன் உரைசெய்த மூவாயிரந்தமிழ்
ஞாலம் அறியவேநந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடில்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே"

பாயிரம் : தொகை சிறப்பு - 1

என்பதால் திருமந்திரத்தின் தொகை மூவாயிரமாகும். காலையில் அதனைப் படித்தால் கடவுளைக்காணக் கூடும் என்பார்.

**அவையடக்கம்**

இறைவனைப் பற்றிய செய்திகள் தனக்கு விரிவாக விளங்கக் கூறுதல் ஆகா என்பதனைக் கீழ்வரும் பாடலால் குறிப்பிட்டுக்காட்டுவார்.

"ஆரறி வார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார் இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதன்
வேரறி யாமைவிளம்புகின் றேனே" - பா.அ.அ.1

**உபதேசம்**

பதி, பசு, பாசம் என்பன முப்பொருள்கள் ஆகும். இவை சைவ சமயத்தார் கொண்டமுடிபாகும். இப்பொருள் மூன்றும் அநாதியாகும் இம்முடிபினைத் திருமூலர் தம் திருமந்திரத்தில்

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றுஅணு காப்பசு பாசம்
பதியணுகில்பசு பாசம் நில்லாவே" - உப. செய்.3

இதில் பதி, பசு, பாசம் என்பன அநாதி என்றும், பசுவின் பாசம் பதியினைச் சென்று அணுகாது என்றும், பதியானது பசுவினை அணுகினால், பசுவின் பாசம் நில்லாது என்றும் கூறியுள்ளார். இதனால் பதி, பசு, பாசங்களின் இலக்கணம் கூறப்பட்டிருத்தலை அறியலாம்.

பிறிதொரு பாடலில் ஆணவத்திற்கு முளையினையும், மாயைக்குத் தவிட்டினையும், கன்மத்திற்கு உமியினையும், உவமையாகக் கூறியுள்ளார். இவ்வுவமையினால், மும்மலங்களின் இயல்பு விளங்கும். இவ்வுவமை சைவப்பெரு மக்கள் எல்லாரும் கூறும் உவமையாகும். மேலும், இதே செய்யுளில், ஆன்மாவிற்கு அரிசி உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை சைவப் பெருமக்களால் கூறப்படாத புதிய உவமை என்பது எண்ணற்குரியது.

"ஆணவம் மாயையும் கன்மமும் ஆம்மலம்
காணமுளையும் தவிடுஉமி ஆன்மாவும்

தாணுவை ஒவ்வாமல் தண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே''

- தந்திரம் 8 சுத்தநனவகதி பருவம் - 6

என்பது பாடலாகும்.

ஆணவமும் மாயையும், கன்மமும் ஆகிய மலத்திற்கு உவமை காணும் போது முளையும் தவிடும், உமியும் உவமைகளாம். ஆன்மாவும் கடவுளுக்கு ஒப்பாகாமல் அரிசிக்கு ஒப்பாகும். எனவே, பாசத்தினின்றும் நீங்கிக் கடவுளைக் கருத்தில் இருத்தி வழிபடுவீர் என்பது கருத்தாகும். தண்டுலம் என்பது அரிசியைக் குறிக்கும்.

**திருவள்ளுவரும்**

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'' - குறள் 341

என்பதால் உணரலாம். இக்கருத்தமைந்த மூலன் பாடலைப் பார்ப்போம்.

''ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனொடு ஆயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே'' - தந்திரம் 8 அவா அறுத்தல் - 3

பாடல் எளிமையானது - ஆயின் உணர்த்தும் கருத்து மிகப் பெரியது ஆம்.

''கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'' பெ.புரா.திரு.கூ.சி. 8

எனும் சேக்கிழார் வாக்கினை நோக்கலாம்.

ஆசை ஒழிய வேண்டும் என்று கூறும் திருமூலர், ஆசை ஒழிந்த இடமே வேதம் என்று குறிப்பிட்டுள்ளார். வேதாந்திகள் 'நான் பிரம்மம்', என்பார்கள். இத்தகு ஆசையும் கூடாதென்பார் திருமூலர் எனவே தான் அவர். (ஹகம் பிரம்மாஸ்மி)

''வேதாந்த மாவது வேட்கை ஒழித்திடல்''

மந்திரம் முதல் தந், அக்.ஒ.6

என்று கூறியுள்ளார்.

**மும்மூர்த்திகளின் முறைமை**

''ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத்தலர் மிசை யானுஞ்
சோதிக்கல் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்கு கின்றார்களே'' பாயிரம் மு.மூ.2

சிவன், திருமால், பிரம்மன் வேறு வேறு பெயரும், நிலைகளும் கொண்டிருந் தாலும் சோதித்துப்பார்க்குமிடத்து மூவரும் ஒருவராம் ஆதிப்பிரானாரே!

மக்கள் வாழ்க்கை மிக்குயர்ந்து ஓங்க நல்வழிக் காட்டிடும் குருக்கள் தேவை. இதனை,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே" - தந்திரம் 1. உபதேசம் 27

நந்தி தேவரைக் குருவாகக் கொண்டவர் திருமூலர். குருவின் திருஉருவைப் பார்ப்பதும், அவர் பெயரைக் கூறுவதும், அவர் திருவாய்மொழி கேட்பதும் அவரைப் பற்றி நினைப்பதும் சிறந்ததாகும்.

## இறைவனையே சென்றடையும் மானுடப்பிறவி

கடல் நீர் சூரிய வெப்பத்தால் ஆவியாகப், படிவம் உப்பெனப் பேர் கொள்ளும். உப்பும் நீரும் கலக்குமானால் உப்பும் நீரும் ஒன்றாதல் போல், இறைவனால் படைக்கப்பட்ட மனிதரும் முடிவில் இறைவனையே சென்றடைவர் என்ற விளக்கம் அழகானது.

"அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருசெய்த அவ்வுரு
அப்பினில் கூடியது. ஒன்றாகு மாறுபோல்
செப்பினில் சீவன் சிவத்துள் அடங்கும்" தந்திரம்! உபதேசம் 24

"உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே"

எனும் நன்னூல் சூத்திரத்திற்கு உரை எழுதிய சிவஞானமுனிவர், 'அப்பொடு பெய்த உப்பே போல', உயிரும் மெய்யும் கலந்து நிற்கும் மென்பார். இதுபோல் திருமூலரும் இறையால் உருவான உயிர்க்கூட்டம் இறைவனையே சென்றடையும் தன்மையைக்காட்ட நீரில்கலந்த உப்பும் நீருடன் கலந்து நீராகும் என்று உவமைகாட்டி உரைப்பார்.

## யாக்கை நிலையாமை

முடிசார்ந்த மன்னரும் முடிவில் ஒரு பிடிசாம்பர் ஆதல் திண்ண மென்றும் வாழ்வு, நீர்மேல் குமிழிஎன்பதும், புல்நுனிமேல் நீர்ப்போல் நிலையாமை என்பதும் காயமே இதுபொய்யடா - சிவக் காற்று அடைத்தப் பையடா என்பதும், நேற்று இருந்தார் இன்று இல்லை என்பதே உலகத்துக்குரிய பெருமை என்பதும் யாக்கை நிலையாமையைக் காட்டும் ஊக்க வரிகளாம்.

"ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினைநீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச்சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே" - தந்திர 1 நி 3

உயிர் உள்ளபோது உள்ள பேரும் மாறிப் 'பிணம்' என்று பேர் சூட்டுவர். அப்பிணம் சுடுகாட்டில் சுடப்படும். பின்பு உறவினர் நீரில் மூழ்கி எழுந்தவுடன், இறந்தார் நினைப்பை மறந்து போவார்கள். இதுவே மனித வாழ்க்கை இத்தை உணர்ந்து வஞ்சனையற்று வாஞ்சையுடன் வாழ்வீர் என்பார் திருமூலர்.

## செல்வம் நிலையாமை

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் பாதுகாத்தாலும் - இச்சரீரத்தை விட்டு ஆவி போய்விட்டால் பாடுபட்டுத் தேடிய பணம் யாருக்கோ ஆகும். ஆகையால் உள்ளபோதே இல்லார்க்கு, இயலார்க்கு இயன்றளவு உதவிடுவீர்! என்ற கருத்தோடு உள்ள திருமூலர் பாடல்

''அருளும் அரசனும் ஆனையும் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னம்
தெருளும் உரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவமன்றே'' - தந்திரம்! ஏச.நி.!

மன்னர்போல் உடைபெரும் செல்வம் உடையவராயினும் பிறர்க்கு உதவி வாழ்தலே மேன்மை. ஒருமுறை செல்வம், பதவி, அதிகாரம் வாய்த்தல் முன் செய்த தவத்தின் பயனாம். செல்வமும், செல்வாக்கும் உள்ளபோதே அதனை நல்வழியில் செலுத்துதல் வேண்டுமென்பது மூலர் கருத்தாகும்.

## இளமை நிலையாமை

ஒவ்வொரு வினாடியும் நம் வாழ்நாளைக் கூட்டியும் கழித்தும் வளர்வதும் வீழ்வதும் மாயதோர் மாய வாழ்வாம்.

பாலனாய் கழிந்த நாளும், பனிமலர்க் கோதைமார்தம் மேலனாய் கழிந்த நாளும், பிணியோடு மூப்புவந்து கோலனாய்க் கழிந்தநாளும் குறிக்கோள் இல்லாது கெட்டுப் போனதாக அப்பர் தேவாரம் கூறும்.

''கிழக்கெழுங்தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலாமாந்தர்'' தந்திரம் இளமை நீ!

''பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங்கழிவன கண்டும் அறிகிலார்'' இளமை நிலையாமை - 5

இவ்வாறு இளமை படிப்படியாகக் கழித்து முதுமை அடைவதைக் காட்டுவார் மூலர்.

## உயிர் நிலையாமை

''உயிர் போய்விடும், உள்ளபோதே உயிர்களுக்குதவுங்கள் உத்தமனைத் தொழுங்கள். பெறுமவற்றுள் மக்கட்பேறே சிறந்தது. அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது. உயிரைப்பேணுங்கள். மானுடப்

பிறவி சென்றால் மீண்டும் வாராது. வாய்த்தது நந்தமக்கோர் பிறவி, இத்தை மதித்திடுங்கள், வாய்ப்பினை வீணாக்கிட வேண்டாம் என்று பலவாறு ஆன்றோர் கூறிப்போந்தனர்.

"ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம் - சுவர்க்கம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும் தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமை வல்லார்க்கே" - உ.நி.9.

உயிர் நிலையாமையை நாடியே நலம்பல ஆற்றுவீர் என்பார் கீழ்த் தரமாகப் பேசி தருமத்திற்குப் புறம்பான காரியங்களை ஆற்ற வேண்டா மென்றும், பிறர்பொருட்டு ஆசைப்பட்டுத்திருடுதல் வேண்டாம். பசிப்புடன் புசிக்கும்போதும் எதிர்வருவாரை இன்முகங்காட்டி உபசரித்து உண்டி கொடுங்கள் என்பதான தமிழர் தம் நெறியினை அழகுபட எடுத்துக் காட்டுவார் மூலர்.

"அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக்கொடுண்மின் தலைப்பட்ட போதே" - உ.நி.10

மாந்தர் அறநெறிச்சார்ந்து வாழ்தல் வேண்டுமென்பார்.

### கொல்லாமை

பன்மலர்பல எடுத்து பற்றாய் நீர் செய்யும் நற்பூசையை விட கொல்லாமையே சிறந்ததென்பார்.

"பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்"
- தந்திரம் கொல்லாமை - 1

### புலால் மறுத்தல்

தன் உடம்பின் தசைப்பெருக்க பிறிதின் உயிர்த்தசையை உண்பது கூடாது. கொன்றால் தானே பாவம் - கொன்றதைத் தின்றாலே அப்பாவம் போகாதா எனும் அப்பாவிகளுக்கு கொல்லாமையும் கொன்றதைத் தின்னாதானையும் இவ்வுலகம் கையெடுத்துக் கும்பிடும் என்பார் வள்ளுவர்.

கொல்லாமை அதிகாரத்தில் இதனைத் திருமூலர்,

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காணஇயமன்தன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே" - பு.ம.1

கூறுவார்.

**யோகநிலை**

இடகலை, பிங்கலை எனும் இருவழி மூச்சுக் காற்றை அடக்கி வாழ்ந்தால் நெடுநாள் வாழலாம். இதனைத் தகுந்த குருவின் மூலம் கற்று தெளிதல்வேண்டுமென்பார் மூலர்.

"ஆரியன் நல்லன் குதிரை இரண்டு உள
வீசிப் பிடிக்கம் விரகு அறிவார் இல்லை
கூரிய நாதன் குருவின் அருள் பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படும் தானே" - பிராணயாமம் - 2

யோகம் வாய்க்கப்பெற்றவன் யோகியாவான் ஞானத்தெளிவும் ஆயுள் நீட்டிப்பும் கிடைக்குமென்பார்.

**சூனிய சம்பாஷனை**

"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே" - சூச. 18

ஐம்புலன்களாம், மெய், வாய், கண், மூக்கு, செவி இவற்றை விரும்பிய வாறு திரியவிடாமல் அடக்கியாண்டால் அவை ஒருவழிப்பட்டுப் பேரின்ப பெருவாழ்வைப் பெறலாம் என்பதே இதன் உட்பொருள்.

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை நிலம் முதலாய் உள்ள ஐம்பெரும் பூதங்களும் மறைத்துள்ளன. அவற்றைப் பூதவடிவங்களாகப் பார்க்கும் பொழுது பரம்பொருள் தோன்றாது. பரம்பொருளின் வடிவமாக நோக்கும்பொழுது அப்பூதங்களின் வடிவங்கள் தோன்றாது என்பதாம். இதனைத் திருமூலர்

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தின் மறைந்தது பார் முதல் பூதம்" - பராவத்தை செ.22

பரம் - பரம்பொருள் - இறைவன், பூதம் நிலம், நீர், தீ, காற்று, வானம், ஆக ஐந்தாம்.

**முடிப்புரை**

இவ்வாறு, திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகளும் பரவிக் கிடக்கின்றன. திருமூலர் செய்த திருமந்திரத்தைக் கற்றுத் தேர்ந்தால், நல்வாழ்வின் நெறிதனக்கு நம்மை இட்டுச் செல்லும் என்பதில் யாதொரு ஐயப்பாடும் இல்லை, இல்லை, இல்லையே!

# 59. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திருமதி வ. திருஞானபழநியம்மாள், கரூர்.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாகக் கொள்ளப்படுகிறது. தமிழ் சித்தர் வரிசையில் முதல்வராகப் போற்றப் படுகிறார். இந்நூலுக்குத் திருமந்திரமாலை, தமிழ் மூவாயிரம் என்னும் வேறு பெயர்களும் உள்ளன. எளிதில் விளங்கிக் கொள்ளவியலாத ஆழ்ந்த சிந்தனைகளையும் புதைபொருள்களையும் உருவகங்களையும் கொண்டது. சைவ சமய முதல் நூல் என்னும் பெருமைகளைக் கொண்டது. இந்நூல் தத்துவக் கருத்துகள் முதல் யோக நெறி, சித்த வைத்தியக் கருத்துகள் வரையில் பலவும் செறிந்த நூல் அது. தோத்திரத்திற்குத் திருவாசகம் சாத்திரத்திற்குத் திருமந்திரம் என்பர் முன்னோர். வேதம், ஆகமம் ஆகிய இரண்டுக்கும் இத்திருமந்திரம் அரிய விளக்கமாய் விளங்கு கின்றது. மேலும், இது "சைவ ஆகமம்" என்று போற்றப்படுகிறது. சிறப்புகளைப் பெற்ற திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகளை இக் கட்டுரையில் ஆராய்வோம்.

## ஒன்பது தந்திரங்கள்

"சைவ சித்தாந்தம்" என்ற தொடர் முதன் முதலில் இந்நூலிலேயே காணப்படுகிறது. திருமந்திரத்தின் ஒன்பது தந்திரங்கள் உணர்த்தும் பொருள்களாவன:

1. ஆம் தந்திரம் : ஞானோபதேசம்.
2. ஆம் தந்திரம் : இறையருள் ஐந்தொழில் புராணக்கதைகள் சில.
3. ஆம் தந்திரம் : அட்டமாசித்தி, அட்டாங்கயோகம், சோதிடம், யோகப் பயிற்சி, வீடுபேறு அடைய வழி.
4. ஆம் தந்திரம் : மந்திர நூற்கருத்துக்கள் சக்கரங்கள், சிவசக்தி வழிபாடு.
5. ஆம் தந்திரம் : சரியை, கிரியை, யோக ஞான மார்க்கங்கள், சைவ சமய வேறுபாடுகள்.
6. ஆம் தந்திரம் : சிவ குரு தரிசனம், திருவடிப்பேறு, ஞானோபதேசம், துறவு, தவம், நீறு.
7. ஆம் தந்திரம் : பூசை வகைகள், அடியார் சிறப்பு, இந்திரிய அடக்கம், சமாதி, சற்குரு.

8. ஆம் தந்திரம் : மும்மலம், பக்தி (தத்துவம்சி) முதன் முதலில் இங்கு வருகிறது. அதன் பொருள் அது நீயாய் இருக்கிறாய் என்பது.
9. ஆம் தந்திரம் : ஐந்து எழுத்து, சிவ தரிசனம் சித்தி மார்க்கம், முத்தி மார்க்கம்.

**பக்தி**

எலும்பை விறகு ஆக்கித் தசைகளை அறுத்து நெருப்பில் இட்டுப் பொன் போல் பொரியும் படியாக வறுத்தாலும் பயனில்லை. அன்போடு உருகி மனம் குழைவார் அல்லாமல் மற்றவர்கள் கடவுளை அடைய முடியாது.

> "என்பே விறகாய் இறைச்சி அறுதியிட்டுப்
> பொன் போல் கனலில் பொரிய வறுப்பினும்
> அன்போடு உருகி அகம்குழை வார்க்கன்றி
> என்போல் மணியினை எய்தவொண் ணாதே"

என்கிறார் திருமூலர்.

**எங்கும் நிறைந்தவன்**

இறைவன் இல்லாத இடமில்லை இக்கருத்தினை,

> "தேனுக்குள் இன்பம் சிவப்போ? கறுப்போ?
> வானுக்குள் ஈசனைத் தேடும் மதியிலீர்!
> தேனுக்குள் இன்பம் செறிந்திருந் தாற்போல்
> ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந் தானே"

என எளிமையாகத் தருவார்.

வானில் வியாபித்துள்ள பரம்பொருள் ஊனிலும் மறைந்து நிற்கிறது. உணர்விலே கலந்து உறைகிறது. இந்த உணர்வு நிலை பற்றிக் கொண்டு ஈடுபடப் பேரின்பமானது தானே வந்து தித்திக்கும். "இந்தப் பேரின்பத்தை நான் பெற்றேன். அதை உலகமும் பெற்றுக் கடைத்தேற வேண்டும்" என்கிறார் திருமூலர்.

> "நான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
> வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
> ஊன் பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
> தான் பற்றப் பற்றத் தலைப்படும் தானே!"

என்கிறார் திருமூலர்.

**நல்வழி**

வாழ்க்கைக்கு என்று வகுக்கப்பட்ட நல்வழியும் உண்டு. கவர்ச்சி உண்டாக்கிக் கெடுக்கும் இடர்களும் உண்டு. கடவுளே நெறியையும்

படைத்தான். அடுத்து நெறிஞ்சில் முள்ளையும் படைத்தான். நெறி தவறி நடந்தால் காலில் முள் குத்தும். நெறி தவறாமல் நடக்க வல்லவர் களுக்கு அந்த முள் ஒன்றும் இடர் செய்யாது.

"நெறியைப் படைத்தான் நெஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெறிஞ்சில் முள்பாயும்
நெறியில் வழுவாது இயங்கவல் லார்க்கு
நெறியில் நெறிஞ்சில்முள் பாய கிலாவே"

என்று திருமூலர் குறிப்பிடுகிறார்.

**நிலையாமை**

4 அதிகாரங்களில் 54 மந்திரங்களால் திருமூலர் சுட்டிச் செல்கிறார். மரணம் உணர்த்தும் நிலையாமை பற்றி உண்மை எவ்வளவு பெரியது. அதைத் திருமூலர் சொல்லும் முறையோ முக எளியது! ஊரார் எல்லோரும் கூடுகிறார்கள் ஒலி எழுப்பி அழுகிறார்கள். பழைய பெயரை விட்டுப் பிணம் என்று பெயர் சொல்கிறார்கள். சுடுகாட்டுக்குக் கொண்டு போய்ச் சுட்டு விடுகிறார்கள். பிறகு நீரில் மூழ்கி குளித்து விட்டு அந்த நினைப்பும் இல்லாமல் மறந்து விடுகிறார்கள்.

"ஆவி நீங்கிய உடல் இயற்பெயர்
சிறப்புப் பெயர் ஒழித்துப் பிணம் என்று
பெயரிட்டு சுடுகாட்டில் எரியூட்டி
விட்டு நினைப் பொழிந்திருப்பர்"

என்று திருமூலர் கூறுகிறார்.

**இளமை நிலையாமை**

இளமைப் பருவம் கழியும் முன் நல்ல நெறியில் சென்று இறையருளை எண்ணிச் செயலாற்ற வேண்டும் என்கிறார் திருமூலர்.

**செல்வம் நிலையாமை**

"தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கண்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலுமாமே"

செல்வத்தின் மீது பற்றின்றி மேல்நிலை எய்தலாம்.

**உயிர் நிலையாமை**

உயிர் நிலையற்றது என்பதை,

"ஐவர்க்கொரு செய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச் செய்யைக் காத்து வருவர்கள்

ஐவர்க்கும் நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச் செய்யைக் காவல்விட்டாரே"

என்று திருமூலர் கூறுகிறார்.

**அறன் வலியுறுத்தல் (எளிய அறங்கள்)**

அனைவராலும் ஆகக் கூடிய செயல்களைத் திருமூலர்,

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பகவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுயிரைத் தானே"

என்று எளிய அறத்தினை எடுத்து வைக்கிறார்.

திருமூலர் எட்டிப் - பழம் உண்ணப்படாது போல அறஞ்செய்யான் செல்வமும் பயன்படாது என்கிறார் திருமூலர்.

"எட்டி மரங்கள் பழுத்துப் பெரும் பெரும் பழங்கள் வீழ்ந்தன. ஆனால் அஃது பயன்படாமையினால் ஒருவராலும் தொடப்படுவது இல்லை. அதுபோல நல்லறஞ் செய்யாதவர் செல்வமும் ஒருவர்க்கும் பயன்படுவதின்றி பொன்னாசையினால் கடும் வட்டி வாங்கி, மிகு பொருள் ஈட்டியதோடு அமையாது வஞ்சனையினால் பிறர் பொருள் கவரும் பாதகர் தாம் செய்ய வேண்டிய அறத்தனையும் உணரார். அவற்றினால் விளையும் பயனையும் அறியார். இவ்வாறாக ஈகை பற்றிக் குறிப்பிடுகிறார்.

ஈட்டிய செல்வத்தைப் பூட்டி வைக்காமல் பலருக்கும் பயனாகும் படி வழங்க வேண்டும் என்பது திருமூலரின் கருத்தாகும். இதனை "ஈட்டிய தேன்" எனத்·தொடங்கும் பாடலில் பின்வருமாறு தெரிவிக்கிறார்.

"வண்டுகள் மணமிக்க மலர்களிடத்தே சென்று ஈட்டிய சுவை மிக்க தேனினைக் கூட்டிக் கொணர்ந்து ஒரு கொம்பிலே கூடு கட்டி வைத்திடும். வலிய மாந்தர் தேனீக்களை ஓட்டித் துரத்திவிட்டு அத்தேனினைக் கவர்ந்து கொள்வர். அதுபோல இறைவனால் காட்டித் தரப்பட்ட பொருட் செல்வமும் வலியவர் கொள்ள, நம் கைவிட்டுப் போய் விடும். ஆதலின் நிலையற்ற பொருட் செல்வத்தை இரவலர்க்கு ஈந்து மகிழ்க" என்கிறார்.

**இறைவனின் அருள்தன்மை**

உயிர்களின் - மாட்டுக்கருணை தன்மை உடையவனாகிய இறைவன் தீயைக் காட்டிலும் தீயவர்களுக்கு வெம்மையானவன். அன்பர்களுக்கு நீரைக் காட்டிலும் தன்மையானவன். குழந்தையாயின் நல்லவன். பக்கத்தில் இருப்பவன். அவனிடம் அன்பு செய்வார்க்குத் தாயைக்காட்டிலும் கருணை

புரிபவன். இவ்வாறு இருந்தும் இறைவனது கருணையைப் பெறாமல் இருக்கிறார்களே என்று மக்களின் நிலை கண்டு வருந்துகின்றனர்.

இவ்வுலகில் மனிதராக பிறந்த ஒவ்வொருவரும் இறைவனின் அருளைப் பெற வேண்டும் என்பதே அவரது முழுமையான எண்ண மாகும். முன்னை ஒப்பாயுள்ள மூவர்க்கும் மூத்தவனாகிய அவன் தன்னை 'அப்பர்' என்று அழைப்பவர்கட்கு அப்பனாக இருந்து உதவுபவன். உள்ளமாகிய தாமரையில் வீற்றிருக்கும் தன்மையுடையவனாகிய அவன் மனிதர்களுக்கு மனித வடிவிலும் தேவர்கட்கு தேவ வடிவிலும் விண்ண வர்க்கும் தேவ கர்த்தார்க்கும் அவர்கள் விரும்புகின்ற வடிவிலும் அருள் செய்வான் என்பதைத் தெய்வக் காட்சியில் அறியலாம்.

இறைவனின் அருளைப் பெற அவனை வாயார வாழ்த்துதல் வேண்டும். மனதில் குற்றம் இல்லாது இருத்தல் வேண்டும். இறைவனை துதித்தும் எம் இறைவன் என்று வணங்கியும் நேசித்தும் வந்தால், அவ்விறைவனது அருளைப் பெறுதல் எளிது ஆகும்.

''ஏத்தியும் எம்பெரு மான்என்று இறைஞ்சியும்
சுத்தம் செய்து அருள்பெற லாமே''

என்பதன் வழி அவனிடத்தில் நட்புப் பெறுதல் வேண்டும் என்பதை அறியலாம். வஞ்சனை கொண்டு பிடிவாதம் செய்யாமல் இறைவனின் திருவடியை வணங்குபவர்கட்கு உள்ளத்தே புகுந்து வணங்கும் சிவன் உடம்பைப் புறம் என்று உணர்த்துவான் (பா : 40) என்கிறார்.

''புனஞ்செய்த நஞ்சினைப் போற்றலல் லார்க்கும்
..................................................................
பெண்மானைக் கண்ட ஆண் மானை போன்று கூடி நின்றான்''

என்பதன் வழி நாயக நாயகி பாவனையில் தம்மைத் தலைவியாகவும், இறைவனை தலைவனாகவும் கொண்டு ஆழ்வார்களும் நாயன்மார் களும் போற்றி வழிபட்டிருப்பது இவண் நோக்கத்தக்கது.

இறைவனை வணங்குபவர்கள் மீண்டும் மீண்டும் பிறவிகளைப் பெறுகின்ற நிலையில் இருப்பினும் இறைவன் வந்து கருணையோடு அவர்களிடம் இணைவான் (பா : 42) என்று குறிப்பார். இறைவனின் திருவடியைப் புகழ் நீராடி அன்பினால் கசிந்துருகி இடையறாது நினைத்தால் ஞானத்தை நிலைக்க செய்து மனத்தை செம்மை செய்து பூரணமாக நிலைத்து இருப்பான்.

**திருமூலரின் சிந்தனைகள்**

''கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக்காரர் வலிக் கயிற்றால் கட்டிச்

செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நிலவிடும் என்று நிறுத்துவர் தாமே''

என்று பிற உயிர்களைக் கொன்றால் கொடிய நரகத்துக்குப் போகும் துன்பம் நேரும் என்கிறார் திருமூலர்.

**பிறர்மனை நயவாமை**

பொருட்பற்றும் தன்னுடைய சிறிய அறிவைப் பெரிது என்று வியக்கும் உள்ளமும் உடையவர்களே பிறர்மனை நயக்கின்றவர்கள் என்கிறார் திருமூலர்.

**நல்குரவு**

உடை, வீடு, கொடுக்கல் வாங்கல், செல்வாக்குப் போன்ற இல்லாத வாழ்க்கையே வறுமையாகும். நல்குரவை 5 பாடல்களால் உணர்த்துகிறார்.

1. வறுமையாளனுக்கு உலக வாழ்வில்லை.
2. பிறவித் துன்பத்துக்கான வழியைத் தேடுங்கள்.
3. நிலையில்லாத பொருளை விட்டு நிலைத்த திருவடி ஞானத்தைப் பெறுங்கள்.

**கல்வி**

சிவானுபவத்தைத் தரும் கல்வியைக் கற்றவர் ஞானக் கண்ணை விளங்கும்படிச் செய்வர்.

**கல்லாமை**

முறையாகக் கல்வி கற்றோரும் இறைவன் திருவருளைப் பெற வில்லையாயின் கல்லாதவராகவே கருதப்படுவர்.

**நடுநிலைமை**

திருமந்திரத்தில் நடுவாகிய கழுமனையில் நிற்றல், சிவசக்திக்கு இடையே நிற்றல், சூரிய சந்திரனாகிய இரு கண்களும் மேல் புருவ நடுவில் நிற்றல் எனப் பல பொருள்கள் குறிக்கப்பட்டுள்ளன. திருவடிப் பற்றுடன் இருந்து பார்த்து இருப்பதே ஞானிகளின் நடுநிலையாம்.

**கள்ளுண்மை**

கள் வாய்மையை யழிக்கும்: பெண் இன்பத்தை நாடி அடையத் தூண்டும். நல்ஞானம் தராது. எனவே சிவானந்தம் தேறல் கிட்டாது.

**பெரியாரைத் துணைக்கோடல்**

இறைவனிடம் பொருந்தி இருக்கிற உண்மையை அறியும் பெரியோர்கள் ஆன்ம தத்துவம், வித்தியாதத்துவம் ஆகியவற்றைக் கடந்து சிவதத்துவத்தில் பொலிந்து விளங்கித் தோன்றுவர். யான், எனது என்னும் செருக்கு அறுத்த ஞானியாருடன் கூடியிருத்தலே பேரின்பமாகும்.

**ஊழ்**

இறைவன் வகுத்த வழியே செல்வது ஊழ் என்றும் உரைக்கப் படும். ஆற்றில் நுண்மணலின் இயல்பு போல எல்லாம் முன் செய்த வினைப்படியே நடக்கும். இறைவனை விட்டு நீங்காது இருக்க வேண்டும்.

"ஆறிட்ட நுண்மணல் ஆறே கமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டு என் உள்ளம் பிரியகில்லாவே"

என்கிறது திருமந்திரம்.

**தமிழ்ப்பற்று**

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே"

என்று கூறி இறைவனின் திருவுளம் ஆகமப் பொருளைத் தமிழில் உலகத்தார்க்கு வழங்க வேண்டும் என்பதற்காக எண்ணிச் செயல்பட்டார்.

**திருமூலரின் மனித நேயச் சிந்தனைகள்**

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பார் திருமூலர். மக்களை நடமாடுங் கோயில்கள் என்றும், இறைவன் வாழும் ஆலயம் என்றும் குறிப்பிடுவர்.

"படமாடுங் கோயில் பகவற் கொன்றீயில்
நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடுங் கோயில் பகவற் கதாமே" (திருமந்திரம் : 1856)

என்ற பாடல் கடவுளுக்குத் தொண்டு செய்யும் சிறப்பு உயர்ந்தது என்பதை விளக்குகின்றது.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
மரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
மரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்"

என்ற பாடல் கல்லைக் கண்டால் நாயைக் காணோம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம், என வழங்கப்பட்டு வரும் பழமொழியை நினைவு படுத்துவதாக உள்ளது. உலகியல் காட்சியைக் கருத்தில் கொண்ட திருமூலர் இறைவனைப் பற்றிய மெய்ப்பொருள் காட்சியை உணர்த்துகின்றார். மேலும், திருமூலர் அன்பும் சிவனும் ஒன்றே தான் என்பதை,

"அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆகும் அறிகிலார்"

என்ற பாடல் அடிகளில் அழகாக எடுத்துக் காட்டுவதைக் காணலாம்.

## திருமந்திரம் ஒரு யோக நூல்

இந்த உடம்பு இழிவானது என்று கருதி அதனை அலட்சியம் செய்யக் கூடாது. உடம்பே இறைவன் விரும்பி உறையும் கோயிலாகும். ஆதலின் கோயிலை எப்படித் தூய்மையாகவும் கவனமாகவும் வைத்துக்கொள்ள வேண்டுமோ, அப்படியே இந்த உடம்பையும் பாதுகாத்து வரவேண்டும் என்பது திருமூலரின் எண்ணமாகும்: இக்கருத்துப்படி,

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

என்று திருமூலர் பாடியுள்ளார்.

ஒரு காலத்தில் இந்த உடம்பினைக் குற்றமுடையதன்று கருதியிருந்தேன். காலப்போக்கில் இந்த உடம்புக்குள் பொருந்தியிருக்கும் பரம்பொருளைக் கண்டு கொண்டேன். இந்த உடம்பின் உள்ளே உத்தமனாகி இறைவன் கோயில் கொண்டுள்ளான்" என்று உணர்ந்து இதனை திருக்கோயிலாகக் கருதி நான் பாதுகாத்து வருகின்றேன்" என்பது இதன் பொருளாகும்.

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்று பாடுகின்றார். "உடம்பு அழிந்து போனால் உயிர் நற்கதியின்று அழிவடைந்து விடுகிறது. அதனால் உறுதியான பயன் ஏற்படும் வண்ணம் மெய்ஞ்ஞானத்தை ஆன்மா அடையவும் மாட்டாது. எனவே உடம்பையும் பாதுகாத்துப் பேணுகின்ற உபாயத்தினை அறிந்து உடம்பினை பாதுகாத்தேன். அதனால் உயிரையும் பாதுகாத்தேன்" என்கிறார்.

இப்பாட்டு "காயசித்தி உபாயம்" என்னும் தலைப்பில் உள்ளது. அழிந்து போகக் கூடிய இந்த உடம்பை உயிர் இருக்கும் வரை நலத்தோடும் உறுதியோடும் இயங்கும்படி பாதுகாக்கிற பயிற்சிக்குக் காயசித்தி உபாயம் என்று பெயர். உடம்பை அங்ஙனம் பாதுகாக்க வேண்டியதன் அவசியத்தை இப்பாடல் வெளியிடுகின்றார் திருமூலர். யோகப் பயிற்சியினால் அவர் பெற்ற அனுபவமே, இப்படியொரு பாடலாக வடிவெடுத்தது என்பர். திருமந்திரம் அனுபவ ஞானம் நிறைந்த 'யோக நூல்" என்பது இங்குக் கருததக்கது.

## இறைவனை வணங்குவதால் எய்தும் பயன்கள்

அனைத்துமாய் நிற்கும் இறைவனை வணங்குவதால் ஒளிவடிவமான அவன் வீட்டு நெறியைக் காட்டிடும் பகலவனாக நிற்பான். இல்லறத்தில் இறைவழிபாடு செய்வதன் மூலம் பெரிய தவத்தையுடைய தேவர் களுக்கு ஒப்பாவர். முத்தி பெறலாம். ஆசை பாசங்கள் மறையும்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் அறும். தூய வடிவினைப் பெறலாம். இவ்வுலகில் விரும்புகின்ற அனைத்துப் பொருள் களும் பெறலாம். பிறவி துன்பத்தைப் போக்கி இறையோடு ஒன்றலாம்.

அனுபவக் கல்வியாகிய உண்மைக் கல்வி கைவரப் பெறும், இறைஞானம் கைகூடும், குற்றம் இல்லாமல் இறைவனை ஏத்தினால் ஒப்பிட்டு கூற முடியாத தூயசோதியாகிய சிவன் தோன்றுவான். சிவனை வேண்டினால் திருமாலும் பணி செய்வார். பிரமனும் ஏவல் வழி நடப்பார். தேவர் ஆகலாம். காலம் அல்லாத காலத்தும் அருளைப் பெறலாம், ஆன்ம சொரூபத்தை அறியலாம், புண்ணிய வடிவினன் ஆகலாம். வணங்குபவர்களுக்கு எளிதில் பயன் தருவார். இறைவனை வணங்காத வர்களுக்குக் கல்லில் செதுக்கிய பசுவைப் போல் பயன் தரமாட்டான். தருமம் தலைப்படும். இறைவழிபாடு செய்பவர்களுக்குத் தூய்மையான சோதி துணையாக வரும். சுக்கிலம் கெடாது. தூய்மையுற்று உடலுக்கு உறுதுணையாய் ஒளியாக நிற்கும். இப்பிறவியில் உண்மைக் கல்வியே துணையாக இருந்து வீடுபேற்றை அளிக்கும் என்பதை,

"துணைஅது வாய்நிற்கும் தூயநற் சோதி
துணைஅது வாய்வரும் தூயநற் சொல்லாம்
துணைஅது வாய்வரும் தூயநற் கந்தம்
துணைஅது வாய்வரும் தூயநற் கல்வி"

என்னும் பாடலில் வழி விளக்குவர்.

வெண்பாவிற்கும் விருத்தத்திற்கும் இடைப்பட்டு வெண்டளை பயின்று வரும் யாப்பில் அமைந்த நூல் இதுவாகும். மந்திரம் போல் அமைவதால் திருமந்திரமாயிற்று. இக்கட்டுரையின் வாயிலாக இறைவனின் அருள் தன்மையையும் திருமூலரின் சிந்தனைகளையும் இறைவனை வணங்குவதால் எய்தும் பயன்களையும் "திருமந்திரம் ஒரு யோக நூல்" என்பதையும் அறிய முடிகிறது. திருமூலர் தரும் இக்கருத்துகளை மனத்தில் ஓர்ந்து ஓர் இறை என்பதை உணர்ந்து அனைவரும் துதித்து போற்றி வளம் எய்துவோமாக.

# 60. ஞாலத்தின் திருநெறி

பேராசிரியர் இராம. தெய்வ வீரலெட்சுமி, தூத்துக்குடி.

திருக்கயிலையில் நந்தியின் திருவருள் பெற்ற நான் மறை யோகிகளில் ஒருவரே பின்னர் திருமூலர் ஆவார். அவர் இயற்றிய நூல் திருமந்திரமாகும்.

"நந்தி அருளாலே நாதினாம் பேர் பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவது என் செய்யும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நான் இருந்தேனே"

நந்திப் பெருமான் அருளாளே நாதன் எனப் பெயர் பெற்றார்.

நந்தியெம்பெருமான் தம் பெரிய திருவுருவத்தைத் தமக்கு தந்ததாக திருமூலர் தமது திருமந்திர நூலில் 1957-ஆம் பாடலில் குறிப்பிட்டுள்ளார். "பெரு வடிவைத் தந்தபேர் நந்தி" என்பதாம் அவரது வாக்கு.

சிவபெருமானே திருமூலரைச் சிவயோகத்தில் இருக்கும்படி செய்தார். இது 'திருவருட் செயல்' என்று உணர்ந்த திருமூலர்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறும்" (151)

என்று அருளியுள்ளார்.

பத்தி நெறியைத் தமிழ் உலகத்திற்கு வழங்கிய சித்தர் பரம்பரையில் முதன்மையும், தொன்மையும் வாய்ந்த திருமூலர் "சித்தாந்தத்தின் தந்தை", என போற்றத்தக்கவரானார். சித்தாந்தம் என்னும் சொல்லையும் சித்தாந்த தத்துவங்களையம் விரிவாக முதன் முதலில் எடுத்துக் கூறியவர் மூலவராவர். நாயன்மார்களில் திருமூலரும், பெருமிழலை குறும்பரும் அட்டமா சித்திகளை அடையப்பெற்றவர்கள்.

இவ்வுலகில் பிறக்க வேண்டிய அவசியம் இல்லாத ஆன்மாக்களுள் உயர்ந்த நிலையை அடைந்தவர்களை, 'நித்திய சித்தர்கள்' எனக் குறிப்பிடுவர். நம்மைப் போன்று பிறந்து, இறந்து வரும் நிலை அவர்களுக்கு இல்லை என்றாலும் தேவை ஏற்படும் பொழுது இவர்கள் ஏதாவது ஒரு உடலில் புகுந்து இவ்வுலகில் வந்து ஏதாவது ஒன்றைச் செய்ய சூழ்நிலையில் ஈடுபடலாம். கூடுவிட்டு கூடு பாய்தல் அல்லது பரகாயம் பிரவேசம் எனப்படும் இந்த முறையில் இவர்கள் வரலாம். இவ்வகையில் வந்த சித்தர் தான் திருமூல தேவர் ஆவார்.

## திருமந்திரத்தின் அமைப்பும், சிறப்பும்

கற்க வேண்டிய நூல்களின் எவை என்பனவற்றை அவ்வையாரின் வெண்பாவில்,

"தேவர் குறளும் திரு நான் மறைமுடிவுள்
மூவர் தமிழும், முனி மொழிதல் - கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகம் என்துணர்"

எனக் கூறியுள்ளார். திருக்குறளை முதலிலும், திருமூலரின் திருமந்திரத்தை முடிவிலேயும் வைத்து, மற்றவைகள் எல்லாம் அவற்றின் இடையிலே அடங்க வைத்திருப்பதையும் காண முடிகிறது.

திருமந்திரம் அனுபவஞானத் திருநூல், செழுந்தமிழ் சிறக்க எழுந்த ஒப்பற்ற நூல். ஓதி உணர்ந்து உறுப்பயன் அடைதல் உலகவர் கடன். வேதாந்தம் என்ற பெயர் இந்நூலுக்கு உண்டு. சிவபெருமான் தந்த ஆகமப் பொருளை உலகத்திற்கு திருமூலர் திருவாக்கினால் தமிழில் வகுக்க, உதவினார். பன்னிரு திருமுறைகளில் திருமந்திரமே மெய்ப்பொருளியல் விளக்கும் முதல் சாத்திரமாக விளங்குகின்றது. சாக்த மந்திரங்களை கூறும் முதல் நூலாகும்.

திருமந்திரம் படனம் செய்பவருக்கு அறிவில் தெளிவு ஏற்படுத்தும் தன்மை உடையது. திருமூலர் தம் நூலுக்கு தாமே "மந்திரமாலை" எனப் பெயர் சூட்டியுள்ளார். (பாடல் 86). இது ஒன்பது ஆகமங்களைத் தன்னுள் அடக்கியுள்ளது. நூலில் உள்ள ஒன்பது தந்திரங்களும், நல்லொழுக்கம், அறவாழ்க்கை, யோகப்பயிற்சி, மந்திர நுட்பம், சமய ஒழுக்கம், குரு நெறிச்சார்ந்து நிற்றல், அகப்புற உணர்வு, அருள் நுகர்ந்து, பேராப் பெருவாழ்வு போன்ற பல அரியப் பொருட்களை விளக்குகின்றது. நம்பிரான் திருமூலர் என சுந்தரரால் போற்றப்பட்டார்.

வடமொழியிலும் தேர்ச்சி பெற்ற திருமூலர் தாம் சிந்தித்து உணர்ந்து சிவாகம உண்மைகளை மக்கள் பலரும் ஓதி உணர்ந்து உய்தி பெற வேண்டும் என்ற பெருநோக்கோடு இந்நூலை இயற்றியுள்ளார். "சிவாகமமாம் சித்தாந்தமாக்கும்" என சிவஞான சித்தியார் கூறுகின்றது.

சித்தர் என்றால் சித்தி பெற்றவர் எனப் பொருளாகும். தமிழரின் சித்தர் இலக்கியப் பரப்பில் தொல் நூலாகக் கருதப்படுவது திருமந்திரம் தான். சித்தம் என்பதற்கு "சிந்தை தெளிவித்தவர்" என்ற பொருள் விளக்கத்தைத் தருகின்றது (பாடல். 1989). இந்நூலுக்கு "தமிழ் மூவாயிரம்" என்றும் "திருமந்திர மாலை" எனப் பெயரும் கொண்டு அழைப்பர். "செந்தமிழ் மந்திரமொழி ஆகக்கூடும்" என்பதை பல்லாயிரம் ஆண்டு களுக்கு முன்பே பார் அறியச் செய்தவர் திருமூலர். சாத்திரத்தில் சிறந்தது

திருமந்திரம். மந்திரத்தில் சிறந்தது திருவாசகம் என்னும் பழமொழி மூலம் இந்நூலின் மாண்பை உணர முடிகின்றது.

சைவச் சித்தாந்த சாத்திரங்களை அடுத்து அவற்றின் கருத்துக்களை பல கோணங்களில் வெளிப்படுத்தும் ஞான நூல்கள் பல தோன்றியுள்ளன. அம்முறையில் திருக்கயிலாய பரம்பரையில் வந்த திருமூலர் கூறிய ஞானநூலாகும் இது. இந்நூலில் ஆங்காங்கு விரிவாகவும், விளக்கமாகவும் காணக் கிடைக்காத சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல காணப்படுகின்றன. அறநெறிகள், அருள்நெறிகள் பலவற்றை உள்ளடக்கி, பரந்து விரிந்து இருக்கும் இந்நூலில் சில செய்திகளை சிந்திக்கலாம். திருமூலர் பெருமான் வழியில் குவலயம் நின்றோங்கிடுக!

## திருமந்திரத்தில் சமுதாய நோக்கு

மனிதன் தனியாக அல்லது குழுவாக நினைந்து செயல்பட்டுத் தனதுப் படைப்புத் திறனால் தானும் முன்னேறி தன்னைச் சேர்ந்தவர் முன்னேற உதவுதலாகிய செயல்பாடே மனித வளமாகும். மனிதவள மேம்பாட்டில் கல்வி வளர்ச்சி, வறுமை ஒழிப்பு, உடல்நலம், சமூகத் தீமைகளை களைதல், முதலியன முக்கியப் படிகளாக விளங்குகின்றன. தமிழனின் மரபு இலக்கியம், நீதிநூல், பன்னிரு திருமுறைகள் முதலிய வற்றில் இவைகள் காணப்படுகின்றன. குறிப்பாக திருமந்திரத்தில் இச் செய்திகள் பல காண்ப்படுகின்றன.

மனிதவள மேம்பாட்டுச் சிந்தனைகளில் இன்றியமையாதது கல்வி அறிவாகும். இதை "கல்லா மூடனை காணவும் ஆகாது கருத்தறியாடும்" (3,7)ம் பாடல் மூலம் வற்புறுத்துகின்றது. 'கல்லாத மூடர்' என்பதை ஒவ்வொரு அடியிலும் மிக வன்மையாக உணர்த்துகிறார். மக்கள் இனத்திற்கு நன்மை பயக்கும் கல்வியை திருமூலர் நுட்பமாகக் குறிப்பிடுகின்றார். அகக்கண் களைத் திறந்து, விழிப்புணர்வை ஏற்படுத்தி அவனுடைய திறமைகள் மக்களினத்திற்குப் பயன்படுமாறு அவனை வழிநடத்த வேண்டிய கல்வியை திருமூலர் "கணக்கறிந்தோர் கல்வி" என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். இன்றைய காலத்தில் பல்வேறு புத்தம் புதிய அறிவு சார்ந்த கல்வித் துறைகள் உதயமாகியுள்ளன. ஆனால் அவை மனிதனை மேலும் மேலும் பொருளின் மீது ஆசை கொள்ள வைக்கும் புற நீர்மை சார்ந்தனவையாக அமைந்து வருகின்றன. வளர்க நல்லறிவு! வளர்க கல்வி!

மாணவர்களின் அறியாமையைப் போக்கிட அறிவைக் கொளுத்துபவர் குருவானவர் - ஆன்மாக்களின் அஞ்ஞானத்தைப் போக்கி வழங்குவது சிவபெருமான். அவனே ஞானாசிரியர் வடிவத்தில் வந்து நமக்கு அருள் உபதேசம் செய்கிறார். எனவே குருவை சிவமாகக் கருத வேண்டியது என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். 'குருவேசிவம்' என்பதை பாடலில் (1581) திருமந்திரம் விளக்குகின்றது.

பிறவித் துன்பத்தைப் போக்குபவரும் மூவுலகத்திற்கு குருவாகவும். ஞானிகளுக்கு அப்ரோட்சானுபூத்தியை அளிப்பவன் அவரே. நம்முடைய ஆணவமலப்பற்று நீக்குவதற்கு குருவின் துணை உதவிபுரியும். குருவருள் பெற்றவன் சகலவித துன்பங்களிலிருந்து நீங்கிப் பிரமானந்த வாழ்வு பெறுவான் என திருமூலர் தமது மாலையில் குறிப்பிட்டுள்ளார்.

குருவை நிந்திப்பார் எய்கிற நிலைப்பற்றி திருமூலரால் பலவாறு உணர்த்தப்படுகின்றது. அறிவு என்கிற பயிரை, நூல்கள் என்ற நீர் விட்டு பயிர் புரிந்த நல்லாசியினை நிந்திக்க கூடாது என்றும், மனம் வருந்துமாறு நிந்திக்க கூடாது என்றும் மனம் வருந்துமாறு நிந்தித்தோர் ஊருக்கு மத்தியில் நாயாக பிறந்து ஒருயுகம் வரை புழுவாய்ப் பிறந்து துன்புறுவார் என "ஒரெழுத்தோடு பொருள் மணியே" என்ற பாடலில் மூலர் கூறியுள்ளார்.

ஆறாம் தந்திரத்தில் கூறப்பட்டுள்ளவாறு ஆன்மாக்களின் பக்குவத்திற்கு ஏற்ப, சிவபெருமானே குருவாக வந்து அருள்கின்றான். குருவே சிவம். குருவடியில் சிவன் அருளாவிடில் சித்தி முத்தியை அடைய முடியாது. 'குரு வழி காட்டியதால் பிறவிக் கடலைக் கடந்தேன்' என்கிறார் திருமூலர்'. எனவே பெரியோரைக் காணவேண்டும் அவரோடு இணங்கி இன்புற வேண்டும் என்பதை 'தெளிவு குருவின் திருமேனி காண்டல்... தானே" என்ற பாடலில் திருமூலர் குறிப்பிட்டுள்ளார். இதே கருத்தை அவ்வையாரும் தமது நல்வழி நூலில் "நல்லாரைக் காண்பது நன்மை" என்று தொடங்கும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**தனிமனிதனின் ஒழுக்கம்**

தனிமனிதனின் ஒழுக்கத்தில் இன்றியமையாதது கார விகார எண்ணங்களைக் கட்டுப்படுத்துவதாகும். இதனை திருமூலர் 'திருத்தி வளர்த்ததோர் அற்றவாறே" (202) பாடலில் ஒழுக்கக் கேட்டினால் மனிதன் துன்பம் அடைகிறான் என்கிறார்.

பஞ்சமாபாதகங்களை விட்டொழித்து, வஞ்சகம், பேராசை குணங்களை நீக்கி, மற்றவருக்கு உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணம் உருவாக வேண்டும். "கொலையே களவுகள் போனது" என்று தொடங்கும் பாடலில் விளக்கியுள்ளார். மூலர் ஆன்மீக முன்னேற்றத்துக்கும் பெரிதும் தேவைப் படுவது ஒழுக்க நெறியே.

அருளாளர் காட்டிய நன்னெறியில் சென்றால் நலம் விளையும். அஃதன்றி தவறிச் சென்றால் துன்பம் நேரிடும். இதனை உணர்ந்து நலம் பெறுதற் பொருட்டு நல்வழியில் செல்ல இறைவனை வழிபடும் முறையை "நெறியைப் படைத்தான்" என்று தொடங்கும் பாடலில் மூலர் குறிப்பிட்டுள்ளார்.

மனிதனின் உயிர் உடலுக்கு முக்கிய கருவி என்று கூறுவார். திருமூலர் மனித உடலின் முக்கியத்துவத்தை 'சரீர சித்தி உபாயம்" என்ற தலைப்பில்

எடுத்துக்காட்டுகிறார். சரீரத்தை அழியாமல் பாதுகாப்பதற்குரிய வழி என்ற முறையில் திருமூலர் தம் பாடலில் (16) பாடியருளியுள்ளார்.

உயிரை உலகத்தோடு இணைக்கின்ற உடம்பு எந்த நேரத்திலும் உயிரை விட்டு நீங்கும் தன்மையுடையது என்பதை திருமூலர் "அடப்பண்ணி வைத்தார்" என்று தொடங்கும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். உலகில் உள்ள ஒவ்வொரு பொருளையும் அனுபவிப்பதற்கு உடல் வளர்ச்சி அமைய வேண்டும். இக்கருத்தை "முகத்தில் கண் கொண்டு" என்னும் தொடங்கும் பாடலில் குறிப்பிட்டுள்ளது.

உடலின் நிலை வேறு உலகியல் வாழ்வின் தேவைகள் என்பன வற்றுக்கு இயற்கையைப் பயன்படுத்திக் கொள்ளும் நோக்கில் சித்தர் மரபின் பின்புலமாக இருந்து வந்தது. இது அறிவியல் சார் நோக்கு நிலையாகும். சித்தர்கள் உடலைப் பேணுதல் என்ற நோக்கம் உடையவர்கள் என்பதற்கு இலக்கியச் சான்று என்ற வகையில் திருமூலர் "உடம்பால் அழியாமல் உயிராக அழிவர் வளர்த்தானே" என்ற திருமந்திரப் பாடல் சிறப்பாகப் பேசப்படுகின்றது.

திருமூலர் சிவவாக்கியம், பட்டினத்தடிகள் பாம்பாட்டி சித்தர், இராமலிங்க வள்ளலார் முதலான பல சித்தர்கள் இறை நம்பிக்கையுடையவர்கள். மனத்தைச் செம்மைப் படுத்துவதன் மூலம் இறை அனுபவத்தை பெறமுயல்வதே இவர்களின் குறிக்கோளாகும். இதற்கு ஏற்ப உடலை பயன்படுத்துவதே இவர்களால் அழுத்திப் பேசப்படுகின்றது. ஐம்புலன்களையும் அடக்கிவைக்கும் அட்டாங்க யோகத்தின் பயன் அளவிட முடியாது. ஆன்மா சீவித்திருக்கும் நிலையிலேயே திருவடிப் பேற்றினை பெறுதற்கரிய வாய்ப்புகள் அதன் மூலம் கிடைக்கும் என்பதை மூலர் திருமந்திரத்தில் விரிவாக கூறியுள்ளார்.

**அன்பே சிவம்**

சாத்திரம் என்பது தவமும் அதன் பயனாகிய ஞானமும் என இரண்டு வகையானது. அதில் சிறந்து நிற்பது அட்டாங்கயோகம். யோகத்தின் பயன்பற்றி மூன்றாம் தந்திரத்துள் பெரிதும் உணர்த்துகிறார்.

சைவ சமயத்தில் தான் அன்பே சிவம் என்றும், சிவனை அன்பு வடிவமாகவும், கருதப்படுகின்றது. அன்பே வடிவமான சிவபெருமானை மனிதன் அன்பு மூலம் வழிபடும் பலன் எதிர்பாராத அன்பாக ஏற்படுகிறது. அன்பு என்பது மிக உயர்ந்த ஒன்று என்பதற்கு "அன்பே சிவம்" என முதற்கண் அருளிச் செய்தவர் அருள் நெறித் தலைவராகிய திருமூலர்.

எல்லா உயிர்களின் மேல் செலுத்தும் அன்பினால் ஒருவருக்கு உண்மையறிவு உண்டாகும். அதனால் அடக்கமுடைமை உண்டாகும்.

அன்பும் சிவமும் இரண்டறக் கலந்து நிற்பதால் அன்பே சிவமாகி விடுகிறது. இறைவனைக் காண்பது அறிவால் அல்ல அன்பினால் தான். இதற்கு சிவபெருமானும் சிவனடியாரும் கூறும் சான்றாகும். ''அறிவால் அறிந்துன்னிருதாகும். இறைஞ்சும் அடியார்'' என அருணகிரிநாதரின் வாக்கு. ஈண்டு அறிவு என்பது மெய்யறிவாகும். செம்பொருளாகக் காண அன்பின் அடிப்படையில் அறிவு என கொள்ளப்பெற்றது.

குளக்கரையில் அமுதனைக் கண்டு சிவஞானத்தோடு கலந்த பாலை உலகநாயகி சம்பந்தருக்கு கொடுத்தருளினார். இந்த அற்புதத்தை நீண்ட நாள் கழித்து கேட்ட மங்கையர்க்கரசியார் மார்பில் பால் சுரந்ததை இந்த தாயன்பிற்கு எப்பொருளை உவகையாகக் கூற முடியும்? ''அன்போடு உருகி - ஒன்னாதே'' என்ற பாடலில் இவ்வன்பைக் குறிப்பிட்டுள்ளார் மூலர். ''அன்பு செய்வாரை அறிவன் சிவன்'' ''அன்பில் யாம்யறிவோர்'' என்ற திருமந்திரப் பாடல் மூலம் அன்பே மூலரின் அசைக்க முடியாத அடித்தளங்கள் என்பதை திருமூலர் உணர்த்துகிறார்.

சிவனையே முழு முதற்கடவுளாகக் கொண்டு அன்பின் வடிவமாக சிவன் இருக்கிறார் என வழிப்பட்டவர் திருமூலர். சிவபெருமானை அன்புடன் வழிபட்டு அவனை நாம் அடையும் பயன்பற்றி திருமூலர் தமது பாடலில் (7-ம் தந்திரம்) ''மஞ்சனமாலை நிலாவில் .... சித்தர்களே'' என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**செம்மையான செல்வம்**

உலக இன்பங்கள் அனைத்திற்கும் முதல்வாயில் ஆன உடம்பு நிலையாமையுடைத்தது. இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாதது செல்வம். எல்லோருக்கும் இது கூடுவது அன்று. அவ்வாறு பெற்றால் அச்செல்வம் அவருக்கு கடைசி வரையில் இருந்து உதவும் என்னும் உறுதி இல்லை. ''மகிழ்கின்ற செல்வமும்...கலம் போல்'' என்ற பாடலில் குறிப்பிடுகின்றார் திருமூலர்.

மனிதன் எய்த வேண்டிய பொருளும் இன்பமும் அறத்தால் பெறுதல் வேண்டும். அறத்தால் பொருள் ஈட்டி பொருளால் இன்பம் துய்ப்பதை முறைமை ''அன்றறிவார் எண்ணாது... துணை'' என்ற குறளில் கூறியவாறு மக்கள் வாழ்கின்ற காலத்தில் செய்துவைப்பது அறம் மட்டும் தான் நிலைத்த துணையாய் உடன் வரும். மற்றது எதுவும் வராது பிண்டம் பேய் உளதே'' என்ற பாடலில் மூலர் குறிப்பிடுகிறார்.

தேனீயானது மிகவும் துன்புற்று, அலைந்து சிறிதுசிறிதாக சேர்த்து வைத்து, தானும் அதனை உண்ணாது பிறருக்கும் வழங்காமல் காத்துக் கொண்டிருக்கும். அத்தேன் கவரப்பட்டவுடன் தேனீ வருந்தியொழிகிறது. இதுபோன்று அறம் செய்யாமல் சேர்த்த செல்வம் அழியும்.

"உடா அது முண்ண துத்தம் முடம்பு
செற்றுங்கடா அற நல்லற முஞ் செய்யார்
கொடா அதுவைத் தீட்டினாரிழப்பர்
வான்னோர் உய்த் தீட்டுந் தேனீக்கரி".

என்பது நாலடியார் மூலன் உரைப்புக்கு சிறப்பு செய்கிறது.

அறவுள்ளம் உடையார்க்கு அறம் செய்ய செல்வம் வேண்டியதில்லை. செல்வம் இல்லாதோரும் எளிதில் அறத்தைச் செய்ய இயலும் என்பதை "ஆர்கரும் இரு மின் கலம் அறிமினே" என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

தானம் செய்தால் வினைகள் நீங்குமா? என்ற ஐயத்திற்கு திருமூலர் அடியில் கண்ட பாடலில் விளக்கியுள்ளார்.

"அகரம் ஆயிரம் அந்தணர் கீயிலென்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயம் தானே"

தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் இயல்பு கொண்டவர்களை உண்ணச் செய்வது நலம். 'சகஸ்ர போஜனம்' என்று வழங்கப்படும் இப்பணியினால் வினைகள் நீங்கும். இவற்றைச் செய்ய இயலாதவர்கள் பிறரிடம் இனிமையாகப் பேசுங்கள் என்னும் கருத்தில் "யாவருக்குமாம் பிறர்க்கின்னுரை தானே" என்று அருள்கின்றார்.

**வாழ்வியல்**

மனிதன் வெறும் தோற்றத்தால் மட்டும் உயர்ந்தவர்கள். அது மட்டுமின்றி உணர்வுகளாலும் செயல் முறைகளாலும் வாழ்ந்து காட்ட வேண்டும். முன்னோர்கள் காட்டிய ஞான நெறியிலிருந்து தவறி நடந்தால் துன்புறுவர். நன்னெறியில் சென்றால் துன்பம் நேராது இன்புற்றிருக்கலாம். இக்கருத்து "நெறியைப் படைத்தான் நெஞ்சில் படைத்தான்" என்று தொடங்கும் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இறை பணி செய்வார் எல்லாம் பெறுவர்!

நூற்றுஅறுபத்தாறு பாடல்களைக் கொண்ட முதல் தந்திரத்தில் பல்வேறு நிலையாமைகளுடன் கொல்லாமை, புலால் மறுத்தல், கள்ளுண்ணாமை போன்ற பல கருத்துக்கள் உள்ளடக்கியிருக்கின்றன. எந்த உயிரையும் எதற்க்காகவும் எப்போதும் கொல்லக்கூடாது. இந்த உலகில் நமக்கு வாழ உரிமை உள்ளதோ அவ்வாறே உரிமை அவைகளுக்கும் உண்டு. கொலை செய்ய உடன்படுபவர்கள் காலனின் தூதுவரால் தண்டிக்கப்படுவர். "கொல்லிடு குத்தென்று தான்" என்று தொடங்கும் பாடலில் திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.

புலால் உண்பவர்கள் அருள் உடையவர்களாகவே இருக்க முடியாது. புலாலை உண்பவன் எத்தனை சிறந்தவனாகயிருப்பினும் எவ்வளவு புண்ணியத்தை புரியினும் பயனில்லை. மேலும் பிறரால் கொல்லப்பட்டு வரும் புலாலையும் உண்ணலாகாது என்பதை "பொல்லாப் புலாலை.... வைப்பாரே" என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார் திருமூலர்.

## இறையருள் வேண்டல்

கள்ளுண்பவர் ஒன்றையும் அறிய மாட்டாது மயங்கிக் கிடப்பார். ஆதலின் பசு, பாசங்களின் இயல்பை ஓர்ந்துண்டு முகத்தால் உயிருக்கு உயிராய் உள்ள இறைவனை அறிந்து அவனோடு ஒன்னுதல் எவ்வாறு என்பதை "உள்ளுண்மை ஓரார் கடுத்தறியாரே" என்ற பாடலில் திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.

மனமானது வேறு எங்கும் திரியாது இறைவனை எண்ணி மகிழும் சிறப்பு திருக்கோயில் சென்று வழிபடுவது தான். "சென்ற இடத்தாற் அறிவு" என்ற பாடலிலும், "நாடு நகரமும்... கொள்வானே" என்ற பாடலிலும் குறிப்பிட்டுள்ளார் மூலர். இக்கருத்தையே செம்மலர் நோன்றான்" என்று மெய்கண்ட தேவர் தமது சிவஞானபோதம் 12-ஆம் சூத்திரத்தில் ஓதியருளியுள்ளார்.

இறைவனை ஒரு வினாடி கூட நினைத்து வழிபடுவதை மறந்தவரைப் பற்றி அருணகிரிநாதர் 'சடக சடமூட மட்டி' என்கிறார். இக்கருத்தை அன்று தமது திருமந்திரத்தில் "மனத்தில் எடுக்கின்ற மாயநல் மாடன்.. நின்றாலே" என்னும் பாடலில் கூறியுள்ளார்.

தல வழிபாடும் மிகவும் அவசியம் எனமை் வலியுறுத்தியுள்ளவர் திருமூலர். 'தன்வயம் தோறும் தெய்வம் தொழு' என்பத அவ்வையின் அருளுரையாகும். தலங்கள் தோறும் சென்று அங்கங்கேயுள்ள தெய்வ திருவுருவங்களை வணங்க வேண்டும் என்பது அதன் பொருள். மேலும், 'நாடும் நகரமும்... நற்றிடுக் கோயிலும்" (1445) என்ற திருமந்திரப் பாடலில் வழிபாட்டின் சாலாண்மையைக் கூறியருளியுள்ளார்.

இரண்டாம் தந்திரத்தில் 'திருக்கோயில் இழிவு' என்ற தலைப்பில் திருக்கோயிலை முறையாகப் பாதுகாக்கத் தவறியவர்களை சதாசிவனே அழித்து விடுவான் என்பதை "போர்கொண்ட தானே" என்று தொடங்கும் பாடல் (579)-ல் மூலர் குறிப்பிட்டுள்ளார்.

திருக்கோயில்கள் அருட்பொலிவுடன் திகழ்வதே நாட்டின் நலன் களுக்கெல்லாம் அடிப்படையாகும். திருக்கோயில்களின் அருட் சிறப் பினாலேயே நமக்கு வாழ்வு அமைகிறது என்ற கருத்து நிலையாக உள்ளத்தில் அமைய வேண்டும். வழிபடுவோம்! வளம் பெறுவோம்!!

## திருத்தொண்டு பற்றி திருநெறி

'வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடு மின்' என்ற திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்குப்படி இப்பிறவி எடுத்ததின் விளைவான தொண்டு நெறியில் ஈடுபடவேண்டியது நமது குறிக்கோள்களில் ஒன்றாகும். அறிவு, பலம், பேரன்பு, செயல், திறமை, உறுதி, சமுதாய உணர்வு கொண்ட மனிதர்களை உருவாக்குவதே ஆன்மாவாகும். ஆன்மீகம் கருத்துக்களை பின்பற்றி சமுதாயத்திற்கு பலன் தரும் விதத்தில் பணி செய்ய எல்லோரால் செயல்பட வேண்டும். இறை உணர்வுடன் மக்களுக்கு செய்யும் தொண்டில் உரைப்புடன் செய்தால் அத்தொண்டு இறைவனைச் சென்று அடையும் என்பதை திருமந்திர நூல் மூலம் அறியலாம். 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்பார் திருமூலர்.

யாவர்க்கும் ... ஒரு பச்சிலை என்ற பாடல் வரியால் சிவத்தொண்டையும், "யாவர்க்கும் ஆம்.. ஒரு கைப்பிடி" என்ற பாடல் வரியில் சமூகத் தொண்டையும் சுட்டியருளியுள்ளார். சமுதாயப் பணிகளும், சமயப் பணியும் ஒன்றோடு ஒன்று இணைந்தது. சமுதாயப் பணி உடலை வேண்டுவது. சமயப்பணி உயிரை வளர்ப்பது உடலைப் பேணுவது உயிரை வளர்க்கும். இக்கருத்தை திருமூலர் "உடம்பார் அழியன் - வளர்த்தேனே" என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

உலகில் பக்தி மார்க்கம் சிவத்தொண்டுக்கு பிரதான்யம் தரும். யோகிகள் மூலிகை மருத்துவம், சித்த மருத்துவம் ஆகியவற்றைச் செய்து சமூகத் தொண்டு செய்த வரலாறுகள் உணர்த்துகின்றன. திருமூலர் ஒரு யோகி ஆனதால் இவரது பாடல்களில் சமூகத் தொண்டையே மிகுதியாக வற்புறுத்து கின்றன. வளர்க பக்தி நெறி! வளர்க உழைப்பும், தொண்டு நெறியும்!

பல நுண் பொருட்கள் பொதிந்துள்ள திருமந்திர நூலில் உள்ள பாடல்களின் வார்த்தைகள் மிகவும் எளிமையாக இருந்தாலும், உண்மையான பொருளைக் காண சற்றுக் கடினம். சொற்களில் ஆழமான கருத்துக்களை மறைமுகமாக வெளிப்படுத்துவது இந்நூலின் சிறப்புக்களில் ஒன்றாகும். அனைவரும் இந்நூலை முழுவதுமாக பயின்றால் அறநெறியோடு அருள் நெறியையும் பெற்று அனைத்து பயன்பெறலாம்.

**"வான் நின்று அழைக்கும் மழை போல் இறைவனும்**
**தான் நின்று அழைக்குங் கொல் என்று தயங்குவார்**
**ஆன் நின்று அழைக்கும் அதுபோல் என் நந்தியை**
**நான் இன்று அழைப்பது ஞானம் கருதியே"**

# 61. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திருமதி எல். தேன்மொழி, திருப்பத்தூர்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள திருக்கோயிலின் மேற்கில் மதில் புறத்தே உள்ள அரச மரத்தின் கீழ் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்து திருமூலர் ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் திருமந்திரப் பாடல்களை அருளிச் செய்துள்ளார் இவ் வுண்மையை,

> "சிவன் ஆவடு தண்துறை சேர்ந்திருந்தேன்
> சிவ போதியின் நிழலின்"

என்றும் ஒப்பிலா எழுகோடி யுகம் இருந்தேன் (74) என்றும் திருமூலர் அருளிச் செய்திருப்பது இவ்வுண்மைக்கு அகச்சான்றாக அமைந்துள்ளது.

பத்தாம் திருமுறையாக உள்ள திருமந்திரத்தில் சிவநெறி, சைவ சித்தாந்தம் அட்டாங்கயோகம், குரு உபதேசம், அறிவியல் செய்திகள், ஆன்மீகச் செய்திகள், முப்பொருள் உண்மை, உயிர் இயல்பு, இறை இயல்பு, ஆன்ம ஈடேற்றம், உடலோம்பும் முறை, ஆகிய பல கருத்துக்களை திருமூலர் உணர்த்தியிருக்கும் விதம் எண்ணி, எண்ணி வியத்தற்குரியது.

மந்திரம் என்ற சொல்லுக்கு பொருள் சொன்ன சொல்லின் பொருட் தன்மை எந்த இடத்திலும் குறைவின்றிப் பயன் தரும் வகையில் சொல்லப்பட்டு அந்தச் சொல்லின் ஆற்றல் அனைத்தையும் தன்னிடம் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நல்ல பொழியைக் குறிக்கும் இத்தகு இயல்பினைத் தொல்காப்பியர்,

> "நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

மறைமொழி என்பது புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் என்பார் பேராசிரியர். மேலும் மறைமொழி என்பதற்கு "பலர்க்கும் புலப்படாமல் மறைந்துள்ள அரிய உண்மை களைத் தன்னகத்தே பொதிந்துள்ள மொழி" என்று பொருள் கொள்வதும் பொருத்தமுடையது.

இறைவன் நூல் ஆகிய சிவாகமங்களை, இந்நிலவுலகில் தமிழால் வகுத்தருளிச் சொல்ல வேண்டும் என்னும் பெருநோக்கினாலேயே திருமூலரைத் திருவாவடுதுறையில் சிவயோகத்தில் இருக்கும்படிச் செய்தருளினான் இறைவன். இத்திருவருட் குறிப்பை,

> **"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
> **தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"**

என்று திருமூலர் அருளிச் செய்தார்.

## இறையியல்பு

> **"அன்னம் இரண்டு உள் ஆற்றங்கரையினில்**
> **துள்ளி இரண்டும் துணைப்பிரியாதன**
> **தன்னிலை அன்னம் தனி ஒன்று அது என்றக்கால்,**
> **பின்ன மட அன்னம் பேறு அணுகாதே"** - (2003)

என்று திருமூலர் இறையினது இயல்பை ஓர் அழகிய உவமை மூலம் விளக்குகிறார்.

இறைவன், உயிர் இவை எப்போதும் பிரிந்திருக்காது. பிரிந்து நின்றால் வீடுபேறு கிட்டாது. உயிர் ஒருபோதும் இறைவனைப் பிரிந்து இருப்பதே இல்லை. ஆற்றங்கரையில் இரண்டு அன்னங்கள் ஒன்றை ஒன்று பொருந்தி நிற்கின்றன. அதில் ஒன்று என்றும் தன் நிலையில் தனிப்பரம் பொருளாய் இருப்பது, மற்றொன்று அறிமையொடு கூடிய அன்னம்.

அணுவுக்குள் அணுவாகி, இறைவன் நிற்கிறான் என்பது ஒவ்வொரு உயிரினுள்ளும், உயிராகி சிவம் கலந்திருப்பதையே குறிக்கும். அவ்வாறு இறைவன் எல்லா உயிர்களிலும் நிற்பது சிவபெருமானது வியாபகத் தன்மையைக் குறிக்கிறது. அணு என்பது உயிரையும் குறிக்கும் ஒரு சொல். இதனைத் திருமூலர்,

> **"அணுவுள் அவனும் அவனுள் கணுவுற நின்ற கலப்பே" (2010)**

என்று கூறுகிறார்.

## அட்டாங்க யோகம்

எடுத்த தேகம் ஞானம் எய்தி, வீடுபேறு ஆகிய முக்தியை பெறுவதுவரைக் தீங்கு இன்றி நீடு வாழ்வதற்கான எட்டு வகையான யோக சாதனங்களைக் கூறுவது, அட்டாங்க யோகம் எனப்படும்.

### 1. இயமம்

தீயனவற்றில் சிந்தை செல்லாது கட்டுப்படுத்தல் - இயமத்தை இயல்பாக உடையவன் பிற உயிர்களை வருத்தமாட்டான் உண்மையே

பேசுவான்; தனக்குரியதல்லாதவற்றைக் கவர எண்ணமாட்டான்; பிறர்மனை நோக்காது இருப்பான்; அடக்கமும், நடுவு நிலைமையும் உடையவன்; செருக்கு அற்றவன்; கள் உண்ணாதவன்.

**2. நியமம்**

நியமம் என்பது விதிமுறைகளை வழுவாது ஒழுகுவதைக் குறிக்கும். நியமத்தை இயல்பாக உடையவன் தூய்மை, இரக்கம், சுருங்கிய உணவு, பொறுமை, செம்மை உடைமை, வாய்மை, உறுதியுடைமை, காமம் இன்மை, களவு, கொலை இன்மை இந்திரியங்களை அடக்கும் விரதம், ஞான நூல்களைக் கேட்டல் ஆகியவற்றைச் செய்பவன் ஆவான்.

**3. ஆசனம்**

126 ஆசனங்களில் எட்டு ஆசனங்கள் சிறந்தன. பத்ம ஆசனம் என்பது வலது தொடையின் மேல் இடது பாதத்தையும், இடது தொடையின் மேல் வலது பாதத்தையும், நன்றாக பொருத்தி, அதன் மேல் இரு கைகளையும் மலர்த்தி வைப்பது ஆகும். இது ஒரு சான்று மட்டுமே.

**4. பிராணாயாமம்**

மூச்சுக் காற்றாகிய பிராணனைக் கட்டுப்படுத்துவது பிராணாயாமம் எனப்படும். இடநாடி, வலநாடி, நடுநாடி ஆகியவற்றில் பிராணவாயு உலாவுகிறது. இந்த இயக்கத்தை முறைப்படி மாற்றி சுழுமுனையில் செலுத்துவதே பிராணாயாமம் ஆகும்.

**5. பிரத்தியாகரம்**

ஐம்பொறிகளின் வழி செல்லும் மனதை அவற்றிலிருந்து பிரித்து அகமுகமாகத் திருப்புவதற்கும் பிரத்தியாகரம் என்று கூறுவர். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை என்னும் ஆறு ஆதாரங்களில் மனதை நிறுத்தி வழிபாடு செய்ய வேண்டும்.

**6. தாரணை**

ஐம்பொறி வழியில் செல்லாமல் திருப்பிய மனத்தை மீண்டும், பொறிவழியில் செல்ல வொட்டாமல் நிலை நிறுத்தல் தாரணை ஆகும். தம் குருதேவராகிய நந்தி தேவர் மீது ஆணையிட்டுத் தாரணை செய்வதால் ஏற்படும் பயனைக் கூறுகின்றார் திருமூலர். தாரணை செய்து வருபவரின் ஆயுள் கூடும்.

**7. தியானம்**

இது இருவகைப்படும். ஒன்று உருவவழிபாடு மற்றது உருவின்றி வழிபடுதல். இது பரதியானம் எனப்படும். கண்கள் இரண்டையும் மூக்கு நுனியில் வைத்து தியானித்தால் திருவடி ஞானம் சித்திக்கும்.

**8. சமாதி**

இறைவனோடு ஆன்மா இரண்டற ஒன்றி நிற்கும் நிலை சமாதி எனப்படும். இதன் மூலம் அறுபத்தி நான்கு கலைகளும் சித்திக்கும்.

**குரு உபதேசம்**

**"தெளிவு குருவின் திருமேனி காணல்**
**தெளிவு குருவின் திருநாமம் செப்பல்**
**தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்**
**தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே"**

நாம் ஞானம் பெற ஒரு குரு அதாவது வழிகாட்டி தேவை. நாம் சிவனிடம் அடைக்கலம் புகுந்தப்பின் சிவனே நமக்குக் குருவாக வந்து நம்மை வழி நடத்துவான்.

குரு உபதேசம் என்ற இப்பகுதியிலேயே திருமூலர் முப்பொருள் உண்மையை விளக்குகின்றார்.

இறை, உயிர், தளை என்று சொல்லப்படுகின்ற மூன்று பொருள் களுள் இறைவனைப் போலவே, உயிர்களும், உயரிகளுக்குத் தடையாய் இருக்கும் பாசப் பொருள்களும் என்றும் அநாதியே உள்ளனவாகும். உயிர்களும் பாசப்பொருள்களும் இறைவனைச் சென்று அடையும் திறனுடையவை அல்ல; முப்பொருள் உண்மையையும் அவற்றின் இயல்பையும் அறியாதவர் தத்துவத்தை முழுமையாக அறிய முடியாது. எனவேதான் திருமூலர் இந்த பாடலில் சைவ சித்தாந்த நுட்பத்தை தெளிவுற விளக்கியுள்ளார்.

**ஆன்மீகச் செய்திகள்**

பக்தி மார்கத்தை விஞ்சிய நிலையில் ஞான மார்க்கம் இருக்கிறது. ஞான மார்க்கத்தில் ஒழுக மக்களுக்கு குருவருள் தேவை. மெய்ப் பொருள் உணர்ந்த ஞானிகள் மூலம் தீக்ஷை பெற்று அதன் மூலம் படிப்படியாக நயனதீட்சை, ஞானதீட்சை பெற்று குருவருளால் திருவடிப் பேறு பெறுதலை விளக்குவது ஆன்மீகச் செய்திகள்.

**"புரை அற்ற பாலினுள் நெய் கலந்தாற்போல்**
**திரை அற்ற சிந்தையுள் ஆரியன் செப்பும்**
**உரையற்ற உணர்வோர் உடம்பு இங்கு ஒழிந்தால்**
**கரை அற்ற சோதி கலந்த சத்து ஆமே"**

உறைமேல் ஊற்றப்படாமல் இருக்கும் பாலினுள் நெய் இருக்கிறது. அது நமக்குத் தெரிவதில்லை. உறை ஊற்றியபின் பால் தயிராகிறது. தயிரிலிருந்து வெண்ணெய் எடுக்கலாம். அதிலிருந்து நெய் கிடைக்

கின்றது. பாலில் நெய் மறைந்திருப்பது போல நம்முள்ளும் சிவன் இருக்கிறான். உறைமோர் போல் குருவின் வழி காட்டுதலின் விளைவாக ஆன்மா பக்குவம் அடையும்பொழுது நம்முள் இருக்கும் சிவபெருமான் வெளிப்பட்டு அருள் புரிவான். புரையற்ற பால் என்பது பக்குவப் படாத ஆன்மாவைக் குறிக்கின்றது. நெய் என்பது சிவனைக் குறிக்கும். உறைமோர் போன்றவராகிய ஆன்மா சிவனை உணரும்போது சலனங்கள் நீங்கி அமைதி அடைகின்றது. அப்போது உடல் பற்றுகள் நீங்கி விடுகின்றன. உடம்பு பற்றுகளைக் குறிக்கிறது. அப்போது ஆன்மா மாபெரும் ஞான ஒளியான சிவத்துடன் சேர்ந்து நிற்கிறது. சிவானந்த நிலை அதற்குக் கிடைக்கின்றது. இதெல்லாம் இவ்வுலக வாழ்விலே நமக்குக் கிடைக்க நல குருவின் துணை நமக்குத் தேவைப்படுகிறது.

## அறிவியல் செய்திகள்

ஆண்குழந்தை பெறுவது எப்படி? பெண் குழந்தை பெறுவது எப்படி? அறிவாற்றல், ஆரோக்கியம் செறிந்த குழந்தையைப் பெறுவது எப்படி? ஞானக் குழந்தை, எல்லோர்க்கும் பிடித்த குழந்தையைப் பெறுவது எப்படி? என்றும் கண்பார்வை இழப்புள்ள குழந்தைகளைப் பெறக் காரணம் யாது என்றும், உடல் ஊனமான குழந்தைகள் பிறக்கக் காரணம் யாது என்றும் தமது பாடல்களில் தெளிவுபடக் கூறுவதன் மூலம் திருமூலர். அறிவியல் மேதையோ, மருத்துவ நிபுணரோ எனவும் எண்ணத் தோன்றுகிறது.

## உடலோம்பும் முறை

**"உடம்பை முன்னம் இழுக்கென்றிருந்தேன்**
**உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டானென்று**
**உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே"**

இந்த உடம்பாகிய வாகனம் இருந்தால்தான், வாகனமும் பழுது இன்றி இருந்தால் தான் வாழ்க்கைப் பயணம் தங்கு தடையின்றி அமையும். இறுதி இயக்கான வீடுபேறு கிட்டும். அதற்கு உடம்பை சரியாகப் பேண வேண்டியது அவசியமானது என்று திருமூலர் இப்பாடலில் கூறுகின்றார்.

**"தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்"**

ஆகையால் சிவன் குடிகொண்டுள்ள சீவனை பராமரிக்கும் முறைப் பற்றி திருமூலர் கூறியுள்ளது போல யாரும் கூறியிருக்க மாட்டார்கள்.

அழிந்து போகக் கூடிய இந்த உடலை அழியாத கற்பத தேக மாக்கிக் காலம் கடந்து வாழக்கூடிய தன்மை பெற்றவர்கள் சித்தர்கள் ஆவார்கள். அத்தகைய தன்மை பெற்ற சித்தர்களுக்கெல்லாம் சித்தராக

விளங்கியவர் திருமூலர் ஆவார். யோக நிலை நன்கு கை வரப் பெற்றவராய் இவர் விளங்கினார். யோக நிலை என்றால் சாதாரண யோக நிலை அன்று; இரண்டு கைகளையும் ஊன்றியபடி, உடம்பு தரைமேல் படாமல் ஆசன நிலையில் இருந்து தவம் செய்யக்கூடிய ஆற்றல் பெற்ற நிலையாம்.

''என்றும் பதினாறு'' என்ற நிலையில் திருக்கடவூர் பெருமானிடம் வரம் பெற்ற மார்க்கண்டேயருக்கே இவர், ''உடல் நிலைத்திருக்க வேண்டுமென்றால் சுழிமுனையை உள் அடக்கி தவம் செய்க'' என்று உபதேசம் செய்தவர் என்பர்.

**மெய்நூல்**

''நூலொன்று பற்றி நுணி யேற மாட்டாதார்
பாலொன்று பற்றினால் பண்பின் பயன் கெடும்
கோலொன்று பற்றினால் கூடாப்பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின்றார்களே''

இப்பாடலின் பொருள் நாம் தானியங்களை முற்றத்தில் காயப்போடு கிறோம். அப்போது பறவைகள் வந்து அவற்றைத் தின்னாமல் இருப்பதற்காக கையில் குச்சி ஒன்றை வைத்துள்ளோம். அதைக் கொண்டு அந்தப் பறவைகளை நாம் ஓட்டி விடுகிறோம். இதேபோன்று ஐம் புலன்களின் தொல்லையில் இருந்து நம்மைக் காத்துக்கொள்ள நம் கையில் மெய்நூல் ஒன்று இருக்க வேண்டும் அதை நாம் அடிக்கடி படித்து உணர வேண்டும். அப்போது தான் நமக்கு மெய்யறிவு வளரும். புலனடக்கம் ஏற்படும்.

''அறிவேதான் தெய்வமென்றார் தாயுமானவர்
அகத்தது தான் மெய்ப்பொருள் என்று எடுத்துக்காட்டி
அறிவதனை அறிவித்தார் திருவள்ளுவர்
அவ்வறிவை அறிவதற்கு முறைகள் சொன்னார்.
அறிஞர் திருமூலர் அவ்வறிவில் ஆழ்ந்து
ஆனந்தக் கவியாத்தார் இராமலிங்கர்
அறிவில் அறிவாய் நிலைத்து அறம் வகுத்தோர்
அதை வாழ்ந்து காட்டினோர் நினைவு கூர்வாம்''

- வேதாத்திரி மகரிஷி

# 62. திருமூலர் காட்டும் நால்வகை நெறிகள்

புலவர் இராம. நாராயணன், சென்னை.

உலகம் பஞ்ச பூதங்களின் சேர்க்கை. இறைவன் பஞ்ச பூதங்களாகவும் விளங்குகிறான். மண் வடிவாகக் காஞ்சியிலும், நீர் வடிவாகத் திருவானைக்கா விலும், தீ வடிவாக திருவண்ணாமலையிலும், காற்று வடிவமாக காளஹஸ்தி யிலும், ஆகாய வடிவாகத் தில்லையிலும் விளங்குகிறான்.

திருவாரூரில் பிறப்பதினாலும், தில்லையைத் தரிசிப்பதாலும், திருவண்ணாமலையை நினைப்பதாலும், மதுரை என்ற பெயரைக் கேட்பதாலும், காசியில் இறப்பதாலும் வீடுபேறு கிடைக்கும் என்று பக்தி இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

திருமூலர் திருமந்திரத்தில், ஐந்தாம் தந்திரத்தில் இறைவனை வழிபட்டு முக்தி அடைவதற்கு, நான்கு நெறிகளை வகுத்துக் கூறுகிறார். அவை சரிய்ய, கிரியை, யோகம், ஞானம் என்பதாகும். உள்ளத்தில் உண்மையான் இறையுணர்வு தோன்ற இவை அடிப்படைச் செய்கைகள் எனலாம்.

**சரியை**

சரியை என்ற சொல்லிற்கு ஒழுகுதல் என்பது பொருள். சைவ சமயத்தினர் முதற்கண் மேற்கொள்ள வேண்டி ஒழுக்கம் சரியை என்பதாகும்.

உருவம் அற்றவன் இறைவன். உயிர்கள் இறைவனை கண்டு வழிபட்டு உய்வதற்காக உருவம், அருஉருவம், அருவம் என்னும் மூன்று திருமேனி களைக் கொண்டிருக்கிறான்.

சிவபெருமானின் உருவத் திருமேனிகளாகிய நடராஜர், சோமாஸ்கந்தர் முதலான மூர்த்தங்களை வழிபடுதல்; சிவனடியார்களைக் கண்டு வழிபடுதல் முதலிய புற வழிபாடுகளைப் புரிவோர் கிரியையாளர்.

திருக்கோயிலுக்குச் சென்று திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், மலரால் மாலை தொடுத்தல் முதலான தொண்டு நெறியில் நிற்போரும் சரியையாளர் எனப்படுவர். இவர்கள் மேற்கொள்ள வேண்டிய ஒழுகலாறு களுள் திருத்தல யாத்திரை சிறப்புடையதாகும்.

சரியை நெறியில் நிற்போர், சிறந்த நாட்டையும் நகரையும் தேர்ந்து, அங்கு உள்ள கோயிலுக்குச் செல்ல வேண்டும். அந்த கோயிலில் உள்ள

இறைவனைச் சிவபெருமான் என்று மனத்தால் தெளிந்து வழிபட வேண்டும். அவ்வாறு வழிபட்டால் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு இறைவன் அருள் செய்வான். இத்தகு வழிபாட்டைச் செய்யும் சரியையாளர் பத்தர் எனப்படுவர்.

இதனை,

**நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்**
**தேடித் திரிந்து சிவபெருமான் என்று**
**பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்**
**கூடிய நெஞ்சத்தைக் கோயிலாக் கொள்வனே** திருமந்திரம், 1427

என்ற பாடலால் விளக்குகிறார்.

**கிரியை**

கிரியை என்பது செயல். உடலால் செய்யப்படும் திருவலகிடல், திருமெழுக்கிடுதல், போன்ற புறப்பூசைகளோடு உள்ளத்தாலும் வழிபடுதல் புறப்பூசையோடு அகப்பூசையும் சேர்ந்துச் செயல்படுவது கிரியை எனப்படும். கிரியை என்பது தொண்டு, இதனைச் செய்வோர் தொண்டர் எனப்படுவர்.

இறைவன் கொள்ளும் மூவகைத் திருமேனிகளில் இலிங்கத் திருமேனி; அருவுருவத் திருமேனியாகும். இலிங்கத் திருமேனியை ஆசாரியனிடமிருந்து பக்தி, சிரத்தையோடு பணிந்து பெற வேண்டும்.

வாசனைத் திரவியம், தூபம், தீபம், தீர்த்தம், புட்பம், பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம் ஆகிய பூஜைக்கு உரிய பொருள்களைக் கொண்டு, பூதசுத்தி, தானசுத்தி; திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்க சுத்தி என்னும் ஐவகை சுத்திகளுடன் அகத்திலும், புறத்திலும் வழிபடுதல் கிரியை ஆகும்.

சிவ பூஜையில் தியானம், மந்திரம் இவை இரண்டிற்கும் சிறந்த இடமுண்டு. பாவனை செய்யும் போது, சிந்தனை, செயல் இரண்டும் நிகழ்கின்றன. இவ்வாறு பழக்கமாகிய சரியையின் முதிர்ச்சியாய், செயலும் சிந்தனையும் உடன் நிகழ்வதாய், பாவனையாகிற யோக நெறிக்கு முதற் படியாய் விளங்குவது கிரியை என்பதாகும்.

பத்துத் திசைகளிலும் சிவபெருமான் விளங்குகிறான். சிவன் திருவடியைப் பூங்கொத்துகளால் வழிபட்டு, அவன் திருவடியே புகலிடம் என்று உறுதி கொள்ள வேண்டும். இவ்வாறு வழிபட்டு வந்தால் தாவி வருகின்ற, வினை இந்த ஆன்மாவைச் சாராது விலகிவிடும். இதை அனுபவத்தால் உணரலாம்.

இதனை,

**பத்துத் திசையும் பரம் ஒரு தெய்வம் உண்டு**
**எத்திக்கினில் இல்லை என்பது இன மலர்க்**

கொத்துத் திருவடி நீழல் சரண் எனத்
தத்தும் வினைக் கடல் சாராது காணுமே திருமந்திரம், 1433

என்கிறார்.

**யோகம்**

இறைவன் அகக் காட்சியில் ஒளி வடிவாய்த் தோன்றும் நிலை யோகத்திற்கு உரியதாகும். இறைவன் அருவத் திருமேனியைக் கண்டு அதில் அழுந்தி ஒன்றுபடுதல் யோகத்தின் பயனாகும்.

**எட்டுபடி நிலைகள்**

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி இவை அட்டாங்க யோகமாம்.

**இயமம்**

இயமம் என்பது சான்றோரால் விலக்கியவற்றை நீக்குதல், கொல்லாமை, பொய்யாமை, விருப்பு வெறுப்பின்மை, புலால் உண்ணாமை, கரவாமை, மாசின்மை, கள்ளுண்ணாமை, மிக்க காமம் இன்மை முதலியன ஆகும்.

**நியமம்**

தபம், ஜெபம், ஆத்திகம், மன நிறைவு, தானம், வீரம், ஞான நூற் கேள்வி, சிவ வேள்வி, சிவ பூஜை, நற்பண்பு முதலியவற்றை நியமமாகச் செய்தலாகும்.

**ஆசனம்**

யோகம் பயில்வோர் கை, கால் முதலிய உடல் உறுப்புகளைத் தக்க முறையில் அமைத்துக் கொண்டு அமரும் முறையாகும். எட்டுவகை ஆசனங்களையே திருமூலர் சிறந்ததாகக் கொண்டுள்ளார்.

பத்திராசனம், கோமுகாசனம், பத்மாசனம், சிங்காசனம், சுகாசனம், ஸ்திராசனம் என்ற ஆறு ஆசனங்களும், உத்தமாசனம் என்று கூறப்பெறுகிறது. மேலும் சுகத்திகாசனம், உத்தமோத்தமாசனம் என்ற இரண்டும் சேர்த்து எட்டுவகை ஆசனங்களைக் குறிப்பிடுகிறார். இம்மூன்று நிலைகளையும் கடைப்பிடிப்போரே பிராணாயாம் செய்தற்குரியோர் ஆவர்.

**பிராணயாமம்**

பிராணன் என்பது மூச்சுக் காற்று. ஆயாமம் என்றால் அடக்குதல், மூச்சை முறைப்படி அடக்கினால் ஆயுள் நீளும்.

இதனை,

''காற்றைப் பிடிக்குங் கணக்கறிவாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறிஅதுவாமே'' (திருமந்திரம் 559)

என்ற பாடல் விளக்குகிறது.

பூரகம் என்பது காற்றை இடநாசியால் உள் இழுத்தல், கும்பகம் என்பது இழுத்த காற்றை நிறுத்துதல், ரேசகம் என்பது வலநாசியால் விடுதல். இதை முறையாகச் செய்தால் நரை, திரை, மூப்பின்றிப் பல்லாண்டு வாழலாம்.

**பிரத்தியாகாரம்**

மனத்தைப் புலன்கள் வழி போகாமல் அகமுகப் படுத்தி மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் நிற்கச் செய்தல், அவ்விடத்தில் இறையருளில் கலந்து அமைதி பெறலாம்.

**தாரணை**

தாரணையை பொறுமை நிலை என்று கூறுவர். பிரத்தயாகாரத்தால் ஆறு ஆதாரங்களில் நிறுத்தப்பட்ட மனத்தை மீளவும் புறம்போக விடாமல், அந்த ஆதாரங்களிலேயே நிறுத்துதல், இதுவே தியானம் எனப்படும். தியானம் என்பது இடையறாது நினைத்தலாகும்.

**சமாதி**

சமாதி என்பது முடிவான நிலையைக் குறிப்பதாகும். இயமம் முதலிய வற்றை வழுவாது பின்பற்றுபவர்க்கே சமாதி நிலை கைகூடும். இந்த எட்டுவகை யோகங்களைப் பயிலும் போது அட்டமாசித்திகள் கைவரப் பெறும். அவற்றை நீக்கி சமாதிநலை பெறுதலே சிறப்பு ஆகும். சித்தியில் ஈடுபடுதல் சிறு பயன் பெறவே உதவும். சமாதி நிலை என்பது கடவுளோடு ஒப்ப இருக்கும் நிலையாகும். இதனையே சான்றோர் விரும்புவர்.

**யோகம்**

யோகம் என்பது மனத்தை இறைவனிடம் சேர்த்தல். பிராணன் குண்டலினி என்னும் சக்தியோடு எழும்பி மேலே உள்ள உச்சியில் விளங்கும் கடவுளோடு சேரத்தியானித்து அதற்குமேல், அதாவது தலைக்குமேல் பன்னிரண்டு அங்குல அளவில் விளங்கும் உருவமற்ற ஒளிப்பிழம்பாகிய பரசிவத்தோடு ஒன்ற வைப்பதே யோகம் ஆகும்.

யோகம் சுத்த சைவமாகிய ஞானசைவத்திற்கு வாயிலாக விளங்கு கிறது. அசுத்த சைவமாகிய சரியை, கிரியை ஆதிச் சிந்தனைச் செயல்களின் பயனாக விளங்குகிறது. யோகத்தை கடை பிடிப்பவர்கள் மூலாதாரங்கள் முதலிய ஆறு ஆதாரம் வழியாக உணர்வாய், மேலேறிச் சென்று நேரான இடமாகிய புருவ நடுவில் பொருந்த வேண்டும்.

மரத்தடி, கருங்கல் இருந்தாற்போல் சிறிதும் அசைவில்லாமல் தம்மை இருக்கச் செய்தல் வேண்டும். மனோலயம் உண்டான பிறகு, மனம் உடலைப் பற்றிய ஊறுணர்ச்சியைப் பெறாது. அதனால் சொறிந்தாலும், தாக்கினாலும் உணர முடியாத தன்மையைப் பெறும். இத்தகைய இலட்சியப் பொருளாகிய நேயத்தில் அழுந்தி அறிபவர்களுக்கே வீடுபேறு உண்டாகும்.

இதனை,

**நெறிவழியே சென்று நேர்மையுள் ஒன்றித்**
**தறியிருந்தாற் போலத் தம்மை இருத்திச்**
**சொறியினும் தாக்கினும் துண்ணென்று உணராக்**
**குறியறி வாளர்க்குக் கூடலுமாமே திருமந்திரம், 1438.**

என்கிறார்.

**ஞானம்**

ஞானம் என்பது பல நூல்களையும் ஆராய்ந்து, பதிபசு, பாசம் என்னும் மூன்று தத்துவங்களின் இலக்கணங்களைத் தெரிந்து கொள்ளுதல். பண்டை வினையின் பயனாக வந்த சிற்றறிவு முற்றும் நீங்கப் பெறுதல். பெரிய அறிவாகிய சிவஞானம் விரிந்து தோன்றும் மனத்தைப் பெறுதல் ஞானம் எனப்படும்.

உருவம், அருவுருவம், அருவம் என்னும் மூன்றையும் கடந்து அறிவே வடிவமாய் விளங்கும் இறைவனது உண்மை இயல்பை அறிந்து அன்பு செய்யும் அறிவு வழிபாடே ஞானம் எனப்பெறும். இதனை ஆசிரியர் வாயிலாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்ற நிலையில் பெறுதல் வேண்டும். சிவஞானம் பெற்றோன், சரியை முதலிய நான்கை பின்பற்றுதற்கும், பிறர்க்கு உணர்த்துதற்கும் உரிமை உடையோன் ஆவான்.

ஞானகுருவே குருவாகவும், ஈசனாகவும் உள்ளவன். ஞானகுருவின் அருளால் மந்திரம், மருந்து, யோகம், கலைஞானம் என்பற்றால் எய்தும் பயன்கள் கிடைக்கும். ஞானகுருவை, சிவஞானத்தைத் தருபவன் என்று வழிபட்டு வரவேண்டும். குருவின் நினைவாலும், பார்வையாலும், பரிசனத்தாலும், பாசத்தினின்று விடுவித்துச் சிவத்தத்துவத்தை வழங்குவான்.

ஆமை தன் முட்டையினின்றும் நினைவால் ஆமையை விடுவிக்கும். கோழி தன் பரிசனத்தால் கோழிக் குஞ்சை விடுவிக்கும். மீன் தன் பார்வையால் மீன் குஞ்சை தன் சினையினின்றும் விடுவிக்கும். ஞானாசிரியன் மூன்று செயல்களாலும் தன் மாணவனை விடுவித்துச் சிவானந்த வெள்ளத்தில் திளைக்கும்படிச் செய்வான்.

திருமூலரால் உணர்த்தப் பெறும் ஞானம் இறைவனைப் பற்றியதாய் சிவானந்தமாகிய இன்பத்தை நுகரச் செய்யும் பரஞானம் ஆகும். இதுவே அறங்களில் சிறந்தது. தர்மங்களில் உயர்ந்தது. சமயங்களில் மூத்த சாதனம் ஆகும்.

இதனை,

**ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை**
**ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று**

ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே திருமந்திரம். 1448

என்ற பாடலால் விளக்குகிறார்.

தமது அறிவிற்குச் சிவனது அருளே முதல் காணரம் என்பதை உணரவேண்டும். இந்த உணர்வினால் அடக்கம் என்னும் குணம் உண்டாகும். இறை உணர்வை மறக்காமல் இருப்பதால் அன்பு என்னும் குணம் உண்டாகிறது. இவை எல்லாம் ஒன்று சேர்ந்து உள்ளம் என்னும் கோயிலில் ஒருசேரக் கூடி, நீங்காமல் இருக்கிறது. இந்த நிலையில் உள்ளத்தில் அருட் திருமேனி, அருள் குணம், ஒலிக்கும் திருவடி இவற்றை மறவாது இருக்கும் தன்மை உண்டாகும். இந்த முறையை உணர்ந்த ஞானிகளுக்கு மட்டும் தான் உலகமாகிய இருள் நீங்கி ஞானம் ஆகிய ஒளிவெளிப்படும்.

இறைவனை அடைவதற்கும் அவன் அருளைப் பெறுவதற்கும் சரியை முதல் நால்வகை நெறிகளைத் திருமூலர் விளக்குகிறார். இவை முறையே அரும்பு, மலர், காய் கனி என்ற உவமை வழியாக வள்ளலார் விளக்குகிறார். அடியார் நால்வரும் முறையே திருநாவுக்கரசர் சரியை யிலும், திருஞான சம்பந்தர் கிரியையிலும், சுந்தரர் யோக நெறியிலும் மாணிக்கவாசகர் ஞான நெறியிலும் நின்று வீடுபேறு பெற்றனர்.

சரியை முதல் நான்கு நெறிகளுக்கும் உரிய பயனாக, சரியை சாலேகம் என்றும், கிரியை சாமீபம் என்றும், யோகம் சாரூபம் என்றும், ஞானம் சாயுச்சம் என்றும் வழங்கப்பட்டு வருகின்றது. ஞானத்தில் சிறந்தவர்களே மக்களுள் சிறந்தவர் ஆவார்.

# 63. திருமூலரின் மூப்பு, இறப்புச் சிந்தனைகள்

முனைவர் இரா. நிர்மலா, காரைக்கால்.

உலகில் தோன்றிய எந்த ஓர் உயிரும் எதிர்கொள்ள வேண்டிய இருபெரும் நிகழ்வுகளாக மூப்பும் இறப்பும் திகழ்கின்றன. மூப்பைத் தள்ளிப்போட இயலுமே தவிர முற்றாக அதனைத் தவிர்த்தல் இயலாது என்கின்றனர் மருத்துவ உலகின் மூப்பியல் துறையினர். இறப்போ அவ்வாறன்றி எப்போது, எப்படி, எங்கு நிகழுமென்று அறுதியிட்டுக் கூறவியலாத - ஓர் அவசர நிகழ்வாக - எதிர்பாராச் செயலாக - காலத்தின் கட்டாயமாக அமைகிறது. தனித்தன்மை மிக்க இவ்விரு கூறுகளும் இலக்கியங்களில் பேசப்படும் தன்மை இயல்பானதும் பொருத்தமானதும் ஆகும். அந்நிலையில் திருமந்திரம் வாயிலாக அறியப்படும் திருமூலரின் மூப்பு, இறப்புச் சிந்தனைகளை ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**மனித வாழ்க்கைப் பருவங்கள்**

உயிர் வாழ்வின் வளர்ச்சி உடலியல் மாற்றங்களைக் கொண்டு வருகின்றது. காலை எழுந்தவர்கள் நித்தம் நித்தம் மாலை வருவதைக் கண்டு எவ்விதக் கவலையுமின்றி இன்புறுகின்றனர். ஆனால் உண்மையில் இது அவர்களின் வாழ்நாள் ஒவ்வொன்றாகக் கழிந்து ஒவ்வொரு கூறுபாடும் அழிவதையே காட்டுகிறது (திருமந்திரம், சென்னை : கழக வெளியீடு, 1969, 226). பிறவி பெற்ற ஒவ்வொரு உயிரும் இம்மாற்றம் அடைவதிலிருந்து தப்புவதில்லை.

**கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே**
**விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்**
**குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்**
**விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே** (221)

எனவரும் திருமூலரின் பாடல், பசு பிறப்பின் போது கன்றின் நிலையிலிருந்து பின் வயது மூத்த எருதாகி விடுவதைச் சுட்டிக்காட்டுகிறார். இத்தகைய உடல் மாற்றம் பிற உயிர்வகைகளைக் காட்டிலும் மனிதப் பிறவியில் கவனிக்கத்தக்க வேறுபாட்டுடன் அமைவதைக் காணலாம்.

குழந்தை பிறந்தது முதலாக உடலின் பல்வேறு உறுப்புகளும் உடலின் உள்ளே இயங்கும் மண்டலங்களும் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து ஒரு குறிப்பிட்ட உயர் நிலையை எட்டுகின்றன. அதன் பின்னர் உடலின்

'வளர்ச்சி' என்ற நிலை மாறி ஒரு குறிப்பிட்ட கால அளவு வரை அவ் உயர்நிலையின் 'சமநிலை' காக்கப்படுகிறது. அதற்கடுத்த நிலையில் உடலின் வளர்ச்சி 'வீழ்ச்சி'யை நோக்கிச் செல்கிறது. இதனைத் திருமூலர்,

**முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்**
**இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்**
**பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்**
**கெட்டு தெழுபதிற் கேடறி யீரே** (207)

என்னும் பாடல் மூலம் புலப்படுத்துகிறார். கருமுட்டையானது பத்து மாதங்களில் குழந்தையாக உருவாகத் தாயின் கருப்பையை விட்டு வெளிவருகிறது. அது படிப்படியாக வளர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் எய்தும்போது முழுவளர்ச்சி பெறுகிறது. அதன்பின் முழுவளர்ச்சி எட்டிய அவ்வுடல் எழுபது ஆண்டுகள் அளவில் பெரும் வீழ்ச்சியைச் சந்திக்கிறது என்று இப்பாடலின் வாயிலாகப் புலப்படுத்துகிறார். எழுபது வயதில் உடலுறுப்புகள் அதிகளவு தளர்வினைச் சந்திக்கின்றன என்னும் மூப்பியல் துறையினர் கூறும் முடிபுகளுடன் இச்செய்தி ஓரளவு பொருந்தி வரக் காண்கிறோம்!

மனித வாழ்வினைக் குழந்தைப் பருவம், பிள்ளைப் பருவம், இளமைப் பருவம், நடுத்தர வயதுப்பருவம், முதுமைப் பருவம் எனப் பலவாறு பகுத்துக் காணலாம். திருமூலர் **பாலன் இளையன் விருத்தன் எனநின்ற காலம்** (225) என மனித வாழ்க்கையை மூன்று பருவங்களில் அடக்கிக் காண்கிறார். மேற்கூறிய மனித உடல் வளர்ச்சியின் மூன்று படிநிலைகளான வளர்ச்சி, சமநிலை, வீழ்ச்சி ஆகிய மூன்றையும் முறையே பாலன், இளையன், விருத்தன் என்னும் முப்பருவப் பாகுபாடு சமன்செய்யக் காணலாம்.

### மூப்பை அறியும் வாயில்

மூப்புக் காலத்தில் பல்வேறு உடலியல் மாற்றங்கள் தோன்றுமாயினும் ஒருவர் முதுமையடைகிறார் என்பதை 'முடி நரைத்தல்' என்னும் கூறு எளிதாகப் புலப்படுத்திவிடுகிறது. இம்மாற்றம் எளிதில் புலப்படக்கூடியதாக இருப்பதோடு, எல்லாவற்றுக்கும் முதன்மையாகவும் அமைகிறது. எனவே பெரும்பாலான புலவர்கள் முதுமையைச் சுட்டுமிடத்து முடி நரைத்தலையே அதிகமாகச் சுட்டுகின்றனர்.

**மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை**
**பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரிலை**
**கூறுங் கருமயிர் வெண்மயி ராவது**
**ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே** (234)

என்னும் பாடலில் நல்ல பட்டாடையும் காலத்தால் நைந்துவிடும். அதே போன்று மனிதருடைய வாழ்நாளாகிய அகவையைக் காலம் ஈர்ந்து

செல்கிறது; கருமயிர் உருமாறி வெண்மயிராய் நரைக்கிறது என்று மூப்புப் பருவத் தோற்றத்தை எடுத்தியம்புகிறார் திருமூலர்.

**மூப்புக்காலத் துன்பம்**

மூப்புக்காலம் என்பது உடல் தளர்வுறும் காலமாகும். அதனால் இளமையில் எளிதாகச் செய்யமுடிந்த காரியங்கள் முதுமையில் செய்ய இயலாத நிலையடைகின்றன.

தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே (223)

என்னும் பாடல் மூலமாக, இளமைக் காலத்தில் செய்யவியன்ற காரியங்கள் முதுமையில் செய்வதற்கு அரியனவாகிவிடுவதைத் திருமூலர் சுட்டுகிறார்.

**மகளிர் இகழ்தல்**

முதுமையுற்ற ஆடவரைக்கண்டு மகளிர் வெறுத்தொதுக்கும் தன்மையைச் சம்பந்தர், ஐயடிகள் காடவர்கோன், திருமங்கையாழ்வார் முதலியோர் தத்தம் பாடல்களில் புலப்படுத்தியுள்ளனர். ‘காலினோடு கைகளுந் தளர்ந்துகாம நோய்தனால் / ஏலவார் குழலினார் இகழ்ந் துரைப்ப தன்முனம்’ என்று சம்பந்தர் (233:9) தம் தேவாரத்தில் குறிப்பிடுகிறார்.

விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும்ஒத் தேனே (224)

என்று திருமூலர் இளமையில் மகளிருக்குக் கரும்பாய் இனித்ததான், மூப்பில் எட்டிக்காயாய்க் கசக்கும் தன்மையைக் கூறுகிறார். இவ்வாறு மூப்புற்ற ஆடவரைக் கண்டு மகளிர் வெறுப்பதன் காரணம் யாது?

கொம்பும் அரவமும் வென்றநுண் ணேரிடை
வம்புண் குழுலார் வாசல் அடைத்திக ழாதமுன்
செம்பென் கமுகினந் தான்கனி யும்செழுஞ் சோலைசூழ்
நம்பன் நறையூர் நாம்தொழு தும்எழு நெஞ்சமே (நா.தி.பி.1481)

என்னும் பாடலுக்குப் பெரியவாச்சான்பிள்ளை,

(கொம்புமித்யாதி) வஞ்சிக் கொம்பையும் அரவையும் வல்லிக் கொடியையும் மற்றுள்ளவர்களையும் தோற்பிக்கவற்றான இடையை யுடையராய், பரிமளிதமாக குழலையுடைய ஸ்திரீகளானவர்கள். (வாசலித்யாதி) முற்காலம் இவனை விரும்பி, பின்பு வெறுவியனான வாறே, புறம்பே தள்ளிக் கதவடைப்பார்கள்; இவற்றான் பின்னையும

**சாபலத்தாலே போகதே புறம்பே நிற்கும்; லஜ்ஜித்து இவன் அங்கு நின்றும் கால் வாங்கிப் போகைக்காக, இவனுக்குப் 'போக' யோக்யதை யில்லாமையைச் சொல்லிப் பரிபவிப்பர்கள்; இப்படிப் பட்டவர்கள் பரிபவோக்தி செவிப்படுவதற்கு முன்னே...**

**ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபை (பதி.), பெரிய திருமொழி (4-7 பத்துக்கள்), காஞ்சீபுரம் : ஸ்ரீ கீதாசார்ய அச்சுக்கூடம், 1909)**

என்று விளக்கம் அளிக்கிறார்.

இவ்வுரையினை ஒப்புநோக்கும்போது, மூப்புற்றபோதும் இல்லற வேட்கை தணியாதிருத்தலும் அதன் காரணமாக மகளிரை நாடும் செயலும் வெளிப்படுகின்றன. ஆனால் மூப்புக்கால உடலியல் மாற்றங்களும் அதனால் ஏற்பட்ட செயல்திறன் குறைபாடும் அம்மகளிர் வெறுத்தொதுக்கும் காரணிகளாய் அமைகின்றன. அதனால் மனத்தில் ஏற்படும் ஆழமான துன்பத்திலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் கேடயமாக இறையுணர்வு அமைவதை மேற்காட்டிய திருமூலரின் பாடல் உய்த்துணர வைக்கிறது.

**மூப்பைத் தவிர்த்தல்**

எக்காலமும் இளமையோடு இருக்கவேண்டும் என்ற விழைவு எல்லா மனிதருக்கும் எழுவது இயல்பே. மார்க்கண்டேயன், யயாதி முதலியோருடன் தொடர்புடைய 'இளமையோடு இருத்தல்' பற்றிய புராணக்கதைகள் இளமை விழைவையும் மூப்பை வெறுத்தலுமாகிய மக்களின் மனப்பாங்கைப் புலப்படுத்துகின்றன. யோகத்தால் நரை, திரை அணுகாது உடலைக் காக்கக்கூடும் என்றும் இளமைக்காலத்தில் யோகப்பயிற்சி அற்றோரும் முதுமையில் யோகத்தைக் கைக்கொண்டாலும் இளமையை மீண்டும் பெறலாம் என்னும் கருத்தும் சித்தர்பாடல்களில் குறிப்பிடப்பெற்றுள்ளன. சித்துகளிலும் யோகத்திலும் வல்லவரான திருமூலரும் மேற்குறித்த செய்திகளைப் பலபாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

**மேலையண் ணாவில் விரைந்திரு காலிடிற்**
**காலனும் இல்லை கதவுந் திறந்திடும்**
**ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்**
**பாலனு மாவான் பராநந்தி ஆணையே** (784)

என்னும் திருமந்திரப் பாடல் 'பிராணாயாமப் பயிற்சி' இறப்பினைத் தவிர்ப்பதுடன் உலகோர் அறியுமாறு மூப்பைப் புலப்படுத்தும் கூறுகளான நரையையும் திரையையும் மாற்றி இளமையை மீட்டுத்தந்துவிடும் என்று ஆணையிட்டுச் சொல்கிறது.

**இறப்பு உறுதி**

இறப்பு உறுதியானது. பிறந்த எல்லா உயிர்களும் இறந்தேயாக வேண்டும்.

**தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்**
**இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்** (229.1-2)

என்று கூறும் திருமூலர் வெட்ட வெட்டத் தழைத்து வளர்வதாய் நாம் நினைக்கும் தாவரங்களே இறத்தல் என்னும் வினையைத் தவிர்க்கவியலாது போகும்போது மனிதனுக்கு நிச்சயமாக இறப்பு உண்டு என்பதைப் புலப்படுத்துகிறார். அவ்வாறு இறப்பு நிகழ்ந்துவிடத்து அதனை மாற்றத் தக்க வழியும் இல்லை. உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது / அடும்பரி சொன்றில்லை (220) என்று உடலை விட்டு உயிர் பிரியும் போது அதனைத் தடுக்கும் வழி இன்மையையும் புலப்படுத்துகிறார்.

## இறப்பை அறிய இயலாது

இறப்பு நிகழ்தல் உறுதியானதே என்றாலும் இறப்புநேரும் காலத்தை யாராலும் கணித்தறிய முடியாது. **அழைக்கின்ற போது அறியார்** (229.4) என்று திருமூலர் இறப்பு நிகழும் காலம் அறியாத தன்மையைக் குறிப்பிடுகிறார்.

**அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்**
**மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்**
**இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்**
**கிடக்கப் படுத்தார் கிடந்தொழில் தாரே** (192)

என்னும் பாடல் எப்பொழுதும்போல் உணவு உண்டு படுத்தவர்கள் அப்படியே உயிரை விட்டுவிட்ட அகால இறப்பை எடுத்துரைக்கிறது. மூப்பு தோன்றுவதற்கென்று கால எல்லை இருப்பதுபோல் இறப்பு நிகழ்வதற்கு எந்தவித வரையறையும் இல்லை.

**தன்னை அறியாது தான்நல்ல ரென்னாதிங்**
**கின்மை யறியா திளையரென் றோராது**
**வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்**
**தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே** (112)

என்ற பாடல் இளமைக்காலமாயினும் இறப்பு நிகழ்ந்து விடுவதை எடுத்துரைக்கிறது.

## இறப்பிற்கு முன் இறைதொழுதல்

உடலை விட்டு உயிர் பிரிந்த பிறகு அவ்வுடல் ஒரு முடிவினை எய்தி விடுகிறது; மண்ணோடு மண்ணாகி அழிந்துவிடுகிறது. ஆனால் இத்தகையதொரு முடிவை உயிர் அடைவதில்லை. உயிர் என்றும் நிலைபேறுடையது. அதற்கு 'மறுமை' என்ற நிலை உண்டு என்ற நம்பிக்கைகள் உலகளாவியதாகக் காணப்படுகின்றன. மத வேறுபாடின்றி உலகின் அனைத்து மதங்களும் பாவம், புண்ணியம், சொர்க்கம், நரகம் ஆகியவற்றைப் பரிந்துரைக்கின்றன.

**பொல்லாப் புலாலை நுகரும் புலையரை**
**எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்**
**செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்**
**மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே** (242)

என்ற திருமூலரின் பாடல் மறுமை நம்பிக்கையே ஆணித்தரமாக முன் வைக்கிறது. உயிரை எமதூதர்கள் கொண்டு செல்வர் என்றும் பாவம் செய்வோர் நரகம் செல்வார்கள் என்றும் சமூகத்தில் நிலவிவரும் நம்பிக்கையை இங்கே திருமூலர் பதிவு செய்கிறார். இறப்புத் துன்பத்தைப் போக்கி மறுமை இன்பத்தை எதிர்கொள்ள இறைவனை வழிபடும் வழியைச் சமயப் பெரியோர் அனைவரும் ஒருமனதாக எடுத்துரைக்கின்றனர்.

**பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை**
**ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே** (223)

என்று திருமூலரும் இறப்பிற்கு முன் இறைவனைத் தொழவேண்டும் என்னும் கருத்தினை முன்வைக்கிறார். இறப்பதற்கு முன் இறைவனைத் தொழுதல் வேண்டும் என்னும் கருத்தைப் பல பாடல்களில் திருமூலர் (112, 229) வற்புறுத்துகிறார்.

**இறப்பால் கொள்ளவேண்டிய சமூக உணர்வு**

தவிர்க்க இயலாத இறப்பினைக் கண்டாவது மக்கள் நல்வழியில் செல்ல முயலவேண்டும். சமூக நலனில் அக்கறை கொள்ள வேண்டும். ஆனால் சமூகச் சூழலில் மக்கள் இறப்பையும் மிகச் சாதாரணமாக ஏற்றுக்கொண்டு விழிப்புணர்வு பெறாமல் இறக்கின்றனர். இறந்தவருக்காகச் சிறிது நேரம் அழுதுவிட்டு இறந்தவரின் உடலை எரித்துவிட்டு அந்த நினைப்பையும் விட்டுவிட்டு எப்பொழுதும்போல் தத்தம் பணிகளில் ஈடுபடுகின்றனர்.

**ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே** (189)

என்னும் திருமூலரின் பாடல் மக்களின் சமுதாய விழிப்புணர்வற்ற தன்மையை எடுத்துக்காட்டுகிறது.

**மரணமிலாப் பெருவாழ்வு**

சாதாரண வாழ்வு வாழும் மக்களால் இறப்பினைத் தவிர்க்க முடியாது என்றாலும் யோகவழி நிற்பின் வாழ்நாள் நீட்டம் பெறலாம். நூறாண்டு இன்பமாய் வாழலாம். யோகநிலையில் அணுவளவும் பிசகாது இருப்போர்

மரணமிலாப் பெருவாழ்வு வாழக்கூடும் என்ற சித்தர்களின் சிந்தனையைத் திருமூலரின் பாடல்வழியும் அறியமுடிகிறது.

கூத்தவன் ஒன்றிடுங் கூர்மை அறிந்தங்கே
ஏத்துவர் பத்தினில் எண்டிசை தோன்றிடப்
பார்த்து மகிழ்ந்து பதுமரை நோக்கிடிற்
சாத்திடு நூறு தலைப்பெய்ய லாமே (737)

சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துடல் ஆயிரங் கட்டுறக் காண்பர்கள்
சேர்த்துடல் ஆயிரஞ் சேர இருந்தவர்
மூத்துடன் கோடி யுகமது வாமே (738)

ஆகிய பாடல்கள் மனிதன் மரணமிலாப் பெருவாழ்வினை யோகம் மூலம் எய்தக்கூடும் என்பதைக் கூறுகின்றன. திருமூலரும் யோகநிட்டை காரணமாக மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தவர் என்று சொல்லப்படும் கருத்தும் இதனோடு ஒப்புநோக்கத் தக்கது.

இவ்வாறு திருமூலர், மூப்பு இறப்புப் பற்றிய பன்முகப் பரிமாணங் களைத் தம் படைப்பில் வாய்க்குந்தோறும் பரவலாகச் சொல்லிச் செல்வதை அறிய முடிகிறது. மக்களின் சாதாரண நடப்பியல் வாழ்வில் தவிர்க்க இயலாதனவாகக் கருதப்படும் மூப்பையும் இறப்பையும் சிறந்த யோக முறைகளாலும் தெய்வீக நெறிகளாலும் நிச்சயமாக வெற்றிகொள்ள இயலும் என்பதை உறுதியாகக் குறிப்பிடுகிறார். மரணமிலாப் பெரு வாழ்வு குறித்த இன்றைய சர்ச்சைக்குரிய சிந்தனை இவருக்கு இருந்தமையும் இவருடைய பாடல்கள் வாயிலாக நம்மால் அறிய முடிகிறது. இவற்றை அறிவியல் அடிப்படையில் நிரூபிக்க நமக்குத் தகுந்த ஆதாரங்கள் இல்லாத நிலையில் இச்சிந்தனைகள் எதிர்கால ஆய்வுக்கு விடப்படுகின்றன.

# 64. சேந்தனார் வரலாறு

பேராசிரியர் மு. பரிமணன், திருவையாறு.

தமிழகத்தில் சேந்தனார் என்ற பெயரில் பலர் வாழ்ந்துள்ளனர். முதற்கண் திவாகரம் என்ற நிகண்டிற்குச் சேந்தன் திவாகரம் என்று பெயர். இந்தச் சேந்தன் அம்பர் கிழான் அருவந்தை என்ற சங்ககாலத் தலைவனது வழியில் வந்தவன். அம்பர் என்ற ஊரைச்சேர்ந்தவன். இவன், செந்தமிழ், ஆரியம் என்ற இரு மொழியிலும் நல்ல புலமை மிக்கவன். புலனர் பெருமக்களை ஆதரித்தவன். சிவபெருமானது இடப்பாகங்கொண்ட அம்மைக்குச் செந்தமிழ் மாலையந்தாதி புனைந்தவன் என்று திவாகர நூலாசிரியர் கூறியுள்ளார்.

வீரசோழிய உரை மேற்கோட் செய்யுட்களில் வரும் பொன்பற்றிக் காவலன் சேந்தனென்பான் புலவர்களை ஆதரித்தி குறுநிலமன்னன், புத்த சமயத்தைப் போற்றியவன் எனத் தெரிகிறது. இங்குக் கூறப்பட்ட இவ்விருவரும் திருவிசைப்பா ஆசிரியராகிய சேந்தனாரின் வேறாவர் எனத் தெளிதல் வேண்டும்.

**சேந்தனார் பற்றிய கதை**

சேந்தனார் பட்டினத்தடிகளுக்குக் கணக்கராக இருந்தார். அப்போது அடிகள் கட்டளையை ஏற்று நிதியறையைத் திறந்துவிட்டு அங்குள்ள செல்வங்களை ,ஊரார்கள் கொள்ளை கொள்ளச் செய்தார். இச் செய்தியைக் கேட்ட அரசன், இழந்த பொருள்களுக்குக் கணக்குக் காட்டுதல் வேண்டுமெனக் கூறிச் சேந்தனாரைச் சிறையிலிட்டான். அதனால் வருத்த முற்ற அவருடைய மனைவி, மக்கள் அனைவரும் பட்டினத்தடிகளிடம் சென்று நடந்ததைக் கூறினர். அப்போது,

> **"மத்தளை தயிருண்டானும் மலர்மிசை மன்னினாலும்**
> **நித்தமுந் தேடிக்காணா நிமலனே யமலமூர்த்தி**
> **செய்த்தளைக் கயல்பாய்நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்டமீ**
> **கைத்தளை நீக்கியென்முன் காட்டுவெண் காட்டுளானே!"**

என்ற பாடலைப் பட்டினத்தார் பாடினார். அந்நிலையில் சிவபெருமானின் கட்டளைப்படி விநாயகர் சேந்தனாரின் விலங்கை உடைத்து விடுவித்தார். சிறையிலிருந்து மீண்ட சேந்தனார், பட்டினத்தடிகள் கூறியபடி மனைவி மக்களுடன் தில்லைக்குச் சென்று விறகு விற்று அதில் கிடைக்கும்

ஊதியத்தைக் கொண்டு நாள்தோறும் ஒரு சிவனடியார்க்கு உணவளிக்கும் கடமையைச் செய்து வந்தார். இந்நிலையில் பல நாட்கள் தொடர்ந்து மழை பெய்யவே போதிய வருவாய் இன்றிப் பசியால் வருந்திய சேந்தனார் விறகு விற்றுக் கிடைத்த மாவினைத் தன் மனைவி கையில் கொடுத்துக் களியாக்கச் செய்து சிவனடியாரை எதிர்பார்த்துக் காத்திருந்தார். அப்போது சிவபெருமானே முதுமைப் பருவமடைந்த அடியாராகச் சேந்தனார் வீட்டிற்குச் சென்று அவர்கள் கொடுத்த களியுணவைச் சாப்பிட்டு அடுத்த வேளைக்கும் வேண்டுமென இருந்த களி உணவையும் ஒரு கந்தைத் துணியில் கட்டிக்கொண்டு பொன்னம்பலத்தை அடைந்தார்.

இந்நிலையில் தில்லையில் கூத்தப்பெருமானுக்குத் தான் நடத்தும் நாள் வழிபாட்டில் திருச்சிலம்பொலி கேட்டு மகிழ்தலை வழக்கமாகக் கொண்ட சோழமன்னன் அன்று இரவு முழுவதும் காத்திருந்தும் அவ் வொலியைக் கேளாது வருந்தித் தூங்கிவிட்டான். கூத்தப்பெருமான் மன்னனது கனவில் தோன்றி "**வேந்தனே கவலை கொள்ளற்க. இன்று நாம் சேந்தன் அளித்த களியமுதை உண்ணச் சென்றமையால் நீ நடத்தும் வழிபாட்டிற்கு வரத் தாழ்ந்தோம்**" என்று கூறி மறைந்தார். அந்நிலையில் விழிப்புற்ற வேந்தன் சேந்தனாரைக் காண விரும்பி விடியற் காலத்தே தில்லைச் சிற்றம்பலப் பெருமானை வணங்கச் சென்றான். பொன்னம்பலத்திற் களியமுது சிந்திக் கிடத்தலைக் கண்டு தான் கண்ட கனவின் உண்மையைத் தில்லைவாழ் அந்தணர் முதலிய எல்லோர்க்கும் தெரிவித்தான். அதனை யுணர்ந்த பலரும் சேந்தனாரைக் கண்டு வழிபட விரும்பினர்.

மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் மழை பெய்தமையால் தேர் சேற்றிலழுந்தி ஓடாது நின்றபொழுது '**சேந்தா! தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக**' என்ற வான் ஒலி எல்லோரும் கேட்கும்படி தோன்றியது. தேரிழுக்கும் கூட்டத்தில் நின்ற சேந்தனார் '**மன்னுக தில்லை வளர்க நம் பத்தர்கள்**' எனத் தொடங்கும் திருப்பல்லாண்டுத் திருப்பதிகத்தைப் பாடினார். வடம் பிடிக்காமலேயே தேர் நிலைக்கு வந்ததாகக் கூறுவர். இதுவே சேந்தனார் பற்றி வழங்கும் கதையாகும்.

### சேந்தனார் பற்றிச் சிவநெறியாளர்கள்

சேந்தன் என்ற அடியவர் தில்லையிற் கூத்துப் பெருமானுக்குக் களியமுது கொடுத்த பேரன்பின் திறத்தைப்,

> **"பூந்தன் பொழில்சூழ் புலியூர்ப் பொலிசெம்பொன் அம்பலத்து**
> **வேந்தன் தனக்கன்றி ஆட்செய்வ தென்னே விரிதுணிமேல்**
> **ஆந்தன் பழைய அவிழை யன்பாகிய பண்டைப்பறைச்**
> **சேந்தன் கொடுக்க அதுவுந் திருவமிர் தாகியதே"**

என வரும் கோயில் திருப்பண்ணியார் விருத்தத்தில் இருபத்தாறாம் பாடலில் நம்பியாண்டார் நம்பிகள் பாடுவது நோக்கத் தக்கதாகும்.

மேலும், திருக்களிற்றுப் பாடியார் 53-ஆம் பாடலில் உய்ய வந்த தேவநாயனாரும்,

"அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க - அவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்க செயல்"

என்று பாடியுள்ளார்.

சிவஞான முனிவரும்,

வரையே றவிட்டமுதஞ் சேந்தனிட வுண்டனை
வல்லின மென்றாலும்
உரையே றவிட்டமுத லாகுமோ வனைச்சித்தென்
றுரைக்கி லென்னும்
நரையே றவிட்டத னாளவனாக் கொண்டு
நறும் புலிசை மேவும்
கரையே றவிட்டமுதல்வா வுன்னையன் றியுமோர்
கதியுண் டாமோ

என்று பாடியுள்ளார். இப்பாடல்கள் மேற்கூறிய சேந்தனாரின் கதைக்கு உண்மை ஆதாரங்களாக விளங்குகின்றன.

### சேந்தனாரின் குலமும் காலமும்

நம்பியாண்டார் நம்பி பண்டைப் பறைச் சேந்தன் என்று கூறுவதால் சேந்தனார் பறையர் குலத்தவர் என்பதும், நம்பியாண்டார் நம்பிக்குக் காலத்தால் மூத்தவர் என்பதும் அறியப்படுகிறது. மேலும் நம்பியாண்டார் நம்பிகளுக்குக் காலத்தால் மூத்தவர் பட்டினத்தடிகள் என்பது பதினோராந் திருமுறையில் பட்டினத்தடிகள் நூல்களுக்குப் பின் நம்பியாண்டார் நம்பிகள் பாடிய நூல்கள் அமைந்திருப்பதால் இனிது விளங்கும். பட்டினத்தடிகளிடம் சேந்தனார் பணியாற்றினார் என்பது நெடுநாட்களாக வழங்கி வருவதாகலின் சேந்தனாரும், நம்பியாண்டார் நம்பிக்கு முன் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்று கொள்ளலாம். திருமாளிகைத் தேவர் சேந்தனாருடன் தில்லைக்குச் சென்று திருத்தேரை வடமில்லாது ஓடச் செய்த நிலையில் சேர்ப்பித்தார் என்று கதை வழங்குவதால், திருமாளிகைத் தேவர் வாழ்ந்த காலமும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியே எனத் துணியலாம்.

### சேந்தனார் ஊர்

திருவிடைக்கழித் திவிசைப்பாவின் திருக்கடைக்காப்பில் "செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்" எனவும் திருப்பல்லாண்டின் திருக்கடைக்

காப்பில் "செப்புறை அந்தமிலானந்தச் சேந்தன்" எனவும் சேந்தனார் குறிப்பிடுவதால் இவரது ஊர் செப்புறை என்ற பெயருடையது என்று அறியலாம். மேலும் திருவிடைக்கழி முருகப் பெருமானைப் பாடும் சேந்தனார் அவ்வூர்த் திருவிசைப்பா பத்தாம் பாடலில்,

"மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப் பொழில்வளர்
மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழியார்க்கு அருள்செயா விடுமே"

எனக் குறிப்பிடுவதால் இவரது ஊர் திருவிடைக்கழியை அடுத்துள்ள பிடவூரோடு தொடர்புடையதாய் இருத்தல் வேண்டும். மேலும் பட்டினத்தடிகள் சேந்தனார் பற்றிப் பாடும் பாடலில் நாங்கூர்ச் சேந்தன் எனக் குறிப்பிடுவதால் சிலகாலம் நாங்கூரிலும் சேந்தனார் வாழ்ந்திருக்கலாம்.

**சேந்தனாரும் பாமாலையும்**

சேந்தனார் பாடியதாகத் திருவீழிமிழலை, திருவாடுதுறை, திருவிடைக் கழி என்ற தலங்களுக்குரிய திருவிசைப்பா பதிகங்கள் மூன்றும் திருப் பல்லாண்டுப் பதிகமொன்றும் ஆக நான்கு திருப்பதிகங்கள் உள்ளன. இவற்றில் நாற்பத்தேழு பாடல்கள் அமைந்துள்ளன.

திருவீழிமிழலையின் விமானத்தில் சிவபெருமான் வீற்றிருந்து அருளும் இயல்பும், பிற சமய நெறிகளிற் புகாது தடுத்து மெய்த்தவ நெறியாகிய சைவசமயத்தில் தம்மை நிலைபெறச் செய்தருளிய அப் பெருமானது அருட்குணமும், சிவனடியார்க்குத் தாம் தொண்டு செய்து வந்த திறமும், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகிய பெருமக்களிரு வருக்கும் வீழிமிழலை இறைவர் படிக்காசருளி அவர்கள் பாடிய செந்தமிழ் பாமாலைச் சூடி அவர்கள் திருவுள்ளத்தே நிறைந்து நின்ற பெருமையை யும் ஆகிய செய்திகளைத் திருவீழிமிழலைத் திருவிசைப்பாவிற் சேந்தனார் உள்ளம் உருகிப் போற்றும் திறத்தைக் காணலாம்.

"பண்டலர் அயன்மாற் கரிதுமாய் அடியார்க்
கெளியதோர் பவளமால் வரையை"

என்றும்,

"ஆயிரங் கமலம் ஞாயிறா யிரமுக்
கண்முக கரசர ணத்தோன்"

என்றும்,

"எண்ணில் பல்கோடி சேவடிமுடிகள்
எண்ணில் பல்கோடி திண்டோள்கள்
எண்ணில் பல்கோடி திருவுருநாமம்
ஏர்கொள்முக் கண்முக மியல்பும்

எண்ணில் பல்கோடி யெல்லைக்கப்பாலாய்
நின்றைஞ்ஞூற் றந்தண ரேத்தும்
எண்ணில்பல் கோடி குணத்தர் ஏர் வீழி
யிவர் நம்மையா ளுடையாரே''

என்றும் அமைந்தவை சேந்தனார் இறைவனைப் போற்றிய பகுதிகளில் சிலவாகும்.

திருவாவடுதுறையில் எழுந்தருளிய மணவாள நம்பியைக் கண்டு காதல் கொண்ட தன் மகளது அன்பின் மொழிகளையும் செயல்களையும் எடுத்துக் கூறித் தாயொருத்தி இரங்குவதாகப் பாடப்பட்டது. திருவாவடு துறைத் திருவிசைப்பாவாகும். இது அந்தாதித் தொடையில் அமைந் துள்ளது திருவாவடுதுறை என்பது கோயில் பெயர். அக்கோயில் சாத்தனூரில் அமைந்துள்ளது என்னும் உண்மையை 'அழிவொன்றிலாச் செல்வச் சாந்தையூர் அணியாவடுதுறை' என்ற தொடரால் சேந்தனார் குறிப்பிடுகின்றார். மேலும்,

''பொய்யாத வேதியர் சாந்தை மெய்ப்புகழாளர் ஆயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர் மிகுகாவிரிக் கரைமேய
ஐயா திருவாவடுதுறை யமுதே''

என வரும் பாடலும் மேற்கூறிய செய்திக்கு அரணாக அமைந்துள்ளது.

திருவிடைக்கழி என்ற தலத்தில் திருக்குரா நீழலில் எழுந்தருளிய முருகப் பெருமானைக் கண்டு காதலுற்ற தலைமகளின் ஆற்றாமையை நினைத்து இரங்கிய நற்றாய் கூறுவதாகச் சேந்தனார் பாடிய திருப்பதிகம் 'மாலுலாமனந்தந்து' எனத் தொடங்கும் திருவிசைப்பாவாகும்.

தில்லையில் மார்கழித் திருவிழாவில் ஓடாமல் தடைப்பட்டு நின்ற திருத்தேர் ஓடும்படி பாடியது திருப்பல்லாண்டுத் திருப்பதிகம். இது பதின்மூன்று திருப்பாடல்களையுடையது. நெடுங்காலம் வாழ்க என வாழ்த்துதற் பொருளிலமைந்த இசைப் பாட்டினைப் பல்லாண்டிசை என்பர்.

'மிண்டுமனத்தவர் போமின்கள்' என விலக்கி மெய்யடியார்கள் விரைந்து வம்மின் எனப் பேரன்பினால் அழைத்து மழவிடையார்க்கு வழி வழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழவடியார்களாகிய அப்பெரு மக்களோடும் கூடிநின்று ஆவிக்கு அமுதாய் மனத்தகத்தே பாலும் அமுதமும் ஒத்துநின்று அண்ணித்து ஆரும் பெறாத அறிவு தந்து அடியார்க்கு அருள்புரியும் சிவலோக நாயகனாகிய பெருமானை உளமுருகிப் பல்லாண்டு கூறி வாழ்த்தும் இன்னிசைத் திருப்பதிகமாக விளங்குவது இத்திருப்பல்லாண்டாகும். திருப்பல்லாண்டின் இறுதிப் பாடலில்,

**"எந்தையெந்தாய் சுற்றமுற்றும் எமக்கமுதாம்**
**எம்பிரான் என்றென்று**
**சிந்தைசெய்யும் சிவன் சீரடியா ரடிநாய் செப்புரை**
**அந்தமிலானந்தச் சேந்தனெனை"**

என இவ்வாசிரியர் தம்மைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதனால் சேந்தனாராற் 'சிவன் சீரடியார்' எனப் போற்றப்பட்டவராவார்.

திருவாசகம், திருப்பூவல்லி இரண்டாம் பாடலில்,

**"எந்தையெந்தாய் சுற்றமற்று மெல்லா மென்னுடைய**
**பந்தமறுத் தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்"**

என மாணிக்கவாசகரும் பாடுகிறார்.

இக்குறிப்பினை நோக்குமிடத்து மாணிக்கவாசகருக்குப்பின் அவரடியார் குழுவின் வழிவந்தவர் சேந்தனார் என்பது தெளிப்படும்.

சோழனது ஆட்சி நடந்த சயாம் நாட்டில் அரச குடும்பத்தில் நிகழ்த்தப்படும் சடங்குகளில் திருவெம்பாவை, திருவாய்மொழியுடன் 'மன்னுகதில்லை' எனத் தொடங்கும் இத்திருப்பல் லாண்டும் பாடப்படுவதாகத் திரு. ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் சைவ இலக்கிய வரலாறு என்ற நூலில் (பக்கம். 394) கூறியுள்ளது ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

# 65. திருமந்திரம் காட்டும் சிவபெருமான்

கவிஞர் சீ. பழநி, சென்னை.

நமது தமிழ் தொன்மைமிக்க மொழி. மென்மையான மொழி. மனித மனதில் தோன்றி மனித மனதில் கலந்து மனிதனை மகிழ்விக்கும் மொழி. உலகுக்கு முதன் முதலாக ஒரு தொல்காப்பிய இலக்கணக் காவியம் படைத்த மொழி. பின்பு திருக்குறள், திருமந்திரம், திருமுறைகள் தந்து இது நாள் வரையிலும் இயல் இசை நாடகத் தமிழை தெய்வத்தமிழாக, நினைப்பவர் உள்ளத்தை செம்மைப்படுத்தி ஞாலம் முழுதாண்ட மூத்த மொழி நம் தமிழ் மொழி என்பது அறிவோம்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தனது மனோன்மணியத்தில் சதுர் மறையார் வருமுன் சக முழுதும் நினதாயின், முதல்மொழி நீ அநாதி யென மொழிகுவதும் வியப்பாமே என்பதிலிருந்து இந்த அநாதியான முதல்மொழி மொழியும் மொழியில் கசிந்து வரும் தெய்வீகத்தை இதன் எழுத்து, சொல், பொருள் என்ற பல்வேறு அங்கங்களில் மிளிர்வதை திருமந்திரத்தில் காணலாம்.

மேலும் இறைவன் கருணையே உருவாகி வடக்கில் திருக்கைலாய மலை மீது எழுந்தருளி இந்திரன் பிரமன் முதலாகிய தேவர்களுக்குச் சிவ நெறியினை உபதேசம் செய்யும் வேலையிலே திரு நந்தித் தேவரின் திருவருள் உபதேசம் பெற்ற நான்மறைச் சிவயோகி சுரந்தரநாதர் என்போர் அட்டமா சித்திபெற்ற சித்த புருடர் அங்கு இருந்து எல்லாம் வல்ல ஈசனின் அருள் மழை இன்பத்தில் ஆழ்ந்திருந்தார்.

மூலன் வரலாற்றை உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனாம் சிவனடியார்களின் திறம் பாட வந்த ஆழி சூழ் உலகாண்ட சோழ குல வள்ளல் அநபாய சக்கரவர்த்தியின் மாண்புமிகு முதலமைச்சராம் நம் சேக்கிழார் நாயனார் தான் பாடிய பெரிய புராணத்திலே கூறுவார். எப்படி என்றால் அந்தி இளம்பிறைக் கண்ணி அண்ணலார் கையிலைதனில் முந்தை நிகழ் கோயிலுக்கு முதற் பெரு நாயகமாகி, இந்திரன்மால் அயன் முதலாம் இமையவர்க்கு நெறியருளும் நந்தி திருவருள் பெற்ற நான் மறை யோகியுள் ஒருவர் - அணிமாதி வரும் சித்தி பெற்றுடையார் கொற்றவனார் திருக்கையிலை மலை நின்று குரு முனிபால் உற்றதொரு கேண்மையால் சில நாள் உறைவதற்கு நற்றமிழின் பொதியமலை நண்ணினார் என்று மூலன் தெற்கே தமிழ் திருநாடு சேர்ந்த செய்தி கூறுவார்.

பின்பு அத்தவயோகி சுந்தர நாயனார் காவிரி பெருந்தீர்த்தம் கலந்தாடிக் கடந்தேறி, ஆவின் அருங்கன்றுறையும் திரு ஆவடுதண்துறை உறை அண்ணல் திருக்கோயில் வலம் வந்து மேவுப்பெருங் காதலினால் பணிந்தங்கு இருந்தாராம்.

அங்குறையும் அந்நாளில் சாத்தனூர் சார்பிடையன் மூலன் நன் பெயர் கொண்டோன் பெருகிவரும் அன்புடனே ஆக்குலங்கள் பல மேய்த்து ஆனிடரும் துடைத்துக் காக்கும் இறைவனாக வாழ்ந்த இந்த இடைக் குலத்தோன் அரவு தீண்ட மாண்டவனை கண்ணின் வழி குருதிக் கொட்ட விண்ணாளும் மன்னவனாம் ஈசன் செவி செவிடுபட ஓங்கியெழும் ஓலம் செய் பசுக்கூட்டம் சூழக் கிடக்கும் உடல்கண்டு - இவனுயிர் பெற்றாலன்றி ஆக்கள் இடர் நீங்காது என்றுணர்ந்த சாதிநாதன் அருட் சீடன் சுந்தரநாதன் அவன் உடலில் தம் உயிரை அடைவிக்க அருள் புரியும் தவ முனிவர் தன் உடம்பு(க்கு) அரண் செய்து தாம் முயன்ற பவன வழி அவன் உடலில் தம் உயிரை பாய்த்துவிட்டு பின் தவமுனிவர் திருமூலநாயனாராக செத்த உடல் சேர்த்தெடுத்து புத்துயிர் கொடுத்தானாம் சோர்ந்தழும் பசுக்குலமே துள்ளி மகிழ்வெய்திடவே புது உடல் பெற்றவனே நம் திருமூலன்நாயன் என்ற பேரு பெற்ற நாயனாரே. அவன் செய்த மந்திரத்தில் தான் கண்ட சிவத்திறத்தை அவனாக தான் உணர்ந்து சொன்ன செய்தி சிலவற்றை சிக்கனமாய் சொல்லெடுத்து சொல்லிடுவேன் கேட்க வாரீர்.

மூலன் உடல் எடுத்து இத்திருமந்திரத்தை ஒன்பது தந்திரமாக்கி இவ்வுலகு உய்ய வழிகாட்டி நாம் உய்ய உபாயமாக்கினார். அப்படிப் பட்ட இறையன்பை நாம் சிந்தை செய்யவும், அறவழி நின்று வாழ்ந்து இறைவழிபாடாற்றி வீடு பேறடைய இறைவனை எந்த தன்மையனாக, எந்த உருவினனாக உலகுக்கு உணர்த்தினார் இத்தெய்வமாம் திருமூலன் என்பதை அறியக் கடமைப்பட்டுள்ளோம்.

தவிரவும், திருமந்திரத்திற்கு வெவ்வேறு சிவனடியார்கள் யாத்த சிறப்பு பாயிரத்தில் ------- மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ், ஞாலம் அறியவே நந்தி அருளது ------ என்றபடி இறைவனை நந்தி என்று உருவகித்துப் போந்தார்கள்.

மேலும் மூலன் ------- என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறே (பாடல் 152) -- என்று கூறுவதி லிருந்து இறைவன் தமிழாக இந்த மனித நாவினிலே நடமிடுவதை நாம் அறிவோம். இதிலிருந்து பெறப்படும் மற்றோர் செய்தி என்னவென்றால் தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறு என்றதினால் முழுமுதல் இறையே தமிழ் என்பதும் தமிழே இறைவன் என்பதும் பெறப்படுகிறதென்றால் இதில் மிகையொன்றுமில்லை.

இப்படியாக மூலன் தொடுத்த மூவாயிரம் தமிழ்மாலைகளில் இவ்விறையை, மாதொருகூறுடை மேருமலை நாதனை, நம் உடலில்

சீவனாகி நம்மை இயக்கும் இந்தச் சிவனை விதவிதமான மலராக்கி பக்தி மணக்கத் தொடுத்துள்ள விந்தையை இங்கே சிந்திப்போம்.

நூல் முகமாக யாத்த தனது கடவுள் வாழ்த்தில் இறைவனை ஒன்றாகவும், சிவ சக்தியாக இரண்டாகவும், இச்சை - ஞானம் - கிரியை என்று மூன்றாகவும், மறைகளில் நான்காகவும், நம் பொறி புலன்களில் ஐந்தாகவும், பதம் - எழுத்து - மந்திரம் - கலை - தத்துவம் - புவனம் என்ற அத்து வாக்களில் ஆறாகவும், அண்டங்களில் ஏழாகவும், குணங்களில் எட்டாகவும் (பாடல் 1) இருந்து ஆருயிர்களை இயக்கும் இறைவனை எண்களின் வடிவில் காண்கிறான் மூலன். மேலும் சிவபெருமானை தீயினும் வெய்யன் என்றும் புனலினும் தண்ணியன் (பா 7) என்றும் உருவகிக்கும் வேலையில் இறைவனை ஓங்கொளி வண்ணனாகவும் இயற்றிகழ் சோதியாகவும் கண்ணுதலானாகவும் மண்ணையும் விண்ணையும் கடந்து நின்றானாகவும் கண்டு மகிழ்கிறார். (பா 10 - 11)

மேலும் எங்குமாய் பரந்து நின்ற இறைவனை சுருங்கரததோர் தன்மையில் நீதியுமாய் நிற்பதைக் கண்டவர் (பா 14) பண்ணகத் தானாகி இன்னிசைப் பாடலாக தன் கண்ணகத்தே நின்று காதலித்த மூலன் இறைவனை அப்பனாகவும் அத்தனாகவும் ஆரா அமுதனாகவும் ஒப்பில்லா வள்ளலாகவும் ஊழிமுதல்வனாகவும் கண்டு வணங்குவார் (பா 21). இறைவனை நாளும் வாழ்த்த வல்லார்களின் மனத்துள்ளுரு சோதியாக திகழும் நந்தியம்பெருமானை உணர்ந்த இவ் வள்ளல். இப்படி இறைவனை பலவித ரூபங்களில் கண்டு அழைத்து மகிழும் காரணம் கூறுவார் -- என் நந்தியை நானின்றழைப்பது ஞானம் கருதியே என்கிறார் (30) அறிவே தெய்வம் என்ற ஆன்றோர்களின் ஆன்ம சோதியை சோதித்து அறிந்த செம்மல்.

மாணிக்கவாசகருக்கு இறைவன் ஐந்து வண்ணங்களாக காட்சித் தந்த இறைவன் அந்தி வண்ணமாகிய (46) செந்நிற சோதியே சிவனாகவும் முந்தி வண்ணனாகவும் காணும் இவர் சிவனை விடியா விளக்காக (48) கண்டு மகிழ்கிறார். தவிரவும், அரன், அரி, அயனாகிய மும்மூர்த்திகள் வேறு வேறு அல்லர் தேவர் தலைவன் அம்மூவரும் ஒன்றெனார் என்று கூறும் இவர் - ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும் ஆதிக் கமலத்து அலர்மிசையானும் சோதிக்கில் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்றெனார் (52) - என்று பாட்டிசைப்பார்.

நீதிக்கண் ஈசனான இறைவன் வேதநாயகன் திருமாலுக்கு உபதேசமருளுகையில் கருக்குரவாய் வந்தானாம் (பா 63) அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தனான விண்ணவர் ஈசன் (பா 68-69). திருவைந்தெழுத்து மந்திரத்தை அடியார்கள் தம் மனம் என்ற யாக சாலையில் நித்தம் செய்யும் ஓமத்துள் உறையும் ஒன்சுடரான் (92) ஓமத்

தலைவனும் அவனே என்று கண்டவன் கால் கொண்டு கட்டி கனல் கொண்டு மேலேற்றி பால் கொண்டு சோமன் முகம் பற்றி உண்டு மகிழ் திருமூலன். மேலும் இறைவனின் திருவடி இன்பத்தினை திளைத்தவன் - தெண்ணீர்க் கரையில்லை எந்தை கழுமணி ஆறே (106) - என்று விளித்து மகிழுவான்.

கனிந்தவர் ஈசன் கழலடிக் காண இல்லங்கருதி இறைவனை ஏத்தும் நம் அடியார்கள் அறிந்த நந்தியம்பெருமானின் பெருமையை வேறறியாமல் விளம்ப வந்த மூலன் இறைவனை அண்ணல் என்று பெயரிட்டு பேரறியாத பெருஞ்சுடராக உருவகித்து மகிழ்கிறார் (பாடல் 127) மேலும் நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்று நந்தி வழிக்காட்ட பேரமைதி பெரு வெள்ளத்தாழ்ந்திருக்க அருள் பாலித்த முழு முதல் தலைவனை, செழுஞ்சுடர் மூன்றொளியாகிய தேவனை நந்தி என்று அழைத்திடுவார் (பா 133) நம் நந்திமைந்தன்.

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று கூறி முத்தமிழ் வேதம் மூவாயிரம் படைத்தவன் தத்துவ ரூபியை சதாசிவம் என்பான் அண்ட முதலானிடம் அறம் பயின்ற அண்ணல் (பா. 149). வளர்ப்பில் கயிலை வழிவந்த வரலாறு கூறுமிடத்து - பெற்றமும் மானும் மழுவும் தற்பரன் கற்பனை என்றுணர்ந்தவன் ஞேயத்தையும் ஞானத்தையும் துருவத்தையும் விளக்கியவன் நற்பதம் அளிக்கும் நந்தியாம் நாதனை துளக்கறும் ஆனந்தக் கூத்தன் என்று அருளுவான் (பா. 155).

பதி பசு பாசம் என்ற மும்மல மாற்றித் தயா என்னுமதாய் எழும் சூரியனே என்றழைத்தவர் அறிவறிவுள்ளே அழிந்தது போலே குறியறி விப்பான் குருபரன் (பா 160) வெளியில் வெளிபோய் விரவியவாறும் அளியில் அளிபோய் அடங்கியவாறும் ஒளியில் ஒளிபோய் ஒடுங்கியவாறும் தெளியும் அவரே சிவ சித்தர் (பா 168) என்றுணர்ந்த நம் பெரும் சித்தன்.

மேலும் எங்கும் தாமாகி எல்லாம் சிவன் செயல் என்று தூங்காமல் தூங்கிய சிவத் தொண்டர்கள் தம்முள்ளேக் கண்ட சிவ லோகமும், சிவ யோகமும், சிவ போகமும் சொல்வது எவ்வாறு என்றுத் திகைக்கும் நம் மூலன் மாணிக்கத்துள்ளே மரகதச் சோதியாகவும், மாணிக்கத்துள்ளே மரகத மாடமாவும், ஆணிப் பொன் மன்றினில் ஆடும் திருக்கூத்தனைப் (பா 175) பேணித் தொழுவார் திருவடியே சிவமாவது தேரி திருவடியே சிவ லோகம் என்றுணர்த்திய செம்மல் நம் யாக்கை அழியாமுன்னம் மடல் விரி கொன்றயன் (பா 209) வானவர் கோனைப் பெயற்கொண்டல் போல பெருஞ்செல்வமாக (பா 213) காட்டுகிறார் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத் தன் அப்பனான (பா 222) சிவனை கங்கைப் படர்ச்சடை நந்தியை (பா 223)

இவ்வுடலைத் தாங்கிப் பிடித்திருக்கும் சீவனாம் இன்னுயிரே நம் இறை வெங்கட நாதன், வேதாந்த கூத்தன், வேங்கடத்துள்ளே விளையாடும் நந்தியாம் வேங்கடம் (பா 232) என்று நம் விதி நாடி புனிதனை (பா 237) போற்றுமின் என்பார்.

திவ்விய மூர்த்தியின் குணத்தைக் குறிக்க வந்த மூலன் அன்பே சிவம் (பா 250) அவன் பொன்னைக் கடந்திலங்கும் புலித்தோலினன், மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை, துன்னிக் கிடந்த சுடு பொடியாடி, அவனுக்கு பின்னிக் கிடந்தது என் பேரன்பு தானே (பா 258) என்று அன்பில் தான் உத்தம நாதனாம் சிவத்தோடு பின்னப்பட்ட நிலையை காண்பிக்கிறார்.

தான் கண்ட நந்தியாம் நம்பனை நமக்கு கமழ்தரு கொன்றையினன் ஆகவும், கரியுரியானாகவும், கமல மலர் உறைபவனாகவும் காட்டுவார் (வா 272) ஈசனாம் மணிவிளக்கை (279). இத்துடன் திருப்தியடையாத மூலன் கடலையும் மலையையும் ஐந்து பூதங்களையும் உடலாக உள்ள அடல் விடை ஏறும் அமரர்கள் நாதனை துணையதுவாக வரும் தூய நற்சோதியாகவும், தூய நற்சொல்லாகவும், தூய நற்கந்தமாகவும், தூய நற்கல்வியாகவும் (பா 281) நமக்கு பாடம் புகட்டுவார்.

புகழ் நின்றார்க்கு புராணமாக புரிபடும் ஆதியாம் ஈசனை ஓதி உணராத மடையருக்கு கல்லில் செய்த பசுவாக (பா 295) காணும் திருமூலநாயனார் கல்லாதவரும் கருத்தறி காட்சியாக காட்டுகிறார் கணக்கறிந்தார்க்கன்றி கைக்கூடா காட்சியாம் ஆதிப்பிரான் அமரர்க்கு பரஞ்சுடர், சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம் (பா 306) என்பார்.

நடுவு நிற்றலாகிய சிவ நினைவு உடையவர்கள் நிலையை - தோன்றிய எல்லாம் துடைப்பான் அவனன்றி ஏன்று நின்றார் என்றும் ஈசன் இணையடி முயன்று நின்றார் முதல்வன் திரு நாமத்தை பற்றி நின்றார் நடுவாகி நின்றாரே (பா 310) என்று செழுநீர் சிவன் தன் சிவானந்தத் தேறலில் திளைத்த நம் மூலன் பறைசாற்றுவான். காரணம் அவன் சித்தம் உருக்கி சிவமாம் சமாதியில் ஒத்த சிவானந்தத்து ஓவாத தேறதை உண்டு பருகி மூவாயிரம் ஆண்டுகள் தூங்காமல் தூங்கி சுகம் கண்ட ஆனந்தக் கூத்தன். சித்தத்தை சிவன்பால் வைத்து வாழ்பவர்கள் ஓ மய ஆனந்தத் தேறல் என்ற உணர்வுடனே புனிதனாகிய ஈசன் இணையடி நிழலில் இன்புற்று இருந்தவன் (பா 313).

கள்ளுண்ணா மாந்தர்கள் பசு பாசம் வள்ளன்மை நாதன் அருளில் வாழ்வார்கள் தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வார்கள் ஆனால் கள்ளுண்ணும் மாந்தர் இந்தக் கருத்துக்களை அறியார் என்று மாந்தரின் மயக்கம் அறுக்கிறார் மாமாயையை மதிக்கொண்டு நந்தியருள் பெற்ற நாயகன், இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து இருந்து எழும் இந்த மானிட தெய்வம்.

ஊழி முதல்வனாம் ஈசன் அன்னை வடிவெடுத்து மார்கழி மாதம் திருவாதிரை நன்னாளில் தோன்றி உயிர்களைத் தோற்றுவித்து அருள் பாலித்து ஆட்கொள்ளும் இடையறா விளையாட்டில் சிவனே சத்தி

சிவமாம் இரண்டுந்தன்னுள் வைக்கச் சத்தியம் எண் சித்தித் தன்மையுமாமே (பா 320) என்று பாடுவார் கள்ளுண்டு மூடராய் மோகமுற்று ஆகும் மதத்தால் அறிவழிந்து வாடும் மோகியரைப் பார்த்து (பா 322).

காக்கும் கடவுளாம் ஈசன் அசுரனை அழித்து தேவர்களை காத்த செய்தியை - கருத்துறை அந்தகன் போல் அசுரன் வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம் வருத்தம் செய்தானென்று வானவர் வேண்டக் குருத்துயர் சூலம் கைக்கொண்டு கொண்றானே (பா 325) என்ற பாடலில் தெளிவு படுத்துகிறார். சலந்தரனை அழிக்க சக்கரப்படையை சமைத்த சிவனை - எங்கும் கலந்து என் உள்ளத் தெழுகின்ற அங்க முதல்வன் அருமறை ஓதி பால் பொங்கும் சலந்திரன் போர் செய்ய நீர்மையின் அங்கு வரற்குறித்து ஆழி செய்தானே (328) - என்று போற்றுவார் முப்புரம் எரித்த செஞ்சடை ஆதி புராதனனான நம் மூலன்.

உமையாளோடு கைலை மலை உச்சியில் தேவரும் முனிவரும் புடைசூழ வீற்றிருந்த நாதனை பத்துத் தலைகளையும் இருபது வலிய தோளுடை இராவணன் அந்த ஓங்கி உயர்ந்த மேரு மலையைத் தாங்கி எடுத்தபோது சிவன் தன் கால் கட்டைவிரல் நுனியால் சிறிது அழுத்தினானாம். அப்போது மலைக்கடியில் இராவணன் அழுத்தப்பட்டு குருதிக் கொப்புளிக்க தன் கை நரம்பெடுத்து யாழமைத்து திருவைந் தெழுத்தை ஓதி கீதம் இசைக்கக் கேட்ட சிவன் மகிழ்ந்து அவனுக்கு நாளும் வேளும் கொடுத்ததை - தாங்கி இருபது தோள்வலியால் மடவரை ஓங்க எடுத்தவன் ஒப்பிலி பெருவலி ஆங்கு நெரித்து அமரா என்றழைத்தபின் நீங்கா அருள் செய்தான் நின்மலன் தானே (பா 336) என்று பாடி அன்று இராவணனின் இசை மழையில் மூழ்கி திளைத்த ஈசனை நின்மலன் என்று போற்றுவார்.

இவரே பிரிதோரிடத்தில் - நாடி இறைவா நம என்று கும்பிட ஈடில் புகழோன் எழுக என்றானே - (பா 338) என்று தந்தைப் பிரானாம் ஈசனை ஈடில்லா புகழோன் என்று புகழ்ந்து போற்றுவார் தெளிந்தார் கலங்கினும் நீ கலங்காதே அளிந்தாங்கு அடைவதும் எம் ஆதிப் பிரானை (பா 347) என்ற நம் வள்ளல்.

மேலும் திருமாலுக்கு இந்த சக்கரத்தை தாங்க தகுந்த சக்தியையும் தந்த சிவன் திறம் கூறுமுகமாக - சக்கரம் பெற்று நல் தாமோதரன் தானும், சக்சம் தன்னைத் தரிக்க ஒண்ணாமையால் மிக்கிரன் தன்னை விருப்புடன் அர்ச்சிக்கத், தக்கநற் சத்தமியைத் தான் கூறச்செய்ததே (பா 354) என்று இசைத்துப் போந்தார் நம் மூலன்.

மேலும் ஈசனாம் பரமன் அனலாய் பரந்து முன் நிற்க அடி முடி காண்பார் அயன் மால் இருவர், படிக்கண்டிலராம் ஆனாலும் மீண்டும் பார்மிசைக் கூடி அடிக் கண்டிலேன் என்று அச்சுதனாம் திருமால் சொல்ல,

முடிக்கண்டேன் என்று பொய் மொழிந்தானாம் பிர்மா (பா 359). ஆனாலும் ஏழுலகமும் அழகுற நின்ற எம் அண்ணல் தாம் ஏழுலகில் அழல் பிழம்பாய் நிற்கும் வான் ஏழு உலகுறும் மாமணி கண்டனை நானே அறிந்தேன் அவன் ஆண்மையாலே (பா 360) என்று தான் கண்டதைக் கண்டபடி காண்பிப்பார்.

இது மட்டுமா இறைவன் ஊனாய் உயிராய் உணர்வாய் முன்னம் சேணாய் வான் ஓங்கி திரு உருவாய் அண்டத் தாணுவும் ஞாயிறும் தன் மதியும் கடந்து ஆண்டு முழுதும் அண்டமும் ஆகி நின்ற ஈசனை (பா 361) நில முழுதும் அண்டத்துள் நீளியன் என்றுரை செய்வார். மேலும் உலகத்து உயிர்க்கு உயிராக ஒளிரும் நம் இறையை ஆலிங்கனம் செய்து எழுந்த பரஞ்சுடர் (பா 365) என்பார் ஊழிக் கதிரோன் ஒளியை வென்ற ஒளிப் பிழம்பை.

இது மட்டுமா ஆதியோடு அந்தம் இல்லா பராபரமாம் இறை போதமதாகப் புணரும் பராபரரை (சக்தியை) சோதி அதனில் பரம் தோன்ற தோன்றுமாம் தீதில் பரையதன் பால் திகழ் நாதமே (பா 368) என்று தான் தோன்றுவதற்கு நிலைக் கலனாம் ஓசையாம் நாதம் தோன்றும் விந்தையை தெரிவிக்கிறான் திருமூலன்.

இப்படியாக சோதியாய் சுடராய் சூழொளி விளக்காய் தோன்றாச் சுடராய் மிளிரும் ஈசன் தன் அன்பினால் தோன்றிய சக்தியையும் அதன் பயனாம் நாதமும் விந்தும் அறிவும் ஆற்றலும் ஒன்று கலந்து சிவமாகி பார் முதல் ஐம்பூதங்களுக்கும் நிலைக்கலமாய் நிற்கும் நந்தி நாதனை புவனம் படைத்த புன்னியனை புவனம் படைப்பானும் பூமிசையானாய் என்று (பா 371 - 373) அவனது படைப்பின் இரகசியம் சொல்லுவான் தன் பாட்டில்.

தாயிலி தந்தையிலி தான் தோன்றி என்ற இறை ஏழுலகினையும் ஒரு காலத்து உண்டு உமிழ்ந்த மாயனாம் அரிக்கும் அரியான தலைவனாம் ஆதியும் கண்டச் சதுமுகக் காரணன் தன்னோடும் பண்டிவ்வுலகம் படைக்கும் பொருளே என்று ஆர்ப்பார் ஓங்கு பெருங்கடல் உள்ளூறு வானொடு பாங்கார் கயிலைப் பராபரன் தானும் வீங்கும் கமல மலர் மிசைமேல் அயன் ஆங்கு உயிர் வைக்கும் என்று உணர்ந்த மூலன். (பா 376 - 377).

மேலும் கூறுவான் சிவன் அனைத்து உயிர்களின் உடல்களிலும் கலந்து நின்று அதனதன் நடு உடலாகி உள்ளக்கமளமாம் இறுதய பீடத்தில் நாராயணனாக வீற்றிருப்பவனும் இச்சிவனே. அன்றி நான்முகனாக அமர்ந்து நான்மறை வேதங்களை ஓதி உலகெலாம் தானாகவே இருந்து அருள் பாலிக்கும் விந்தையை - காரணன் அன்பிற் கலந்து எங்கும் நின்றவன் ஆரணமாய் உலகாயமர்ந்தவன் என்று போற்றினான் மூலன் (பா. 378).

உயிர்களனைத்தையும் உலகனைத்தையும் படைத்துக் காத்து அருள் கொடுத்து பின் துடைத்து தன்னுள் அடக்கும் ஈசன் செயலைக் குறிக்கும் நம் மூலன் போக்கும் வரவும் புனிதன் அருள் புரிந்து ஆக்கமும்

சிந்தையதாகின்ற காலத்து மேக்கு மிக நின்ற எட்டுத் திசையொடும் தாக்குங் கலக்கும் தயாபரன் என்பார் (பா 380) இப்பொழுது நம்மை ஆட்கொள்ள வேண்டி தாயாய் எழுந்த தாயாபரன் ஈசனாம் இறை மூலன் உடல் கொண்டு உவட்டா உபதேசம் அருளிய நாதனாம் நம் நந்தி மைந்தன்.

இப்படி உலகைப் படைக்கும் தோறும் இறை உத்திராக்க மாலையை கழுத்தில் அணிந்து அழகிய கொன்றை மலரை தலையில் சூடி இருப்பானாம். பிறகு இந்த உலக ஒடுக்கம் என்ற ஊழிக்கால அழிவை நிகழ்த்துமுகமாக தாம் நெருப்பிலே சுடச்சுடரும் செம்பொன் மேனியனாக காட்சித் தருவானாம். அப்படிப்பட்ட எம்மிறை இந்தப் பேரொடுக்க காலத்து அழிந்து படும் உயிர்களனைத்துக்கும் தானே உடலாய் அமைந்து அந்த உயிர்களை காக்கிறான் என்ற செய்தியை - ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன், வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன், போகின்ற சீவன் புகுந்து உடலாய் உளன், ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே (பா 382) என்று பொன் போல் பொதித்து வைத்துள்ளான்.

இறைவன் ஆகாசம் நிலம் நீர் காற்று நெருப்பு என்ற ஐம்பூதங் களாகவும் அவற்றின் அதி தெய்வங்களாகவும் ஆகிய ஈசன் மாகாயனாக உருவகிக்கும் மூலன் இறைவனே அரனாகவும் பிரமனாகவும் இந்த ஆகாயம் பூமி என்று இந்த காணும் பொருள்களை எல்லாம் நமக்காக அளித்தான் என்பதை - ஆகாயம் ஆதி சதாசிவராதியென் போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர் மாகாய ஈசன் அரன்மால் பிரமனாம் ஆகாயம் பூமி காண அளித்தலே (பா 387) என்று வியக்கிறார்.

இன்னும் மிக எளிமையான தமிழில் ஒருவனுமே உலகேழும் படைத்தான் என்றும் ஒருவனுமே உலகேழும் அளித்தான் என்றும் ஒருவனுமே உலகேழும் துடைத்தான் என்றும் ஒருவனுமே உலகோடு உயிர்தானே (பா 391) என்று கூறினால் எந்த ஒன்றிலும் பற்றற்ற ஒன்றானவன் எல்லாப் பொருளாக உருவெடுத்து பின் அவற்றை ஒழித்து தன்னுள் ஒடுக்கி தனித்து நிற்கும் பற்றற்றானை பற்றி நின்று நமக்கு யாத்தருளிய தம் திருமந்திரம் காட்டும் இறையின் திறம் வியக்கத்தக்கது.

# 66. திருவிசைப்பா பாடிய அருளாளர் வரலாறு

திரு. டி. பழனிசாமி, அண்ணாமலைநகர்.

**செய்யுள்**

"செம்பொன்மணி அம்பலத்து நிருத்த னார்க்குத்
திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்பேர் சொல்லில்
பம்புபுகழ் செறிதிருமா ளிகை மெய்த்தேவர்
பரிவுடைய சேந்தனார் கருவூர்த்தேவர்
நம்பிகா டவர் கோன்நற் கண்டரா தித்தர்
நன்குயர்வே ணாட்டடிகள் திருவாலி யமுதனார்
அம்புவியோர் புகழ் புருடோத் தமர் சேதி ராயர்
ஆக இவர் ஒன்பதின்மர் தாமுறை கண் டடைவே!"

என்ற பாடல் மூலம்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் தோத்திரம், சாத்திரம், பிரபந்தம், புராணம் என நான்கு வகையாக அமைந்துள்ளன.! ஒன்று முதல் ஒன்பது வரையான திருமுறைகள் தோத்திரம், பத்தாவது சாத்திரம், பதினொன்றாவது பிரபந்தம், பன்னிரண்டாவது புராணம் ஒன்பதாம் திருமுறை தோத்திர பகுதியின் இறுதி பகுதியாக இருப்பதால் இத்திருமுறையின் இறுதி பதிகமாக திருப்பல்லாண்டை அமைத்து நம்பி ஆண்டார் நம்பிகள் தொகுத்திருக் கிறார் ஒன்பதாம் திருமுறையானது திருவிசைப்பா திருப்பல்லாண்டு எனப் பெயர் பெரும் இது திருவிசைப்பா மாலை என்றும் அழைக்கப் பெறும். இத்திருமுறையில் 29 பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. தற்போது 301 பாடல்களே கிடைத்துள்ளன. இவற்றை அருளிய அடியாளர்கள் 1. திருமாளிகைத் தேவர், 2. சேந்தனார், 3. கருவூர்தேவர், 4. பூந்துருத்தி நம்பி, காடா நம்பி, 5. கண்டராதித்தர், 6. வேணாட்டடிகள், 7. திருவாலிய முதனார், 8. குருடோத்தம நம்பி, 9. சேதிராயர் என ஒன்பது அடியாளர் களை மேலே கூறப்பட்ட பாடலின் மூலம் அறியலாம்.

**தொடக்கவுரை**

இனி திருவிசைப்பா அருளிய அடியாளர்கள் பற்றி அறிவோம்.

**1. திருமாளிகைத் தேவர்**

திருவிசைப்பாவை அருளிய அருளாளர்கள் ஒன்பதின்மருள் திருமாளிகைத்தேவர் முதலாமவராகத் திகழ்பவர். இவர் சுத்தசைவ

வேளாளர் மரபில் தோன்றயவராவார். சோழ மன்னர்களின் தீட்சா குருவாக விளங்கியருமான திருவிடை ம்ருதூரில் வாழ்ந்து வந்த ஐந்து கொத்தாருள் (பரியேறும், பெரியோர், தெய்வப் படிமப்பாதம் வைத்தோர், மாணிக்கக் கூத்தர், குருராயர் சைவராயர்) ஒருவரான் சைவராயர் வழியில் தோன்றிய உத்தமர். இவர் தம் முன்னோர்கள் வாழ்ந்த மடம் மாளிகை மடம் (பெரிய மடம்) எனப் பெயர் பெறும் அம்மடத்தின் சார்பால் இவர் திருமாளிகைத் தேவர் என்ற பெயரைப் பெற்றார் என்பர். இவர் திருவாவடுதுறையில் சிவாலயத்திற்கு அருகே தென்திசையில் தமக்கென ஒரு மடாலயம் (அருட்டுறை மடம்) அமைத்துக் கொண்டு இறைவழிப்பாட்டில் நின்றார். அப்பொழுது அங்குச் சிறுயோகத்தில் அமர்ந்திருந்த சித்தரான போகநாதரிடம் ஞானோபதேசம் பெற்றார். தம் தவத்தின் பயனாக அழகிய ஒளிவீசும் உடலைப்பெற்று விளங்கினார். இவர் பல சித்திகளைப் பெற்றுத் திகழ்ந்தார். சைவ சமயத்தை நன்கு வளர்த்து போற்றினார். இவர் அருளிய பாடல்கள் நான்கு பதிகங்களாகும் முதல் பதிகம். பதினொரு பாடல்கள், இரண்டாம் பதிகம், பதினொரு பாடல்கள், மூன்றாம் பதிகம், பன்னிரெண்டு பாடல்கள், நான்காம் பதிகம், பதினொரு பாடல்கள் கொண்டதாகும். அவை அனைத்தும் தில்லை ஸ்தலமான சிதம்பரத்தில் அருளப்பட்டவையாகும்.

**முதல் பதிகம் பண் : பஞ்சமம்**

ஒளிவளர் விளக்கே ! உலப்பிலா வொன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!

எனத் தொடங்கும் 11 பாடல்கள்

**இரண்டாம் பதிகம் : பண் : பஞ்சமம்**

உயர் கொடி யாடை மிடை படலத்தின்
ஒமதூமப் படலத்தின் பதினொரு பாடல்

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**மூன்றாம் பதிகம்**

உறவாகியயோ கமும் போகமுமாய்
உயிராணி என்னும் என் பொன்றோருநாள்

எனத் தொடங்கும் 12 பாடல்கள்.

**நான்காம் பதிகம் : பண் : காந்தாராம்**

இருந்த சித்தத்தி னேற்கு
இணங்கிலா ஈசன் நேசத்(து)

எனத் தொடங்கும் 11 பாடல்கள் ஆகியவை திருமாளிகைத் தேவர் அவர்கள் இயற்றப்பட்டவையாகும்.

## 2. சேந்தனார்

திருவிசைப் பாவை அருளிய அருளாளர்களில் இரண்டாவதாக திகழ்பவர் சேந்தனார் ஆவார். இவர் பட்டினத்தடிகளின் தலைமைக் கணக்கராக இருந்தவர். இவர் திருவெண்காட்டுக்கு அண்மையிலுள்ள நாங்கூர் என்ற ஊரினர். இதனை நாங்கூர்ச் சேந்தனை வேந்து விட்ட கைத்தளை நீக்கியென் முன் காட்டுவென்காட்டுளானே என்ற பட்டினத்தடிகள் பாடற் பகுதியால் அறியலாம்.

சேந்தனார் பட்டினத்தடிகளின் கணக்கராக இருந்தபோது அவரது ஏவலால் அவரது நிதியறையை எல்லோருக்கும் திறந்து விட்டார். அப்பொழுது அடிகளின் சுற்றத்தாரது தூண்டுதலால் சோழ அரசன் சேந்தனாரைச் சிறையிலிட்டான். சேந்தனார் அடிகளின் அருளால் சிறை நீக்கப்பட்டு மனைவி மக்களுடன் தில்லைக்கு சென்றார். அங்கு விறகு விற்பனையால் வரும் சிறு ஊதியத்தைக் கொண்டு ஒரு சிவனடியாரை உண்பித்து வந்தார். ஒருநாள் கூத்தப் பெருமானே சிவனடியாராக அவர் வீட்டிற்கு எழுந்தருளி அன்புடன் அளித்த களியாகிய உணவினை ஏற்று அதன் மிகுதியைத் தமது திருமேனியில் காட்டி சேந்தனாரின் பேரன்பை யாவரும் உணரச் செய்தருளினார். இதனை செம்பொன் அம்பலத்து வேந்தன் தனக்கு பழைய அவிழை அன்பாகிய பண்டைப் பறைச்சேந்தன் கொடுக்க அதுவும் திருவமிர் தாகியதே என வரும் கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 26ஆம் செய்யுளால் அறியலாம்.

சேந்தனார் தில்லையில் இருக்கும் போது மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் ஓடாது தடைப்பட்டு நின்றதிருத்தேரைத் திருபல்லாண்டு பாடித் தானே ஓடி நிலையினை அடையுமாறு செய்தார். சேந்தனார் திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி என்ற மூன்று தலங்களுக்குத் திருவிசைப்பாப் பதிகங்களும், தில்லையம்பதியாகிய கோயிலுக்குத் திருப்பல்லாண்டு என்னும் பதிகமும் அருளிச் செய்துள்ளார். சேந்தனார் தைப்பூச நன்னாளில் சிவப்பெருமாள் திருவடிநீழலை அடைந்தார் என்று திருவிடைக்கழி புராணம் கூறுகிறது.

### இவரது பதிகம் நான்கு

**முதல் பதிகம் : பண் : பஞ்சமம், ஊர் : திருவிழிமிழலை**

ஏகநாயகனை இமையவர்க்கு அரசை
என்னுயிர்க்(கு) அமுதனை எதிர்இல்

என தொடங்கும் 12 பாடல்கள்.

**இரண்டாம் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : திருவாவடுதுறை**

பொய்யாத வேதியர் சாந்தை மெய்ப்
புகழாளர் ஆயிரம் பூசுரர்

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**மூன்றாம் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : திருவிடைக்கழி**

**மாலுலா மனம்தந்(து) என்கையிற் சங்கம்**
**வவ்வினான் : மலைமகள் மதலை**

எனத் தொடங்கும் 11 பாடல்கள்

**நான்காம் பதிகம் திருபல்லாண்டு, ஊர் : கோயில் (தில்லை)**

**மன்னுக தில்லை! வளர்கநம்**
**பத்தர்கள் வஞ்சகர் போய் அகலப்**

எனத் தொடங்கும்'13 பாடல்கள்.

சேந்தனார் அடிகளால் இயற்றப்பெற்றவை.

## 3. கருவூர்த் தேவர்

திருவிசைப்பாவை அருளிய அருளாளர்களின் ஒன்பதின் மருள் மூன்றாவதாக திகழ்பவர் கருவூர்த்தேவர் ஆவார். இவர் கொங்கு நாட்டிலுள்ள கருவூரில் பிறந்தார். அதனால் கருவூர்த்தேவர் எனப் பெயர் பெற்றார். இவரது இயற்பெயர் இன்னதென்று விளங்கவில்லை. இவர் அந்தனர் குலத்தில் பிறந்து வேதங்களையும் பலகலைகளையும் நன்கு கற்றவர். இனிய தமிழ்ப் பாடல் பாடுவதில் ஆற்றல் பெற்றவர் சைவ சமயத்தின் வழி ஒழுகியவர், போகநாதரிடம் உபதேசம் பெற்று ஞான நூல்பல ஆராய்ந்து சிவயோகத்தில் நின்றவர். காயகற்பம் உண்டவர். பல சித்திகள் கைவரப் பெற்றவர் தம்மை இகழ்ந்தவர்களுக்குப் பற்பல அற்புதங்களைச் செய்து காட்டியவர். பிச்சை ஏற்று உண்ணும் துறவு வாழ்க்கையைக் கொண்டவர். எச்செயலிலும் பற்றற்றிருந்தவர். மலைகளிலும் வனங்களிலும் சஞ்சரித்தவர்.

கருவூரிலுள்ள வைதீகப் பிராமணர்கள் கருவூர்த் தேவரை வைதிக ஒழுக்கத்தை விட்டவர் என்றும் வாமபூசைக்காரர் என்றும் பழிச்சொல் தூற்றி அவருக்கு அடிக்கடி பற்பல தொல்லைகளை கொடுக்க தொடங்கினார். ஒரு நாள் கருவூர்த்தேவர் அவர்களுக்கு பயந்தவர் போல் நடித்து கருவூர்த் திருஆனிலை ஆலயத்தை அடைந்து பசுபதீஸ்வரைத் தழுவிக் கொண்டார் என்பது புராண வரலாறு.

கருவூர்த்தேவர் திருவுருவச்சிலை சிறு சந்நிதியாகக் கருவூர்ப் பசுபதீசுவர் ஆலயத்துள் வெளிப்பிரகாரத்திலே தென்மேற்கு திசையிலும் தஞ்சை பிரகதீசுவரர் ஆலயத்துள் வெளிப்பிரகாரத்தில் தென்மேற்குத் திசையிலும் தெய்வீகச் சிறப்புடன் உள்ளது. அங்கு நாடோறும் நித்திய பூசையும் வியாழன் தோறும் சிறப்பு பூசையும் பிரார்த்தனைகளும் நடைபெற்று வருகின்றன.

கருவூர்த்தேவர் கோயில், திருக்களந்தை ஆதித்தேச்சரம், திருக்கீழ்க் கோட்டூர் மணியபலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம் கங்கை கொண்ட சோளேச்சரம், திருவிடைமருதூர், திருப்பூவணம், திருச்சாட்டிக்குடி, தஞ்சை இராசராசேச்சரம், ஆகபத்துச் சிவத்தலங்களுக்கும் தலங்களுக்கு

ஒவ்வொன்றாகத் திருவிசைப் பதிகங்கள் பத்துப் பாடியுள்ளார். திருவிசைப்பாப் பாடியுள்ள அருளாளர்களில் இவர் அருளிய பதிகங்களே மிகுதியாக உள்ளன. கருவூர்த்தேவர் காலம் கி.பி.10 ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதியிலும் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் திகழ்ந்தார் எனலாம் இவர் அருளிய பதிகங்கள்.

**முதல் பதிகம் பண் : புறநீர்மை ஊர் : கோயில் (தில்லை)**

கணம்விரி குடுமிச் செம்மணிக்கவைநாக்
கறையணல் கட்செவிப் பகுவாய்ப்

எனத் தொடங்கும் பதினொரு பாடல்.

**இரண்டாவது பதிகம் பண் : புறநீர்மை ஊர் : திருக்களந்தையாதித்தேச்சரம்**

கலைகள்தம் பொருளும் அறிவுமாய் என்னைக்
கற்பினிற் பெற்றெடுத்(து) எனக்கே

எனத் தொடங்கும் பத்து பாடல்கள்.

**மூன்றாவது பதிகம் : பண் - பஞ்சமம், ஊர் - திருக்கீழக்கோட்டூர் மணியம்பலம்**

தளிரொளி மணிப்பூம் பதஞ்சிலம் (பு) அலம்பச் சடைவிரித் (து) அலையெறி கங்கை எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**நான்காம் பதிகம் பண் - பஞ்சமம், ஊர் - திருமுகத்தலை**

புவனநா யகனே! அகவுயிர்க்(கு) அமுதே!
பூரணா! ஆரணம் பொழியும்

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

**ஐந்தாம் பதிகம் - பண்; காந்தாரம், ஊர் : திரைலோக்கிய சுந்தரம்**

நீரோங்கி வளர் கமலம்
நீர் பொருந்தாத் தன்மையன்றே

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**ஆறாம் பதிகம் : பண் : பஞ்சமம், ஊர் : கங்கைகொண்ட சோளேச்சரம்**

அன்னமாய் விசும்பு பறந்(து) அயன் தேட
அங்ஙனே பெரியநீ சிறிய

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**ஏழாம் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : திருப்பூவனம்**

திருவருள் புரிந்(து) ஆள் ஆண்டு கொண்(டு) இங்ஙன்
சிறியனுக்(கு) இனியது காட்டி

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

**எட்டாம் பதிகம் - பண் : பஞ்சமம், ஊர் : திருச்சாட்டியக்குடி**

பெரியவா கருணை இளநிலா எறிக்கும்
பிறைதவழ் சடைமொழுப்(பு) அவிழ்ந்து

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

**ஒன்பதாம் பதிகம் - பண் : பஞ்சமம், ஊர் : தஞ்சை இராசராசேச்சரம்**

உலகெலாம் தொழவந்(து) எழுகதிர்ப் பருதி
ஒன்று நூறாயிரங் கோடி

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**பத்தாவது பதிகம். பண் : பஞ்சமம், ஊர் : திருவிடைமருதூர்**

வெய்யசெஞ் சோதி மண்டலம் பொலிய
வீங்கிருள் நடுநல்யா மத்தோர்

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

கருவூர்த்தேவர் அருளிய மொத்த பதிகம் ஒன்பது மொத்த பாடல்கள் 105 ஆகும்.

**4. பூந்துருத்தி நம்பி காடநம்பி**

திருவிசைப்பா அருளியவர்களில் நான்காவதாக பூந்துருத்து நம்பிகாட நம்பி ஆவார், பூந்துருத்தி என்பது சோழநாட்டுக் காவிரித் தென்கரையில் தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் 11-வது சிவத் தலமாகும். தஞ்சாவூர் திருவையாறு இடையே உள்ள கண்டியூரின் நேர் மேற்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் இப்போது திருபூந்துருத்தி என்று விளங்குகின்றது.

இவர் அந்தணர் குலத்தில் தோன்றியவர். நம்பி என்பது அந்தணர் குலத்தில் தோன்றிய வாக்குப் பெயருடன் அமைத்துக் கொள்ளும் ஒரு சிறப்புப் பெயர் ஆகும். நம்பி என்ற பெயருடன் காடவர் என்னும் சொல் கூடி நிற்றலால் இவர் பல்லவ வம்சத்தில் வந்தவர் என்றும் கூறுவர். சிவதலங்கள் தோறும் சென்று சிவபெருமானை வழிபடுவதிலும், மூவர் பாடலர்கிய தேவாரங்களை இடைவிடாது ஓதுவதிலும் காலம் கழித்தவர், கண்ணப்பர், கணம்புல்லர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், சேரமான், முதலாயினோரைத் தம்பதிகத்துள் வைத்துப் புகழ்ந்து பாராட்டியுள்ளவர்.

இவர் திருவாரூர், கோயில் என்ற இரு தலங்களுக்கும் திருவிசைப்பா பதிக்ங்கள் பாடியுள்ளார். திருவாரூர் திருப்பதிகத்துள் இரண்டு பாடல்களே உள்ளன. இப்பூந்துருத்தி நம்பிகாட நம்பி தேவாரம் பாடிய மூவர் பாடாத சாரளபாணி என்ற ஒரு பண்ணில் கோயில் பதிகம் பாடியுள்ளார்.

இவருடைய காலம் அறிய முதல் இராசாதிராசனது 32ஆம் ஆட்சியாண்டில் அமைந்து திருவையாற்றுக் கல்வெட்டில் ஓலோக மாதேவீச் வரத்து ஸ்தானமுடைய கேத்திர சிவபண்டிதர்க்காகத் திருவாராதனை செய்யும் ஆத்திரையன் நம்பிகாட நம்பி என்று காணப்படுவதால் பூந்துருத்தி நம்பிகாட நம்பியின் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகலாம். இவரது பதிகங்கள்.

**முதல் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : திருவாரூர்**

**கைக்குவான் முத்தின் சரிவளை பெய்து**
**கழுத்திலோர் தனி வடங்கட்டி**

எனத்தொடங்கும் 2 பாடல்கள்.

**இரண்டாவது பதிகம் பண் : சாரளபாணி, ஊர் : கோயில்**

**முத்து வயிரமணி மாணிக்கமாலைகண் மேல்**
**தொத்து மிளிர்வனபோல் தூண்டு விளக்கேய்ப்ப**

எனத் தொடங்கும் 10 பாடல்கள். இவர் அருளிய இரண்டு பதிகங்களிலும் 12 பாடல்களே அமைந்துள்ளன.

## 5. கண்டராதித்தர்

திருவிசைப்பா அருளிய அருளாளர்களில் ஐந்தாவதாக கண்டராதித்தர் திகழ்ந்தார். இவர் சோழநாட்டை ஆண்டவனும் தில்லைச்சிற்றம்பலத் திற்குப் பொன்னோடு வேய்ந்து புதுப்பித்வனுமான முதற்பராந்தக சோழன் என்பவரின் இரண்டாவது குமாரர் ஆவார்.

கண்டராதித்தர் சோழநாட்டைத் திறம்பட ஆண்டவர் சிறந்த சிவபக்தர். மூவர் தேவாரப் பாடலில் மிக்க பற்றுடையவர் இவரைச் சிவஞான கண்டராதித்தர் என ஒரு கல்வெட்டு கூறுகிறது கண்டராதித்தர் தில்லைப் பதியில் எழுந்தருளிய கூத்தபிரானிடத்தும் திருவாரூர்த் தியாகேசப் பெருமானிடத்தும் பெரிதும் ஈடுபாடுடைவர். செந்தமிழ் புலமை வாய்ந்தவர். பல சிவாலயத் திருப்பணிகளைப் புரிந்தவர். பிறச் சமயத்தினரையும் நன்கு மதித்து அவர்கள் பால் அன்புடன் ஒழுகியவர்.

திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே கொள்ளிடத்திற்கு வடகீழ்ப்பகுதியில் கீழ்மழநாட்டின் தலைநகரான திருமழபாடிக்கு மேற்கே ஒன்றரை மைல் தொலைவில் கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் என்ற ஊர் ஒன்று இவர் பெயரால் அமைக்கப்பட்டுள்ளது. தற்போது இவ்வூர் சண்டராச்சியம் என்று வழங்குகிறது. கண்டராதித்தான் மனைவியார் மழவர்குலத்துத் தோன்றிய செம்பியன் மாதேவியார் ஆவார்.

கண்டராதித்தர் திருச்சிற்றம்பலமுடையாரைப் பற்றி பாடியதாகக் கிடைத்த திருவிசைப்பா திருப்பதிகம் ஒன்றேயாம். அப்பதிகத்தின் எட்டாவது பாடலில் கண்டராதித்தர். தம் முன்னோரின் சிறப்புகளையும் இறுதியுள் திருக்கடைக்காப்புச் செய்யுளில் தம்மைக் கோழிவேந்தன் எனவும் தஞ்சையர்கோன் எனவும் கூறியிருப்பது அறியத்தக்கதாகும். இவர் காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும்.

**கண்டராதித்தர் அருளிய திருப்பதிகம்**
**பண் : பஞ்சமம், ஊர் கோயில் (தில்லை)**
**மின்னாருருவம் மேல் விளங்க**
**வெண் கொடிமா ளிகைசூழப்**

எனத் தொடங்கும் 10 பாடல்கள். கண்டராதித்தர் அருளிய திருப்பதிகமாகும்.

## 5. வேணாட்டடிகள்

இவர் திருவிசைப்பா அருளிய அருளாளர்களில் ஆறாவதாக திகழ்பவர். வேணாடு என்பது கொடுந் தமிழ்நாடு பன்னிரெண்டனுள் ஒன்று. அது கேரள நாடாகிய சேரநாட்டிற்கும் தென்பாண்டி நாட்டிற்கும் நடுவே திகழும் தென்திருவாங்கருக்கு அண்மையில் உள்ளது.

வேணாடாகிய கொடுந்தமிழ் நாட்டில் சிவபக்தியில் முதிர்ந்த சிவஞானி ஒருவர் தோன்றினார். அவரது இயற்பெயர் இன்னது என்று விளங்கவில்லை. பிறந்த நாட்டைக் குறிக்க அவருக்கு வேணாட்டடிகள் என வழங்கலாயிற்று. அடிகள் என்ற பெயர் துறவி என்பதைக் காட்டும். வேணாட்டடிகளை அந்நாட்டு அரசர் குலத்தில் வந்த துறவி என்பர்.

இவர் சிவபக்தியின் மேலீட்டினால் தென்னாட்டிலுள்ள பல சிவத் தலங்களை அடைந்து சிவபெருமானை வாயார வாழ்த்தி வணங்கி துதித்து வந்தவர். வேணாட்டடிகள் பாடிய திருவிசைப்பா பதிகம் ஒன்றே உள்ளது. அது கோயில் என்னும் சிதம்பரத்தைப் பற்றியது. இவர் உலகானுபவம் மிகுதியும் உடையவர் என்பது இவரது பாடல் களால் அறியக் கிடைக்கின்றது. இவரைப் பற்றிய பிறசெய்தி காலம் முதலியன அறிதற்கில்லை.

வேணாட்டடிகள் இயற்றிய பதிகத்தின் முதல் பாடலின் இரண்டு வரிசை காண்போம்.

**பண் : புறநீர்மை, ஊர் : கோயில் (சிதம்பரம்)**

**தச்சான செய்திடினும்**
**பொறுப்பரன்றே ஆளுகப்பார்**

எனத் தொடங்கும் 10 பாடல்கள். மட்டுமே இவரால் அருளச் செய்தவையாகும்.

## 7. திருவாலியமுதனார்

இவர் திருவிசைப்பா இயற்றியவர்களில் ஏழாவதாக திகழ்பவர் திருவாலியமுதனார் ஆவார். இவர் திருமயிலையில் வைணவ அந்தணர் குடும்பத்தில் தோன்றியவர் சோழநாட்டில் சீர்காழிப் பகுதிக்குக்கிழக்கே உள்ளது ஆலிநாடு. அதன் தலைமை ஊர் திருவாலி என்பது. இங்குத் திருக்கோயில் கொண்டுள்ள திருமாலுக்கு அமுதனார் என்பது பெயர் ஆகும்.

இவரது பெற்றோர்கள் திருவாலியமுதனாரிடம் மிகுந்த பக்தி பூண்டவர்கள் அதனால் தம் புதல்வர்க்குத் திருவாலியமுதனார் என்ற பெயரையே இட்டு வழங்கினர். வைணவ அந்தணர் குடியில் தோன்றிய இவர் சிவபக்தியில் ஈடுபட்டுச் சைவ அடியாராக மாறினார். தில்லை நடராஜப் பெருமானைத்தம் குலத் தெய்வமாகக் கொண்டு அடியார் பக்தி, சிவபக்தி முதலியவற்றில் சிறந்து விளங்கினார்.

இவர் பெரும்பாலும் தில்லைப் பதியிலேயே வசித்து வந்தார் திருவாலியமுதனார் தம்மை மயிலையர் மன்னன் என்றும், அந்தணன் என்றும் தாம் பாடியருளிய திருவிசைப்பா இரண்டாம் பதிகத் திருக்கடைக்காப்பிலே வரை செய்மாமதில் மயிலையர் மன்னவன் மறைவல் திருவாலி எனவும் கூறிக் கொள்கின்றார். அமுதனார் தம் ஊராகிய திருமயிலையைத்தாம் பாடியருளிய திருவிசைப்பா நான்காம் பதிகத் திருக்கடைகாப்பிலே, அறைசெந்நெல்வான் கரும்பின் அணி யாலைகள் சூழ்மயிலை என்று கூறுவதால், செந்நெல் கரும்பு விளையும் மருத நிலத்துள்ள மயிலாடுதுறை அமுதனார் பிறந்தவூர் என்பர்.

திருவாலியமுதனார் பாடியவனாகக் கிடைத்துள்ள திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கு ஆகும். அவை யாவும் கோயில் என்னும் சிதம்பரத் தலத்தைப் பற்றியனவே ஆகும். இவருடைய காலம் அறிய இவர் பாடியருளிய திருவிசைப்பா மூன்றாம் பதிகத்தில் 5ஆம் பாடலில் எடுத்த பாதம் மழலைச் சிலம்பு என்ற தொடர்கள் முதலாம் இராசராசனால் தஞ்சைப் பெரியகோயில் கைங்கரியங்களுக்காக நியமிக்கப் பெற்ற தளிச்சேரிப் பெண்கள் சிலருக்குப் பெயராக இருந்ததை ஒரு கல்வெட்டுக் குறிப்பிடுவதால் திருவாலியமுதனார் காலம் முதலாம் இராசராசசோழன் காலத்திற்கு முன்னர் என்பது அறியப்படுகிறது.

**இவர் இயற்றியுள்ள பதிகங்கள் நான்கு .**

**முதல் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : கோயில்**

மையல்மாதொரு கூறன்மால்விடை
ஏறிமான்மறி யேந்தியதடங்

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**இரண்டாம் பதிகம் பண் : நட்டராகம், ஊர் : கோயில்**

பவளமால் வரையைப் பனிபடர்ந்
தனையதோர் படரொளிதரு திருநீறும்

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

**மூன்றாம் பதிகம் பண் : இந்தளம், ஊர் : கோயில்**

அல்லாய்ப் பகலாய் அருவாய்
உருவாய் ஆரா அமுதமாய்க்

எனத் தொடங்கும் 11 பாடல்கள்

**நான்காம் பதிகம் பண் : பஞ்சம், ஊர் : கோயில்**

கோல மலர்நெடுங்கட்
கொவ்வைவாய்க் கொடி ஏரிடையீர்

எனத் தொடங்கும் 10 பாடல்கள்.

**8. புருடோத்தம நம்பி**

திருவிசைப்பாவில் அடுத்து எட்டாவதாக திகழ்பவர் புருடோத்தம நம்பி ஆவார். புருடோத்தமர் என்பது திருமால் பெயர்களில் ஒன்றாகும். இவர் தம்மை மாசிலா மறைபல ஓதுநாவன் வண்புருடோத்தமன் என்று கூறிக்கொள்வதால், இவர் வைணவ அந்தணர் குலத்திலே தோன்றியவர் என்பது தெரிகிறது. இவர் வைணவ குலத்தில் தோன்றிப் பின்னர்ச் சிவபத்தியின் முதிர்ச்சியினால் சைவ சமயத்தை அடைந்தார். நம்பி என்பது சிறப்புப் பெயர். புருடோத்தம நம்பி கல்வி கேள்விகளில் சிறந்து, தில்லையில் எழுந்தருளிய நடராசப் பெருமானை வழிப்பட்டுக் கொண்டு பெரும்பாலும் சிதம்பரத்திலேயே வசித்து வந்தவர் என்பர்.

இவரது காலம் முதலிய பிற செய்தி அறிவதற்கு ஒன்றும் இல்லை. புருடோத்தம நம்பி பாடியனவாகக் கிடைத்துள்ள திருவிசைப்பாப் பதிகங்கள் இரண்டே ஆகும். இவை கோயில் என்னும் சிதம்பரத்தைப் பற்றியதாகும்.

**இவர் பாடிய பதிகங்கள் இரண்டு**

**முதல் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : கோயில்**

வாரணி நறுமலர் வண்டு கிண்டு
பஞ்சமம் செண்பக மாலை மாலை

எனத் தொடங்கும் 11 பாடல்கள்.

**இரண்டாம் பதிகம் பண் : பஞ்சமம், ஊர் : கோயில்**

வானவர்கள் வேண்ட வளர்நஞ்சை உண்டார்தாம்
ஊனமிலா என்கை ஒளிவளைகள் கொள்வாரோ?

எனத் தொடங்கும் 10 பாடல்கள். புருடோத்தம நம்பி அவர்களால் இயற்றப்பட்டவையாகும்.

**9. சேதிராயர்**

அடுத்து ஒன்பதாவதாக திகழ்பவர் சேதிராயர் ஆவார். இவர் சேதிநாட்டை ஆண்ட குறுநில மன்னர். சேதியர் ஒருவகை மரபினர். சேதியர் ஆண்டநாடு சேதிநாடு இது தென்னாற்காடு மாவட்டத்தின் வடமேற்கிலுள்ள நடு நாட்டுள் ஒரு சிறுபகுதி. சேத நாடு மலைய மானாடு எனவும் வழங்கப்பெறும். சேதி நாட்டுக் குறுநில மன்னர் சேதிராயன், மலையகுலராசன் என்னும் பட்டங்களை உடையவர்கள். சேதி நாட்டின் தலைநகரம் திருக்கோவிலூர், கிளியூர் என்பன. கிளியூரைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டவரே சேதிராயர் ஆவார்.

திருவிசைப்பாடப் பாடிய சேதிராயர் தம்மை ஏயுமாறெழிற்சேதியர் கோன் என்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகளை அபிமான புத்திரராக வளர்த்த நரசிங்க முனையரையர் வழியில் வந்தவர் இச்சேதிராயர் என்றும் கூறுவர். சேதிராயர் தம் முன்னோர்களைப் போலவே அடியார் பக்தி, சிவபக்தி இவற்றில் சிறப்புற்றறவராய்ப் பல தலங்களையும் தரிசித்து வழிபட்டவர் ஆவார். இவரைப் பற்றிய பிற செய்திகள் ஒன்றும் அறிதற்குக் கூடவில்லை. இச்சேதிராயர் பாடியதாக உள்ள திருவிசைப்பதிகம் ஒன்றே ஆகும். அப்பதிகம் கோயில் என்னும் சிதம்பரத்தைப் பற்றியதாகும்.

**சேதிராயர் அருளிய பதிகம் ஒன்று**
**பண் : பஞ்சமம், ஊர் : கோயில்**
**சேலுமாம் வ்யல் தில்லையுளீர்! உமைச்**
**சால நாள் அயன் சார்வதி னால் இவள்**

எனத் தொடங்கும் பத்து பாடல்கள் சேதிராயர் அவர்களால் இயற்றப் பட்டவையாகும்.

திருவிசைப்பா அருளிய ஒன்பது நாயன்மார்களும், அவர்கள் இயற்றிய 29 பதிகங்களும், மொத்த பாடல்கள் 310-ம், மற்றும் அவர் களது வாழ்க்கை வரலாற்றையும் அவர்களது பக்தி மார்க்கத்தையும், இசைத் தொண்டையும் இக்கட்டுரை மூலம் விளக்கமாகவும் தெளிவாகவும் கூறியுள்ளேன்.

# 67. திருமந்திரத்தில் சைவ சித்தாந்தம்

புலவர் வெ. பழனியாண்டி, பனப்பாக்கம்.

தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலான தமிழ் நூல்களை ஆய்ந்து காணுமிடத்து காணும் உலகத்தைப் பற்றியும், எண்ணிறந்த உயிர்கள் பற்றியும் அங்கிங்கெனாதபடி எங்கும் ஒளிச் சுடராய் ஆனந்தப் பூர்த்தியாகி நின்று உலக உயிர்களை இயக்கி அருள்கின்ற கடவுளைப் பற்றியும் உலகம், உயிர், கடவுள் ஆகிய முப்பொருள் உண்மைகளை உணர்ந்த மக்கள் தமக்கென வகுத்துக் கொள்ளும் நல்லொழுக்க நெறியாகிய வாழ்க்கை பற்றியும் அறிந்து கடைப்பிடிப்பதற்குரிய உண்மைகள் விரித்துக் கூறப்பட்டிருத்தலைக் காணலாம்.

இறைவன் எங்கும் நிறைந்திருப்பினும் உயிர்கள் அவனை அறியமாட்டாமல் பொறி புலன்களுடன் இயைந்து மயங்கியே நிற்கின்றன. சூரியன் பேரொளி பரப்பினாலும் பிறவிக் குருடர்களால் அதனை ஒரு சிறிதும் காணமுடிவதில்லை அல்லவா? அதுபோன்றே உயிர்களும் மலங்களின் மயக்கத்தால் இறையை அறிய முடிவதில்லை. சிவஞான சித்தியார்.

எங்கும் நீர்! நீரேயாயினும் பருகுவதற்கு ஒரு துளியும் இல்லை. Water, Water every where but not a drop to drink என்கிறார் காலெரெட்ஜ் என்கிற கவிஞர்.

மனித மனம் தம்முடைய நிலையில் நிறைவுறுவதில்லை. ஆம், ஆரா இயற்கை அவா மிக்கதாக உள்ளது. ஒரு பொருளைப் பெறாது வருந்துகின்ற மனம் அப்பொருள் பெற்ற வழியும் நிறைவு பெறாமல் ஏதேனும் ஒரு வகையில் துன்புறுகின்றது என்பதுதான் உண்மை.

இதனை பெர்னார்ட்ஷா : There are two tragedies in life; One is not to get our hearts desire; the other is to get it என்கிறார்.

இத்தகு துன்பங்களைப் போக்கிக்கொள்ளவே சமய உணர்வும் கடவுள் நம்பிக்கையும் பெரிதும் துணைபுரிகின்றன. இறைவன் பேரருள் பெற அடியார் கூட்டுறவு தேவை என்பதை சைவ சித்தாந்தம் வற்புறுத்து கின்றது.

''அடியவருக்கு அன்பிலார் ஈசனுக்கு அன்பிலார்'' என்கிறது சிவஞான சித்தியார்.

உயிருக்கு உடலைக் கொடுத்து, உலகத்தை அனுபவிக்கச் செய்பவன் யார்? என்பதைப் பற்றி ஆராய்ந்து முடிவு காண்பன சமயங்கள் எனப்படும்.

உலகில் காணப்படும் எல்லாப் பொருள்களையும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களாகப் பாகுபடுத்தி மேற்குறித்த கேள்விக்கு விடை காண்பதே சைவ சித்தாந்தம்.

வேதாகமங்களின் அடிப்படையில் அமைந்தது சைவசித்தாந்த நெறி. இந்த வகையில் சைவ சித்தாந்தம் என்ற சொல்லை தமிழில் முதன் முதலில் குறிப்பிட்டு விளக்கம் தந்தவர் திருமூலராவார். சிவாகமக் கருத்துக்கள் திருமந்திரத்தில் ஆங்காங்கு பரவி நிரல்படா நிலையில் இருந்தாலும் திருமூலர் ஒன்பது தந்திரங்களின் தலைப்பின் கீழ் தந்துள்ளமை அறிய முடிகின்றது. சிவஞான போதம் தோன்றிய பிறகு சித்தாந்தக் கருத்துக்கள் இறை இயல், உயிர் இயல், தளையியல், சாதன இயல், பயன் இயல் என முறைப்பட்டன. இவைகளை நோக்க சைவ சித்தாந்த கருத்துகளுக்கு நாற்றங்கள் தமிழகமே என்ற உண்மை புலப்படும்.

## இறைத்தன்மை

சிவபெருமான் ஒருவரே கடவுள் என்கிற உறுதிப்பாட்டை திருமூலர் வெளிப்படுத்தும் முறையே தனித்தன்மையானதாகும். ஒன்றவன் தானே; எனத்தொடங்கி அத்தகையோன் அருளொடு இரண்டாவான் என்கிறார். அரன், அரி, அயனாகி மூன்றாகி நிற்கிறான் என்றும், உலகிற்கு உயிராகவும், உலக வடிவாயும், உலகக் காரணன் ஆகவும், உலக அதீதனாகவும் இருக்கின்றான் என்றும் ஐம்பொறிகளை வென்று, ஆறு ஆதாரம் அவற்றோடு அவற்றுக்கும் மேற்பட்ட பெருவெளியிலிருப்பவன் என்றும், பூதங்கள் ஐந்துடன் சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டு மூர்த்தியாகி அவற்றுள் கலந்தும் இருப்பவன் என்றும் சிவபெருமானின் அளவிலாத ஆற்றலை உணர்த்துகிறார் திருமூலர்.

இவற்றோடு பாயிரத்தில் சிவனின் பெருமைகளை அற்புதமாகக் கூறியுள்ளார்.

சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை, என்பதோடு ஒப்பாரும் இல்லை என்கிறார். அதுமட்டுமா? அவனன்றி செய்யும் அருந்தவம் இல்லை, என்கிறார். இது சிவஞான சித்தியாரில்,

''அரன்தன் பாதம் மறந்து செய்
அறங்கள் எல்லாம் வீண்செயல்''

எனக் கூறப்பட்டுள்ளது.

**"என்னால் தொழப்படும் எம் இறை, மற்ற**
**தன்னால் தொழப்படுவாரில்லை"**

என்று அவனை யாவரும் தொழுவர், அவனால் தொழப்படுவாரில்லை எனத் தெளிந்துரைக்கும் உறுதிப்பாடு அவர் பாடலில் மிளிர்வதைக் காணலாம். இதனை மாணிக்கவாசகர், **சோர்ந்தறியாக் கையான்** என்கிறார்.

இறைவன் அருட்சக்தியாகவும் உள்ளான் என்பதை, தானே மழை பொழிதையலுமாய் நிற்கும், என்பதால் அறியலாம். சிவனை வழிபடச் செல்வம் பெருகும் என்பது சிவாகமக் கருத்து. குபேரனுக்கு சங்க நிதி பதும நிதி இரண்டும் தந்து வட திசையனுப்பியவன் சிவனல்லவா? இதனைத் திருமூலர்

**"அதிபதி செய்து அளகை வேந்தனை, நிதிபதி செய்தான்"**

என்கிறார். பிறப்பிறப்பில்லான், அருள் வடிவானவன் அவன் திருவடி தொழுதால் எல்லா இன்பங்களையும் பெறலாம்.

**பிறப்பிலி பிஞ்சகன் பேரருளான்**
**இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்**

என்பது அவர் அனுபவம்.

தந்தையாய், அமுதாய் இருக்கும் சிவன் ஒப்பற்றவன், எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பவன், அவனை வணங்கினால் தொழு முறையிலே அருள் பெறலாம் என்பதை,

**"அப்பனை, நந்தியை, ஆரா அமுதினை,**
**ஒப்பிலி வள்ளலை, ஊழி முதல்வனை,**
**............ ஏத்தினால் ............ ஈசன் அருள் பெறலாம்"**

என்கிறார் திருமூலர்.

சிவபெருமான் பெருமையை எவரும் அறிய இயலாது, அவன் பேரொளிப் பிழம்பு; மூலம் முடிவற்றவன் என்பதை, **ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை** என்கிறார்.

முதல் தந்திரத்தில் உண்மை அன்பு செய்பவர்க்கே அருளைப் பொழிவான் சிவபெருமான். தவறு செய்பவர்களும் அன்பு செய்தார் களானால் தவற்றினைக் கருதாமல் அவர்களுக்கு இப்பிறப்பிலேயே முத்தி தருவான். இதனை

**இன்பப் பிறவிக்கு இயல்வது செய்தவன் .........**
**முன்பு இப்பிறவி முடிவது தானே.** - 281

என்கிறார்.

கண் ஒன்றே பிற பொருளைக் காட்டும். தன்னைக் காணாதது போல இறைவன் தன்னைக் காட்டாமல் உயிர்கட்குப் பிறவற்றைக் காட்டி நிற்பதுதான் மறைப்பாற்றல் ஆகும்.

**கண் ஒன்றுதான் பல காணும் தனைக் காணா**
**அண்ணலும் அவ்வண்ணம் ஆகின்றானே!** - 440

என்கிறார் திருமூலர்.

குயவன் மண்ணைக் கொண்டு சக்கரத்தின் உதவியால் பாண்டம் செய்வது போல, இறைவன் மாயையைக் கொண்டு அருளின் உதவியால் உலகையும், உடலையும் படைக்கின்றான்.

மனித உடல் சிவலிங்கமாகும். இதனை திருமூலர், **மானுடர் யாக்கை வடிவு சிவலிங்கம்** - 1726 என்கிறார்.

சதாசிவம் போக சிவமாகும். இது உலகெங்கும் நிறைந்துள்ளது. ஆம், சத்தியும், சிவமும் அனைத்துமாய்க் கலந்துள்ள நிலையை உணர்த்துவது சதாசிவமாகும். இதுவே தத்துவ நிலை, இந்த தத்துவங்கள் அருவமாகும்.

இந்த தத்துவங்கள் உலகில் விரிந்து பரந்து நிற்குங்கால் உருவமாகும். இதனைத் திருமூலர்,

**தத்துவ மாவது அருவம், சராசரம், தத்துவ மாவது உருவம்**
- 1738

என்கிறார்.

சிவபெருமான் பிரணவ வடிவில் சிவலிங்கமாக நிற்கிறான். அவன் நினைப்பவர் மனதை கோயிலாக் கொண்டுளான் என்பது,

**பராபரன் எந்தை பனிமதி சூடி**
**தராபரன் தன்னடியார் மனக்கோயில் சிராபரன்**

என்று திருமூலர் கூற்றால் விளங்கும்.

சிவபெருமான் ஞாயிறு திங்கள் தீ என்னும் பேரொளிக்கும் மேலான சோதி, பத்துத் திசைகளிலும் நீக்க மற நிற்கின்றான் என்கின்றது திருமந்திரம். அதுமட்டுமா? **இருளார்ந்த கண்டமும், ஏந்தும் மழுவும், சுருளார்ந்த செஞ்சடைச் சோதியும்,** அச்சடையில் **பிறையும் கொண்ட அருளார்ந்த சிவபெருமானையே தெளிந்து வழிபட வேண்டுமென் கின்றார்.** இவ்வாறு திருமந்திர நூல் சிவ மணங் கமழ்கின்றது என்றால் மிகையாகாது.

**உயிர் தன்மை**

உயிர்களை உடம்பினுள் ஆக்கியவன் சிவன்தான் என்பதை உணர வேண்டும். உயிர்கள் முத்திறத்தால் பத்து வகை என்கிறார் திருமூலர். 493.

ஏழாந்தந்திரத்தில் உயிரைப் பற்றிக் கூறும் கருத்து வியக்கத் தக்கதாகும். உயிர் சிவனைப் பிரிந்து நிற்பதாக எண்ணக் கூடாது. பிரிந்து நின்றால் வீடுபேறு கிடைக்காது. ஒன்றில் ஒன்று பொருந்தி நிற்கின்றன. சிவம் என்றும் தன் நிலையில் தனிப் பரம் பொருளாய் நிற்கும். மற்றொன்று அறியாமையோடு நிற்பது அதாவது அது உயிர். இதனை,

"அன்னம் இரண்டுள ஆற்றங்கரையில்......." - 2003

என்று திருமூலர் அன்னங்கள் உவமை மூலம் விளக்கும் திறத்தை அறியலாம். மேலும், அணுவுக்குள் அணுவாகி இறை நிற்கும் என்பது ஒவ்வொரு உயிரினுள்ளும் சிவம் கலந்துள்ளதையே குறிக்கும். அணு என்பது உயிர். இதனைத் திருமூலர்,

அணுவுள் அவனும் அவனுள் அணுவும்
கணுவுற நின்ற கலப்பு - 2010

என்கிறார்.

சீவன் சிவனை உணரவேண்டும். அதற்கு உயிர்களின் முனைப்பு அடங்க வேண்டும். முனைப்பு உள்ளவரை சிவனை ஒருபோதம் சீவன் அறிய இயலாது என்கிறார். அது மட்டுமா? முப்பத்தாறு தத்துவங் களையும் சிவபெருமானே தனக்கு அறிவுறுத்தியதாக உணர்கிறார் திருமூலர். அவற்றை அறிந்துணர்ந்து தெளிந்தால் மட்டுமே சிவன் தத்துவங்கடந்த பொருளாய் நின்று காட்சியளிப்பான் என்று உறுதிபடக் கூறுகிறார்.

ஐம்புலன்களை யானைகளாகவும், உயிரை பாகனாகவும் கூறுகிறார். சிங்கங்களாகக் கூறி அவற்றின் நகம், பற்களைப் பிடுங்க வேண்டும் என்கிறார். குதிரையாக உருவகித்து உயிரை வாதுலனாகக் கூறுகிறார். பறவைகளாகப் புலன்களைக் கூறி பறந்து சென்று உலக இன்பங்களைத் தேடுவதாக விளக்கம் தருகிறார். பொறிகளை மீன்களாகவும், இறைவனை வலைஞனாகவும், வலையைத் திருவருளாகவும் உடலைக் குளமாகவும் உவமித்துக் கூறுகிறார் - 2031.

மனம் அடங்கினால் சடமாய்விடும் என்பர். எனவே அடங்கா மனத்தை இறைப்பற்றில் இயங்கச் செய்தல் வேண்டும். அறிவைக் கொண்டு பொறிகளை நல்வழிப்படுத்தல் வேண்டும். உள்ளத்தை ஒடுக்கினால் உத்தமனை அறியலாம். உடலும், உலகமும் நீர் மேல் எழுத்தாகும். எனவே புலன்களால் உறும் சிற்றின்பத்தைவிட்டு புனிதனாம் சிவபெருமானைப் போற்ற வேண்டும். இதனை - "சென்றன நாழிகை நாள்கள் சில பல......" - 2040 என்றருளுகின்றார்.

உயிரின் நிலைகளை இரண்டாம் தந்திரத்தில் பலவாறாகப் பேசும் அவர் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களைப் பொருந்திப் பிறக்கின்றன, என்கிற சித்தாந்தக் கருத்தினைக் கூறுகிறார் 409.

**தளை**

திருமூலர் ஆணவம், கன்மம், மாயை என்னும் தளை மூன்றனுள் மாயையின் தோற்றம் இரண்டாம் தந்திரத்தில் **படைத்தல்** என்னும் தலைப்பில் விளக்குகிறார்.

நாத தத்துவத்திலிருந்து விந்தும், அந்த ஞான விந்துக்கள் ஞானமே ஆனபோது சிவமும், கிரியையானபோது சத்தியும், சுத்த வித்தையிலிருந்து பிரணவமும் தோன்றுகின்றன என்கிற தத்துவத்தைத் திருமூலர் 382-ம் பாடலில் கூறுகிறார்.

சிவம் மண்ணின் தன்மையாய் அனைத்தையும் தாங்கி நிற்கும் சத்தி நீரின் தன்மையாய் மண்ணில் கலந்து நிற்கும். உயிர்கள் ஆணவ மலத்தினால் மறைக்கப்பட்டிருக்கும். அம்மறைப்பை நீக்கும் பொருட்டாக தனு கரண புவன போகங்களைப் படைத்தான் என்கிறார் திருமூலர்.

முற்பிறப்பில் உயிர்களை விட்டுப் பிரிந்துபோன இருபத்தைந்து தத்துவங்களைக் கூட்டி பருவுடல் வழங்குகின்றான் என்பதை,

**ஆக்குகின்றான் முன்பிரிந்த இருபத்தஞ்சு**
**ஆக்குகின்றான் அவன் ஆதியாம்எம் ஆருயிர்** - 451

என்றருளிச் செய்கின்றார்.

தத்துவங்களை தந்தையின் உடலில் பொருந்தச் செய்து விந்து வாகத் தாயின் கருவையடைய வைத்துப் பத்துத் திங்கள் அங்கிருக்கவும் செய்கின்றான் என்பதை,

**பொறைநின்ற இன்னுயிர் போந்துறநாடி**
**பறிகின்ற பத்தெனும் பாரங்செய்தானே** - 464

என்கிறார். அதுவே எண்சான் அளவாக வளரச் செய்பவனும் அவனே என்கிறார்.

குழந்தை பிறந்ததும் இறைவன் திருவருள் மறைப்பாற்றலாம் செவிலித் தாயின் மடியில் வளர்கின்றது என்பதையும் விளக்குகிறார். எல்லா உயிர் களும் இவ்வாறே தோற்றம் பெறச் செய்கின்றான் இறைவன். உலகம் ஒடுங்கும்போது உடம்பும் ஒடுங்கி இறுதியில் மாயையில் ஒடுங்கும்.

இவ்வாறு பெற்ற உடம்பைப் பேணிக் காக்க அறிவுறுத்துகிறார் திருமூலர். ஆம் உடம்பார் அழிந்தால் உயிரார் அழிவர் என்கிறார். அதுமட்டுமா? ஞானத்தையும் சேர முடியாது என்பது அவர் கருத்து. உடம்பை வளர்த்தே உயிர் வளர்க்க வேண்டும் (724) என்று கூறும் அவர். அவ்வுடம்பில் தான் உத்தமனாம் சிவபெருமான் கோயில் கொண்டுள்ளான் என்று தெளிவாகக் கூறுகிறார்.

**உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்**
**உடம்பினுக்குள்ளே உள்பொருள் கண்டேன்,**
**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று**
**உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே! - 725**

என்கிறார்.

இந்த உடலோ சில வழி முறைகளையும் தெளிவாகக் கூறியிருக்கும் நிலை போற்றிப் பின்பற்றத் தக்கதாகும். மாலையில் யோகாசனம் செய்ய கபநோயும், நண்பகலில் செய்தால் வாதநோயும், விடியற் காலையில் செய்தால் பித்தமும் நீங்கும் என்று கூறும் அவர் நரை, திரை கூட நாசமாகும் என்கிறார். 727.

எட்டாந் தந்திரத்தில் பஞ்ச பேதத்தைக் கூறுகிறார் திருமூலர். அதில் தளை பற்றிய செய்திகளும் விளக்கப்படுகின்றன.

காயப் பையான இந்த உடலில் மாயப் பையான சூக்கும உடல் உள்ளது என்பதை நாம் அறியக் கூறுகிறார். அது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், மனம், புத்தி, அகங்காரம் எனும் எட்டால் ஆனது (2121) இந்த எட்டோடு உயிர் ஒட்டியதால் விளைந்தது தான் பாசம், பாச ஞானமாகும்.

உயிர்களுக்குப் பாச ஞானம் கூட்டி வினைகளை நுகருமாறு செய்து பந்தத்திலிருந்து நீங்குமாறு இறைவன் செய்தருள்கின்றான் என்பது தத்துவம்.

இந்த உடல் ஒன்பது தாதுக்களால் ஆனது என்கிறார் திருமூலர். 2125. பாம்பு சட்டையை உரிப்பது போலவும், பறவை முட்டையில் பிறப்பது போலவும் உயிரிகள் வேற்றுடலை எடுக்கும் எடுத்த உடலுடன் வினைகளைச் செய்து உயிர் தூல உடல்விட்டு சூக்கும உடலோடு மறுமையில் சுவர்கம், நரகம், வேற்றுலகம் முதலியவற்றில் பிறந்து வினைப்பயன் அனுபவிக்கும் செயல் யோகிகள் கூடுவிட்டு கூடு பாயும் பரகாய பிரவேசம் செய்வது போன்றது என்கிறார் திருமூலர்.

**....... பரகாய யோகி போல், பிண்டம் எடுக்கும் பிறப்பு இறப்பு எய்தியே - 2133**

ஞானத்தில் சரியை யுடையார்க்கு சிவ உடல், கிரியை உடையார்க்கு அருள் உடல், யோகம், உடையார்க்கு விந்து மற்றும் நாதமே உடல், ஞானத்தில் ஞானம் உடையார்க்கு மும்மலம் நீங்கி முத்திப்பேறு கிட்டி சிவ சரீரமேயாகும்.

## ஐந்தவைத்தைகள்

(நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்படங்கள்) இவைகளைப் பற்றி கூறும் திருமூலர், உயிர்ப்படக்க நிலையில் (துரியாதீத நிலை)

பேச இயலாத எழுத்தாகிய மகாரத்தோடு பேசும் எழுத்தாகிய அகார உகாரங்கள் இயையும், அந்த நிலையில் ஆன்மா ஒருமையுள் ஆமை போல் இந்திரியம் ஐந்தையும் அடக்கி ஓம் என்னும் பிரவை வடிவேயாய் யான், எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் அற்று விளங்கும். அதனை யாம் அறியோம் என்கிறார் - 2158

இப்படிப் பலப் பாடல்களில் அவத்தைகளைப் பற்றி விளக்கிச் செல்கிறார் திருமூலர்.

ஆன்மா தனக்குத் தானே நண்பனும் ஆவான், பகைவனும் ஆவான். இம்மை மறுமை வினைப்பயன் முதலானவற்றைத் தெளிந் திருப்பவன் தலைவனாவான் இவ்வுண்மையைத் திருமூலர்

**தானே தனக்குப் பகைவனும் நட்டானும்**
**தானே தனக்கு மறுமையும் இம்மையும்**
**தானே தான் செய்த வினைப் பயன் துய்ப்பானும்**
**தானே தனக்குத் தலைவனும் ஆமே!** - 2228

**மலங்கள்**

ஆதி மலம் 4, அநாதி மலம் 1 ஆக உயிர்க்குள் மலங்கள் ஐந்து, 2236.

**சகலர்**

மூவகையான மலங்களை உடையவர்கள் பிரமன், மால், தேவர்கள், நரகர்கள் முதலாகப் புழு ஈறாகிய அனைவரும் சகலரே. 2244.

ஆணவம், கன்மம், மாயை என உயிர்கட்குள்ள மலங்கள் 3. திருமூலரின் சிவாகமக் கருத்துகளை அருள் நந்தி சிவாச்சாரியார் சிவஞான சித்தியாரில் மேற்கொண்டுள்ளார் என்பது திருமூலர் பாடல் 2247 "அறிவின்றி அமுத்தன் ...............", என்றபாடலும், சிவஞான சித்தியார் பாடல் "அறிவிலன் அமூர்த்தன் ........" - 228 என்கிற பாடலும் ஒத்திருப்பதைக் காணலாம்.

உயிர் இருவினை ஒப்பும், மலபரிபாகமும் சத்திநி பாதமும் மேவி குரு முகமாக அருளோடு கூடி ஆணவ மலம் நீங்கிப் பிறவாப் பெருநிலை அடைவதே சுத்தாவத்தை நிலை ஆகும் என்பதை திருமூலர்,

**இருவினை நேரொப்பில் ..........** 1527, 2262

ஆகிய பாடல்கள் மூலம் அருளியுள்ளார்.

பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்கள், பொன் என்னும் எண்ணமே உண்டாகாதவாறு மறைந்து இருக்கும் அதுபோல் ஆன்மாவைத் தனு, கரணங்கள் மறைத்துள்ளன. தன்னை உணரும் நிலையில் ஆன்மா

தனு, கரணங்கள் தன்னின் வேறானவை. மரத்தால் செய்யப்பட்ட யானைப் பதுமை, யானை உருவ அழகைப் பார்க்கும் போது மரம் தோன்றாது, மரத்தைப் பார்க்கும் போது யானை உருவம் தோன்றாது அதுபோல ஆன்மா (உலகை) உணர்ந்தால் இறைவனும், இறைவனை உணர்ந்தால் உலகமும் தோன்றாது. இதனை திருமூலர்,

"மரத்தை மறைத்தது மாமத யானை, ....." - 2290

என்ற பாடல் மூலம் விளக்குகிறார்.

ஆன்மா, கேவல நிலையில் இருந்து கருவி, கரணங்களோடு கலகுங்கால் சகல நிலையைப் பெறும், சகலத்தை விட்டுப் பிரியும் போது சுத்த நிலை எய்தும் இந்த சித்தாந்த உண்மையைப் பல பாடல் களில் விளக்கியுள்ளார்.

**சாதனங்கள்**

முத்தி என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் தளைகள் மூன்றனையும் விட்டு உயிர்கள் இறைவன் திருவடியை அடைகின்ற பெருநிலையேயாகும். உயிர்கள் முத்தியாகிய பேரின்பப் பெருநிலையை அடைவதற்குரிய வழிகளைக் கூறுவதே சாத இயலாகும்.

ஒன்பது தந்திரங்களில் ஆறு தந்திரங்களில் சாதன இயல் பற்றிய செய்திகள் உள்ளன. அறம் செய்வான் திறம் பற்றிக் கூறும் நிலையில் எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொள்ள வேண்டும் 'என்னும் உண்மையை தமக்கே உரிய முறையில்,

**யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை**
**யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை** - 252

தெளிவுறுத்துகிறார்.

எல்லாராலும் செய்யக் கூடியதான ஒரு சாதனம், இறைவனுக்கு ஒரு இலையைக் கிள்ளிப்போடுவது என்கிறார்.

சிவனடியார்களுக்கு **உணவிடுதல்** ஒரு நல்ல அறம். அது செய்வது ஆணவ மலம் நீங்கும் என்கிறார். - 254

அன்புள்ளம் கொண்டவராக எப்போதும் இருத்தல் வேண்டும் என்கிறார். அன்பே சிவமாகும். இது தெரியா நிலையில் தான் மக்கள் பலர் **அன்பும் சிவமும் வேறு என்கின்றனர்** என்பதைச் சுட்டிக் கூறி, அது அறிந்த பின்னர் அன்பே சிவமாய் நிலை பெறுவர் என்கிறார். இதனை,

**அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர் .....** - 270

என்று அருளிச் செய்துள்ளார்.

சாதன இயலில் அன்பொடு உருகி உள்ளம் குழைவார்க்கன்றி சிவம் கிட்டாது என்பதைத் தெளிவாக்கும் முகத்தான் அன்பே முதற்கண் வேண்டும் என்று வற்புறுத்துகிறார். அடுத்து அன்பு செலுத்துவது பற்றிக் கூறவரும் அவர், உலகப் பொருள் மீது கொண்டுள்ள பற்றினை விட இறை மீது அதிக பற்று கொண்டு உணர்வு நிலையில் ஒன்றாய் ஒடுங்கி அன்பு செலுத்த வேண்டும் என்கிறார் - 283.

தூய கல்வியாம் மெய்ஞ்ஞானக் கல்வி கற்றவர்க்கு இறைவன் அனைத்திற்கும் துணையாவான் என்று கூறுகிறார். 297. கற்றபின் சிவபெருமானைப் பற்றி நிற்கப் பயில வேண்டும். இப்பயிற்சி பெற்றவர் பேரின்பம் பெறுவர் என்பது அவர் கூறும் எளிய அருட்டிறம் உணரும் முறையாகும்.

சிவஞானக் கேள்வி, மெய்ஞ்ஞான ஒழுக்கம் உடையவர் நீண்ட காலம் வாழ்வர். - 305. சைவ சித்தாந்தம் அறிந்தவரை மட்டுமே கற்றறிந்தவர் என்கிறார் திருமூலர். - 316. நடுவு நிலைமையாளர் ஞானிகள் ஆவர். தேவரும் ஆவர். சிவமும் ஆவர் என்கிறார். சைவம் நால்வகை நெறிகளை வகுத்துள்ளது அவை,

1. சரியை : சிவ வடிவத்தை அன்புடன் பூசிப்பது.
2. கிரியை : இறைவன் எல்லா இடங்களிலும் உள்ளதை நினைந்து வழிபடல்.
3. யோகம் : உள்ளத்தை இறைவனிடம் சேர்த்தல்.
4. ஞானம் : ஞாதிரு, ஞேயம், ஞானம் மூன்றும் வேறாக உணர்ந்து வழிபடல்.

குரு நெறியே சிறந்த நெறியாகும். அது ஞான நெறியாகும் என்கிறார் திருமூலர். - 1478. ஞான நெறிக்கு குரு, சிஷ்ய உறவு முறைதான் பொருத்தமாகும். இதுவே சன்மார்க்கம் என்கின்றது சைவம். சரியையில் சமய தீக்கையும், கிரியையில் விசேட தீக்கையும், யோகத்தில் நிருவான தீக்கையும், நிறைவில் அபிடேக தீக்கையும் பெறவேண்டும் என்கின்றது திருமந்திரம். - 1508.

தேவாரத்தில் தீக்கை பற்றி செய்தி இல்லை என்றாலும் சிவாகம கருத்துகளைச் சிறப்பாகக் கூறும் திருமந்திரம் சிவ தீக்கையின் இன்றியமையாமையைக் கூறுவதால் சைவ சித்தாந்திகள் சிவ தீக்கை பெற்று செயல்பட வேண்டுவது அவசியம் என உணரலாம். சிவபெருமானோடு இயைந்து நிற்றல். அதாவது இரண்டறக் கலத்தல் சிவானந்தமாக விளங்குதல் என்பதே சைவம் ஆகும்.

மறைப்பாற்றல் அருளாற்றலாக நின்று ஆன்மாக்களிடத்து பதித்தல் சத்தினி பாதம் எனப்படும். சத்தினி பாதம் பெற்ற ஆன்மா சிவபெருமானோடு கூடி. வீட்டின்பத்தைப் பெறுதற்குரியவனாவான்.

இருட்டறையில் உள்ள விளக்கொளி போல அறியாமையால் விளைந்த மயக்கத்தில் இருக்கும் ஆன்மா உள்ளத்தாமரையில் ஒளிப் பிழம்பாய் இருந்து சிவ சத்தி உதவுகின்றது. தீவிர சத்தினி பாதம் வாய்க்கப் பெற்றவர்க்கு திருவருளே குருவாக எழுந்தருளி உயிர்க் குணங்களைப் போக்கி உண்மை ஞானத்தை உணர்த்தும் அத்தகைய ஆன்மா குடியிருக்கும் உடலை ஒளி உடலாக விளங்கச் செய்யும் என்கிறார் திருமூலர்.

**நாதன் என் உள் புகுந்து ஊனை, விளக்கி உள் இருந்தானே!**

- 529

என்கிறார்.

சைவ சாதனத்தில் முன்னிடத்தில் வருவது திருநீறு. அதனைச் சிவபெருமான் பூசியுள்ளார். திருநீறு அணிபவர்கள் வினைகள் நீங்கும், சிவ கதி பெறுவர், உயர் குலத்தவர் ஆவர், திருவடிப்பேறு கிட்டும் என்கிறார். - 1666, 1667

சின் முத்திரை, சாதக முத்திரை, போதக முத்திரை ஆகிய இரண்டுக்கும் விளக்கம் தருகிறார் திருமூலர். சிவத்தை இதயத்தில் கண்டு அடியார் ஆகி இருளற்றும், செயலற்றும் இருப்பவரே சிவ வேடத்தவர். உயிரினுள் இறைவன் ஒளிர்கிறான் என்பதை உணர்வதே சிவ வேடம் அவரே சிவ குரு ஆவர் என்கிறார். குருட்டினை நீக்கும் குரு வினை கொள்ள வேண்டும் என்கிறார் திருமூலர். - 1680.

**சிவ பூசை செய்யும் முறை**

கோயில் வேறு, ஆலயம் வேறு. உள்ளம் என்பது கருவறை ஆகிய கோயில், உடல் கருவறையைச் சுற்றியுள்ள ஆலயம். வாய் கோபுரத்துக்கு வாசல், சிவஞானியர்களின் உள்ள ஆன்மா சிவலிங்கம் ஆகும். கள்ளத்தைப் புரியும் புலன்கள் ஐந்தும் பெரிய விளக்கு. இவ்வுண்மையை,

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்** - 1823

என்ற பாடலில் அருளியுள்ளார்.

சிவபெருமானுக்கு காலையிலும், மாலையிலும் மனத்தை மகிழ்விக்க நிவேதிக்கும் பொருள் பாடலாகிய திருமுறை உணவே சிறந்தது என்கிற அரிய தத்துவத்தைக் கூறுகிறார். 1824. அதுவே பாலுணவு ஆகும்.

பூவும், நீருங்கொண்டு அவனைப் பூசித்தால் போது அவனருளைப் பெறலாம் என்கிறார். சிவலிங்கத் திருமேனவியில் அஞ்சமும் முழுக் காட்டல் சிறப்பாகும். பழம், தேங்காய், தேன், நெய், சர்க்கரை இவையே அஞ்சமுதம் ஆகும்.

**புண்ணியம் செய்வார்க்கு பூவுண்டு நீருண்டு** - 1828

என்பது அவர் வாக்கு.

வழிபாட்டில் தொடர்ந்து அவர் மேலும் சிவ பூசையை குரு மூலம் பெறல் வேண்டும் என்கிறார். குருவையும் சிவமாகவே பூசனை செய்தல் வேண்டும் என்கிறார். சிவஞானிக்கு உணவு கொடுத்தல், சிவ தல வழிபாட்டைவிட கோடி புண்ணியம் என்கிறார். 1851. இராப்பகல் அற்ற சிவனை எந்நேரமும் வழிபடலாம் என்கிற கருத்தில்,

**இராப்பகல் அற்ற இறையடி இன்பம்** - 1858

என்கிறார்.

சிவனடியார்க்கு கொடுக்கும் ஒன்று சிவனை சென்றடையும். சிவனுக்கு ஒன்றளித்தால் அது அடியாரைச் சென்றடையா என்கிற கருத்துள்ள பாடல் இதோ,

**படமாடக் கோயில் பகவற் கொன்றீயில்**
**........... பகவற்கு அது ஆமே** -1857

மகேஸ்வர பூசை என்பது சிவன் கோயில் கட்டுவதைக் காட்டிலும் சிறந்தது -1860.

**நீறிடு அடியார் நிகழ் தேவர்கள்**

என்கிறார்.

சிவனடியாரைப் பேணும் நாட்டில் மழை வளம் சிறக்குமாம். பகையும், தீங்கும் இராதாம், 1868

## குரு

ஞானம் பெற விழையும் மாணவனுடன் இருந்து சிவனைக் காட்டும்நிலையே குரு உபதேசம் ஆகும். முப்பொருள் உண்மையறியாதார் தத்துவம் அறிதல் முழுமை பெறாது. இறை, உயிர், தளை மூன்று பொருள்களுள் இறைவனைப் போலவே உயிரும், தளையும் அநாதியே யாகும். உயிர்களும், பாசப் பொருள்களும் இறையைச் சென்றடையும் திறன் உடையன அல்ல. இறைவன் உயிர்க்கு பக்குவ நிலையில் அருளும் போது பாசம் ஆன்மாவைவிட்டு விலகிவிடும். இந்த நுட்பமான சித்தாந்தக் கருத்தைத் திருமூலர்.

**பதி பசு பாசம் ........** - 115

என்ற பாடலில் அருமையாக அருளியுள்ளார்.

நந்தி தனக்கு குருவாக வந்து உபதேசித்து பக்குவப்படுத்தியதாக திருமூலர் கூறுகிறார். குருநாதரின் திருமேனியைக் காண்பது அவர் நாமம் கூறுவது, அவர் மொழியைக் கேட்பது, தெளிவான ஞானத்தைத் தரும் என்கிறார். - 129.

சிவனே மானிட உருவில் வந்து காட்சி தந்து காட்டுவன காட்டி ஊட்டுவன ஊட்டி உண்மை உணர்த்துவதே சிவ குரு தரிசனம் ஆகும். துணி வெளுப்பான் போல இறைவன் உயிர்க்கு உதவும் நிலையை,

**பாசத்தைக் கூட்டியே கட்டுப் பறித்திட்டு,**
**நேசித்த காயம் விடுவித்து** - 1574

என்றருளுகின்றார்.

**குருவே சிவம் எனக் கூறினன் நந்தி** - 1581

எனக் கூறுகிறார்.

சைவத்தில் சாதி வேறுபாடில்லை, சிவன் ஒருவனே கடவுள், என்கிற அரிய தெளிவை உணர்த்தும் நிலையில் **ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** என்றருளிச் செய்கிறார். மாணவன் குருவை அன்பு மீதூர நினைக்கவே குருநாதரும் எதிர் நினைந்து உயர்த்துவார் என்கிற கருத்தினை,

**நினைக்கின் நினைக்கும் நினைப்பவர் தம்மை** - 2666

என்று அருளிச் செய்கிறார்.

## திருவைத்தெழுத்து

வேதாகமங்கள் அனைத்தும் ஐம்பது எழுத்துகளில் அடங்கும். அவ்வெழுத்து தோற்ற முறையை நோக்க திருவைந்தெழுத்தில் அடங்குவதை உணரலாம். அஞ்செழுத்து பிரணவ கலைகளில் திரிபு. அது திருவருள் நெறியைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும். இறைவனை அடைவதற்குரிய உயர் மறையும் அதுவே.

சிவசிவ எனப் பயில்வரின் தீவினை முழுதும் நீங்கும், ஒளி உடம்பைப் பெறுவர். சிவமாம் தன்மையடைவர். இதனை,

**சிவ சிவ என்கிலர் தீவினையாளர்,**
**சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்.** - 2715

என்கிறார்.

**சிவாய நம** என்பது சூக்கும பஞ்சாக்கரம் என்கிறார். சிவாய சிவ என்பதை முற்றுந்துறந்த நிலையில் ஓத வேண்டும் என்கிறார். இது

அதி சூக்கும பஞ்சாக்கரமாம். உலகப் பற்றுடையோர் நம சிவாய என்றே ஓதலாம். பஞ்சாக்கர வடிவோடு கூத்தன் நடனமாடும் காட்சி, பல பாடல்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

## முத்தி

குருநாதரின் திருவடியைப் பெற்ற பேற்றினை நினைந்து நன்றி உணர்வோடு வாழும் ஆன்மா தக்க காலம் வரும்போது சிவபெருமானின் திருவடியைச் சென்றடைவதே முத்தி எனப்படும். முத்தி என்பது பிறப்பை விடுதலாகும். பிறப்பைவிட்டு திருவடி பெறுதல் என்பதே முத்தியாகும். முத்தி மூவகைப்படும்.

1. பர முத்தி - பாசம்விட்டு சிவமாகவே ஆகித் திருவடியிலடங்கி நிற்றல்.
2. சீவன் முத்தி - பாசம்விட்டு சிவானுபவம் மிகுந்து சிவனாகி சீவித்து நிற்றல்.
3. அபர முத்தி - உடம்போடு சாதனத்தில் உடம்பு பற்றிய எண்ணம் சிறிதும் இன்றி இருத்தல். உடம்பு நீங்க பரமுத்தி அடைத்தல் -2473

முத்தியை விரும்பி வாழ்பவரே சிறப்பர் என்கிறார் திருமூலர். -2475. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும், மாயா குணங்கள் மூன்றையும் பற்றறக் கழித்து சிவமாம் தன்மையைப் பெற்று தவத்தால் முத்திப் பேறு அடைந்து, தத்துமசி என்னும் நெறியில் நின்ற புண்ணியம் உடையவர் சிறந்து விளங்குவர் என்பது முத்தி நிலையின் முடிந்த முடிபாகும்.

முத்தி நிலையில் ஆன்மா இறைவன் திருவருளை முழுமையாகப் பெற்று நிற்கும். யான், எனது என்கிற இருவகைப் பற்றும் அற்றால் ஆன்மா சிவமாம் தன்மை கொள்ளும். -2863. முத்தியிலும் ஆன்மா சிவத்துக்கு அடிமையே என்பதையும் தெளிவாக்குகிறார் திருமூலர். 2455.

எனவே சிவ சம வாதம் செய்வோர் இதனை உணர்தல் நலம்.

## அணைந்தோர் தன்மை

இறைவன் திருவடியைச் சேர்ந்து உணர்ந்தவர்களின் இயல்புகளாக திருமூலர் கருத்துக்கள் சில பார்ப்போம். இவர்களே அடியார் பெருமக்கள் அதாவது சீவன் முத்தர் எனப்படுவர். 1. மனமாசு அழுக்காறு அவா வெகுளி, இன்னாச் சொல் அற்றவர்கள். 2. இறைவன் பெருமை தவிர தன்மானம் இல்லாதவர். 3. உற்றார் உறவினரிடம் பற்றற்ற நிலையினர். 4. பெரியோரை வியத்தல் சிறியோரை இகழ்தல் இல்லாதவர்கள். 5. உலகப் பற்றற்றவர், நன்மை, தீமை அறியாத நிலை. 6. சிவஞானத்தில்

நிலைத்தல், சிவபெருமான் மீது அன்பு மீதூர்ந்திருத்தல். - 2956, 7. அயரா அன்பால் பேரின்பம் நுகர்பவர். - 2979. 8. சிவனை நினைந்து அவன் அருள் வழி நடப்பவர்கள். ஆதலால் அவர்கள் சொற்படி இறைவன் நடக்கிறான். - 1877. 9. எல்லாம் சிவன் செயல் என்னும் சிவனடியார் களாம் இத்தன்மையோர்க்கு அன்பு செய்வது சிறந்த பணி என்கிறார் திருமூலர். - 1880.

**அட்டாங்க யோகம்**

உடல் ஞானம் எய்தி வீடு பேறாம் முத்தியைப் பெறுவது வரைத் தீங்கின்றி நீண்ட காலம் வாழவேண்டுமல்லவா? அதற்கான வழிகளையும் திருமூலர் எட்டு வகையான யோகாசனப் பயிற்சி முறைகளையும் கூறி வழிவகுக்கிறார். அவை, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாகும்.

இங்குக் கூறப்படும் யோகமுறை ஞான நெறிக்கு வழியாகிய சக மார்க்கத்தில் வரும் எனவே இந்த நெறியில் முனைவோர் ஞான நெறி யில் முத்தியாகிய வீடுபேறடைவர். அட்டாங்க யோகத்தின் பயன் அளவிடற் கரியது. ஆன்மா உயிர்ப்பு நிலையிலேயே திருவடிப் பேற்றினைப் பெறும் வாய்ப்புகளை இதனால் பெறலாம். இதனை உணர்ந்தே யோகாசனப் பயிற்சியினை பள்ளிக்கல்வி நிலையங்களில் ஒரு பாடமாக ஆக்கி யுள்ளார்கள் என்பதை உணர்தல் நலம்.

**திரு அம்பலச் சக்கரம்**

சிதாகாசப் பெருவெளியில் ஆனந்தக் கூத்தாடும் அம்பலப் பெருமான் அருட் சத்தியோடு நின்று நிலவும் யந்திரமே திரு அம்பலச் சக்கரமாகும். இது அவரவர் விரும்பிய நற்பயன் தந்து கடைத்தேற்றுவது ஆகும். வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈவான், அந்தந்த உயிர்களின் விருப்பத்திற் கேற்றவாறு அந்தந்த யந்திரத்தில் நின்று அவரவர்கட்கு வேண்டியதை அருளிச்செய்கிறான். அந்த யந்திரத்தைப் பயனுறுத்தும் முறைகளும் திருமந்திரத்தில் விளக்கப்பட்டுள்ளன. - 914, 915.

**நிறைவு**

சிவபெருமானிடமிருந்து நந்தி பெற்ற ஆகமங்கள் ஒன்பது. அவற்றுள் சிவாகமங்கள் இருபத்தெட்டும் அடங்கிய நிலையில் திருமந்திர சாத்திர நூலை திருமூலர் நமக்க தந்துள்ளார் என்பது,

**ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு**
**மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்**
**வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மை ஒன்று**
**ஆக முடிந்த அருஞ்சுத்த சைவமே!** - 1429

என்ற திருப்பாடலால் அறியலாம். வேதம் பொது சிவ ஆகமம் சிறப்பு நூல் எனப்படும். அம்மையப்பனாகிய சிவபெருமான் தமிழும் ஆரியமும் ஆகிய இரு மொழிகளிலும் ஒப்ப அமைய ஞான நூற் பொருளை உமை கேட்கத் திருமலர்ந்தருளினார் என்கிறார் திருமூலர். - 65, 66, 1089.

மேலும் திருமந்திர நூலில் கூறப்பட்ட தத்துவ உண்மைகள் செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த சிவஞானிகள் அருளியவை என்பதை, **தமிழ் மண்டலம் ஐந்தும் தத்துவமா**மே. - 1646 என்றருளிய பாடலால் அறியலாம். வேதம், தமிழின் சிவாகமம் ஆகிய இவ்விரு நூல்களின் பொருள் ஒருங்கமைய அருளியது தான் செந்தமிழ்ச் சிவாகமாம் இத்திருமந்திரமாகும்.

சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய சாத்திர அமைப்பு நூல்கட்கும் ஆதார ஆகம சித்தாந்த கருத்துகளைக் கொடுத்துள்ளது திருமந்திர மாலை என்றால் மிகையாகாது.

நம் தமிழ்நாட்டிலிருந்து தான் சைவம் உலகெங்கும் பரவியது என்பது தத்துவ அறிஞர்களின் ஒருமித்த கருத்து. சிவம் என்பது தமிழ்ச் சொல்லே. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான் மறையையே திருமந்திரம் வேதம் எனக் கொள்கின்றது எனலாம். அறத்தை அடிப்படை யாகக் கொண்ட நூல் எதுவோ அதுவே சிறந்த வேதமாகும். இதனை,

**வேதத்தின் ஓதத் தகும் அறம் எல்லாம் உள** - 51

என்கிறார் திருமூலர்.

இத்தகு தமிழ் ஆகம அறநூலாம் திருமந்திரத்தில் விளக்கப்பட்ட இறைத்தன்மை, உயிர்த் தன்மை, தளைத் தன்மை மற்றும் சாதனமுறை, முத்தி நிலை, அது அடைய நீண்ட காலம் வாழ்வதற்கான யோகாசன முறை ஆகியவைகளைப் பற்றி சித்தாந்தக் கடலில் மூழ்கிக் கொணர்ந்த சில முத்தான கருத்துகளை அறிய வாய்ப்பு நல்கிய இறையருளைப் போற்றி வணங்குவாம். **உயிர்கள் இறைபேறடைய கைகாட்டியது வேதம்; ஆனால் நேரில் சுட்டிக்காட்டியது தமிழ் மறையாம் திருமுறை என உலகம் என உலகம் உணர்ந்தால் வியப்பு அடையும் அன்றோ.**

# 68. திருமூலரின் வெளிப்பாட்டு உத்திகள்

செல்வி சீ. பிரமிளா, சென்னை.

முதல் தமிழ்ச் சித்தர் என்னும் பெருமைக்கு உரியவர் திருமூலர். இவர் இயற்றியது "திருமந்திரம்" என்னும் தமிழ் திருமறையாகும். இது பத்தாம் திருமறையாகக் காணப்படுகிறது. இருண்ட காலத்தில் எழுந்தது என்பர் சிலர். ஆயினும், இது பல்லவர் காலத்தை சார்ந்தது என்பார் திரு. மா. இராசமாணிக்கனார். இந்நூல் பக்தி இலக்கிய காலத்தை சார்ந்தது என டாக்டர் மு. வரதராசனார் கூறுகிறார். திருமூலர் ஒரு சிவயோகி என்பார் மற்றும் சிலர்.

"ஒன்றே குலமும் ஒருருவனே தேவனும்" என்பது தமிழ் சித்தர் திருமூலர் கூறியது உண்மையாகும். இது சங்ககாலத் தமிழகத்தில் நிலவி வந்த கொள்கைகளில் ஒன்றாகும். மேலும் இவர் கூடு விட்டுக் கூடுபாயும் திறமையுடையவர். இவர் இறந்துபோன ஓர் இடையனின் உடல் புகுந்து 3000 ஆண்டுகள் சித்தராகவே வாழ்ந்து வந்தார் என்றும் கூறுவர். இந்நூல் 3000 செய்யுட்களைக் கொண்டது.

**பழந்தமிழரின் கடவுள் கொள்கை**

தமிழகத்தில் பல்வேறு சமயங்கள் நின்று நிலவுகின்றன. பலப்பல வகையான வழிப்பாடுகள் மேற்கொள்ளப்பட்டும் வருகின்றன. எனினும் பண்டைக் காலத்தில் கடவுள் ஒருவரே என்ற ஒருமைப்பாட்டுணர்வே நிலவி வந்தது. மேலும் தமிழ் அறநூலாகிய திருக்குறளில் கடவுள் வாழ்த்தும் கூறப்படுகிறது. அது ஒரே கடவுளை வாழ்த்துகின்றன. காடுகளிலும் மலைகளிலும் காணப்பெற்ற இயற்கை அழகை 'முருகு' என்னும் கடவுளாகக் கொண்டு வழிபட்டனர் பழந்தமிழர். 'முருகு' என்னும் சொல் இளமை, அழகு, மற்றும் கடவுள் தன்மை ஆகியவற்றைக் குறிக்கும். சேயோன், சிவன் என்பன போன்ற சொற்கள் நாளடைவில் தோன்றின.

கடவுள் என்பதைப் பற்றிய கருத்து, அவரவர் மன நிலையைப் பொறுத்தது. 'மதம்' என்பது சூழ்நிலையையும் கால நிலையையும் பொறுத்தது. யார் எந்தக் கடவுளை வேண்டுமானாலும் வணங்கலாம். எந்த மதத்தை வேண்டுமானாலும் மேற்கொள்ளலாம் என்ற உரிமை எண்ணற்ற கடவுளர் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்துவிட்டது.

நிலவுலகத்தில் ஏராளமான ஆறுகள் பாய்கின்றன. அவை பல்வேறிடங்களில் பாய்ந்து, பல்வேறு திசைகளை நோக்கி ஓடினாலும், முடிவில் சென்றடைவது கடலில்தான். உலகத்தில் பல்வேறு பெயரால் பல்வேறு மதங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அவை எப்பெயரால் வழங்கப்பட்ட போதிலும் முடிவில் சென்றடைவது ஒரே கடவுள்தான் இவ்வுண்மையை,

**''ஆத்திசூடி இளம்பிறை அணிந்து**
**மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்;**
**கருநிறங் கொண்டு கடல்மிசைக் கிடப்போன்;**
**முகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்;**
**ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்**
**உருவகத் தாலே உணர்ந்து உணராது**
**பலவகையாகப் பரவிவிடும் பரம்பொருள் ஒன்றே''**

என்று பாரதியார் அழகாக விளக்கிப் பாடியிருக்கிறார். எத்தனை பெயர்களால் எவ்வளவு தெய்வங்கள் வழங்கப்பட்டாலும், அவ்வளவும் கடவுள் ஒருவரின் பெயர்களே என்பது இதனால் விளக்கும், மேலும் கடவுளுக்கு உருவம் இல்லை, எந்தப் பெயரும் இல்லை. இக்கருத்தை,

**''ஒரு நாமம் ஓர் உருவம் என்றுமிலார்க்கு ஆயிரம்**
**திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டேமோ''**

என மாணிக்கவாசகர் அழகுறப் பாடியிருக்கிறார்.

### தமிழ் மூவாயிரம்

திருமுறைகளின் பாடல்கள், சிவபெருமான் என்னும் ஒரே தெய்வத்தின் புறத்தோற்ற அழகு காட்சிகளையும் பெருமைகளையுமே மீண்டும் மீண்டும் கூறி அவரது அருளை வேண்டுகின்ற முறையில் அமைந்திருக்கும். ஆனால் திருமந்திரமோ, சிவனின் உருவத்தைப் போற்றிப் புகழ்வதை விட, அவனையே உருவம் அற்ற பரம்பொருளாக உள்ளொளியாகக் காணத் தூண்டும் அறிவார்ந்த படைப்பு ஆகும்.

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத இரக்கப் பண்பு, ஒழுக்கத் தன்மை, நடுவுநிலைமை, நாணயம், நன்றியுணர்வு முதலான அறநெறி ஒளிக்கதிர்களைப் பாயவிடும் பெருவிளக்காகவும் திருமூலர் திருமந்திரம் பயன் தருகிறது. திருவாவடுதுறை என்னும் ஊரில் அங்குள்ள கோயிலின் உள்ளே நிற்கும் அரசமரத்தின் அடியில் அமர்ந்துதான் திருமூலர் மூவாயிரம் பாடல்களை இயற்றினாராம்.

கடவுள் வாழ்த்தாகவே அமைந்த பாடலாக இவை அமைந்துள்ளன,

**ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றனுள் நான்குணர்ந் தானைந்து**

**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே (திருமந்திரம்-1)**

உலகைப் படைத்த பேராற்றலே கடவுள் என்னும் பெயருடன் மாந்தரால் வணங்கப்படுகிறது. ஆண்மை, பெண்மை என்னும் இரண்டு ஆற்றல்களையும், ஞாயிறு, நிலவு என்னும் இரண்டு ஒளிக்கோள்ங் களாகவும் காட்சி தருபவன் கடவுள் ஒருவனே. மனம், வாக்கு, உடல் என்னும் மூன்று நிலைகளாக இயங்குபவனும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு வாழ்க்கைப் பேறுகளையும் அறிந்து வழிக் காட்டுகின்றவன் அவன் ஒருவனே. கண், காது, வாய், மூக்கு, தோல் ஆகிய ஐந்தும் உடல் உறுப்புகளின் அளவு மீறிய இச்சைகளை வெல் கின்றவன். அசையாத உயிர்களான புல், மரம் இவற்றின் ஓர் அறிவும், ஊர்வன இரண்டு அறிவும், நீந்துவன மூன்றறிவும், பறப்பன நான்கறிவும், நடப்பன ஐந்தறிவும், உள்ளத்தில் எண்ணியதை வாயினால் பேசவல்ல மனிதப் பிறவியின் ஆறு அறிவும் ஒளிக்கத்திகளாகக் கொண்டு விரிவாகி விளங்குபவன் அவன் ஒருவன்.

## திருமூலர் உள்ளம்

**யான் பெற்ற இன்பம் பெறுகவிவ் வையகம்**
**வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்**
**ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்**
**தான் பற்றப் பற்றத் தலைப்படுந் தானே (திருமந்திரம்-85)**

அறவுணர்வுடன் தொண்டுகள் ஆற்றி நான் அடைந்த பெருமகிழ்ச்சி யினை இந்த பரந்த உலகில் வாழும் மக்களும் அடைவார்களாக, வானம் வரையில் பறந்து நிற்கின்ற அந்த பரம்பொருளைப் பற்றி கூற வேண்டுமானால், உடலுக்குள்ளேயே ஓங்கி நிற்கின்ற அறிவினால் உணரக் கூடிய ஒளிவான சிவன் என்னும் இறைவனே அதுவாகும். அதனை அடிக்கடி நினைவினால் பிடித்துக் கொண்டு தொழுதபடியே இருந்தால், நம் தலையினுள்ளே நெற்றிக்குப் பின்னே சுழுமுனைப் பகுதியில் ஒளிக் கொழுந்தாகவே அந்தக் கடவுள் பொருந்தி நிலைத்து விடும்.

## கொடை மற்றும் ஆட்சி சிறப்பு

அறநூல்களைக் கற்ற மெய்பொருள் அறிவை உண்மையிலேயே பெறாதவர் நரர் எனப்படும் மனிதர்களை ஆள்கின்ற ஆட்சியின் தலைவன், உண்மையான மெய்யறிவு கொண்ட அறவாணர் குழுவை வைத்து அந்த நடிப்பு ஞானிகளைச் சோதனை என்னும் ஆய்வு செய்து அவர்களுக்கு உண்மையான மெய்யறிவை ஊட்ட வேண்டும். அத்தகைய ஆட்சி முறையே நாட்டுக்கே நன்மை தருவதாக அமையும்.

''ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்தருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை உடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே'' (திருமந்திரம் 250)

பசியால் வாடுகின்றவர் எவராக இருந்தாலும் அவருக்கு உங்களால் இயன்ற உணவைக் கொடுக்கவும். அவர் உயர்ந்தவரா, தாழ்ந்தவரா, நல்லவரா, தீயவரா என்றெல்லாம் வேறுபாடு கருதாமல் பட்டினி கிடப்போர் யாராவது வருகின்றார்களா என எதிர்ப்பார்த்து சிறிது நேரம் காத்திருந்த பின்னர் உங்கள் உணவை உண்ணுங்கள் என்று கூறுகிறார்.

காகங்கள் தாங்கள் உண்ணுவதற்கு வாய்ப்புக் கிடைக்கும் காலங் களில், கரைந்து அழைப்பு விடுத்து மற்றக் காகங்களுக்கு உரிய காலத்தில் பகிர்ந்து கொடுக்கும் கொடைப் பண்பை அறிந்து நாமும் அதனை போன்று தன்னலம் இல்லாமல் வாழ வேண்டும்.

**பூசைகளின் சிறப்பு**

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளம் பிரனார்க்கு வாய்கோ பரவாசல்'' (திருமந்திரம் - 1823)

உள்ளம் என்பது பரம்பொருள். இறைவனின் கருவறையும் இங்கே உள்ளன. கருவறையினை உள்ளடக்கிய கோயிலாக தலை எனும் ஊனால் ஆகியது மனித உடல். அருள் மழை பொழியும் தலைவனை வழிபடு வதற்கு உரிய கோபுரமாகத் திகழ்வது வாய். ஆழமாக எண்ணி அறிந்து தெளிவு பெற்ற மெய்யன்பர்களுக்கு உயிர் சிவலிங்கம். வஞ்சகமாக இச்சைகளை ஈடேற்றிக் கொள்ளும் ஐம்புலன் கரிய இருளை ஒட்டும் மாணிக்கம் போல் ஒளிவீசக் கூடிய விளக்குகள் ஆகும்.

மேலும்,

''படமாடக் கோயில் பகவற் கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொண் றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே'' (திருமந்திரம் - 1857)

ஓவியப் படங்கள் நிறைந்த கோயிலில் தெய்வத்துக்கு பொங்கல் போன்ற உணவு ஒன்றை படையலாக அளித்தால் நடமாடி உழைக்கின்ற ஏழை அடியவர்க்கு அது போய் சேராது. ஆனால் நடமாடிப் பாடுபடும் உழைப்பாளிக் கடவுளுக்கு உணவு பொருள் ஏதேனும் ஒன்றை உண்ணக் கொடுத்தால், அது படங்கள் அல்லது சிலைகள் உள்ள கோயிலில் குடியேறிய இறைவனுக்கு அது படையல் ஆகும்.

உழைப்பினால் கோயிலையே கட்டிய பாட்டாளித் தொண்டர்களின் பசிக்கு உணவு கொடுக்காமல், அந்த கோயிலின் உள்ளே இருக்கும் தெய்வத்துக்குப் படையல் போடுவதால் மட்டும் பயன் ஏதும் இல்லை.

## திருமூலர் வழி கீதா உபதேசம்

1. ஆரியர் புகுத்திய சாதி முறையினை பல தெய்வ வணக்கமாக ஏற்க கூடாது. ''ஒரே கடவுள்'' என்னும் தத்துவ நெறியினை பரப்பி அதனை எண்ணி எண்ணிச் சிறப்போடு வாழ வேண்டும்.
2. ''தேனுக்குள் இன்பஞ் செறிந்திருத் தாற்போல்''
உடல்நோயை தீர்க்கும் சித்த மருத்துவப் பொருள் தேனாகும். அதனை போன்று உள்ளத்தின் மாசுகள் நீங்கிய மனித உடலின் உள்ளேதான் என்ற எண்ணம் இருத்தல் கூடாது.
3. உயிர், உள்ளம், ஆன்மா என்ற வேறு பேரு நிலை பண்புகளையும் ஆற்றல்களையும் குறிக்கும், உடம்பு போது சுவையும் அழிந்தும். அது உடல் ஆகிய மெய்யின் உள்ளே ஒளியாக விளங்கும் பரம்பொருள் இது ''ஞானம்'' என்னும் தெளிவான அறிவை மக்கள் அறிய முடியும்.
4. நிலையான புகழுடன் வாழக்கூடிய மனிதன். அறவழியில் நடந்து பிற உயிர்களுக்கு உறுதுணை புரிந்து அறப்பணிகள் ஆற்றுவதற்கு, பகுத்தறிவு என்னும் ஆறாவது அறிவை பேருண்மையுடன் அவனுடைய சிந்தையால் தன்னைப் பற்றித் தானே அறிந்து கொண்டால் மனிதனுக்கு அழிவு என்பது இல்லை.
5. உள்ளம், வாய், உடல் ஆகிய மூன்றும் எண்ணம், சொல், செயல் என்பதன் பிறப்பிடம் மற்றும் இறப்பிடம் ஆகும். இந்த மூன்றும் முறையான வலிமையினைக் கொண்டது.
6. மனச்சாட்சியினை மதித்து நடப்பவரே தன்னைத் தானே உணர்ந்து, தெளிந்த, தொலைநோக்கு கொண்ட 'ஞானி' எனும் பெருமைக்கு உரியவர்,
7. பேராசைகளை வளர்த்துக் கொண்டால் அது பெரும் துயரங்களை வரவழைக்கும். தன்னல இச்சைகளை ஒழித்துவிட ஒழித்துவிடப் பரம்பொருளை உள்ளத்தில் உணர்ந்து மகிழும் பேரின்பமே உண்டாகும்.

## பேசா நோன்பு

''நாவின் கற்பு மௌனம் என்பார்கள்''. அந்த மௌனம் உடல் நலனில் முக்கிய இடத்தை வகிக்கின்றது. உடல் இயக்கத்திற்கு பிராணா சக்தி மிகவும் அவசியம். அதிகம் பேசினால் உடலில் உள்ள உயிர்ச்

சக்தி வீணாகும். இந்த உயிர்ச் சக்தி மௌனத்தால் தேக்கி வைக்கப் படுகின்றது. உயிர்ச் சக்தி குறைந்தால் உடலில் பலவிதமான நோய்கள் ஏற்படுவதற்குக் காரணமாய் அமைந்துவிடும். அதிகம் பேசினால் ஆயுள் குறைவு என்பதும் இதனால் தான். எனவே, உடல் நலத்திற்கு பேசா நோன்பு அத்தியாவசியமாகும். மௌனம் மனச்சிமிழைத் திறக்கும் என்பார் திருமூலர்.

வாய் திறவாதார் மனத்தில் ஓர் மாடு உண்டு
வாய் திறப்பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய் திறவாதார் மதியிட்டு மூட்டுவர்
கோய் திறவாவிடில் கோழையும் ஆமே (திருமந்திரம் - 593)

இதனையே வள்ளுவர்,

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு (குறள் 127)

எனவே மௌனம் உடல் நலத்திற்கு மட்டுமன்றிப் பல வகையில் பயன் விளைவிப்பதால் ''மௌனம்'' ஆற்றல் வாய்ந்ததாக விளங்குகிறது.

சமூகம் அமைய உடல், உள்ளம், ஆன்ம நலம் மிகவும் அவசிய மாகும். உடல், உள்ளம், ஆன்ம நலம் அமைய மன அமைதி மிகவும் தேவையான ஒன்றாகும். மேலும் ஆன்மாவின் நோக்கம் இன்பத்தை அடைவது. அறம், பொருள், இன்பத்தில் முழுமை பெற்று வீடு பேறு அடைதற்கு மனமே மூலகாரணம் என்றும் திருமூலர் கூறுகிறார்.

குலத்தாலும், குடியாலும், சாதிப் பிரிவுகளாலும் ஏற்படுகின்ற தீமைகளை அகற்ற வேண்டும். அது நம்மை நாமே வேற்றுமை செய்வதாக உணரலாம். நாம் அதனை மறந்து ஒன்றுப்பட வேண்டும். அனைவரும் ஒன்றே குலமாக உணர்ந்து ஒற்றுமையுடன் வாழ வேண்டும். இதன் மூலம் திருமூலரின் வெளிப்பாட்டுச் செறிவை அறியலாம்.

# 69. ஒன்பதாம் திருமுறையில் அகமரபுகள்

முனைவர் இரா. பிரியதர்ஷினி, மதுரை.

பன்னிரு திருமுறைகளில் தனி ஒருவர் பாடிய திருமுறைகளாக முதல் எட்டு திருமுறைகளும், பத்து, பன்னிரண்டாம் திருமுறைகளும் விளங்க, ஒன்பதும், பதினொன்றும் பலர் பாடிய பதிகங்களின் கோவையாக விளங்குகின்றன. ஒன்பதாம் திருமுறை திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் ஈறாக உள்ள அருளாளர்கள் ஒன்பதின்மர் பாடிய தொகுப் பாகும். இத்தொகுப்பில் மொத்தம் 29 திருப்பதிகங்கள் உள்ளன. பத்துப் பதிகங்கள் அகத்துறைப் பதிகங்களாக அமைந்துள்ளன.

இப்பதிகங்கள் எல்லாம் இறைவன் அருளை வேண்டி நிற்கின்ற இறையருளாளர்களால் பாடப் பெற்றதால் இறைவனைப் பிரிந்திருக் கின்ற துயரத்தில் தலைவியர் அல்லது தலைவி துயர் கண்ட நற்றாயர் கூறுகின்ற கூற்றுக்களாகவே அமைந்துள்ளன.

**திருமாளிகைத் தேவரின் நற்றாய்**

திருமாளிகைத் தேவர் மொத்தம் நான்கு பதிகங்களைப் பாடியிருக் கிறார். அந்நான்கு திருப்பதிகங்களும் தில்லையில் பாடியதே ஆகும். நான்கு பதிகங்களிலும் மொத்தம் 45 பாடல்கள் உள்ளன. நான்கு திருப்பதிகங்களில் "உறவாகிய போகம்" என்று தொடங்கும் மூன்றாம் பதிகமே அகத்துறைப் பாங்கினைப் பெற்றிருக்கிறது. தில்லையம்பலக் கூத்தன் மகேந்திர மலையில் எழுந்தருளியுள்ள திறத்தையும், அப்பெருமான் வேடுருவாகி விசயனுக்கு அருள் புரிந்த அருளையும் நினைத்து, இறைவன்பால் காதல் கொண்டு வருந்தும் தலைவியின் நிலையை நற்றாய் எடுத்துரைக்கும் பாங்கில் இப்பதிகம் அமைந்துள்ளது.

இதில் நற்றாய் தம் மகளாகிய தலைவி, தில்லைக் கூத்தனாகிய தலைவனிடத்தில் கொண்ட காதலால் பிரிந்து வருந்துகின்ற நிலையையும், வருந்திய நிலையில் பேசுகின்ற நிலையையும் அவள் பிச்சியான நிலையையும், எடுத்துரைத்து அகத்துறைத் தலைவியைப் படம் பிடித்துக் காட்டுகிறாள்.

**"செழுந்தென்றல் அன்றில் திங்கள் கங்குல**
**திரைவீரை தீங்குழல் சேவின்மணி**

எழுந்து இன்றுஎன்மேல் பகையாட வாடு
மெனைநீ நலிவது என்னே என்னும்'' (பா.5)

என்று தலைவி வாடியதாக நற்றாய் கூறுகிறாள். இப்பாடலில் தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்கு என்னென்ன பொருள்கள் வாட்டத்தைத் தருகின்றன என்பது சங்க இலக்கியத்தைப் போல தெளிவாகக் காட்டப் பட்டுள்ளது. தென்றல் காற்று, அன்றில் பறவை, சந்திரன், இரவு, கடல், குழலோசை, எருதுமணி ஓசை ஆகியவை வாட்டத்தைத் தந்தன என்று கூறப்பெற்றுள்ளது. எனவே தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்கு மாலை நேரத்திற்குரிய பொருள்கள் துன்பத்தைத் தரும் என்று சமய இலக்கியமான திருமுறையின் மூலமும் வெளிப்படுத்தப் பெறுகிறது.

**சேந்தனாரின் நற்றாய்**

பட்டினத்தடிகளுக்குக் கணக்கராக இருந்த சேந்தனார் பாடியன வாகத் திருவிசைப்பா பதிகங்களும், திருப்பல்லாண்டுப் பதிகங்களும் ஆகு நான்கு பதிகங்கள் இத்திருமுறையில் அமைந்துள்ளன. இந்த நான்கு திருப்பதிகங்களில் இரண்டு திருப்பதிகங்கள் அகப்பொருட் சுவையை உடையனவாக அமைந்துள்ளன.

திருவாவடுதுறை இறைவனின் மீது காதல் கொண்ட தலைவியின் நிலையை 10 பாடல்களின் மூலம் நற்றாய் விளக்குகின்றாள். தலைவனை எண்ணிக் காதலில் வருந்துகின்ற தலைவி கலையையும், வளையல்களையும் இழக்கின்றாள், என்பதை ''மானேர்கலை வளையும் கவர்ந்து உளம் கொள்ளை கொள்ள வழக்குண்டே'' (பா:9) என்ற பகுதி சுட்டிக் காட்டுகிறது. தலைவி தலைவனின் மாலையை விரும்புவாள் என்பதைத் தூது, உலா இலக்கியங்கள் பகரும். அதுபோலச் சேந்தனாரின் தலைவியும் தலைவனின் கொன்றை மாலையில் ஆசை கொண்டாள் என்பதைக் ''கங்கைநீர் நனைக்கும் நலங்கிளர் கொன்றைமேல் நயம் பேசும் நன்னுதல் நங்கை'' (பா:3) என்ற தொடர் குறிப்பிட்டுக் காட்டு கிறது. இந்நிலையில் காதல் உணர்வு மீதூரத் தலைவன் இருக்கும் இடம் தேடியும் தலைவி செல்கிறாள் என்பதை ''அழிவு ஒன்றிலார் செல்வச் சாந்தையூரர் அணியாவடு துறை பாடினாள்'' (பா:9) என்ற தொடர் பேசுகிறது.

**கருவூர்த் தேவரின் தலைவி**

கருவூர்த் தேவர் பாடியனவாகப் பத்துத் திருப்பதிகங்கள் திருவிசைப்பாவில் காணப்படுகின்றன. அப்பதிகங்களின் மொத்தப் பாடல்கள் 103 ஆகும். இதில் திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலத்து இறைவன்மீது பாடப் பெற்ற பதிகம் தலைவி கூற்றாக அமைந்துள்ளது.

மணியம்பலத் இறைவன் மீது காதல் கொள்கின்ற தலைவி தன் காதல் வேட்கையால் தன்னுடைய உடல் சிவபெருமானுடைய திருவெண்ணீற்றை விரும்புகிறது என்றும், செவி அவனறிவு நூல்களைக் கேட்க விரும்புகிறது என்றும், வாய் அவன் திருநாமத்தை உச்சரிக்கிறது என்றும், கண்கள் அவன் திருக்கோவில் விமானத்தையே நோக்கி வெய்து உயிர்க்கின்றன என்றும் குறிப்பிடுகிறாள். இத்தகைய நலம் சான்ற பாடல்

**"தெள்ளுநீற றவன் நீறு என்உடல் விரும்பும்**
**செவி அவன் அறிவுநூல் கேட்கும்**
**மெள்ளவே அவன்பேர் விளம்பும் வாய்கண்கள்**
**விமானமே நோக்கிவெவ் வுயிர்க்கும்"** **(பா:4)**

என்பதாகும். இக்காதல் கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் ஆதலால் சமய உணர்வுக்கேற்ற அகப்பொருளாக அமைந்துள்ளது.

### திருவாலியமுதனார் தலைவி

திருவாலியமுதனார் பாடியனவாக 4 பதிகங்கள் காணப்படுகின்றன. இவை யாவும் தில்லையம்பலத்தில் பாடப்பட்டனவாகும். இதில் இரண்டு பதிகங்கள் அகப்பொருள் பதிகங்களாகும். இரண்டாவது பதிகமாகிய பவளமால்வரை என்ற பதிகம் தில்லையம்பக் கூத்தனைக் காதலித்த இளம்பெண் ஒருத்தியின் கூற்றாக அமைந்துள்ளது. இப்பதிகத்தின் தலைவி தில்லைக்கூத்தன் மீது காதல் உற்றதால் மன்மதன் மலர்க்கணை படுந்தோறும் அலந்தேன் என்கிறாள் (பா:1) மேலும் காதல் கொண்டவர் களுக்கு குளிர்ந்த திங்களும் நெருப்பாகும் என்ற அகக்கோட்பாட்டை, "காய்ந்து வந்துவந்து என்பதனை வலி செய்து கதிர்நிலவு எரிதூவும்" (பா:9) என்கிறாள். இப்பகுதியில் நிலவு ஒளி வீசுதல் எதிதூவுதல் போல் உள்ளது என்பது நயமான பகுதியாகும்.

இவ்வாறு வருந்திய தலைவி தலைவன் பால் தன் வேண்டுகோளை விடுக்கிறாள். இவ்வேண்டுகோள் என்ன தெரியுமா? இதோ பாடல்:

**"காலனை உயிர்செக உதைகொண்ட**
**மலர்ந்த பாதங்கள் வன்முறை மேல்ஒற்ற**
**வந்த ருள்செய் யாயே"** **(பா:3)**

என்பது அவள் வேண்டுகோள், இவ்வேண்டுகோள் எந்த இலக்கியங் களிலும் காணப்படாத ஒரு வேண்டுகோளாகும். எமனை உதைத்து உயிரைப் போக்கிய திருவடியால் என் தனங்களை ஒற்றி எனக்கு உயிர்தா என்று தலைவி கேட்கிறாள். இத்தகைய வேண்டுகோள் கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்துத் தலைவியால் அல்லவோ கேட்க இயலும்.

**புருடோத்தம நம்பியின் தலைவி**

இவர் பாடியதாக இரண்டு பதிகங்களே உள்ளன. இவ்விரண்டு பதிகங்களும் அகப்பொருள் அமைப்பிலேயே அமைந்துள்ளன. முதல் திருப்பதிகம் சிற்றம்பலத் தலைவனைக் காதலித்த மகளிர் அப்பெருமானை நோக்கி உரையாடுவதாக அமைந்துள்ள 11 பாடல்களைக் கொண்டது. பிற பதிகங்களைப் போலவே தலைவி தன்னுடைய வேட்கையைப் பலவாறாக வெளிப்படுத்துகிறாள். அதில் இரண்டாவது பாடலில் "ஆவியில் பரமன்று எம்ஆதரவே" என்று குறிப்பிட்டுத் தன் உயிர் காதலைத் தாங்காது என்று குறிப்பிடுகிறாள். இப்பகுதி, "சிறுகோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கு இவள் உயிர் தவச் சிறிது காமமோ பெரிது" என்ற குறுந்தொகைப் பாடலை அடியொற்றியதாகும்.

**சேதிராயரின் நற்றாய்**

இவர் பாடியதாகத் திருவிசைப்பா திருப்பதிகம் ஒன்றே அமைந்துள்ளது. அத்திருப்பதிகமும் அகப்பொருள் கருத்தைத் தன்னகத்துக் கொண்டே விளங்குகிறது. தில்லைக் கூத்தப் பெருமானைக் காதலித்த தலைவி அப்பெருமானைக் காணப் பெரிதும் விரும்பி அந்நோக்கம் நிறை வேறாமையால் காமத்துயர் மிக்கு மீதுயிர்த்து வருந்துவதையும், தம் வருத்தம் தீரும் வண்ணம் அணிந்த கொன்றை மாலை கிடைக்க வேண்டு மென்று தலைவி இரத்தலையும், தலைவனின் திருப்பெயரைத் தன்னால் வளர்க்கப்பெற்ற கிளி கூறினால் தன் வருத்தம் தீரும் என எண்ணி அக்கிளியைத் தலைவி வேண்டுதலையும், தலைவனை முன்னிலைப் படுத்தி கூறுகின்ற கூற்றுக்களையும் நற்றாய் கூறுவதாகப் பெற்று இப் பதிகம் விளங்குகிறது.

"மாலவாடும் என வாணுதலே" என்னும் முதல் பாடலின் வரியால் தலைவியின் வேட்கை புலப்படுகிறது. "உம்மையே நினைந்து ஏத்தும் ஒவறாயிலள்" (4) என்ற தொடர் ஒருதலை உள்ளுதலைக் குறிப்பிடு கிறது. "வேரிநற் குழலாள் இவள் விம்மும்மே" (3) என்ற தொடரால் மெலிதல் நிலை புலப்படுகிறது. மிக நாணம் அற்றனள் நானறியேன் இனி" (2) என்ற தொடரால் நாணுவரை இறத்தல் நிலை வெளிப்படுகிறது.

முன்னோர் மொழியைப் பொன்னெனப் போற்றிப்பின்னோன் வேண்டும் விகற்பம் தந்திடும் முறையில் தொன்மை இலக்கணங்கள் காட்டிய அகப்பொருட் கோட்பாட்டைச் சமய அருளாளர்களும் பின்பற்றியுள்ளனர் என்பது பெறப்படுகிறது. அக இலக்கிய மரபுகள் பின்பற்றப் பெற்றுத் தனி ஒரு இலக்கியமாக மலரவில்லை என்றாலும் சாயலைப் பெற்று விளக்குகிறது.

# 70. திருமந்திரத்தில் அறம்

திரு. ஜெ.ஆர். புகழேந்தி, சென்னை.

திருமூலர் திருவாய் மலர்ந்து அருளிய திருமந்திரம் பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாக உள்ளது. இதில் திருமூலர் வேதாந்தக் கருத்துக்களையும் சித்தாந்தக் கருத்துக்களையும் பல்வேறு சமயக் கருத்துக்களையும் பல்வேறு தத்துவக் கருத்துக்களையும் அறக் கருத்துக்களையும் பாங்கோடு பதிவுசெய்துள்ளார்.

திருமந்திரத்தில் உள்ள அறக்கருத்துக்கள் சிலவற்றை விளக்குகிறது இக்கட்டுரை.

## கொல்லாமை

பற்றுக்கோடாய் உள்ள குருவின் பூசைக்குரிய மலர்கள் பல. அவற்றுள் ஒளி பொருந்திய மலர் இன்னோர் உயிரைக் கொல்லாமை எனும் மலரே. இக்கருத்தைத் திருமூலர்,

"பற்றாய நற்குரு பூசைக்குப் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்"

(பாடல் எண். 197)

எனும் அடிகளில் கூறுகிறார். இதன்மூலம் திருமூலர் கொல்லாமை நெறியையே தலையாய அறநெறியாகக் கருதினார் என்பது தெரிகிறது.

## புலால் உண்ணாமை

புலால் உண்ணாமை சிறந்த அறங்களுள் ஒன்று. ஓர் உயிரியின் உயிரைக் கொன்று அதன் ஊனை உண்ணுவது பெரும்பாவம் ஆகும்.

பொல்லாப் புலாலை உண்ணும் கீழ்மக்களை எமதூதர்கள் பலரும் காணும்படியாக நரகத்தில் தள்ளுவர் என்று

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்தன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே" (பாடல் எண் 199)

எனும் பாடலில் கூறுகிறார் திருமூலர்.

**ஐந்து பாதகங்கள்**

கொலை செய்தல், களவாடல், கள் குடித்தல், பிறன்மனை நயத்தல், பொய் கூறல் ஆகியவை பெரிய பாதகங்கள் என்பது திருமூலர் துணிபு. அதனால்தான் அவர்,

**"கொலையே களவுகள் காமம் பொய் கூறல்**
**மலைவான பாதகமாம்"** (பாடல் எண் 200)

என்று பாடினார். மேலும் இவற்றை நீக்க வேண்டும் என்று அறிவுறுத்தினார்.

**பிறன்மனை நயவாமை**

பிறன்மனை நயத்தல் பெருந்துன்பம் தரும் பெரும் பாவமாகும். பிறன்மனை நோக்காததே பேராண்மை ஆகும்.

அன்புடைய மனைவி வீட்டில் இருக்கும்போது அயலான் மனைவியை விரும்புவது தன் வீட்டில் இருக்கும் பலாப் பழத்தை உண்ண முடியாமல் அயலான் வீட்டில் பழுத்துள்ள ஈச்சம்பழத்திற்கு ஆசைப்பட்டு அவதிப் படுவதற்கு ஒப்பாகும் எனும் கருத்தை

"ஆத்த மலையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடருற்ற வாரே" (பாடல் எண் 201)

எனும் பாடலில் வெகு அழகாகக் கூறுகிறார் திருமூலர்.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பும்போது பேத உணர்வு இருக்கக்கூடாது என்பது திருமூலர் கொள்கை. அதனால்தான்,

**"ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்**
**பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்**
**வேட்கை உடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்**
**காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே"** (பாடல் எண் 250)

என்று பாடினார்.

**அன்பே சிவம்**

அதே நிலையில் தேகாபிமானம் அற்ற நிலையில் எல்லா உயிர் களையும் சமமாகக் கருதி அவ்வுயிர்களின்மீது செலுத்தும் அன்பே சிவம் என்பது திருமூலரின் இறைசார்ந்த கோட்பாடுகளுள் ஒன்று. இக்கோட்பாட்டை,

**அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**

அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே

எனும் எளிய, இனிய சொற்களாலான பாடல் மூலம் நன்கு விளக்கியுள்ளார்.

**நிலையாமை**

நில்லாமை மட்டுமே இவ்வுலகில் நிலைபெற்று இருக்கிறது. இவ் வுண்மையைத் திருமூலர் யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை ஆகிய நான்கு தலைப்பு களில் விளக்கியுள்ளார்.

**யாக்கை நிலையாமை**

ஒரு மனிதன் இறந்துவிட்டால் ஊரிலுள்ள அவனது உறவினர்கள் எல்லாம் ஒன்று கூடி அழுவர். அவனது இயற்பெயரை நீக்கிப் பிணம் என்று பேரிடுவர். பின்னர் பிணத்தை எடுத்துக் கொண்டு போய் சுடுகாட்டில் வைத்து எரித்துவிடுவர். எரித்துவிட்டு ஏதாவதொரு குளத்தில் மூழ்கிக் குளிப்பர். பிறகு இறந்தவனைப் பற்றி மறந்துவிடுவர். இக்கருத்தை மிக மிக எளிமையான வார்த்தைகளைக் கொண்ட

ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டு
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டு
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்புஒழிந் தார்களே (பாடல் எண் 145)

எனும் பாடலில் விளக்குகிறார் திருமூலர். ஒரு மனிதனின் உடலில் மொத்தம் 96 தத்துவங்கள் உள. அவை : ஐந்து பூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கன்மேந்திரியங்கள், நான்கு அந்தக் காரணங்கள், ஐந்து தன்மாத்திரைகள், பத்து நாடிகள், ஐந்து அவத்தைகள், மூன்று மலங்கள், மூன்று குணங்கள், மூன்று மண்டலங்கள், மூன்று பிணிகள், எட்டு விகாரங்கள், ஆறு ஆதாரங்கள், ஏழு தாதுக்கள், பத்து வாயுக்கள், ஐந்து கோசங்கள், ஒன்பது வாயில்கள். இந்த 96 தத்துவங்களும் உடல் சிதைந்தபின் ஓடிவிடும் என்பதைத் திருமூலர்,

முப்பதும் முப்பதும் முப்பத்து அறுவரும்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஒட்டெடுத் தார்களே (பாடல் எண் 154)

எனும் பாடலில் கூறியுள்ளார். கோயில் என்பது உடலைக் குறிக்கிறது.

**கட்டுரை மூலம் அறியப்படும் செய்திகள்**

1. திருமூலர் தம் திருமந்திரத்தில் வேதாந்த, சித்தாந்த, சமய, தத்துவ, அறக்கருத்துக்கள் பலவற்றைப் பாங்கோடு பதிவு செய்துள்ளார்.

2. திருமூலர் கொல்லாமை நெறியையே தலையாய அறநெறியாகக் கருதினார்.
3. புலால் உண்ணும் கீழ்மக்கள் நரகத்தில் தள்ளப்படுவர்.
4. கொலை செய்தல், களவாடல், கள் குடித்தல், பிறன்மனை நயத்தல், பொய் கூறல் ஆகியவை பெரிய பாதங்கள் என்பது திருமூலர் துணிபு.
5. பிறன்மனை நயத்தல் பெருந்துன்பம் தரும் பெரும்பாவமாகும்.
6. விருந்தோம்பும்போது பேத உணர்வு இருக்கக் கூடாது என்பது திருமூலர் கொள்கை.
7. அன்பே சிவம் என்பது திருமூலரின் இறை சார்ந்த கோட்பாடு களுள் ஒன்று.
8. திருமூலர் யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை ஆகிய நான்கு தலைப்புகளில் நிலையாமையை விளக்கியுள்ளார்.

# 71. புராணங்களில் திருமூலர்

திருமதி கே. மகேஸ்வரி, தஞ்சாவூர்.

"கடவுளைக் காண முயல்பவன் பக்தன், கண்டு தெளிந்தவன் சித்தன்" என்று தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் குறிப்பிடுவது முற்றும் உண்மை. சமயத்தோடு பொதுவான முறையில் தொடர்புகொண்டு இறையுணர்வோடு உலகியலில் ஈடுபட்டு இருப்பவர்கள் பக்திமான்கள். சமயத்தோடு சிறப்பான முறையில் தொடர்பு கொண்டு இறையுணர்விலேயே தம்மை ஈடுபடுத்திக் கெண்டு உலக நடப்புக்களில் தம்மை முழுவதும் செலுத்தாமல் தாமரை இலைத் தண்ணீர்போல் இருப்பவர்கள் ஞானிகள். இவர்கள் சமயத் துறையைச் சார்ந்தவர்கள். வைணவம் போற்றும் ஆழ்வார்களும், சைவம் போற்றும் நாயன்மார்களும் இதில் அடங்குவர். இவர்கள் பல கோயில் களுக்குச் சென்று இறைவனைப் பாடிப் போற்றி வணங்கினர். எந்த ஒரு சமயப்பற்றும் இல்லாமல் யோகநிலையில் இறைவனைக் கண்டு இறைமை யில் கலப்பவர்கள் சித்தர்கள் என்று போற்றப்பட்டனர். இவர்கள் இறைவனைத் தேடிக் கோயில்களுக்குச் செல்லாமல் தங்கள் 'உள்ளமே கோயில்' என்றிருப்பவர்கள். அத்தகைய சித்தர்களின் சிறப்பு எண்ணிலடங்கா.

சித்தர்கள் பதினெண்மர் என்றுப் பொதுவாகச் சொல்வார்கள். அதிகமாக அறியப்பட்டதும் இந்த பதினெண்மரை பற்றியே. ஆனால் நூற்றுக்கணக்கான சித்தர்கள் பெயர் ஆங்காங்கு சித்தர் இலக்கியங்களில் விரவி வந்துள்ளது. இன்னும் பல சித்தர்கள் இருப்பதாகவும் ஆராய்ச்சி யாளர்கள் கருதுகின்றனர். எனினும் சித்தர்கள் பதினெண்மர் என்பதும் பதினெண்மர் யார் யார் என்பதும் இன்றும் ஆராய்ச்சிக்குள்ளதே.

உலகில் தர்மம் அழிந்து அதர்மம் தலைதூக்கும்போது இறைவன் அவதரிப்பான் என்ற கீதையின் பொன்மொழிகேற்ப புத்தர், ஆதிசங்கரர், இயேசு கிருஸ்து, நபிகள் நாயகம் போன்றவர்கள் உலகம் அறிந்த தெய்வத்தின் அவதாரமாக போற்றப்படும் ஞானிகளில் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். ஆனால் இவர்களுக்கு முன்பும் பிறகும் பல ஞானிகள் தோன்றியுள்ளனர். அவர்களில் ஒருவராகவும் சிறப்புகள் பல பெற்றவ ராகவும் இருப்பவர் 'திருமூலர்'. இவர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தவர் என்று கூறப்படுகிறது. ஆண்டுக்கு ஒன்றாக இவர் பாடிய பாடல்களே 'திருமந்திரம்' ஆகும். இது தமிழில் உள்ள ஈடு இணையற்ற தந்திர

சாத்திர நூலாகும். இத்தகு சிறப்புப் பொருந்திய திருமூலரின் வரலாறுப் பற்றி அறிவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திருமூலர் பெயர் காரணம்**

திருமூலநாதர் என்பதில் 'திரு', 'மூலர்', 'நாதர்' என்ற மூன்று பெயர்கள் விரவியுள்ளது. 'திரு' என்பது சிறப்புப் பெயர் (அ) சிறப்பினைக் குறிக்கும் சொல்லாகும். தொல்காப்பியர் காலத்தில் 'திரு' என்பது இல்லையென்றாலும், அதன் பின்னர் இந்த வார்த்தை உபயோகப்படுத்தப் பட்டது. இலக்குமி, செல்வம், சிறப்பு, அழகு, ஒளி, பொலிவு, நல்வினை என்ற பொருளைக் குறித்து நிற்கும் 'திரு' வைப்பற்றி உரையாசிரியர் களில் சிறந்தவரான பேராசிரியர் திருக்கோவையார் நூலுக்கு எழுதிய முன்னுரையில் திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மையுடையது என குறிப்பிடுகின்றார். அத்தகைய திருவை தனது பெயரில் அடை மொழியாகக் கொண்டுள்ளார் திருமூலர்.

பொதுவாக நட்சத்திரத்தின் பெயர்களை நட்சத்திரத்தில் பிறந்தவர் களுக்குச் சுட்டுவது இன்றும் மரபாக உள்ள அந்த வகையில் மூல நட்சத்திரத்தில் பிறந்ததால் மூலர் என்று பெயர் சூட்டப்பட்டு திரு என்ற அடைமொழியுடன் திருமூலர் ஆனார் என்று டாக்டர் இரா. மாணிக்க வாசகம் குறிப்பிடுகிறார். மேலும், மூலன் என்பது காரணப் பெயராகவும் கொள்ள இடம் உண்டு அனைத்திற்கும் ஆதாரமான இறைவனை ஆதிமூலம் என்பது போல், சமய சாத்திரங்களுக்கு மூலமாகவும் சித்தர் பரம்பரைக்கு மூலமாகவும் தோத்திர சாத்திரங்களுக்கு மூலமாகவும் இருத்தலின் இப்பெயர் தோன்றியிருக்கலாம் என்று இவர் குறிப்பிடுகிறார்.

**நந்தி அருளாலே நாதனாம் பேர் பெற்றார்**

என்று திருத்தொண்டர் புராணத்தில் குறிக்கப்படுவதால் திருமூலர் என்ற பெயருடன் நாதன் என்பதும் சேர்ந்து திருமூலநாதன் என்று ஆனதாகவும் குறிக்கப்படுகின்றது. நந்தியின் அருளைப் பெற்றவர்கள் எல்லாம் நாதன் என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்படுவதால் திருமூலநாதர் நந்தியின் அருள் பெற்றவர் என்பதும் அறியப்படுகின்றது.

**நந்தி அருள் பெற்ற நாதரை நாடிடின்**
**நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி**
**மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்**
**என்றிவர் என்னோ டெண்மரு மாமே**

என்று திருத்தொண்டர் புராணம் குறிப்பிட்டாலும் நாதன் என்னும் இப்பெயரைச் சேக்கிழார் குறிப்பிடாமல் சிவனைப் போற்றியவர்களை நாயனார் என்றே குறிப்பிட்டு திருமூலநாயனார் என்று குறிக்கின்றார். நாயன் என்பதற்கு நடத்துவோன் என்றும் ஆர் என்பது சிறப்பு விகுதி யாகவும் கொள்ளப்படும். நாதர் என்பதற்கு தலைவர் அல்லது மேம்பட்ட

தவவலிமையுடையவர் என்று பொருள் கூறுவர். இது பெரும்பகுதி வடக்கில் உள்ள நவநாத சித்தர்களுக்குப் பெயராய் அமைந்திருக்கின்றது. பொதுவாக எல்லா சித்தர்களின் பெயருக்குபின் நாதர் என்பது இடம் பெருகிறது. அதனால் திருமூலரும் திருமூலநாதர் என்று அழைக்கப்பட்ட தாகவும் கூறப்படுகிறது.

### திருமூலநாதர் வரலாறு

திருமூலரின் வரலாற்றை தெளிவாகக்கூறும் இலக்கியம் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் ஆகும். அறுபத்து மூன்று நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றை சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார். நாயன்மார்களில் ஒருவரான இறைவனின் திருவடியை மட்டுமே சிந்தைசெய்யும் திருமூலநாயனாரின் வரலாற்றை மிகவும் தெளிவாக இருபத்தெட்டுப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

திருக்கயிலையில் சிவபெருமானுக்கு முதல் பெறும் காவலராக விளங்கி இந்திரன், திருமால், பிரமன் முதலிய தேவர்களுக்குச் சிவ நெறியை அருளிச் செய்யும் பணி பூண்ட திருநந்தி தேவரின் திருவருள் உபதேசத்தினைப் பெற்ற நான்மறைச் சிவயோகியார் ஒருவர் குரு முனியான அகத்தியரைக் காணும் பொருட்டுப் பொதிய மலை நோக்கிச் சென்றார். வழியில் உள்ள திருக்கேதாரத்தை வழிபட்டு, பசுபதி நேபாளத்தைப் பணிந்து கங்கைக் கரையணைந்தார். காசி சென்று, ஸ்ரீசைலம் சென்று பின் திருக்காளத்தி அணைந்தார். திருவாலங்காடு சென்று நடனமிடும் இறைவனைப் பணிந்து காஞ்சி சென்று ஏகாம்பரநாதரைப் பணிந்தார். திருவதிகை வீரட்டம் சென்று பின் சிதம்பரம் சேர்ந்தார். காவிரியின் தென்கரையேறித் திருவாவடுதுறை அடைந்து கோயிலை வலம் வந்தார். ஒரு சமயம் காவிரிக் கரையில் சாத்தனூர் ஆ மேய்ப்பான் மூலன் என்பானைப் பாம்பு தீண்டி இறந்துபடி அவ்வுடம்பினை ஆக்குலங்கள் சுற்றி நின்று வருந்த, அந்த ஞானி அத்துயர் தீர்க்க நினைத்தார். தம்முடலை அரண் செய்து தம்முயிரை அவனுடலில் புகுத்தினார் திருமூலராய் எழுந்தார் என்ற செய்தியை சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிடுகின்றார்.

இவர் குறிப்பிடுவதிலிருந்து மூலன் என்று ஆட்டு இடையன் உயிர் பிரிந்ததால் அவனால் வளர்க்கப்பட்ட பசுக்கூட்டம் மிகவும் வேதனை யடைந்து துன்பமுற்று நின்ற காட்சியைக் கண்ட சிவயோகியார், அதனைக் காணப்பொறுக்காமல் நம் உயிரை மூலனின் உடலில் செலுத்தி அக் கூட்டத்தின் துயரை போக்கி அவற்றை ஓட்டிச் சென்று அவைகள் தத்தம் வீடுபோக அவர் தனித்து நிற்கிறார். இவர் தனித்து நிற்கும் நிலை யினைக் கண்ட மூலனின் மனைவி, என்ன ஆனதோ என்று பதறி அருகில் சென்று தன் கணவன் என்று நினைத்து தொட நினைக்கும் வேலையில் இங்கு உனக்கு என்னுடன் தொடர்பு இல்லை என மறுத்து பொதுமடம்

செல்கிறார். தன் கணவனின் இந்த செயலால் வேதனை அடைந்த மூலனின் மனைவி ஊரில் உள்ள பெரியவர்களை அழைத்து தன் நிலைமையினை எடுத்து கூறுகின்றார். நடந்தவற்றை ஆராய்ந்தவர்கள் இது பித்து நிலையன்று. சித்த நிலை விகற்பமில்லா சிவயோக நிலையில் இருக்கிறார் எனவுரைக்கின்றனர். உலக வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி பற்றற்ற நிலைக்குச் சென்ற இவர் சீவன் முத்தராய் விளங்குவதால் முன்னைப்போல் உன்னுடன் கூடார் என்று கூற கேட்ட மூலனின் மனைவி பெருதுயர்வுற்றாள்.

உறவினர்கள் என்று வந்தவர்களையும் அனுப்பிவிட்டு ஆநிரை வந்த வழியே சென்று தான் மறைத்து வைத்த தனது உடலைத் தேடலானார். அதுக் கிடைக்காதுப் போகவே சிவனை சித்தம் செய்து யோகத்தில் அமர்ந்து சிந்தனை செய்தார். சிவன் தந்த ஆகமப் பொருளைத் திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்பத் திருவுளம் கொண்டு இறைவனே தம் உடலை மறைப்பித்தான் என உணர்ந்தார். பின் அங்கிருந்து திருவாவடுதுறை சென்றார். அங்கு இறைவனை வணங்கித் திருக்கோயிலின் மேற்குப் புறத்தில் உயர்ந்த அரச மரத்தடியில் யோகத்தில் ஆழ்ந்தார். பிறவியாகிய தொடர்பினின்று உய்யும் பொருட்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் காட்டும் திருமந்திர மாலையினை ஓர் ஆண்டுக்கு ஒரு பாடலாகப் பரம்பொருளான சிவனைப் போற்றி ஒன்றவன்தானே என எடுத்துப் பாடினார் என்ற விரிவான செய்தியினை திருத்தொண்டர் புராணத்திலிருந்து அறியமுடிகின்றது.

திருத்தொண்டர் புராணம் போலவே புலவர் புராணமும் திருமூலர் வரலாற்றை தெளிவாக குறிப்பிடுகின்றது. இது திருமூலர் வரலாற்றை அறியவுதவும் இரண்டாவது சான்றாகும். இதில் கூறப்பட்ட செய்திக்கும் திருத்தொண்டர் புராணச் செய்திக்கும் சில வேறுபாடுகள் உண்டு.

1. ஆதிப் பொருளான மூலனோ, அவன் வழிப்போந்த ஒருவனோ தீதிலாச் சோழ நாடு சென்றான் என யாரையும் குறிப்பாக கூறாமல் பொதுப்படக் கூறுதல்.
2. திருமூலர் கொங்கணர் முதலிய சித்தரால் போற்றப்படல்.
3. திருமூலரை அகத்தியரோடு ஒப்புமை கூறல்.
4. தில்லையில் தாருகாவனத்திலும் உடல்கள் அமைத்தல்.

இவை நான்கும் புலவர் புராணத்தில் கூறப்பட்ட செய்தியாகும். இவை திருத்தொண்டர் புராணத்தில் காணப்படா செய்திகள். இவைத்தவிர மற்ற செய்திகள் அனைத்தும் ஒன்றுப்போல் இருக்கின்றன. எனினும் திருமந்திரத்தையும் அடிப்படையாகக் கொண்டு திருமூலர் வரலாறு கணிப்பது சிறந்ததாகும்.

திருமந்திரத்தின் மூலம் திருமூலர் வரலாறு ஓரளவிற்கு அறிய முடிகிறது. அவர் பாடிய மூவாயிரம் பாடல்களில் சுமார் 162 பாடல்களில் திருமூலர்

தம்மை உளப்படுத்தியனவாக உள்ளன. தற்சிறப்பாயிரத்தில் உள்ள குருபரம்பரை, திருமூலர் தம் வரலாறு கூறல் என்ற பகுதியில்

நந்தி அருள் பெற்றவர்கள் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர், மன்றுதொழுத பதஞ்சலி, வியாக்கிரமர், சிவயோக மாமுனி என என்னோடு எட்டுப்பேர்.

நந்தி அருளால் நாதன் என்னும் பேர் பெற்றேன். நந்தி அருளாளர் மூலனை நாடினேன் நந்தி வழிகாட்ட நான் இருந்தேன்.

மன்றில் நடம்புரியும் திருக்கூத்து கண்டபின் எழுகோடியுகம் இருந்தேன்.

சிவன் உறையும் ஆவடுதுறையில் சிவபோதி மரத்தின் கீழ் சிவனின் நாமங்கள் ஓதிச் சேர்ந்திருந்தேன்.

ஞேயம், ஞானம், ஞாதுரு, மாயை, மாமாயை, பரைசிவன் இவற்றை முற்றம் விளக்கினேன்.

கூத்தனின் சொற்படி கைலை வழியில் வந்தேன்.

என்ற வரிகளின் மூலம் திருமூலரின் வரலாறு அறிய முடிகின்றது.

திருமூலர் அரச மரத்தடியில் யோகத்தில் இருந்தார் என்பதில் கருத்து வேறுபாடு யாருக்கும் இல்லை. ஆனால் அவர் மூவாயிரம் ஆண்டுகள் இருந்து ஆண்டுக்கு ஒரு பாடலாக எழுதினால் என்றால், ஒருவர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்க முடியுமா என்ற கேள்வி சாதாரணமாக அனைவரின் உள்ளத்திலும் எழுவதாகும். யோகியர் காலம், இடம் இவற்றைக் கடந்து செல்லும் வல்லமை பெற்றவர்கள். அட்டமாசித்தி களைப் பெற்ற இவர்கள் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்தல் என்பது கடினமன்று. இருப்பினும் யோகத்திலிருந்தவர் மூவாயிரம் ஆண்டுகள் தனக்கு முன்போ அல்லது பின்னரோ இருந்ததை இருக்கப்போவதை அனைத்து ஞானமும் கடந்தவர்களாகிய யோகியர் கொண்டு செல்ல முடியும். நினைத்துப் பார்க்க முடியும். அப்படியாக திருமூலர் மூவாயிரம் ஆண்டுகளைத் தம் வாழ்நாளில் முன்னும் பின்னுமாகப் பார்த்துப் பாடியிருக்கலாம் என்று டாக்டர் இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகின்றார். எனினும் திருமந்திரத்தில் அகச் சான்றாக,

ஒப்பில் எழுகோடி யுகம் இருந் தேனே
இருந்தேன் இக் காயத்தே எண்ணிலி கோடி

என்ற வரிகளும் இங்கு நோக்கத்தக்கதாகும். மேலும் உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன் உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் எனக் கூறுவதால் குறிப்பிட்ட முறையில் வரையறையோடு உடம்பைப் பேணியதால் நீண்ட ஆயுளை பெற்றிருக்கலாம் எனவும் எண்ண இடம் உண்டு. மேலும் இவர் யோக நிலையில் இருந்து தொம், தத், அசி என்ற

நிலையில் இருந்து இறைவனோடு இரண்டறக் கலந்ததால் இவரால் மூவாயிரம் ஆண்டுகள் வாழ முடிந்தது என்றும் கொள்ளப்படுகின்றது.

**காலம்**

திருமூலர் வரலாறு பற்றி பல்வேறுக் கருத்துக்கள் கூறப்படுவதுப் போல், அவரது காலம் பற்றியும் அறிஞர்களிடையே பலக்கருத்துக்கள் எழுகின்றன. இராமாயணக்காலம் என்று சுட்டப்படுகின்ற கி.மு. ஆறாம் நூற்றாண்டுத் தொடங்கி கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரைப் பல்வேறு நிலைகளில் குறிப்பிடுகின்றனர். ஆனால் இவை அனைத்தும் ஏற்புடையதாக இல்லை என்று முனைவர் இரா. மாணிக்கவாசகம் மறுக்கின்றார். மேலும் இவர், திருமூலர் காலம் சேக்கிழார் காலத்திற்கு சற்று முந்தய காலமாகிய கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கும் இடைப் பட்ட காலம் என்று குறிக்கின்றார்.

இந்த காலக்கட்டம் அனைவராலும் ஏற்றுக்கொள்ளும்படி உள்ளது. காரணம், திருஞானசம்பந்தர் திருவாவடுதுறை சென்றபோது அவ்வூர்க் கோயில் கொடிமரத்தின் அருகில் புனிதமனம் வீசியதென்றும் அதன் கீழ் தோண்டியபோது திருமந்திரப்பாடல்கள் அடங்கிய ஏடுகள் காணப்பட்டன என்றும் ஒரு வரலாறு தொன்றுதொட்டு வழங்கி வருகிறது. இதனை உண்மை வரலாறு என்றுக் கொண்டால் திருமூலரின் காலம் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைக்காலமாகும் என்ற கருத்தை அறிஞர் மறைமலை யடிகள் குறிப்பிடுகின்றார். தெ.பெ. மீனாட்சிசுந்தரனாரும் இந்த காலத்தையே தமது நூலில் குறிப்பிடுகின்றார். மேலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரர் திருமூலரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். எனவே இவர் ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னர் தோன்றியிருக்க வாய்ப்பில்லை என்பது உறுதி செய்யப்படுகிறது. எனவே இவரது காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டி லிருந்து கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு இடைப்பட்டது என்பதை தெளிவாக உணரமுடிகின்றது.

நந்தியின் அருள் பெற்று நாதன் என்ற பெயர் பெற்று, திருக்கயிலை மரபில் தோன்றிய, வடக்கேயிருந்து திருவாவடுதுறை போந்த சிவயோகி ஒருவர் சிவன் சொன்ன ஆகமங்களை இனிய தமிழில் பாட விழைந்தார் என்பதும் இறந்துபட்ட மூலன் ஆயனின் உடலில புகுந்து ஆக்களின் துயர் துடைத்தார் என்பதும், மூலனின் மனைவி சுற்றம் என்று அனைவரையும் ஒதுக்கிவிட்டு திருவாவடுதுறை கோயிலின் மேற்கே உள்ள அரசமரத் தடியில் யோகத்தில் அமர்ந்து மந்திர மாலையைப் பாடினார் என்பதும் அறியப்படுகின்றது. இவர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து ஆண்டுக் கொன்றாக மூவாயிரம் பாடல்கள் பாடினார் என்பதும் அறியப்படுகின்றது. யோகநிலை கடந்து வாழ்பவர்கள் காலம் கடந்து வாழமுடியும் என்பது அறிவியல் பூர்வமான உண்மையாக உணரப்படுகின்றது.

# 72. கருவூரார் பாடல்களில் சைவசித்தாந்த மரபுகள்

திருமதி. இரா. மணிமேகலை, கோவை.

**சைவசித்தாந்தமும் திருமுறைகளும்**

சிவபெருமானைப் பற்றிய நிலையையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் குறிப்பது சைவசித்தாந்தம் என்பர். சைவ சமயத்தின் கொள்கை களை விளக்கும் நூல்கள் சைவசித்தாந்த சாத்திரம் எனப்படுகின்றது. சைவ சித்தாந்தம் சிவாகமங்களின் பிழிவாகக் கூருதப்படுகின்றது. இக்கருத்தை,

"சிவாகமங்கள் சித்தாந்தமாகும்"

என்று சிவஞானசித்தியார் குறிப்பிடுகின்றது. சித்தாந்தம் என்னும் சொல் 'முடிந்த முடிவு' என்ற பொருளைத் தருகின்றது.

தத்துவங்களை அறிவதால் தத்துவம் கடந்த பொருளாகிய இறைவனை அறியமுடியும் என்று கூறப்படுகின்றது. இதை,

"தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை அறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந்தானே"

என்ற திருமந்திரத்தால் புலனாகின்றது. தத்துவ ஞானத்தின் தன்மை யறிவதனால் தத்துவங்களுக்கு தத்துவனாயும்; அதைக் கடந்தும் நிற்கும் பரம்பொருளின் தன்மை அறியப்படுவது விளக்கப்படுகின்றது.

மெய்கண்ட சாத்திரங்கள் எனப்படும் பதினான்கு சைவசித்தாந்த நூல்களும் சைவசமயத்தின் அனைத்துக் கொள்கைகளையும் விளக்குவதாக அமைகின்றன. இந்நூல்களில் ஆசிரியர்கள் சைவ சித்தாந்தத்திற்குரிய பொருள் விளக்கத்தை சிவாகமங்களில் இருந்தே எடுத்துக் கொண்டிருக் கிறார்கள். சைவ சித்தாந்தக் கொள்கை விளக்கம் திருமுறைகளிலிருந்து பெற்றிருக்கிறார்கள்" என்பது அறிஞர் கருத்து.

இதன் அடிப்படையில் பன்னிரு திருமுறைகளையும் சைவசித்தாந்த நோக்கில் காண்பது அதன் திருவருள் நலத்தை உணர்வதற்கு வழியாக அமைகின்றது.

**பதிக் கொள்கை**

சைவசமயம் இறைவனைச் சிவம் என்ற பெயரால் சுட்டுகின்றது. தத்துவ முறையில் கூறும்பொழுது இறைவனைப் பதி என்ற பெயரால்

குறிப்பிடுகின்றது. சிவம் என்ற சொல் மங்கலம் என்னும் பொருள் உடையது. இதை,

**''குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்**
**நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்**
**அறைகுவர் சிவன் என அறிவின் மேலவர்**
**இறைஅவன் பெருமையை யாவர் கூறுவார்''**

என்று காஞ்சிப் புராணம் எடுத்துரைக்கின்றது.

தன்னின் மிக்க தலைவன் இல்லாத இறைவனை சைவம் 'ஏகன்' என்றும் அழைக்கின்றது. இது,

**''ஒருவன் என்னும் ஒருவன் காண்க''**

என்ற திருவாசகத்தால் அறியப்படுகின்றது.

திருவிசைப்பாவில் கருவூர்த்தேவர் இறைவனை

''மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய்
முகத்தலை அமர்ந்து''

என்று ஆதியும் அந்தமுமாய் நடுவுமாய் இருக்கும் இறைவனின் தன்மையைக் காட்டுகின்றார்.

சிவஞானபோதம் முதல் சூத்திரம் மேற்கண்ட அடியை பின்வருமாறு விளங்குகின்றது.

''அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்''

உலகமானது எங்கேனும் ஓரிடத்திலிருந்து தோன்றி இருக்கவேண்டும். அவ்வாறு தோன்றிய இடத்திலிருந்துதான் மீண்டும் வெளிப்படவேண்டும் என்று கூறப்படுகிறது. இதை, ''உலகம் தோற்றம், நிலை, இறுதி என்று முத்தொழிலையும் உடைமையினாலே அத்தொழிலைச் செய்யும் கர்த்தாவால் அவற்றைத் தோற்றியவாறே நின்று ஒடுங்கும்'' என்பர்.

இவ்வாறு உலகம் யாவும் தோன்றுவதற்கு முதலிடமாகவும் ஒடுங்குகின்ற முடிவிடமாகவும் இருந்துதான் எந்த விதத்திலும் கேடில்லாது விளங்கும் இறைவனது நிலையினைக் கருவூரார் மேற்கண்ட அடிகளில் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

**இறைவன் திருமேனி கொள்ளும் காரணம்**

சிவபெருமான் உமையவளை தன் இடப்பக்கமாகக் கூடியுள்ளான். அப்படிக் கூடியிருந்தும் யோகமூர்த்தியாய் யோகநிலையில் இருக்கிறான். இவ்வாறு அம்மையொடு கூடியிருக்கும் நிலையிலும் யோகம் புரியும் தன்மையைக் கருவூரார்,

''மங்கையோடிருந்தே யோகு செய்வானை''

என்று காட்டுகின்றார். மங்கையோடு இறைவன் இருக்கும் கருத்து உலகம் இயங்கவேண்டும்; உயிர்கள் ஈடேற வேண்டும் என்பதாகும். அம்முறையில் இறைவன் திருமேனிதாங்கி யோகநிலையிலும் இறைவியோ டிருந்து அருள்புரிதல் உயிர்களின் மீது கொண்டுள்ள கருணையினால் தான் என்ற சித்தாந்தக் கருத்து விளக்கம் பெறுகின்றது.

திருஞானசம்பந்தர் இறைவன் இவ்வாறு திருமேனி கொள்ளும் தன்மையை பின்வருமாறு காட்டுகிறார்.

"கரும்பமர் வில்லியைக் காய்ந்து
காதல் காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்பால்
மகிழ்ந்த அற்புதம் செப்பரிதால்"

இதில் இறைவன் மன்மதனை எரித்துவிட்டு உமையவளோடு கூடி இருக்கும் நிலையைக் கூறுகின்றார்.

இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்புரிதல் பொருட்டு போகவடிவம், யோகவடிவம், கோரவடிவம் என்று மூன்று வடிவங்களைக் கொள்வான். இதனைச் சிவஞான சித்தியார்,

" ஒன்றோடு ஒன்று ஒவ்வா வேடம்
ஒருவனே தரித்துக் கொண்டு
நின்றலால் உலகம் நீங்கி
நின்றான் என்றும் ஓரார்
அன்றி அவ்வேடம் எல்லாம்
அருள்புரி தொழில் என்று ஓரார்"

என்று இறைவன் எத்தனை விதமான திருமேனிகளைக் கொண்டாலும் சிந்தனைக்கு எட்டாதவன் என்றும் விளக்குகிறது. இவ்வாறு திருமேனி கொள்ளுதல் உலக உயிர்களுக்கு இன்பம் கொடுத்தல் பொருட்டுத்தான் என்ற கருத்து பெறப்படுகின்றது.

**சிவமும் சக்தியும் பிரிவின்மை**

சிவம் சக்தி என்று இரண்டாகச் சொல்வது உலகியல் வழக்கு, ஆனால் தத்துவம் சிவமும் சக்தியும் பிரிவற்றது என்று கூறுகின்றது. இறைவனது கருணையே சக்தி என்ற வடிவில் வழங்கப்படுகின்றது.

"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சக்தி
பின்னமிலான் எங்கள் பிரான்"

என்று சக்தியை உடைய சத்திமானாக இறைவன் விளங்கும் தன்மையை விளக்குகின்றார்.

சக்தி இறைவனுக்கு குணமாக இருக்கும் தன்மைக் குறித்து,

"சக்திதான் சத்தனுக்கு ஓர்
சுத்தியாம்; சத்தன் வேண்டிற்று
எல்லாம் ஆம் சக்தி தானே"

என்று சிவஞான சித்தியார் எடுத்துரைக்கிறது. இவ்வாறு சக்தியும் சிவமும் பிரிப்பின்றி இருக்கும் தன்மை காட்டப்படுகிறது.

திருவிசைப்பா இந்நிலையை,

**"கரியரே இடந்தான் செய்யரே ஒருபால்"**

என்று விளக்கமாக எடுத்துரைக்கின்றது.

**உயிரின் இயல்பு**

உயிர் சிற்றறிவு உடையது. அறிவித்தாலன்றி அறியமாட்டாதது. மேலும், உயிர் தனித்து நிற்கும் இயல்பின்றி ஏதேனும் ஒரு பொருளைப் பற்றி நிற்கும். அவ்வகையில் பசுவினைப் பற்றி இருக்கும். மும்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என்பன. மும்மலங்களாகிய பாசம் நீக்கம் பெற்ற உயிர் சிவப்பேறு அடையும். சைவசமயத் தத்துவத்தின் வழி மும்மலமும் நீங்க வேண்டுமென்றால் குருநாதன் உயிருக்குத் தீட்சை புரியவேண்டும். சிவமே குருவாய் வருதல் மரபு.

**"புவனியில் சேவடி தீண்டினன் காண்க**
**சிவன் என யானும் தேறினன் காண்க"**

என்று சிவமே குருவாய் வந்ததைச் செப்புகிறது திருவாசகம், எங்கும் இலாத இன்பம் உயிரின்பால் அருளவேண்டி எளிமையாய்க் குருவடிவில் வந்து ஆட்கொள்வான் இறைவன்.

இதனைச் சிவஞான சித்தியார்

**"துன்னிய ஐம்புல வேடர் சூழலில் பட்டுத்**
**துணைவனையும் அறியாது துயர்உறும்தொல் உயிரை**
**மன்னும் அருள் குருவாகி வந்து அவரின் நீக்கி**
**மலம் அகற்றித் தானாக்கி மலர் அடிக்கீழ் வைப்பன்"**

என்று கூறுகின்றது. அவ்வாறு தானே வந்து தலையளித்து ஆட்கொண்டு மாயாப் பிறவியின் மயக்கம் கெடுத்த தன்மையைக் கருவூர்த் தேவர்.

**"என்னையுன் பாதபங்கயம் பணிவித்து**
**என்பெலாம் உருக எளி வந்து**
**உன்னை என்பால் வைத்து எங்கும் எஞ்ஞான்றும்**
**ஒழிவற நிறைந்த ஒண்சுடரே**
**முன்னை என் பாசம் முழுவதும் அகல**
**முகத்தலை அகத்தமர்ந்து எனக்கே"**

என்று கூறுகின்றார். தன்னையும் அறியாமல் தன் தலைவனாகிய இறைவனையும் அறியாமல் இருந்த உயிருக்கு குருவடிவாகி திருவருள் வருகின்றது. அது உயிரின் மும்மலக் கட்டினையும் தீட்சையினால் நீக்கு கின்றது. இவ்வுண்மை இப்பாடலில் சிறப்பாக எடுத்துரைக்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### ஐம்புலன்களால் அல்லல்படும் நிலை

உயிர்களுக்கு அறிவு உண்டாகும் பொருட்டு இறைவன் உடலையும் பொறிகளையும் தந்தான். ஐம்புலன்களால் அனுபவித்து உயிரறிவைப் பெருக்கிக் கொள்கிறது உயிர். அதே நேரத்தில் ஐம்புலன்களால் உயிர் தேடிக்கொள்ளும் வினைகளால் அல்லல்பட்டு ஆற்றாது அழுகின்றது. உதவிக்கு வந்த கரணங்கள் பகையாகின்றது.

இதனைக் கருவூரார்,

''இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்
ஏழையேற்கு என்னுடன் பிறந்த
ஐவரும் பகையே யார்துணை என்றால்
அஞ்சல் என்று அருள் செய்வான்''

என்று ஐம்புலன்களால் அவதியுற்ற நிலையைக் காட்டுகிறார். இதனால், உயிரின் அறிவானது இறைவன் செம்மலர்த் திருவடிகளை அடையப் பயன்படாது என்ற தத்துவக் கருத்து விளக்கம் பெறுகின்றது.

### ஆணவ இருள் கிழித்த தன்மை

உயிரைப் பற்றி இருக்கும் பாசங்களுள் ஒன்று ஆணவ மலம். இது மூலமலம் எனப்படுகிறது. சிவத்தை அடைவதற்கு உரிமை உடைய உயிரை சிற்றறிவாய் திகழ வைப்பது ஆணவமலத்தின் செயல் ஆகின்றது. இதை,

''அஞ்ஞானம் காட்டும் ஆணவம்''

என்று காட்டுவர்,

மேற்கூறிய ஆணவ மலத்தின் கடும் இருள்மையைக் கிழிக்கின்றது மெய்ஞான பானுவாகிய குருநாதரின் வரவு. இதனைக் கருவூர்த்தேவர்

''இருள் கிழித்து எழுந்த ஞாயிரே''

என்று குறிப்பிடுகின்றார்.

திருமுறைகள் அறியாமை இருளை அகற்றி மெய்யறிவின் பாதைக்கு இட்டுச் செல்லும் இக்கருத்தைக் கருவூர்த்தேவர் பின்வருமாறு கூறுகின்றார்.

''இருள்கிழித்து எழுந்த சிந்தையரே''

அறியாமை படலத்தைக் கிழித்து அறிவொளி பொங்கிய உள்ளத்தினராய் திகழும் தத்துவக் கருத்து விளக்கம் பெறுகின்றது.

இவ்வாறு கருவூர்த்தேவர் பாடல்களில் சைவசித்தாந்த மரபு, கொள்கைகள் எடுத்தாளப்படுவதை சில எடுத்துக்காட்டுக்கள் மூலம் கண்டோம்.

# 73. திருமந்திரத்தில் சசிவன்ன போதம்

புலவர் சு. மதியழகன், தம்மம்பட்டி.

### திருமந்திரம்

திருமந்திரம் - எந்நூலுக்கும் இந்நூலே மூலம் (திருமூலம்). எனவே இந்நூலை இயற்றியவர் 'திருமூலர்' எனப்பட்டார். மந்திரம் என்ற பெயரில் இந்நூல் ஒன்றே விளங்குவது கொண்டு இந்நூல் பெருமையை உணரலாம்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'' (தொல்காப்பியம்)

ஒல்காப் புகழ் தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களாகிய பாட்டும், தொகையும், உலகப் பொதுமறையாம் தமிழ்மறை திருக்குறளும் பண்டைத் தமிழர் வாழ்வியல் நெறியை உலகிற்கு பறைசாற்றவன ஆகும்.

இடைக்காலத்திய திருமுறைகளும், பிற்காலத்திய சாத்திரங்களும் திருமந்திரத்தின் கருத்துக்களையே உள்ளடக்கி இருக்கின்றன. தோத்திரங் களில் சிறந்தது திருவாசகம்; சாத்திரங்களில் சிறந்தது திருமந்திரம் என்பது வள்ளலார் வாக்கு. திருமந்திரம் பத்தாம் திருமுறையாக தொகுக்கப் பட்டுள்ள போதிலும் தோத்திரமாகவும், சாத்திரமாகவும் விளங்கும் பெருமை உடையது. தமிழ் வேதமாகவும், ஆகமமாகவும் போற்றப்படுகிறது.

''வேதாகமம் செப்பலுற்றேன்'' - திருமூலர்

### சிறந்தது பயிற்றல்

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டது. மனிதப் பிறவி யின் பயனை எய்த திடம்பட மெய்ஞானம் சேர்தல் வேண்டும். அதற்கு நெடிது வாழ்தல் அவசியமாகும். அதற்குரிய உபாயங்களாக யோக நெறிகள் திருமந்திரத்தில் பேசப்படுகின்றன. இளமையிலேயே 'சிறந்தது பயிற்றல்' வேண்டும். பின்னர் பார்த்துக் கொள்ளலாம் என்று இருந்து விடல் கூடாது. யாக்கை நிலையில்லாதது அன்றியும், முதுமையில் நோய்நொடிகளும், தளர்ச்சியும் ஏற்பட்டுவிடும். மானிட வாழ்க்கையின் பயன் வீடுபேறு எய்துதலே ஆகும். 'குறிக்கோளிலில்லாது கெட்டேன்'' என்பது அப்பர் வாக்கு.

சரியை, கிரியை, யோகம் ஞானத்திற்கு ஏது; ஞானம் ஒன்றே முத்திக்கு ஏது. ஞானமாவது, பதி, பசு, பாசம், தெரித்தல். ஞானத்தில் சரியை கேட்டல், கிரியை சிந்தித்தல். யோகம் தெளிதல், ஞானம் நிட்டை கூடுதல். ஞானம் கனிந்த நலம் பக்தி; ஐந்தாம் பேறு. ஞான நிட்டை கூடுதற்கு ஆதாரம் யோகம்; ஆதேயம் ஞானம்.

**ஷடாந்த சமரசம்**

திருமந்திரம் வேதாந்தம், சித்தாந்தம், யோகாந்தம், நாதாந்தம், போதாந்தம், கலாந்தம் என்னும் ஆறு அந்தங்களையும் சமரசமாகக் காண்பது. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளல் இராமலிங்கர் வடலூரில் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் நிறுவி அருளினார்.

**எட்டாந் தந்திரம்**

திருமந்திரம் முழுமையும் இக்கருத்துக்கள் காணப்பட்டாலும் வேதாந்த ஞானியான தத்துவராய சுவாமிகளது சசிவன்ன போதம் என்ற நூலில் திருமந்திரம் எட்டாம் தந்திரத்தின் கருத்துக்கள் பெருமளவில் காணப் படுகிறது.

எட்டாம் திருமுறை திருவாசகம், திருக்கோவையார் ஆகும். சைவ சித்தாந்த சாத்திரங்களில் முதன்மையான சிவஞானம் போதம் எட்டாம் சூத்திரத்திற்கு இலக்கியமாய்த் திகழ்வது போல திருமந்திரம் எட்டாம் தந்திரமும், மெய்ஞான அனுபவத்தை உணர்த்தும் பகுதியாகும்.

**சசிவன்ன போதம்**

இனி சசிவன்ன போதத்தைக் குறித்து ஓரளவு சிந்திப்போம்.

ஞானக்கூத்தர் அருளிய விருத்தாசல புராணம், சசிவன்ன சருக்கம், கோவர்த்தன சருக்கம் ஆகியவைகள் சசிவன்னனது வரலாற்றை விரவாகக் கூறுகின்றன.

துறைமங்கலம் சிவப்பிரகாசர் இயற்றிய பிரபுலிங்க லீலையுள் சசிவன்னனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகிறது. ஆத்திச்சூடி கதை களிலும் சசிவன்னம் பேசப்படுகிறது.

திருஇறும்பூதூர் தத்துவராய அடிகள் தாம் இயற்றிய மோகவதைப் பரணி என்ற நூலில் பேய்கள் இரங்கியது என்ற அத்தியாயத்தில் வருவ்தே சசிவன்ன போதம் ஆகும். 'சசிவன்னன் ஆமே' என்பது திருமூலர் வாக்கு.

**ஷோடச கலா பிரசாதம்**

ஷோடச கலா பிரசாத அனுபவத்தைப் பெற்றவர்கள் சசிவன்னம் என்னும் தகுதியை அடைந்தவர்கள் ஆவார்கள். மதிமண்டலம், நிலா

முற்றம், எழுநிலைமாடம் என்பன நம்முடைய உடலில் கண்டத்திற்கு மேல் பெறுகின்ற ஞான அனுபவங்கள் ஆகும். சிரகிரி, தலைமலை, சென்னிமலை, கைலாயம் என்பனவும், புருவமத்தி (ஆக்ஞா அல்லது நெற்றிக்கண்), சிரநடு (பிரம்ம ரந்திரம் அல்லது ஆயிர இதழ் தாமரை), சிரமேல் (துவாதசாந்தம், சோடசாந்தம் முதலியன) என்பனவும் குழூஉக் குறிகளாக ஞான நிட்டையையே குறிக்கும். நிட்டை நிலைபெறுதல் என்னும் பொருளைத் தருவது. சைவ சித்தாந்தக் குறியீடாக தாடலை அனுபவம் (தாள் + தலை = தாடலை) பேசப்படும்.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் (குறள்)

மலர் - ஈண்டு, சகஸ்ராரம் என்னும் ஆயிர இதழ் தாமரை, இதய தாமரை எனலும் ஆம். மாணடி சேர்தல் - திருவருட் சிந்தையில் தோய்ந்திருத்தல். இதனால் திருவருளில் திளைத்திருத்தலே நெடிது உய்க்கும் ஆறு என்பது பெறப்படும்.

**சசிவன்னன்**

சசிவன்னன் ஓர் அந்தண இளைஞன் அவன் தீநெறிகளில் சென்று அனைத்து பாவங்களையும் புரிந்து கொடு வினைகளுக்கு ஆளாகி துன்புற்றான். நோய்களும், முதுமையும், மரண பயமும், அலகை வாழ்வும், நரக வேதனைகளும், மறுபிறவித் துயர்களும் அவனுக்கு உயிரச்சத்தை விளைவித்தன.

அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறம்தெரிந்து தேறப் படும் (குறள்)

இந்நிலையில் அவனை தேவதத்தன் என்பான் ஆற்றுப்படுத்த கோவர்த்தம் சத்தீஸ்வரர் கோவிலில் தங்கியிருந்த சிவஞானி நந்தி பராயணரை அடைந்து பணிய அவருடைய திருநோக்கால் அவனுடைய பாவங்கள் நீங்கி தூய்மையுற்றான். 'ஞானி விழிபட பாவங்கள் ஓடும்' அன்றோ? பின்னர் அவரால் ஆட்கொள்ளப்பெற்று அவருக்கு பணிவிடை செய்திருந்து அவருடைய பாதோதகம் பிரசாதம் பெற்று அவருடைய உபதேசத்தால் பக்குவமுற்றான். இருவினை ஒப்பு, மல பரிபாகம், சத்திநிபாதம், கண்ட குருநாதரும் அவனுக்கு ஞான தீட்சை அளித்து அவனை ஞான நிட்டானுபூதி செல்வனாக்கினார். 'சசிவன்னப் பேறு' பெற்றான். அவனது அனுபவ உறையே சசிவன்ன போதமாகும். சசிவன்னனது கூற்றாக வைத்து ஆசிரியர் கற்பனை நயம்பட எளிய நடையில் இந்நூலை செய்திருக்கும் திறம் போற்றுதற்குரியது. இந்நூல் இராமலிங்க அடிகளாரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த நூலாகும்.

நந்தி பராயணர், சசிவன்னன் ஆகியோர் வாழ்ந்த கோவர்த்தம் இன்று கோபராபுரம் என்று வழங்கப்படுகிறது. திருமுதுகுற்றத்திற்கு அண்மையில் உள்ளது. இன்றும் அங்கு சத்தீஸ்வரர் கோவில் ஈசான கங்கைக் கரையில் அமைந்துள்ளது. இக்கதை சிவபெருமான் திருமாலுக்கு சிவதீக்கை செய்துவிக்கும்போது அவருக்கு உபதேசிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து என' என்ற சிவஞான போத நூற்பாவால் ஞானாசிரியன் மாணாக்கனுக்கு கதை கூறி உபதேசிக்கும் மரபு பெறப்படும். 'பராநந்தி ஆனையே, தென்னவன் நந்தி' என்பன திருமூலர் வாக்குகளாகும்.

**நூலாசிரியர் வரலாறு**

விருதாச்சல புராண ஆசிரியர் ஞானக்கூத்தர் வேப்பூரை அடுத்த சிவன்பாக்கம் (தற்போது சேப்பாக்கம் என்று வழங்கப்படுகிறது) என்னும் ஊரினர். இவர் வீரசைவாதீன குரு முதல்வர் ஆதி சிவப்பிரகாசரின் மாணாக்கர் ஆவார்.

வீரசைவ மரபினரான தத்துவராயர் மகத நாட்டைச் சேர்ந்த வீரை என்னும் ஊரினர். சொரூபானந்தரின் மாணாக்கரும் அவரது தங்கை மகனாரும் ஆவர். குருவை சிவமாகவே போற்றிய பெருநெறியினர். இவ்விருவரும் திருச்சி மாவட்டம், திருவெள்ளரைக்கும், திருப்பாச்சிலாச் சிரத்திற்கும் இடைப்பட்ட திருப்பைஞ்ஞீலியை அடுத்த கானகத்தில் தவம் புரிந்திருந்த சித்தர் சிவப்பிரகாசரின் அருள் பெற்றவர்கள். (அவ்விடம் தற்போது கோவர்த்தன குடி என வழங்கப்படுகிறது) சிவப்பிரகாச பெருந்திரட்டு, குறுந்திரட்டு என்னும் நூல்கள் தம் குரு முதல்வர் திருப் பெயரால் இவர்களால் செய்யப்பெற்றவை ஆகும். தத்துவராயர் மேலும் பல வேதாந்த நூல்களைப் படைத்துள்ளார். அவற்றுள்ளும் முடிமணியாகத் திகழ்வது சசிவன்ன போதம் ஆகும்.

ஆறகழூர் மகத நாட்டின் தலைநகரமாகும். ஆறகழூரை தலைநகராகக் கொண்டிருந்த பூபதி வானகோவரையனைக் கம்பர் ஆற்றுப்படை பாடி சிறப்பித்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மகத நாடு ஆத்தூருக்கும், திருக்கோவலூருக்கும் இடைப்பட்ட பகுதியாகும். வீரை குகையூருக்கு அண்மையில் அமைந்துள்ளது. தத்துவராய அடிகள் அதிட்டானம் சேத்தியாத்தோப்பை அடுத்த திருஇறும்பூதூரில் (இந்நாளில் எறும்பூர் என வழங்கப்படுகிறது) அமைந்துள்ளது. கோயிலூர் வேதாந்த மடத்தைச் சார்ந்த சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடாலயத்தின் நிர்வாகத்தில் உள்ளது.

சசிவன்ன போதம் திருமந்திரம் எட்டாம் தந்திரம் சிவப்பிரகாச பெருந்திரட்டு உபதேச பணை ஆகியவற்றிற்கு குகையூர் திருமூல

சித்தநாதேஸ்வர ஆதீனத்தைச் சார்ந்த மூதறிஞர் பேராசிரியர் அடிகளாசிரியர் உரை குறிப்பிடத்தக்கது. அடிகளாசிரியர் வீரசைவ மரபினர்.

**நூல் நுவலும் பொருள்**

இனி திருமந்திரம் எட்டாம் தந்திரத்தில் பேசப்படும் கருத்துக்களை தத்துவராயர் நோக்கில் சிறிது சிந்திப்போம்.

"மற்றும் பல பிதற்றி ஆவதென்? பேதைகாள்! பேணுமின்" என்பர் ஞானசம்பந்த வள்ளல். இக்கருத்தே இவ்விரு நூல்களிலும் வலியுறுத்தப் படுகிறது.

உயிர்களுக்கு உடல்களைத் தந்து, அவ்வுயிர் உடல்கள் வாழ்வதற் கேற்ற உலகங்களைப் படைத்து உயிர்களின் கருவி கரணங்களுக்கு உலகியற் பொருள்கள் பயன்படும் வகையில் அவற்றை அமைத்து உயிர்கள் உய்யும் வகை இயக்கி வருபவன் இறைவன். இதனை எண்ணித் திளைக்கும் திருவருள் உணர்வே பக்தி எனப்படும். இந்நன்றி உணர்வு சித்தம் வெளிப் பட்ட ஆன்மாக்களாகிய மானிடர்க்கே அமைவதாகும். கடவுளுடைய படைப்புக்களுள் சுதி உன்னதமான அற்புதப் படைப்பு மானிடப் பிறவி. இது கடலை கைகளாலேயே நீந்தி கரை சேர்ந்ததற்கு ஒப்பாகும். 'அரிதரிது மானிடராய்ப் பிறப்பதல் அரிது' என்பர் ஆன்றோர். ஆறறிவு படைத்த மக்கள் மாந்தர் எனப்படுவர்.

'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே'

'மக்கள் தாமே ஆறறிவுயிரே'

'மாவும் மாக்களும் ஐயறிவினவே' (தொல்பொருள் மரபு)

ஈண்டு 'மாக்கள்' என்பது சிந்திக்கத்தக்கது. பிறந்து இறந்து போதற்கு உரியன ஐயறிவின. ஆறறிவு படைத்த மாந்தர் விடுதலும் (ஆணவமல நீக்கம்), பெறுதலும் (சிவப்பேறு) என்னும் வீடு பேற்றிற்கு உரியர். வீடுபேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

உயிர் வாழும்போதே இவ்வனுபவத்தை பெறுபவரே சீவன்முத்தர்கள். அத்தகையரோ நிலைபேறுடைய நிட்டானுபூதிச் செல்வர் ஆவர். நித்தியா அநித்திய விவேகம் சத்விசாரத்தால் வரும். நில்லாதனவற்றைத் தள்ளி நிலையானவற்றைக் கொள்ளும் உள்ள உறுதியே வைராக்கியம் எனப் படும். இத்தகைய வைராக்கியமே வீரம் ஆகும். வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் என்பன சாந்தலிங்கர் அருளிய வேதாந்த கருத்துடைய வீரசைவ நூல்கள். 'ஐம்புலன் தன்னை வெற்றானது வீரமே வீரம்' என்பது ஔவை வாக்கு.

## சகஜநிட்டை

பலவாயும், சடமாயும் உள்ளவை நில்லாதன, ஒன்றாயும் சித்தாயும் உள்ளது நிலைபேறானது. நில்லாதனவற்றை ஆய்ந்து, கழித்து எஞ்சிய சீவ அறிவும் (தூல அறிவு), பர அறிவும் (சூக்கும அறிவு), சிவ அறிவும் (காரண அறிவு) ஆகிய இம்மூன்றும் ஒன்றாய் கனுவர நிற்பதுவே குருதுரியம் எனப்படும். ஈண்டு ஒன்றாய் என்றது அத்துவித நிலை. அதாவது, அகண்டமாய், அபின்னமாய், சமரஸ்மாய்த் திகழ்வது. சமரஸ்யம் என்பதற்கு பிரிப்பற நிற்றல் என்பது பொருள். இந்நிலை சிரத்தா பக்தி, நிட்டா பக்தி முதலான அறுவகை இணைப்பால் (சடுத்தல யோகம்) கைவரப் பெறும். சகஜநிட்டை குமாரதேவர் அருளிய நூல்களில் ஒன்று. தாயுமான அடிகள் 'சகஜ நிட்டைக்கும் அறிவில்லா பேதைக்கும் வெகுதூரமே' என்பர்.

## திருவருள் உணர்வு

இத்தகைய ஞான முதிர்வு சிந்தனையாளர்களின் கருத்துக்கு திருவருளாள் புலப்பட்டு அனுபவப்படுவதாகும். அத்தகைய திருவருள் உணர்வற்ற ஆராய்ச்சியாளர்கள் தன்னை அறிதல் (சீவ துரியம்), தன் முதல்வனை அறிதல் (பர துரியம்) என்ற நிலைகளில் அவ்வந்நிலை களே பெரிதெனக் கருதி மேற்செல்லாமல் நின்று விடுவர்.

''தன்னையறிந்து இன்பமுற வெண்ணிலாவே - ஓர்
தந்திரம்நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே''

(சீவ துரிய அனுபவம்)

''நாதமுடி மேலிருக்கும் வெண்ணிலாவே - அங்கே
நானும் வர எனக்கோர் தந்திரம்நீ சொல்ல வேண்டும்
வெண்ணிலாவே''

(பர துரிய அனுபவம்)

''ஆணிப்பொன்னம்பலத்தே கண்ட காட்சிகள் அற்புத காட்சியடி!''

''எனக்கும் உனக்கும் இசைந்த பொருந்தம்'' (சிவ துரிய அனுபவம்)

என்பன அவ்வனுபவத்தைக் குறித்து வள்ளலார் பாடியுள்ளவை. பின்னும் அவரே என்னுடைய அறிவு இப்போது அண்டாண்டங்களுக்கு அப்பாலும் சென்று கொண்டிருக்கிறது என்பர்.

திருவருள் உணர்வு இல்லாதவர்கள் கிடைத்த அச்சொற்ப சுகத்திலே மயங்கி யோக நிட்டையில் லயித்து சித்துக்கள் கைவரப் பெற்று கலங்கிடுவர்.

மனவாசகம் கடத்தல், ஒழிவில் ஒடுக்கம் எய்துதல், சத்திய ஞான தரிசனம் பெறுதல் என்ற அனுபவங்களைக் கடந்து சத்திய ஞான அனந்தானந்த அனுபவம் ''மோனம் என்பது ஞான வரம்பு'' என்ற நிலையை அடைதல்

வேண்டும். தேனீ சர்க்கரைப் பாகில் அழுந்தினால் அதிலிருந்து மீளுவது அரிது; தேனில் அழுந்தினால் மீண்டு எழுந்து பறந்துவிடும். அதுபோல விட்ட இலக்கணை, விட்டு விடாத இலக்கணை, விடாத் இலக்கணை, இலக்கணாதீத வரிசையில் ஞானநிட்டை கூடி அனுபவம் பெறுதல் வேண்டும். அனுபவம் என்பது அழுந்தி அறிதல் என்பர் சிவஞான சுவாமிகள்.

### இயற்கைக் கடவுள் உண்மை

இயற்கைக் கடவுள் உண்மை என்பது சிவ சொரூப லட்சணம். இயல்பாகவே பாசங்களால் பற்றப்படாத தூய அறிவு வடிவமான முழு நிறைவான அவயவப்பகுப்பில்லாத ஒளிமயமான சர்வ சுதந்திரமான நிலை. இது உயிர்க்குணங்கள் இல்லாத எண்குண சச்சிதானந்த சொரூபம்.

### இயற்கைக் கடவுள் உண்மை விளக்கம்

இயற்கைக் கடவுள் உண்மை விளக்கம் என்பது பேரருள் உடைமை. உயிர்கள் சிவத்தை நேரேகூட இயலாது. உயிர்முன் உயிர்வரின் அவற்றைப் புணர்த்த இடையில் உடம்படுமெய் தோன்றுமாப்போல ஆன்மா அருளைப் பெற்று அருளுருவுற்று சிவத்தைக் கூடி சிவமாம் தன்மை பெறும். அதற்கு காயத்துள் நின்ற கடவுளைப் போற்றுதல் வேண்டும். இறைவன் ஊனில், உயிர்ப்பில், உள்ளத்தில், உயிரில், உலகில் கலந்து நின்று உயிர்க்குயிராய் அணுவினுக்கு அணுவாய் இருந்து அவற்றைத் தொழிற்படுத்தி உயிர்களை உய்விக்கின்றான். இந்நிலை கடவுளது பொதுநிலையாகும். 'அம்மையப்பரே உலகிற்கெல்லாம் அம்மையப்பராதல் அறிக' என்ற திருக்களிற்றுப் படியார் வாக்கிற்கிணங்க இப்பரன் என்னும் பதிநிலையே 'வழிபடு தெய்வம் நிற்புறம் காக்க' எனப்படும் சங்க இலக்கிய வாழ்வியல் நெறியாகும். வாழ்க்கையே வழிபாடு. ஏனைய சகுணோபாசனைகள் சிறுதெய்வ வழிபாடுகளாகும்.

### சன்மார்க்க சாதனம்

வள்ளலார் கூறும் சன்மார்க்க சாதனங்கள் இரண்டு. ஒன்று சத்விசாரம் மற்றொன்று பரோபகாரம். இப்பரோபகாரம் என்னும் உயிர் இரக்கமே ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையைத் தருவதாகும். 'எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி இரங்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே' என்பர் தாயுமானவர். குமாரதேவர் அருளிய சுத்த சாதகம், சிவப்பிரகாசர் அருளிய அத்துவித வெண்பா, சிதம்பர சுவாமிகளின் திருப்போரூர் சன்னதி முறை, பஞ்சாதிகார விளக்கம், முத்தையா சுவாமி களின் சின்மயதீபிகை, சீர்காழி முத்துத் தாண்டவரின் கீர்த்தனைகள் என்பன ஞான அனுபூதி நூல்களாகும். இப்படி இன்னும் எத்தனையோ ஞான அனுபூதி பெற்ற மகான்கள் வாழ்ந்து வந்துள்ளனர். சீகாழி கண்ணுடைய வள்ளல், சீகாழி சிவஞான வள்ளல், கஞ்சனூர் அரதத்த சிவாச்சாரியார்,

அகோர சிவாச்சாரியார், அப்பைய தீட்சிதர், திருவாரூர் தட்சிணா மூர்த்திகள் என ஞான வள்ளல் பரம்பரையினர் சாதி வேற்றுமை, ஆண் பெண் வேற்றுமை, பாமரர் பண்டிதர், ஏழை பணக்காரர், ஆண்டான் அடிமை, சிறியோர் பெரியோர், நல்லார் பொல்லார், நரர் சுரர், வல்லார் மாட்டார் என வேறுபாடு கருதாமல் எல்லார்க்கும் பொதுவில் நடமிடுகின்ற தெய்வ அருட்கருணையை எண்ணி தாமே தலையளித்து ஆட்கொள்ளுகின்ற வண்மையாளர்களது பட்டியல் நீளும்!

**சன்மார்க்க அனுபவம்**

எடுத்த இத்தேகத்தையே நித்திய தேகமாக சுதந்தரித்துக் கொண்டு உயிர் வாழ்கின்றபோதே முத்தி இன்ப அனுபவத்தைப் பெற்றிடாமல் செத்தபிறகு சிவலோகம், வைகுந்தம், சத்தியலோகம், சுவர்க்கலோகம், பரலோகம் இப்படி கற்பனை செய்துகொண்டு இருப்பருக்கு அந்நிலை சித்திக்காது. உயிர் வாழுகிறபோது பெற்ற அனுபவமே நிலைக்கும்.

**உயிர் அவத்தை**

நாம் அன்றாட வாழ்வில் அடைகின்ற நிலைகள் ஐந்து. அவற்றை 'ஐந்து அவத்தைத்தே' என்பர் மெய்கண்டார். அவை சாக்கிரம் (விழிப்பு), சொப்பனம் (கனவு), சுழுத்தி (உறக்கம்), துரியம் (பேருறக்கம்), துரியாதீதம் (உயிர்ப்படக்கல்) என்பனவாகும். முறையே புருவநடு, கண்டக்குழி, நெஞ்சுக்குழி, நாபி, அடிவயிறு என்னும் இடங்களில் உயிர் மையம் கொள்ளும். தொழிற்படும் கருவிகள் படிப்படியே குறைந்து கலைகள் சோர்ந்து மூலாதாரத்தில் உயிர் ஒடுக்கம் கொண்டு சின்னாளில் தனஞ்செயன் என்ற வாயு வெளியேறும்போது உயிரும் வெளியேறிவிடுகிறது. சமாதி வலியுறுத்தலின் அவசியம் ஓர்க.

கீழால் அவத்தை என்னும் இக்காரிய கேவல அவத்தைகளின் நீங்கி, சகல அவத்தைகளாகிய மத்தியால் அவத்தை என்னும் காரண அவத்தையில் புருவ மத்தியிலிருந்து சிரநடுவில் கூடி (சாக்கிரத்தில் சாக்கிரம் முதல் ஐந்து து ஐந்து = இருபத்தைந்து), சுத்த அவத்தைகளாகிய மேலால் அவத்தையில் பிரம்ம ரந்திரம் முதல் துவாகசாந்தம், சோடசாந்தம் என்னும் நின்மல சாக்கிரம் முதல் நின்மல துரியாதீதம் கடந்து சிவகுரு துரிய நிலையை எய்தி சிவத்தோடு ஒன்றுபட்டு அகண்ட சிவானுபவத்தில் சிவத்துக்கு அங்கமாய் பிரிப்பற நிற்றலே சிவானந்த நிலையாகும். தத்துவமசி மகா வாக்கியப் பொருளும் இதுவேயாகும். இந்நிலையை 'மணிவாசகப் பேறு' என்பர் சீகாழி முத்துத்தாண்டவர். 'துரியமும் இறந்த சுடரே போற்றி' என்பது மணிவாசகம்.

ஞானநிட்டை பயிலுவோர் வைகறைத் துயில் எழுந்து, காலைக் கடன்களை முடித்து தனி அறையில் சற்று உயரமான பீடத்தில், கால்களை

மடக்கி, கைகளை கோத்து, நிமிர்ந்து வடக்கு நோக்கி அமர்ந்து, ஏகாந்தமாய் குரு உபதேசித்தவாறு பயிலுதல் வேண்டும். காரிய உபாதிகள் ஏழும், காரண உபாதிகள் ஏழும், ஒன்பான் அவத்தைகளும், ஒன்பான் அபிமானிகளும் கடந்து என்னும் திருமந்திர குழூஉக் குறிகளெல்லாம் ஆய்ந்து தெளிந்து மேற்செல்லுதல் வேண்டும்.

நம்முடைய அஜாக்கிரதையினால் வலக்கண்ணில் 12 கலைகளும், இடக்கண்ணில் 16 கலைகளும், நெற்றிக் கண்ணில் 64 கலைகளும், உச்சிக்கண்ணில் 4 கலைகளும் என 96 கலைகள் என அன்றாடம் சோர்ந்து கொண்டிருக்கின்றன. கலை : அண்டத்தில் காஸ்மிக் எனர்ஜி: பிண்டத்தில் ஹியூமன் எனர்ஜி: கலை சோர்ந்தாரை செத்தார் என்கிறோம். உறங்குவது போலும் சாக்காடு என்பர். துஞ்சினார் செத்தாரின் வேறல்லர். நஞ்சுண்டார் கள்ளுண்பவர் என்பன தமிழ் வேதம். உணர்வு உள்ளவரை மரணம் இல்லை. மரணம் இயற்கை அன்று; நம்முடைய அஜாக்கிரதையே! வள்ளலாருடைய பேருபதேசம் சத்தியஞான சபை வழிபாடு, தியான முறை என்ப ஞானநிட்டையை கூட்டுவிக்கும் உபாயங்களாகும். ஏனைய சகுணோபாசனைகளால் இந்நிலையை அடைய முடியாது. உண்மை நிட்டை ஒன்றே வேறுபாடற்ற பூசனையாகும்.

உண்மைநெறி விளக்கம் கூறும் தச காரியம் இவ்வனுபவத்தைக் கொடுக்க வல்லது. ரூபம் (உண்மை இயல்பு), தரிசனம் (பொது இயல்பு), சுத்தி (அறிவினால் நீங்குதல்), யோகம் (அருளில் கூடுதல்), போகம் (சிவத்தில் கலத்தல்), ஞானாமிர்தம், துகளறுபோதம், பகவத் கீதை, பட்டினத்தார் பாடல், திருப்புகழ் முதலான நூல்களிலும் இக்குறிப்புகள் காணப்படுகின்றன. ஈண்டு விரிப்பில் பெருகும். மூல நூல்களில் கண்டு கொள்க. தக்கார்வாய் கேட்டுணர்க. எல்லா நலங்களும் பெறுக என இவ்வளவில் இதனை நிறைவு செய்கிறேன்.

இந்திரியமாய் கரணாதி அனைத்துமாகி
இயல் புருடனாய் காலபரமும் ஆகி
பந்தமற்ற வியோமமாய் பரமாய் அப்பால்
பரம்பரமாய் விசுவம் உண்ட பான்மையாகி
வந்த உபஷாந்தமாய் மௌனமாகி
மகா மௌன நிலையாக வயங்கா நின்ற
அந்தமில் தொம்பதமாய் தற்பதமாய் ஒன்றும்
அசிபதமாய் அதீதமாய் அமர்ந்த தேவே

- வடலூர் சித்தர் இராமலிங்க வள்ளல்

# 74. திருமந்திரம் கூறும் அறக் கருத்துக்கள்

திருமதி இரா. மல்லிகா, திண்டுக்கல்.

வரையறுக்கப்பட்ட ஓர் ஒழுங்கு முறை அறம். பண்பின் அடிப்படையிலே எழுந்தோங்கும் இனிய மாட்சி அறம். இயற்கை விதித்த இனிய விதியிலே எள்ளளவும் வழுவாது வாழும் நெறியே அறம். உலகிற்குப் பொது. அது சாதி, நாடு, இனம், மொழி, நிறம் முதலிய கட்டுப்பாடுகளினின்று, நீங்கிப் பரந்து விரிந்தது. நம் இலக்கியங்கள் இத்துறைச் செய்திகளை நமக்கு வழங்குகின்றன. சைவத் திருமுறை பன்னிரண்டில் பத்தாம் திருமுறையாக இடம் பெறுகின்ற திருமூலரின் திருமந்திரம் சீரிய அறம் பற்றிய கருத்துக்களை எப்படிச் செந்தமிழ் உலகிற்கு வழங்கியிருக்கின்றது என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் கருப்பொருள்.

சிவகதிக்கு வித்தாய், சிவமாய், அடியார்கட்கு மேம்பட்ட பொருளுமாய் விளங்கும் திருமந்திரம் ஒன்பது தந்திரங்கள் எனப்படும் ஒன்பது பிரிவுகளைக் கொண்டுள்ளது. முதல் தந்திரத்தில் மக்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் பலவும் கூறப்பட்டுள்ளன. (1) சிறந்த அறவோரான திருமூலர் எடுத்தியம்பிய வாழ்வியலுக்குப் பயன்தரும் அறக்கருத்துக்களைக் காண்போம்.

**நிலையாமை**

யாக்கை, இளமை, செல்வம் என்பன இவ்வுலக இன்பத்திற்குக் கருவிகள். இக்கருவிகளும், இக்கருவிகளோடு வாழும் வாழ்க்கையும் நிலையற்றது என்கிறார் திருமூலர். உலக சுகங்களில் நாடிச் செல்லும் மனத்தை அப்படிச் செல்லாமல் இழுத்துப் பிடித்துத் தெய்வத்தை நோக்கிச் செலுத்தினால் எத்தகைய நலன்கள் விளையும் என்பதை எடுத்தோதும் திருமூலர், உடம்பின் நிலையற்ற தன்மையை நம் இதயத்தில் நன்றாகப் பதியும் படி பாடுகிறார். (2) யாக்கை நிலையாமையைப் பல விதங்களிலும் எடுத்துக்கூறி மனிதன் அறவாழ்வு வாழவேண்டிய இன்றியமையாமையை இயம்புகிறார் மூலர். அறம் ஒன்றே நிலையானது என்பதை வற்புறுத்துகிறார். (3) யாக்கை நிலையாமையைக் கூறி மனித சமுதாயத்திற்கு இரங்குகிறார் திருமூலர். இவ்வுடம்பு மண்ணாலாகிய பாத்திரம் போன்றது. அம்மண்ணலாகிய பாத்திரம் மழை நீர் பெய்யின் கரைந்து மண்ணாவது

போல வினைக்குக் கொள்கலமாகிய இவ்வுடம்பு முடிவில் மண்ணாய்ப் போகின்றது. அப்பொழுது உடன் செல்வது அறத்தின் பயனும், ஞானமுமே அன்றி மகிழ்ந்த பெண்டிரும், மக்களும் அல்ல என்பதனை,

'பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக்கால்
உண்ட அப்பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழி நடவாதே' (மந் - 188)

என்ற இப்பாடலின் மூலம் தெரிவிக்கின்றார். இறந்த பின் பேரினை நீக்கிப் பிணமென்றே பெயரிட்டுச் சுடுகாட்டில் இட்டுச் சுட்டபின் நீரில் சென்று மூழ்கி இறந்தவரது நினைவுமின்றி வீடு திரும்புவர் உறவினரும் உற்றாரும் இன்பம் துய்க்கும்போது கூட இறக்கவும் கூடும் என்ற கருத்து,

'அடப் பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடியாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே' (மந் - 192)

என்ற இப்பாடலின் மூலம் பெறப்படுகிறது. இறப்பு என்பது எவரையும் விடாது என்கிற எதார்த்தத்தை நிலை நாட்டுகின்றார் திருமூலர். நாட்டுக்கு நாயகனாகிலும் இறுதியில் சுடுகாட்டுக்குச் செல்ல வேண்டியது தான் என்பதை,

'நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன்றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின் செல்ல முன்னே பறை கொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்றவாறு' (மந் - 197)

என்ற பாடலின் மூலம் நிறுவுகின்றார். இத்தகு யாக்கையை நெடிது கொண்டு செலுத்தும் வழியினையும் கூறுகிறார். விரத ஞானங்களால் உடம்போடு கூடிய இவ்வாழ்க்கையை ஒளி பெறச் செய்ய உணர்த்துகிறார்.

இனி இளமைப் பருத்தின் நிலையாமையைக் கூற வருகையில், கிழக்கே உதிக்கின்ற சூரியன் மேற்கே விழுந்து மறைகிறான். இளங்கன்று மூப்படைந்து மாடாகிச் சில நாட்களில் இறந்து விடுகிறது. இதையெல்லாம் பார்த்தும் உலக மக்கள் தாங்கள் என்றும் இளமையோடு இருக்கப் போவதாக எண்ணி மயங்கி, தெளிவடையாமல் நல்வழியில் செல்லக் காலம் தாழ்த்தக்கூடாது என்று உரைக்கின்றார்.

இதனையே,

'கிழக்கு எழுந்து ஓடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்

குழக்கன்று மூத்தெரு தாய்ச் சிலநாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுலகோரே' (மந் : 221)

என்று கூறி வியக்கின்றார்.

என்றும் இளமையாக மக்கள் வாழ்தல் அரிதானதாகும். தன்னோடு தொடர்புடைய உடம்பே நிலையில்லாதபோது தொடர்பில்லாத செல்வம் என்பது என்றுமே ஒருவனிடம் நிலைத்திராது. திருமூலர் நிலையில்லாத செல்வம் உள்ள போதே நிலையான அறத்தைச் செய்து ஞானமாகிய செல்வத்தைப் பெற்றுவிட வேண்டும் என்றும், அவ்வாறில்லாவிடில் ஈயார் ஈட்டிய செல்வத்தைப் பிறர் கொண்டு செல்வர் என்கிறார். செல்வம் உள்ள பொழுது அதன்பால் பற்றுக் கொள்ளாது வறியார்க்கு ஈந்து இன்பம் பெற வேண்டும் என்பது திருமூலரின் திரு உண்மை.

'ஈட்டிய தேன்பூ மணங்கண்டிரநதும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரந்திட்டது வலியார் கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்டவாறே' (மந் - 215)

என்ற பாடலின் மூலமாக தெய்வமே நமக்கும் சிறந்த செல்வம், நாம் மகிழும் பிற செல்வங்கள் அழிந்துபடுவன என்ற அறக்கருத்தைத் திருமூலர் நிறுவுகின்றார்.

**கொல்லாமை**

வாழ்க்கையில் சில ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொள்ள வேண்டும். சின மிகுதியினால் உயிர்களை வதைத்தல், நாவின் சுவைக்கு அடிமையாகி உயிர்களைக் கொன்று தின்னுதல், காம உணர்ச்சிக்கு அடிமை யாதல் போன்றவற்றிலிருந்து விடுபடுதல் வேண்டும். இவ்வொழுக்கச் சிந்தனைகளைக் கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு போன்ற தலைப்புகளில் வலியுறுத்துகிறார் திருமூலர்.

உயிர்கொலை புரிதல் கூடாது. அவ்வாறு செய்பவர் நரகில் துன்புறுவர். அறிவு பெறாத காரணத்தால் மக்கள் உயிரினங்களைக் கொன்றும் குத்தியும் அழிகின்றனர். கொல் என்றும், எறி என்றும், குத்து என்றும் கூறி, அங்ஙனமே செய்வித்தும், செய்து வரும் கொடியோர்களைக் கூற்றுவன் தன் வலிமை யுள்ள கயிற்றினால் கட்டி நரகிடை வீழ்த்துவர் என்பதனை

'கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக்காரர் வலிக்கயிற்றாற் சுட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே' (மந் - 240)

என்ற பாடலில் விளக்குகிறார். கொல்லாமையை இறைவன் விரும்பி ஏற்கின்ற ஒன்மலர் என்கிறார் திருமூலர்.

மேலும் உயிர்களைக் கொல்லுதல், பொருட்களைத் திருமுதல், மாதர் இன்பத்தினை அளவுக்கு மீறி அனுபவித்தல், பொய் பேசுதல் ஆகிய இவை மாறா மயக்கம் தருபவை. இவற்றை நீக்கியவருக்கு நரகத் துன்பம் இல்லை என்கிறார் அவர்.

கொல்லும் கருத்தும், ஆற்றலும் இல்லாதாரைக் கொல்லும்படி சொல்லியும், துணை நின்றும் தூண்டியவரும், அவ் ஆனைத்தின்னும் மனமில்லாது அருவருப்புக் கொண்டுள்ளோரை வற்புறுத்தித் தின்னச் செய்தவரும், அப்படியும் தின்னாதவரை ஒறுத்தவரும் இந்நிலத்தே பன்றியாய்ப் பிடிப்பர். பின்பு ஏழ்நரகிடை வீழ்ந்து ஆழ்ந்து துன்புறுவர் என்கிறார் திருமூலர் பொல்லாப் புலாலை நுகரும் புலையரும் நரகத்திற்கே செல்வர் என்று கூறுமிடத்து புலால் உண்ணாமையின் மேன்மையினை எடுத்துரைக்கின்றார். கொலை, களவு, கள்ளுண்ணல், காமம், பொய் இவைகளைப் பஞ்சமாபாதகங்கள் என்கிறார்.

**பிறன் மனை நயவாமை**

கோபத்தை வென்று நாவின் சுவையை அடக்கக் கூறியவர், அடுத்து காம உணர்வை வெல்லக் கூறுகிறார். கொலைபுரிதலைப் போலவே பிறன் மனைவியை விரும்புதலும் தீய செயலாம். பிறன் மனைவியை நாடுவது அறியாமை ஆகும். அன்புடைய தன் மனைவி வீட்டில் இருக்கும் போது பிறன் மனைவியை விரும்புதல் வீட்டுக் கொல்லையில் காய்த்துத் தொங்கும் பலாவின் கனியை உண்ணாது காட்டுப் புறத்தில் ஈச்சம் பழத்தை விரும்பி இடர் உற்றது போலாகும். (9) இப்பொருள்பட பாடப்பட்டுள்ள பாடல்,

'ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனி உண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்றவாறே' (மந் - 244)

என்பதாகும்.

பிறர்மனை செல்வோர் அம்மனைக்குரிய மாதரை நாடினால் அது காமச் சூழலில் சிக்க வைத்து விடும். மகளிர் இன்பம் கனவு போலத் தோன்றி மறையக் கூடியது என்று திருமூலரின் திருவாக்கு. (10) மாதராசையில் செல்பவரைத் தடுக்காவிடில் அழிந்து கெடுவர்.

**கள்ளுண்ணாமை**

பிறன் மனை நயத்திலைப் போல தீமையைத் தருவது கள்ளுண்ணுத லாகும். நல்லோர் கள்ளுண்ண அஞ்சுவர். தீயோர் அதற்கு அஞ்ச மாட்டார். கள்குடி மயக்கால் உண்மையை உணர முடியாது. தம்மையும் தம்மை இறைவனுடன் ஒன்றச் செய்யாத தடைகளையும் உணரார். கள், தன்னை உண்டவனையே மயங்கச் செய்யும். பசுமாடு கூட தாக

வேட்கை உண்டானால் கழுநீரை உண்ணுமே தவிர, குட்டை நீரை அருந்தாது என்ற பொருள் பட,

கழு நீர்ப் பசுபெறிற் கயந்தொறும் தேரா
கழு நீர் விடாய்த்துத்தங் காயஞ்சுருக்கும்
முழு நீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழு நீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே' (மந் - 311)

என்ற இப்பாடலைப் பாடியுள்ளார் திருமூலர்.

**அரசு முறை**

இது காணும் கூறி வந்த அறங்கள் முறையாக நடைபெற வேண்டுமானால் அரசு நல்ல வகையில் அமைந்திருக்க வேண்டும். மேலும் அரசை நடத்தும் மன்னன் அறநெறியில் நிற்பவனாக இருக்க வேண்டும். இல்லையெனில் அவன் கூற்றினும் கொடியவனாவான். ஆதலால் நாட்டில் நல்ல முறையில் நன்னெறி தழைக்கச் செய்தலோடு தீய நெறியில் நிற்போரையும் நன்னெறியில் நிற்கச் செய்தல் அரசன் கடமையாகும்.

'வேட நெறி நில்லார் தம்மை விறல் வேந்தன்
வேட நெறி செய்தால் வீடது வாகுமே' (மந் - 97)

என்கிறார் திருமூலர்.

சிவஞானமில்லாதார் சடையும், உச்சிக்குடுமியும், பூணூலும் மேற்கொண்டு மெய்யுணர்ந்தாற் போல நடிப்பர். அங்ஙனம் நடிப்பவரை நாடாளும் மன்னன் ஆராய்ந்து அவரைத் தண்டித்து நல்ல நெறியில் மன்னவன் நிறுத்துதலே நாட்டிற்குச் சிறந்தது என்பதனை

'ஞானமிலாதார் சடைசிகை நூல் நண்ணி
ஞானிகள் போல நடிக்கின்றவர் தம்மை
ஞானிகளாலே நரபதி சோதித்து
ஞான முண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே' (மந் - 99)

என்ற பாடல் மூலம் விளக்குகிறார். பசுவினையும், பெண்களையும். தாய்மை வழி தப்பாது நிற்கும் அறவோரையும், மண்ணுலகத்தாரேயன்றி, விண்ணுலகத் தேவர்கள் போற்றும் சிவனடியார்களையும் சிறப்பாகக் காக்கும் கடமை காவலனுக்கு என்றும் உள்ளது என்ற கருத்து

'ஆவையும் பாவையும் மற்றறவோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத்தாரையுங்
காவலின் காப்பவன் காவாதொழிவனேல்
மேவும் வறுமைக்கு மீளா நரகமே' (மந் - 100)

இப்பாடலின் மூலம் பெறப்படுகிறது.

மயக்கந்தரும் கள்ளினைப் பருகித் திரியும் வேடதாரிகளைத் தண்டித்தலும் அரசன் கடமையாகும் என்பார் திருமூலர். சமயக் கொள்கையில் அரசர் மேற்கொண்ட வரம்பின் படி ஒழுகுதல் வேண்டும். ஒருவரோடொருவர் பிணங்கி வாழ்தல் அறமாகாது, இணங்கி வாழ்தலே அறம், அவரவரை அவரவர் சமய நெறிப்படி ஒழுகச் செய்ய வேண்டும் அவ்வாறு நில்லாதாரை அரசன் தண்டித்தலும் இன்றியமையாத ஒன்றாகும் என்று ஒரு நல்ல அரசனின் இலக்கணத்தை வகுத்துரைக்கின்றார் திருமூலர்.

'தத்தஞ் சமயத் தகுதியில் நில்லாதாரை
அத்தன் சிவன் சொன்ன ஆகம நூல் நெறி
எத்தண்டமுஞ்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த் தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே' (மந் -104)

என்பதே அக்கருத்துகளமைந்த பாடல்.

**ஒருமைப்பாடு**

சமுதாயம் மேற்கொள்ள வேண்டிய முடிவான லட்சியங்களுள் இதுவே முதன்மையான ஒன்று. மனித சமுதாயத்தின் வேறுபாடுகள் களையப்பட வேண்டும். வேற்றுமைகள் நீங்கி உலக மக்கள் ஒற்றுமையாக வாழ வகை செய்யும் ஒரே வழி, கடவுள் ஒருவனே என்றும் அவனை வழிபடுவதற்குரிய நெறியும் ஒன்றே என்று உணர்வது தான் என்கிறார் திருமூலர் (12) சமயங்கள் ஒருவனே தேவன் எனத் தெளிந்தால் சமயப் பிணக்கின்றி உண்மையான சாந்திநிலை அடையலாம் என்று மக்களை அறை கூவி அழைக்கின்றார் திருமூலர் இதனையே,

"ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெறிமின் தெளிந்த பின்
மாறுதல் இன்றி மனை புகலாமே" (மந் - 1508)

எனப்பாடுகின்றார்.

மனிதர்கள் எல்லோரும் ஒரே குலம். எல்லாக் குலங்களுக்கும் இறைவன் ஒருவனே. இந்த உண்மையை மறவாதீர் என்ற அறக் கருத்தினை உரைக்க வந்த திருமூலர்,

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாளுமே' (மந். 2066)

என்கிறார்.

சமயங்கள் பலவிதமாகக் கூறியபோதிலும் அவை அனைத்தும் ஒரே தெய்வம் என்பதை அழுத்தமாகப் பதிய வைக்கிறார். 'ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வமும், ஒன்று கண்டீர் உலகுக்கு உயிர் ஆவதும்' என்பது திருமூலர் வாக்கு.

**வினை நீங்குதல்**

சாமானிய மக்களைப் பார்த்து வினையிலிருந்து மீள்வதற்குரிய கர்ம மார்க்கத்தை உபதேசிக்கிறார். ஆசைதான் வினைக்கு வித்து. அதனால் ஆசையைக் களையுங்கள் என்கிறார். ஈசனைத் தியானிக்கும் போதுகூட அத்துடன் ஆசைகளைப் பிணைத்துப் பிரார்த்தனை செய்ய வேண்டாம் என்கிறார் மூலர். (13) ஆசையே துன்பமாக மாறுகிறது. ஆசையை ஒவ்வொன்றாக விடும்போது ஆனந்தம் படிப்படியாக உண்டாகின்றது என்பது அவர் கருத்து.

**அன்புடைமை**

அறம் செய்வதற்கு அன்பே அடிப்படையாகும். அன்பின் பெருமையை கூற வந்த திருமூலர் 'அன்பே சிவம்' என்று இயம்புகின்றார். பிறரிடம் அன்பு செலுத்துபவரை இறைவன் பாசக்குழியிலிருந்து மேலேற்றி அருள்புரிவான் என்பது அவரது பொன்மொழி. அன்பில்லாதவர் இறைவனை அடைய வழி அறியாது வருந்துவர். அன்பு செய்வாரை ஈசன் அறிந்து அருள் புரிவான் என்பது மூலரின் வாக்கு.

**அறம் செய்தல்**

ஈதல் சிறந்த அறம். ஈதலின் சிறப்பை வலியுறுத்த வந்த திருமூலர், கொடுக்கும்போது இன்னாருக்குத்தான் கொடுக்க வேண்டும், இன்னாருக்குக் கொடுக்கக் கூடாது என்று வேற்றுமை கருதாமல் கொடுக்க வேண்டும். பசி காரணமாகத் தனித்து விரைந்து உண்ணாமல், காக்கை தன் இனத்தை அழைத்து உண்பதைப் போல் கூடியே உண்ண வேண்டும் (14) என்ற கருத்துக்களை

**'ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்ன**
**பார்த்திருந்துண்மின் பழம் பொருள் போற்றன் மின்**
**வேட்கையுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்**
**காக்கை கரைந்துண்ணும் காலம் அறியினே'** **(மந் - 107)**

என்ற பாடலில் தெளிவுபடக்கூறுகின்றார்.

வாழ்வில் மக்கள் விலக்க வேண்டிய தீச்செயல்களை எடுத்துக் கூறும் முனிவர் புண்ணியச் செயல்கள் சிலவற்றையும் வரிசைப்படுத்தி உபதேசிக்கிறார். பிறப்பினால் வேறுபாடற்ற சமுதாயத்தை காண விழை கின்ற திருமூலர் இருப்பவர்கள் இல்லாதவர்க்கு இயன்ற மட்டிலாவது ஈகை புரிதல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறார். அறமாவது மனத்தால் வாக்கால் செயலால் புரிவது என்கிறார் (15).

தினசரி வாழ்வில் மறுக்காமல் செய்ய வேண்டிய கடமைகளையும் எடுத்துக் கூறுகின்றார். பிற ஜீவன்களுக்கு உணவு தருவதன் கடமையையும்

எளிமையையும் கூறும் போது, பிறரிடம் கடுஞ்சொல் கூறாது இனிய வார்த்தைகளைப் பேசவேண்டும் என்பதனையும் கூறுகிறார்.

''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாய் உணவு
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரைதானே'' (மந் - 109)

என்பதே அக்கருத்துக்களமைந்த பாடல்.

வஞ்சனை பேசி அறம் அழிய நடக்கக்கூடாது, கொடியொராகிப் பிறர் பொருளைக் கவர்தல் கூடாது. சிறப்பாக உண்ணும் போது யாரேனும் நாடிவரின் ஓர் அகப்பை உணவு கொடுத்துப் பின் உண்ண வேண்டும் என்பவை திருமூலரின் அறக்கருத்துக்கள். இவையடங்கிய பாடல்;

'அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்வியனாகியப் பிறர் பொருள் வவ்வன்மின்
செவ்வியனாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக் கொடுணமின் தலைப்பட்ட போதே!' (மந் - 238)

என்பதாகும்.

**ஐம்புலனடக்கம்**

பொறி அடக்கமே சிறந்த அறமாகத் திருமூலர் வகுத்துரைத்தார். அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர் என்கிறார் அவர் புற உலகில் சஞ்சரிக்கும் பொறிகளைப் புறத்தே போகவிடாது உள்ளிழுத்து உள்முக மாகச் செலுத்தப் பழகுதல் வேண்டும். இன்றேல் அப்பொறிகள் தீ நெறிக்கு மனிதனை இழுத்துச் சென்று விடும். ஆமை எவ்வாறு இடர் வரும் போது தன் உறுப்புகளை உள்ளிழுத்துக் கொள்ளுதல் போல் அறிவுடை ஒருவன் தீநெறியில் செல்லும் ஐம்பொறிகளையும் தனக்குள் கட்டுப் படுத்த வேண்டும் என்கிறார் திருமூலர்.

**முடிவுரை**

ஒவ்வொருவரும் அவரவர் மனசாட்சியின் படி பொது நலனுக் கேற்ப நல்லனவற்றைச் செய்ய வேண்டும். சமுதாயத்தை உயர்த்துதல் என்பது அறத்தின் நோக்கமாகும். சமுதாயத்தினால் நம்மை பெறும் தனி மனிதன் தனது கடமைகளைச் சமுதாயத்திற்காகவும் ஆற்ற வேண்டும். திருமூலர் வாழ்வியலுக்குப் பயன் தரும் சீரிய அறங்கள் பலவற்றைப் பகர்ந்துள்ளார். இவை யாவும் மனிதர்களை விழிப்படையச் செய்வதற் குரிய முயற்சிகளே. எனவே திருமூலர் தெளிவுறுத்தியுள்ள மேற்கூறப் பட்ட அறங்கள் யாவும் மன்பதைப் பொது நோக்கில் யாவர்க்கும், எனினும் பின்பற்றி நடத்தற்குரியவை என்பதும் உடல், உள்ளம், உணர்வு, உயிர் அனைத்திற்கும் ஆற்றல் அளிப்பன என்பதும் அறிதற்குரியன.

# 75. திருமூலரின் வினைக்கொள்கை

முனைவர் அ. மாதவி, திருநெல்வேலி.

வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையோரும் நிறைமொழி மாந்தருமாகிய திருமூலரின் ஆணைகளே திருமந்திரம் ஆகும். யோகம், ஞானம், தத்துவம், சித்த மருத்துவம் ஆகிய கருத்துகளை 9 தந்திரங் களில் 232 அதிகாரங்களில் 3000 பாடல்களில் தெளிவாக எடுத்துரைக்கும் இந்நூல் திருமுறை தொகுப்பில் பத்தாம் திருமுறையாக அமைந்துள்ளது. இறைவனின் இன்னருள் தன்மைகளை விதந்தோதும் இம்மந்திரம் 'வினை பற்றிய கருத்துகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. எனவேதான் இவ்வெழுத்துரை 'திருமூலரின் வினைக் கொள்கை' என்ற தலைப்பில் அமைந்து திருமூலரின் வினை பற்றிய சிந்தனைகளை மட்டும் எடுத்துரைப்பதாக அமைகின்றது.

**விதிமீது நம்பிக்கை**

உயிர் தான் முன் செய்த வினைக்கீடான பயனை இறைவன் வரையறுக்க அதுவே விதியாக வாய்க்கின்றது என்பர். இந்த விதியின் மூலமே நல்வினை, தீவினைகள் உயிர்களை வந்தடைகின்றன. இதை யாரும் மீற முடியாது, என்பதைக் கூறவந்த திருமூலர்,

"ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன" (பாடல்கள் திருமந். 504, 2175)

எனக் குறிப்பிடுகின்றார். வரத்தக்க இன்பம் வரும். நீங்குபவை நீங்கும் கழிக்கப்பெறும் வினைகள் கழிய அனுபவிக்க வேண்டியவை வந்து சேரும் என்பன மேற்கூறிய அடிகளுக்குப் பொருள். மேற் சுட்டிய பாடலுடன் வேறொரு பாடலிலும் இந்த விதி வலியுறுத்தப்படுகின்றது. அப்பாடல்,

"ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறுஇட்டுக் கொண்டு சுமந்தறிவார் இல்லை" (2849)

என்பதாகும். ஆற்றில் காணப்படும் நுண்மணல் வெள்ளத்தால் கரையும் இடம்மாறிச் செல்லும், மேடு பள்ளமாகும், பள்ளம் மேடாகும். இவை யாராலும் நடப்பதில்லை. எனவே நமக்கு உண்டான துன்பத்தை நாமே அனுபவிக்க வேண்டும். நீரின் போக்கே ஆற்றின் போக்கைத் தீர்மானிப் பதைப் போல உயிர்களின் விதியே அவர்களின் விதியைத் தீர்மானிக்கின்றது என்பதை இதன் மூலம் உணரலாம். 'நதியின் பிழையன்று நறும்புன

லின்மை' என்று இராமன் இலட்சுமணனுக்குக் கூறும் விதியும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

**தீதும் நன்றும் பிறர்தர வாரா**

'வினை விதைத்தவன் வினை அறுப்பான்', 'அவரவர் விதி வழி அவரவர் வந்தனர்' என்ற பயில்மொழிகள் இங்கு நினைக்கத்தக்கன. தீதும் நன்றும் பிறரால் நமக்கு வருவதில்லை. அவரவரே அனைத்திற்கும் பொறுப்பு என்பதைக் கூறவந்த திருமூலர்,

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தனக்கு வினைப்பயன் துய்ப்பானும்" (2228)

எனக் குறிக்கின்றார். எனவே வெளியிலுள்ள யாரும் நமக்கு எதையும் விளைவித்துவிட முடியாது என்பதைத் தெளிவாகக் கூறுகின்றார் திருமூலர் எனலாம்.

**புண்ணியமும் பாவமும்**

இவ்வுலகம் நல்லவும் அல்லவும் கலந்த கலவை. இதையுணர்ந்தோர் நல்லவற்றை ஏற்று அல்லவற்றை விலக்கி வாழ்வர். அறியாதவர் இரண்டையும் செய்து அல்லலையடைவர். திருமந்திரமும் இக்கருத்தினை வலியுறுத்துகின்றது.

"புண்ணிய பாவம் இரண்டுல பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேரறுத்து அப்புறத்து
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் ளீரே" (1647)

இவ்வுலகில் புண்ணியம் பாவம் என இரண்டு உள்ளன. நாம் செய்யும் வினைகளினாலேயே அவை இன்ப துன்பமாய்ப் பொருந்துகின்றன. இதை யுணர்ந்த ஞானியர் இந்த இரண்டையும் நீக்கி இறைவனை எண்ணி வாழ்வர். இன்ப துன்பத்தை விலக்கி வாழ்தலே ஞானியரின் வழி. அதுவே இறைவனை அடைவதற்கும் வழி என்பதனைத் திருமூலர் குறிக்கின்றார் எனலாம்.

**வினையினால் உலகுக்கு உண்டாகும் தீங்கு**

வினைகளால் அதைச் செய்தவர் மட்டும் இன்பத்திற்கோ துன்பத் திற்கோ ஆளாவதில்லை. அவர் வாழும் நாடும் அதை அடையும் என்பதையும் திருமந்திரம் எடுத்துரைக்கின்றது.

"இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள
நன்செயல் புன்செயலால் அந்தநாட் டிற்காம்" (1657)

எனவே அரசன் இதையுணர்ந்து இத்தகையோரை ஒறுத்தல் வேண்டும், என்று திருமூலர் கூறுவதை இங்கு உணரமுடியும். எவ்வழி நல்லவர்

ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்ற ஔவையின் கூற்றுக்கு ஒருபடி மேலதாய் மக்களின் தீவினைகளால் நாடும் பாதிக்கப்படும் என்று கூறுவதைக் காணலாம்.

**மூவினைகள்**

நாம் செய்யும் செயல்கள் மூவினைகளாக நம்மை வந்தடையும். பிராரத்துவ வினை, ஆகாமிய வினை, சஞ்சித வினை என்பன அவை. இதனைத் திருமூலர் ஆழ்வினை, அருவினை, போழ் வினை எனக் குறிக்கின்றார்.

"ஆழ்வினை யாழ அவர்க்கே அறஞ்செய்யும்
ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்
போழ்வினை தீர்க்குமப் பொன்னுலகாமே" (1867)

இறைவன் தம்மையே நினைத்து அருந்தவம் முயல்வாருக்கு இந்த மூவினைகளும் இல்லாமற் போகும் என்பது வெளிப்படை. ஆண்டாள் தம் திருப்பாவையில் தூயோமாய் வந்து தூமலர் தூவி வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க - போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசு என்று கூறியிருப்பதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. 'சிவாயநம எனச் சிந்தித்து இருப்போருக்கு அபாயம்' ஒன்றில்லை என்று கூறவும் தேவையில்லை என்பதையே இம்மந்திரம் உணர்த்துகின்றது.

**கருபதியும் போதே பின்விளைவுகளும் பதியும்**

கருவிலே திருவுடையார் என்பதற்கிணங்க, கருவில் உயிர்உருக் கொள்ளும் போதே விதி தன்னையும் இணைத்துக் கொள்கின்றது.

கருத்தினில் அக்கரம் ஆயுவும் யாவும்
கருத்துளன் ஈசன் கரு உயிரோடும்
கருத்தது வித்தாய்க் காரணகாரியம்
கருத்து உறுமாறு இவை கற்பனை தானே (1947)

உயிர் கருவில் உருவாகும் போதே தலையெழுத்து என்னும் பிரமன் எழுத்து, ஆயுள் முதலிய யாவும் கருவிலேயே அமைத்துத் தானும் இருக்கின்றான் இறைவன். இதனால் புறத்தே நிகழ்கின்ற சூழ்நிலைக்கு ஏற்பக் காரணகாரியங்கள் அமைகின்றன என்று கூறுவது கற்பனை என்கின்றார் திருமூலர். ஆனால் இந்தத் தலையெழுத்தையும் இறையருளினால் விலக்கமுடியும் என்பதைத் திருமூலர் வேறோரிடத்தில், தனக்கு என ஒருமனம் இல்லாத இறைவன் 'தலைவிதி பின்னம் செய்து என்னைப் பிணக்கு அறுத்தானே' (2973) என்று குறிப்பிடுகின்றார்.

**வினையை நீக்கி இறையருளை வேண்டல்**

இடராய்த் தொடர்ந்து வரும் பாவம் தீரவேண்டில் இறையருள் மட்டுமே துணையாகும்.

"பதைத்து ஒழிந்தேன் பரமா உனைநாடி .
அதைத்து ஒழிந்தேன் இனியாரொடும் கூடேன்,
சிதைத்து அடியேன் வினைசிந்தனை தீர
உதைத்து உடையாய் உகந்து ஆண்டருளாயே" (1691)

என உன் சரணல்லால் சரணில்லை எனச் சிந்தித்து வணங்கிப்போற்ற இறைவன் வினைமுழுவதையும் அழித்தொழிப்பான் என்பதையே மேற்பாடலில் திருமூலர் குறிக்கின்றார். இவ்வுலக வாழ்வில் அலுத்துப் போனேன். இனி நான் எவருடனும் சேரமாட்டேன். எளியேனின் வினையைக் கெடுத்து என் கவலை நீங்கும் படி மாற்றி என்னை உடையாய் என்னை ஆட்கொள்வாயாக என இறைவனை எங்ஙனம் வழிபட வேண்டும் என்பதையே இப்பாடலில் அவர் குறித்துள்ளார். மேலும், இறைவன் தானே உணர்ந்து தாயினும் சாலப்பரிந்து இன்பத்தை அளிக்கும் இயல்பினன். நாம் அவனை ஊனும் உருகி வழிபடத் தேனே அனையனான அவன் உயிரைப் பிணித்திருக்கும் வினைகளை அனுபவித்துக் கழிந்தபின் தானே அறிந்து வந்து உதவும் இயல்பினன் (1796) என்று திருமூலர் குறிப்பதன் வழி வினை அனுபவித்தே கழிக்கக் கூடியது என்பதைப் புலப்படுத்துகின்றார்.

**முனம்பாவவினாசன்**

தன்னைத் தேடுவோர் உள்ளத்தைக் கோயிலாகக் கொள்வதும் முன்னம் அவரிடம் வந்து சேர்ந்த பாவத்தைப் போக்குவதும் இறைவனின் இயல்புகளாகும். இதனாலேயே இறைவனைத் திருமூலர் 'பாவவினாசன்' எனக் குறிப்பிடுகின்றார்.

"அகலிடமாய், அறியாமல் அடங்கும்
உகலிடமாய் நின்றஊன் அதனுள்ளே
பகலிடமாம் முனம்பாவ வினாசன்
புகலிடமாய் நின்றபுண்ணியன் தானே" (1723)

முன்பு உயிர்கள் ஈட்டிய பாவங்களை நீக்குபவன். அனைத்தும் ஒடுங்குதற்கு இடமாய் அமைந்த புண்ணியன். அவனே 'பாவவினாசன்' ஆவான்.

**தம்மையும் தலைவனையும் உணர்ந்தவர்**

இறைவன் என்பது மட்டுமே உண்மை என்று உணர்ந்தவருக்கு எல்லா நுண்ணிய உலகங்களும் விளங்கும். அத்தகைய உணர்வுடையார் இவ்வுலகத்தை அனுபவப் பொருளாகக் காணாது காட்சிப் பொருளாகக் காண்பர். இதனால் அவருக்கு எந்தத் துன்பமும் நேராது. இவ்வாறு உணர்ந்தவரே தம்மையும் தலைவனையும் உணர்ந்தவர் என்கின்றார் திருமூலர்.

"உணர்வுடை யார்கட் குஉலகமும் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்க ளுணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே" (1786)

என்றும், உலகில் காரியங்களைக் கடமையாய் எண்ணிச் செய்யாமல் உரிமையாய் எண்ணிச் செய்வதால் அது பிறவிக்கு வித்திடுகின்றது (2547) என்றும் திருமந்திரம் உணர்த்தும் கருத்துக்கள் காணத்தக்கன.

உலகப்பொருட்கள் இறைவனுக்கே சொந்தம் எனும் மனநிலை வரும்போது அவற்றை நமக்கே உரிமையாகக் கொள்ள மனம் மறுக்கும். அப்போது மனம் பற்றற்ற நிலைக்கு வந்துவிடும். இதுவே துன்பங்களிலிருந்து விடுபட வழியாகும். 'ஆசைபடப்பட ஆகிவருவது துன்பம்' என்பதும் திருமந்திரக் கருத்தாகும்.

### இறைவனை உணரவும் நல்வினை வேண்டும்

அவனருள் இருந்தால் மட்டும் அவன்தாளை வணங்கமுடியும். அவ்வாறு உணர்ந்தவர் புண்ணியத்தோர் ஆவர். இதனைப் பின்வரும் மந்திரம் புலப்படுத்துகின்றது.

''ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி
சோதி பரஞ்சுடர் தோன்றத் தோன்றாமையின்
நீதியது ஆய்நிற்கும் நீடிய அப்பரம்
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே'' (2453)

மேலும், நன்மையைத் தராத ஐம்புலன்களின் தன்மையை ஆராய்ந்து அறிந்தவர் முன்னை செய்த வினைகள் பின் தொடரும் போது அவற்றை ஏற்று நடப்பர். ஆனால் அதன் பின் இப்பிறவியில் எவ்வினையும் வராமல் அவற்றினின்றும் நீங்க முயல்வர் (2610) என்றும் குறிப்பிடப்படுகின்றது. செய்வினையை உணர்ந்து ஏற்றுக்கொள்ளலும் வருவினையை வராமற் செய்தலும் இறைவனை உணர்ந்தோர் செய்வனவாகும். இங்ஙனம் பொல்லா வினையை அறுக்கின்ற அந்நாளில் 'சிவக்கனியாம்' பேரின்பம் விளையும் (1970). மேலும் தன்னையுணர்ந்து ஈசனோடு ஒன்றியவருக்குப் பிறவியும் இல்லையாகும் (2973, 2331) என்றும் குறிப்பிடப்படுகின்றது.

''முன்நின்று அருளும் முடிகின்ற காலத்து
நன்நின்று உலகில் நடுவுயிராய் நிற்கும்
பின்னின்று அருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின்று எனக்கொரு முத்தி தந்தானே'' (1648)

என்ற பாடலும் மேற்கருத்திற்கு வலுவூட்டுவதை உணரலாம்.

### குரு அருளைப்பெற்றவர் செயல்

மாணவனாய் நின்று குருவின் அருளைப்பெற்ற அடியார் மீண்டும் உலகியல் துன்பங்களில் பிறவித்துயரில் மூழ்கமாட்டார் என்று கூறப் படுகின்றது. எவ்வாறெனில் கறுத்த இரும்பு இரசவாதத் தால் பொன்னாகும். ஆனால் மீண்டும் இரும்பாகதாதைப் போல இங்கு இறையருளாம் குருவின் அருளைப் பெற்றவன் மீண்டும் பிறவியில் வந்து சேரமாட்டான் என்கின்றார் திருமூலர்.

"கறுத்த இரும்பே கனகம் அது ஆனால்
மறித்து இரும்புஆகா வகையது போலக்
குறித்தஅப் போதே குருவருள் பெற்றால்
மறித்துப் பிறவியில் வந்து அணுகாதே" (2051)

என்பது அத்திருமந்திரப் பாடல். இரசவாதத்தால் இரும்பின் தன்மை கெட்டது போலக் குருவின் அருளால் மாணவனின் தன்மை கெட்டது. அதனால் மீண்டும் அவன் பிறவிபெறமாட்டான் என்று குறிப்பிடுகின்றார் திருமூலர்.

**தவத்தை மேற்கொள்ளாதவர் பிறவியில் அகப்பட்டுத் துன்புறுவர்**

உண்மையான இறைச்சிந்தனையாம் தவத்தையுடையவர் முன்னம் செய்த வினைகளால் துன்பம் வந்தது என்றாலும் அதனை அவனருளால் கடந்து மாற்றுவர். ஆனால் தவத்தில் நிலையாக நின்று அறியாதவர் பிறவித் துன்பத்தில் ஆழ்ந்து வருந்துவர்.

"தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்
பவத்திடை நின்றதோர் படுவது ஆமே" (1685)

என்றும் 'நிராமயம் ஆக நினைப்பு ஒழிந்தவர்' (2076) என்றும் கூடத் திருமந்திரம் கூறுகின்றது. வினையை நீக்கிக் கொள்ள வேண்டும் அல்லது விடுபடவேண்டும் என்ற எண்ணமில்லாதவர் எத்தன்மையர் என்பது பற்றித் திருமூலர் பின்வருமாறு எழுதுகின்றார்.

"வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்
உற்றவினைத் துயர் ஒன்றும் அறிகில்
முற்றுஒளி தீயின் முனிகின்ற வாறே" (2084)

இவ்வாறு தம் வாழ்நாள் கழிவதை அறியாதபாவிகள் வினையென்னும் விதையைச் சேமித்து, அதை உடம்பெனும் நாற்றங்காலில் முளைக்கும் படிசெய்து துன்பத்தை அனுபவிப்பர் என்பது கருதுதற்குரியது.

இந்த 'மன்னாப் பிறவி' (2102) நீங்க வேண்டுமானால் சிவநெறியை எப்போதும் சிந்தித்து இருக்க வேண்டும். அப்போதுதான் பிறவிக் கடலைக் கடக்க உதவும் தெப்பமாக இருந்து அவன் உதவுவான் என்பதை,

'சாகின்ற போதும், தலைவனை நாடுமின்
ஆகின்ற அப்பொருள் அக்கரை ஆகுமே' (2107)

என்ற வரிகள் மூலம் உணர்த்துகின்றார் திருமூலர்.

**'சிவாயநம' எனச் சிந்தித்தவர் அடைவன**

இம்மந்திர வார்த்தைகளை எப்போதும் தியானித்திருப்பவருக்குப் 'பின்னைப் பிறப்பொன்று இருக்காது, பேருலகாம் சிவகதி விளையும்" (2108) என்றும், 'ஆறணி செஞ்சடை அண்ணல் திருவடி, வேறணி

வார்க்கு வினையில்லை தானே' (1862) (2111) என்றும் வரும் வரிகள் நினைத்தின்புறத்தக்கன. இங்ஙனம் சிவனருளைப் பெற்றால், சிவனுலகும் வாய்க்கும், அத்துடன்,

**'சிவனருளாற் சிலர் தேவரு மாவர்**
**சிவனருளாற்சில தெய்வத்தோ டொப்பர்**
**சிவனரு ளால்வினை சேரகி லாமை**
**சிவனருள் கூறில் அச்சிவலோக மாமே'** (1649)

என்பனவும் வாய்க்கும். மேலும் 'மண்ணவர் ஆவதும் விண்ணவர் ஆவதும் இறைவன் அருளைப் பெற்றபோதே ஆகும்' (1650) என்றும் கூறப் படுகின்றது.

இங்ஙனம் சித்தம் சிவன்பால் வைத்தவர்க்கு, 'நடுங்குவதும் இல்லை நமனும் அங்கில்லை, இடும்பையும் இல்லை. இராப்பகலில்லை, படும் பயன் இல்லை' (1624) என்றும் திருமூலர் குறிப்பதை உணரமுடியும்.

இறைவனை உளப்பூர்வமாக உணர்வோர்,

**'தன்னை யறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே'** (2611)

ஏற்கெனவே செய்த செயல்களால் வந்த வினைகளைச் சிவசிந்தனையால் விலக்குவதோடு பின்வர இருக்கம் வினையையும் தோற்றமில்லா மலேயே செய்துவிடுவர்.

எனவே,

**சிவசிவ என்கிலர் தீவினை யாளர்**
**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்**
**சிவசிவ என்றிடத் தேவரு மாவர்**
**சிவசிவ என்னச் சிவகதி தானே** (2716)

என்பதையுணர்ந்து வினையிலிருந்து விடுவித்துக் கொள்ள இறையருளை நாட வேண்டும் என்பது திருமூலர் வினைக்கொள்கையாகும்.

இவ்வாறு உயிர்கள் மனம், வாக்கு, காயத்தால் உலகியலில் ஈடுபட்டுச் செய்யும் செயல்கள் இருவகைப் பயன்களாய் நல்வினை தீவினையாகிப் பிறவிகள் தோறும் வந்து துன்பத்தில் ஆழ்த்தும். செய்த பாவத்திற்கு உரியவற்றை அனுபவித்துக் கடந்தும் இனிமேல் வர இருக்கின்றவற்றை இறையருளால் விலக்கியும் வாழ்தலே சிறந்தது என்பது திருமூலரின் வினைக் கொள்கையாகும். இறையருள் இருந்தாலும் ஏற்கெனவே உள்ள பாவங்களை வினைகளை அனுபவிக்கவே வேண்டும் என்பது திருமூலரின் கருத்தாக உள்ளமையும் இங்குக் கருதத்தக்கது.

# 76. திருமந்திரத்தில் ஒரு மந்திரம்

முனைவர் அ.மு. மாலதி, சென்னை.

**'திருமந்திரம்'** சைவப் பெருமக்கள் போற்றும் பன்னிரு திருமுறை களில் பத்தாவதாக வைத்துப் போற்றி வணங்கும் நூலாகும். திருமூலதேவ நாயனார் அருளிச் செய்தது. இது தோத்திர நூலாகவும், சாத்திர நூலாகவும் உள்ளது. மேலும் அனுபவ நூலாகவும் அமைந்துள்ளது. பல்வகை யோகத்தில் சிவயோகத்தை முறையாக போதிக்கும் நூல். ஓதுவதற்கு எளிதாய் இருப்பினும், உணர்தற்கு அரிதாக இருப்பது. அறிவின் தேர்ச்சி யுடன், அனுபவமுதிர்ச்சியும் சேர்ந்து, திருவருள் துணைக்கொண்டு தான் உரை காணமுடியும்.

**''தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகம் என்று உணர்''** **(நல்வழி)**

என்று ஔவையார் பாடியிருக்கின்றார்.

''ஒருவாசகம்'' என்பதை, ஒப்பற்ற வாசகம் எனப்பொருள் கொண்டு, இவை அனைத்தும் ஒப்பற்ற நன்மை பயன்கும் மொழிகள் எனக் கொள்ளலாம்.

''ஒருவா சகம்'' எனப்பிரித்து, இவை நீங்கா நிலைமொழியாய் உலகில் நிலைபெறும் எனவும் கொள்ளலாம்.

சைவசமய நூல்கள் சாத்திரம், தோத்திரம் என இருபிரிவுகளை உள்ளடக்கியுள்ளது. தோத்திரம் என்பது இறைவன்பால் உள்ள அன்பின் அடிப்படையில் அமைந்தவை. சாத்திரம் என்பது உயிர்கள் பால் உள்ள அன்பின் காரணமாக அறிவின் அடிப்படையில் எழுந்தவை. உயிர்கள் இருமை நலம்பெற வேண்டி மனம், மொழி, காயத்தை எப்படிக் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும் என்பதனைப் பற்றியும், அப்படி இருக்க எப்படி இறைவன் பால் அன்பு செய்ய வேண்டும் என்பதனைப் பற்றியும் சாத்திரமும் தோத்திரமும் அமைக்கப்படுகின்றன. எனவே, இந்நூல் தோத்திரத்திற்குத் தோத்திரமாகவும், சாத்திர்த்திற்குச் சாத்திரமாகவும் அமைந்துள்ளது. ''திருமந்திரம்'' என்றால் தெய்வீக மாட்சியை ஊட்டும்

நிறைமொழி என்பதாகும். நிறைமொழி மாந்தராகிய திருமூலர் அருளிச் செய்த மறைமொழியாகிய 'திருமந்திரம் மாந்தர் உய்யும் பொருட்டே திருவருள் ஆணைவழி தமிழில் வகுத்துஅளித்தார்.

திருமூலரின் திருமந்திரத்தில் மகா மந்திரமாக விளங்குகின்ற,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" (திருமந்திரம் 270)

மேலே கூறிய ஒரே ஒரு பாடலை ஆய்வுக்குரியப் பாடலாக எடுத்துக் கொண்டு விரிவாக ஆய்வு செய்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும். திருமந்திரத்தை மேலோட்டமாகவும் படித்துப் பொருள் கொள்ளலாம். அதில் அமிழ்ந்து ஆழமாகச் செல்லச் செல்ல பொருள் விரிந்து விரிந்து சென்று கொண்டேயிருக்கும் "நவில்தொறும் நூல்நயம் போல்" என்ற வள்ளுவப் பெருந்தகையின் கருத்துக்கு ஏற்ப அனுபவ உண்மைகள் அதற்குத் தக்கவாறு நமக்குத் தெளிவாகும். இப்படிப்பட்ட ஆழம், அகலம், செறிவு, நுட்பம் நிறைந்தது திருமந்திரம்.

இப்படிப்பட்ட திருமந்திரத்தில் ஒரு மந்திரமாகிய இப்பாடலில், நான்கு அடிகளுக்குமே பொருள் உரையின் உதவியில்லாமலேயே அனைவரும் அறிந்துக்கொள்ளும் வண்ணம் மூலநூலே தெளிவாக, எளிமையாக, அருமையாக அமைந்திருக்கின்றது. மேலும் இப்பாடலில் பயின்றுவரும் சொற்கள் திரும்பத் திரும்ப வந்து இனிய ஓசையுடன் வருவது இப்பாடலைப் படிப்பவர்களின் சிந்தைக்கும் கேட்பவர்களின் செவிக்கும் இன்பம் பயக்கின்றன. அதுமட்டுமன்றி சொல்நயம், பொருள் நயம், ஓசைநயம் போன்ற பல அரிய நயங்களும் சிறப்பாகப் பெற்றுத் திகழ்வதைக் காணலாம்.

திருக்குறளில் எப்படி "அன்புடைமை" என்று ஒரு அதிகாரம் உள்ளதோ அதைப் போலவே திருமந்திரத்திலும் முதல் தந்திரத்தில் "அன்புடைமை" என்றே ஒரு அதிகாரம் உள்ளது. இந்த அதிகாரத்தில் முதல் மந்திரமே "அன்பும் சிவமும்" என்பதுதான். "அன்பே சிவம்" என்று சொன்னால் வாய்மணக்கும் எண்ணினால் சிந்தை குளிரும். செயல்படுத்தினாலோ உலகமே மகிழும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

எனவே இந்த அன்பே இறைநிலையை உணர்த்தும். இதைத்தான் திருமூலர் 'நீ எங்கோ கோவிலுக்கும், குளத்திற்கும் போய்ச் சிவத்தைத் தேடிக் கொண்டிருக்காதே, உன்னிடத்தில் அன்பு குடி கொண்டு விட்டால் அங்கே சிவம் வந்து குடிகொண்டு விடும்' என்றார். இதனைத் தவத்திரு தேமொழியார் சாமிகள் "மாமறை பேசுகின்றது" என்ற நூலில்,

"ஒரு பொருளுக்குச் செம்மையைக் கொடுத்துக் கொண்டு திகழ்ந்தால் அதற்குச் சிவம் என்று பெயர். அந்தச் செம்மையை எனக்குள்ளே கொடுத்துக் கொண்டிருந்தால் அதற்கு அன்பு என்று பெயர். உலகப் பண்டங்களிலே பரமாகிய பொருள் செம்மையை நிரப்பிக் கொண்டிருக்கின்ற போது சிவம் என்று பொருள். என்னுள்ளே இதயத்தில் நின்று உயிரைச் செம்மைப் படுத்துகின்றபோது சிவம் என்று பொருள். அது என் வாயிலாக வெளிப்பட்டுப் பயன்படுகின்றபோது, அதற்கு அன்பு என்று பொருள். உள்ளேசிவம் இருந்தால் செயலிலே அன்பு வெளிப் படும். உள்ளே சிவம் இருந்தால் வெளிப்படுவது அன்பு"

என்றும்

"உள்ளே விளக்கிருந்தால் வெளிப்படுவது ஒளி. உள்ளே செம்மை யிருந்தால் அங்கே சிவம் குடியிருக்கின்றதென்று பொருள். அங்கிருந்து வெளிப்படுவது அன்பு. உள்ளே ஆசையிருந்தால் வெளிப்படுவது ஆத்திரம். உள்ளே அறியாமையிருந்தால் வெளிப் படுவது சினம். உள்ளே இருக்கின்ற பொருளுக்குத் தக்கவாறு மெய்ப்பாடுகள் வெளிப்படும். உள்ளே என்ன இருக்கின்றதோ அதற்குத் தக்கவாறு உணர்ச்சிகள் வெளிப்படும். இந்த அன்பெனும் மெய்ப்பாடு உள்ளே சிவம் என்ற பரம்பொருள் இருந்தால் வெளிப்படும் மெய்ப்பாடு. ஒளியும், சுடரும் போன்றது அன்பும் சிவமும். ஒளி - சிவம். சுடர் - அன்பு, சுடர்தானே எல்லோருக்கும் பயன்படுகின்றது. அப்படியே அன்புதான் அனை வருக்கும் பயன்படுகின்றது. அன்போடு அகம் குழைந்துருகினால் இறைவனை அடையலாம். உணர்வில் தெரிகின்றபோது சிவம் என்றும் (4) அதுவே வெளிப்படுகின்ற போது அன்பு என்றும் பெயர் பெறுகின்றது. நிலைத்த நலம் சிவம், நிலைத்த சேவை அன்பு"

என்று மிக அழகாக அதற்கு உரை விளக்கம் தருகின்றார்.

அன்பு என்பதனை அல்+பு என்று புணர்ச்சி நிலையில் கூறுவர். அதாவது, தான் அற்றநிலையே அன்பு ஆகும். அன்பு அனைவருக்கும் இருக்க வேண்டிய அவசியமான பண்பு. மனிதனை மனிதனாக வாழச் செய்வது அன்பு ஆகும். மனிதனை மற்ற உயிரினங்களிலிருந்து பிரித்து உயர்த்திக் காட்டுவது அன்பாகும். அன்பு உயிரிலே ஒளிரவேண்டும். அன்பு வாக்கிலே இருக்கக்கூடாது. நாவிலே இருக்கக்கூடாது. அன்பின் வடிவாகவே இந்த உயிர் ஆகிவிடுமானால் அதில் ஒளியாக, அறிவாக அவன் திகழ்கின்றான். அவனை பெற்று அறிவு வடிவமாகப் பார்க்காமல் சீவனிலே ஒளிர்கின்ற ஒளியாகப் பார்க்க வேண்டுமென்றால் நீ அன்பாக மாறு. உன் உயிர் அன்பு மயமாக மாறட்டும். உயிர் உயர்வதே அன்பினால் தான். அது வேறு எதனாலும் உயராது. உயிருக்கு ஓர் உயர்வு கிடைக்

கின்றது என்று சொன்னால் அது அன்பினாலேதான். உயிரும், உய்யும் உயிராய் உயரும் தன்மை உடையதாய் ஆக்கிக் கொண்டு தான் மட்டும் உயராமல் தன்னைச் சார்ந்தாரையெல்லாம் உயர்த்தும் வடிவம் எவன் பெறுகின்றானோ அவன்தான் அன்பின் வடிவமாகத் திகழ்பவன். அந்த அன்பினுள்ளே அவன் அறிவு ஒளியாய், அன்பு ஒளியாய் மிளிர்கின்றான். இறைவன் எந்த வடிவத்தில் இருக்கின்றான் எத்தகையவனாய் விளங்கு கின்றான் என்பதையும் அறிந்துக்கொள்ள முடிகின்றது.

''அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்'' என்பதால் 'அன்பு' ஆன்மாவில் விளைவது. ஆன்மாவில் உள்ளது அல்ல. அன்பை ஆன்மாவில் மலரச் செய்வதற்குப் பெயர் சிவம். அது பழமும் சுவையும்போல, மலரும் மணமும் போல. சிவமாகிய திருவடி நம்முள் எழுந்தால் அன்பு பெருகும். பெருகிய அன்பால் நாம் திருவடியைப் பற்றுவோம். அதுகலந்த நிலை. அப்போது அருள் மலரும். இந்தப் பாகுபாட்டை உய்த்துணர வைத்தார். பின் ''அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்'' என்றார். அன்பே தாயாகும். அருள் அதன் சேயாகும். இதற்கு தந்தை சிவம் என்னும் செம்பொருளே. தன் நிலையில் 'சிவம்' எனப் பெயர் பெற்றது. அது உயிரில் கலந்து இயங்கும் போது 'அன்பு' எனப்பெயர் பெற்றது. இதுவே அன்பும் சிவமும் இரண்டற்ற நிலை. இதைத் தெளிந்தோர். ''அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'' என்ற இந்தப் பாடலுக்குத் 'திருமந்திரநெறி' என்ற நூலில் தவத்திரு தேமொழியார் சாமிகள் விளக்கவுரை உரைத்துள்ளார்கள்.

இவ்வுலகில் வாழும்போது, அன்புள்ளத்தோடு வாழ்கின்றவர் கடவுளோடு கலந்து வாழ்பவராவர். உள்ளத்தில் அன்பு பதியப்பதிய ஆணவப் புல் தேய்ந்து ஒழியும் தொண்டாறுத் தூய்மைப் பெறும். அன்பினால் குழைந்து உருக, உருக ஆண்டவனின் அருள் கிடைக்கப் பெறும் பரந்த ஒரு பெருநிலை துலங்கப்பெறும். இது குறித்து வள்ளல் பெருமானும்,

''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில் புகும் அரசே''

என்கிறார்.

இதனை மாணிக்கவாசகர்,

''அன்பினால் அடியேன் ஆவியோடாக்கை
ஆனந்த மாய்க் கசிந்துருக
என்பரமல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர் கைம்மாறு...''

என்று கூறுகின்றார்.

எனவே மற்ற எந்த உலகியல் உடைமையாக இருந்தாலும் அது திருவருளைப் பெறுகின்ற அளவுக்கு உயர்த்தாது. இறைவனுடைய

நிலைக்கு நம்மை உயர்த்துவதைவிட நம் நிலைக்கு இறைவனைக் கொண்டு வந்து சேர்ப்பது அன்பு. அன்பென்ற வல்லமையை ஒரு சீவன் பெறாமல் எந்தவித மனநிறைவையும் பெறமுடியாது. வாழ்வியல் நிறைவும் பெறமுடியாது. அறுபத்து மூன்று அடியவர்களிலே ஒவ்வொரு வரும் ஒவ்வொரு வழியிலே சென்று இறைவனை அடைந்தார்கள். ஆனால் ஆறே நாளில் இறைவனது அருளைப் பெற்ற கண்ணப்பர் அன்பின் வல்லமையை மிகுத்துக்கொண்டு இறை அருளைப் பெற்றவர். ''நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன்'' என்ற வார்த்தைக் கிணங்க கண்ணை இடந்து அப்பித்தன் அன்பைக் காட்டினார். அவர் தனக்கு வந்த இடரைக் களைவதற்காகக் கண்ணை எடுக்கவில்லை. மற்றவர் துன்பத்தைப் போக்குவதற்காக அச்செயலைச் செய்தார். அதுதான் அன்பு. அதனாலேதான் அவர் அந்நிலைக்கு உயர்ந்திருக்கின்றார். இறைவனுடைய பெருமையை உயர்த்துவது அருள். அது அவன் வல்லமை. அருள் ஆண்டவனை உயர்த்துவது போல அன்பின் வல்லமை ஆன்மாக்களை உயர்த்தும். ஆகவே அன்பு இல்லாமல் மனித வாழ்க்கை இல்லை. அன்பில்லாதவன் மனிதனுமில்லை. அன்பு என்பது தம்மையே இழக்கத் தயாராவது. தியாக உணர்ச்சியற்ற அன்பை அன்பு என்று கொள்ளுவதில்லை.

அன்பே கடவுள் என்னும் உறுதியோடு உருகுகின்ற உள்ளத்த வருக்கு எல்லா உயிர்களிடத்திலும் உயிராய் இருக்கும் இறைவனின் தன்மைப் புலப்படும். அன்பினை உடையவர்கள் இம்மை, மறுமை ஆகிய இரு பயன்களையும் பெறுவார்கள். வீடு பேற்றினை இப்பிறவியில் பெற்றப் பெரியவர்கள் அனைவரும் கையாண்டது இவ்வன்பு வழி யினையே என்றால் மிகையன்று. உடல் நலத்தைப் பேணுவதோடு உயிர் நலமாகிய அன்பைப் பேணி, நாமும் உயர்ந்து, பிறரையும் உயர்த்திப் பெற்ற பிறவியின் பயனை முழுமையாய் அடைந்து வாழ்வாங்கு வாழ்ந்து இறைவனை அடையவேண்டும. ஆகவே அன்பு மயமாய் வாழ்ந்தால் சிவமயமாகலாம். அப்படி வாழ்வது ஒன்றே திருமூல நாயனாருக்கு நாம் காட்டும் நல்லதொரு கைம்மாறாக அமையும். வாழ்க திருமூலர்! வளர்க அவர் தம் எளிமை நெறிகள்.

# 77. திருமந்திர ஆராய்ச்சிகளின் நவச்சிறப்புகள்

திரு. பொதிகை. முத்துக்குமரன், சென்னை.

அருள்மிகு திருமூலர் யார்? திருமந்திரம் என்றால் என்ன? தமிழாராய்ச்சிகள் யாவை? அவற்றின் இரு நவச்சிறப்புகள் யாவை? அவைகளை உலகிற்கு உணர்த்துவது எவ்வாறு? அவற்றின் பயன்கள் யாவை? என்று ஆறு ஆய்வுக் கேள்விகளுக்குரிய விடைகளை இதுவரை (1997-2007 வரை). இக்கட்டுரை ஆசிரியர் தஞ்சை, அண்ணாமலை, சென்னை, மனோன்மணியம் சுந்தரனார், மலேசியா என்ற ஐந்து பல்கலைக்கழகக் கருத்தரங்குகளில் படித்தளித்த எழுபத்திரண்டு ஆய்வுக் கட்டுரைகளின் அடிப்படையில், உயர் உயிர் ஆய்வு முடிவுகள், மொழி பகுப்பாய்வு, பிணைப்பாக்க ஆய்வு, அட்டாங்க யோக அறிவியல் ஆய்வு, சைவசமய தத்துவ ஆய்வு, பன்னிருதிருமுறை ஒப்பாய்வு என்ற ஐவகை ஆய்வுமுறைகளைப் பின்பற்றி அண்ட அறிவியல் வான்மீன் அறிவியல், உலக அறிவியல் சான்றுகொண்டு திருமந்திரப் புதுமை, பொதுமைகளை, பெருமைகளை வெளிப்படுத்துவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும். அகர அயன் அரன் அரி அருள் கொண்டு விளக்க முற்படுகிறேன். எட்டெனும் அகரச் சிறப்புடையது இக்கட்டுரை.

ஆகமங்கள் ஒன்பதையும் நந்தியெம்பெருமானிடமிருந்து தமிழ் மொழி மூலமாகப் பெற்ற பேரருளாளர், தவச்சீலர், மூவாயிரம் ஆண்டு யோகத்தவம் செய்து 3000 பாடல்களைத் தமிழில் முதன் முதல் திருமுறையை ஞானாமிர்தமாகத் தந்தருளியவர். இன்றைய பன்னிரு திருமுறையின் முன்னோடியான திருமந்திர நூலை அருளியவர் திருமூலர். ஆதிசிவன் (திருமந். 1701) அருள் நந்திச் சிவன் மீது கொண்ட அவரின் பக்தி உணர்வே திருமந்திரமாகப் பத்தாம் திருமுறையாக உருவெடுத்துள்ளது. ஆவுடையம்மன் அப்பன் திருவருளே திருமூலர் ஆவர். ஆகமச் சிறப்புடையது.

இருமையிலும் இன்பம் பயக்கும் முப்பது வகை உபதேசங் களையும், முந்நூறு மந்திரங்களையும், மூவாயிரத் தமிழ்ச் செய்யுளால், ஒன்பது தந்திரங்கள் என்னும் ஆகமங்களாலானது திருமந்திரம். தமிழர் களின் மறுமை ஞானக் கண்ணாக விளங்கும் அந்நூல். இம்மைக்குக் கண்ணாக விளங்கும் திருக்குறள் போன்றதொரு சிறந்ததொரு நூலாகும். 12000 வரிகளை உடைய அத்திருமந்திர நூல் பன்னீராயிரம் நூற்பாவுடைய

அகத்தியத்தை நினைவுபடுத்துவதாகும். 3000 விண்மீன்களை நோக்கித் தியானம் சமாதி நிலையிலிருந்து செய்து மீண்டு வந்த திருமூலரால் இயற்றப்பெற்ற அரியதொரு உயரிய தமிழாராய்ச்சிக்கு ஏற்ற சிறப்புடைய முதல் தமிழ் ஆகமநூல் திருமந்திரமாகும். சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேதம் எனப்படும் (திருமந்.149) சிறப்புடையது; இரட்டைச் சிறப்புடையது.

ஈடு இணையற்ற ஈசன் (நாசி நுனியினின் நான்கு மூவிரலிடை ஈசன் இருப்பிடம் (2506), ஈசி ஈர்க்கும் அருள்பெற்று திருமந்திரம் பற்றிய தமிழராய்ச்சிகளைத் தமிழ் எழுத்து அ-ன் முப்பதிற்கு ஏற்ப முப்பது வகையாக வகைப்படுத்தலாம். முப்பது உபதேசம், 300 மந்திரம், 3000 பாடல்கள் வழியும், 30,300,3000 வகையாக உலகக் கருத்துக் களோடு ஒப்பிட்டு ஆராய்ச்சிகளை மேற்கொள்ளலாம். "திருமூலர் திருமந்திரத் தமிழராய்ச்சிகளின் நவச்சிறப்புகள்" என்ற ஆய்வுத்தலைப்பை மொழியியல் பகுப்பாய்வு பிணைப்பாக்கம் செய்யின் முப்பதுக்குமேல், ஆராய்ச்சித் தலைப்புகள் வெளிப்படும். அவற்றின் வழியும் நேற்றைய, இன்றைய, நாளைய திருமந்திரத்தின் ஆராய்ச்சிகளை ஒருங்கிணைத்து அரியதோர் ஒப்பாராய்ச்சியினை மேற்கொள்ளலாம். சமய, தத்துவ, மொழியியல், சமூக அறிவியல், அறிவியல், பயனறிவியல், இலக்கிய இலக்கண இயல், கலை இயல், வரலாற்றுப் புவியியல் என்ற ஒன்பது நோக்குகளில் திருமந்திர ஆராய்ச்சியை வகைப்படுத்தலாம். ஈசன், ஈசி (ஈர்க்கும் சிவை) கடக ஈசன் திருவருளால் திருமந்திரக் கலைக் களஞ்சியங்களை ஒன்பது தொகுதிகளாக உருவாக்கலாம்.

உயர் உயிர் ஆராய்ச்சி நோக்கில் திருமந்திரம் என்ற தலைப்பில் மேல்நிலை உளவியல் துறையைப் பல்கலைக் கழகங்களில், மேலை நாட்டு ஆய்வுகளையும் கீழைநாட்டு ஆய்வுகளையும் ஒப்பிட்டுத் திருமூலரோடு உரையாடும் பேறு பெற்றவர்களைக் கொண்டு புதுமை, பொதுமைக் கருத்துக்களை வெளிப்படுத்துவது அரியதொரு உயரிய பெரிய ஆராய்ச்சியாகும். இதற்குத் தனியாகத் துறை அறக்கட்டளை 30 இலட்சத்தில் அமைக்க வேண்டும். இக்கட்டுரையாசிரியர் அப்பேறு பெற்றவர்களுள் ஒருவராவார். சிம்மம், சீயம் போன்ற வயவலிமிக்க சிவகுமரன் அருளால் இவ்வாராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

ஊழிதோறும் நின்று நிலவும் தொல் உலக இலக்கியங்கள், பதினெண் புராணங்கள், தொன்மங்கள் வழி திருமந்திரக் கருத்துக்களோடு ஒப்பீட்டா ராய்வதும் நீரூழி (கடல்வழி) தீயூழி, வளியூழி, நிலஊழி, ஆகாய ஊழிக் கருத்துக்களோடு கடல் கோள்களுடன் ஒப்பிட்டாராய்வதும் ஊழி இயல் திருமந்திர ஆராய்ச்சியாகும். ஊழி பற்றி இக்கால நில அறிவியல் அறிஞர் கூறும் கருத்துக்களோடு ஒப்பிட்டுத் திருமந்திர ஊழி இயல் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளலாம். விந்தியத்திற்கு வடக்கே வடபுலம் இமயம் இல்லாது கடலாக இருந்தமையை கி.மு.5000 நிலவியல்

படம் காட்டும். அது வழி ஆராயலாம். ஊஞ்சல் ஊக்கமிகு கன்னி, சிம்ம ஊர்தியாள் அருளால் இவ்வாராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

எண் வழி, எழுத்து வழி (தமிழ் எண் எழுத்து) அவை ஆகாயத்தில் துலாம், விருச்சிக விண்மீன் குழுக்களாக உள்ளமையை ஒப்பிட்டுக் காட்டியும், மொழியியல் படி பகுத்துப் பிரித்து இணைப்பாக்கம் செய்தும் எண்ணை எழுத்தாக்கி, எழுத்தை எண்ணாக்கியும் ஆராய்வது ஒரு புதுமை யான ஆராய்ச்சியாகும். எண்ணென் கலை வழியும் ஆராய்ச்சியை மேற் கொள்ளலாம். எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் (திருமந்.3041) என்ற திருமூலர் கருத்து வழி ஆராயலாம். அயன் 8, 10, 30 வழி ஆராயலாம். கற்பரசி = க-1, ற் - 17, ப் - 9, ர் - 14, சி - 3 வழியும் ஆராயலாம். துலாமில் உறையும் இறையருளால் இவ் வாராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

ஏழ் ஏழ் பிறப்பிலும் அண்டங்களிலும் (திருமந் 1839) உதவும் இம்மை மறுமை எழுமையிலும், மும்மையிலும் உதவும் திருமந்திரக் கருத்துக்களைத் தொகுத்து வகைப்படுத்தி பண்டை மறை துணை கொண்டு விளக்கி உரைத்து உலகியலோடு ஒப்பிட்டுக் காட்டி ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம். விருச்சிகத்தில் அமைந்துள்ள ஐங்கரன் ஐவகை அருளால் ஐங்கண்ட நாவலந்தீவு ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

ஐம்முகச் சிறப்பு - மலர்ந்த அயன்மால் உருத்திரன் பரவிந்து நாதம் நலந்தரும் சக்தி சிவன் வடிவாகிப் பலந்தரு லிங்கம் பராநதியாமே (திருமந். 1745) ஐந்து மூர்த்திகளின் கடவுள், மனிதச் சிறப்பை திருமந்திரம் எடுத்துரைப்பது ஒரு சிறப்பாகும். மால் என்பது மா ஆலின் கீழ் 28 ஆகமங்களைகத் தன் கை விரலால் உரைத்த தென்முகக் கடவுளை ஈண்டு குறிக்கும். ஐயன் அம்பு போன்ற தனுசுவழி ஆராயலாம்.

ஒரே உலகக் கொள்கைக்கு உதவும் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற திருமந்திரக் கருத்துக்கு இணையாக உள்ள உலக நூல் களின் கருத்துக்களைத் தொகுத்து வகைப்படுத்திச் செயற்படுத்தி ஓருலகம் காணத் திருமந்திர ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம். ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை நன்றென்று அடியினைத் தொழ அருள் செய்யும் ஆதிப்பிரானே (திருமந் 1744) என ஒருவனே தெய்வம் என்பதற்குத் திருமந்திரம் விளக்கம் கூறுகிறது. ஒரு மகர யாழ், கடலாடு மகரத்தில் உறைபவள் அருளால் இவ்வாராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

ஓம் எனும் விரிபிரணவம் (உரம் தரும் மந்திரம் ஓம் (திருமந். 943) ''அ'' ஒடுக்கப் பிரணவம் ''நமசிவாய சிவாய நம பற்றித் திருமந்திரம் கூறும் கருத்துக்களை அண்டத்தின் விண்மீன்களை 8000 (வெறுங்கண்ணால் காணக் கூடியவை) 88 விண்மீன் கூட்டங்களில் கண்டறிந்து அவற்றை விளக்கி உலகச் சமயச் சின்னங்களை ஒருங்கிணைத்து உலகப் பொதுச் சமயம் அமைய உதவும் கருத்துக்களைக் கண்டறியும் ஆய்வை மேற்

கொள்ளலாம். ஓங்காரத்துள்ளே ஒருமொழி - திருமந் 2676 ஓம் மூலம் தமிழ் எண்களையும், எழுத்துக்களையும், சொற்களையும் உருவாக்கி உலகச் சமயச் சின்னங்களை அவற்றினுள் அடக்கி உலகச் சமயப் பொதுமை காணலாம் என்பது திருமந்திரத்தின் ஒரு கும்பச் சிறப்பு ஆகும். கும்பக விண்மீன் குழுவழி இவ்வாராய்ச்சியை மேற்கொள்ளலாம். ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே - 2627, 2628 திருமந்திரச் செய்யுள்கள் ஓம் இன் சிறப்பு பற்றிக் கூறுவது ஒரு சிறப்பு.

ஔ-அ+உ--ய ஔடதம் போன்ற ஔரிய அறக் கருத்துக்களைப் பத்தாம் திருமுறையான திருமந்திரக் கருத்துக்களோடு ஒப்பிட்டு ஔரியம் எனும் அறநூல்கள் வழி ஆராய்ந்து திருமந்திரக் கருத்துக்களை அவ்வுலகிலும், உவ்வுலகிலும், இவ்வுலகிலும் பரப்பலாம். அ, உ சேர்ந்து சூலம் உருவைப் பெறும் அதனை அகரத்தில் காணலாம். ஔவை உலக அரசியின் மீன அரசியின் திருவடி அருள் கொண்டு வான்மீனம் சூலம் வழி ஆராயலாம். ஆகமேற்குறிப்பிட்ட பன்னிருவகை இராசிகள் வழி ஆராய்வதும் திருமந்திர ஆராய்ச்சியாகும்.

**க் – சிறப்பு, சக்கரச் சிறப்பு**

ஒன்றவன் என்று தொடங்கி பாதமே என்று முடியும் சிறப்பு திருமந்திரத்தின் சிறப்புகளுள் ஒன்று. இச்சொற்கள் ஒன்றவன், மன்றவன், பவன், தவன், பதமானவன், ஏற்றவன், அப்பாவானவன், அப்பன், மன்னவன், வானவன், பாதமானவன் என்ற பதினொரு கக - கனக; ககனப் பொருளான சிவன் பெருமைகளை விளக்குவது ஒரு மறைபொருள் சிறப்பாகும். மந்திரச் சக்கரங்களை விளக்கும் சிறப்புடையது.

**ங் – சங்காரச் சிறப்பு**

திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரம் சங்காரச் சிறப்புடையது. சிவபெருமான் நிகழ்த்திய அட்ட வீரட்டச் செயல்களை இத்தந்திரம் எடுத்துக் கூறுவது சிவபெருமானின் சங்காரச் சிறப்பை விளக்கும் சங்கு ஒலி, வெற்றி பெற்றதை எடுத்துரைப்பதால் ஆரவாரத்தால் எடுத்துரைப்பதால் இப்பெயர் பெற்றது. சங்கரித்து மீண்டும் உயிர் பெற்றழச் செய்து படைத்தல், காத்தல், அழித்தல் என்ற சிவனின் முச்செயல்களையும் எடுத்துரைப்பது திருமந்திரச் சிறப்பாகும். சிங்கார சிங்கச் சிறப்பாகும்.

**ச் – சமயம் சிறப்பு**

ஒன்றே குலம் ஒருவனே தேவன் (திருமந். 2104) என்ற திருமந்திரச் செய்யுள் சமயச் சிறப்பு உலகச் சமயப் பொதுமை வாய்ந்தது. சைவச் சமயச் சிகரமான சிறப்பு "ஒன்றது பேரூர் வழி ஆறு அதற்குள் என்றது போல" இருமுச் சமயமும் சிறப்பு வாய்ந்தது. இக்கால அறுவகை சமயச் சிறப்புகளோடு ஒப்பிட்டாராயலாம்.

**ஞ் - ஞானச்சிறப்பு**

தமிழ் மண்டலம் ஐந்தும் தாவிய ஞானம்; எம் ஆதி அறிவும் தமிழ் மண்டலம் ஐந்தும் தத்துவமாமே - திருமந் 1619-ல் திருமந்திரம் ஞானச் சிறப்பை எடுத்துரைக்கிறது. ஐந்து தமிழ் மண்டலம் இருந்த காலம் கி.மு. 17000-ல் இருந்த நாவலந்தீவு இருந்த காலம் ஆகும்.

**ட் - அட்டாங்க யோகச் சிறப்பு**

திருமூலர் 79 மந்திரப்பாக்களால் அட்டாங்க யோக நெறியை விளக்குகிறார். அட்டாங்க யோகச் சிறப்புடையது திருமந்திரம். மூன்றாவது தந்திரம் 21 பகுதிகளையுடைய சிறப்பு இதற்குண்டு. எட்டுச்சாண் உடம்பில் வாழும் உயிர்க்கு விளக்குவது ஒரு சிறப்பு. தமிழ் அகரம் எட்டைக் குறிக்கும்.

**ண் - எண் சிறப்பு**

ஒன்று முதல் எட்டு எண் முடிய சிவமூர்த்தம் எட்டை நினைவு படுத்தும் வகையில் எட்டு எண்களை வைத்து இறைவனைப் பாடிய திருமூலர் திருமந்திர எண் சிறப்பினை விரிவாக எடுத்துரைக்கிறார். தமிழ் மொழியின் முதல் எழுத்து 30,33க்கு கசதநபமவயஞங 12+10 = 22க்கு ஏற்ப ஒன்பதாந்திரத்தையும் ஈரேழு 14 உலகங்களுக்கு ஏற்ப ஆறாந் தந்திரத்தையும் நம்மிருக்கை கால் விரல் 20-க்கு ஏற்ப ஐந்தாம் தந்திரத்தையும் தமிழ் உயிர் 12, ஆய்தம் - 1 ஆக 13க்கு ஏற்ப, நாலாந்தந்திரத்தையும், 33 முக்கோடி தேவர்களுக்கு ஏற்ப எட்டாம் தந்திரத்தையும் தமிழ் மொழிக்கு ஏற்ப அமைந்துள்ள ஒரே ஒரு ஒப்பற்ற தமிழ் ஆகம நூல் என்ற எண் சிறப்பை உடையது திருமந்திரம்.

**த் - தத்துவச் சிறப்பு**

ஆறாறு முப்பத்தாறு, தொண்ணூற்றாறு தத்துவங்களைத் திருமந்திரம் கூறுவதால் அதன் தத்துவச் சிறப்பு இனிது விளங்கும். தவச்சிறப்பு, சிவச்சிறப்பு, சைவச்சிறப்பு, தசச் சிறப்பு, பத்துச் சிறப்பு என்ற ஐவகைச் சிறப்பும் இதனின்றும் வெளிப்படும். ''தத்துவமாவது அகார எழுத்தே'' (திருமந் 2180) தத்துவம் ஆறாறு (திருமந் 2184) என்று திருமூலர் தத்துவத்திற்கு விளக்கம் கூறுவது தத்துவச் சிறப்பாகும். $36^0/36^0 = 10^0$ வான் அண்டத்தைப் பகுத்துரைக்கிறார். தத்துவமாகும் சதாசிவன் தானே - திருமந் 1708 சிவனே தத்துவம் எனக் கூறுவது தத்துவச் சிறப்பை இனிது விளக்கும்.

**ந் - நவச்சிறப்பு**

நவச்சிறப்பு என்பதற்குப் புதிய சிறப்பு, ஒன்பது சிறப்பு என்று இரு பொருள் கூறலாம். நவநிதிச் சிறப்பு, நவகோள் சிறப்பு, நவமணிச் சிறப்பு, சிந்திய ஆகமச் சிறப்பு மந்திரச் சிறப்பு எல்லாம் ஒருங்கே அமைந்தது திருமந்திரமாகும். நவ ஆகமங்களின் பிழிவாகத் திருமந்திரம்

அமைந்துள்ளமை ஒரு நவச் சிறப்பாகும். ஒன்பது ஆகமங்களின் பயனை இவ்வொரு நூலே அளிக்கும். நவாக்கரி மந்திரச்சிறப்புடையதும் இந்நூலேயாகும். நவ்ம் பற்றி திருமந் 1776 விளக்குகிறது.

**ப – பதிபசு பாசம் பத்திச் சிறப்பு**

திருமந்திரம் உணர்த்தும் பத்தி உணர்வு என்ற ஆய்வுக் கட்டுரையில் இக்கட்டுரையில் ஆசிரியர் விரிவாகத் திருமூலர் தம் பத்தி உணர்வை விளக்கி யுள்ளார். பதிச்சிறப்பு, திதிச்சிறப்பு, சத்திச்சிறப்பு, சித்தி சிறப்பு, புத்தி சிறப்பு எல்லாம் பத்திச் சிறப்பினுள் அடங்கும் உச்சியில் ஓங்கி ஒளி திகழ் நாதத்தை நச்சி இன்பம் கொளும் நிலையே பக்தியாகும் (திருமந் 427) எனத் திருமந்திரம் பக்திச் சிறப்பைக் கூறுகிறது. படர் சடை மாதவம் பற்றிய பத்தர்க்கு இடரடையா வண்ணம் ஈசன் அருளும் - திருமந் 1614 என்று திருமந்திரம் பத்திக்கும், அருளுக்கும் உள்ள உறவை விளக்குவது ஒரு சிறப்பாகும்.

**ம-மந்திரச் சிறப்பு**

திருமந்திரத்தின் நான்காம் தந்திரம், ஐந்தெழுத்து மந்திரச் சிறப்புடையது. சக்கரச் சிறப்புடையது, அம்மையின் சக்கரம், வயிரவிச் சக்கரம், ஏரொளிச் சக்கரம், நவாக்கரி சக்கரம் இதில் விளக்கப்படுகிறது. 13 பிரிவுகளை யுடையது. தமிழ் உயிர் 12, ஃ - 1 ஆக 13ஐ நினைவுபடுத்தும்.

**ய-நமசிவயச் சிறப்பு**

நான்காம் தந்திரத்தில் அசபை பகுதியியல் திருமந் 856, 870, 878, 883, 885, 888-ல் மந்திரச் சிறப்பு பற்றி விரிவாகத் திருமூலர் எடுத்துரைக்கிறார். நமசிவய மந்திரச் சிறப்பு பற்றி இக்கட்டுரை ஆசிரியர் ஒரு ஆய்வுக்கட்டுரையில் இது பற்றி விளக்கியுள்ளார்.

**ர – வாரச் சிறப்பு**

சோதி விசாகந் தொடர்ந்திருதேள் நண்டு ஓதிய நாளே உணர்வது (திருமந் 1666) வழிபடு வாரம் - கிழமையை துலாம், விருச்சிகம், கடகம் எனத் திங்கள் இருக்கும் விண்மீன்களை வழிபடு நன்னாள்களாகத் திருமந்திரம் கூறுவது ஒரு சிறப்பு.

**ல் – நூல் சிறப்பு**

நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம் - திருமந் 1637-ல் புன்ஞானத்தோர் வேடம் பூண்டும் பயனில்லை - திருமந் 1641 நூல் - பூணூலையும், வேதநூலையும் குறிக்கும் முப்புரி நூல் என்பது கடகம், மகரம், நடுக்கோடு என்பதையும் 27 புரிநூல் 27 விண்மீன்களையும் குறிக்கும் என்பது இக்கட்டுரை ஆசிரியர் கண்ட புத்தாராய்ச்சி முடிவாகும்.

**வ – வழிபாட்டுச் சிறப்பு**

வழிபடு சிறப்பு. சிவனை வணங்கி வழிபடும் முறையை எடுத்துக் கூறும் சிறப்புடையது திருமந்திரம். உச்சியும் காலையும் மாலையும்

ஈசனை நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும் நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும் நச்சுமின் (திருமந் 1815) எனத் திருமந்திரம் வழிபடும் நேரத்தை, மந்திரத்தை வழிபடும் ஊடகங்களையும் கூறுவது அதன் சிறப்பாகும். ஐந்தங்கம், ஐம்பூத வணக்கம் வழிபாடு பற்றி திருமந்திரம் 1937 விளக்குகிறது.

**ழ் - ஊழிச்சிறப்பு**

நில ஊழி, நீர் ஊழி, தீ ஊழி பற்றிக் கருவரை (மலை) மூடிக் கலந்தெழும் வெள்ளம் ஊழிக் காலத்தில் இறைவன் நீருற ஓங்கும் ஒளியாகி அருவரை (மலை) போல் நின்றான் (திருமந் 348) தீ ஊழிக் காலத்தில் உலகார் அழல் கண்டு உள்விழாது ஓடி அலைவாயில் விழாமல் (திருமந் 349) காப்பாற்றினான் என்று 17000 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த ஊழிக்காலம் பற்றிக் கூறுவது திருமந்திரத்தின் ஒரு சிறப்பாகும். ஊழ் சிறப்புடையது திருமந்திரம்.

**ள் - தாள் சிறப்பு**

ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும் தேடியம் காணீர் சிவனவன் தாள்களே (திருமந் 1627) என்று வழிபடும் முறையை சிவன் தாளைச் சிறப்பாகத் திருமந்திரம் கூறுகிறது. உளவியல் சிறப்பு இக்காலத்தார் கூறும் மேல்நிலை உளவியல் கூறப்படும் நுண்ணுடல், மீநுண்ணுடல், முன்மையுடல், பருவுடல் பற்றித் திருமந்திரம் விளக்குவதால் உயிர் உளவியல் சிறப்புடையது திருமந்திரம்.

**ற் - அறச்சிறப்புடையது**

முதல் தந்திரம் காரண ஆகமப் பிழிவு எனப்படும் சிறப்புடையது. திருக்குறள் அறத்தின் கூறுகள் 38 உடன் ஒப்பிடக் கூடியது. இறைவன் திருவடி தண்டைக்கால் காரண ஆகமம் ஆகும். அறம் அறியார் அண்ணல் பாதம் நினையும் திறம் அறியார் என திருமந் 262-ல் திருமூலர் அறச்சிறப்பைக் கூறுகிறார்.

**ன் - வான் அன்னை சிறப்பு - அன்னமேவிய அன்னைச் சிறப்பு**

கலைமகள் சிறப்பை முதன் முதலில் ''ஏடங்கை நங்கை இறை எங்கள் முக்கண்ணி'' ஐவரைப் பெற்றவள் (திருமந் 1049) அவளை அறியா அமரரும் இல்லை. அவளின்றிச் செய்யும் அருந்தவமில்லை. அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை திருமந். 1029 என்ற வரிகள் மூலம் கலைமகள் பற்றிக் கூறும் சிறப்புடையது திருமந்திரம். இது திருமந்திரத்தின் அரிய பெரிய சிறப்பாகும். ஆவின் கிழத்தி நல்லாவடு தண்டுறை, நாவின் கிழத்தி நலம் புகழ்ந்து ஏத்திடும் தேவி (திருமந் 1098) என அவ்வன்னையின் பெருமையை எடுத்துரைப்பதும் ஒரு சிறந்த சிறப்பாகும்.

**திருமந்திரமே சிவகதிக்கு வித்தாம்**
**திருமந்திரமே சிவமாம் - அருமந்த**
**புத்திக்குள்ளே நினைந்து போற்று மடியார் தமக்குச்**
**சந்திக்கு தற்பரமேதான்**

என்ற பழம்பாடலை நினைவில் வைத்து இவ்வன்னையை இன்றும் அண்டவெளியில் அன்னமேவிய அன்னையின் உருவத்தை வானறிவியல் படம் வாயிலாகக் கண்டு களிக்கலாம். வானறிவியல் தியானம் செய்யலாம். தொலை நோக்காடி வழி கண்டு அறிந்து இன்புறலாம். இக்கட்டுரை ஆசிரியர் எழுதியுள்ள வானறிவியல் நோக்கில் வீரபத்திரக்காளி என்ற ஆய்வுக்கட்டுரையில் மேலும் விபரங்களை அறியலாம்.

மேற்குறிப்பிட்ட இரு நவச்சிறப்புகளைப் பதினெண் கணச் சிறப்பு களைப் பதினெண் கணங்களின் திருவருள் கொண்டு ஒன்பது வகை அறங் களையும், 3000 பாடல்களுக்கு 3000 அறக்கட்டளை களையும் நிறுவி, திருமூலர் படிப்பகம், நூலகங்கள், தொண்டு நிறுவனங்களை ஒருங்கிணைத்துத் திருமந்திர உலகப் பொதுப்பேரவை துணையுடன் நடமாடும் கண்காட்சி, கருத்தரங்கு, ஒளி ஒலி மாநாடு நடத்திப் பூங்காக்கள், கல்வி நிலையங்கள் வைத்து அட்டாங்க யோக வழியில் உலகிற்குத் திருமந்திரச் சிறப்புகளை துணைபுரிந்த நூற்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகளில் கூறிய வண்ணம் உணர்த்தவேண்டும். இக்கட்டுரையில் முப்பது வகையான திருமந்திர நேற்றைய, இன்றைய, நாளைய ஆராய்ச்சிகளை ஈராறு, மூவாறு பக்திச் சிறப்புகள், பெருமைகள் ஆராயப்பட்டன, வெளிப்படுத்தப்பட்டன.

அட்டாங்க யோகவழி, சோதிட யோகா வழி அனைவரையும், சிறப்பாகத் தமிழ் மொழியியல் யோகா 2½ இலட்சம் வழி எழுதப் படிக்க வைக்கமுடியும். 100% எழுத்து படிப்பறிவைக் கொண்டு வரலாம். இருபக்க மூளை வளர்ச்சி பெற்றுப் பண்பாடு, அறிவியல் கோட்பாடுகள் நிலைபெறும். கொடுமைகள் மறைந்து செம்மை நிலை, தமிழ்ச் செம் மொழியால் ஏற்படும். இருமையிலும் எழுமையிலும் அல்லவை தேய அறம் பெருகும். அறவழிப் பொருள் பெருகும். அறவழி இன்பம் பெருகும். அறம் பொருளின்பம் வீடு என்ற நாற்பொருள் உறுதிப் பொருள் உயிர்க்கும் கிடைக்கும். அறத்தால் நாடு வளம் பெறும். இன்னோரன்ன நன்மைகள் ஏற்படும். அறம் அறியார் அண்ணல் பாதம் அறியார் என்ற நிலை மாறி அறம் அறிந்து அண்ணல் பாதம் அறிந்து வீடு என்னும் முத்தியைப் பெறுவர். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைப்போர் தொகை பெருகும். அட்டாங்க யோகப்பேறுகள் பெற்றவர் தொகை பெருகும். இன்னோரன்ன நன்மைகளை விளைவிக்கும் திருமந்திரப் பாக்களை ஓதி இறைவன் இறைவியை அம்மையப்பனை திருமந்திரத்தில் திருமூலர் காட்டும் வழியில் தமிழில் வழிபட்டு இன்மகவு பெற்று இனிது வாழ்வோமாக (ஓம்,க).

**துணைபுரி நூற்கள், கட்டுரைகளின் பட்டியல்**


1. சைவ சித்தாந்தத்தின் தொன்மை, சைவத்தின் சிறப்பு, சைவத்தின் புதுமை - செந்தமிழ்ச் செல்வி இதழில் 216, 217மே 1994
2. பேசும் ஆவி ஓர் ஆய்வு, உயிர் உயர் ஆய்வுக் கட்டுரை - பேசும் ஆவி இதழில் பிப்.218 1997
3. திருமூலர் திருமந்திரமும் உலகப் பண்பாட்டு வளர்ச்சியும் ஆறாம் உலகச் சைவ மாநாடு, தஞ்சைப் பல்கலைக்கழகம், டிச.1997
4. வானியல் சோதிடம் - ஞானசிந்தாமணி இதழுக்காக எழுதப் பெற்றது 1997
5. வானறிவியல் கண்ணோட்டத்தில் வீரபத்திரர் - வீரபத்திரர் கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரை, சென்னை 230 டிச. 2002
6. ஓம் நமசிவாய மந்தரச் சிறப்பு - வானறிவியல் மொழியியல் நோக்கில் திருஞானசம்பந்தர் இலக்கிய மாநாடு, வாரணாசி 231 2002
7. திருமூலரும் திருவள்ளுவரும் தரும் மருந்து - ஓர் ஒப்பாய்வு உலகத் தமிழ் மருத்துவ மாநாடு, பழனி 239 2005
8. திருமூலரும் திருக்கோயில் வழிபாடும் - வானறிவியல் நோக்கில் அண்ணாமலை பல்கலைக்கழகத் தமிழியல் துறை, கருத்தரங்கு 240 மார்ச் 2005
9. பத்தாம் திருமறை உணர்த்தும் பக்தி - வானறிவியல், மொழி யியல் ஆய்வுக்கட்டுரை, ரிஷிகேசம் மாநாடு 241 மே 2005
10. அருள்மிகு கோயில் கலைகளும், கட்டடக் கலையும் - ஒரு சொற்றொடர் பகுப்பாய்வு பிணைப்பாக்க ஆய்வு - அண்ணாமலை பல்கலைக்கழக வரலாற்றுத்துறை கருத்தரங்கு 242 நவ. 2005
11. அருள்மிகு ஆலால சுந்தரனார் தமிழ் ஒரு சொற்றொடர் மொழி பகுப்பாய்வு பிணைப்பாக்கம் ஆய்வு - வானியல் - சோதிட மொழியியல் ஆய்வு - சுந்தரர் இலக்கிய மாநாடு, வாரணாசி 243 டிச. 2005
12. வேதாத்திரியின் வானறிவியலும் யோகப் பயிற்சிக் கலையும், தஞ்சைப் பல்கலைக்கழக வேதாத்திரிய ஆய்வு மாநாடு 245 2006
13. அண்ட வானறிவியலும் அறுபத்து நான்கு கலைகளும், அனைத்துலக கலைகள் மாநாடு, அறச்சலூர், ஈரோடு 249 2006
14. ஐம்பெருங்கண்டங்களின் பண்டைய நிலை அரசி அகத்தியனின் உயர் உயிர் ஆய்வுக் கட்டுரையின் ஆங்கில மொழிபெயர்ப்பு - நாவலந்தீவுப்படம் (கி.மு. 17000) வெளியீடு உயர் உயிர் ஆய்வில் பெற்ற படம் 210 1981

15. தமிழ் மொழியில் உள்ள அனைத்துச் சொற்களுக்கும், எழுத்துரு, சொல்லுரு யோகாவைச் சமய, உடல்நல, தத்துவ யோகாவை, திருமூலர் ஆகம வழியில் கற்றல் - கற்பித்தல்
16. தமிழ் வழி 64 கலைகளை, 96 கலைகளை, 108 கலைகளைத் தென்முகக் கடவுள் இருக்கை முத்திரை மூலம் கற்றலும் கற்பித்தலும்.
17. திருமூலர் தொண்டு நிறுவனங்களை ஒருங்கிணைத்தல் வழித் திருமூலர் தத்துவத்தை உலகத்தத்துவங்களைக் கற்றல் கற்பித்தல்.
18. அருள்மிகு திருக்கோயில் என்ற ஒரு சொல்லிலிருந்து 3000 சொற்களை உருவாக்குவது எவ்வாறு? பகுப்பாய்வு பிணைப்பாக்கத் தமிழ் புதுமைகள்.
19. 108 ஆடற்கலையில் தமிழ் எழுத்து சொல் உருவாவது உருவாக்குவது எவ்வாறு?
20. வான்தமிழ் அகரம் கார்த்திகை மீன் குழு வழி உலகமொழி எழுத்துருக்களைக் கற்றல் கற்பித்தல் எவ்வாறு?
21. உலக நாடுகளின் உயர் உயிர்களின் ஆராய்ச்சியும் தமிழக உயர் உயிர் ஆராய்ச்சியும் - ஓர் ஒப்பாய்வு சமயப் பொதுமை, மொழிப் பொதுமை நல்லிணக்கம் ஆய்வு.
22. அறக்கட்டளைகள் வழிப் பண்டைய அறங்களைத் தமிழ் அறிவியல் இக்கால அறிவியல் வழிப்பேணி திருக்குறள் - திருமூலர் கலைக்களஞ்சியம் உருவாக்குவது எவ்வாறு?
23. திருமூலர் திருமந்திரத் தமிழ் மொழியியல் யோகா 2½ இலட்சம் உருவாக்கும் கல்வித் தொழில் நுணுக்கக் கணினிப் புதுமைகள்.

1 - 23 - முனைவர் பொதிகை முத்துக்குமரனின் கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள்

15-23-ஆய்வில் உள்ள கட்டுரைகள்.

24. திருமூலரும் சமுதாய மேம்பாடும் உலகச் சைவ மாநாடு - 1997
25. திருமூலர் குருபரர் காட்டும் நீதிநெறி ஒப்பாய்வு (குமர குருபரர் மாநாடு, காசி) -1999
26. திருமந்திரமும் பெரிய புராணமும் (பெரியபுராண மாநாடு, காசி) - 2001
27. தமிழ்வழிக் கற்றல் கற்பித்தல் - பண்பாடு புதிய உத்திகள் மலேசியப் பல்கலைக்கழகம் மே 2007
28. திருமூலர் நோக்கில் அருள்மிகு வீரபத்திரர் மாநாடு கருத்தரங்கு - சென்னை ஜூலை 2007
29. திருமந்திரத்தில் இயமம் - விவேகானந்தா மகளிர் கல்லூரிக் கருத்தரங்கு எளையாம்பாளையம் ஜூலை 2007
30. திருமந்திரம் காட்டும் சிவபெருமான் - காசி மடம் கருத்தரங்கு

24-30 பொதிகை மு. கோமதியின் கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள்.

# 78. திருவிசைப்பா பாடிய அருளாளர்கள் வரலாறு

இசைப்பேரறிஞர் பி.எஸ்.வி. ராஜா, அண்ணாமலை நகர்.

பன்னிரெண்டு திருமுறைகளுள் திருவிசைப்பா மாலை என அழைக்கப்பெறும் ஒன்பதாம் திருமுறை, மற்றவைகளைப் போன்றே சிறப்பு மிகக்கொண்டதாகும். இதனகத்திலுள்ள பாடல்களை அருளிய ஆசிரிய அருளாளர்கள் ஒன்பதின்மரும் பல தலங்களில் பாடியுள்ளனர் எனினும், கோவில் எனச் சிறப்பித்துக் கூறப்படும் தில்லைத்தலத்தைப் பற்றிப் பாடிய பாடல்களே அதிகம் என்பது நாம் அறிந்ததே.

அந்த அருளாளர்கள் ஒன்பதின்மருடைய பெருமை படைத்த வரலாற்றினை, இறைவனிடம் மெய்யுணர்வு கொண்டோர் அனைவருமே ஓரளவேனும் அறிந்திருப்பதும், திருவிசைப்பா என்னும் கூற்றுக்கேற்ப அப்பாடல்களை இசையோடு பாடி இறைவனைத் துதிப்பதும், இந்து மதத்தினராகிய நமது முக்கியக்கடமையாகும்.

தேவாரப் பதிகங்களைப் போன்றே திருவிசைப்பா பதிகங்கட்கும் பண்கள் வகுத்து அமைக்கப்பட்டிருந்ததாலேயே திருஇசைப்பா என்று இசைக்கு முதன்மை தரப்பட்டுள்ளதெனின், இசைக்கும் இப்பாடல்களுக்கும் உள்ள பிணைப்பினை நாம் அறிந்துகொள்ளலாம். இத்திருமுறையில் 29 பதிகங்களின் வாயிலாக மறைந்ததுபோக எஞ்சிய 301, பாடல்கள் கிடைத்துள்ளதாக அறிகிறோம்.

இசையில் இசையும் இறைவனை, திருவிசைப்பா பாடிய அருளாளர் களின் வரலாற்றுடன் அவரது இசைத் தொண்டினையும் அறிந்து நாமும் அதனில் இசைந்தும், பக்தி கொண்டு இசைத்தும், இம்மையிலேயே இறைவனை நம்மிடம் இசையுமாறு செய்திடுவோம். எந்த வழியில் இறைவனைத் துதிப்பதையும்விட இசையின் வாயிலாகத் துதிப்பது நிறைந்த பயன்தருவதாகும்.

**அருளாளர்களைப் பற்றி**

ஒன்பதாம் திருமுறையிலுள்ள திருவிசைப்பா மாலையை அருளிச் செய்த அருளாளர்கள் ஒன்பதின்மருடைய திருப்பெயர்களையும் கீழ்க்கண்ட பழம்பாடல் ஒன்றின் மூலம் அறியலாம்.

"செம்பொன் மணி அம்பலத்து நிருத்த னார்க்குத்
திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்பேர் சொல்லில்
பம்பு புகழ் செறி திருமா ளிகை மெய்த் தேவர்
பரிவுடைய சேந்தனார் கருவூர்த் தேவர்
நம்பி கா டவர்கோன் நற் கண்டரா தித்தர்
நன்குயர்வே ணாட்டடிகள் திருவாலி யமுதனார்
அம்புவியோர் புகழ் புருடோத் தமர்சேதி ராயர்
ஆக இவர் ஒன்பதின்மர் தாமுயர்கண் டடைவே"

மேற்கண்ட அருளாளர்கள் ஒன்பதின்மரில் முதன்மையராகிய திருமாளிகைத் தேவர், சைவ வேளாளர் மரபில் உதித்து, சோழ மன்னர்களின் தீட்சா குருவாக, திருவிடைமருதூரில் வாழ்ந்திருந்த சைவராயர் என்னும் பெரியோரின் வழியில் தோன்றியவர். இவரது முன்னோர்கள் வாழ்ந்து வந்த பெரிய மடத்தினை மாளிகை மடம் என யாவரும் மரியாதையுடன் குறிப்பிட்ட காரணத்தால் இவர் மாளிகைத் தேவர் எனப் பெயர்பெற்றார். குடும்ப வாழ்வில் இருந்து பின்னர் துறவு பூண்டு திருவாவடுதுறைக்கு வந்து அங்குள்ள அரசமரத்தின் கீழ் சிலகாலம் தவம் புரிந்துள்ளார். அடுத்து அங்கிருந்த சிவாலயத்தின் அருகே தென் திசைப்பக்கத்தில் தமக்கென ஒரு மடாலயம் அமைத்துக்கொண்டு இறைவனை வழிபட்டு வந்தவர். அங்கு சிவயோகம் புரிந்திருந்த சித்தர் போக நாதரிடம் ஞானோபதேசம் பெற்றுத் தவத்தில் ஈடுபட்டவர். அவருடைய சிறப்பான தவத்தின் காரணமாக ஒளிவீசும் அழகிய உடலையும், பலவிதமான சித்திகளையும் பெற்றிருந்தார். தவிர சைவ சித்தாந்த நூல்களை ஆராய்ந்து அதனில் வித்தகராகவும், அதன் காரணமாக சைவ சமயத்தை வளர்க்கும் பணியில் முழுமை யாகவும் ஈடுபட்டிருந்துள்ளார்.

பல சித்திகளை இவர் பெற்றிருந்தமைக்கு எடுத்துக்காட்டாக, ஆற்றில் நீராடிய இவர் இறைவன் பூசைக்காக திருமஞ்சன நீர், மலர்கள் ஆகிய வற்றை எடுத்து வரும்போது இடுகாட்டுக்குச் செல்ல சவம் ஒன்றினை சிலர் தூக்கிவர, தான் எடுத்து வந்த பூசைப் பொருட்களை முட்டுநேரக்கூடாது என்பதற்காக ஆகாயத்தில் எறிந்து அவற்றை அங்கேயே நிற்கச் செய்து, இறந்து கிடந்த சவத்தினை இடுகாடு வரை தானாகவே எழுந்து நடந்து செல்லும்படிப் பணித்து, அதன்பிறகு பூசைப் பொருட்களை திரும்பக் கீழே வரச்செய்து எடுத்துச் சென்றுள்ள நிகழ்ச்சி ஒன்றினையும் இவர் திருவீழிமிழலைத் தலத்திற்குச் சென்றிருந்த போது அங்கு நடைபெற்ற தேர்த் திருவிழாவில், மக்களால் தேரை இழுக்க இயலாமல் ஆனபோது தேரின் வடத்தையே கழற்றிவிட்டு தேரைத் தானே ஓடும்படிச் செய்தார் என்னும் நிகழ்ச்சியினையும் குறிப்பிடலாம். தவிர தவ வலிமை காரணமாக பேரழகு கொண்டு விளங்கிய இவரைக் கண்ட மாதர்கள் பலரும் இவரின்

உருவத்தையொத்த குழந்தைகளைப் பெற்றெடுத்துள்ளனர். இதனைக் கண்ட அந்த மாதர்களின் கணவர்கள் இவர் மீது பழிச்சொல் கூறியதோடு, அங்கு ஆட்சிபுரிந்த காடவர் கோன் கழற்சிங்கன் என்ற பல்லவ மன்னனின் சிற்றரசனான நரசிங்கன் என்பவனிடம் முறையிட, அந்த அரசனும் உண்மையறியாது. காவலர்களை ஏவித் தேவரைக்கட்டி இழுத்துவரும்படி உத்தரவிட, காவலர்கள் சென்று யாரோ ஒருவரைக் கட்டி இழுத்துவர அதனைக் கண்ட அரசன் வெகுண்டு அரசனே படையெடுத்து வந்த போது கோமுக்தீசுவரப் பெருமான் திருக்கோயிலின் மதில்களில் இருந்த நந்திகளை உயிர்ப்பித்து ஏவி நரசிங்கனின் படைகளை தோற்றோடச் செய்துள்ளார். இவையும் தவிர சுடுகாட்டில் எழும் சவப்புகையின் சுடுநாற்றத்தை மாற்றி நறுமணமாக்கியும், கொங்கணவர் என்னும் சித்தருடைய கமண்டலத்தில் என்றுமே வற்றாமல் வரும் நீரை வற்றச் செய்தும், நைவேத்தியமாகித் தனக்கு வந்த சமைத்த சுண்டலைத் தமது மடாலயத்தின் புழக்கடை நிலத்தில் விதைத்து முளைக்கச் செய்தது எனப் பல விதமான சித்துக்களைச் செய்துள்ளார்.

திருவாவடுதுறை ஆதீன மடாலயத்தின் நமசிவாய மூர்த்தியின் சந்நிதியின் வட பக்கத்தில் திருமாளிகைத் தேவருக்கு தனிக்கோயில் உள்ளது. கோமுக்தீசுவரர் பூசைக்கு அடுத்து இவருடைய சந்நிதியில் அடுத்தபூசை நடைபெறுவதும் ஆதீன மடாலயத்தில் நடைபெறும் பூசை களைப் பொறுத்தவரை திருமாளிகைத் தேவருக்கே முதல் பூசை என்பதும் குறிப்பிடத்தக்கது. இவர் தில்லைப் பெருமானை வழிபட்டுப் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கு. இவருடைய திருவிசைப்பா பாடல் களில் பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்துள்ள பாடல் ஒன்றினை மட்டும் இங்கு பாட விரும்புகிறேன்.

''முதற் பதிகத்தின் நான்காவது பாடல் பண்-பஞ்சமம்-தாளம்

பெருமையிற் சிறுமை பெண் ணொடா ணாய் என்
பிறப்பிறப் பறுத்த பே ரொளியே
கருமையின் வெளியே! கயற்கணாள் இமவான்
மகள் உமை யவள்களை கண்ணே
அருமையின் மறைநான் கோலமிட் டரற்றும்
அப்பனே! அம்பலத் தமுதே
ஒருமையிற் பலபுக் குருவி நின்றாயைத்
தொண்டனேன் உரைக்கு மா றுரையே''

**2. இரண்டாவதாக சேந்தனார்**

திருவிசைப்பா அருளிய ஒன்பதின்மருள் இரண்டாவதாகத் திகழும் சேந்தனாரைப் பற்றி,

நாங்கூர்ச் சேந்தனை வேந்து விட்ட கைத்தளை
நீக்கி யென்முன் காட்டுவெண் காட்டுளானே

என்ற பட்டினத்தடிகள் பாடலின் வாயிலாக, பட்டினத்தடிகளின் தலைமைக் கணக்கராக இருந்த இவர் திருவெண்காட்டினை அடுத்த நாங்கூர் எனும் ஊரைச் சேர்ந்தவர் என அறிகிறோம்.

சேந்தனார் பட்டினத்தடிகளின் கணக்கராக இருந்தபோது அவரின் உத்தரவுக்கிணங்க, அவரது நிதியறையை பொது மக்களுக்காகத் திறந்து விட, இது பொறுக்காத பட்டினத்தடிகளின் உறவினர்கள் தூண்டுதலால் சோழ மன்னன் சேந்தனாரைச் சிறையிலிட, அடிகளின் அருளால் சிறை நீக்கம் பெற்ற சேந்தனார் மனைவி மக்களுடன் தில்லைத்தலம் வந்து விறகு விற்பனையால் கிடைக்கும் ஊதியத்தில் தாம் வாழ்ந்து வந்ததோடு தினமும் ஒரு சிவனடியாருக்கும் உணவளித்து வந்தார். ஒருநாள் தில்லைக் கூத்தபிரானே சிவனடியாராக இவருடைய இல்லம் வந்து, இவரளித்த களி உணவை ஏற்று, இவருடைய நிறை பக்தியை யாவரும் உணரச் செய்தருளினார். இதனை

செம்பொன் அம்பலத்து வேந்தன் தனக்கு
பழைய அவிழை அன்பாகிய பண்டைப் பறைச் சேந்தன்
கொடுக்க அதுவும் திருவமிர் தாகியதே,

என, கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 26-ம் செய்யுளால் அறியலாம்.

மார்கழித் திருவாதிரைப் பெருவிழாவில் ஓடாது தடைபெற்று நின்ற திருத்தேரை திருப்பல்லாண்டு பாடி தேரைத் தானாகவே ஓடிநிலை யடையுமாறு செய்துள்ளார். இறுதியில் திருவிடைக்கழி என்னும் தலத்தில் முருகப்பெருமானை வழிபட்டு வசித்த சேந்தனார் தைப்பூச நன்னாளில் இறைவனடி சேர்ந்ததாகத் திருவிடைக்கழிப்புராணம் கூறுகிறது.

திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய மூன்று தலங்களுக்கு திருவிசைப்பா பாடல்களும் தில்லைப்பதிக்குத் திருப்பல்லாண்டு பதிகமும் பாடி அருளியதாக அறிகிறோம்.

இவர் திருவீழிமிழலைத் தலத்தில் பாடி அருளிய திருவிசைப்பா பதிகத்தில் இரண்டாவது பாடலை இங்கு பாடிக்காட்ட விரும்புகிறேன்.

"திருவிசைப்பா - சேந்தனார்
பண் - பஞ்சமம் - தாளம்
இரண்டாம் பாடல்
கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை

**மதிப்பவர் மன மணி விளக்கைச்**
**செற்றவர் புரங்கள் செற்ற எஞ் சிவனைத்**
**திருவீழி மிழலை வீற் றிருந்த**
**கொற்றவன் தன்னைக் கண்டு கண்டுள்ளம்**
**குளிரஎன் கண்குளிர்ந் தனவே''**

### 3. கருவூர்த்தேவர்

கொங்கு நாட்டிலுள்ள கருவூரில் பிறந்த கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடிய மூன்றாவது அருளாளர். இவருடைய இயற்பெயர் கிடைக்கவில்லை. அந்தணர் குலத்துதித்த இவர் பல கலைகளையும், வேதங்களையும் நன்கு கற்றவர். போக நாதரிடம் உபதேசம் பெற்று ஞான நூல்கள் பலவும் ஆராய்ந்து சிவயோகத்தில் நின்று சைவ சமயத்தின் வழியில் ஒழுகியவர். இனிய தமிழ்ப் பாடல்களைப் பாடுவதில் ஆற்றல் கொண்டவர். காயகற்பம் உண்டு பல சித்திகள் கைவரப் பெற்றவர் தம்மை இகழ்ந்தவர்களிடையே பல அற்புதங்களைச் செய்து காண்பித்து புகழச் செய்தவர். பிச்சை ஏற்று உண்டு, மலைகளிலும் வனங்களிலும் திரிந்து, எதிலுமே பற்றற்றவராக இருந்த, பித்தர் என்று கூறுக்கூடிய அளவில் வாழ்ந்தவர்.

இவர் இறைவனைக் கடிந்து தனது பக்தியினை காட்டியுள்ளார். பல நாடுக்ளைச் சுற்றிய இவர் தென்பாண்டி நாட்டின் திருப்புடை மருதூர் என்ற ஊரின் அருகில் வரும்போது தாமிரபரணியில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியதால் அக்கரைக்குச் செல்ல இயலாமல் அங்கு திருக்கோயில் கொண்டுள்ள நாறும்பூ நாதர் என்னும் சிவனை நாரம்பூ நாதா என்றயைக்க எம்பெருமான் தஇரும்பிப் பார்த்து வாரும் என்றழைக்க வெள்ளம் உடனே வடிந்து வழிவிட்டு றைவனைத் தரிசித்து அங்கு தீட்சை பெற்றுள்ளார்.

நெல்லைப்பதியில் நெல்லையப்பர் சந்நிதியில் நின்று நெல்லையப்பா என்று இவர் அழைக்க, இவருடைய பெருமையை மற்றோர் உணரச் செய்யும் திருவிளையாடல் காரணமாக இறைவன் வாளாவிருக்க இறைவன் இங்கு இல்லை போலும் என்று சினந்த கருவூர்த் தேவர் ஈசன் அங்கு - எருக்கு இங்கு - என்று கூறி அகல, ஆலயம் பாழாகிவிட்டது. ஊரிலுள்ளோர் நெல்லையப்பரை வேண்ட மானூரில் கருவூர்த்தேவருக்கு இறைவன் அருள்புரிந்து நெல்லைக்கு வரச்செய்து, செந்நெல் இங்கு - எருக்கு அங்கு என்று கருவூர்த் தேவர் கூற ஆலயம் செழித்ததாக கூறப்படுகின்றது.

திருவிசைப்பா பதிகங்களில் அதிகமான எண்ணிக்கை அதாவது 10 பதிகங்கள் பாடியுள்ள பெருமை இவரைச் செரும்.

**''இவருடைய பாடல்களில் ஒன்று**
**மேற்படி கருவூர்த்தேவர் அருளிய**

திருவிசைப்பா பதிகத்தில் மூன்றாவது பாடல்
பண்-புறநீர்மை-தாளம்
தாயின் நேர் இரங்குந் தலைவ ஓ என்றும்
தமியனேன் துணைவ ஓ என்றும்
நாயினேன் இருந்து புலம்பினால் இரங்கி
நலம்புரி பரமர்தங் கோயில்
வாயில்நேர் அரும்பு மணி முருக்கு அலர
வளரிளஞ் சோலை மாந் தளிர் செந்
தீயின் நேர் அரும்பும் பெரும் பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே"

திருவிசைப்பா அருளிய ஆசிரியர் ஒன்பதின்மரில் நேரமின்மையால் மூவருடைய வரலாறும், ஒவ்வொரு பாடலுமே எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளது.

இறையருள் கூட்டுவிப்பின், அடுத்த ஆண்டு நடைபெற இருக்கும் இதே விழாவில் இந்தப்பாடல்கள் பலவற்றுக்கு பண் மற்றும் தாள அமைப்புக்களைச் செய்து இந்த மாபெரும் சபையில் அரங்கேற்றம் செய்யும் விருப்பம் உள்ளது. இறைவன் அருள் எல்லோர்க்கம் கிட்டுவதாக என வேண்டி என் சிற்றுரையை நிறைவு செய்கிறேன்.

# 79. திருமந்திரத்தில் சக்தி வழிபாடு

திரு. கே. ராஜேஷ், மயிலாடுதுறை.

இந்த நான்காம் தந்திரம் சிந்தாகமத்தின் அடிப்படையில் அமைந்தது. இதில், அசபை (30), திருவம்பலச் சக்கரம் (89), அருச்சனை (12), நவகுண்டம் (30), சக்திபேதம் (திரிபுரை சக்கரம்) (30), வயிரவி மந்திரம் (50), பூரண சக்தி (30), ஆதார ஆதேயம் (100), ஏரொளிச் சக்கரம் (36), வயிரவச் சக்கரம் (6), சாம்பவி மண்டலச் சக்கரம் (9) புவனா பதிச் சக்கரம் (12), நவாக்கரி சக்கரம் (100) என்னும் 13 பகுதிகள் உள்ளன. மொத்தம் 533 மந்திரங்கள்.

மூன்றாம் தந்திரம் யோகத்தைப் பற்றிப் பேசுகிறது. இது கிரியை களை விளக்குகிறது. மந்திரம், யந்திரம் முதலியவை, யோகத்திற்கும் உரியன. எனவே முன்னைய பொருளோடு இது தொடர்பு உடையதாக இருக்கிறது. இதில் வரும் பகுதிகள் பல அந்தாதி அமைப்பில் உள்ளன.

மந்திரம், யந்திரம் (சக்கரம்), முத்திரை தியானம், தியானமுறை, தியானவடிவம், அக, புறவழிபாடு, மந்திரங்களின் சிறப்பு, யந்திரங் களின் சிறப்பு, குண்டங்கள், செபம் செய்யும் முறை, தியானம் செபம் ஆகியவற்றால் விளையும் பயன், சிவமும் சக்தியும் ஒன்று, அவை பிரிவற நிற்கின்றன, சிவனது மேனி சக்தி, சக்தி மந்திர வடிவம் ஆக இருத்தல், அது வேகவடிவம், பல்வேறு மந்திரங்களுக்கும் ஐந்தெழுத்துக்கும் உள்ள தொடர்பு, பிரணவ மந்திரம், பிரணவ யோகம், நால்வகைப் பஞ்சாட்சரம் (873), மூவகைப் பஞ்சாட்சரம் (893), ஊன நடனம், ஞான நடனம், சக்தி வழிபாடு சிவனை நீக்கிச் செய்யப்படுவதன்று (1054, 1141), அகர உகரம், சிகரவகரம், முதலிய பல்வேறு செய்தி களைப் பற்றிய கருத்துக்களை இந்தத் தந்திரத்தில் காணலாம். ஏறக்குறைய 30 சக்கரங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன.

ஐந்தாம் பகுதி, சக்தி பேதம் அல்லது திரிபுரை சக்கரம் எனப்படும். முதற்பாட்டில் திரிபுரை யார் என்பதை விளக்குகிறார்.

''மாமாயை, மாயை, வியந்தவம், வைகரி
ஓமாயை, நாரணி, ஓராறு கோடியில்
தாமான மந்திரம், சக்திதன் மூர்த்திகள்
ஆமாய், அலவாம் திரிபுரை ஆங்கே'' (1028)

அருட்சக்தியே திரோதான சக்தியாய் நின்று பின்பு அருட்சக்தியாய் விளங்குவாள் (1040). எல்லா வடிவமும் சக்தியே என்பதைத் திருமூலர் வலியுறுத்திச் சொல்கிறார் (1050). சக்தி வேக வடிவம் உடையவள் (1055). அந்தச் சக்தியே எல்லா தேவர்களுக்கும் தலைவி; சுத்த மாயை, அசுத்த மாயை அவற்றின் காரணங்கள், உயிரைப் பிணைக்கும் அந்தக் கரணம் முதலியவைகளாக நின்று, பிறகு அவற்றிலிருந்து உயிர்களை விடுவித்து வீட்டை அடையச் செய்பவரும் அவளே (1057).

அடுத்த ஆறாம் பகுதி வயிரவி மந்திரம் ஆகும். இந்தப் பகுதியில் சட்டைநாதர் முதலிய வேக வடிவங்களைக் குறிப்பிடுகிறார். வாராகி வயிரவி ஆகிய இரண்டு வடிவங்களில் வயிரவியைப் பற்றி இந்தப் பகுதி பேசுகிறது. மூன்று பாடல்கள் மந்திரங்களால் பெறப்படும் தியான வடிவங்களைக் குறிப்பிடுகின்றன (1064 – 68) அதே போல ஆசனங்களையும் குறிக்கின்றன. மந்திரங்களை உருவேற்றும் போது எண்ணுகின்ற முறையயும் நாம் இங்கே காண்கிறோம். இவற்றைத் தமிழ் மந்திரம் என்கிறார், திருமூலர். வ்லது கை கட்டை (பெரு) விரலால் மோதிர விரலில் தொடங்கி வலமாக வந்து நவிரலில் முடிப்பது என்னும் ஜபமுறையை திருமூலர் குறிப்பிடுகிறார்.

அந்தம் நடுவிரல், ஆதிசிறுவிரல்
வந்து வழிமுறை மாறி உரைசெய்யும்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடும்
நந்த இதனை நவம் உரைத் தானே (1072)

எல்லாப் பொருளுக்கும் தலைவியாகியவள் வயிரவி என்பதைக் குறிக்க, அவள் குமரித் துறையில் உறைவதாகக் குறிப்பிடுகிறார்.

'ஆதிவயிரவி கன்னித் துறைமன்னி' (1082)

எல்லாம் வல்ல இறைவி, சிவத்தைக் காட்டி முத்தி இன்பத்தைக் கொடுக்கிறாள்.

"ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி
மேலைச் சிவத்தை வெளிப்படுத் தாளே' (1083)

சிவமும் சக்தியும் ஒன்றே என்பதை எங்கும் வலியுறுத்தும் திருமூலர், இருவரும் இணைந்த நிலையைக் காட்ட, சிவனுக்குரியவற்றைச் சக்தியின் மேலேற்றிக் காட்டுகிறார்.

'வேயன தோளி விரையுறுமென்மலர்,
ஏயகுழலி இளம்பிறை ஏந்திழை
தூய கடைமுடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினித்திருந்தாளே' (1087)

யோக நெறியில் நின்றால் சக்தியின் சிலம்பொலி கேட்கும். 'பாடகச் சீறடி பைம்பொற் சிலம்பொலி ஊடகம் மேவி உறங்குகின்றேனே' (1089). உயிரின் பக்குவத்தையே நோக்கி நிற்கும் சக்தி, முத்தொழிலைச் செய்கிறாள். ஆருயிராயும் அருந்தவப் பெண் பிள்ளை, காரியல் கோதையள் காரணி நாரணி, ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடும்' (1093). சிவம் வெளிப்படாது நிற்க, நிகழும் செயல்கள் எல்லாம் ஆதி சக்தியினுடை யவை. இதைத் திருமூலர் 'இருளது சத்தி வெளிய தெம் அண்ணல்' (1102) என்று வேடிக்கையாகச் சொல்கிறார். அவளது உண்மைநிலையை, வேதம் ஓதி உணர்த்துபவள், எல்லாவற்றுக்கும் காரணம், பன்னிரண்டு கலையுடைய பிரணவ ரூபமான குண்டலியாயும், சிவபிரானுக்கு வடிவமாயும் விளங்குகிறாள், என விளக்குகிறார்.

**'ஆதி அனாதி அகாரணிகாரணி,**
**வேதமதாய்ந்தனள் வேதியர்க்காய், நின்ற,**
**சோதி தனிச்சுடர்ச் சொரூபமதாய் நிற்கும்,**
**பாதிபராபரை பன்னிரண்டாதியே' (1107)**

ஏழாம் பகுதியின் தலைப்பு, 'பூரணசத்தி' என்பதாம். சக்தியின் பெருமைகளையும் அருள் விளக்கங்களையும் இப்பகுதி கூறுகிறது. 'தானே எழுந்த இத்தத்துவ நாயகி' (1115) என அவளது முதன்மையும் தொன்மையும் பேசப்படுகிறது. 'சிந்தையினுள்ளே திரியும் சிவசக்தி, விந்துவும் நாதமுமாயே விரிந்தனள்' (1121). ஆறு ஆதாரங்களும் தாமரைகளாக விளங்கும்; 36 தத்துவங்களையும் இதழ்களாகக் கொண்ட மாயையாகிய தாமரை; நூறிதழ்த் தாமரை ஆகியவற்றில் உள்ளவளாய்க் காட்சி தரும் தேவி, உலகத்தவர்க்காகத் திருக்கோயில் களிலும் எழுந்தருளியிருக்கிறாள் (1124). அவளே பலவகையான சக்கரங்களிலும் இருக்கிறாள். (1128) அவளுடைய விரிந்து பரந்த நிலையை (விராட் சொரூபத்தை) வியந்து பாடுகிறார். திருமூலர்.

**'நவிலும் பெருந்தெய்வம் நான்மறை சத்தி,**
**துகிலுழையாடை நிலம் பொதிபாதம்**
**அகிலமும் அண்டம் முழுவதும் செம்மாந்து,**
**புகலுமுச்சோதி புனைய நிற்பாளே' (1131)**

இந்தப் பூரண சக்தி சாந்தரூபமும், எமனையும் வெல்லும் வேக ரூபமும் உடையவள், இதனை,

**'சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை**
**கூற்றுந் துரக்கின்ற கோட்டைபந் தொடியே' (1133)**

என்று குறிப்பிடுகின்றார் ஆசிரியர். இந்தப் பூரண சக்தியின் இயல்பை விளக்குகையில் ''காரணம் அது என்றும், அல்ல இதுதான் என்றும்

வழக்கிடுபவர்கள், எல்லாக் காரணங்களுக்கும் காரணமாயுள்ள சிவனை அறியமாட்டார்கள், அதற்குக் காரணம் சக்தியின் இயல்பை அறியாதது தான்; அவர்கள் உண்மைச் சிந்தனையாளர்கள் அல்ல'' என்று கூறுகின்றார்.

அது இது என்பார் அவனை அறியார், கதிவர
நின்றதோர் காரணம் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை, திகமது
உன்னார்கள் தேர்ந்தறி யாரே' (1137)

இனி அடுத்த 'ஆதார ஆதேயம்' என்பதாம். ஆதாரம் என்பது அடிப்படை. ஆதேயம் என்பது அந்த அடிப்படையில் நிலைத்து நிற்கும் பொருள்கள். மேலே சக்தியின் இயல்பைக் கூறிய திருமூலர், இந்தப் பகுதியில் அந்தச் சக்தியே எல்லாப் பொருள்களாயும் அவை தங்கு வதற்கான இடமாயும் அமைந்திருப்பதைக் காட்டுகிறார். அவள் இவ்வாறு நிற்றல், தன் ஒளிவுருவைக் காணவும், தான் கலைஞானம் வழங்கவும், ஐம்புல ஆசைகளைக் கண்டும், அவற்றின் வேகத்தைத் தடுக்கவுமே யாகும் (1139). சக்தி தன்னில் ஒரு பாதியாகிய சிவன் (எப்போதும்) விட்டு நீங்காததால், தான் ஒரு பாதியாகவும் சிவன் ஒரு பாதியாகவும் விளங்குகிறாள். அவளைத் துணையாகக் கொண்டால், மலம் நீங்கி ஆன்மா தூய வெள்ளாடைபோலத் திகழும்.

'மதுநல் லாளும் மணாளன் இருந்திடப், பாதி
நல் லாளும் பகவனும் ஆனது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே' (1140)

அடுத்த பாட்டில் இதே கருத்தைச் சிவன் மேல் ஏற்றிக் காட்டு கிறார். சிவன் ஒரு பாதி பெண்ணாகவும், சில வேளைகளில் பெண்ணே யாகவும் தோற்றமளிக்கிறான். 'பெண்ணோடு பாகன் பிறவி பெண்ணாமே' (1141). இத் தோற்றங்கள் உயிர்களுக்கு அருள்புரிய மேற்கொண்டவை யாகும். அவனது உண்மை நிலை ஆணும் அன்று, பெண்ணும் அன்று. உயிர்களிடம் நெருங்கி வந்து அருளவும் அனைத்து உயிர்களுக்கும் போகத்தை வழங்கவும், அவன் அவளோடு இணைந்து நிற்கிறான் (1145). சக்தி ஆதார ஆதேயமாய் நிற்பதை மற்றொரு மந்திரம் (1148) விரித்துக் கூறுகிறது. பல நிலைகளில் விரிந்து அருள்தரும் சக்தி யோகமும் போகமும் தருகிறாள் (1154). இந்தச் சக்திக்கு, வானத்தில் சூரியனும் மண்ணில் வேள்வித் தீயும் ஆசனங்களாம்; தெற்கு நோக்கிய முகத்துடன் கால்களை வடக்கே நோக்க நீட்டி மடக்கிக் கிடந்து அருள்புரிகிறாள் (1155).

சக்தியின் இருப்பிடம் ஸ்ரீ சக்கரம், இதன் அமைப்பை ஒரு திருமந்திரம் விளக்குகிறது (1157). ஸ்ரீவித்தையைப் 'பராவித்தை' என்று

திருமூல் குறிப்பிடுகிறார் (1158). இந்தச் சக்கரத்தில் சக்தியை வழிபட்டு, ஏதேனும் ஒரு மந்திரத்தைச் சொல்ல மனோன்மணி தோன்றுவாள். இதில், ருத்திரம் என்ற சொல்லால் மந்திரத்தையும் இறைவியின் வடிவத்தையும் விளக்குகிறார். அவள் ஸ்ரீசக்கரத்தை ஓர் ஆதாரமாகக் கொண்டுள்ளாள் (1163). இச்சக்தி முதலில் அந்தக் கரணத்தில் வெளிப்பட்டு, பிறகு உயிரின் அறிவுக்கறிவாய் விளங்குவாள்.

‘பொறியொன்றி நின்று புணர்ச்சி செய்தாங்கே, அறிவொன்றி நின்றனள் ஆருயிருள்ளே’ (1165) இவ்வாறு ‘இருந்தருள் செய்கின்ற இன்பம்’ வீட்டின்பமாகும் (1167). அவளே ‘முத்திக்கு நாயகி’ என்பதை யறியாதவர்கள், ‘கத்திய நாய்போல் கதறுகின்றாரே’ (1182). புறவழி பாடாகிய சடங்கினைச் செய்பவர்கள், அகத்தில் தியானம் செய்ய, அந்த உணர்வு சோதி வழியாகச் (சுழு முனையே பற்றுக் கோடாகச்) சென்று அன்பிற்குச் சார்பாகிய சக்தியிடத்தில் தங்கும் (1175).

மந்திரம், கிரியை (சடங்கு), பாவனை (தியானம்) என வழிபாட்டுப் பகுதிகள் மூன்று, இம்மூன்றுக்கும் உரிய வழிகளை விளக்குகிறார் திருமூலர். உடம்பின் உறுப்புக்களிலும் உள்ளத்திலும் எதிரில் உள்ள திருவுருவத்திலும் வைத்து வழிபட்டு, சக்தியுடன் ஒன்றி நிற்க வேண்டும் (1184). இப்படிச் செய்வதால் அவள் மேலே மேலே கொண்டு செல்வாள்; இறுதியில் சிவனது எண் குணங்களும் பெறலாம்.

‘ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மேன்மேல், இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆமே’ (1188). இதற்குரிய வழியையும் கூறுகிறார், ஆசிரியர், அணுகும் வழி சுழுமுனை நாடி; சங்கும் குண்டி கையும் தாங்கிய அவளுக்குரிய ஸ்ரீருத்திர மந்திரம் ‘சிவா’ என்பது; அவள் நடம்புரியும் இடம் ‘பொன் மன்று’ எனப்படும் புருவநடு ஆகும் (1190).

உலகம் தோன்றும் பொழுது ஐம்பத்தோர் எழுத்துக்கள் தோன்று கின்றன; அற்றுடன் ஐம்பத்தொரு தேவர் தோன்றுவர்; அவர்களுக்குச் சக்தி உயிராய் நிற்பாள்; அவ்வெழுத்துக்களைத் தம்முள் கொண்ட சக்கரங்களில் அச்சக்தி உயிராய் நிற்பாள்; சிவனும் அவளுடன் இணைந்து அச்சக்கரங்களில் விளங்குவான்.

**‘ஆகின்ற நாள்களில் ஐம்பத்தொருவர்கள்,**
**ஆகிநின்றார்களில் ஆருயிராம் அவள்**
**ஆகிநின்றாள் உடனாகிய சக்கரத்து, ஆகிநின்**
**றான் அவன் ஆயிழை பாடே’** (1202)

முன்பு கூறிய பிரணவ யோகத்தை மீண்டும் எடுத்துக்கூறி, அதைப் பிரணவ யோக நெறி என்றும் திருமூலர் குறிப்பிடுகிறார். இந்தப்

பகுதியில் சக்தியை வழிபாடு செய்வதைப் பற்றியே கூறப்பட்டுள்ளது. சக்தியை நீக்கிச் சிவத்தையோ, சிவத்தை நீக்கிச் சக்தியையோ, வழிபடுவது கூடாது (1227). ஏனெனில் சக்தி, சிவனது திருவடியும், அவனை வழிபடுவதன் பயனும் ஆகும்.

'பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி,
நற்றாள் இறைவனே நற்பயனே என்பர்' (1234)

சிவசக்திகள் இவ்வாறு ஆதார ஆதேயமாய் இருத்தலை மேலும் விளக்குகிறார், திருமூலர். உலகத்துத் தாய் தந்தையர்கள் தாம் பெற்ற மக்களை அறிந்து கொள்வதில்லை; அவர்களுக்கு உதவியும் செய்ய முடிவதில்லை. உலகத்துக்கு அம்மையப்பனாகவுள்ள சக்தியும் சிவனுமே உயிரோடு எக்காலத்தும் ஒன்றியிருந்து இன்பம் தருவர்.

'அம்மையும் அத்தனும் அன்புற்றதல்லது,
அம்மையும் அத்தனும் ஆரறிவார் என்னை
அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்து,
அம்மையொ டத்தனை யான்புரிந் தேனே' (1237)

ஒன்பதாம் பகுதி 'ஏரொளிச் சக்கரம்'. மூலாதாரத்திலிருந்து மேல் எழுந்து துவாதசாந்தம் முடியச் செல்லும் ஒளியே ஏரொளி. இது குண்டலியே ஆகும். இதன் எழுச்சிக்குத் துணை புரிந்து எப்போதும் உடனாய் இருப்பது மூலாதாரத்தில் அடங்கியிருக்கும் வெப்பமாகிய மூலாக்கினி. இவ்வாறு குண்டலியை எழுப்பித்துவாத சாந்தத்தை அடையச் செய்யும் பிராசாத யோகத்தைப் பயக்கும் புறக்கிரியையாகிய சக்கர வழிபாடு இப்பகுதியில் 36 மந்திரங்களால் விளக்கப்படுகிறது. மூன்று வகையான ஏரொளிச் சக்கரங்கள் இங்கே குறிக்கப்படுகின்றன (1238, 1244, 1245). ஏரொளிச் சக்கரத்தில் உள்ள பன்னிரண்டு சக்கரங்களும் பன்னிரண்டு ராசிகளில் நிற்பதாகக் கருதி, தியானிக்கப் படும். இவ்வாறு தியானிப்பதால் விந்து வெளியை அடையலாம்; பிறகு நாத ஒலியைக் கேட்கலாம்.

'இராசியுள் சக்கரம் எங்கும் நிறைந்தபின்,
இராசியுள் சக்கரம் என்றறிவிந்துவாம்
இராசியுள் சக்கரம் நாதமும் ஒத்தபின்,
இராசியுள்ள சக்கரம் நின்றிடு மாறே'

(1253) சுத்த மாயையே எல்லாமுமாய் விரிகிறது. அறுபத்து நான்கு கலைகளும் (சொல்லுலகம் அனைத்தும்) அதுவே. வீசம், (பீஜம்) முதற்பொருள் என்று கூறும் பிறரது (சாங்கியர் முதலியோர்) கருத்தை இதன் மூலம் மறுக்கிறார், திருமூலர் (1261).

அடுத்து வரும் பகுதி 'வயிரவச் சக்கரம்'. வயிரவர் பாதுகாக்கும் தொழிலை எப்போதும் செய்து வருவதால் 'கால வயிரவர்' என்று அவரைக் குறிப்பிடுவதுண்டு. எனவே, வளர்பிறை, தேய்பிறை என்னும் சந்திர அளவுகளும் சூரியனின் அளவுகளும் கருத்தில் கொண்டு அதற் கேற்பச் சக்கரத்தை அமைத்து எழுத்துக்களைப் பதித்து வழிபடுவது வயிரவச் சக்கரம் ஆகும் (1274). அடுத்து இரண்டு பாடல்களும் வயிரவருடைய ஆயுதங்களைப் பற்றியும் வழிபடும் முறையைப் பற்றியும் கூறுகின்றன (1276, 1277).

அடுத்து வருவது சாம்பவி மண்டலச் சக்கரம். சாம்பன் என்னும் சிவனுடன் கூடிய சக்தியே சாம்பவி. வரிசைக்கு எட்டு அறைகளாக எட்டு வரிசையில் 64 அறைகளைக் கொண்டது இந்தச் சக்கரம் (1280). இந்தச் சக்கரத்தில் 'சிவாய நம' என்னும் மந்திரத்தையும் குறித்து வழி பட வேண்டும். வேதம் மூல மந்திரமாக ஐந்தெழுத்தையே குறிக்கிறது.

'அறைவதும் ஆரணம் அவ்வெழுத்து (1284). இந்தப் பகுதி ஐந்தெழுத்தின் சிறப்புக்களை விரித்துக் கூறிகிறது. (1285–88).

'புவனாபதிச் சக்கரம்' என்பது 12–ஆம் பகுதி. சக்திக்குப் பல்வேறு நிலைகளில் வெவ்வேறு பெயர்கள் அமையும். எனவே அவள் புவனங்களாக விளங்கும் போது 'புவனா' எனவும், அவளை விட்டுப் பிரியாத இறைவன் 'புவனாபதி' வழிபடப்படும் சக்கரங்கள் பற்றி இந்தப் பகுதி பேசுகிறது. புவனாபதிச் சக்கரத்தை 'யந்திரராசன்' என்று குறிப்பிடுகிறார், திருமூலர் வடிவங்களையும் அவர் விளக்குகிறார் (1298). முதல் தடவையாக, நிவேதனப் பொருள் பற்றியும் நிவேதன மந்திரம் (நாரதாயைசுவாகா) பற்றியும் இங்கே காண்கிறோம் (1299).

பதின்மூன்றாவதும் இறுதியானதுமாகிய பகுதி 'நவாக்கரி சக்கரம்' என்பதாம். இது குறுக்கே ஒன்பது எழுத்தும் நெடுக்கே ஒன்பது எழுத்தும் ஆக எண்பத்தோர் எழுத்துக்களைக் கொண்டது. ஏழு வகையான சக்கரங்களைத் திருமூலர் இதில் குறிப்பிடுகிறார். இந்தச் சக்கரத்தை வழிபடுவதால் எல்லாச் செல்வங்களும் வந்து சேரும் (1309). இந்தச் சக்கரத்தின் நாயகி சதாசிவனின் நாயகி; அவள், சுவை, ஒளி, ஊறு, ஓசை ஆகியவையாகவும் அவற்றின் அடிப்படையாகவும், உயிர்களாகவும் இந்தச் சக்கரத்திலும், இருக்கிறாள் (1332). இந்தத் தெய்வ நாயகியை,

**'மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளும்**
**கண்ணுளும் மெய்யுளும் காணலுமாமே'** (1333)

இறைவியை அகம், புறம் இரண்டிலும் காணலாம். அதாவது, சக்கரத்திலும் உலகப் பொருள்களிலும், உள்ளத்தின் உணர்விலும் காண முடியும்.

மற்றொரு வகை நவாக்கரி சக்கரத்தின் தேவி அமுதேச்சரி (அமுதேசுவரி) ஆவாள். அதற்குரிய மந்திரமும் ஒரு திருப்பாட்டில் சொல்லப்பட்டுள்ளது (1336). 'கிளர் ஒளி' (1338) யாகிய அமுதேசுவரியைக் கண்டபின் மனம் சலிப்பற நின்றால், இதற்குமுன் கண்ணில்பட்ட இடங்களெல்லாம் அழிவற்ற பாழ் ஆகி, கற்ற நூல்கள் பயனற்றனவாகும். ஆகவே, அவளைவிட்டுச் செல்வதற்கு வேறு இடம் இல்லை, வழியில்லை; அவ்வாறு செல்லக்கூடிய 'தான்' என்பதும் இல்லை.

'உற்றிடமெல்லாம் உலகப்பிலி பாழாகிக் கற்றிட
மெல்லாம் கடுவெளி யானது
மற்றிடமில்லை வழியில்லை தானில்லை,
கற்றிடமில்லை சலிப்புற நன்றிடே' (1339)

மற்றொரு சக்கரத்தின் எழுத்துக்களை விளக்கி அதற்கு 'விளக்கொளிச் சக்கரம்' என்ற பெயரும் இடுகிறார், திருமூலர் (1341). மற்றொரு வகை நவாக்கரிச் சக்கரத்தை விளக்கி அதில், தேவியைச் சூழ்ந்து எட்டு சக்திகளும் ஒவ்வொருவருக்கும் எட்டுப் பேராக அறுபத்து நான்கு சக்திகள் கையில் வில்லும் அம்பும் ஏந்தி இருப்பார்கள் (1353). சக்கரத்தின் சிறப்பை மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார், திருமூலர், இறைவி சக்கரத்தில் இருப்பதையும் அதிலிருந்து வெளிப்பட்டு வந்து, வேண்டும் வரம் தருவதையும், அவ்வாறு வெளிப்படும்போது, ஓசையும் ஒளியும் தோன்றும் என்பதையும் அவர் விளக்குகிறார்.

'உணர்ந்திருந்துள்ளே ஒருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழும் ஓசை ஒளியது காணும்
தணந்தெழும் சக்கரம், தான் தரு வாளே' (1355)

ஹ்ரீங்காரச் சக்கரம் எனும் ஒன்றைத் திருமூலர் குறிப்பிடுகிறார். அது முன்னால் கூறிய புவனா பதிச் சக்கரமே (1366).

சிவசக்தியே எல்லாவற்றிற்கும் காரணம். ஆகவே ஐம்பத்தோர் எழுத்துக்களாகவும், அவ்வெழுத்துக்களுக்கும் ஓங்காரத்துக்கும் உரிய ஐம்பத்திரண்டு சக்திகளாகவும் அவள் விளங்குகிறாள். அதாவது எழுத்துக் களும் (அக்கரங்களும்) அவளே; எழுத்துக்கள் அடங்கிய சக்கரங்களும் அவளே; எழுத்துக்களுக்குரிய சக்திகளும் அவளே; அவற்றில் நின்று அருள்புரிபவளும் அவளே; அத்துடன் அருளாகவும் விளங்குபவள் அவளே.

'காரணி சக்திகள் ஐம்பத் திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்

காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்கும்
காரணி தன்னரு ளாகிநின் றாளே' (1371)

இந்தச் சக்கரத்தை வழிபட்டால் ஓர் ஆண்டில் சக்தி தரிசனம் கிட்டும் என்று உறுதி கூறுகிறா திருமூலர் (1372). பிரணவமும் ஐந்தெழுத்தும் சூக்குமம் தூலம் என்னும் வடிவில் வெளிப்பட்டு, பிறகு ஒளிவடிவாய்க் கண்ணுக்குப் புலப்பட்டது. அந்தக் காட்சி காண முடியாதது அல்ல எல்லாரும் காண்பதற்காகவே தோன்றுவது அது.

'மண்ணில் எழுந்த மகார உகாரங்கள்
விண்ணில் எழுந்து சிவாய நம என்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்று கொல்
கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே! (1388)

சிவனது விளக்கம் சக்தி; சக்தியின் வழி ஒழுகுபவர்கள் தேவிகள்; அவர்கள் பல சக்கரங்களிலும் விளங்குகிறார்கள். சக்கரங்கள் மூலமாகவும் உடம்பின் பல பகுதிகளில் வைத்தும் அந்தச் சக்தியை வழிபடும் அன்பர்கள் எல்லாவற்றிற்கும் காரணமான முதற்பொருளைக் காண்பார்கள். அந்தப் பொருளையே வேதங்கள் தேடுகின்றன; அந்தப் பொருள் இன்று என் மனத்தில் இருந்து ஆளுகின்றது என்று ஒரு பாடலில் திருமூலர் எடுத்துரைக்கிறார் (1398).

யானைகளைக் கட்டும் தூண்களை உவமையாக்கி ஒரு கருத்தை விளக்குகிறார் திருமந்திர ஆசிரியர். அறுபத்து நான்கு அறைகளைக் கொண்ட ஒரு சக்கரம். அது 'அட்டாட்சரி' எனவும், அதில் உள்ள எழுத்துக் கள் பிராசாத அட்சரங்கள் (அக்கரங்கள்) ஆதலின் 'பிராசாத சக்கரம்' எனவும் குறிக்கப்படும். யானைகளைக் கட்டும் தூண்கள் அறுபத்து நான்கு; ஐம் புலன்களே இவ்யானைகள். இந்தத் தூண்கள் சிவபிரானிடத்தில் உள்ள அறுபத்து நான்கு சக்திகள். பிரணவத்தோடு தொடங்கும் பிராசாத மந்திரத்தின் எழுத்துக்கள் அறுபத்து நான்கு. இவ்வெழுத்துக்களைக் கொண்ட சக்கரத்தை வழிபட்டால் மத யானையும் வணங்கும் கடவுள் தன்மையைப் பெறலாம்.

'ஆனைமயக்கம் அறுபத்து நால்தறி, ஆனை
யிருக்கும் அறுபத்து நால்ஒளி
ஆனையிருக்கும் அறுபத்து நால் அறை,
ஆனையும் கோடும் அறுபத்து நாலிலே' (1400)

இவ்வாறு, பல்வேறு சக்கரங்களில் அமைப்பு, பெயர்கள், அவற்றில் உள்ள எழுத்துக்கள், தேவிகள், அவற்றின் வழிபாட்டு முறைகள், வழிபட்டால் வரும் பயன் முதலியவற்றைத் திருமந்திரத்தின் நான்காம் தந்திரத்தில் விரிவாக விளக்குகிறார், திருமூல முனிவர்.

# 80. திருமந்திரம் கூறும் இறை உணர்வு

திருமதி இரா. ருக்குமணி, திருப்பத்தூர்.

**திருமந்திரம் விளக்கம்**

சிவபெருமான் திருவருளால் திருவாவடுதுறைக்கண் திருவரசின் கீழ் சிவயோகத்து அமர்ந்து 'அந்திமதிபுனை அரனடி நாள்தோறும், சிந்தை செய்து' நம்பிரான் திருமூலநாயனார் செப்பியருளிய செந் தமிழாகமம் திருமந்திரமாகும். இந்நூல் மூவாயிரம் பாடல்களைக் கொண்டது. ஒன்பது தந்திரங் களில் இருநூற்று முப்பத்திரண்டு அதிகாரங்கள் உள்ளன. சைவத்திருமுறை யில் பத்தாம் திருமுறையில் இந்நூல் அடங்கும். இதற்கு 'மந்திரமாலை' (148) என்னும் மற்றொரு திருப்பெயரும் உண்டு. இவ்விரு திருப்பெயர்களும் ஐந்தெழுத்தாலமைந்துள்ளன. இதுவும் திருவருட் சிறப்பேயாகும்.

இந்நூல் ஒன்பது தந்திரங்களையும், ஒருநூற்றுத் தொண்ணூற்று ஐந்து உட்தலைப்புகளையும் கொண்டு ஒளிர்கின்றது. திருக்குறளைப் போன்று இந்நூலின் கண்ணும் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என நான்கு தலைப்புகள் காணப்படு கின்றன. இதன்மேலும் மும்மூர்த்திகளின் முறைமை, வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, ஆகுதிவேட்டல், அரசாட்சி முறை, அறஞ்செயான் திறம் என ஏழு தலைப்புகள் காணப்படுகின்றன.

திருமந்திரத்தில் பல்வேறு செய்திகள் காணப்படினும் திருமந்திரம் கூறும் இறை உணர்வைப் பற்றிய செய்திகள் தன்னகத்தே கொண்டுள்ளது. அவற்றுள் திருவைந்தெழுத்து, அருட்சக்தி, வழிபாடு, ஐவகை ஒழுக்கங்கள் ஆன சிவாசாரம், லிங்காசாரம், சதாசாரம் பிருத்யாசாரம், கணாசாரம் ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இனி ஒவ்வொன்றாகக் காண்போம்.

**திருவைந்தெழுத்து விளக்கம்**

"சித்தத்தில் தித்திக்கும் மந்திரம் சிவாயநம
அதுவே சித்திக்கும், முத்திக்கும் காரணம்" - திருமந்திரம்

உலகில் உள்ள மந்திரங்கள் அனைத்திற்கும் தாய் போன்றது திருவைந் தெழுத்து. ஆன்மாக்கள் இறைவனைச் சென்றடைய சிறப்பானதொரு சாதனமாகத் திகழ்வது இம்மந்திரமே! சிவாயநம, நமசிவாய, சிவயசிவ, சிவசிவ என்று இம்மந்திரத்தை நான்கு முறையாகச் செபிக்கலாம் சிவனுக்கு "வணக்கம்" என்பது இதன் பொருளாகும்.

''சிவன் சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந்து அகலச்
சிவன் சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககி லாவே'' – திருமந்திரம் 2710

இதில் 'சி'கரம் என்னும் எழுத்து சிவனையும்; 'வ'கரம் என்னும் எழுத்து திருவருளைத் தருகின்ற சத்தியையும்; 'ய'கரம் என்னும் எழுத்து ஆன்மாவையும்; 'ந'கரம் என்னும் எழுத்து மலமாயையும்; 'ம'கரம் என்னும் எழுத்து மறைப்பையும் குறிப்பதாகும் என்பது இதன் பொருள்.

ஐந்தெழுத்தினுள் சிறப்பு - வனப்பு - யாப்பு - நடப்பு - மறைப்பு என்னும் ஐந்தையும் உய்த்துணர முடியும் என்பர்.

சிறப்பு : யாவற்றிலும் மிக்குயர்ந்தவன் சிவன் என்பதைக் குறிக்கும்.

வனப்பு : இது அழகைக் குறிக்கும் சிவனுடன் கூட்டி பேரின்பம் பெறச் செய்யும் அருளாகும்.

யாப்பு : கட்டப்படுதல் என்பது இதன் பொருள். ஆன்மா ஐம்மலத் தோடும், இரு வினைகளோடு கட்டப்பட்டுள்ளது என்பது இதன் பொருளாகும்.

நடப்பு : நடத்துதல், குழந்தையை கையைப்பிடித்து நடை பழக்குதல் போல இறைவன் உயிர்களை மும்மலங்களில் புகுத்தி ''அருள் செய்கிறான்''.

மறைப்பு : மேற்கூறிய மலங்களால் பிணைக்கப்பட்டுள்ள ஆன்மாக்கள், இறைவனைச் சென்றடையாதவாறு மறைத்தல்.

திருமூலர் கூறிய திருவம்பலச் சக்கரம் இருபத்தைந்தினுள்ளும் ''சிவாயநம'' மந்திரம் இருக்கின்றது. இம்மந்திரத்தை திருமூலர் மூன்றாகப் பிரிக்கிறார். அவை

1. பருத்த ஐந்தெழுத்து. இதனை ''நமசிவாய'' (ஸ்தூலபஞ்சாக்கரம்) என்றும்
2. நுண்ணிய ஐந்தெழுத்து - இதனை ''சிவாயநம'' (சூக்கும பஞ்சாக்கரம்) என்றும்
3. மிக நுண்ணிய ஐந்தெழுத்து - இதனை ''சிவயசிவ'' (அதிசூக்கும பஞ்சாக்கரம்) என்றும் பிரித்து கூறியுள்ளார்.

ஐந்தெழுத்தால்தான் பூதங்கள் ஐந்தும், அனைத்து உலகங்களும் உண்டாயின. ஆகமங்களும், வேதங்களும் சாத்திரங்களும் ஐந்தெழுத்தில் உள்ளனவற்றையே கூறுகின்றன. இது மாற்றாரை மாற்றும் வாள் என்பார். ஈசனின் அருட்பெருங் கருணையை நினைத்து நினைத்து உள்ளம் உருகி, ஐந்தெழுத்தை இடையறாது செபிக்கும் போது நாம் பிறவிப் பெருங்கடலை மிக எளிதில் கடந்து விடலாம்.

"ஒன்றுகண் டேன்இவ் வுலகுக்கு ஒருகனி
நன்றுகண் டாய்அது நமசிவா யக்கனி
மென்றுகண் டால்அது மெத்தென் றிருக்கும்
தின்றுகண் டால்அது தித்திக்கும் தானே"!

இவ்வுலகில் வாழும் மக்களுக்காக ஒரு கனியினைக் கண்டுள்ளேன். அது ஔவையார் உட்கொண்ட நெல்லிக் கனியினைவிட மெல்லிய கனி. அது நல்ல கனி, தீமையை உண்டாக்காத கனி, அக்கனியின் திருப்பெயர் "நமசிவாய" என்பது. அக்கனியினை உணர்வின் கண் மெல்லுபவர்க்கு அனிச்ச மலரினும் மெல்லியதாக பஞ்சு மெத்தையை போன்று இருக்கும். அதனை தின்று கண்டால் (அறிந்து) கண்டவருக்கு தெவிட்டாத இனிப்பாய் இருக்கும் என்பார்.

நமசிவாய என்றோ, சிவாயநம என்றோ திருவைந்தெழுத்தை உள்ளம் உருகி அன்புடன் செபிக்கும்போது தரித்தரம் உண்டாகாது. இம்மை, மறுமை, மும்மை நலங்களும் உண்டாகும்.

**அருட்சத்தி விளக்கம்**

"சிவய நம" என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தில் வகரம் என்னும் எழுத்து சிவசக்தியின் அருளைக் குறிக்கும்.

"சி" என்னும் எழுத்து இறைவனை ஈசனைக் குறிக்கும்
"வ" என்னும் எழுத்து இறைவனின் அருட்சத்தியைக் குறிக்கும்.
"ய" என்னும் எழுத்து ஆன்மா(அ)உயிரைக் குறிக்கும்
"ந" என்னும் எழுத்து மறைத்தல்
"ம" என்னும் எழுத்து மலம் - ஆணவம்.

மும்மலங்களால் மறைக்கப்பட்ட ஆன்மா இறைவனின் அருட் சக்தியைப் பெற்று திருவடிப்பேறு அடைய வேண்டும் சிவயநம, சிவாயநம, நமசிவாய, சிவாயசிவ, சிவசிவ என்னும் திருமந்திரத்தை ஆன்மா இடைவிடாமல் செபித்தால் சிவ சக்தியின் அருள்பெற்று திருவடிப்பேறு அடைவது உறுதி. தொடக்கமும் முடிவும், பிறப்பும் - இறப்பும் போக்கும் - வரவும் இல்லாதவன் ஈசன். அவனுக்கு பேரறிவு பெரும் பொருளாய் திருவுடலாய் விளங்கும் பொருள் "பராபரை" என்பதாகும். "பராபரை" என்பதும் பராசக்தி என்பதும் ஒன்றே! சோதியிலிருந்து பரமும் அதுவே பராபரமாக திகழ்ந்தது என்பர். பரத்தி லிருந்து முதலில் ஓசையாகிய நாதம் தோன்றியது. ஈசன் கையிலுள்ள உடுக்கை நாதத்தை எழுப்புகிறது. "ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே" என்பார் அப்பர் பெருமான் நாதத்திலிருந்து ஒளியாகிய விந்து (சக்தி) தோன்றும். "உலகுக்கொரு பெருஞ்சுடராய் (ஒளி) நின்றாய் நீயே! - அப்பர் வாக்கு.

அன்னை ஆதிபராசக்தி சிவபெருமானுக்குத் தாயாக, மகளாக, தாரமாக விளங்குபவள் என்பர். சக்தி தத்துவத்திலிருந்து சதாசிவமாகிய அரன் தோன்றுவதால் அங்கு தாயாக காட்சி கொடுப்பாள். சிவத் தத்துவத்திலிருந்து சத்திதத்துவம் தோன்றுவதால் சிவத்துக்கு மகளாகவும் ஆதிசத்தியாக நின்று சத்தி தத்துவத்தில் சதாசிவ நாயகரோடு கூடியிருந்து உலகமும் பல்வுயிர்களும் தோற்றுவித்து ஏதுவாக இருத்தலால் தாரம் ஆகியும் விளங்குகிறாள்.

**''வாயு மனமும் கடந்த மனோன்மணி**
**பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை**
**ஆயும் அறிவுங் கடந்த அரனுக்கு**
**தாயும் மகளுநல் தாரமு மாமே''!** - திரு.மந்.1178.

அன்னை பராசத்தி எட்டு யோக நிலைகளுக்கும் முதல்வி. அவள் அருளைப் பெற்றவர்கள் இருவினை ஒப்பு ஏற்படும். பிறவி அறுப்பர். அவள் அகத்தே இருப்பது போல் புறத்தேயும் திருக்கோயில் கொண்டு எழுந்துள்ளாள். அத்திருக்கோயில்கள்தோறும் சென்று கும்பிட்டு ''சிவாயநம, நமசிவாய'' என்னும் தமிழ் மந்திரம் இடைவிடாமல் ஓதினால் திருவடி ஞானம் பெறுவர்.

**வழிபாட்டு விளக்கம்**

பொதுவாக வழிபாடு என்பது இறைவனை பூஜிக்கும் செயலைக் குறிக்கும். இதனை திருமந்திரத்தில் ''அருச்சனை'' என்னும் சொல்லால் எடுத்தாளப்பட்டுள்ளது. கோவில்களுக்குச் சென்றும், வீட்டிலும் வழிபாடு செய்யலாம். பூக்கள் - பழங்களைக் கொண்டும் வழிபடலாம்.

**''அம்புய நீலங் கழுநீ ரணநெய்தல்**
**வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்**
**தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை**
**செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே''!**

என்னும் திருமந்திரப் பாடலில் தாமரை, கருங்குவளை, செங்கழுநீர், நெய்தல், பலா, மாதவி, மந்தாரம், செவ்வந்தி ஆகிய பதினான்கு வகையான நறுமணமிக்க பூக்களைக் கொண்டு வழிபாடு செய்யலாம் என்று திருமூலர் பாடியுள்ளார்.

சிவபெருமானை உள்ளத்திலே நினைந்து கொண்டு இருள் மலத்தினை நீக்கும் திருவிளக்குகளை எல்லாப் பக்கங்களிலும் ஏற்றுதல், புகையும் ஒளியும் காட்டி வழிபடுதல் செந்தமிழ்மாமறை திருமுறைகளை ஓதுதல், திருவடி பேரின்பம் உடனே கைக்கூடும். திருநீற்றுப் பதிகம் ஓதி ''திருநீறு'' இடுத்தல் வேண்டும். நமசிவாய என கீழிருந்து மேல்நோக்கியும் சிவாயநம என மேலிருந்து கீழ் நோக்கியும் ''ஓம்'' என வட்டமிட்டும் ஒளிகாட்ட வேண்டும்.

ஐம்பொறிகளையும் அடக்கி வழிபாடு செய்பவரின் மனம் அடங்கியிருக்கும். இவர்களை 'சிவஞானிகள்' என்பர். தானே சிவனாக, சிவனே தானாக என இரண்டன் வழி தன்னைச் சிவமாகக் காண்பர். சிவத்திடம் அன்பு கொண்டு, தன்னறிவைச் சிவ அறிவில் ஒன்றுபடுத்திய சாயுச்சிய நிலையை அடையும்வழி இதுவாகும். இச்சித்தியைப் பெற்ற சிவஞானிகள் தம்மைச் சிவம் நடத்தும் என்று தாம் ஒன்றையும் சிந்தியாதவராய் இருப்பர். சிவ வழிபாட்டின் மூலம் திருவடிப்பேற்றை அடைய முடியும்.

**ஐவகை ஒழுக்கம் பற்றிய விளக்கம்**

சிவ பக்தர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் ஐவகைப்படும். அவற்றை ஞானிகள் பஞ்ச ஆசாரங்கள் என்று சொல்வார்கள். ஆசாரம் என்பது அடியார்கள் செய்யவேண்டியவை, செய்யக் கூடாதவை பற்றிக் கூறும் நெறிமுறை அவையாவன.

**1. சிவாசாரம்**

சிவன் ஒன்றே பரம்பொருள். அவனுக்கு வேறாக ஒரு பொருள் இல்லை. அவன் ஒருவனே வழிபாட்டிற்கு உரியவன். வேறு ஒரு பொருளையும் வணங்கலாகாது.

"சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனோடொப்பார் இங்கு யாவரும் இல்லை"

என்பது திருமூலர் வாக்கு. உள்ளும் புறமும் அவனை சிந்தித்தலும் வணங்குதலும் தவிர நமது வாழ்விற்கு முதல் நோக்கம் வேறு எதுவும் இல்லை.

"தவம் செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
சிவன் தன் விரதமே சித்தாந்தக் கேள்வி"

என்பது திருமூலரது குறிப்பு. தவம் - சிவனை சிந்தையில் நிறுத்துவது. செபம் - 'சிவாயநம' சொல்லுதல், ஆத்திகம் - பதி, பசு, பாசம் பற்றிய அறிவு, தானம் சிவனடியார்களுக்குப் பொருள் உதவி, சித்தாந்தக் கேள்வி; சைவ நூல்களைப் படித்தல், படிப்பித்தல், ஆய்தல்; சிவன்தன் விரதமே. இவையே சிவனை வழிபடும் முறை.

இவ்வாறு 'சிவனே எல்லாம்' என வாழ்வது சிவாசாரம். இதுவே எல்லா ஆசாரங்களுக்கும் தலைமையானது, முதன்மையானது.

**2. லிங்காசாரம்**

சிவனை லிங்க வடிவமாக வணங்குவது சிறந்தது. சிவலிங்கம் சிவத்தின் சொரூபம். லிங்கம் ஆணவத்தை நீக்கும். வினைவலியைத் துடைக்கும். நம்மைச் சிவமாக்கும் சாதனம் அது. அது சிவனின் அருள் வடிவம். அதனால்தான்

"தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்"

என்று அருளினார் திருமூலநாயனார்.

**3) சதாசாரம்**

இது வாழ்வியல் தொடர்பான ஆசாரம். நாம் வாழ்வதற்கு உழைத்தே ஆதாரம் செய்து கொள்ள வேண்டும். பிச்சை எடுத்தோ பிறரைச் சுரண்டியோ வாழக் கூடாது. சாதி, குலம் போன்ற வேற்றுமைகளின்றி எல்லா சைவர்களையும் ஒன்றாகக் கருத வேண்டும். திருமணம் உணவு இவைகளில் எல்லா சைவர்களையும் உயர்வு தாழ்வின்றி நடத்த வேண்டும்.

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின்''

என்பது திருமூலரது அறிவுரை. அக்கினியில் விழுந்த அனைத்தும் சாம்பல் ஆவது போல் சிவத்தில் சேர்ந்த அனைவரும் ஒன்றாகி விடுவார்கள்.

**4) பிருத்யாசாரம்**

சிவன் தான் நமது குரு. அவனே நமது வழிகாட்டி. அவனருளால் தான் அவன் தாள் வணங்க முடியும். ''சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே'' என்பது திருமூலர் வாக்கு. திருமுறைகளும் சாத்திர நூல்களும் அவனது குரு உபதேசமே. எனவே ஏதாவது ஒரு சிவ நூலை நமக்குத் துணையாகக் கொள்ள வேண்டும். அவன் நமக்கு அருளிய மந்திரம் 'சிவாயநம', சிவாயநம என சித்தம் ஒடுக்க வேண்டும் என்பது திருமந்திர அறிவுரை, ஆகும். திருநீறு சிவன் அடையாளம். அது புனிதமானது. ஏனென்றால், ''கங்காளன் பூசும் கவசத் திருநீறு'' என்று அதன் பெருமையைத் திருமந்திரம் பேசுகிறது.

**5. கணாசாரம்**

மக்களை சிவகணங்களாகப் பாவித்து அவர்களது சீலத்துக்கும் ஒழுக்கத்திற்கும் பொது நலத்திற்கும் நாம் உறுதுணையாக இருக்க வேண்டும். நாம் பெற்ற சிவனருள், சிவஞானம் மற்றும் சிவானந்தம் நமது தனி உடைமை அல்ல. அவற்றை நாம் பிறருக்கு வழங்கக் கடமைப் பட்டுள்ளோம். நாம் எப்படி சிவமயம் ஆனோமோ அவ்வாறே உலகையும் சிவமயமாக்க வேண்டும். எல்லோரையும் சிவசமுதாயமாக்க வேண்டும். அதுதான் நம்மைப் போன்ற திருக்கூட்டத்தாரின் முக்கிய கடமையாகும்.

''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''

''அருள் பெற்றவர் சொல்ல வாரீர்''

இவை தான் திருமூலர் நமக்கு விடுக்கும் அறைகூவல்கள். ஆக, சிவாசாரம், லிங்காசாரம், சதாசாரம், பிருத்யா சாரம் மற்றும் கணாசாரம் ஆகிய ஐந்தும் சிவபக்தர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் ஆகும்.

**தொகுப்புரை**

இக்கட்டுரையில் திருமந்திரம் பற்றிய விளக்கம், திருவைந்தெழுத்து விளக்கம், அருட்சக்தி விளக்கம், வழிபாட்டிற்கான விளக்கம். ஐவகை ஒழுக்கம் பற்றிய விளக்கம் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

# 81. திருவிசைப்பா தலங்கள்

செல்வி சு. ரேவதி சுபாஷிணி, பெரியகுளம்.

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"

சிவபெருமானே முழு முதற்கடவுள் என்னும் கொள்கையை உயிர்நாடியாகக் கொண்டு ஓதப்பெற்ற சைவத்திருமுறைகள் பன்னிரண்டாகும். அவற்றுள் ஒன்பதாம் திருமுறை ஒன்பான் சான்றோர்களால் இயற்றப் பெற்றுள்ளது. இத்திருமுறை திருவிசைப்பா திருப்பல்லாண்டு எனவும் வழங்கப்பெறும். பன்னிரு திருமுறைகளுள் மிகக்குறைந்த அளவான 301 பாடல்களை மட்டுமே கொண்டது. இத்திருமுறை, 'திருவிசைப்பா தலங்கள்' குறித்து இவண் காண்போம்.

**திருவிசைப்பா தலங்கள்**

திருவிசைப்பாவில் இடம்பெற்றுள்ள திருத்தலங்கள் பதினான்கு ஆகும். திருவிடைக்கழி, திருக்களந்தை, ஆதித்தேச்சுரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம். கங்கைகொண்ட சோளேச்சரம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சுரம் ஆகிய எட்டுத் திருத்தலங்களும் இத்திருமுறையில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. தில்லை, திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருப்பூவணம், திருவிடைமருதூர், திருவாரூர் ஆகிய ஆறு பதிகளும் தேவார ஆசிரியர்களாலும் பாடப் பெற்றவையாகும். திருவிசைப்பா மாலையை அருளிச்செய்த அருளாளர்கள்

1. திருமாளிகைத் தேவர்
2. சேந்தனார்
3. கருவூர்த் தேவர்
4. பூந்துருத்தி நம்பி காட நம்பி
5. கண்டராதித்தர்
6. வேணாட்டடிகள்
7. திருவாலியமுதர்
8. புருடோத்தமர்
9. சேதிராயர்

திருவிசைப்பாவில், செம்பாகத்திற்கு மேல் தில்லைச் சிற்றம்பலம் மீது பாடிய பாடல்கள் ஆகும். திருமாளிகைத் தேவர், கண்டராதித்தர்,

வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என வரும் அறுவரும் தில்லைச் சிற்றம்பலத்தை மட்டுமே பாடியுள்ளனர்.

பூந்துருத்தி நம்பி காடநம்பி ஆரூரையும், சேந்தனார் திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகியவற்றையும் கருவூர்த்தேவர் களந்தை ஆதித்தேச்சுரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம். திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோளேச்சுரம், பூவணம், சாட்டியக்குடி, தஞ்சை, இடைமருதூர் ஆகியவற்றையும் திருத்தில்லையுடன் பாடியுள்ளனர்.

**தில்லை**

திருமாளிகைத்தேவர், சிவபெருமானை நோக்கி அடியவனாகிய யான் உன்னைப் புகழ்ந்து உரைக்கும் வண்ணம். உன்னை வணங்கும் வண்ணம், உன்னை நினைக்கும் வண்ணம், உன்னை நெருங்கும் வண்ணம் அருள்வாயாக என முதற்பதிகத்தில் பாடியுள்ளார்.

தில்லைக் கூத்தப்பெருமானது திருவுருவத்தைப் பாதாதிகேசமாக நினையும் வகையில் திருப்பதிகத்தை இயற்றியுள்ளார்.

''மயர்வறும் அமரர் மகுடந்தோய் மலர்ச்சே
வடிகள்என் மனத்துவைத் தருளே''

திருவாலியமுதனாரும் பாதாதிகேசத்தை விளக்கி ஓர் திருப்பதிகத்தை அமைத்துள்ளார்.

''முறுக்கு வார்சிகை தன்னொடு முகிழ்த்தஅவ்
அகத்து மொட்டொடு மத்தமும்
பிறைக்கொள் சென்னி யன்றே
பிரியா(து) என்னுள் நின்றனவே''

என்று திருமுடியைத் தியானித்து இயற்றியுள்ளார்.

தில்லைக் கூத்தப்பெருமானைக் காதலித்து தன்வயம் இழந்தாள் ஒருத்தியது நிலையைக் கண்டு அவள் தன் செவிலித்தாய் கூறும் முறையில் ஒரு திருப்பதிகத்தை திருமாளிகைத்தேவர் சித்திரித்துள்ளார்.

சிவபெருமானுக்குச் சிறந்த கோயிலாய் விளங்குவது தில்லைச் சிற்றம்பலமே என்று கருவூர்த்தேவர் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்

சீர்த்ததிண் புவனம் முழுவதும் ஏனைத்
திசைகளோ(டு) அண்டங்கள் அனைத்தும்
போர்த்ததம் பெருமை சிறுமைபுக்(கு) ஒடுங்கும்
புணர்ப்படை அடிகள்தம் கோயில்
ஆர்த்துவந்(து) அமரித்(து) அமரரும் பிறரும்
அலைகடல் இடுதிரைப் புனிதத்

தீர்த்தநீர் அரும்பும் பெரும்புற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே.

வேணாட்டடிகள் உனது திருவடியை அடையும் நாள் எதுவோ என்று தில்லை நடராஜனை நோக்கி வினவுகிறார்.

தில்லைப் பெருமானைக் காதலித்த தலைவியும் அவளை வளர்த்த செவிலித்தாயும் அப்பெருமானை நினைந்து அரற்றியதாகப் புருடோத்தம நம்பி ஒரு திருப்பதிகத்தினை அமைத்துள்ளார்.

சேதிராயர் தில்லைப் பெருமான் மீது ஏற்பட்ட காதலால் மெலிகின்ற ஒருத்தியது ஆற்றாமையைச் சொல்லி அப்பெருமான் மீது ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளியுள்ளார்.

## திருவீழிமிழலை

திருவீழிமிழலையில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடியவர் சேந்தனார் ஆவார். சோழநாட்டுக் காவிரித் தென்கரையிலுள்ள சிவத்தலங்களுள் 61-ஆவது தலமே திருவீழிமிழலை ஆகும். மிழலை - இது ஊரின் பெயர். வீழி - இது தலத்துக்குரிய கொடியின் பெயர். எனவே கொடியின் பெயரால் வீழிமிழலை என வழங்கப்பெறுகிறது.

இங்குத் திருமணக் கோலத்தோடு எப்பொழுதும் எழுந்தருளிய மணவாளப் பெருமான் திருவடியில் திருமால் சக்கரம் பெறும் பொருட்டு நாடோறும் ஆயிரம் தாமரைப் பூவைக் கொண்டு வழிபடும்போது ஒரு நாள் ஒரு மலர் குறைய அவர் தமது கண்ணை இடந்து அர்ச்சித்துச் சக்கரம் பெற்றார் என்பது வரலாறு.

இங்கு இறைவன் எழுந்தருளியிருக்கும் கோயில் விமானம் திருமால் விண்ணுலகத்திலிருந்து கொண்டு வந்து இறக்கியதாகக் கூறுவர்.

இத்திருப்பதிகம் பல்பொருளும் பற்றி வருவது. திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் எமது குருமூர்த்தியாகிய வயிரமணியை அடைக்கலமாக அடைந்தால் வலிய வினைகள் வந்து அடைய மாட்டா என்று சேந்தனார் திருவாய்மலர்ந்தருளி உள்ளார்.

## திருவாவடுதுறை

காவிரித் தென்கரையிலுள்ள தலம் இது. திருக்கயிலாயத்தில் உமாதேவியார் சிவபெருமானோடு சொக்கட்டான் ஆடி மகிழ்ந்தமையால் பசு வடிவம் எய்தினார். உமாதேவியார் அப்பசு வடிவத்துடன் இத்தலத்தில் வந்து இறைவனை வழிபட்டு பசு வடிவம் நீங்கப்பெற்ற காரணத்தால் இத்தலம் ஆவடுதுறை என வழங்கப்பெற்றது. இப்பதிகத்தினைச் செவிலி கூற்றாய்ச் சேந்தனார் அமைந்துள்ளார்.

**திருவிடைக்கழி**

திருக்கடவூருக்குத் தென்மேற்கே 4 மைலில் உள்ளது. இது முருகப் பெருமான் முதன்மையாக எழுந்தருளிய தலமாகும். இத்தலத்தில் மகிழ மரம் சிவபெருமானுக்கும், குரா மரம் முருகப்பெருமானுக்கும் உரியன. இத்திருப்பதிகம் சிவகுமாரனாம் முருகக்கடவுள் மேல் வந்தது.

**திருக்களத்தை ஆதித்தேச்சரம்**

இராசராசன் கட்டிய சிவாலயம் இராசராசேச்சுரம் என்பதுபோல், ஆதித்த சோழன் கட்டிய சிவாலயம் ஆதித்தேச்ரம் எனப் பெயர் பெற்றது.

கருவூர்த்தேவர் இப்பதிகத்தில் திருக்களந்தை என்னும் தலத்தில் அழகுடன் விளங்கும் ஆதிச்தேச்சுரம் எனும் திருக்கோயிலைப் பற்றிப் பாடியுள்ளார்.

''நீரணங்(கு) அசும்பு கழனிசூழ் களந்தை
நிறைபுகழ் ஆதித்தேச் சரம்''

என்று பாடுகின்றார்.

திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் திருப்பதிகத்தில், அத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவரைக் காதலித்த ஒருத்தியது கூற்றை அமைத்துள்ளார்.

திருமுகத்தலை திருப்பதிகத்தில் இறைவனது பெருமையைப் பறைசாற்றியிருக்கிறார்.

திரைலோக்கிய சுந்தரம் திருப்பதிகத்தில் தோழி தலைவனிடம் தலைவியது நிலை கூறும் கூற்றாக வந்தவை.

**கங்கைகொண்ட சோளேச்சுரம்**

இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரன் என்பவன் வடநாடு சென்று வெற்றியுடன் கங்கை நீர் கொண்டுவந்து புதிதாக அமைத்த நகரம் கங்கை கொண்ட சோழபுரம் என்பதாகும். இராசேந்திர சோழன் தன் தந்தை தஞ்சையில் அமைத்த பெரிய கோயிலின் அமைப்பைப் பின்பற்றியே இச்சிவாலயத்தைக் கட்டினார். உருவத்தில் சற்றுச் சிறியதாக இருந்தாலும் சிற்பத்திறத்தில் மிக உயர்ந்தது. இச்சிவாலயம் தேவார திருவாசக ஆசிரியர்களுக்கு மிகவும் பிற்பட்டதாகும்.

இத்திருப்பதிகத்தில் இறைவனது திருவிளையாடல்கள் கூறப் பெற்றுள்ளன.

**திருப்பூவணம்**

இத்தலம் பாண்டி நாட்டில் வைகைக் கரையிலுள்ளது. பொன்னையாள் என்னும் தாசிக்காகச் சொக்கலிங்கப்பெருமான் சித்தர் வடிவமாய் எழுந்தருளி

இரசவாதம் செய்து சோமாஸ்கந்தர் திருவுருவை அமைக்குமாறு அருள் புரிந்தார் என்பது வரலாறு ஆகும். இத்தலத்தைத் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் வழிபட்டுள்ளனர்.

**திருச்சாட்டியக்குடி**

இத்தலத்தில் இறைவனது சந்நிதி மேற்கு நோக்கி இருக்கின்றது.

**அனலமே! புனலே! அனிலமே! புவனி**
**அம்பரா! அம்பரத்(து) அளிக்கும்**
**கனகமே! வெள்ளிக் குன்றமே**

என்று ஏழிருக்கை திருக்கோயில் மூலாத்தானத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனைப் புகழ்கிறார் கருவூர்த்தேவர்.

**தஞ்சை இராசராசேச்சரம்**

முதலாம் இராசராசசோழன் கட்டிய சிவாலயமே 'தஞ்சை இராசராசேச்சரம்' எனப் பெயர்பெறும். சிற்ப வேலைகள் அமைந்தது. இதன் உயரம் 216 அடி ஆகும். நந்தி ஒரே கல்லில் அமைந்தது. 12 அடி உயரமும் 19½ அடி நீளமும், 8¼ அடி அகலமும் உள்ளது.

**திருவிடை மருதூர்**

இத்திருப்பதிகம் இறைவன் திருவிடை மருதூரை இடபாகமாகக் கொண்டு எழுந்தருளியுள்ள சிறப்பை வியந்தருளிச் செய்தது. வேறு பெயர் வீரசோழபுரம் என்பதாகும்.

**திருவாரூர்**

பூந்துருத்திநம்பி காடநம்பி திருவாரூர் திருத்தலத்தில் இரண்டு திருப்பாட்டுகளைக் கொண்ட திருப்பதிகத்தை இயற்றியுள்ளார். இவை இரண்டும் திருவாரூர்ப் பெருமானது திருவுருவச் சிறப்பையே வியந்து கூறுகின்றன.

**பாடகமும் நூபுரமும் பல்சிலம்பும் பேர்ந்தொலிப்பச்**
**சூடகக்கை நல்லார் தொழுதேத்தத் தொல்லுலகில்**
**நாடகத்தின் கூத்தை நயிற்றுமலர் நாடோறும்**
**ஆடகத்தால் மேய்ந்தமைந்த அம்பலம் நின் ஆடரங்கே**

இங்ஙனம் ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பா பதினான்கு தலங்களின் சிறப்பை உள்ளடக்கி சிவபெருமானது பெருமையைப் பறைசாற்றிச் சிப்பிக்குள் முத்தாக ஒளிவிடுகின்றது.

# 82. திருமூலரின் சிவம்

கவிஞர் எம். லோகநாயகி, சென்னை.

''நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்தாள் வாழ்க''

என்று சிவத்தில் ஆழ்ந்தவர் திருமூலர். உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை யாவும் சிவமாய் ஆனவர்; சித்தர்; கயிலாய மரபினர்; பாண்டி நாட்டினர்.

திருமூலர் திருக்கையிலாயம் அடைந்து பலகாலம் தவமிருந்தார். பின் பொதிகைமலை வந்தார். தவக்கோலம் பூண்டார். இறை அருளியபின் தீரும்புகையில் ஆடு மேய்ப்பான் மூலன் உடலில் புகுந்தார். மூலம் - மூலாதாரம். மூலாதாரத்தில் நின்று உரை செய்தார்; மூலன் ஆனார்.

சிவபெருமானை முழுமுதற் கடவுளாய் கொண்டது சைவம். பழமைக்குப் பழமையானது; புதுமைக்குப் புதுமையாய் திகழ்வது.

சிவன் செம்மையானவன்; மங்கள வடிவினன்; மங்களம் வழங்குபவன், இப்புவியினர் காலை எழுந்ததும் திருமந்திரத்தைப் பொருள் உணர்ந்து ஓதினால் எம்பெருமானாகிய சிவபெருமானை அடைந்து இன்புறுவர் என்று சிவத்தை அடையும் சுலப வழியை திருமூலர் காட்டுகிறார்.

''மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞானத் தலைவனை நண்ணு வநன்றே'' (திருமந்திரம். பா. 182)

திருமூலர் அன்பே சிவம்; அனைத்தும் சிவம் என்று உணர்ந்தவர். சிவனே விண்; சிவனே மண்; (3037) சிவனே ஏழ்கடல்; அனைத்துயிர் அவனே. திருமால் அவனே; நான்முகன் அவனே. அடியவர்களின் சுவைகனி சிவனே! (3088) மாதொரு பாகன் அவனே, சிவன் அவனே, கதிரும் அவனே, வாயுவும் அவனே (3040) உடலின் சோதியானவன்; பராபரன் அவனே (3045).

அணுவிலும் நுண்ணியன்; பஞ்சபூதமவன்; ஆணும் அவனே; பெண்ணும் அவனே யாவும் சிவனே என்று சிவத்தில் ஆழ்கிறார் திருமூலர்.

''பெண்ணொடு பாகம்
பிறவி பெண்ணாமே'' (திருமந்திரம் பா.1158)

"பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி

திருவாசகம் - போற்றித்திரு அகவல் பா.137

என்று பாடும் மணிவாசகரின் கருத்து நோக்கத்தக்கது.

திருமந்திர மூவாயிரப்பாடல்கள்; முந்நூறு மந்திரங்கள்; முப்பது உபதேசங்கள் அனைத்தும் சுட்டுவது சிவமே எனலாம். சிவமயமாய் வாழ்ந்த திருமூலர் சிவபெருமானின் திருவடிவ அழகில் மயங்கு கின்றார். சிவன் நச்சரவினை அணிந்திருக்கிறான்.

"அராயஞன் மன்னி
எம்பெருமான் மனித்துறைந் தானே" (திருமந்திரம் பா.1760)

பிறைச் சந்திரனைச் சூடி இருக்கிறான்; (திருமந்திரம் பா.88) இறைவன் புலித்தோலினன்

"பொன்னைக் கடந்தலங் கும்புலித் தோலினன்"
(திருமந்திரம் பா.271)

அம்பலத்தாடும் நாதனவன்; அவனது திருநடனம் அற்புதமானது; ஆனந்தமானது,

"காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்
கூளியோ டாடிக் குவலயத் தேயாடி
நீடிய நீந்திகால் நீள்வர னிடையாடி
நாளுற அம்பலத் தேயாடும் நாதனே" (திருமந்திரம் பா. 2733)

என்று சிவநடனத்தில் ஆழங்கால் படுகிறார் திருமூலநாயனார்.

யாவும் சிவமே! சிவனை வழிபட்டால் அனைத்தையும் வழி பட்டதாகும். அயன், அரன், அரி ஆகியோர் உலகை படைக்கையில், அழிக்கையில், காக்கையில் சிவம் அவர்களோடு உறைகிறது.

"புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யிம்மூடிக் காகிநின் றாரே" (திருமந்திரம் பா. 396)

உயிர் சிவம்; உடல் கோயில்; மனம் கருவறை; கோபுர வாசல் வாய்; ஐம்புலன்கள் காளாமணி விளக்கு; உள்ளுறையும் சீவன் சிவன்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்

தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே'' (திருமஞ். பா. 1813)

உயிரானது உடலைத் தானாய் உணரும். உள்ளே இருக்கும் சீவனாகிய சிவன்தானே அந்த சீவனாய் உணரும். சீவனும் தானே சிவம் என்று உணருகையில் உயிர்ப்பயண முடிவு முக்தியாகிறது.

சீவனும் சிவனும் தனித்து இருப்பின் சிவனை உணர்தல் நிகழாது. சிவனை அறிந்தபோது அங்கே சீவன் இல்லை. அனைத்தும் சிவமே; சிவமயமாகிறது.

''அவனும் அவனும் அவனை யறிவார்
அவனை யறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை அறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே'' (திருமந்திரம். 1789)

சிவனருள் இருந்தால்தான் இவர் மனிதர்; இவர் வானவர் என்று அறிய இயலும், நமது ஊனில் - உடலில் உறையும் சிவத்தை உணர சிவனருள் வேண்டும். சிவனைத் தவிர வேறு தெய்வம் இல்லை. அவனதருளைத் தவிர பெறத்தக்கது வேறு ஒன்றும் இல்லை, என்று உண்மை உரைக்கிறார் திருமூலநாயனார்.

''வானவர் என்றும் மனிதர் இவர் என்றும்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வதுதானே'' (பா. 109)

சிவனருளால் மண்ணுலக வாழ்வும், விண்ணுலக வாழ்வும் கிட்டும் என்கிறார் திருமூலர்.

''புண்ணியம் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மன்னவராவதும் வானவராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே''
(திருமந்திரம். 1650)

''சிவன் நாமம் சொல்ல சொல்ல ருசிக்கும்; தீவினை அகற்றும்; தேவராக்கும்; சிவகதி அளிக்கும். தீவினையாளர்களின் நா சிவசிவ என்று உரைக்காது. அதற்குக் காரணம் அவர்களது தீவினையே'' என்று சிவநாமப் பெருமைகளை வெளிப்படுத்துகிறார் திருமூலநாயனார்.

''சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவார்
சிவசிவ என்னச் சிவகதி தானே''

சைவசமயம் அன்பு சமயம். அன்பும் சிவமும் வேறல்ல; அன்பே சிவம். அன்பே சிவம் என்பதனை அறிந்துவிடின் அன்பே சிவமாய் அமர்ந்திடுவர் என்ற சித்தர் திருமூலரின் திருவாக்கு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே" (திருமந்திரம் 270)

சிவபெருமான் பற்றற்றவன்; அவனது திருவடிகளையே பற்ற வேண்டும். உடல் பற்றை விட்டு சிவனை தியானித்தால் சிவத்தில் ஆழலாம்; ஆனந்த மயமாகலாம்.

கானுறுகோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமலரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க்கல்லது
தேனமர் பூங்கமழ் சேர வொண்ணாதே

சிவபெருமானது திருவடியை வணங்கி பற்றினால் தாவிவரும் வினைக்கடல் ஆன்மாவைச் சாராது; தேவர்கள் வழிபடும் தன்மையைப் பெறுவோம் என்று சிவப்பற்றின் உன்னதத்தை உயிர்வரை ஊட்டு கின்றார் ஐயன் திருமூலர்.

"கொத்துத் திருவடி நீழல் சரண்எனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே
வானக்கன்று ஆகிய வானவர் கைதொழும்
மானக்கன்று ஈசன் அருள்வெள்ளம் ஆமே" (திருமந்திரம். 1453)

"மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை"

(சிவபுராணம். பா. 51-54)

சாவத்து, ஐம்புலன்கள், விலங்குமனம் என நம்மைப் படைத்தவனான எம்பெருமானாகிய சிவத்தில் ஆழ்ந்து சிவமயமான சித்தர் திருமூல நாயனார்;

"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து", கைதான்
தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து, சயசய போற்றி

என்று மாயப்பிறப்பறுக்கும் மன்னனாம் சிவனில் மூழ்கி திருமந்திர முத்தெடுத்தார் எனிலது மிகையில்லை.

# 83. திருமூலரின் நிலையாமைத் தத்துவம்

செல்வி ம. வனிதா, கோவை.

பதினொரு திருமுறைகளுக்கும் பதினான்கு சித்தாந்த நெறி நூற்களுக்கும் நடுநாயகமாக விளங்குகின்ற திருமந்திரம் தோத்திர நூலாகவும், சாத்திர நூலாகவும் கருதப்படுகின்றது. திருமந்திரம் மனித சமுதாயத்தை வாழவைக்க வந்த ஓர் உயரிய நூல். அதன் ஒவ்வொரு பாடலும் மனிதனிடம் உள்ள குறைகளை நீக்கி உயர்வடைவதற்கான வழிமுறைகளை விளக்கிச் சொல்கின்றது. ஆகையால் ஆசிரியர் திருமூலர், தாம் சொல்ல வந்த கருத்துக்களை மக்கள் மனம் ஏற்றுக்கொள்ளும் வகையில் தக்க எடுத்துக்காட்டுகள் மூலம் எடுத்துரைக்கின்றார்.

சங்க இலக்கியமும், காப்பிய இலக்கியமும், நீதி இலக்கியமும் இயற்கையைச் சார்ந்து கருத்துணர்த்தியது போன்ற, திருமுறை இலக்கியங்களும் இயற்கையைச் சார்ந்து கருத்துணர்த்த தவறவில்லை. சமுதாய நெறிகளையும், சமய நெறிகளையும் இயற்கை வழி உணர்த்துவது திருமுறைகளில் பல இடங்களில் காணப்பெறுகிறது. அழிவற்ற ஆன்மாவை அழிவற்ற இறைவனோடு ஒன்றச் செய்யும் நோக்கத்திற்காக இயற்கையைத் துணையாக ஆசிரியர் கொண்டுள்ளார். இவ்வியற்கை உணர்த்தும் சமுதாய நெறியையும் சமய நெறியையும் பின்பற்றினால் மனிதன் உயர்வது திண்ணம். மனிதன் இயற்கையிடமிருந்து கற்றுயர்தல் என்பது எளிய நெறியாகும். பக்தி நெறியுடன் மக்கள் மனதில் பதிந்து இன்பம் விளைவிக்கும் வகையில் தம் நூலில் நயமான உவமைகளை பயன்படுத்தியுள்ளார். திருமூலர் நாவில் அறிவுச் சக்தி குடிகொண்டிருந்தபடியால் ஆன்மீகக் கருத்துக்களையும் அறிவுரைகளையும் நயமிக்க உவமைகள் வழி மக்களுக்குக் கூறுவதில் வல்லவராக விளங்குகின்றார். அறத்தைக் கூறும் முதலாம் தந்திரத்தில் எடுத்தியம்பப்பட்டுள்ள நிலையாமைத் தத்துவச் சிந்தனைகளை உவமைகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**செல்வம் நிலையாமை**

செல்வம் நிலையானதன்று; அழியக் கூடியது. இது வாழ்க்கை அனுபவத்தில் எல்லோரும் காணுகின்ற ஒன்று. காலச்சுழற்சியில் செல்வர் ஏழையாகலாம்; ஏழை செல்வராகலாம். இந்நிலையாமைக் கருத்தைத் தங்களின் இயல்பை உவமையாகக் கொண்டு ஆசிரியர்

"இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே"

(திருமந்திரம், 169)

என்னும் இப்பாடலின் மூலம் விளக்கியுள்ளார். திங்களின் இயல்பு தேய்தலும், வளர்தலும், மறைதலும், தோன்றுதலும் ஆகும். திங்களின் இவ்வியல்பு செல்வம் ஒரே வகையில் நிலைத்திருப்பதில்லை. ஒருகால் மிகையாக இருக்கும்; ஒருகால் மிகவும் குறையும்; ஒரு கால் முழுவதும் இல்லாமல் போய்விடும் என்னும் கருத்தை உணர்த்துகின்றது. திங்கள் வளர்பிறையில் வளர்ந்தாலும் பின்னர் உறுதியாக தேய்ப்பிறையில் தேய்ந்து மறைவது உறுதி. செல்வமும் மிகையாக வளர்ந்துகொண்டே வருவதாக இருந்தாலும் ஒருகால் எல்லையில் இல்லாமற்போய்விடும் என்பது உறுதி என்னும் கருத்தை நுட்பமாக உணர்த்தி நிற்கிறது.

**இளமை நிலையாமை**

செல்வம் இருப்பினும் அதன் பயனை அனுபவிக்க இளமை வேண்டும். ஆனால் இளமையும் செல்வத்தைப் போல் நிலையற்றதாகும். காலையில் கிழக்கே உதிக்கின்ற சூரியன் பகலில் உச்சிக்கு வந்து மாலையில் மறைவதைக் காண்கின்றோம்; இளமை நலம் பொருந்திய கன்று பெரியதாய் மூத்து மடிவதையும் காண்கிறோம். அவ்வாறுள்ளபோது மனிதனும் தோன்றியபடி இருக்கமுடியாது. இளமை என்பது மனிதனின் வாழ்வோட்டத்தில் ஒரு நிலை மட்டுமே என்பதை சூரியன், கன்று போன்ற உவமைகள் மூலம் எடுத்தியம்புகின்றார்.

ஆடவரை இளமையில் அழகிய மாதர் விரும்பிப் பயனைப் பெறுவர்; ஆனால் இளமை நலத்தை நுகர்ந்த பின்னர் கரும்பின் சாற்றைப் பெற்றுச் சக்கையை ஒதுக்குவதுபோல வெறுத்து ஒதுக்குவர் என்று உவமையொடு ஆசிரியர் நகைச்சுவையாய் கூறும் கூற்றை,

"விரும்புவர் முன்னென்னை மெல்லியல் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக் கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்கும்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே" (திருமந்திரம் 180)

என்னும் இப்பாடலின் வழி உணர்த்துகிறார் திருமூலர்.

**உலக வாழ்க்கை நிலையாமை**

உலகத்தில் மக்கள் பலர் இறத்தலும் தோன்றலும் சமுதாயத்தில் வெளிப்படையாகத் தெரிகிறவொன்று. தோன்றிய மனிதன் அழிந்து

போவான் என்பதில் ஐயமில்லை. உலக வாழ்க்கை நிலையாமையை தளிர், மலர் போன்றவற்றை உவமையாகக் கொண்டு,

> ''தழைக்கின்ற செந்தளிர்த் தன் மலர்க் கொம்பில்
> இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
> பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
> அழைக்கின்ற போதறி யாரவர் தாமே'' (திருமந்திரம் 187)

என்னும் இப்பாடலின் மூலம் விளக்கியுள்ளார். ஒரு மரத்தின் அல்லது செடியின் கொம்பில் தோன்றிய தளிர், மலர் முதலியன அப்படியே அவற்றில் நிலைத்து நிற்பனவல்ல. தோன்றிய தளிர் முற்றி இலையாகும்; பின்னர் இலை சருகாகும்; சருகு அழிந்துவிடும். ஒரு பொம்பில் பூத்த மலரும் வாடியழிதல் உறுதி. அத்தகையதே வாழ்க்கை என்பதை ஆசிரியர் உணர்த்துகிறார். இதற்கு இயல்பு உலக வாழ்வு நிலையாமைத் தெளிவாக உணர்த்துகிறது.

**பிறன்மனை நயவாமை**

கொலைப் புரிதலைப் போலவே பிறன் மனையை விரும்புதலும் தீய செயலாகும். பிறன்மனையை விழைகிறவன் மிகவும் இழிந்தவனாக எண்ணப்படுவான். இத்தகு கருத்தை திருமூலர் இயற்கை உவமைகள் மூலம் கூறியுள்ளதை அவரது பாடல்களின் வழி அறியலாம்.

இல்லற நெறியில் இணைந்தவன் தன் மனைவியிடம் இன்பம் பெறுகிறவனே நல்லவன். பிறன்மனையை நாடுகின்றவன் இழிந்தவன். இவ் வின்பம் இழிவான ஒன்று என்று திருமூலர் உணர்த்தியுள்ளார். மனைவியின் இன்பத்தைக் காய்த்த பலாவாகவும், இனிக்கும் தேமாங்கனியும் குளிர்ந்த சுவை நீராகவும் காட்டுகின்றார். பிறன்மனை இன்பத்தை ஈச்சம்பழமாகவும், புளிக்கும் மாங்கனியாகவும், சுணையில் சுழியாகவும் குறிப்பிடுகிறார்.

நன்கு பழுத்த பழம் கையிலிருத்தல் மனைவியின்பத்தைக் குறிக்கின்றது. ஆனால் பிறன்மனை இன்பத்தைப் பெறும் வழியோ துன்பமானது. அது ஈச்சம்பழம் போன்றது. அவை முட்கள் அடர்ந்த மரத்தின் மேலே பழுத்துக் கிடப்பன. அவற்றைப் பெறுவதில் முட்கள் குத்துதல் போன்ற இடர்கள் இருப்பதுபோல் இவ்வின்பம் பெறும் வகையிலும் புறத்தால் இடர் வரும். மேலும் கிடைக்கும் அவ்வின்பமோ சதைப்பற்றுக் குறைந்து கொட்டை பெரியதாக விளங்கும் ஈச்சம்பழத்தை ஒத்த சிறுமையானது என்று அவ் வின்பத்தின் இழிவு சிறப்பாக உவமைகள் மூலம் உணர்த்தப்பெறுகிறது.

புளிமாங்கனியும் அவ்வாறே பெறும் இன்பம் புளிப்பு என்பதோடு புளிப்பு பல்கெடுத்தல் போல புலன்களை அழிக்கும் இயல்பும் அதற்குண்டு என்பதுணர்த்தப் பெறுகிறது. நீர்ச்சுழியும் அவ்வாறே தன்னுள் அகப்படுவாரை

அழித்தல் போல பிறன்மனை இன்பம் ஒருவரின் பெருமை யாவற்றையும் அழித்துவிடும் என்பது உணர்த்தப்பெற்றுள்ளது.

**மனைவியின் இன்பம்**

பலாப்பழம், தேமாங்கனி ஆகியனபோல் பாதுகாப்பாகவும், இனிமை யாகவும் சுனைநீர் போல் குளிர்ச்சியாகவும் விளங்குகின்ற மனைவியின் இன்பத்தையே பெறுவது நல்லது என்று உணர்த்தப் பெறுகிறது.

**பிறன்மனை இன்பம்**

ஈச்சம்பழம், புளிமாங்கனி ஆகியனபோல துன்பந்தரக் கூடியதும் புலன்களை சுழிக்கக் கூடியதும் நீர்ச்சுழி போல் அகப்படுவதைத் தன்னுள் அழிக்கக் கூடியதுமான பிறமனை இன்பத்தை தவிர்த்தலே அறம் என உணர்த்தப் பெறுகின்றது.

**பக்தி நிலை**

பக்தி மனிதனிடம் எவ்வாறு அமையவேண்டும் என்ற உணர்த்து வதோடு இறையடியார்களின் பக்தி நிலைகளையும் உவமைகள் மூலம் இயற்கை கருத்துணர்த்துகிறது. இறைவன் தோற்றுவித்த உயிர்களின் உயர்நிலை உடையவன் மனிதன். தன்னிலும் இழிந்தவனாக நினைக்கும் பல்லுயிர்கள் அவனுக்கு நற்பாடம் பல கற்பிக்கின்றன. மனிதன் இறைவனிடம் எவ்வாறு பக்தி கொள்ளவேண்டும் என்று திருமந்திரத்தில் உயிரினங்கள் மூலம் உணர்த்தப் பெறுகின்றன.

ஆவும் கன்றும் ஆகிய இரண்டும் மேய்ச்சலுக்குச் செல்கின்றன. அப்போது இளங்கன்று பயமறியாத நிலையில் பலவிடங்களுக்குத் துள்ளி ஓடுகிறது. அப்போது வழி தவறிச் சென்று விடுகிறது. தாயைக் காணாமல் தவித்துக் குரல் கொடுக்கிறது. இதனை,

"ஆண்கன்று தேடி யழைக்கும் மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்ததேனென் நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைபொருள்
ஊன்கன்றா நாடிவந் துள்புகுந்தானே" (திருமந்திரம் 2627)

என்னும் பாடல் வரிகளின் மூலம் ஆசிரியர் இறையருள் பெற்றவன் அதிலேயே கவனம் செலுத்தாமல் உலகியல் இன்பங்கள், புலனின்பங்களில் ஈர்க்கப்பட்டுச் சிலகாலம் இறையருளினை நீங்கி வாழ்வதை கன்று பிரியும் நிலையோடு ஒப்பிட்டுள்ளார். தாயைத் தேடிக் கதறும் கன்றுபோல இறையருளை நீங்கி வாழ்ந்தவன் இறைவனை நோக்கி முழுக்கவனத்தையும் செலுத்தவேண்டும் என்று உணர்த்தப் பெறுகிறது.

**உயிரே வினையைத் துயக்க வேண்டும்**

உயிர் தான் செய்த வினையின் விளைவைத்தானே தூய்க்க வேண்டும். ஒரு உயிரின் வினையைப் பிற உயிரோ பிறவோ அனுபவிக்காது. இதனை,

''ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீரிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டேன் னுள்ளம் பிரியகி லாவே'' (திருமந்திரம் 2849)

என்னும் பாடல் வரிகளின் மூலம் விளக்குகிறார்.

ஆறு மணலை அடித்து வந்து ஓரிடத்தில் மேட்டடை, மேட்டுப்பகுதி திட்டு உண்டாக்கிவிடுகிறது. ஆறு அதைச் சுமந்து வராமல் பிறிதொன்று அதைச் சுமந்து வரவில்லை. நுண்மணல் ஆற்றினாலேயே சுமந்து வரப் பெற்றுத் திட்டாக்கியது. இக்கருத்து உயிர்கள் செய்த வினையின் பயனைத் தானே துய்க்க வேண்டும் என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது.

திருமந்திரத்தில் இறைவனுடைய பெருமைக் கூறப்படினும் முதலாம் தந்திரத்தில் அறத்தைப் பற்றிய செய்திகள் இயற்கையோடு இணைத்துக் கூறப்பட்டிருக்கிறது. ஆசிரியர் கூறவந்த கருத்துக்களை பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் இயற்கையோடு ஒப்பிட்டு உவமைகளைக் கொண்டு விளக்கப்பட்டவை இன்பம் பயப்பவையாகும். அறிவுரைகளை ஆற்றலுடன் அளிப்பவை, உள்ளத்திற்கு உறுதி தரும் உண்மையை உணர்த்துபவை; திருமந்திர உவமைகள் நவில்வாருக்கு நனிநயம் பயக்கும் பயன்பாடு கொண்டு இலங்குகின்றன.

# 84. திருமந்திரத்தில் தசகாரியம்

திரு. நா. விசுவநாதன், சென்னை.

திருமந்திர நூல் தமிழ் ஆகமமாக விளங்குகிறது. சிவாகமங்கள் தந்திரம், மந்திரம், உபதேசம் என்னும் மூன்று வகை கலைகளை உடையன. அவற்றுள் தந்திரம் அனுட்டான முறைகளை கூறுவது. மந்திரம் என்பது இறைவனை வழிபடும் முறைகளை விரித்து உரைப்பது. உபதேசம் என்பது பதி பசு பாசங்களின் தன்மைகளை விளக்கமாக அறிவுறுத்துவது.

இந்த ஆகம நூலில் "ஞான சாதனை"யில் முன்னேறும் ஆன்மாவின் அறிவில் நிகழும் "செயற்பாடு"களின் நுண்பொருளை தொகுத்து திருமந்திரத்தில் தசகாரியங்கள் இடம் பெற்றுள்ள செய்திகளை சிந்தனைகளாக பதிப்பிக்க இந்த ஆய்வரங்கத்தினை பயன்படுத்திக் கொள்கிறேன்.

**தசகாரியம்**

'தசம்' என்பது பத்து. 'காரியம்' என்பது செயல்பாடுகள். ஞான சாதனையில் முயலும் ஆன்மாக்களின் அறிவில் நிகழும் இந்த செயல் பாடுகளையே 'தசகாரியம்' என அழைப்பதுண்டு. இந்த செயல்பாடுகள் பக்குவம் பெற்ற ஞான சாதனையில் முன்னேற விரும்பும் ஆன்மாக் களில் மட்டுமே நிகழும் என்பது பெரியயோர்களின் வாக்கு.

அந்த பத்துவித தசகாரியங்களாவன தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவ திரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பனவாம்.

இந்த நுண்பொருள் சொற்களுக்கு பின்வருமாறு பொதுவான பொருள் கொண்டு விரிவான விளக்கங்களை விளங்கிக்கொள்ளும் வகையில் தொகுத்து தருகிறோம்.

இயல்பை(ரூபம்) அறிந்து கொண்டு(தரிசனம்) தூய்மை (சுத்தி) பெறுவது முத்திப்பேற்றினுக்கு நிலைபெறும் ஆன்ம அறிவின் நிகழும் செயல்பாடுகளாகும். உயிரற்ற தத்துவம் அறிவு விளக்கம் பெற்ற ஆன்மா பேறறிவு பெற்ற (சிவ) தரிசனம், யோகம், போகம் என அமையப் பெற்ற இந்த தசகாரியங்களின் பொதுவான பொருள் வருமாறு :

| | |
|---|---|
| 1. தத்துவ ரூபம் | முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பை அறிவது |
| 2. தத்துவ தரிசனம் | தத்துவங்கள் சடம் என்பதனை தெளிந்து தெரிவது |

| | |
|---|---|
| 3. தத்துவ சுத்தி | உயிருக்கு ஆணவ மலப்பற்று இருக்கும் வரையில் அவற்றை விட்டு நீங்குதல் |
| 4. ஆன்ம ரூபம் | உயிரின் இயல்பை புரிந்து கொள்ளுதல் |
| 5. ஆன்ம தரிசனம் | திருவருள் துணையாகவே தனது அறிவும் செயலும் நிகழ்கின்றன என்பதனை தெரிந்து தெளிவது |
| 6. ஆன்ம சுத்தி | எல்லாம் சிவன் செயல் என்று தன் செயல் அற்று திருவருளில் அழுந்தி நிற்றல் |
| 7. சிவரூபம் | சிவபெருமானின் இயல்பை புரிந்து கொள்ளுதல் |
| 8. சிவ தரிசனம் | இறைவன் குரு வடிவில் வந்து ஆட் கொள் கிறான் அந்நிலையில் எல்லாம் சிவமாய் காண்பது |
| 9. சிவயோகம் | அவ்வாறு காணும் ஆன்மா உள்ளும் புறமும் சிவத்தோடு கூடி நிற்பது |
| 10. சிவபோகம் | அங்ஙனம் நிற்கும் ஆன்மா சிவமாம் தன்மை பெற்று சிவபோகத்தை அனுபவிப்பது. இத்தகு போகம் ஆன்மாவிற்கு உடலோடு இருக்கும் பொழுதே நிகழ்கிறது. உடல் விட்டதும் அப்போகம் நிலைத்து விடுகிறது. |

**தத்துவ ரூபம்**

ஒடுக்க முறையில் வைத்து எண்ணப்படும் முப்பத்தாறு தத்துவங்களாவன,

தன்மாத்திரைகள் பத்து - மண், நீர், தீ, வாயு, ஆகாயம், நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை

ஞானேந்திரியம் ஐந்து - செவி, மூக்கு, கண், வாய், மெய்

கன்மேந்திரியம் ஐந்து - கருவாய், எருவாய், வாய், கை, கால்,

அந்தக்கரணம் - மனம், அகங்காரம், புத்தி, சித்தம், புருடன், அராகம், வித்தை

மாயா தத்துவம் - கலை, நியதி, காலம், மாயை

சிவ தத்துவம் - சுத்த வித்தை, ஈசுவரம், சாதாக்கியம், விந்து, நாதம்,

இந்த முப்பத்தாறு தத்துவங்களின் இயல்புகளை அறிந்து கொள்வதே தத்துவ ரூபம். இந்த தத்துவ இயல்புகளை ''அவத்தை பேதம்'' என்ற தலைப்பின் கீழ் பட்டியலிடுகிறார். சாத்திர நூலாக விளங்கும் உண்மை விளக்கத்தில் வரும் பாடல்.

பொன்பார் புனல் வெண்மை, பொங்கும் அனல் சிவப்பு,
வன்கால் கருமை, வளர் வான் தூமம்; - என்பார்
எழுத்து லவரய அப்பார் ஆதிக்கு என்றும்
அழுத்தம் அதாய் நிற்கும் அது - உண்மை விளக்கம் பாடல் எண். 5

இவற்றுடன் வைத்து சிந்திக்க தக்க திருமந்திரப் பாடல் வருமாறு :

பாரது பொன்மை பசுமை உடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதங் கறுப்பை உடையது
வானகம் தூம மறைந்து நின்றாரே திருமந்திரம். 2145

மண்ணின் நிறம் பசும்பொன். நீர் வெண்ணிறம். தீ செந்நிறம் கரிய நிறம் காற்று. வானம் புகை நிறம் என ஐம்பூதங்களின் இயல்பினை தத்துவ நூல் சொல்வதனை அதே சொல்லாட்சியின் அடிப்படையிலேயே திருமுறை அமையப் பெற்றுள்ளது எண்ணி வியக்கத்தக்கது அன்றோ.

**தத்துவ தரிசனம்**

இந்த முப்பத்தாறு தத்துவங்கள் அனைத்தும் தோன்றி நின்று ஒடுங்கும் தன்மை உடையன. ஆகவே இவ்வுலகம் நிலையற்றது என்னும் தத்துவ இயல்பை அறிவதே தத்துவ ரூபம் ஆகும். இந்த நிலையாமையைச் சொல்லும் அறிவில் நிகழும் இந்த செயல்பாடே தசகாரியத்தில் இரண்டாவதாக வைத்து எண்ணப்படுகிறது. இதனை திருமூலனார்.

அறிவொன்றிலாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை அறியாது இருந்தேன்
அறிகின்றாய் நீ என்று அருள் செய்தார் நந்தி
அறிகின்ற நான் என்று அறிந்து கொண்டேனே

திருமந்திரம். 2181

என்ற பாடலில் ஐயேழும் ஒன்றும் என்பது (5X7)+1 = 36 முப்பத்தாறு தத்துவங்களை குறித்தது. இவை சடம் என்பதனை நான் அறியாமல் இருந்தேன் என்பதனை தசகாரியத்தின் இரண்டாவதாக வைத்து எண்ணப் படும் தத்துவ ரூபத்தினை விளக்குகிறார்.

**தத்துவ சுத்தி**

உயிருக்கு மயக்கம் செய்வன எவை என்றால் ஆணவ மலப்பற்று தான் என்பதனை மலப்பற்று நீங்கிய சித்தாந்திகள் தெளிவாக சொல்லி விடுவார்கள். ஆணவ மலம் இருக்கும் வரையில் மாயா காரியங்கள் உயிர்க்கு மயக்கத்தை செய்யும் என்பதனை அறிந்து நீங்கினால் ஆன்மா தூய்மை பெற்று வீடு பேறு அடையும்.

ஆணவமலம் கன்ம மலம் மாயா மலம் என்பதின் இயல்பு தான் என்ன? என்று தெரிந்து கொண்டால் நாம் விலக்க வேண்டிய இந்த ஆணவத்தினை விட்டு சுத்தி பெறலாம். ஒழிக்கத் தக்க இந்த ஆணவ மலம் எட்டு குணங்களை கொண்டது. அவையாவன.

1. விகற்பம் - பிறரிடமிருந்து தன்னை வேறுபடுத்தி நிற்றல்
2. கற்பம் - தன்னிடத்தில் இல்லாத தன்மைகளை கற்பனை செய்து கொள்ளுதல்

3. குரோதம் - உட்பகை கொள்ளுதல்
4. மோகம் - எதிலும் அவா உறுதல்
5. கொலை - பிற உயிர்களை வதைத்தல்
6. அஞர் - எப்போதும் ஏதாவது ஒன்றுக்கு கவலைப்பட்டுக் கொண்டு இருத்தல்
7. மதம் - மனத்தாலும் வாக்காலும் செயலாலும் செருக்குற்று நிற்றல்
8. நகை - பிறரையும் அவர்களது உடைமைகளையும் இகழ்ந்து தன்னை மெச்சுதல்

இந்த எட்டு குணங்களே ஆணவம் என சாத்திர நூல்களுள் ஒன்றான இருபா இருபது விளம்புகிறது. மாயா மலம் கீழ்காணும் ஏழு குணங் களைக் கொண்டது.

1. அஞ்ஞானம் - நிலையான பொருள் எது, நிலையற்ற பொருள் எது என்பது பற்றிய அறிவு இல்லாமை
2. பொய் - உண்மை அற்றவற்றைக் கூறுதல்
3. அயர்வு - அறிந்த ஒன்றை மறந்து மயங்கி வருந்துதல்
4. மோகம் - இழிவான பொருட்களில் விருப்பம் கொள்ளுதல்
5. பைசாசூனியம் - வளமாய் இருந்தும் கருமியாய் இருத்தல்
6. மாற்சரியம் - பிறரிடத்துப் பொறாமை கொள்ளுதல்
7. பயம் - அஞ்ச வேண்டாதவற்றிற்க்கு அஞ்சுதல்

ஆக கன்ம மலத்திற்கு ஆறு குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

1. இருத்தல் - எந்த இடத்திலாவது சோம்பி இருத்தல்
2. கிடத்தல் - நோய் வாய் பட்டு கிடத்தல்
3. இருவினை இயற்றல் - நல்வினை தீவினைகளைச் செய்தல்
4. விடுத்தல் - உலக பற்றை விடுத்தல்
5. பரநிந்தை - பிறரை இகழ்ந்து பேசுதல்
6. மேவல் - இழிவானவற்றை விரும்பி செய்தல்

இந்த மும்மல நீக்கம் பற்றி திருமந்திரத்தில் பல இடங்களில் உரைக்கப் பெற்று இருப்பினும் இந்த பாடலினை மட்டும் சிந்தனைக்கு எடுத்துக் கொள்ளலாம் என கருதுகிறோம்.

**தானே சிவம் ஆன தன்மை தலைப்பட**
**ஆன மலமும் அப்பாச பேதமும்**
**ஆன குணமும் பரான்மா உபாதியும்**
**பானுவின் முன் மதி போல் படராவே** திருமந்திரம். 2314

என்ற இந்தப்பாடலில் ஆன்மாவில் தத்துவ சுத்தி ஏற்படுகையில் சிவ தன்மை வெளிப்படும் அந்நிலையில் சூரிய ஒளியின் முன்னர் சந்திர ஒளி வெளிப்படாது என்னும் உவமையினை கொண்டு விளக்கி அருளி உள்ளார். இதே எடுத்துக்காட்டினை உண்மை விளக்கம் என்ற சாத்திர நூலில் வரும்

ஆதவன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் - நாதாந்தத்து
அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து இன்பக்
கண்ணில் அழுந்தியிடும் காண் · உண்மை விளக்கம் பாடல். 47

உடன் வைத்து சிந்திக்கத்தக்கது.

**ஆன்ம ரூபம்**

தொடக்கமில் காலந்தொட்டே உயிர் ஆணவத்தை பற்றியது உயிருக்கு குற்றம் என தெரிந்து உயிர் அறிவித்தால் அறியும் ஒரு அறிவுடைய பொருள் இது சடமாகிய ஆணவத்தோடு கூடி நிற்பது ஞான சாதனைக்கு தடை. எனவே சடமாகிய ஆணவத்தை விலக்கி உயிர் தான் ஒரு அறிவுடைய பொருள் என்பதனை உணர வேண்டும். அந்த உணர்வு அறிவில் நிகழுமாயின் அதுவே ஆன்ம ரூபம் ஆகும். உயிர் அறிவுடைய பொருள் என உணர வேண்டும் என்பதனை மூலனார்,

அறிவு வடிவு என்று அறியாத என்னை
அறிவு வடிவு என்று அருள் செய்தான் நந்தி
அறிவு வடிவு என்று அருளால் அறிந்தே
அறிவு வடிவு என்று அறிந்திருந்தேனே திருமந்திரம். 2357

என குறிப்பிடுகிறார்.

**ஆன்ம தரிசனம்**

பெத்த நிலையில் மலத்தோடு கூடிய உயிரை சகல நிலையில் உயிரின் அறிவை விளக்குமாறு இறைவன் செய்வதற்கு காரணம் ஆணவ மலப்பற்றை விட்டு சிவத்தைப் பற்றி நிற்கவேண்டும் என்பதற்காகவே என தெளிய வேண்டும். இவ் உண்மையைத் தெளிவாக தெரிந்து கொள்வதே ஆன்ம தரிசனம் ஆகும்.

சார்ந்த அதன் வண்ணம் கொண்ட உயிரின் இயல்பு மலப்பற்றினை விட்டு சிவத்தினை பற்ற வேண்டும் என திருமூலநாயானார்,

கோ உணர்த்தும் சத்தியாலே குறிவைத்துத்
தே உணர்த்தும் கருமம் செதி செய்யாவே
பா அனைத்தும் படைத்து அர்ச்சனை பாரிப்ப
ஓ அனைத்து உண்டு ஒழியாத ஒருவனே பாடல். 2389

இந்த பாடலில் "கோ" என்பது சிவத்தையும் "தே" என்பது தெய்வத்தையும் "பா" என்பது பண்ணோடு கூடிய திருமுறை பாடல்களையும். "ஓ" என்பது

பிரணவத்தையும் குறித்து வந்தது. அவ்வகையில் இறை பற்றினை பற்ற ஏதுவாய் இருப்பது திருமுறை பாடல்களே என்பதனை உள்ளடக்கிய இந்த பாடல் கருத்தில் கொள்ளத் தக்கது.

**ஆன்ம சுத்தி**

ஆணவ மலமும் அதன் சார்பும் நீங்கப் பெற்றால் ஆன்மா தன் செயல் அற்று நிற்கும். உயிரின் தன்மையே சார்ந்து நிற்பது தானே. அப்படி தன் நிலையற்று நிற்கும் அவ்வாண்மா இறைச்சார்பில் அழுந்தி நிற்கும். இங்ஙனம் இசைச்சார்பில் நிற்பதுவே ஆன்ம சுத்தி ஆகும்.

**பட்டன மாதவம் ஆறும் பராரம்**
**விட்டனர் தம்மை 'விகிர்தா' என்பர்**
**எள் தனை ஆயினும் ஈசன் திறத்திறம்**
**ஒட்டுவன் பேசுவன் ஒன்று அறியேனே** திருமந்திரம். 989

என்ற இந்த பாடல் மெய் சிலிர்க்க வைக்கின்றது. ஆன்ம சுத்தி ஏற்பட்டு சிவாய நம என உணர்ந்தவர் எல்லாம் (எள் அளவு செயல்களும்) சிவன் செயல் என்று இருப்பர் தற்போதத்தை விட்டு ஞானம் பெற்று இருப்பது பெருந்தவம். அதுவே ஞான சாதகரின் அறிவில் நிகழும் செயல்பாடு என அறிவுறுத்துகிறது.

**சிவரூபம்**

தானே தோன்றி வெளிப்படும் இறைவனின் எண் குண இயல்பை புரிந்து கொள்வது சிவரூபம் ஆகும். அளத்தற்கரிய இறைவனின் பெருமையினை சொல்லும் திருமந்திரப்பாடல்

**ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற**
**பேரறிவாளன் பெருமை குறித்திடின்**
**மேருவும் மூஉலகு ஆளியிலங்கெழுந்த**
**தாரணி நால்வகைச் சைவமுமாமே** திருமந்திரம். 149

பேரறிவாளனான இறைவனின் பெருமையை சொல்லவும் இயலுமோ என இயம்புகிறது இந்தப்பாடல்.

**சிவ தரிசனம்**

இறை இயல்பினை உணர்ந்த ஆன்மா வளர்ந்து வருகையில் பக்குவமடையும். அந்நிலையில் இறைவனே குருவடிவில் எழுந்தருளி வந்து அவ்வான்மாவிற்கு உபதேசிக்கும் முறையில் உபதேசிப்பான். அந்நிலையில் அவ்வான்மா காண்பன எல்லாம் சிவமாய் காணும். அந்நற்காட்சியே சிவ தரிசனமாகும்.

**குரு என்பவனே வேதாகமம் கூறும்**
**பர இன்பனாகிச் சிவயோகம் பாவித்து**

ஒரு சிந்தை இன்றி உயர் பாசம் நீக்கி
வரு நல்குரவன்பால் வைக்கலும் ஆமே திருமந்திரம். 2057

என்ற திருமந்திரத்தில் உயிருக்கு பாசத்தை ஓட்டி சிவயோகத்தை காட்டி சிவத்திடம் சேர்பர் என்று குருவின் அருள் செயலை விளக்கி காட்டுகிறது. அசற்குருவின் இயல்பினையும் குறிப்பிடும் மூலனார் ஞான சாதனைக்கு தயாராகி வரும் ஆன்மாவிற்கு சிவமே குருவாய் வருவார் என குறிப்பிடுகிறார்.

சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரத்தில் விளக்கும் அப்படிப் பட்ட குருவானவர் திருவடிபட்ட உலகத்தவர் யாவரும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் நீங்கி சிவகதி பெறுவர் என்று இந்த திருமந்திரப் பாடலில்

பரிசன தேவதி பரிசித்தது எல்லாம்
வரிசை தரும் பொன் வகையாகுமா போல்
குரு பரிசித்த குவலயமெல்லாம்
திரிமலந்தீர்ந்து சிவகதியாமே திருமந்திரம். 2054

என ஞானத்தை பிழிந்து தருகிறார். சீவர்களிடம் அருள் கொண்டு சிவபெருமானே குருவாக வந்து மலக்குற்றத்தை அகற்றி அருளுவார் என்பதாக

சுத்த சிவன் குருவாய் வந்து, தூய்மை செய்து
அத்தனை நல்கு அருள் காணா அதி மூடர்
பொத்தகு கண்ணால் நமர் என்பர் புண்ணியர்
அத்தன் இவன் என்று அடிபணிவாரே திருமந்திரம். 1578

என்ற திருமந்திரப் பாடலில் குருவை ஞானியர் 'இவன் சிவனே' என வணங்குவர் என குறிப்பிட்டு, குருவால் அஞ்ஞானம் நீங்கும் சிவகுருவை வணங்கியவர் பிறவி எடுக்க மாட்டார் என குருவாய் வரும் சிவத்தின் பெருமையினை பேசுகிறார்.

வள்ளுவப் பெருந்தகையாரும் சிவாகம நுண் பொருளை அனுபவம் உடைய தேசிகர் வாக்கால் கேட்டு சிந்தித்து தெளிந்து சிவ பரம்பொருள் உண்மையினை உணரவேண்டும் என

கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவார்
மற்று ஈண்டு வாரா நெறி திருக்குறள். 356

அங்ஙனம் உணர்ந்தவர்கள் பிறவி துன்பப்படாத பேரின்ப நிலையினை அடைவர் என்பதனை சொல்கிறது இக்குறள்.

**சிவயோகம்**

தான் காணும் காட்சியெல்லாம் சிவமாய் தோன்றுவதனாலேயே அவ்வான்மா உள்ளும் புறமும் சிவத்தோடு கூடி நிற்கும். சிவத்தோடு கூடி நிற்கும் இவ்வியல்பே சிவயோகமாகும்.

பற்று நீங்கிய உயிர் பற்றற்றான் பற்றினை பற்றி நிற்கும் என உரைக்கும் இந்த திருமந்திர பாடல் கருத்தில் வைத்து சிந்திக்க தக்கது.

பசுப்பல போடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசம் மூன்று உண்டு
பசுத்தன்மை நீக்கி அப்பாசம் அறுத்தால்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே திருமந்திரம் 2406

**சிவபோகம்**

காண்பன வெல்லாம் சிவமாய் தோன்றுவதால் அவ்வான்மா இடையறாது சிவத்தையே நினைந்து வாழும். உடலோடு வாழும் அப்பொழுதே சிவபோகம் நிகழும். உடல் நீங்கிய பின் அந்த சிவபோகம் அவ்வுயிர்க்கு நிலைக்கும். இதுவே சிவபோகமாகும்.

நிறைவாக வைத்து எண்ணப்படும் ஆன்ம சாதனம் பெற விரும்பும் அறிவில் நிகழும் இந்த பத்தாவது செயல்பாட்டினை மூல நாயனார்.

மன்னி நின்றாரிடை வந்து அருள் மாயத்து
முன்னி நின்றானை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின் வந்தானோர் புகழ் திருமேனியைப்
பின்னி நின்றேன் ''நீ பெரியை'' என்றானே திருமந்திரம். 2360

சிவ சிந்தனையில் இடைவிடாமல் நிற்பரிடம் வந்து சுத்த மாயா காரியமான நாத தத்துவத்தில் வெளிப்படும் சிவனை நினைந்தபோது நிகர் அற்ற புகழுடைய பொன்னார் மேனியனை கூடி நின்றேன் என்கிற போதே சிவபோகம் கிட்டியது என்பதனை மெய்சிலிர்க்க உணரலாம்.

சித்தாந்த சைவம் பயில விரும்பும் ஆன்மாக்கள் முதலில் ''உண்மை விளக்கம்'' என்னும் நூலையும் இறுதியில் ''உண்மை நெறி விளக்கம்'' என்னும் நூலினையும் கற்க வேண்டும் என பெரியவர்கள் கூறுவார்கள். சைவ சித்தாந்தர் யார் என்பதனை திருமந்திரம் வழி சிந்திக்கையில்

கற்பன கற்று கலைமன்னும் மெய்யோகம்
முற்பத ஞானம் முறை முறை நண்ணியே
சொற்பதம் மேவி, துரிசு அற்று மேலான
தற்பரம் கண்டுளோர் ''சைவ சித்தாந்தரே'' திருமந்திரம். 1421

என்ற பாடல் கற்க வேண்டியவற்றை கற்று, சிவயோகத்தை பயின்று பிரணவ பதத்தை புலப்படுத்தும் சாந்தீயாதீத கலையை பொருந்தி மலத்தை விட்டு மேலான சிவத்துடன் வாழ்பவர் சித்தாந்தர் என விளக்கி அருளிய படி சித்தாந்த சைவத்தின் உண்மை நெறியினை திருமந்திரம் வழி சிந்திக்க உதவிய திருவருளின் பெருங்கருணையினை எண்ணி மகிழ்கிறோம்.

# 85. திருமந்திரத்தில் புராணச் செய்திகள்

திருமதி இ. விமலாபுஸ்பராணி, சென்னை.

தொன்றுதொட்டு இன்று வரையில் மக்கள் மத்தியில் நிலைத்திருப்பதும், பழைய வரலாறுகள் கலந்தும் வருபவை புராணமாகும். புராணம் பற்றிய வரையறையை "வாழ்வியல் கலைக்களஞ்சியம்" பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

**புராணம் - வாழ்வியல் கலைக்களஞ்சியம்**

புராணம் என்பதற்கு பழைய வரலாறு என்பது பொருளாகும். அது தொண்மைக்காலம் தொட்டு இக்காலம் வரை தொடர்ந்து வழங்கி வரு கின்றது. வேதங்கள், உபநிடதங்கள். இதிகாசங்கள், காப்பியங்கள் உட்பட அனைத்துவகை இலக்கியங்களுள்ளும் புராணங்கள் இடம் பெற்றுள்ளன.

புராணங்கள் பதினெட்டாகும். இவற்றை வேதவியாசர் இயற்றினார் என்பர். (தொகுதி 4, ப. 891)

**திருமந்திரத்தில் புராணங்கள்**

திருமூலர் மக்களுக்குப் பல்வேறு உண்மைகளை உணர்த்துவதற் காகப் புராணக் கதைகளை ஆங்காங்கு பயன்படுத்தியுள்ளார். புராணங்கள் குறிப்பிடும் தெய்வங்கள் முனிவர்கள், பிற மாந்தர்கள், அவர்களின் செயல்முறைகள், அவற்றால் ஏற்பட்ட விளைவுகள் ஆகியன தொன்று தொட்டு வழங்கி வருவனவாதலால் மக்களுக்குக் கருத்துகள் பலவற்றை தெளிவித்தல் எளிது என்பதைத் திருமூலர் உணர்ந்திருந்த காரணத்தால் திருமந்திரத்தில் புராணக் கதைகளை இடம் பெறச் செய்துள்ளார்.

இது தவிர, உலகத்தோற்றம், இறைவனின் பண்புகள், தெய்வ அருள், தேவர்களின் செயல்கள், சாபம், வீடுபேறு, அசுரர்களின் தன்மைகள், இறைவழிபாடு ஆகியவற்றை. மக்களுக்கு விளக்கிச் சொல்வதற்காகவும் திருமூலர் புராணக் கதைகளைத் தம் நூலில் பயன்படுத்தியுள்ளார்.

1. மன்மதனைச் சிவபெருமான் அழித்த வரலாறு
2. பிரமன் தலைக்கொய்த வரலாறு
3. பிரமனுக்கு வாளும் திருமாலுக்குச் சக்கரமும் தந்த வரலாறு
4. சக்தி சிவபெருமானை வழிபட்ட வரலாறு
5. அடிமுடி தேடல் வரலாறு

6. கூற்றுவனை உதைத்த வரலாறு
7. அந்தகாசுரன் அழிந்த வரலாறு
8. சலந்தாசரன் அழிந்த வரலாறு
9. திரிபுர சங்காரம் வரலாறு
10. இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுத்த வரலாறு
11. கயமுகாசுரன் அழிந்த வரலாறு
12. தக்கன் வேள்வி பற்றிய வரலாறு
13. சண்டீசர் வரலாறு
14. வடகோடு உயரத் தென்கோடு தாழ்ந்த வரலாறு
15. முருகனின் தோற்றம் பற்றிய வரலாறு
16. முயலகன் அழிந்த வரலாறு
17. திருப்பாற்கடல் கடைந்த வரலாறு

ஆகியன திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ள புராண வரலாறுகளாகும். அவற்றுள் ஒரு சிலவற்றைக் காண்போம்.

**மன்மதனைச் சிவபெருமான் அழித்த வரலாறு**

மன்மதனைச் சிவபெருமான் அழித்த வரலாற்றைத் திருமூலர் கூறுகையில்

திருந்திய காமன் செயலழித் தங்கண் (பா.எ. 346 மூன்றாம் வரி)

என்கிறார். மன்மதன் செயல் அழிப்பதற்கு முக்கியக் காரணம் விந்து செயம் பெறுதலாகும். இதனை இப்பாடலில் (346) இறுதி வரியில்,

''அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே''

என்று திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.

இல்லறத்தில் இருந்து கொண்டு மனம் இறை இன்பத்தை விரும்பிச் சகஸ்ரதளத்தில் பதிவுற்று சிற்றின்பத்தில் ஈடுபட்டால் சிவனருளால் ஞானக் கண் கிடைக்கும். 'கொறுக்கை அறுத்தது' என்ற புராணக் கருத்துப்படி, உலகமக்கள் திருக்கொறுக்கை என்ற கோயிலில் சிவபெருமான் மன்மதனை அழித்ததையே வெளிப்படையான பொருள் எனக் கருதுவர்.

**பிரமனுக்கு வாளும் திருமாலுக்குச் சக்கரமும் தந்த வரலாறு**

இப்புராணம் பற்றிய செய்திக் குறித்து திருமூலர் கூறுகையில்

''ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே'' (பா.எ. 349)

என்கிறார்.

''திருமால் பிரமனுடன் உருத்திரனைச் சுற்றிவர இறைவன் சுவாதிட்டானத்தில் இருந்து கொண்டு பிறப்புத் தொழிலைப் பிரமன் செய்யவில்லை. இதனைக் கண்டு ஒளியினைப் பிரமனுக்குக் கொடுத்தான்

சிவபெருமான். அதுவே ஒளிவீசும் வச்சிராயுதம் (வாள்) எனப்புராணம் கூறுகிறது.

மனிப் .பூரகத்தை இடமாகக் கொண்ட திருமால், பேரின்பத்தை விரும்பினான். அதற்கு உருத்திரன் சகங்கரதளத்தில் இருக்குமாறு இட மளித்தான். இதனையே புராணம், திருமால் சுதர்சன சக்கரத்தை உருத்திரனிடமிருந்து பெற்றதாகக் கூறுகிறது. திருமால் சக்கரத்தைத் தாங்க முடியாமல் சிவபெருமானை வேண்டியதால், சிவன் தன் உடலில் பாதியைத் திருமாலுக்கு பகிர்ந்து தந்தான் என்பதும் திருமந்திரத்தில் இடம் பெற்றுள்ள புராணச் செய்தியாகும். (பாடல் எண். 367-369)

**சக்தி சிவபெருமானை வழிபட்ட வரலாறு**

ஐம்பூதத் தலங்களில் ஒன்று காஞ்சிபுரமாகும். அது மண்ணின் கூறாகும். சிவபெருமானை இத்தலத்து மண்ணில் வடித்துத் தவஞ்செய்து சக்தி சிவனோடு சேர்ந்தாள் இதனை

**அடிசேர் வன் என்னஎம் ஆதியை நோக்கி**
**முடிசேர் மலைமுக னார்பக ளாகித்**
**திடமார் தவஞ்செய்து தேவர் அறியப்**
**படியார அர்ச்சித்துப் பத்திசெய் த்தானே** (பா.எ. 347)

எனத் திருமந்திரம் பாடல் கூறுகின்றது.

மனவலிமையுடன் சக்தி உறுதியாக நின்று தவஞ்செய்து தேவர் அறிய இறைவனைச் சென்று சேர்ந்தாள் என்பது புராணம் தரும் செய்தியாகும்.

**சலந்தாசுரன் அழிந்த வரலாறு**

இப்புராண வரலாறு நடைபெற்ற இடம் 'திருவிற்குடி என்னும் ஊராகும். இவ்வரலாறு குறித்து திருமந்திரம் கூறுகையில்

**எங்கும் கலந்துமென் உள்ளத்து எழுகின்ற**
**அங்க முதல்வன் அருமறை யோதிபாற்**
**பொங்குஞ் சலந்தான் பேள்செய்ய நீர்மையின்**
**அங்கு விரற்குறித் தாழிசெய் தானே** (பா.எ. 342)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

உலகில் காணப்பெறும் சீவனின் உள்ளத்தில் எழுபவன் சிவபெருமான், அவன் வேதங்களை ஓதக் கூடியவன், கலந்தரன் தேவர்களுடன் போர் செய்தபோது அவனது வலிமைக்குத் தேவர்களால் ஈடுகொடுக்க முடிய வில்லை. அவர்களின் சார்பில் சிவபெருமான் சலந்தரனை எதிர்த்துப் போர் புரிந்தான். அப்போது தரையில் கால்கட்டை விரலால் ஒரு சக்கரத்தை எழுதி, 'நீ சுத்த வீரனாக இருந்தால் இந்தச் சக்கரத்தை எடுபார்க்கலாம்' என்றான்.

அதைப் பெயர்க்க அவனால் முடியவில்லை. சிவபெருமான் அதனை எளிதாக எடுத்து அசுரன் மீது எறிந்தான். அப்போதே அவன் அழிந்தான். தேவர்கள் மலர்மாரி பொழிந்து போற்றினர். (கார்திகேயன், சிவபுராணம், ப.எ. 357)

**திரிபுர சங்காரம் வரலாறு**

சிவபெருமான் முப்புரத்தை அழித்தான் என்பது மூடர்களின் கருத்து என்கிறார் திருமூலர். ஆணவம், கன்மம், மாயை ஆகியன முப்புரமாகும். இதனை இறைவனின் அருளால் கிடைக்கும் ஞானத்தால் சுட்டெரிப்பவர் பேரின்பம் பெறுவர். இதனை உணராமல் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய வற்றாலான கோட்டைகளை வித்யூன்மாலி, தாருகாட்சன், கமலாட்சன் ஆகிய மூவரும் வானில் இயக்கியதாக நம்பிய மக்களின் அறியாமையைக் கண்டு திருமூலர் மனமிரங்குகிறார். தனக்கு அழிவையும் மக்களுக்கு இன்னலையும் ஏற்படுத்தும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங் களையும் மூலாக் கினியை எழுப்பிச் சுட்டெரிப்பதைத் திருமூலர் பின்வரும் பாடல்வழி விளக்கியுள்ளார்.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார்அறி வாரே (பா.எ. 343)

என்பன பாடல் வரிகளாகும்.

**இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுத்த வரலாறு**

இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுத்த வரலாறு குறித்து திருமூலர் கூறுகையில்

தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தம ராவென்று அழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே (பாடல் எண் 350)

என்கிறார்.

தன்னம்பிக்கை மற்றும் அகந்தையின் காரணமாக இராவணன் தன் இருபது தோள்களால் கயிலை மலையை எடுத்து இறைவனைச் சோதிக்க முயன்றான் எனப் புராணம் கூறுகிறது. சிவன் தன் கால்பெரு விரலால் அழுத்தியதும் வலி தாங்காமல் இராவணன் தன் தவறை உணர்ந்தான். இறைவனிடம் வேண்டி நின்றதால் இறைவன் அவனுக்கு அருள் புரிந்தான்.

**தக்கன் வேள்வி புற்றிய வரலாறு**

'தக்கன் வேள்வி' என்னும் தலைப்பில் திருமந்திரம் தக்கன் அழிவை விளக்குகிறது..(பா.எ. 353)

''தந்தைபிரான் வெகுண்டான் தக்கன் வேள்வியை' (பா.எ. 353) எனவரும் தொடரில் 'தந்தைபிரான்' என்பதற்கு நான்முகனுக்கும் முற்பட்டவன் சிவபெருமான் என்பது பொருளாகும். சிவபெருமான் சினம் கொண்ட பொழுதே தேவர்கள் அஞ்சி ஓடினர்; திருமால் மன்னிப்புக் கேட்டார்; தக்கன் வேள்வியை அழிக்க வீரபத்திரன் தோன்றினான். ஊழி முதல்வனாம் சிவபெருமானைப் பழித்ததால் தக்கன் வீரப்பத்திரனால் அழிக்கப்பட்டான். இதனையடுத்து மற்றோரிடத்தில்,

அரிபிர மன்தக்கன் அருக்கன் உடனே
வருமதி வாலை வன்னிநல் இந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்
அரனருள் இன்றி அழிந்தநல் லோரே (பா.எ. 358)

என்கிறார்.

திருமால், பிரமன், தக்கன், சூரியன், சந்திரன், நாமகள், அக்கினி, இந்திரன் ஆகியோர் முறையே தங்களுடைய அகந்தைக்குத் தலை, முகம், மூக்கு, கை, தோள் ஆகியவற்றை இழந்து உண்மை உணர்ந்து வீடுபேறு அடையும் தகுதி பெற்றனர்.

**சண்டேசர் வரலாறு**

திருத்தொண்டர் புராணத்தில் சண்டேச நாயனார் வரலாறு இடம் பெற்றுள்ளது. (பெரியபுராணம் பா.எ. 23) சிவப்பணி ஆற்றி வந்த சண்டேசனுக்கு அவனுடைய தந்தை இடையூறாக விளங்கினான். அதனால் தன் தந்தையின் காலையே மழுப்படையால் வெட்டினான் என்பது புராணச் செய்தியாகும். இதனைத் திருமந்திரம் கூறுகையில்,

உறுவ தறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறிவகை ஆனைந்தும் ஆட்டத்தின் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே
(பாடல் எண் 347) திருமந்திரம்

எனக் குறிப்பிடுகின்றது.

இங்குத் தண்டி என்பது சண்டேசனைக் குறிக்கும், தாதை - தண்டியன் தந்தை; சண்டேசனை-சீவன்; தந்தை-மாயை; மழு-அக்கினி; இருகால்கள் - இடைகாலை பிங்கலையாகிய இருநாடிகள்; ஆன்ஐந்து - ஞானந்திரியங்கள்.

சண்டேசன் வெண்மை ஒளியாகிய மணலைச் சேர்த்தும், பிறவி அறும் வகையில் ஞானேந்திரியமாகிய ஐந்து பசுக்களையும் புறப்புலன்களில் மேயாமல் தடுக்க, மாயையால் உண்டான உடம்பாகிய தந்தை பொறாமையால் பகை கொண்டு கெடுக்க வெகுண்டு அக்கினிக் கலையாகிய வாளால் இடையிங்கலையாகிய இருகால்களையும் தொழிற்படாமல் செய்து சிவத் தொண்டன் ஆயினான் என்பது திருமந்திரப் பாடலின் கருத்தாகும்.

**முயலகன் அழிந்த வரலாறு**

முயலகன் அழிந்த வரலாற்றைத் திருமந்திரம்

**'ஆகாச மாமுட லங்கன் முயலகன்'** (பா.எ. 2774)

எனக் குறிப்பிடுகின்றது.

இறைவன் நடனமிடும் இடங்களுள் ஒன்று ஆகாயமாகும். அதில் கருமையே முயலகன் என்னும் உருவகமாகும். இவனே சீவர்களிடம் இருளைப் பெருக்கும் மும்மலம். திசை எட்டுக் கைகளாக அமைந்து அவனது மேலாடையாக விளங்க, இறைவனின் முக்கண்கள், இடகலை, பிங்கலை, தீயாக இருக்க அறிவுப் பெருவெளியாகத் திகழும், ஞானவெளியில் இருளாகிய முயலகன் அழியுமாறு சிவபெருமான் ஆடுவான் என்பது திருமூலர் உணர்த்திய கருத்தாகும்.

**திருப்பாற்கடல் கடைந்த வரலாறு**

திருப்பாற் கடைதலாகிய புராண வரலாற்றைத் திருமந்திரம்

**மிக்கார் அமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்**
**தக்கார் உடைத்த தவநெறி யேசென்று**
**புக்கார் அருளும் பொன்னுரை ஞானத்தை**
**நக்கார் கழல்வழி நாடுமின் நீரே** (பா.எ. 2815)

எனக் குறிப்பிடுகின்றது.

தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட அமுதத்தை உண்ண, சிவபெருமான் நஞ்சினை உண்டான். குரு உரைத்த தவவழி நின்று அவனை அடைந்தால் இவன் ஞானத்தைத் தருவான் என்னே சிவன் உபதேசித்த வழிநின்று அவனை அடைதல் வேண்டும் என்பது திருமந்திரப் பாடலின் கருத்தாகும்.

இதே வரலாறு சிவபுராணத்திலும் காணப்படுகிறது. (கார்திகேயன், சிவபுராணம், பா. எ. 208)

இக்கட்டுரையில் புராணம் பற்றி வாழ்வியல் கலைக்களஞ்சியம் தந்துள்ள விளக்கம், திருமந்திரத்தில் புராணங்கள், மன்மதனைச் சிவபெருமான் அழித்த வரலாறு, பிரமனுக்கு வாளும், திருமாலுக்குச் சக்கரமும் தந்த வரலாறு, சக்தி சிவபெருமானை வழிபட்ட வரலாறு, சலந்தாசுரன் அழிந்த வரலாறு, திரிபுர சங்காரம் வரலாறு இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுத்த வரலாறு, தக்கன் வேள்வியைப் பற்றிய வரலாறு, சண்டீசர் வரலாறு முயலகன் அழிந்த வரலாறு, திருப்பாற் கடல் கடைந்த வரலாறு, ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

# 86. திருவிசைப்பாவில் இசைக்குறிப்புகள்

திரு. எஸ். வெங்கடேசன், சிதம்பரம்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் தோத்திரம், சாத்திரம், பிரபந்தம், புராணம், என நான்கு வகையாக அமைந்துள்ளன. ஒன்று முதல் ஒன்பது வரையான திருமுறைகள் தோத்திரம், பத்தாவது சாத்திரம், பதினொன்றாவது பிரபந்தம், பனிரெண்டாவது புராணம். ஒன்பதாம் திருமுறை தோத்திரம் பகுதியின் இறுதிப் பகுதியாக இருப்பதால் இத்திருமுறையின் இறுதிப் பதிகமாக திருப்பல்லாண்டை அமைத்து நம்பியாண்டார் நம்பிகள், தொகுத்திருக்கிறார். ஒன்பதாம் திருமுறை யானது திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்று பெயர் பெறும். இது திருவிசைப்பா மாலை என்றும் அழைக்கப்படும் இத்திருமுறையில் 29 பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. அதனில் 301 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. சில பாடல்கள் மறைந்து போயின. தேவாரப் பதிகங்களைப் போல் திருவிசைப் பதிகங்கட்கும் பண்கள் வகுக்கப்பட்டிருப்பதாலும் இறைவனின் மெய்ப்புகழாகிய இசைதனை எடுத்துரைப்பதாலும் கற்போர் மனதை கசிவித்து இறையன்போடு இசைவிப்பதாலும் இப்பதிகங்கள் திருவிசைப்பா என பெயர் பெற்றன. திருவிசைப்பா = திரு + இசைப்பா. திரு தெய்வத்தன்மை வாய்ந்த இசையுடன் பாடும் பாடல் என்பது பொருள்.

ஒன்பதாம் திருமுறையானது திருமாளிகைத் தேவர், சேர்ந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், குவணாட்டடிகள், திருவாலி அமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மரால் அருளிச் செய்யப் பெற்றதாகும்.

"செம்பொன்மணி அம்பலத்து நிருத்த னார்க்குத்
திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்போர் சொல்லில்
பம்பு புகழ் செறிதிருமா றிகைமெய்த் தேவர்
பரிவுடைய சேர்ந்தனார் கருவூர்த் தேவர்
நம்பிகா டவர்கோன்நற் கண்டா தித்தர்
நன்குயர்வே ணாட்டகெள் திருவாலி யமுதரைத்
அம்புவியோர் புகழ்புருபோத் தமர்சேதி ராயர்
ஆக இவர் ஒன்பதின்மர் தாமுறைகண் மடைவே"

என்ற புகழ் பாடலில் அறியலாம்.

திருவிசைப்பாவில் ஒரு சில பாடல்களில் உள்ள இசைக் குறிப்புகளைப் பற்றி இப்பகுதியில் காணலாம்.

''தேர்மலி விழாவிற் குழலொலி தெருவில்
கூத்தொலி, ஏத்தொலி ஒத்தின்
பேரொலி பரந்து கடலொலி மலியப்
பொலிதரு பெரும்பற்றப் புலியூர்ச்
சீர் நில(வு) இலயத் திருடைத் தியல்பில்
திகழ்ந்ததின் நம்பலக் கூத்தா!
வளர்மலி முலையாள் வருடிய திரண்மா
மணிக்குளங் (கு) அடைந்ததென மதிலே''

இந்தப்பாடலில் குழலொலி, கூத்தொலி போன்றவைப் பற்றி இடைக் குறிப்புகள் இப்பாடலில் அடங்கியுள்ளது.

கருவூர்த் தேவர் அருளியது கோயில் பதிகம்.

''துந்துபி குடில்யாழ் மொந்தைவான் இயம்பத்
தொடர்ந்(து) இரு டியர்கணம் துதிப்ப
நந்திகை முழவம் முகிலென முழங்க
நடம்புரி பரமர்தங் கோயில்
அந்திறன் மறைநான்(கு) ஆரணம் பொதிந்த
அரும்பெறல் மறைப் பொருள் மறையோர்
சிந்தையில் விரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம்பலமே''

இந்தப் பாடலில் துந்தபி, குழல், யாழ், மொந்தை முழவு போன்றவைப் பற்றிய இசைக்குறிப்புகள் அடங்கியுள்ளது.

**திருக்கீழ் கோட்டூர் மணியம்பலம்**

''தன்னக மழலை சிலம்பொடு சதங்கை
தமருகம் திருவடி திருநீறு
இன்னகை மழலை கங்கைகோங்(கு) இதழி
இளம்பிறை குழைவளர் இளமான்
கின்னரம் முழவம் மழலை யாழ் வீணை
கெழுகவும் பலைசெய்கீழ்க் கோட்டூர்
மன்னவன் மணியூர் பலத்துள்நின் றாடும்
மைந்தன் என் மனத்துள்வைத் தள்னே''

இந்தப் பாடலில் சிலம்பு, சதங்கை, வீணை, கின்னரம், முழவு, யாழ் போன்றவைப் பற்றிய இசைக்குறிப்புகள் இப்பாடலில் அடங்கி யுள்ளது.

**தஞ்சை இராசராசேச்சரம்**

"வாழியம் போதத் (து) அருகுபாய் விடையம்
வரிசையின் விளக்களின் அடுத்த
சூழலம் பளிங்கின் வாசலர் ஆதிச்
சுடர்விடு மண்டலம் பொலியக்
காழகில் தாமும் மாளிகை மகளிர்
கங்குல்வாய் அங்குலி மகளிர்
யாழொலி சிலம்பும் இந்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே"

இந்தப்பாடலில் சூழல், யாழ், சிலம்பு ,போன்றவைப்பற்றிய இறுக் குறிப்புகள் அடங்கியுள்ளது.

**திருவிடைமருதூர்**

"இந்திர லோக முழுவதும் பணிகேட்(டு)
இணையடி தொழுதெழத் தலம்போய்
ஐந்தலை நாகம் மேகலை அரையா
அகந்தொறும் பலிதிரி அடிகள்
தந்திரி வீணை கீதமும் பாடச்
சாதிகின் னரங்கலந்(து) ஒலிப்ப
மந்திர கீதந் தீங்குழல் எங்கும்
மருவிடம் திருவிடை மருதே"

இந்தப்பாடலில் தந்திரிவீணை, தீங்குழல் கின்னரம் போன்றவைகளைப் பற்றிய இசைக் குறிப்புகள் அடங்கியுள்ளது.

**கோயில்**

"அன்ன நடையார் அமுத
மொழியார் அவர்கள் பயில் தில்லைத்
தென்னன் தமிழும் இசையும்
கலந்த சிற்றம் பலந்தன்னுள்
பொன்னும் மணியும் நிரந்த
தலத்து புலித்தோதம் பயற்கிட்டு
மின்னின் இடையாள் உமையாள்
காண விகிர்தன் ஆடுமே
அளவில் பெருமை அமரர்
போன்ற அழகன் ஆகுமே"

இந்தப்பாடலில் தமிழும், இசையும் என்ற தலைப்பில் இசைக் குறிப்புகள் அடங்கியுள்ளது.

**கோயில்**

''நொடிய சமணும் அறைசாக்
கியரும் நிரம்பாப் பல்கோடிச்
செடியுந் தவத்தோர் பல்கோடிச்
செடியுந் தவத்தோர் அடையாந்
தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
அடிகள் அவரை ஆரூர்
நம்பி யவர்கள் இசைப் பாடக்
கொடியும் விடையும் உடைய
கோலக் குழகன் ஆடுமே''

இந்தப் பாடலில் நம்பியவர்கள் இசைப்பாடக் கொடியும் என்ற இசைக் குறிப்பு அடங்கியுள்ளது.

**கோயில்**

''பொசியாதோ கீழ்க்கொம்பு
நிறைகுளமேன் றதுபோல்த்
திசை நோக்கில் பேழ்கணித்துச்
சிவபெருமான் ஓ எனினும்
இசையானால் எண்திறத்தும்
எனையுடையான் வரையாடாலா
நசையானே திருத்தில்லை
நடம்பயிலும் நம்பானே!''

இந்தப்பாடலில் இசையானால், எண் திறத்தும், என்னுடையள், உரையாளர் என்ற இசைக்குறிப்பு அடங்கியுள்ளது.

# 87. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திரு. ந. வேங்கடேசன், புதுவை.

திருமூலதேவ நாயனார் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர், ஆவடு தண்டுறையில் போதியின் கீழ் தங்கிச் சிவன் நாமங்கள் ஓதியிருந்தார். இவர், பெற்ற இன்பத்தை இவ்வையகம் பெறவேண்டுமென்று ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரமாகிய பெருமான் நினைந்து திருவாய் மலர்ந்தருளியதே திருமந்திரம்.

**அன்பும் சிவமும்**

அன்பாவது என்ன? அன்பாவது தொடர்புடையாரிடத்து - காதலுடையாரிடத்து உண்டாகும் என உலகியல் நிலையில் வைத்துக் கூறினார் பரிமேலழகர். தொடர்புடையார் என்றால், தாய், தந்தை, தம்பி, தங்கை, தமக்கை, அண்ணன்...போன்றோர். அவர்களிடத்து ஏற்படும் உள்ளக் கசிவாகும்.

திருமூலர் சொல்லும் அன்பு அந்த அன்பு அல்ல. எங்கோ கிடந்த தம்மை இங்கே ஏற்றி வைத்து, நாயைச் சிவிகைமேல் ஏற்றி வைத்தது போல்; ஆணவ மலத்தில் கிடந்த நம்மைக் கைதூக்கிவிட்டு, தனு கரண புவன போகங்களைக் கொடுத்து, அறிவு விளக்கத்தையும் கொடுத்து உலாவ விட்ட பரம்பொருள் செய்த உதவியை எண்ணும்போது, என்றும் மாறாத அன்பு பிறக்கின்றது. அன்பு - எழுத்தால் ஒன்று தான்.

ஆனால், உறவு முறையில் செலுத்தும் அன்பு ஏற்றத்தாழ்வு உடையதாய் இருக்கும். இறைவனிடத்தில் செலுத்துகின்ற அன்பே அன்பு.

திருவள்ளுவர், கூறுவார் - 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்; ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்' என்பார்.

ஆண்டவனிடத்தில் அன்பு செலுத்தும்போது, அந்த அன்பை எப்படி அறிவது? இதை நாயன்மார்கள் சொல்லுவார்கள் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்று மூன்று நிலைகளிலே சொல்லுவார்கள்.

ஆகவே, உலகியல் அன்பு - கொண்டும் கொடுத்தும் குடிவழியாக உரிமையுடையாரிடத்துச் செலுத்தும் அன்பைக் காட்டிலும்; காதலாதலும், கசிதலும், கண்ணீர் மல்குதலுமாகிய இவையே உண்மையான இறை யன்பை வெளிப்படுத்தும் வாயில்களாகும்.

சைவசித்தாந்த சாத்திரங்களை அருளிச் செய்தவர்கள் அன்பு என்பது உயிர்ப்பொருளின் குணமென்றும், சிவம் என்பது உயிர்ப் பொருள்கள் பலவற்றையும் தான் ஆட்ப்படுத்தி ஆளக்கூடிய இறைமை என்றும் சொல்லுவார்கள்.

**அன்பும் சிவமும்**

அன்பு என்பது உயிர்க்குணம் எனவும், சிவம் என்பது இறைமை எனவும் வேறுபடுத்தி உரைப்பர், அறிவில்லாதார். அன்பும் சிவமும் வேறானவை அல்ல.

அன்புதான் சிவமாவது. ஆதலால், அன்பே சிவமாயிருப்பதை அனுபவத்தால் அறியப்பெற்றவர்கள், தாங்களும் அன்பே சிவமாக இருந்து மகிழ்வர். மணியும் அதன் ஒளியும் போன்றவை அன்பும் சிவமும் என்பர். அன்பெனப் பெறுவ்து இறைவன் அருளே.

அன்பும் சிவமும் ஒன்றே. அப்படி அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே. அப்படி இருக்கும் அனுபூதிநிலையினை முடிவாகக் காட்டியது திருமந்திரம்.

இறைமையுள் இருப்பதே அருள். அருளே இறையுருவாகிறது. இச்செய்தியை ஞானநூல் துணை கொண்டும், அனுபவத்தாலும் அறியலாம்.

உயிருளத்திருக்கும் இந்த இறைமையன்பே பக்குவப்பட்டு இன்பமாய்க் கனிகின்றது. இதனையே ''சிவமாய் அமர்ந்திருந்தாரே'' என்று கூறுவர்.

''அன்பினால் இன்பம் ஆர்வார்'' என்பது தடுத்தாட் கொண்ட புராணம். ''விருப்பெனும் வித்தை வித்தின் சிவகதி விளையும்'' என்பார் திருநாவுக்கரசர்

''அருள் உரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்தன்'' என்பது சித்தியார் வாக்கு.

"இன்பமே என்னுடை அன்பே" என்பதும் இதையே தெரிவிக்கின்றது.

இறைவன், தத்துவங்களைக் கடந்து நிற்பவன் ஆயினும், உயிரைக் கடந்து நிற்பவன் அல்லன்.

ஆதலால், தன்னோடு நிற்பதாகிய பரம்பொருளை அன்பினாலன்றி உயிர் அறிய இயலாது.

அறியும் பட்சத்திலும் அன்புதான் பயன்பெறுவது. ஆதலால், 'என்னுடை அன்பே' என்பர்.

யாரும் அறிந்தபின் என்பது-அவ்வாறு அறிதலின் அருமை தெரிவிப்பதாம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமான தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

என்பதே - திருமூலரின் சிந்தனையாகும்.

**நான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்**

உலகம் எல்லாவற்றிலும் நுண்ணிய அசைவு வடிவமாக விளங்கும் அறிவையே திருமேனியாகக் கொண்டு, அவ் அறிவெனும் ஒளி மயமான ஆற்றலாகிய பராசக்தியுடன் இணைந்து விளங்கும் பரமசிவம் ஒன்றே பரம்பொருள்.

வேதாந்தம் கூறும் தத்பதமும் சித்தாந்தம் கூறும் சிவசக்தியும் ஒன்றுதான். இதற்கு மாறுபாடான பொருள் எதுவும் இல்லை. விரிவான வேதத்தின் முடிவும், சித்தாந்த யோகியர் கண்ட அனுபவமும் இதுவே. மந்திர சாத்திரங்களின் முடிவும் இதுதான்.

"ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமசிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே" - திருமந்திரம் 2962

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே" - திருமந்திரம் 2104

பொருளை அடைவதற்கு யோகிகள் யோகத்தால் பிராணசெயம் பெறும் வழிகளைக் கண்டனர். பிராண செயத்துடன் கூடிய தத்துவ ஞானம் உடலால் இம்மையில் பெற வேண்டிய உறுதிப் பொருளாகிய அறம் பொருள் இன்பங்களை அடையவும், மறுமையில் அடைய வேண்டிய வீட்டின்பத்தை உடலுள்ள போதே பெறவும் வகை செய்கிறது. அந்த இரு நிலைகளையும் முறைப்படி அநுசரிக்க வேண்டிய ஒழுக்கங்களையும் யோக முறைகள் சிலவற்றையும், ஆகமக் கருத்துக்களையும், தத்துவ ஞானத்தையும் விளக்கி இறுதியில் பஞ்சாக்கர வித்தையால் உலக நாயகனை அடைவதை விளக்கித் தெரிவிக்கிறது திருமந்திரம்.

திருமூலரின் சிந்தனை பிரணவ சூட்சுமமாகும். இந்த சூட்சுமத்தை அறிந்தவர் கண்ணிமைக்குமுன் பிரணவ சமாதியை அடைவர்.

இந்த நிலை அழியாத நிலையாதலாலும், ஒருவித சுகத்தை அளிக்கின்றமையாலும் சித்தர்கள் இந்நிலையை நித்தியானந்தம் என்று பெயரிட்டனர்.

'ஓம்' என்னும் பிரணவமே, வடிவமற்ற பரப்பிரம்மத்தின் பெயர். ஆகையால் இது நாதப் பிரம்மம் எனப்பெறும். ஆத்மாவாகிய பாணத்தை அறிந்து பிரமமாகிய இலக்கை நோக்கிச் செலுத்தியவர் தத்பதத்தை அடைவர் என்று உபநிடதங்கள் கூறுகின்றன.

இரு, புருவங்களும் பிரணவமாகிய வில்லாகும். இவைகளின் வழியே செல்லும் உணர்வு சீவனான அம்பாகும். அந்த உணர்வு பிரமத்தைக் குறிக்கோளாகக் கொண்டு சிரசைக் கடந்து துவாதசாந்த வெளியில் சென்ற போது வஞ்சகத் தன்மையுடைய இந்திரியங்களும், காமக் குரோதாதிகளான பகைவர்களும் அழிக்கப்படுவதால் ஆத்மன் பாசத் தொடர்புகளினின்று விடுபட்டு நிலையான சிவத்துவ அறிவைப் பெறுகிறான்.

அவ் அறிவைப் பெற்றவன் இறந்தபிறகு அடையும் முத்தி நிலையை உயிருள்ள போது அடைந்து விடுகிறான். இந்த நிலையை அடையவே இராசயோகம் இயமாதி எட்டு அங்கங்களைக் கொண்டு விளக்கிற்று.

அட்டாங்க யோகத்தில் உள்ள இயமம், நியமம், பிரணவத்தை அறிய கையாள வேண்டிய சாதன ஒழுக்கங்களாகும்.

### திருமூலர் சொல்லும் சிவயோகம்

எப்படி அம்பு வில்லை விட்டுப் புறப்பட்டதும் தன் இலக்கை நோக்கி விரைந்து செல்கிறதோ, அதுபோல் மூலாதாரத்திலிருந்து சிரசை நோக்கிப் பாய்ந்ததும், சிரசைக் கடந்தும் செல்லும் உணர்வாகப் பொருந்தும்.

உணர்வு உடலைக் கடந்த போது உடலால் அடையும் இச்சைகள் அகன்று விடுகின்றன.

அதனால் உடலின் தோற்றமாகிய தோற்றம் என்ற பிறப்பையும், நிலை என்ற திதியையும், அழிவு என்ற இழப்பையும் கடந்து ஆத்மன் தூயோனாக உடலுள்ள போதே விளங்குகின்றான்.

துரியபதம் என்பது ஒளி, ஒலியாக உள்ளது. பிரணவத்தை அ, உ, ம, என்று மூன்று எழுத்துக்களால் குறிக்கின்றனர். இப்பிரணவத்தைக் கடந்த போது அர்த்த மாத்திரை என்ற பெயரால் விளங்கும் விந்து நாதங்கள் அமையும்.

சைவர்கள் இதைச் சாதாக்கிய தத்துவம் என்று கூறுவர். சிவத்துக்கு இது தடத்த நிலையாகும். இந்நிலை சீவர்களுக்கு உயர்ந்த பத நிலையாகும்.

இந்த நிலையை உடலுடன் பெற்றவர்கள் தங்கள் தகுதிக்கேற்ப விஞ்ஞான கலராகவோ, பிரளயா கலராகவோ, மந்திர மகேசுவரராகவோ, மந்திரேசுவரர்களாகவோ நிலை பெற்று மாயையை வென்றவராவர்.

உடலோடு வாழும்போது இவர்கள் நின்மல சாக்கிரத்தில் வாழ்கின்றனர். இந்த யோகத்தை விளக்கவே தாம் தென்னாடு வந்ததாகத் திருமூலர் கூறுகிறார்.

''நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே'' - திருமந்திரம் - 85

## நடுவு நிலைமை

'நடுவு நின்றார்க்கன்றி ஞானமும் இல்லை' என்பார் திருவள்ளுவர் 12-ஆம் அதிகாரமாக நடுவு நிலைமையை வைத்துள்ளார். ''பகை, நொதுமல், நண்பென்னும் மூன்று இடத்தும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை'' என்பார் பரிமேலழகர். இது இக்காலத்து முயற் கொம்பே ஏன் எனில்? ஒவ்வொருவரும் பிறரிடம் நடுவு நிலைமை இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.

ஆனால் அதைத் தாங்களும் கையாள வேண்டிய அறம் என்பதை மறந்து ஒதுக்கிவிடுகின்றனர். உள்ளதை உள்ளவாறு கூறுவதற்குச் செம்மை யான மனமும், உறுதிப்பாடும், அஞ்சாமையும், ஆசையின்மையும் வேண்டும்.

தனக்குக் கேடுவருவதாயினும், ஆக்கம் வருவதாயினும் நடுவு நிலைமையினின்று ஒருவன் தவறக் கூடாது. உலகில், அனைத்துத் துறையிலும் நடுவு நிலைமை பிறழ்ந்தே நடக்கின்றனர்.

திருப்பெருந்துறையில் அடியார்களோடு தம்மையும் கூட்டிச் செல்லாது, இறைவன் விட்டுச் சென்றதை நினைந்து நினைந்து உருகியழுத மாணிக்கவாசகர், அது, இறைவனின் நடுவு நிலையிகந்த செயல் என்று வருந்திப் பாடிய பாடல் கல்லையும் கரையச் செய்யும்.

## அடைக்கலப்பந்து

''செழும் கமலம் திரள் அன நின்
சேவடி சேர்ந்து அமைந்த
புழுத்த மனத்து அடியர் உடன்
போயினர் யான் பாவியேன்
புழுக்கண் உடைப் புன் குரம்பைப்
பொல்லாக் கல்லி ஞானம் இலா
அழுக்கு மனத்து அடியேன்
உடையாய் உன் அடைக்கலமே''

ஏழைப் பங்காளனாகிய சிவபெருமான் அம்பலத்தில் நின்று அருள் நடனமாடியது - அனைத்துயிர்களும் பேரின்பம் பெற வேண்டிய நடுவு நிலையாய்ப் பொதுவாக நின்று ஆடுகின்றான் என்பர்.

ஆனால், திருமூலர் கூறும் நடுவு நிலைமை வீட்டு நெறியை நோக்கியதாய்த் துறவறத்தில் நின்று வீடுபேற்றை விரும்புகின்றவர்க்குரிய உறுதிப்பொருள்கள் பலவற்றுள்ளும் யோக நெறியைப் பற்றியதாம்.

நம் உடம்பினிடத்து உள்ள நாடிகள் 21,000 அவற்றுள் சிறந்தவை பத்து, இதை தசநாடி என்பர். அவற்றுள் சிறந்தவை மூன்று. அவை :- இடைநாடி, பிங்கலைநாடி, சுழுமுனைநாடி என்பன அவற்றுள்ளும் சிறந்தது சுழுதமுனை நாடியே.

பேரின்பத்தைப் பெறுவதற்குரிய நாடி இதுவே. குண்டலி சக்தியின் விளக்கத்தையும், மணி, கடல், சங்கு முதலாகிய தச நாதங்களையும், சிவானந்தத் தேனையும் அனுபவித்தற்கு இந்த நாடியின் பயிற்சி இன்றியமையாதது.

இடைநாடி, பிங்கலை நாடிகள் உலக இன்பங்களாகிய சிற்றின்பத் திற்கே கருவியாகும். இடைநாடி சந்திரகலை, பிங்கலை நாடி சூரியகலை, சுழுமுனை நாடி செந்தீக்கலை.

இடைபிங்கலையின் வழியே இயல்பாய் இயங்கும் வளியை நிறுத்திச் சுழுமுனையாகிய நடு நாடியூடே செலுத்தி-நின்றபின்-பேரானந்தம் பெறலாம்.

அணிமாதி அட்டசித்திகளும் தாமே வந்து சேரும். இந்த நிலையே ஈண்டு நடுவு நிலைமை எனப்பெற்றது. நடு நாடியின் வழியே நிற்கும் நிலை நடுவு நிலைமையாம்.

''எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
செல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே''

திருமூல தேவர் இந்நெறியில் நின்ற சிவயோகியாவார்.

அணிமாதிவரும் சித்தி பெற்றுடையார். 'சிவயோகம் தலைநின்று பூவல்ரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார்' எனவரும் பெரிய புராணக் குறிப்பாலும் நன்கு உணரலாம்.

'நடுவுநின் றார்வழி நானும் நின்றேனே' (320)

'நடுவுநின் றாரொடு நானும் நின்றேனே' (322)

என்பனவற்றாலும் அறியலாம்.

இம்மந்திரங்களுக்குத் திருவைந்தெழுத்தின் வகையாயுள்ள இருதலை மாணிக்கம், சூக்கும பஞ்சாக்கரங்களின் முறைபற்றிப் பொருள் கோடலும் ஒன்று.

'இருதலை மாணிக்கம் என்பது சிவயவசி
சூக்கும் பஞ்சாக்கரம் என்பது சிவயசிவ'

இருபாலும் சிவமும் நடுவே அருளும் அமரத்தான் (உயிர்) அவற்றின் நடுவணிருத்தல் இருதலை மாணிக்கமாகும்.

ஒருபால் சிவமும் மற்றொருபால் அருளும் இப்படி அமர, தான் அவற்றின் நடுவே இருத்தல் சூக்கும பஞ்சாக்கரம் ஆகும். இதனைத் திருவாசகப் பாடலாலும் அறியலாம்.

**கோயில் மூத்த திருப்பதிகம்**

"உடையாள், உன்-தன் நடுவு இருக்கும்
உடையாள் நடுவுள், நீ இருத்தி,
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப் புரியாய்-பொன் னம்பலத்துஎம்
முடியா முதலே! என் கருத்து
முடியும் வண்ணம், முன் நின்றே!

துறவிகள் இடகலை, பிங்கலை வழியாகச் செல்லும் மூச்சை நடு நாயகமாய் இருக்கும் சுழுமுனை வழியாகப் போகும்படி செய்து, அத்துடன் பஞ்சாட்சரத்தைச் சேர்த்துச் செபித்து, நிலையான இன்பத்தை அடைவதைத் தான் திருமூலர் நடுவு நிலைமை என்கிறார்.

மேலும், சிவ சத்தியிலிருந்து தான் அருட்சத்தி தோன்றும் என்று கூறுகிறார். பஞ்சாட்சரத்தை வைத்து தியானிக்க வேண்டும் என்கிறார். பஞ்சாட்சரத்தில் சிகரத்துக்கும் வகரத்துக்கும் நடுவில் யகரம் உள்ளது என்கிறார்.

யகரத்தைச் சிகரத்துக்கும் வக்ரத்துக்கும் நடுவில் வைத்து - அதாவது, அதி சூக்கும பஞ்சாட்சரத்தை சிவயவசி என்பதை - இடகலை பிங்கலை வழியாய் இயல்பாகச் செல்லும் வாயுவை அவ்வாறு போகாமல் தடுத்து நடுநாயகமாயுள்ள சூழுமுனைநாடி வழியாகச் செல்லும்படிச் செய்து, அதாவது குண்டலினி சத்தியை எழுப்பி, அத்துடன் அதி சூக்குமத் திருவைந்தெழுத்தை மனதில்கொண்டு தியானம் செய்து, நிலையான இன்பம் பெற வேண்டும் என்பது திருமூலரின் சிந்தனையாகும்.

இதுவே, திருமூலர் கூறும் சிறப்புடைய நடுவுநிலைமை

**நிறைவுரை**

திருமந்திரத்தில் பல கருத்துக்கள் கூறியிருப்பினும் இக்கட்டுரையில் அன்பு, இன்பம், நடுநிலைமை ஆகிய மூன்று கருத்துக்களைத் தொகுத்துள்ளேன்.

# 88. திருமந்திரம் தரும் முப்பொருள் உண்மை

திரு. த. வேலாயுதம், புதுவை.

**பதி-பசு-பாசம்**

ஒருவன் என்னும் ஒருவனாக இறைவன் தலைவனாக இருந்து அருள் செய்து வருகிறார். உயிர்கள் கடவுளின் திருவடியை சிந்தித்துப் பரிபக்குவம் அடைந்து மும்மல நீக்கம் பெற்று முடிவில் இறைவனின் அடிசேர்முத்தி அருளப்பெற்று சிவபோகத்தில் திளைத்திருப்பது இயல் பானது ஆனால் உயிர்கள் தனது சிற்றறிவின் காரணமாக தனது உண்மை நிலையை உணரமாட்டாமல் அறியாமையின் வயப்பட்டு பாசத்தைச் சார்ந்து அதன் கூறுகளான ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் கட்டுகளில் கட்டுண்டு போக்கும், வரவும் உடையவனாக உள்ளன.

**திருமந்திரம்**

உயிரானது மும்மல நீக்கம் பெறுவதற்கான உபாயங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு மார்க்கங்களைப் போதிக்கிறது.

யோகங்களின் அடிப்படையான அங்கங்களான இமயம், நியமம், ஆசனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி போன்ற நிலைகளைப் படிப்படியாக விளக்கி எண் வகை யோகங்களை பயில்வதின் பயனையும் விளக்குகிறது.

தனு, கரண, புவன, யோகங்களின் நிலையாமை பற்றி தெளிவாக்கி, அவைகள் மீதுள்ள ஆசையை நீக்கி இறைவன் மீது உயிர்கள் சார்ந்து இருக்கும் வண்ணம் செய்கிறது. இதனால் 'பரிபக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்கு இறைவனே ஞான குருவாக வந்து மும்மல நீக்கம் செய்து அருள் புரிந்து முத்தியைத் தருவார் எனப் பல வகையாலும் தமது பாடல்களில் பாடியுள்ளார், திருமூலர்,

**ஆகமங்களின் சாரம்**

திருமந்திரம் காரணாகமம், காமிகம், வீரம், சித்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் ஒன்பது ஆகமங்களின் சாரமாக உள்ளது. ஒவ்வொரு ஆகமும் ஒவ்வொரு தந்திரமாக வகுக்கப்பட்டுள்ளது.

**யோக நூல்**

இந்நூல் இறைவனின் புகழ்பாடும் தோத்திரமாகவும், அறிவின் தெளிவான-சாத்திரமாகவும் யோக சாதனையாளர்களுக்கு யோக சாத்திர நூலாகவும், தீவிர பக்தி மார்க்கத்திற்கான மந்திர, யந்திர, தந்திர யோகங்களையும் தன்னுள் அடக்கியதாக உள்ளது. தேவையானவர்கள், தேவையானதை அவரவர் அனுபவத்திற்கு ஏற்ப எடுத்துக் கொள்ளலாம்.

**பதியின் இயல்புகள்**

**ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான் குணர்ந்தான் ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தானிருந்தான் உணர்ந்தெட்டே - திருமந்திரம் 001**

இறைவன் ஒன்று என்பதையும், அருளை (சக்தி) இரண்டாக கொண்டவன் என்பதையும் - இறைவனுக்கு இரண்டு அறக்கருணை, மறக்கருணை உண்டு என்பதையும், மூன்றினுள் - ஒடுக்க காலத்தும் அனுபவகாலத்தும், செயற்படும் காலத்தும் உள்ளவன். நான்கு உணர்ந்தான் - அறம், பொருள். இன்பம், வீடு என்னும் நான்கினையும் உணர்ந்து உயிர்கட்கு உணர்த்துபவன். ஐந்துவென்றனன்-புலன்கள் ஐந்தையும் வென்றவன், ஆறு விரிந்தனன் - மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என விரிந்தவன். ஏழு உம்பர் சென்றனன் பிரம்மலோகம், விஷ்ணு உலகம், உருத்திரலோகம், மகேசுவரலோகம், சதாசிவலோகம், சக்திலோகம், சிவலோகம் என்னும் ஏழு உலகங்களுக்கும் மேல் சென்று நின்றவன். அவனை மனம் உணர வேண்டும். என இறைவனின் எல்லையில்லா சக்தியைச் சுட்டிகாட்டுகிறார்.

திருமூலர் தான் உணர்ந்து அனுபவித்த இன்பத்தை யாவரும் உணர்ந்து அனுபவிக்க வேண்டும் என்று கூறுகிறார்.

**நான் பெற்ற இன்பம் பெருகஇவ் வையகம்**
**வான் பற்றிநின்ற மறைப்பொருள் சொல்லிடின்**
**ஊன் பற்றிநின்ற உணர்வுறு மந்திரம்**
**தான் பற்றப் பற்றத் தலைப்படும் தானே - திருமந்திரம் 085**

இறைவன் - சத்துப்பொருள். பாசம் - அசத்துப்பொருள். உயிர் சதசத்துப் பொருள் சத்துப் பொருளாகிய சிவம் பாசத்திலும் பசுவிலும் கலந்திருக்கும் கலவாமல் தாமரை இலையில் தண்ணீர் போல் நித்திய பொருளாய் தன்னிலை மாறாமல் நிலையாய் இருப்பது பரமசிவம்.

**சத்தும் அசத்தும் சதசத்தும் தான் கண்டு**
**சித்தும் அசித்தும் சேர்வுறாமே நீத்த**

சுத்தம் அசுத்தமும் தோய்வுறாமே நின்ற
நித்தம்பரம் சுத்த சைவர்க்கு நேயமே - திருமந்திரம் 1420

## இறைவனே தலைவன்

உயிர்கள் அனைத்தும் ஒரே தொகுப்பைச் சேர்ந்தவை. அவைகளில் பேதமில்லை உயிர் சித்துப் பொருளானாலும் ஐந்தொழில் ஆற்றும் ஆற்றல் அதற்கு இல்லை. அறிவிக்க அறிவது ஆன்மாவாகும். இறைவன் சித்துப் பொருளானாலும் முற்றுணர்வுடையவன் - முடிவில்லாத ஆற்றல் உடையவன் வரம்பு இல்லாத இன்பம் உடையவன். ஐந்தொழில் புரிபவன் என்பதால் இறைவனே தலைவனாவான்.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லை நுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந் துய்மினே - திருமந்திரம் 2104

## பசு - பாச உண்மைகள்

முப்பொருள்களும் அனாதியாக உள்ளவை. பசு - பாசம் இரண்டும் தானாக இறைவனை அணுகாது இறைவன் உயிர்களிடம் உள்ள கருணை யினால் மும்மல நீக்கத்தைப் பெற விரும்பும் பரிபக்குவமுடைய ஆன்மாக்களுக்கு அவரவர் பரிபக்குவத்திற்கு ஏற்பமும் மல நீக்கம் செய்து முத்தியை அளிக்கிறார்.

பதி பசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப்போல் பசு - பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதிஅணுகில் பசு, பாசம் நில்லாவே. - திருமந்திரம் 115

அறிவு அறிவு என்ற அறிவும் அனாதி
அறிவுக்கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறும் தானே. - திருமந்திரம் 2405

ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடல் ஏறென நிற்கும்
ஆய பலிபீடம் ஆகும் நற் பாசமாம்
ஆய அரநிலை ஆய்ந்து கொள்வார்கட்கே. - திருமந்திரம் 2411

## திருமந்திரத்தில் உயிர் வடிவம்

உயிர் அனாதியே உடல் இன்றி இருந்தது இறைவன் உயிருக்கு சூக்கும உடலைக் கொடுத்து அருளினான். பின்னர் இறைவன் உயிரை அதன் விருப்பத்திற்கு ஏற்ப சுதந்திரமாக செயலாற்ற அனுமதித்து உயிரின்

விருப்பத்தில் குறுக்கிடாமல் கண்காணித்து வருகிறான். உடலைப் பெற்ற உயிர் உடல் தந்து உதவிய இறைவனை சார்ந்திருக்கவில்லை.

உயிர் தன் விருப்பதிற்கு ஏற்ப பாசத்தை சார்ந்து இருந்தது. அதன் பயனாக பல்வேறு யோனிபேதமுடைய உடல்களை இருப்பிடமாகக் கொண்டு' பல்வேறு பிறவிகளை எடுத்து வருகிறது.

திருமூலர் உயிர்வடிவம் எவ்வளவு சிறியது என்பதை தனது ஞானத்தால் அறிந்து கணக்கிட்டு பாடியுள்ளது மிகவும் வியப்புக்குரியதாகும்.

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிர் ஒன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிரம் ஆனால்
ஆவியின் கூறு நூறாயிரத் தொன்றே திருமந்திரம் 2011

**பதி இருக்குமிடம் - உயிர்வளருமிடம்**

உடம்பினுள் உயிர் இருக்கிறது. உடம்பிலுள்ள ஐம்பொறிகளும் கர்மேந்திரியங்களாகவும், ஞானேந்திரியங்களாகவும் செயல்பட்டு உயிர்க்கு நல்ல அனுபவம் ஏற்பட உடம்பு நோயின்றி இருக்க வேண்டும் உயிரின் ஆன்ம வளர்ச்சிக்கு உடல் நலம் தேவைப்படுகிறது.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ் ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே - திருமந்திரம் 724

இறைவன் உயிருடன் கலந்து இருக்கிறான் உயிர் உடலில் இருந்தே சாதனைகளை செய்து முத்திநிலை அடைய வேண்டும். உயிர் தனித்து இயங்க முடியாது. தன்னுள்ளே இருக்கும் இறைவனை கண்டு உணர்ந்து உய்ய வேண்டும். தன்னுள்ளே கோயில் கொண்டுள்ள இறைவனை காண உடலை பாதுகாத்து உறுபொருளை காண வேண்டும்.

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புள்ளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே - திருமந்திரம் 725

**அன்பே சிவம்**

உயிரானது எளிய நல்ல அறங்களை செய்து வந்தால் அன்பே சிவமாய் அமர்ந்து இருப்பதை அறிந்து கொள்ளலாம். அறிந்து கொண்ட பின் சிவமாம் தன்மை பெற்று சிவபோகத்தில் திளைத்து அமர்ந்திருக்கலாம்.

யாவர்க்கு மாம் இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம் பிறர்க் கின்னுரை தானே. - திருமந்திரம் 252

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிமாவ(து) ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவ(து) ஆகும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. - திருமந்திரம் 270

**துன்பமும் - இன்பமும்**

இறைவன் உயிர்கள் நற்கதிபெறுவதற்காக அறநெறிகள் பலவற்றை ஏற்படுத்தினான் நெறியில் வழுவியவர்களுக்கு நெருஞ்சில் முள் ஆகிய துன்பம் தொடரும் - பட்டு திருந்தியவர்களுக்கும் எப்போதும் நல்ல நெறியில் வழுவாமல் வாழ்பவர்களுக்கும் துன்பம் தொடராமல் பாதுகாத்து இன்பமே எந்நாளும் வழங்கி அருளுகின்றான்.

நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவில் நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவாதியங்க வல்லார்க்கு
நெறியில் நெருஞ்சிமுட் பாயகிலாவே - திருமந்திரம் 1617

**கண்காணிப்பாளர்**

இறைவன் நம்மை எப்போதும் எல்லா இடத்தும் கண்காணித்து வருவதால் நல்லதே செய்ய வேண்டும். அல்லது செய்யாமல் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

கண்காணி இல்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி இல்லா இடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார் கள வொழிந்தாரே - திருமந்திரம் 2067

**ஞான குரு தரிசனம்**

ஞான குரு தரிசனத்தால் ஆன்மாக்களுக்கு அறிவுத் தெளிவு ஏற்படும். கருட மந்திரத்தை சித்தி செய்து வைத்து இருப்பவர்கள் அதை நினைத்த மாத்திரத்திலேயே விஷம் தீருமாப்போல ஞான குருவின் திருவுருவைச் சிந்தித்த போதே மும்மல கட்டு அகன்று முத்தி கூடும். சற்குரு கிடைப்பது அவரவர் தவத்தின் பயனாகும்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்

தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. - திருமந்திரம் 139

கருடன் உருவம் கருதும் அளவில்
பரு விஷம் தீர்ந்து பயம் கெடுமாபோல்
குருவின் உருவம் குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவன் அவனாமே - திருமந்திரம் 2659

**ஞானிகள் செயல்**

ஞானிகள் சிவனருளாளே முன்னை வினையையும் பின்னை வினையையும் நீக்கிக் கொள்வார்கள். உயிர்களின் மலக்கட்டறுத்து மனம் கசிந்துருக சிவனடி சேர்ந்து சிவபோகத்தில் அசைவற்று இருப்பது சன்மார்க்கமாகும்.

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்து பிசைவார்கள்
சென்னியில் வைத்த சிவன் அருளாலே - திருமந்திரம் 2611

பசு பாசம் நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சம் கசியக் கசிவித்து
ஒசியாத உண்மைச் சொருபோதயத்துற்று
அசைவான தில்லாமையான சன்மார்க்கமே - திருமந்திரம் 1486

**திருவருள் - திருவடி சிறப்பு**

இறைவன் திருவருள் இருந்தால் எல்லாம் நல்லவையாகவே நடைபெறும். செல்வமும், ஞானமும், பெருந்தன்மையும் உண்டாகித் தெய்வ நிலையும் சித்திக்கும்.

பிரான் அருள் உண்டெனில் உண்டு நற்செல்வம்
பிரான் அருள் உண்டெனில் உண்டு நல் ஞானம்
பிரான் அருளில் பெருந்தன்மையும் உண்டு
பிரான் அருளில் பெருந்தெய்வமும் ஆமே - திருமந்திரம் 1645

இறைவன் திருவடியே மலம் அகற்றியது ஞானம் நல்கியது. அவன் திருவடியே மும்மலக்கட்டு இல்லாதது எனவே அத்திருவடியை வாழ்த்தி வணங்குவோம்.

வாழ்கவே வாழ்க என்நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத்தான் பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞானத்தவன் தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே - திருமந்திரம் 3047

''திருச்சிற்றம்பலம்''

# 89. திருமந்திரம் கூறும் அறக் கருத்துக்கள்

முனைவர் வைலட் டெல்பின் ஜெயகுமாரி, திருநெல்வேலி.

மானுடப் பிறவியின் மகத்துவம் பாடிய மனிதர் திருமூலர். இவர் அருளாளராக, அடியாராக மட்டுமின்றி, தவயோக சித்தராகவும், உடல்பிணி அகற்றும் மருத்துவராகவும், ஞானயோகியாகவும் திகழ்ந்திருக்கிறார். அவரது மந்திரங்கள் அனைத்தும் மனத்துயர் போக்கும் மாமருந்துகள். திருமூலரின் திருமந்திரம் சைவத் திருமுறைகள் பத்தாம் திருமுறையாக வைத்துப் போற்றப்படுகிறது. உலகப் பொது மறையாம் திருக்குறளுடனும், ஒப்பிலாவாசகமாம் திருவாசகத்துடனும் திருமந்திரத்தை ஒப்ப வைத்துப் பேசுகிறார் ஔவை மூதாட்டி. திருமூலர் இறை சித்தாந்தம் மட்டும் கூற வில்லை. வையத்துள் வாழ்வாங்கு வாழ வழி வகுக்கும் அறக்கருத்துக் களையும் கூறுகிறார். சித்தர்களுள் ஒருவராகப் போற்றப்படும் திருமூலரின் சிந்தனைகள், அக்காலச் சூழ்நிலையில் புரட்சி பூக்களாகவே மலர்ந்தன. அவரது பாடல்களில் காணப்படும் அறக் கருத்துக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**விழுமியங்கள்**

சமுதாய வாழ்வில் சில நெறி முறைகள் காலங்காலமாய் மக்களால் உறுதியாகப் போற்றப்பட்டு வருகின்றன. அவற்றையே வாழ்வியல் நெறிகளாக, விழுமியங்களாகச் சான்றோர் கருதினர். எவ்வாறு வாழ வேண்டும். எவற்றைச் செய்ய வேண்டும். எவற்றை தவிர்க்க வேண்டும். எவை அறங்களாகப் போற்றி வழங்கப்பட்டன என்பதை, தமிழர் உணர்ந் திருந்தனர். ஒழுக்கம், உண்மை, ஈகை முதலியவை அறங்களாகப் போற்றப் பட்டன. நிலையாமை உணர்த்தப்பட்டன. பிறன்மனை நயத்தல், கள் உண்ணல் முதலிய தீயவைப் பயக்கும் செயல்கள் தவிர்க்கப்பட வேண்டியனவாக வலியுறுத்தப்பட்டன. சிவஞானம் கூறும் திருமூலர், வாழ்வியல் அறங்களையும் ஆங்காங்கே கூறிச் செல்கிறார்.

**ஒழுக்கம்**

ஒழுக்கம் உயிரினும் மேலாக ஓம்பப்பட்டது. புகழும், பெருமையும், கல்வி அறிவும், மெய்ஞ்ஞான மேன்மையும் உயர்ந்த வாழ்க்கை நெறியும் அறிவும், மனமும் பெற்று, அதன் வழி நடக்கும்போது, இருந்த நிலையில் இருந்து தாழ்ந்து விடக்கூடாது. தேவர்களுக்கெல்லாம் தலைவனாக

இந்திரன் கூட அவ்வாறு வாழ்ந்தால் கோடி ஆண்டுகள் வாழலாம். ஒழுக்கம் உயிரினும் உயர்ந்தது என்பதால் திருமூலர்.

"ஒழுக்கம் இருந்தால் எண்ணிலி காலம்" (பாடல் 305)

வாழலாம் என்கிறார்.

**உண்மை**

உண்மை பேசினால் உயர்வடையலாம் என்கிறார்.

"மெய்யே உரைக்கில் விண்ணோர் தொழச் செய்வன்
மை தாழ்ந்து இலங்கும் மிடறு உடையோனே" (பாடல் 522)

மனிதனும் தெய்வமாகலாம். மண்ணிலே விண்ணைக் காணலாம்.

உண்மை உள்ளவனை விண்ணோடும் தொழும்படிச் செய்வான் இறைவன் என்கிறார்.

**ஈகை அறம்**

இப்பிறவியின் பயனே, பிறர்க்கு ஈவதில் தான் உள்ளது. ஈகை, ஆன்றோரால் அறமாகக் கொள்ளப்பட்டது. "ஈத்துவக்கும் இன்பமே இன்பும்" என்கிறார் வள்ளுவர். வேண்டுவோர்க்கு வேண்டுவதை வழங்குங்கள் என்கிறார் திருமூலர். எல்லோருக்கும் கொடுத்து உதவுங்கள். வேண்டியவர் வேண்டாதவர் என்று வேறுபாடு பார்க்காதீர்கள். விருந்தினரை எதிர்பார்த்து காத்திருந்து உண்ணுங்கள். பழைய உணவைப் பாதுகாக்க நினைக்காதீர்கள். காக்கைகள் தம் இனத்தைக் கத்தி அழைத்துக் கூட்டமாக உண்ணுவதை எண்ணிப் பாருங்கள் என்கிறார்.

ஆக்கும் இடுமின் அவர்இவர் எண்ணன் மின்
பார்த்து இருந்து உண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை உடையீர் விரைந்து ஒல்லை உண்ணன் மின்
காக்கை கரைந்து உண்ணும் காலம் அறிமினே (பாடல் 250)

இருமலும் நோயும், தருமம் செய்யாதவர் தம்மையே வருத்தும் என்பதை

இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்
தருமம் செய்யாதவர் தம்பால தாகும் (பாடல் 263)

என்று கூறுகிறார். ஈவது மட்டும் அறமன்று; இன்சொல் பேசுவதும் அறமே என்கிறார்.

யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே (பாடல் 252)

## நிலையாமை

நில்லா உலகத்தின் நிலைமை கூறி, அறம் செய்ய வலியுறுத்துவது தமிழ்ச் சான்றோர் மரபு. திருமூலரும் இளமை, யாக்கை, செல்வம் இவற்றின் நிலையாமைத் தன்மையைக் கூறி, மனிதர்களை அறநெறியில் நடக்கச் சொல்கிறார்.

### யாக்கை நிலையாமை

ஆவி நீங்கிய உடல் ஊர்முனி பண்டம், உற்றாரோடு ஊராரும் அவ்வுடல் சூழ்ந்து அழுது, பிணமென்று பேரிட்டு, சுடுகாட்டில் சென்று எரியூட்டி, நீரில் மூழ்கி எழுந்தபின் இறந்தவரைப் பற்றி ஒரு சிறிதும் நாடாது நினைப்பொழிந்து இருப்பார்கள் என்பதை,

**ஊர் எலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணம் என்று பேரிட்டு**
**சூரைஅங் காட்டிடை கொண்டுபோய் சுட்டிட்டு**
**நீரினால் மூழ்கி நினைப்பு ஒழிந்தார்களே** (பாடல் 145)

என்கிறார்.

### இளமை நிலையாமை

கிழக்கிலே உதிக்கின்ற சூரியன் மேற்கே போய் மறைகிறது. இளங்கன்று வளர்ச்சி அடைந்து எழுதாகி அதுவும் பிறகு இறந்து போய் விடுகிறது. இது அன்றாட நிகழ்ச்சி தோன்றியது மறையும். பிறந்தது இறக்கும் என்னும் இந்த உண்மைகளைக் கண்ணாரக் கண்டும் மக்கள் விழியில்லாதவர்கள் போல் ஏன் கருத்துக் குருடராய் இருக்கின்றனர் என்று வினவுகிறார்.

**குழக் கன்று முத்து எருதாய் சில நாளில்**
**விழக் கண்டும் தேரார் வியன் உலகோரே** (பாடல் 177)

### செல்வம் நிலையாமை

செல்வத்தின் மீது வைத்துள்ள பற்றினைக் களைந்தால் வருங் காலத்தில் மேல்நிலை எய்தலாம் என்பதை,

**''மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்**
**கூற்றின் வருங்கால் குதிக்கலுமாமே''** (பாடல். 172)

என்று, கூற்றுவன் வருங்காலத்தில் செல்வத்தின் மீது பற்றின்றி இருந்தால் மேல்நிலை எய்தலாம் என்கிறார்.

### பிறன் மனை நயவாமை

பிறன்மனை நயவாமையை பேராண்மை என்கிறார் வள்ளுவர். மனைவி இருக்க மற்றவளை விரும்புவது சுவை மாம்பழம் வீட்டில்

இருக்க, மரமேறி புளியம்பழம் பறிக்க முயல்வது போன்றது என்கிறார் திருமூலர்.

**திருத்தி வளர்த்தது ஒரு தேம்மாங்கனியை**
**அருத்தம் என்று எண்ணி அறையில் புதைத்துப்**
**பொருத்தம் இலாத புளி மாங் கொம்பு ஏறிக்**
**கருத்து அறியாதவர் கால் அற்ற வாறே"**

**கள்ளுண்ணாமை**

உண்டாரை மயங்கச் செய்வதும், மாண்டாறை நினைத்து கலங்கச் செய்வதுமாகிய கள் பருகுதலானது, வாய்மையை அழிக்கும். பெண் இன்பத்தை நாடி அடையத் தூண்டும். கள் அருந்துவோர் நல் ஞானம் தலைப்பட்டார். எனவே கள் உண்பாருக்கு என்று இடையறாது விளங்கும் சிவானந்த தேறல் கிட்டாது என்கிறார்.

**மயங்கும் தியங்கும் கள் வாய்மை அழிக்கும்**
**இயங்கும் மடவார் தம் இன்பமே எய்தி**
**மயங்கும் நயங் கொண்ட ஞானத்து முந்தார்**
**இயங்கும் இடைஅறா ஆனந்தம் எய்துமே** (பாடல் 330)

திருமூலரின் கோட்பாடுகளிற் பல இன்றைய உலகிற்கும் பொருந்துவனவாக உள்ளன. சிவானுபவத்தை நோக்கும் திருமூலரின் சிந்தனையில் உதித்த கருத்து மணிகள் சில இங்கு மாலையாகத் தொடுக்கப் பட்டுள்ளதை சிவகதிக்கு வித்தாக அமைந்த திருமந்திரம் உலகியல் அறநெறிகளையும் வலியுறுத்தத் தவறவில்லை.

# 90. திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்

திருமதி எஸ். ஜெயகுமாரி, நாகர்கோவில்.

திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்று. இதனை பத்தாம் திருமுறையாக வகுத்துள்ளனர். பொதுவாக திருமுறைகள் சிவபிரான் முழு முதன்மையினை, பரத்துவத்தைப் பேசுவனவேயன்றி ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டைக் பேசுவனவல்ல.

(இக்கட்டுரையில் திருமந்திரத்தில் திருமூலம் கூறும் அறக்கருத்துக் களைக் காணலாம்.)

திருவருள் நெறிக்குப் புறம்பாக, நில்லாதவற்றை நிலையின என்று நினைத்து உழல்பவர்களை நன்னெறிப்படுத்தி ஆட்கொள்ளும் சிவபெருமானாகிய, மெய்ப்பொருளை அடையும் கருத்துக்களை, வழி முறைகளை திருமந்திரம் கூறுகிறது.

**அறம்-விளக்கம்**

வாழ்வியல் அடிப்படைப் பண்புகளை அறம் என்று கூறுவர். எவரையும் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் துன்புறுத்தாமை, பிறருக்கு உதவுதல், பகிர்ந்துண்ணல், பிற உயிர்களைத் தன்னுயிர் போல் பாவித்தல், கடவுள் வழிபாடு இவையெல்லாம் சிறந்த அறமாகும்.

**''அறத்தால் வருவதே இன்பம்''**

என்கிறது வள்ளுவம்.

**''அறம் செய விரும்பு''**

என்பது ஔவை வாக்கு.

**''அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்**
**மன்னுயிர்க்கெல்லாம் உண்டி கொடுத்தோர்**
**உயிர் கொடுத்தாரே''**

என்கிறது மணிமேகலை.

**திருமந்திரத்தில் அறம்**

திருமூலரின் திருமந்திரம் அறத்தை சமய உலகில் நின்றே பேசுகிறது. சமுதாயத்தில், அனைவருடனும் அன்புடன் பழகி, பிற உயிரினைப்

பேணிப் பாதுகாத்து இறைவனை வணங்குதல் ஆகியவை ஒன்று கூடும் பொழுது, அவை அறச் செயல்களாகின்றன. அறம் முழுமை பெறுவது இச்செயல்களால்தான். இத்தகைய அறத்தை மேற்கொண்டு வாழ்வதால் அடையும் பயன், பழியில்லாத புகழாகும். வினை கடலைக் கடக்கும் தோணியாகவும் இது விளங்குகிறது.

இதனை,

"திளைக்கும் வினைகடல் தீர்வுறு தோணி" - 115

என்ற பாடல் விளக்குகிறது.

ஒருவரோடு ஒருவர் பிணங்கி வாழ்வது அறமாகாது. இணங்கி வாழ்வதே அறமாகும். அவரவர் சமய நெறியில் அவரவர் நிற்றல் வேண்டும் என்றும் திருமந்திரம் கூறுகின்றது.

அறவாழ்வு என்பது, அகம்புறம் தூய்மை, அருள், ஊண் முதலியன சுருக்கி சிக்கன வாழ்வு, பொறுமை செம்மை, வாய்மை நிலைமை (மானம்) காமமகற்றல், களவகற்றல், கொலையகற்றல் ஆகிய பத்தும் நன்றாற்றி வாழும் தன்மையாகும். இதனை,

"தூய்மை அருளுண் சுருக்கம் பொறை செய்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங்களவு கொலையெனக் காண்பவை
நேமியீரைந்து நியமத்தனாமே" - 538

என்ற திருமந்திரப்பாடல் வலியுறுத்துகிறது.

**அறவோன்**

திருமந்திரம் தலை சிறந்த அறவோனாகச் சிவபெருமானைக் காட்டுகிறது. அறவோன் ஆகிய சிவபெருமான் அருளுகின்ற வழக்கமும் திருவைந்தெழுத்தாம். இதனை,

"ஐந்தின் பெருமையே யறவோன் வழக்கமும்" - 948

என்ற பாடல் கூறுகிறது.

அறத்தை செலுத்துபவனும், மறையின் ஒலிக்குள் ஒலியாய் நிற்பவனும் சிவனேயாகும்.

..........................................................

"அற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பதமும் அளித்தான் எங்கள் நந்தியே" - 153

அனைத்துயிர்க்கும் பற்றுக்கோடாக நின்றருளும் சிவபெருமானைப் பற்றி நிற்கும் மெய்யன்பர் அறநெறியில்லாத பிற நெறியில் செல்லார்.

**கொல்லாமை**

கொல்லாமை பற்றி சொல்லாத நீதி நூல்களே இல்லை. திருமந்திரத்தில், இறைவன் கொல்லாமையை விரும்பி ஏற்கின்ற பூஜை மலராகக் கொள்வதை,

“மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ்சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடும் உச்சியே” - 239

இந்தப்பாடலுள் ஒண்மலர் எனக் கூறப்படுவன, கொல்லாமை, ஐம்பொறியிடங்கள், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு ஆகியவனவாகும்.

கொல்லென்னும், எறி என்றும், குத்து என்றும் கூறி அங்கனமே செய்வித்தும் செய்தும் வரும் கொடியோர்களைக் கூற்றுபவன் தன், ஏவலர்கள் தீவாய் நரகிடை வீழ்த்துவர். இந்த துன்பத்திற்கு மருந்து கிடையாது. துன்புறுவாருக்கு இரங்குவாரும் கிடையாது. ஆகவே அத்துன்பம் பொறுக்கவியலா மிகப்பெரியத் துன்பமாகும். இதனை மனங்கொண்டு பிறர்க்குத் துன்பம் செய்யாது இன்பஞ் செய்தல் நன்று. இதனை

“கொல்லிடு குத்தென்றுகூறிய மாக்களை
வல்லடிக்காரர் வலிக்கயிற்றாற்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே” 240

என்ற பாடல் விளக்குகிறது.

நீதிநூல்களைக் கல்லா அரசன் அறமாகிய மறை நூலினை ஆன்றோருடன் ஆய்ந்தறிந்து உளங்கொண்டு அதன்படி ஒழுகான். அதனால் எக்காரணமுமின்றி நல்லவர்களையும் நினைத்ததை நினைத்தபடி சொல்லச் சொல்லி அல்லலுறுத்துவான். நல்லவராகிய சிவஞானிகளைக் காலன் நெருங்கான் என்று கொல்லாமை பற்றி திருமந்திரம் கூறுகிறது.

**கள்ளுண்ணாமை**

மெய்யறியாமையைத்தரும் கள்ளினை உண்ணும் செம்மையில்லாதார் தமக்கும் உலகுக்கும் பெருந்தீங்கினை உண்டு பண்ணுவர். அத்தகையோரைத் தக்கவாறு தண்டஞ்செய்து நன்னெறிப்படுத்துதல் வேந்தன் கடமையாகும் என்பதை

“மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே” - 103

என்ற பாடல் உணர்த்துகிறது.

சுவைமிக்கத் தேறலாகிய தேனைப்பருகும் வேட்கையுற்றவர் தங்கள் உடலையும், உணர்வையும் ஒருங்கு சுருக்கும் முழுமூடத்தன்மை வாய்ந்த இயற்கையும், செயற்கையுமாகிய மயில் சேர் கள்ளினை உண்பர். அவர்கள் அறமுறையும் அருள்முறையும் அகன்று பாவ நெறியில் செல்வோராவர். இதனை,

''முருநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செருநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே'' - 311

என்பதன் மூலம் அறியலாம்.

**ஈகை**

வேண்டுவார்க்கு ஈவது அறநெறியில் வாழ்வோர் கடனாகும். அவர் இவர் என்று எவ்வகை வேறுபாடும் கூறாமல் தக்க வகையோடு குறிப்பறிந்து ஈகை செய்ய வேண்டும்.

''ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந்துண்மின் பழம் பொருள் போற்றன்மின்'' - 107

என்ற பாடல் ஈகை செய்ய வேண்டிய விதத்தை கூறுகிறது.

யாவர்களாலும் உண்ணும் போது ஒரு கைப்பிடி உவகையுடன் பிறர்க்குக் கொடுத்தல் இனிதின் இயலும். இஃது அறத்தின் கூறாகும், என்பதை

''யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி'' - 109

இப்பாடல் வரி மூலம் அறியலாம்.

அறவழியில் ஈட்டிய பொருளை அறவோர்க்கு மனமுவந்து ஈய வேண்டும். அதுவே வழித்துணையாகும். என்பதை

''பற்றதுவாய் நின்றபற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக்கல்லது'' - 116

என்ற பாடல் வலியுறுத்துகிறது.

**புலால் மறுத்தல்**

புலாலை விரும்பி உண்ணும் மக்கட் பிறப்பினை இழிவாம் கொடு விலங்கினும் இழிவாகப் பேசுவார். அப்புலால் உண்பவர்களுக்கு இம்மையில் பொல்லாப்பு வந்து சேரும். அப்புலையவர்களை எமன் தூதர்கள் பெரும் துன்பம் தரும் கொடிய நரகத்தில் தள்ளுவர். இதனை உணர்த்தும் திருமந்திரப் பாடல் வரிகள்,

''பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்றன் தூதுவர்
.................................... வைப்பாரே'' - 242

மூலம் அறியலாம்.

**அவா அறுத்தல்**

ஆசையைக் கைவிட வேண்டும். ஆசையுண்டாகப் பெருந்துன்பங்கள் வந்து வருத்தும். அவ்வாசையை விட இன்பம் ஈடின்றிப்பெருகும்.

> ''ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
> .............................................
> ஆசைப்படப்பட ஆய் வருந்துன்பங்கள்
> ஆசைவிட விட ஆனந்தமாகுமே'' - 2570

என ஆசையினால் வரும் துன்பம் விளக்கப்படுகிறது.

**பிறர்மனை நயத்தல்**

பிறர் மனையோடு வாழ்பவன் பிணத்துடன் வாழ்வதற்கு ஒப்பாவான் என நீதி நூல்கள் கூறுகின்றன. தாலி கட்டிய மனைவி வீட்டிலி ருக்கையில், பிறர் மனையாளைக் காமுறுவர் விளைவதறியாக் காளையர். இச்செயல், செவ்வியுறக் காய்த்து நன்கு பழுத்த பலாப் பழத்தை விரும்பாமல் ஈச்சம் பழத்தினை உண்ண விரும்பிக் கிட்டாது இடமிருந்து எய்தலை ஒக்கும், இதனை,

> ''காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
> ஈச்சம் பழத்து இடருவற்றாறே'' - 244

என்ற வரிகள் உணர்த்துகிறது.

**பொறையுடைமை**

பெரும்பாலும் தங்களுடைய தேவை கருதியே பிறர்மேல் பொறாமை எழுகின்றது. அப்பொறாமை வித்து மூக்கையும், நாக்கையும் பின்னிக் கிடந்ததென்றனர். உடுப்பது மூக்குக்கும், உண்பது நாக்குக்கும் தனித்தனி எடுத்துக்காட்டாகும். இவை நம்மைப் பற்றாமலிருக்க பெரிய பொறுமையை உயிரினும் சிறப்பாகக் கொள்ளுதல் வேண்டும். இதனை

> ''.......... மூக்கையும் நாவையும்
> தெற்றிக்கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
> வற்றாதொழிவது மாகமையாமே'' - 522

என்பதன் மூலம் அறியலாம்.

**ஐம்புலனடக்கம்**

ஆமையைப் போன்று மெய் முதலிய ஐம்புலனாகிய கருவிகளைத் திருவருள் துணையால் தீய வழியில் போக ஒட்டாமல் தடுத்து நல்ல வழியில் செலுத்துதல் வேண்டும்.

> ''ஆமையொன்றேறி அகம்படியானென
> ஓம என்றோதியெம் உள்ளொளி'' - 1182

இதுவே புலனடக்கமாகும்.

**அறமும் - மறமும்**

அறம் செய்வதால் வரும் நன்மையும், அறமல்லாத மறத்தின் விளைவால் ஏற்படும் தீமைகளும் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளன.

பொன்னாசையால் கடும் வட்டி வாங்கி மிகுபொருள் ஈட்டிய தோடமையாது வஞ்சனையால் பிறர் பொருள் கவரும் பாதகர் தாம் செய்ய வேண்டிய அறத்தினை உணரார். அதனால் வரும் பாவத்தையும் உணரமாட்டார்கள்.

**''ஒட்டிய நல்லறஞ் செய்யாதவர் செல்வம்**
**வட்டி கொண்மீட்டியே மண்ணின் முகந்திடும்''** - 117

என்பதன் மூலம் அறியலாம்.

அறம் அறியார் என்பது அறத்தினைக் கருதவோ, கூறவோ ஒருப்படார் என்பதால் நல்லறம் செய்யார் பால் வந்து சேரும் நீங்காத துன்பமாக

**''இருமலும் சோகையும் ஈளையும் வெட்புள்**
**தருமஞ் செய்யாதவர் தம் பாலதாகும்''** - 120

என்று திருமூலர் கூறுகிறார்.

**முடிவுரை**

அறவழியில் நடவாதவர் வானோர் ஒளியுலகினை எய்தார். முறை கடந்து அரும் பாவம் புரிபவர்கள் இருளுலகினை அடைந்து துன்புறுவர். பள்ளத்தினை நோக்கிச் செல்லும் வெள்ளம் போன்று அறத்தின் தன்மையை உணராதவர்கள் அன்பில்லாதவராய் கழிந்து துன்புறுவர். அறவழியில் வாழ்வதால் கிடைக்கும் நற்பலன்களையும், அறமல்லாத மறத்தின் விளைவுகளையும் இதன் மூலம் ஒருவாறு உணர முடிகிறது.





திருமூலதேவ நாயனார்



திருமாளிகைத் தேவர்



கருவூர்த் தேவர்



கண்டராதித்தர்

சிவ சிவ என்கிலர் தீவினை யாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே

- திருமந்திரம்